# சங்க்ஷேபசாரீரகம்





ஸ்ரீ மஹேச்வரானந்தகிரி சுவாமிகள்
இயற்றிய பதவுரையும் விசேஷ உரையும்.

உ

கணபதி துணை

# சங்க்ஷேபசாரீரகம்

## ஸ்ரீ ஸர்வஜ்ஞாத்ம முனிவர் இயற்றியது

கோயிலூர் ஆதீனம்

**ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகரின் சிஷ்யரும்**

புனவாசல் மடத்தின் தலைவருமான

**ஸ்ரீ மஹேசுவரானந்தகிரி சுவாமிகள்**

இயற்றிய பதவுரையுடனும்

**மதுஸூதனசரசுவதி சுவாமிகள்**

இயற்றிய "சாரசங்க்ரஹம்" என்ற வியாக்யானத்தை
அநுசரித்து எழுதிய விசேஷ உரையுடனும்
கூடியது

---

**முதற் பாகம்**

(முதலாம் அத்தியாயம்)

---

இஃது

முன்னாள் திருக்களர் கோ. ஆ. வீர. மடாலயத் தலைவர்

**ஸ்ரீ ம. கிருஷ்ணானந்த சுவாமிகளின்**

பொருளுதவியால் பதிப்பிக்கப்பெற்று

இந்நாள் ஷை மடாலயத் தலைவர்

**ஸ்ரீ மு. கோ. கி. கிருஷ்ணசாமி சுவாமிகளால்**

வெளியீடு செய்யப்பெற்றது.

ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் அச்சகத்தில்
பதிப்பிக்கப்பெற்றது.

1980

 [இரண்டு பாகங்களும் விலை ரூ. 50/-

தபால் செலவு தனி

முதற் பதிப்பு — 1980

கோ. ஆ. வீர. மடாலய வெளியீடு
திருக்களர்

---

இந்நூல் கிடைக்குமிடம் :—

ஸ்ரீ மு. கோ. கி. கிருஷ்ணசாமி சுவாமிகள்
தலைவர்
கோ. ஆ. வீர. மடாலயம்
திருக்களர் போஸ்ட்
நடுவகளப்பாள் (வழி)
மன்னார்குடி தாலூகா, தஞ்சை ஜில்லா.

உ
சிவமயம்

# முகவுரை

ஸ்ரீமந்நாராயணனுடைய அவதார விசேஷமாகக் கருதப்படுகின்ற ஸ்ரீவேத வியாசர் எனப்பெயரிய மஹரிஷி சருவ ஜனங்களுக்கும் உபகாரமாகப்பதினெண் புராணங்கள் ஐந்தாம் வேதமென்று சொல்லும்படியான மகாபாரதம் முதலிய அநேக கிரந்தங்களை இயற்றியுள்ளார். சாதன சதுஷ்டய சம்பன்னரான அறிவிற்சிறந்த அதிகாரிகளுக்கு உபநிஷத்துக்களின் தாற்பரியம் விளங்குமாறும் பிரத்தியக்ஷாதிப்பிரமாண விரோதமும் சாங்கியாதியரின் மத விரோதமும் நீங்குமாறும், மோக்ஷசாதனங்களும், முக்திஸ்வரூபமும் நன்கு விளங்குமாறும் முறையே சமன்வயம், அவிரோதம், சாதனம், பலம் (மோக்ஷம்) என்னும் நான்கு அத்தியாயங்களோடு கூடிய சாரீரக மீமாம்ஸை என்னும் பிரம்மசூத்திரத்தினையியற்றியருளினார். அந்த பிரம்ம சூத்திரத்திற்குப்பரமேச்வரனது அவதார விசேஷமாக வருணிக்கப்படுகின்ற ஸ்ரீமத்சங்கராசாரிய சுவாமிகள் சாங்கரபாஷியமெனப்பெயரிய உண்மையான உரை ஒன்று இயற்றியுள்ளார். அச்சூத்திர பாஷியங்களில் பிரம்மவிசாரமும் சகுண நிர்குண உபாசனைகளும் விஸ்தாரமாகப் பிரதிபாதிக்கப்பட்டுள்ளன. மோக்ஷத்தையடைய வேண்டுமென்ற இச்சையினையுடைய தீவிர அதிகாரிகளுக்கு அவ்வெல்லாவற்றையும் விசாரிப்பதற்குப்போதிய புத்தி இன்மையினையும் போதிய காலமின்மையினையும் பிரயாசை அதிகம் வேண்டியிருத்தலையும் உத்தேசித்து ஸ்ரீ தேவேசுவரரின் சிஷ்யரான சருவஞ்ஞான்மமுனியென்பவர் உபாசனுபாகங்களை விடுத்து பிரம்மவிசாரமாத்திரத்தினையும் அதற்கு அநுகூலமான யுத்திகளையும் எடுத்துக்கொண்டு வித்வான்களுடைய அநுபூதிக்குச் சம்மதமாக சுலோகரூபமாகவும் படிப்பதற்கும் கேட்பதற்கும் இனிமையாகவும் சங்க்ஷேபசாரீரகமெனப் பெயரிய ஓர் கிரந்தத்தினையியற்றியருளினர் அதற்கு மதுசூதன சரஸ்வதியெனப்பெயரிய ஒருமகான் சாரசங்கிரகமெனப்பெயரிய ஒரு வியாக்கியானம் இயற்றியுள்ளார்.

சம்ஸ்கிருதத்திலிருந்து பஞ்சதசி, வேதாந்த பரிபாஷை முதலிய கிரந்தங்களும் ஹிந்தியிலிருந்து விசாரசாகரம், விருத்திப்பிரபாகரம் முதலிய கிரந்தங்களும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுவந்துள்ளன. ஆயினும் இக்காலம் வரையும் சங்க்ஷேபசாரீரகம் தமிழில் மொழிபெயர்க்கப்

படவில்லை. தமிழில் மாத்திரம் வியுற்பத்தியுள்ள அதிகாரிகளுக்கு உபயோகப்படுமென்பதையும் இந்தக் கிரந்தத்தைத் தமிழில் எழுதுகிற காலத்திலும் அச்சியற்றுங்காலத்தில் புரூப் காப்பிகளைசசரிபார்க்கிற போதும் அடிக்கடி பிரம்மாநுசந்தானம் உண்டாகும் என்பதையும் உத்தேசித்து சுமார் இருபது வருஷங்களுக்கு முன்பதாக இந்த நூலைத் தமிழில் மூலசுலோகத்திற்குப்பதவுரையும் சாரசங்கிரக வியாக்கியானத்தை யநுசரித்து விசேஷவுரையும் எழுதிவைத்திருந்தேன். பொருள் செதியின்மையால் இதுவரையும் அச்சியற்றுதிருந்து வந்தது. இப்பொழுது திருக்களர் கோ—ஆ—மடாலயத்தலைவர் ஸ்ரீ கிருஷ்ணாநந்த சுவாமிகளின் பொருளுதவியால் ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் அச்சியந்திர சாலையில் அச்சியற்றலாயிற்று. இந்த நூலில் இதுவரையும் வெளிவந்துள்ள வேதாந்த நூற்களிலில்லாத புதிய புதிய விசாரங்களிருக்கின்றன ஆதலால் அறிவுடையோர்கள் இந்நூலை நன்கு குருமுகமாகப்படித்தால் மனதிற்குக்குதூகலம் உண்டாய்க்கொண்டேயிருக்கும் ஆதலின் சாதுக்கள் இந்த நூலைப்படித்து அடியேனுடைய பரிசிரமத்திற்குப்பயன் உண்டாகும்படி செய்யவேண்டுமாய்க்கேட்டுக்கொள்ளுகிறேன் எத்தனையோ மகான்கள் சுயமாக நூல்களும் வியாக்கியானங்களும் மொழிபெயர்ப்புகளும் செய்துள்ளார்கள் அவர்கள் முன்னிலையில் அடியேன் இந்த மகத்தான நூலைத்தமிழ்மொழியில் எழுதினது அந்தர்யாமியினுடைய பிரேரணையினலேதான் என்று நிச்சயித்துள்ளேன். இந்த நூலை எழுதும்போது பரிசிரமமில்லாமல் விளையாட்டாகவே எழுதினேன் ஆதலின் இந்த நூலில் ஏதேனும் பிழைகளிருந்தால் தயவுசெய்து தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன் அடுத்த பதிப்பில் திருத்திப் போடலாம். இந்த நூலை அச்சிடுதலாகிய சத்காரியத்தில் பிரவிருத்திப்பித்த திருப்பூவணம் ஸ்ரீ காசிகாநந்தஞானாசாரிய சுவாமிகளுக்கும் அச்சியற்றுவதற்குப்பொருளுதவி செய்த திருக்களர் ஸ்ரீ கிருஷ்ணாநந்த சுவாமிகளுக்கும் இந்த நூலை அழகாக நலமுறையில் அச்சியற்றிக் கொடுத்த ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ் மானேஜரவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைச்செலுத்துகின்றேன். ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி ஸ்ரீசாரதாபீடாதிபதி ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹாசுவாமிகளின் பாதாரவிந்தங்களை மனவாக்குக்காயங்களால் நிரந்தரம் தியானித்துத் துதித்து வணங்குகின்றேன்.

***மஹேஸ்வரானந்தகிரி சுவாமி***
**மேலப்புனவாசல்மடம்.**

3

உ
சிவமயம்

# அணிந்துரை

உலக மாந்தர்கள் பிரவிருத்தி நிவிருத்தி என இரண்டு மார்க்கங்களை அனுஷ்டிக்கின்றனர். பிரவிருத்தி மார்க்கப்பிரசாரகராக அநேக மடங்களும் அநேக ஆசார்யர்களும் இருக்கின்றார்கள். உலகங்களும் அநேகம் இருக்கின்றன.

நிவிர்த்தி மார்க்கத்தில் செல்பவருக்கு உபதேசிக்க அத்வைத பரமாச்சாரியராகிய சங்கராச்சாரியார் மடங் களும் அதனைச்சார்ந்த கோவிலூர் மடங்களும் ஆகும்.

நிவ்ர்த்தி மார்க்கம் ஆன அதற்குச்சாதனம் கீதா உபநிஷத்தில் சொல்லியபடி "அதாதோ பிரம்ம ஜிஞ்ஞாசா" என்பதை முதன்மையாகவும், "அநாவிருத்தி: சப்தாத்" என்பதனை அந்தமாகவும் உடைய, 555 சூத்ரங்களை வியாசபகவான் செய்தார்.

அதற்கு உண்மையான உரையாகிய பாஷியம், சங்கராசாரியார் செய்த சாரீரக மீமாம்சா பாஷ்யம் தான் எதனால் எனில், காசி க்ஷேத்திரத்தில் வியாசபகவானே நேரில் வந்து சங்கராச்சாரிய சாரீரகமீமாம்சா பாஷியத் தினைக்கேட்டுச் சந்தோஷப்பட்டிருத்தலினால் என்க.

அந்தச் சாரீரக மீமாம்சா பாஷியத்தினைச் சுருக்கி சர்வஞ்ஞாத்ம முனி என்பவர் சுலோக ரூபம் ஆகச் சங்க்ஷேப சாரீரகம் எனப் பெயர் வைத்து ஓர் உரை செய்தனர். அதற்கு மதுசூதன சரஸ்வதி சுவாமிகள் என்பவர்கள் சாரசங்கிரகம் எனப் பெரிய வியாக் கியானம் ஒன்று செய்திருக்கின்றனர்.

அந்த வியாக்கியானத்தை அனுசரித்து சங்க்ஷேப சாரீரகத்தினை சம்ஸ்கிருதமும் அதற்குத்தமிழ் உரையுமாக

கோவிலூர் மடம் ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள் ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகள் மாணாக்கரும் புனல்வாசல் மடாதிபதியுமான மகேசுவரானந்த சுவாமிகள் மொழி பெயர்த்து திருக்களர் கோ ஆ வீர. மடம் தலைவர் கிருஷ்ணானந்த சுவாமிகளுடைய பொருள் உதவியால் புத்தக ரூபம் ஆக வெளியிடுகின்றார்கள்.

அறிஞர்கள் யாவரும் வாங்கிப் பார்த்து நிர்க்குணப் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தினை அடைந்து, பிரஹ்ம வித்துக்களாயிருக்கும்படியாகத் திருக்களர் ஸ்ரீ வீரசேகர ஞானதேசிக ஸ்வாமிகளின் உபய திருவடிக் கமலங் களையும் பிரார்த்திக்கின்றனன்.

இங்ஙனம்,
சத சாஸ்திர கர்த்தா,
காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,
வேதாந்த மட ஸ்தாபகர், திருப்பூவணம்.

௧

௨

# குரு பரம்பரை வாழ்த்து

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

சத சாஸ்திர கர்த்தா, வேதாந்தமடம், திருப்பூவணம்

கோவிலூர் வாழும் கொற்றவாள் இறையைக்
குலவிடும் திருநெலை அமையைக்
காவில்வாழ் வந்நி விநாயகன் அடியைக்
கான்மயில் முருகன தடியைப்
பூவில்வாழ் மநுடர்கள் மோக்ஷம தடையப்
புவியினில் அவதரித் திருந்த
கோவிலூர் வாழும் முத்திரா மலிங்கக்
குருபரன் தாள்திநம் பணிவாம் 1

உலகமே புகழும் வியாஸர்தாம் செய்த
உத்தரமீ மாம்சையாம் நூற்கு
உலகமே போற்றும் சங்கர குருவால்
உரைத்தசா ரீரபா ஷியத்திற்
குலகமே போற்றச் சர்வஞ்ஞ முநிவன்
உரைத்த சங்க்ஷேப சாரீரகத்துக்
குலகமே போற்றமது சூதந சாமி
உரைத்தனர் உரைஒன்று விளங்க 2

அந்தநற் சங்க்ஷே பசாரீர கத்தை
அறைந்தனன் தென்மொழி தனிலே
முந்தைஅண் ணும லைக்குரு பதத்தை
முடியினில் தரித்தவன் என்போன்
முந்தைநற் புனல்வா சலிலமர் முதல்வன்
முழுமுதற் பொருளை நன் குணர்ந்தோன்
மந்தர்கட் காக மகேசுவரா நந்த
மாதவன் செய்தனன் மாதோ 3

ஆதலி னாலே அனைவரும் வாங்கி
ஆதர வாகவே கற்றுப்
போதலின் வருதல் தவின்றிலை இல்லாப்
பூரணப் பிரமமாய் இருந்து

மாதவன் எனவே மகிதலம் தனிலே
மன்னிட யாவரும் புகழ
நூதனம் எனவே அறிவினர் போற்ற
நுண்பதம் பெற்றிட வேண்டும் 4

திருக்களர் வீர சேகர குருவின்
திவ்ய கிருஷ்ணனந்தர் என்போர்
பெருக்கமா நன்செய் நிலம்பொருள் சேர்த்துப்
பெரியவர்க் குயர்வுடன் நடந்து
தருக்கமில் லாமற் சங்க்ஷேப சாரீரகம்
தனைவெளி யிடப்பொருள் கொடுத்தும்
வருத்தமில் லாமல் நீண்டநாள் இருந்தும்
வாழவே வீரனைப் பணிவாம் 5

—*—

நன்னிலம் ஸ்ரீ நாராயண தாண்டவேசுவரசுவாமி ஆலயம் தருமகர்த்தர்,
கோயிலூர் மரபு. மகா. கோவிந்தசுவாமிகள் இயற்றிய

## சாற்றுக்கவிகள்.

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அருளுமா விறைவன் அறவுயிர் அனைத்தும்
அறிவுற அமைத்தவே தாந்தப்
பொருளையுத் தரமீ மாஞ்சைநூல் எனவே
புகன்றிடும் பிரமசூத் திரத்தே
தெருளுற அமைத்தார் வியாசமா முனிவர்
திசழுதன் பொருள்மிக விளங்கப்
பரமமாஞ் சாரீ ரகமகா பாஷ்யம்
பசர்ந்தனர் சங்கர குரவர். 1

திகழுமப் பாஷ்யம் சுருங்கவாக் கியசஞ்
சேபசா ரீரக நூலைப்
புகழுறு சருவஞ் ஞாத்மமா முனிவர்
புகன்றனர். அதன்வியாக் யானம்
மகிழுறு சார சங்க்ரகம் எனவே
மன்னுமா ரியற்றியே யளித்தார்
மகிமையார் மதுசூ தனசரஸ் வதியாம்
மதியுறு மிகுதவ முனியே 2

தேர்ந்திடும் ஞானம் திகழுவாக் கியசஞ்
சேபசா ரீரக உரையை
நேர்ந்திடும் தமிழில் மொழிபெயர்த் தியற்றி
நிலையுற வழங்கினர் மகிமை
சேர்ந்திடும் கோயி லூர்மர பார்ந்து
திகழ்புனல் வாசலூர் மடத்தில்
ஆர்ந்திடும் தலைவர் மகேஸ்வரா னந்த
அருள்முனி யானமா தவரே 3

செந்தமிழ் மொழியில் ழெங்கவாக் கியசஞ்
சேபசா ரீரக வுரைநூல்
சுந்தர மாக அச்சினிற் பதிக்கத்
தொகுநிதி யுதவினர் உலகின்
சிந்தனை தீர்க்கும் திருக்களர் வீர
தேசிகர் மடமுறு தலைவர்
பந்தமில் கிருஷ்ணா னந்தசாமி யெனும்
பதமுறு நாமநா வலரே 4

திருத்தமிழ் மொழியில் சிறப்புற வருசஞ்
சேபசா ரீரக உரைநூல்
குருத்துவ முனிவர் முன்னிலை யதனில்
குலவுமா சிரத்தையார்ந் திருந்து
கருத்துறக் கேட்டுச் சிந்தனை புரிந்து
கதியுறத் தெளிந்தவர் பரம
அருத்தமாம் அகண்ட சச்சிதா னந்த
அமிர்தவீ டடைந்துவாழ் வாரே. 5

உ

ஓம் தத் ஸத்

காரைக்குடி – கோவிலூர் மடத்தில்
ஏழாவது குருமூர்த்தமாய் எழுந்தருளியிருந்த
ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் அவர்கள்
மாணவர்களுள் ஒருவராகிய

**மகா. சோமசுந்தர ஐயா அவர்கள்**

இயற்றிய

# சாத்துக்கவிகள்

**(அறுசீரடியாசிரிய விருத்தம்)**

பாரோங்கு நெடியசடை லிலமுழங்கி யுவகையாய் பரவஞ் செய்ய
ஏரோங்கு நிறைமதியங் கீழ்த்திசையிற் கலைபரப்பி யெழுந்த தேபோற்
சீரோங்கு மறிஞர்குழாஞ் சிந்தைகளி கூர்ந்துவகை செய்யும் வண்ணம்
பேரோங்கும் வடமொழிநூ லொன்றின்று தமிழுடனே பிறந்த தம்மா! 1

அந்தநூல் வரலாறு மதன்பெயரும் யாதென்னி லறையக் கேண்மின்
முந்தைநாள் வியாசமுனி பிரமசூத் திரமென்ன மொழிந்த நூற்கிங்
கெந்தையா மாதிகுரு சங்கரர்தாம் பாடியமொன் றியற்றி னாற்
பந்தநீக் கதன்பெயர்சா ரீரகமா மீமாம்சா பாடி யந்தான் 2

அப்பெரிய நூற்பொருளை யாராய்ந்து கருத்திருத்தி யதைச்சு ருக்கிச்
செப்பரிய மிகவினிமை சேர்சுலோ கங்களாச் செய்த மேலோன்
றப்பறுநற் றபசிசர் வஞ்ஞாத்ம முனியெனுமே தாவி யாமால்
இப்புவியி லந்நூல்சங் க்ஷேபசா ரீரகமென் றிசைப்ப தாமே 3

பிற்றையநா ளந்தச்சங் க்ஷேபசா ரீரகத்தைப் பரிது மோர்ந்து
நற்றவஞா கியமதுசூ தனசரசு வதிசாமி நன்க தாகக்
கற்றவராற் புகழ்சார சங்கிரக மெனுமுரைநூல் களிப்போ டீந்தான்
இற்றையநாண் மூலமுரை யிரண்டுஞ்செந் தமிழுடனே யெழுந்த தன்றே 4

முன்னரவ தாரிகையைத் தமிழெழுத்தி லமைத்ததன்மேன் மூலப் பாவைத்
தன்னிகரில் வடவெழுத்தி லிருத்தியதன் பதப்பிரிவுந் தனித்து வைத்துப்

பின்னருமப் பதவுரைவி சேடவுரை தமிழெழுத்தாற் பெரிதும் வைத்தே
யென்னோவிக ரற்பவரி வினாருங்கற் றின்புறுடா றியைந்த தென்னே 6

செந்தமிழி லுரைசெய்து தந்தமகான் யாரென்னிற் செப்பக் கேண்மின்
சந்தனமென் குறடுகளுங் குஞ்சரத்தின் கோடுகளுந் தரங்கம் வீசி
வந்தொளிரும் வைகைநதி நீர்பாய்ந்து செஞ்சாலி மதுரக் கன்னல்
பைந்தழைமென் வாழைகமு கந்தெங்கு செழித்துயரும் பாண்டி நாட்டில்

பற்றவா வெறுத்தவரும் பார்ப்பரேன் மேன்மேலும் பார்க்க வெண்ணும்
முற்றமா வளம்பொருந்து நகர்காரைக் குடிமேற்கின் மூதா ராய
கொற்றவா ளீசுரருந் திருநெல்லை யம்பிகையுங் கோயில் கொண்ட
நற்றபோ தனர்வாழுங் கோவிலூர் வேதாந்த ராஜ தானி 7

அத்தகைய புண்ணியமா தலத்துவே தாந்தமடத் தாதி மூர்த்தி
யெத்திசையும் புகழ்முத்து ராமலிங்க குருநாத ரிலங்கு பீடத
துத்தமர்க ளாருவ தேழாவ தாயிருந்த வுரவோர் ஞான
சித்தர்களண் ணுமலைதே சிகர்மகா தேவதே சிகர்க டம்பால் 8

சார்ந்திருவர் திருவருளுக் காளாகிப் பலகாலந் தங்கி யாங்கே
யோர்ந்துதமிழ் வேதாந்த நூலெலாங் கசடறவே யுணர்ந்த பின்னர்த்
தேர்ந்துவட மொழியயில வம்மொழியின் சிலகலையுந் தெரிய வெண்ணி
யார்ந்துகுரு மூர்த்திதிரு வடிவணங்கி விடைபெற்றே யங்கு நின்றும் 9

உத்தரபா ரதஞ்சென்று காசிநகர் தனிற்றங்கி யுயர்மீ மாம்சை
சத்தமதாம் வியாகரணந் தர்க்கமுப நிடதமெலாந் தகவே யாய்ந்து
வித்தகராய் மீண்டுந்தென் னுடணுகி மகாதேவ விமலர் பாதஞ்
சித்தமதா ரப்பணிந்து திருவாசி பெற்றிங்குத் திகழுங் காலை 10

கிள்ளியெனும் வளவரா சாட்சிபுரி சே ணுட்டிற் கிளர்ந்து வானை
துள்ளிவெடி போய்த்தெங்கின் முப்புடைக்காய்க் குலையுதிர்க்குஞ்
சோலை சூழுங்
கொள்ளிடநன் னதிக்கரையிற் றிருமழபா டியின்கீழ்பாற் கோல வன்னப்
புள்ளுறங்கும் பூம்பழனப் புனவாசல் மடத்துரிமை பூண்டு மேலும் 11

கடற்கரையின் மறைக்காட்டு மடத்தினுக்குந் தலைவராய்க் காலந் தள்ளி
விடற்கரிய வியவகார முபசாந்த பங்கமென விடுக்க வெண்ணிச்
சடகமெனவிட் டிற்றைமூட் புனவாச லொருமடத்தே தங்கி வாழுந்
தொடக்கருநற் சிந்தையுளா சுகக்கடலா மேதக்க தூய மேலோன் 12

ஆதவனுஞ் சந்திரனு முள்ளளவு நின்றொளிர வமைந்த சீரோன்
வேதவரும் பொருளையெலா முள்ளங்கை நெல்லியென விளக்கு நீரோன்
சீதவள மதிபோன்ற சாந்தகுண வான்ஞான தீர னெங்கண்
மாதவன் மஹேஸ்வரா னந்தகிரி சுவாமிகடாம் வாழி! மன்னோ 13

இந்நவொரு பெருநூலை யச்சியற்றி வெளியாக்க வினிய செல்வந்
தந்துதவி யளப்பரிய புண்ணியத்தைத் தானகொண்டோன் றமிழ கத்தே
வந்ததிருக் களர்மடத்தைச் சிறப்புறவே மிளடத்தி வருங்கி ருஷ்ணு
னந்தனெனுந் துறவாளன் ஞாலமிசை மேன்மேலு நாளும் வாழ்க! 14

ஆதிகுரு சங்கரர்தம் பரம்பரையிற் சுருதிமுடி யமிர்தமூட்டும்
வேதியர் சிகாமணியாம் வித்தியா ரண்யகுரு விமலர் தம்பால்
ஓதியனு பூதிபெற்ற சந்ததியர் சந்ததியா யுலகில் வந்த
சோதிமுத்து ராமலிங்கர் திருமரபு நீடூழி துலங்க! மாதோ 15

புனவாசல்,
கீலக-ஹு தை-மீ 1௳
14—1—69

இங்ஙனம்,
*மகா. சோமசுந்தரம்,*
**கோவிலூர் மடம்.**

உ

சிவமயம்.

# சங்க்ஷேபசாரீரகம் முதலாவது அத்தியாயத்தின் விஷயாநுக்கிரமணிகை

—*—

ஹரி: ஓம்.

கணபதி துணை

## குரு பரம்பரையின் துதி

नारायणं पद्मभवं वसिष्ठं
शक्तिं च तत्पुत्रपराशरं च ।
व्यासं शुकं गौडपदं महान्तं
गोविन्दयोगीन्द्रमथास्य शिष्यम् ॥

श्रीशंकराचार्यमथास्य पद्म-
पादं च हस्तामलकं च शिष्यम् ।
तं तोटकं वार्तिककारमन्यान्
अस्मद्गुरून् संततमानतोऽस्मि ॥

### பொழிப்புரை

ஸ்ரீமந் நாராயணனையும் பிரம்மாவையும் வசிஷ்டரையும் சக்தியையும் அவரது புத்திரரான பராசரமுனியையும் வியாஸ மகரிஷியையும் சுகப்பிரம்ம ரிஷியையும் மஹானாகிய கௌட பாதாசாரியாளையும் கோவிந்த யோகீந்திரரையும் இவரது சிஷ்யரான ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளையும் இவரது சிஷ்யரான பத்மபாதரையும் ஹஸ்தாமலகரையும் தோடகரையும் வார்த்திக காரரான சுரேச்வராசாரியாளையும் இன்னும் ஏனைய நமது குருமார்களையும் எப்போதும் இடைவிடாமல் வணங்கினவனாக இருக்கின்றேன்,

## உரையாசிரியரியற்றிய மங்களம்

सत्यं ज्ञानमनन्तमद्वयसुखं यद्ब्रह्म गत्वा गुरुं
मत्वा लब्धसमाधिभिर्मुनिवरैर्मोक्षाय साक्षात्कृतम् ।
जातं नन्दतपोबलात्तदखिलानन्दाय बृन्दावने
वेणुं वादयदिन्दुसुन्दरमुखं वन्देऽरविन्देक्षणम् ॥ १ ॥

### பொழிப்புரை

*சத்தியஞான அனந்த அத்துவய சுகவடிவயாதொரு பிரம்மம் குருவை சரணடைந்து மனனஞ்செய்து சமாதியிலேயுற்ற முனி சிரேஷ்டர்களால் சாக்ஷாத்கரிக்கப்பட்டதோ, எந்தப் பிரம்மம் நந்தகோபனுடைய தபஸின் வலிமையால் சருவப்பிராணிகட்கும் சுகமுண்டாதற்பொருட்டு பிருந்தாவனத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக அவதரித்ததோ புல்லாங்குழலே வாசிக்கின்ற சந்திரனைப்போன்ற அழகிய முகமுள்ளவரும் கமலம்போன்ற கண்களேயுடையவரு மாகிய அத்தகைய ஸ்ரீ கிருஷ்ணபரமான்மாவை நமஸ்கரிக்கிறேன்.*

श्रीरामविश्वेश्वरमाधवानां
प्रणम्य पादाम्बुजपुण्यपांसून् ।
तेषां प्रभावादहमस्मि योग्यः
शिलापि चैतन्यमलब्ध येभ्यः ॥ २ ॥

### பொழிப்புரை

*ஸ்ரீ ராமர் விசுவேசுவரர் மாதவர் எனப் பெயரிய குருமூர்த்தி களின் திருவடித்தாமரைகளின் பரிசுத்தமான தூளிகளுக்கு நமஸ்காரஞ்செய்து அத்தூளிகளின் பிரபாவத்தால் இந்நூலிற்கு உரையியற்றுவதில் தகுதியுடையவனுக இருக்கின்றேன். ஏதனுலெனின் அத்தூளிகளின் பரிசத்தால் சிலேயும் சேதனத் தன்மையையடைந்ததாதலின். கருத்திதுவாம். :—ஸ்ரீகௌதமரால் சபிக்கப்பெற்ற அகலிகை கல்லாய்க்கிடக்க அஃது ஸ்ரீராமருடைய பாத ஸ்பரிசத்தால் பெண் வடிவமாயிற்று. தாசரதி ராமனேடு ஸ்ரீ ராமரெனப் பெயரிய தனது குருவை அபேதப்படுத்தித் துதித்தனர்.* (2)

पूर्वाचार्यवचो विचार्य निखिलं सत्संप्रदायाध्वना
हित्वोच्छृङ्खलमार्गमागमगिरां तात्पर्यपर्याप्तितः ।
विच्छिद्यार्थविभागतः प्रकरणान्युद्भिद्य तत्त्वं रहः
कुर्वे संप्रति सारसंग्रहमिमं संक्षेपशारीरके ॥ ३ ॥

பொழிப்புரை

*தீமையான தருக்கம் முதலிய மார்க்கங்களைவிட்டு சாதுக்களுடைய ஸம்பிரதாய மார்க்கத்தால் பூருவாசாரியர்களுடைய வாக்கியங்களனைத்தையும் நன்கு விசாரித்து உபநிஷத் வாக்கியங்களின் தாற்பரிய நிச்சய வாயிலாக பொருள்களின் வேற்றுமையால் பிரகரணங்களை வெவ்வேறாக்கி இரகசியமான தத்துவத்தை வெளிப்படுத்தி இந்த சங்க்ஷேப சாரீரகத்திற்கு இப்போது சாரசங்கிரகமென்னும் வியாக்கியானத்தைச் செய்கின்றேன்.* (3)

हित्वा हेयमुपादेयमुपादाय विचारतः ।
प्रायेण पूर्वटीकानामिहार्थः प्रकटीकृतः ॥ ४ ॥

பொழிப்புரை

*விசாரித்துத் தள்ளத்தக்கதைத் தள்ளி, கொள்ளத் தக்கதை கிரகித்து பெரும்பாலும் பூருவாசாரியர்களுடைய வியாக்கியானத்தின் பொருள் ஈண்டு வெளிப்படுத்தப்பட்டது.* (4)

विशेषाद्विश्ववेदस्य प्रत्यग्विष्णोश्च बुद्धयोः ।
व्याख्यानं श्रद्धयाऽलेखि गुरूणां तौ हि नो गुरू ॥ ५ ॥

பொழிப்புரை

*உயர்ந்த வித்துவான்களாயுள்ள விச்வவேதர், பிரத்தியக் விஷ்ணு என்னும் இவ்விருவருடைய வியாக்கியானத்தை விசேஷமாக ஆதரித்து எழுதப்படுகின்றது. ஏனெனின் அவ்விரண்டு பேர்களும் நமது குருமார்களுக்கும் குருவாவர்.* (5)

ஹரி: ஓம்
ஸ்ரீ கணேசாய நம:
பரமாத்மனே நம:

# சங்க்ஷேபசாரீரகம்

## மூலமும்

## சார சங்கிரஹமெனப்பெயரிய உரையும்

# நூன்முகம்

ஸ்ரீமத் சாரீரக சாஸ்திரத்தின் தாற்பரியத்திற்கு விஷயபூதமாயும், முமுக்ஷுக்களாலறிய விரும்பப்பட்டதாயும், நிர்விசேஷமாயும் உள்ள பிரம்மம் அறிவிக்கத்தக்கதாகுங்கால் பிராசங்கிகமும் (இடையில் வந்துற்றதும்) முமுக்ஷுக்களுக்கு அஜிக்ஞாஸியமும் (அறியும் வேட்கையற்றதும்) சவிசேஷமுமான பிரம்மத்தின் உபாசனுவாக்கியங்களின் அநேகவித விசாரத்தினலே சாரீரக சாஸ்திரம் கலங்கியிருக்குந் தன்மையால் அறியமுடியாத் தன்மையை அறிந்து அதன் கலக்கத்தை விடுதலால் முமுக்ஷுக்களாலறிய விருப்பமுற்றதும் நிர்விசேஷமும் சாஸ்திர தாற்பரியத்திற்கு விஷயமானதுமான பிரம்மத்தை, அநாயாசமாக முமுக்ஷுக்களுக்கு ஞானமுண்டாகும் பொருட்டு சங்க்ஷேபசாரீரகமெனப் பெயரிய சுலோக வடிவ கிரந்தத்தால் கருணையினல் ஸ்ரீ சர்வக்ஞாத்ம ஆசிரியர் வெளிப்படுத்தினர். இக்காரணத்தானேயே முமுக்ஷுக்களால் அறிய விரும்பப்படாத சவிசேஷப் பிரம்மத்தின் பிராசங்கிக (இடையில் வந்துற்ற) விசாரத்தின் பரித்தியாக வடிவ சங்க்ஷேபத்தோடு கூடிய இந்த சாஸ்திரம் நிர்விசேஷ பிரம்ம விசார வடிவ சாரீரக சாஸ்திரமேயாம்.

ஆகவே சங்க்ஷேப சாரீரகம் என்னும் பெயர் இதற்குப் பொருத்தமேயாம்.

அவற்றுள் முதலிலுள்ள நான்கு சுலோகம் ஸ்ரீமத் சாரீரக சாஸ்திரத்தின் முதலிலுள்ள நான்கு சூத்திர ஸ்தானத்திலுள்ளது.

ஆண்டு முதற்சூத்திரத்தின்கண் அறியும் வேட்கைக்கு விஷயமான பிரம்மத்தின் அபேத அந்வய யோக்கிய சுத்த துவம்பதார்த்தமாகிய

பிரம்ம வித்தையின் அதிகாரி பிரதிபாதிக்கப்பட்டது. அவ்விரண்டற்கும் பேதமாயின் தன்னிடத்திலுள்ள கர்த்திருத்துவாதி அத்தியாசரூப பந்த நிவிருத்தியை விரும்பும் முமுக்ஷுவிற்குப் பிரமத்தின் கண் ஜிக்ஞாசை பொருந்தாது. ஒன்றன் ஞானத்தால் மற்றொன்றின் கண் அத்தியாச நிவிருத்தி பொருந்தாமையின். ஆகையால் அவ்விரண்டற்கும் அபேதமேயாம்.

இரண்டாவது சூத்திரத்தின் கண்ணும்—ஜகத் காரணத்தன்மையைக் காண்பிக்கும் வியாஜத்தால் சுத்தமாகிய துவம்பதார்த்த அபேத அந்வய யோக்யமான தத்பதார்த்தமும் தடஸ்த ஸ்வரூப லக்ஷணங்களால் பிரதிபாதிக்கப்பட்டது. நான்காவது சூத்திரத்தின் கண்ணும் அவ்விரண்டனது ஆத்தியந்திக ஐக்கியம் பிரதிபாதிக்கப்பட்டது.

துவம்பதார்த்தமும் தத்பதார்த்தமும் அகண்ட வாக்கியார்த்தமுமெனச் சாஸ்திரத்தின் விஷயம் இவ்வளவேயாம். இவற்றில் பிரமாணமோ "தத்துவமசி" முதலிய வேதாந்த மகாவாக்கியரூப சாஸ்திரமாம். அதுவும் ("शास्त्रयोनित्वात्") "சாஸ்திரத்தின் காரணத் தன்மையால்" என்னும் மூன்றாவது சூத்திரத்தின்கண் கூறப்பட்டது. ஈண்டு அர்த்தக் கிரமத்திற்கு பாடக்கிரமத்தினும் பலமுடையதாந்தன்மை இருத்தலால் மூன்றாவது நான்காவது சூத்திரங்கட்கு மாறுபாட்டை யுணர்க. விஷயம் சொல்லப்பட்டபோது இதில் பிரமாணம் யாது? என ஜிக்ஞாசை நிகழ்கின்றது. அப்போது பிரமாணம் சொல்லத்தக்கது. மற்ற காலத்தன்று அப்பிராப்த காலத்தன்மையால். அப்பிராப்த காலத்தன்மையென்பது — பிரமாணத்தின் அபேக்ஷையில்லாதபோது பிரமாணம் பிரவிருத்தித்தல். இவ்வாறு ஈண்டு உசிதக்கிரமத்தினலேயே துவம்பதார்த்தமும் தத்பதார்த்தமும் அவற்றின் ஐக்கியமுமென பிரமேயங்களின் பிரதிபாதனத்தின் பொருட்டு மூன்று சுலோகங்களாம். பிரமாணத்தைப் பிரதிபாதிக்கும் பொருட்டோ நான்காவது சுலோகமாம். இத்துணையானே சாஸ்திரத்தின் விஷய பிரயோஜன சம்பந்தங்கள் பிரதிபாதிக்கப் பட்டனவாக வாகின்றன. ஜீவப்பிரம்மங்களின் ஐக்கியமே விசார பூர்வக வேதாந்த வாக்கியப் பிரமாணத்தால் அறியப்பட்டதாகிச் சாஸ்திரத்திற்குப் பிரயோஜனமாம். இதுவே உபேய (சாத்திய) மாம். உபாய (சாதன) மோ துவம்பதார்த்தமும் தத் பதார்த்தமுமென இருவித விஷயமாம். அதுவும் (ஐக்கியமும்) அக்ஞாதத் தன்மை மாத்திரத்தால் வேதாந்தப் பிரமாணத்திற்கு விஷயமாம். அக்ஞாதத் தன்மை மித்யா

விஞ்ஞாதத் தன்மைகளால் விசாரத்திற்கு விஷயமாம் என்பது விவேகம். வாக்கியார்த்த ஞானத்திற்குப் பதார்த்த ஞானம் காரணமாதலால் பதார்த்த த்வய வடிவ விஷயத்தைச் சொல்லுதல் வாயிலாக வாக்கியார்த்த வடிவ பிரயோஜனமும் கிரமமாகச் சொல்லப்பட்டது. நான்காவது சுலோகத்தாலோ சாஸ்திரத்தோடு அவைகட்குச் சம்பந்தம் பிரதிபாதிக்கப் பட்டது. இத்துணையானேயே சுருக்கமாகச் சம்பூர்ணமான சாஸ்திரத் தின் பொருள் முடிகின்றது. பரமும் அபரமுமான வித்தைகள் முடிவு பெறுதலின். அங்ஙனமே சுருதியும் **द्वे विद्ये वेदितव्ये इति ह स्म यद्ब्रह्मविदो वदन्ति परा चैवापरा च तत्रापरा ऋग्वेदो यजुर्वेदः)** "பரமும் அபரமுமென இருவித்தைகள் அறியத் தக்கனவாமென்று பிரம்ம வேத்தாக்கள் கூறுகின்றனர். அவற்றுள் அபரவித்தை ருக்வேதம், யஜுர் வேதம்" என்பதாதியால் ஆறு அங்கங்களோடு கூடியவான நான்கு வேத வடிவ சப்த பிரம்மத்தை அபர வித்தைக்கு விஷயமாக வியாக்கியானஞ் செய்து, **("अथ परा यया तदक्षरं अधिगम्यते")** "எதனால் அவ்வக்ஷர பிரம்மம் அடையப்படுகின்றதோ அது பர வித்தையாம்" என்பதாதியால் பரவித்தைக்கு விஷயமான பரப் பிரம்மத்தைத் தெரிசிப்பிக்கின்றது. ஸ்மிருதியும், **(द्वे ब्रह्मणी वेदितव्ये शाब्दं ब्रह्म परं च यत्)** "சாப்த பிரம்மமும் பரப்பிரம்மமுமென இரண்டு பிரம்மங்கள் அறியத் தக்கனவாம்" என்பது முதலாகத் தெரிசிப்பிக் கின்றது. உத்தர கிரந்தமோ இதனுடைய விரிவாமெனக் காண்க. சுருக்கமாகவும் விரிவாகவும் சிஷ்யனுக்கு ஞானம் உளதாதல் உத்தேசிக்கப்பட்டமையின், அவற்றுள் "சத்தியம், ஞானம், அனந்தம், பிரம்ம" என்பது முதலிய சுருதிகளையனுசரித்து நபும்சகலிங்க சப்தப் பிரயோகத்தால் முதற் சுலோகமாம், **(सेयं देवतैक्षत)** "அந்த இந்த தேவதை ஈக்ஷணம் செய்தது" என்பது முதலிய சுருதியை யநுசரித்து ஸ்திரீலிங்க சப்தப் பிரயோகத்தால் இரண்டாவது சுலோகமாம். **(स एष इह प्रविष्ट एष त आत्मा अन्तर्याम्यमृतः)** "அவ்விவன் ஈண்டுப் பிரவேசித்துள்ளான். உன்னுடைய இந்த ஆன்மாவே அந்தர்யாமியும் அமிருதமுமாம்" என்பது முதலிய சுருதியையநுசரித்துப் புல்லிங்க சப்தப் பிரயோகத்தால் மூன்றாவது சுலோகமாம். இதனானே பிரம்மத்தைப் பிரதிபாதிப்பனவான எல்லா சப்தமும் வியாக்யானிக்கப் பட்டன.

## இந்நூலிடையூறின்றி இனிதுமுடிதற்பொருட்டு நூலாசிரியர் இயற்றிய கடவுள் வணக்கம்

### சுலோகம்

**अनृतजडविरोधिरूपमन्तत्रयमलबन्धनदुःखताविरुद्धम् ।**
**अतिनिकटमविक्रियं मुरारेः परमपदं प्रणयादभिष्टवीमि ॥**

### பதவுரை

**मुरारेः**—முரனென்னுமசுரனைக் கொன்ற பரமாத்மாவினுடைய

**अनृतजडविरोधि**—அநிருத ஜடங்களோடு விரோதியும்

**रूपम्**—சச்சிதானந்தமான சன்மாத்திரமும்,

**अन्तत्रयमलबन्धनदुःखताविरुद्धम्**—முப்பரிச்சேதமும் மலமும் பந்தமும் துக்கமுமாகிய இவைகளற்றதும்.

**अतिनिकटम्** – அத்தியந்தம் சமீபித்ததும்,

**अविक्रियम्** – விகாரமற்றதுமான

**परमपदम्** – சர்வோத்க்ருஷ்ட சொரூபத்தை

**प्रणयात्** – பக்தியினால்

**अभिष्टवीमि**—நன்கு துதிக்கின்றேன்.

### விசேஷவுரை

பரமாத்மாவினுடைய சொரூபத்தைத் துதிக்கின்றேன் எனக் கூட்டுக.

முராரி என்பது ஜகத்திற்கு உபத்திரவத்தைச் செய்கின்ற முரன் முதலிய அசுரரைச் சங்கரித்தலால் ஜகத்தைக்காக்கும் ஸ்ரீ விஷ்ணு வடிவமும் ஜகத்காரணமாயையின் சத்துவாம்சத்தில் பிரதிபிம்பித்த சைதன்ய வடிவமுமாய அந்தர்யாமியாம். பரமம் என்பது மாயையாற் கற்பிக்கப்பட்ட ஜகத்காரணத்தன்மை முதலியன இல்லாமையால் சர்வோத்க்ருஷ்ட பிம்பபூத சைதன்யமாம். பதம் என்பது சொரூபம். உபாதியானது பிரதிபிம்ப பக்ஷபாதியானதால் பிம்பத்தில் தனது

தர்மத்தைக் கற்பியாமையின் *. பிம்பம் ஈஸ்வரனென்னும் பக்ஷத்தில் வியாக்கியானம் வருமாறு: அஞ்ஞானத்தில் பிரதிபிம்பித்த ஜீவசைதன் யத்தின் பிரதியோகித்தன்மையால் பிம்பத்தன்மையால் வியவகரிக்கப் படுகின்ற விஷ்ணுவினுடைய பரமம் பதம் = பிம்பப்பிரதிபிம்ப கற்பனை யற்ற நிருபாதிக சொரூபம் (**बिम्बे तमोनिरतिते प्रतिबिम्बके वा**) "பிம்பத்திலாவது அக்ஞானத்தில் பிரதிபிம்பித்த பிரதிபிம்பத்திலாவது" (சு. 2-176) என்பதாதியால் இந்த நூலில் மேலே ஈஸ்வரனுக்கு இரண்டு வடிவங்கூறுவர். அபரத்தன்மையைச் சம்பாதிக்கும் உபாதியின்மை யினலே பரமத்தன்மையாம். அவித்தை வடிவ மறைப்பை நீக்கும் பொருட்டு எல்லோருக்கும் அடையத்தக்கதாந் தன்மையினுல் சொரூபத் திற்குப் பதத்தன்மையை உணர்க. (**तद्विष्णोः परमं पदम्**) "அது விஷ்ணுவினுடைய மேலான பதமாம்" என்னும் சுருதியினுலும் (**तदेतत्पदनीयमस्य सर्वस्य यदयमात्मा**) "யாதொரு இவ்வான்மா வுண்டோ அவ்விது இவ்வெல்லோர்க்கும் அடையத்தக்கதாம்" என்னும் சுருதியினுலும் என்க. இச்சுருதியின் கண் ஆரும் வேற்றுமையினையும் முதல் வேற்றுமையினையும் உடைய பதங்களால் தத்பதத்தின் வாச்சியமும் துவம்பத லக்ஷியத்தின் அபின்ன அன்வயயோக்கியமான லக்ஷியமும் தெரிசிப்பிக்கப்பட்டது. ஈண்டு.

**हरिर्हरति पापानि दुष्टचित्तैरपि स्मृतः ।**
**अनिच्छयापि संस्पृष्टो दहत्येव हि पावकः ॥**

"தோஷத்தோடு கூடிய சித்தமுள்ளவர்களாலும் நினைக்கப்பட்ட ஹரியானவர் பாபங்களைப் போக்குகின்ருர். இச்சையில்லாமலும் தொடப்பட்ட அக்னியானது சுடுவதே போன்று" என்னும் ஸ்மிருதி யினுலும். எல்லோருக்கும் உபத்திரவத்தைச் செய்கின்ற முரன் முதலிய அசுரர்களின் சத்துருத் தன்மையால் பகவானது ஸ்மரணை வடிவ மங்கலத்தை அனுஷ்டிக்கின்றவராகி தத்பதத்தின் ஸ்துதி வடிவ வேறு மங்கலத்தை அநுஷ்டிக்கின்ருர். "நன்கு துதிக்கின்றேன்" என. எல்லாப்பிரகாரத்தாலும் துதிக்கின்றேன் என்பது பொருள்.

ஈண்டு நிர்விசேஷப் பிரம்மத்தின்கண் குணவிசிஷ்ட குணியைக் கூறுதல் வடிவஸ்துதி ஸம்பவியாமையின் துதிக்கின்றேன் என்பதற்கு

* பிரதிபிம்பம் ஈஸ்வரன் என்னும் பக்ஷத்தில் இவ்வாறு வியாக்கியானிக்கப் பட்டது.

நிதித்தியாசனத்தால் "நன்கு" பிரத்தியகபின்னத் தன்மையாலாவது நிரந்தரமாகவாவது அதில் ஏகாக்ரமுள்ளவனாகவிருக்கின்றேன் என்பது பொருள் என்று சிலர் கூறுகின்றனர்.

அதன் துதிவடிவத்தை அதாவது அதன் சொருபத்தை நிரூபித்தலில் தற்பரமான கிரந்தத்தைச் செய்கின்றேனென்பது பொருளென்று சிலர் கூறுகின்றனர். **(आनन्दो विषयानुभवो नित्यत्वं चेति सन्ति धर्माः)** "ஆனந்தமும் விஷயானுபவமும் நித்யத்வமு மாகிய தர்மங்கள் இருக்கின்றன" என்னும் பத்மபாதருடைய வாக்கியத் தால் அகற்பித தர்மம் ஓரிடத்தும் பொருந்தாமையின் கற்பித சத்தியத்துவம் முதலான தர்ம வாயிலாகவே குணத்தைக் கூறுதல் வடிவ துதி நிர்க்குண வஸ்துவின் கண்ணும் முக்கியமாகவே பொருந்துகின்றது என்பது ரகசியம். இதனால் நிதித்தியாசன பிரதிக்ஞையும் கிரந்தாரம்ப பிரதிக்ஞையும் அயுக்தமாம் முக்கியவிருத்தி சம்பவிக்குங்காலத்தில் ஜகன்ய விருத்தியைக் கற்பித்தலும் கண்டிக்கப்பட்டது.

இவ்வித பகவானுடைய துதியில் அவரது பக்தியே அசாதாரண காரணமாம் எனக்கூறுகின்றார் பக்தியினால் என.

பிரணயம் என்பது மேலான பிரீதி. பக்தியென்பது பொருள். அதுவோ இயற்கையாகவே பரமானந்த ரூப பரமாத்மாவின்கண் பரவு கின்றதாய் தாராசந்ததிவடிவமாய் மனோவிருத்தியாய் பகவத் பக்தியென்று சொல்லப்படுகின்றது. அதனாலே விக்கினமின்றி அந்தக்கரணசுத்தி, ஞானப்பிராப்தி முதலிய வாயிலாக மேலான மோக்ஷமடையப்படுகிறது.

**"यस्य देवे परा भक्तिर्यथा देवे तथा गुरौ ।
तस्यैते कथिता ह्यर्थाः प्रकाशन्ते महात्मनः ॥" (श्वे-६-२३)**

"எவனுக்குப் பரமாத்மாவின்கண் மேலான பக்தியிருக்கின்றதோ பரமாத்மாவினிடத்திற்போல் குருவினிடத்தும் இருக்கின்றதோ அந்த மகாத்மாவாகிய புருஷனுக்கே சாஸ்திரங்களிற் கூறிய இவ்வர்த்தங்கள் அனைத்தும் விளங்குகின்றன" என்னும் சுருதியினாலும் **(भजतां प्रीति-पूर्वकं ददामि बुद्धियोगं तम्)** கீ॰ "பிரீதி பூர்வமாகப் பஜனை செய் கின்ற பக்தர்களுக்கு ஞானயோகத்தைக்கொடுக்கின்றேன்" என்னும் ஸ்மிருதியினாலும், **(ततः प्रत्यक्चेतनाधिगमोऽप्यन्तरायाभावश्च)**

(**योग सू.**) "ஈஸ்வர உபாசனையினுல் பிரத்யகாத்மாவின் சாக்ஷாத்காரமும் தடைகளின் அபாவமுமாம்" என்னும் யோகசூத்திரத் தானும் பக்திக்கு மோக்ஷ ஹேதுத்தன்மை கூறியிருத்தலின் என்க. நிர்க்குண ப் பிரம்மத்தின்கண்ணும் பக்தி பொருந்தும் என்று பகவத் கீதையில் ( **चतुर्विधा भजन्ते माम्** ) "நான்கு பிரகாரமான பக்தர்கள் என்னை பஜிக்கின்றார்கள்" என்பது முதலியவற்றால் வியாக்கியானிக்கப் பட்டது.

ருதியின் கண்ணே மிகுந்த நயத்தை அபேக்ஷியாமையாலும் ரூடிசக்திக்கு நாசம் பிராப்தமாதலாலும் பிரகிருஷ்டமா (மிகுதியா)ன நயம் பிரணயம் என்னும் வியாக்கியானம் கொள்ளத்தக்கதன்றாம். நயம்=நீதி.

ஆண்டு நிர்விசேஷ வஸ்துவின்கண் ஜகத்தன்மையாலும் ஜீவத் தன்மையாலும் பரமேஸ்வரத்தன்மையாலும் பிராப்தமான விகாரத்தை நிஷேதிக்கின்றார் விகாரமற்றதும் என. ஜகத்தின்கண் ஜன்மம் முதலான விகாரங்களும், ஜீவனிடத்தில் ஜாக்கிரம் முதலான விகாரங்களும், ஈசனிடத்தில் சிருஷ்டி முதலான விகாரங்களும் மாயையினுலே உண்டு பண்ணப்பட்டன. அவை நிர்விசேஷ வஸ்துவின்கண் சர்வப்பிரகாரத் தானும் சம்பவியா. ஆதலின் அது அவிக்கிரியமாம். இதனுல் சர்வ விகார சூன்யத்தன்மையால் சர்வ இந்திரியங்களாலும் கிரகிக்கத்தகாமை வடிவ சூட்சுமத்தன்மையும் சர்வ உபாதிசம்பந்தத்தின் சூன்யத்தன்மை வடிவ நித்ய முக்தத்தன்மையும் தரிசிப்பிக்கப்பட்டது.

இவ்வாறு சாமான்யமாக சர்வ விகாரமற்ற தன்மையைக் கூறி விசேஷமாகவுங் கூறுகின்றார் அநிருதஜட என்பதாதியால். ஈண்டு அநிருத விரோதி என்பது-அபாத்திய வடிவ பரமார்த்த சத்தியமாம். ஜடவிரோதி என்பது ஸ்வப்பிரகாச ஞான வடிவமாம். முப்பரிச் சேதமற்றது என்பது தேசகால வஸ்து பரிச்சேதங்கள் மூன்றுமற்றது. தேச பரிச்சேதமோ அத்தியந்தாபாவமாம். அதன் அப்பிரதியோகித் தன்மையால் வியாபகமாம். துவம்சமும் பிராகபாவமும் காலபரிச் சேதங்களாம். அதன் அப்பிரதியோகித்தன்மையால் நித்தியமாம். வஸ்து பரிச்சேதம் அன்யோன்யாபாவமாம். அதன் அப்பிரதியோகித் தன்மையால் அத்துவிதீயமாம். இதனுல் பிரபஞ்சத்தின் தர்மங்களான அநிருதத் தன்மை, ஜடத்தன்மை, வியாவிருத்தத் தன்மை, அவிபுத் தன்மை, அநித்தியத் தன்மை, சத்துவிதீயத்தன்மைகளின் நீக்கம் சித்தித்தது.

மலமும் பந்தமும் துக்கமுமாகிய இவைகளற்றது என்பதனுல் ஜீவ தர்மங்களுடைய நீக்கம் சித்திக்கின்றது. மலமென்பது கருத்திருத் தன்மை போக்திருத் தன்மை ராகாதி சம்பந்த வடிவ அசுத்தியாம். அஃதற்றதென்பது கர்த்திருத்வ முதலியவற்றின் சம்பந்தமில்லாத சுத்த வடிவமாம். பந்தனமென்பது தர்மம் அதர்மம் அவற்றின் பல சம்பந்தம். அஃதற்றது முக்தமாம். துக்கத் தன்மையின் விருத்தம் (அற்றது) என்பது பரமானந்த ரூபமாம், அதன் ஆசிரயமன்றும். அன்றியும் துக்க ரூபமும் அதன் ஆசிரய ரூபமும் அன்ரும். ஜீவனன்றே ராகாதி மலங்களாலும் தர்மாதர்மாதிபந்தனத்தாலும் சுக துக்காதி ஆசிரயத் தாலும் பிரசித்தமாயிருப்பவன். அத்தியந்தம் சமீபித்தது என்பதனுல் ஈஸ்வரனினின்றும் நீக்கம் சித்திக்கின்றது. வாதிகளால் பராக் வடிவமாய் தன்னினும் வேருய் பரோக்ஷமாகவே ஈஸ்வரன் கற்பிக்கப்பட்டுளன். இதுவோ அதி சமீபம் சாட்சாத் அபரோக்ஷம் பிரத்தியகான்ம வடிவம், அத்தியந்தம் மறைபடாததென்பது பொருள்.

இதனுனே (**सत्यं ज्ञानमनन्तं ब्रह्म**) (**तै.** 2-1) "பிரம்மம் சத் ரூபமும் சித் ரூபமும் அபரிச்சின்னமுமாம்" (**तदेतद् ब्रह्मापूर्वमनपरमनन्तरमबाह्यम्**) (**बृ.** 2-5-19) "அந்த இந்த பிரம்மம் காரண மற்றது, காரியமற்றது, உள்ளற்றது, வெளியற்றது" (**सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम्**) (**छां.** 6-2-1) "ஏ சௌமியனே ஈதனைத்தும் சிருஷ்டிக்குமுன்பு சத்தாகவேயிருந்தது ஒரே அத்விதீயமாம்" (**नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्मम्**) (**मु.** 1-6) "நித்தியமும் விபுவும் சர்வகதமும் அத்தியந்தம் சூட்சுமமுமாம்" (**विमुक्तश्च विमुच्यते**) (**का.** 3-5-1) "விமுக்தனுயிருந்து விடு படுகின்ருன்" (**न वर्द्धते कर्मणा नो कनीयान्**) (**बृ.** 4-4-23) "கர்மத்திஞல் விருத்தியடைகிறதில்லை குறைவையு மடைகிறதில்லை" (**शुद्धमपापविद्धम्**) (**ईशा,** 1-4) "சுத்தமும் பாபமற்றதுமாம்" (**एष एव परम आनन्दः**) (**बृ.** 4-3-33) "இவரே மேலான ஆனந்தவடிவர்" (**यत्साक्षादपरोक्षाद् ब्रह्म**) (**बृ.** 3-4-2) "எந்த பிரம்மம் நேரே அபரோக்ஷமோ (**एष त आत्मा सर्वान्तरः**) (**बृ.** 3-4-2) "உன்னுடைய இவ்வான்மா சர்வாந்தரமாம்" (**अयमात्मा ब्रह्म**) (**मां.** 1-2) "இவ்வான்மா பிரம்ம வடிவமாம்" (**न जायते म्रियते वा विपश्चित्**) (**क.** 1-2-1) "சைதன்ய வடிவ

ஆன்மா பிறப்பதும் இறப்பதும் இன்றும்" (**निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यं निरञ्जनम्**) (ஶ்வே. 6 – 19) "அவயவமற்றது, கிரியை யற்றது, சாந்தம், தோஷமற்றது, அஞ்ஜனமற்றது" என்பது முதலிய சுருதிகள் அசத்தியத் தன்மை முதலிய அவ்வப்பிராந்தியை நீக்குதலால் அகண்ட பிரத்தியகபின்னமும் முமுக்ஷுக்களால் அறிய விரும்பப்படுவது மான பிரம்மத்தைப் பிரதிபாதிக்கின்றன. சத்தியத் தன்மை முதலிய வடிவத்தாலோ அன்றும். அதற்கு நிர்விசேஷத்தன்மையினுல் சர்வ தர்மங் களின் ஆதாரத்தன்மை யின்மையினெனப் பிரதிபாதிக்கப்பட்டதாக ஆகின்றது. சர்வ விசேஷணங்களின் சமுச்சயத்தை "நித்திய சுத்த புத்த முக்த சுவபாவன்" என்பதாதியால் ஒரு சுலோகத்தாற் கூறுவர்.

ஈண்டு முதலில் இரண்டு "ந" கணமுடைய புஷ்பிதாக்ரமெனப் பெயரிய பாதி சமமுள்ள சந்தஸினுல் (யாப்பினுல்) கவி ரீதியினுலும் மங்கலம் அனுஷ்டிக்கப்பட்டது. அகாரத்தை ஆதியிலுடைய நான்கு பதங்களைக் கூறினது சுலோகஞ் செய்தலிற் சாமர்த்தியத்தைத் தெரிவித்தற்பொருட்டாம். பிரணவத்தின் முதலவயவத்தை உச்சரித்த லால் மங்கலத்தின் மேன்மை தெரிசிப்பிக்கப்பட்டது. (**अ इति ब्रह्म**) (**अकारो वै सर्वा वाक्**) "அ என்பது பிரம்மம்" "அகாரம் எல்லா வாக் வடிவமாம்" என்னும் சுருதியினுல் என்க. (1)

### *அவதாரிகை*

இவ்வாறு அறிய விரும்பிய பிரம்மத்தைத் தெரிவித்தலால் முதற் சூத்திரத்தின் பொருள் தெரிவிக்கப்பட்டது. இனி இரண்டாவது சூத்திரத்தின் பொருள் தெரிவிக்கப்படுகின்றது. முன்பு ஜக ஜீவ ஈஸ்வரர்களின் தர்மங்களுக்கு ஒடுக்கம் தெரிவிக்கப்பட்டது. அதுவும் அத்தியாரோபமின்றிச் சம்பவியாது. பிராப்தமானதற்கே நிஷேத யோக்கியத்துவமிருத்தலின். என்னும் அபிப்பிராயத்தால் அத்யா ரோபத்தைக் கூறுகின்றூர்.

### *சுலோகம்*

**स्वाज्ञानकल्पितजगत्परमेश्वरत्व-**
**जीवत्वभेदकलुषीकृतभूमभावा ।**
**स्वाभाविकस्वमहिमस्थितिरस्तमोहा**
**प्रत्यक्चितिर्विजयते भुवनैकयोनिः ॥ २ ॥**

### பதவுரை

**स्वाज्ञानकल्पित**—தனது அக்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட

**जगत्परमेश्वरत्वजीवत्वभेद**—ஜகத்-ஜீவத்தன்மை-ஈஸ்வரத் தன்மைகளின் பேதங்களால்.

**कलुषीकृतभूमभावा**—(மறைக்க) களங்கஞ் செய்யப்பட்ட பூரண ஆனந்தத் தன்மையையுடையதும்,

**स्वाभाविकस्वमहिमस्थितिः** — அநுகந்துக (இடையில் வந்துறுத) மான தனது பூரணானந்தரூபத்தில் இருப்பையுடையதும்.

**अस्तमोहा**—தன்னில் அத்தியஸ்தமான அஞ்ஞானத்தையுடையதும்.

**भुवनैकयोनिः** — ஆகாசாதிப்பிரபஞ்சத்திற்கு ஒரே காரணவடிவமானதுமான.

**प्रत्यक्चितिः** — பிரத்யக்வடிவஸ்வப்பிரகாச ஞானம்.

**विजयते** சர்வோத்கிருஷ்டமாக விளங்குகின்றது.

### விசேஷவுரை

தன்னையே ஆஸ்ரயமாகவும் விஷயமாகவும் உடையதும், அவித்தை, மாயை என்னும் சப்தங்களால் சொல்லப்பட்டதும், அநாதி பாவ வடிவமும், அநிர்வாச்யமும், ஆவரண விட்சேப சக்திகளையுடையதுமான யாதொரு அஞ்ஞானமுண்டோ அவ்வஞ்ஞானத்தினுல் ஆவரண சக்தியினுலே ஆன்ம சொரூப பானத்தை மறைத்து விட்சேப சக்தியினுல் ஆரோபிக்கப்பட்டவைகளான ஜகத்து ஜீவத்தன்மை பரமேஸ்வரத் தன்மைகளாலும், அவைகளை அநுயோகித் தன்மையாலும், பிரதியோகித்தன்மையாலும் நிமித்தமாகவுடைய - ஜீவஜகத்பேதமும், ஜீவேஸ்வர பேதமும், ஜீவ பரஸ்பர பேதமும், ஜகத்தின் பரஸ்பரபேதமும் ஜக பரமேஸ்வர பேதமும், ஆகிய எவ்வைந்துவித பேதமுண்டோ அதனுலும் கலங்கப்பெற்றது. அதாவது (பிரத்தியக்சேதனம்) வாஸ்தவமாக நிஷ்களங்கமாயினும் ஆரோபிக்கப்பட்ட தோஷத்தால் வியாபக சத்பாவம் அசத்தைப்போன்று செய்யப்பட்டது. ஜகத்து ஜடமாதலால் சொரூபமாகவே கற்பிக்கப்பட்டது.

ஜீவேஸ்வரரோ சைதன்ய வடிவினராதலின், சொரூபமாக சத்தியங்களாம். கேவலம் ஒரே சைதன்னியத்தின்கண், பிம்ப பிரதிபிம்ப பாவத்தால் ஜீவத்தன்மையும் ஈஸ்வரத்தன்மையும் கற்பிதமாம், என்று அறிவித்தற்கு (ஜீவத்தன்மை ஈஸ்வரத் தன்மை என்னும்) இரண்டன் பிரயோகமாம். சித்தின்சொரூபம் மறைக்கப்பட்டதன்றும், எல்லாவற்றையும் விளக்குந் தன்மையால் எப்போதும் விளங்குதலின். மற்றோ அவ்வப்பேதகற்பனையால் அதன் அபரிச்சின்னத்தன்மை வடிவ வியாபகத்தன்மையே மறைக்கப்பட்டதாம் பூரணத்தன்மையான் விளங்காமையின்.

அது வார்த்திகத்தின் கண்ணும் கூறப்பட்டுள்ளது—

**यस्यैकमपि चैतन्यं बहुधा प्रविभज्यते ।**
**अङ्गाराङ्कितमुत्पाते वारिराशेरिवोदकम् ॥** என

சமுத்திரத்தின் ஜலம் உத்பாத காலத்தில் நெருப்புக்குச் சமானமாக பின்ன பின்னமாகப் பிரதீதியாகிறது. அதுபோல ஆன்மாவின் சொரூபசைதன்யம் வாஸ்தவமாக ஒன்றாயினும் அஞ்ஞானத்தால் அநேகமாகப் பிரதீதியாகிறது.

கலங்கத்தைச் செய்வதனால் வியாபகத்தன்மை நசிப்பிக்கப் பெற்றதாமேயெனின் அன்றெனக் கூறுகின்றார். அனுகந்துகமென். வியாபகத்தன்மையின்கண் களங்கத்தைச் செய்தலாவது பரிச்சின்னத் தன்மையின் ஆரோபமாத்திரமாம். சொரூப நாசமன்றும். ஆரோபத்தால் வஸ்துசத்தை நீங்காமையின் (**यत्र यदध्यस्तं तत्कृतेन दोषेण गुणेन वाऽणुमात्रेणापि स न सम्बध्यते**) "எதன்கண் எது அத்யஸ்தமோ அதனாற் செய்யப்பெற்ற தோஷத்தோடாவது குணத்தோடாவது அணுவளவேனும் அது சம்பந்திக்கிறதில்லை" என்னும் பாஷ்யத்திற் கூறிய யுக்தியினால் என்க. ஸ்வாபாவிகம் (அனுகந்துகம்) என்பது நித்திய சித்தமாம். ஆயிரமத்தியாசத்தாலும் நீக்கத்தகாத வடிவமாம் என்பது பொருள். ஸ்வமஹிம்ஸ்திதி என்பது சொரூபத்தினின்றும் நழுவுதலற்றது.

அங்ஙனமாயினும் சர்வ அத்தியாசத்திற்கும் காரணமான அஞ்ஞானம் ஆரோபிக்கப்படாமையின் அவ்வஞ்ஞான வடிவ இரண்டாவது பதார்த்தத்தால் அத்விதீயத்தன்மை வடிவ வியாபகத்தன்மை

கலங்கம் செய்யப்பெற்றதாமே எனின் கூறுகின்றார் தன்னில் அத்தியஸ்தமான என.

அபரமார்த்த வடிவ அஞ்ஞானமெனப்பெயரிய மோகத்தினை யுடையது என்பது அப்பதத்தின் பொருள். அஞ்ஞானத்தியாசத்திற்கும் அஞ்ஞானமே காரணமாதலாலும் அநாதியாதலானும் ஆத்மாசிரய முதலான தோஷப்ராப்தியின்றும். அது வார்த்திகத்தின் கண்ணும் கூறப்பெற்றுளது.

**अविद्यास्तीत्यविद्यायामेवाऽऽसित्वा प्रकल्प्यते ।**
**ब्रह्मदृष्ट्या त्वविद्येयं न कथंचन युज्यते ॥** என.

அவித்தையுளது என அவித்தையின் இருப்பு அவித்தையினாலேயே கற்பிக்கப்படுகின்றது. பிரம்மதிருஷ்டியினாலோ அவ்வவித்தை எவ்வாற்றானும் பொருந்தாது என்பது பொருள்.

அற்றேல் அஞ்ஞானத்தியாசத்திற்கு அதிஷ்டானம் யாது? ஜீவனாவது ஈஸ்வரனாவது அன்றாம். இவ்விருவர்களும் அத்தியாசத்தால் சித்தித்தவர் களாதலால் அந்நியோன்னியாசிரயமாம் ஆதலின். வேறு வஸ்துவுமன்றாம். அதை நிரூபிக்கமுடியாமையின் என்றாசங்கித்துக் கூறுகின்றார் :—பிரத்யக் வடிவென. பிரத்தியக் = ஜீவேஸ்வர விபாகமற்ற, சிதி = ஸ்வப்பிரகாச ஞானம். அஃது அஞ்ஞானத்தோடுகூடிய அத்தியஸ்தமான ஆகாசாதிப் பிரபஞ்சத்திற்கு அஞ்ஞான வாயிலாய் உபாதானகாரணமாம். காரணம் ஒன்றேயாம். இரண்டாவதனபேக்ஷையின்று. சத்தியத்தன்மையாலும் அஞ்ஞாதத்தன்மையாலும் அதற்கே அதிஷ்டானத்தன்மை பொருந்துதலின். அவ்வாறே ஆஸ்ரயத்வ விஷயத்வ பாகினீ நிர்விபாக சிதிரேவ கேவலா (1–319) என்னும் சுலோகத்தால் பின்னர்க்கூறுவர்.

(வார்திகம்) **आऽऽन्त्यात्कार्यात्तदेव स्याद्यदाद्यं प्रति कारणम्** என வார்திகமும் கூறுகின்றது.

முதற்காரியத்தைக்குறித்து எது காரணமோ, அது அந்தியகாரிய பர்யந்தமும் காரணமாம் என்பது பொருள்.

அந்த பிரத்யக்சேதனமும், விஜயதே – பரமார்த்த சத்திய சொப் பிரகாச பரமாநந்த ரூபத்தன்மையால் சர்வோத்கிருஷ்டமாகவிருக்கிறது. இதனால் அதைக்குறித்து வணங்கினவனாக இருக்கின்றேன் என்பது

தொனிக்கின்றது. இவ்வாறு அத்தியாரோபம் சம்பவித்தலால் அநிர்த ஜடவிரோதி என்பதாதியால் அதன் அபவாதம் பொருத்தமேயாம். ஆகாசாதிப்பிரபஞ்சத்திற்குக் காரணம் (புவனைகயோனி:) என்பது தடஸ்த லக்ஷணம். பிரத்யக்வடிவ என்பது சொரூப லக்ஷணம் என்பது விவேகமாம். இந்த சுலோகத்தினால் மித்யாபிரபஞ்சத்தின் உபாதானத்தன்மையால் தத்பத வாச்சியத்தை நிரூபித்தலால் "ஜன்மாத்யஸ்ய யத:" என்னும் இரண்டாவது சூத்திரம் வியாக்கியானிக்கப்பட்டது. (2)

### அவதாரிகை

இவ்வாறு துவம்பதார்த்தமும் தத்பதார்த்தமுமாகிய விஷயத்தைக் கூறி பிரயோஜனத்தைச் சொல்லுதற்பொருட்டு வாக்கியார்த்தத்தைக் கூறுகின்றார்:—

### சுலோகம்

**प्रत्यक्प्रमाणकमसत्यपराक्प्रभेदं**
**प्रक्षीणकारणविकारविभागमेकम् ।**
**चैतन्यमात्रपरमार्थनिजस्वभावं**
**प्रत्यञ्चमच्युतमहं प्रणतोऽस्मि नित्यम् ॥**

### பதவுரை

**प्रत्यक्प्रमाणकम्**–பிரத்தியக்வடிவ சொப்பிரகாச சைதன்யத்தையே பிரமாணமாகவுடையதும்

**असत्यपराक्प्रभेदम्** –மித்தையான பாகிய திருசியப் பிரபஞ்சத்தின் பேதத்தையுடைத்தானதும் (திருசியப்பிரபஞ்ச பேதமற்றது என்பது பொருள்)

**प्रक्षीणकारण-विकारविभागम्** – மாயை ஆகாச முதலான காரண காரிய விபாகமற்றதும்

**एकम्** – அத்துவிதீயமும்

**चैतन्यमात्रपरमार्थ-निजस्वभावम्** – சைதன்னிய மாத்திரமாய் பரமார்த்தமாய் தனது சொரூபத்தையுடைத்தானதும்,

**प्रत्यक्षम्** – பிரத்யக் வடிவமும்,

**अच्युतम्** – பரமான்ம வடிவமும், ஆகிய வஸ்துவை.

**अहम्** – நான்.

**नित्यं-प्रणतः-अस्मि**-எப்போதும் வணங்கினவனாக விருக்கின்றேன்.

## *விசேஷவுரை*

பிரத்யக் வடிவமென்பது துவம்பதார்த்தம். பரமான்ம வடிவ மென்பது தத்பதார்த்தம். ஏகமென்பது அவ்விரண்டனது முக்கிய ஐக்கிய வடிவ வாக்கியார்த்தம். அதனை நான் சிரவணாதி பரிபாக வசத்தால் திடப்பிரஞ்ஞையுடையவனாய், எப்போதும் = தேகேந்திரியாதி பிரதீதியாகும் அவஸ்தையில் பிரணத: அஸ்மி = வணக்கமாகப் பூஜிக் கிறேன்.

[ அற்றேல் முக்கிய வைக்கியம் யாங்ஙனம் ? சத்தியம் ஞானம் முதலான அபர்யாய அநேக சப்தங்களால் பிரதிபாத்தியத் தன்மை யுண்மையின் எனின் அதற்குக் கூறுகின்றார்.] சைதன்யமாத்ர என —

வாச்சியார்த்தத்தில் பேதம் பிரதீதியாயினும் பரமார்த்த நிருபாதிக சொரூப சைதன்யமாத்திரம் லக்ஷ்யமாதலின் ஏகத்தன்மைக்கு விரோத மின்றாம், என்பது பொருள் **चैतन्यमात्रम्** – சைதன்யமாத்திரமே. **परमार्थः** – அத்தியந்த அபாத்தியம். அல்லது பரமானந்த ரூபத் தன்மையால் பரமப்பிரயோஜன வடிவம்.

**निजः** – நிருபாதிகம். **स्वभावः** - சொரூபம் எதற்கோ அது சைதன்யமாத்ர பரமார்த்த நிஜஸ்வபாவம் என்பது சொற்பொருள்.

அற்றேல் ஜீவனுக்குக் கார்ய காரணம் முதலிய விபாகத்தை யுடைத்தாந் தன்மையால் சத்விதீயத் தன்மையானும் ஈஸ்வரனுக்குப் பரோக்ஷத்தன்மையால் பாகியத்தன்மை யுண்மையானும் அவ்விருவருக் கும் ஐக்கியம் யாங்ஙனம் கூடும் ? என்னுமிடத்துக் கூறுகின்றார் **प्रक्षीण** ( மாயை ) எனவும். **असत्य** – ( மித்தையான ) எனவும், **प्रक्षीण**– ஞானத்தால் பாதிக்கப்பட்ட பிரமாதிருத்தன்மை, கருத்திருத் தன்மை, போக்திருத்தன்மை வடிவ **कारणविकारविभागम्** எது பல்சந்தானம் ( காரண காரியப்பிரவாகம்) அல்லது மாயை ஆகாசாதிப் பிரபஞ்சம் எதன்

கண்ணோ அது - பிரக்ஷீண காரண விகார விபாகம், நிர்விபாகமென்பது பொருள். சம்சார தசையிலும் பரமார்த்தமாகத் துவைதமற்றது என்பது கருத்து. இங்ஙனமே **असत्यः** - சர்வப் பிரகாரத்தாலும் பாதிக்கப்பட்டது **पराक्प्रभेदः** — பராக் ரூபத்தால் (நான் என்று சொல்லுதற்கு அயோக்கியத் தன்மையால் பிரத்தியக் வடிவத்தினும்) பேதம் எதனிடத்தோ அது அசத்திய பராக்பிரபேதமாம். சாக்ஷாத் அபரோக்ஷமென்பது பொருள். **प्रक्षीण** — விபாகமற்றது என்னும் விசேஷணத்திற்கு பிரத்தியகான்மா விற்கு அத்துவிதீய பரமான்மாவோடு அபேத ஞானம் பயனும். **असत्य** — மித்தை என்னும் விசேஷணத்திற்கு அத்துவிதீய பரமான்மா விற்கு அபரோக்ஷ பிரத்தியகான்மாவோடு அபேத ஞானம் பயனும் என்பது விவேகம்.

அற்றேல் காரிய காரண விபாகமற்றதும் பிரமாதிருத்தன்மை முதலிய தர்மமற்றதுமான வஸ்துவில் பிரமாணமின்மையின் அசித்தியாம். பிரமாணத்தை அங்கீகரிக்கினே கார்ய காரண விபாகப் பிராப்தியாம் என்றாசங்கித்துக் கூறுகின்றார். **प्रत्यक्प्रमाणकम्** (பிரத்தியக் வடிவ) என.

பிரத்தியக் வடிவத்தையே பிரமாணமாகவுடையது. ஸ்வப்பிரகாச சைதன்ய ரூபத்தன்மையால் தன்னினும்வேறான பிரமாணத்தை அபேக்ஷியாததாய் தன்னாலேயே சித்தித்தது என்பது பொருள். இந்த சுலோகத்தால் அகண்ட வாக்கியார்த்தத்தைக் கூறுதலால் " **तत्तु समन्वयात्** " (தத்து சமன்வயாத்) என்னும் நான்காவது சூத்திரம் வியாக்கியானிக்கப்பட்டது. இச்சுலோகம் வசந்த திலகாவிருத்தம். (3)

## அவதாரிகை

இவ்வாறு துவம்பதார்த்தமும் தத்பதார்த்தமும் அகண்ட வாக்கியார்த்தமும் என சாஸ்திரத்தின் விஷயம் கூறப்பட்டது. இப்போது அவற்றில் பிரமாணமான வேதாந்த வாக்கியத்தைத் தெரிசிப்பித்தற்கு சருவவேதங்களின் அபிமானியாகிய வாக்தேவதையை வணங்குகின்றார்: —

## சுலோகம்

**औत्पत्तिकी शक्तिरशेषवस्तुप्रकाशने कार्यवशेन यस्याः ।**
**विज्ञायते विश्वविवर्तहेतोर्नमामि तां वाचमचिन्त्यशक्तिम् ॥**

*பதவுரை*

**विश्वविवर्तहेतोः** – சர்வப் பிரபஞ்சத்தின் விவர்த்த உபாதான காரணமாகிய பரமேஸ்வரனை ஹேதுவாகவுடைய

**यस्याः** – எந்த வாக்தேவியினுடைய

**अशेषवस्तुप्रकाशने** – சர்வ அர்த்தங்களையும் நாநாவித விருத்திகளால் போதித்தலில்

**औत्पत्तिकी** – ஜன்மசித்தமான

**शक्तिः** – பிரதிபாதகத் தன்மை வடிவ சாமர்த்தியமானது

**कार्यवशेन** – ஞானவடிவ கார்யவசத்தால்

**विज्ञायते** – விருத்த புருஷரது வியவகாரங்களில் தர்க்ககுசலரால் அறியப்படுகின்றதோ

**अचिन्त्यशक्तिम्** – சிந்திக்கத்தகாத பிரபாவத்தினையுடைய

**तां वाचम्** – அந்த வேத வடிவ வாக்தேவியை

**नमामि** – நமஸ்கரிக்கின்றேன்

" சாஸ்திரயோனித்வாத் " என்னும் சூத்திரத்தின் முதல் வியாக்கியானத்தின்படி இப்பொருள் கூறப்பட்டது. இனி இரண்டாவது வியாக்கியானப்படி இச்சுலோகத்திற்கு வேறுமொரு பொருள் கூறப்படுகின்றது.

*பதவுரை*

**विश्वविवर्तहेतोः** – சர்வப் பிரபஞ்சத்தின் காரணபூதமான

**यस्याः** – எந்த வேத வடிவ வாக்கியத்தினுடைய

**अशेषवस्तुप्रकाशने** – சர்வ புருஷார்த்த வடிவ பரமார்த்தப் பிரம்மத்தைப் பிரகாசித்தலில்

**औत्पत्तिकी शक्तिः** – ஸ்வாபாவிகமான ஆற்றல்

**कार्यवशेन** – பிரம்ம சாக்ஷாத்கார வடிவ காரிய லிங்கத்தால்

**विज्ञायते** – அறியப்படுகின்றதோ சிந்திக்கத்தகாத பிரபாவத்தையுடைய அந்த வேதவடிவவாக்தேவியை நமஸ்கரிக்கின்றேன்.

## விசேஷவுரை

சாஸ்திரயோனித்வாத் என்னும் சூத்திரத்தின் கண்ணே முதலாவது வியாக்கியானத்தினால் பிரம்மத்திற்கு வேதத்தின் உபாதானத்தன்மையும் இரண்டாவது வியாக்கியானத்தினால் பிரம்மத்தின்கண் அவ்வேதத்திற்குப் பிராமாண்யமும் தரிசிப்பிக்கப்பட்டது.

அவ்விரண்டும் இச்சுலோகத்தால் தெரிசிப்பிக்கப்படுகின்றது.

**विश्व** – சர்வப்பிரபஞ்சமும் **विवर्त** – பொய்மையால் வேற்று வடிவம், (காரண சத்தையினால் சத்தையையுடையதும், காரணப் பிரகாசத்தினால் பிரகாசத்தையுடையதும்) எதற்கோ சர்வத்திற்கும் சத்தாஸ்பூர்த்தியைக் கொடுக்கின்ற அந்த பரமாத்மா விஸ்வ விவர்த்த மாம். அதுவே **हेतुः** – உபாதான காரணம் எதற்கோ, சர்வத்தினையும் பிரகாசிப்பிக்கும் சக்தியினையுடைய பரமேஸ்வரனை உபாதானமாக உடையதாந்தன்மையினால் சர்வத்தையும் பிரகாசிப்பிக்கும் பயனுடைய எவ்வேத வடிவ வாக்கிற்கு, கரும்பு பால் முதலிய எல்லா வஸ்துக்களின் மதுர முதலானவற்றை நானாவிதமான விருத்திகளால் பிரகாசிப்பிப்பதில் அகிருத்திரிம (சுவாபாவிக) மான பிரதிபாதகத் தன்மை வடிவ ஆற்றல் ஞான வடிவ காரிய வசத்தால் விருத்த புருஷரது வியவகாரங்களில் தர்க்க குசலரால் அறியப்படுகிறதோ அவ்வாணியை நமஸ்கரிக்கின்றேன் எனக் கூட்டுக. இதற்கு இப்படிப்பட்ட சாமர்த்தியம் எங்ஙனம் ஆம் என்னும் சங்கைக்குக் கூறுகின்றார்: — **अचिन्त्य** – (சிந்திக்கத் தகாத) என. சிந்திக்கத்தகாத பிரபாவத்தினையுடையது. சர்வத்தையும் பிரகாசிக்கும் சக்தியையுடைய பரமேஸ்வரனை உபாதானமாயுடைத்தாந் தன்மை வேதத்திற்கு சர்வத்தையும் பிரகாசிப்பிக்கும் சாமர்த்தியத்தின் கண் ஏதுவாம் என்பது முதல் வியாக்கியானத்தின் பொருள்.

இனி இரண்டாவது வியாக்கியானத்தின் விசேஷவுரை: **शेषः** – பரார்த்தம் சேஷமின்றியது அசேஷம். **अशेषः** – சர்வ புருஷார்த்தம். அப்படிப்பட்டது, சர்வசேஷி பூதமான **वस्तु** – பரமார்த்த சத்வடிவ பிரம்மமாம். அதனைப் பிரகாசித்தலில் அதனாகார விருத்தியை யுண்டு பண்ணுதலால் அதன் அஞ்ஞான ஆவரணத்தை நீக்குதலில் எவ்வேத வடிவ வாக்கின் சுவாபாவிக சக்தி பிரம்ம சாக்ஷாத்கார காரிய லிங்கத்தால் அறியப்படுகிறதோ அதனை வணங்குகின்றேன் எனக்கூட்டுக.

மீண்டும் அவ்வாணி எப்படிப்பட்டதோ எனின் கூறுகின்றார்:— **विश्वविवर्त** (சர்வப்பிரபஞ்சத்தின்) என சர்வப்பிரபஞ்சத்தின் காரண பூதமாம் என்பது பொருள். (**एत इति वै प्रजापतिर्देवानसृजत असृग्रमिति मनुष्यानिन्दव इति पितॄंस्तिरःपवित्रमिति ग्रहानाशव इति स्तोत्रं विश्वानीति शस्त्रमभिसौभगेत्यन्याः प्रजाः**) "பிரஜாபதியானவர் ஏத: என்னும் சப்தத்தால் தேவர்களைச் சிருஷ்டித்தார். அசிருக்ரமென்னும் சப்தத்தால் மனிதர்களையும், இந்தவ என்னும் சப்தத்தால் பிதிர்க்களையும், திர:பவித்திரம் என்னும் சப்தத்தால் கிரஹங்களையும், ஆசவ என்னும் சப்தத்தால் தோத்திரங்களையும், விஸ்வானி என்னும் சப்தத்தால் சஸ்திரத்தையும், அபிசௌபக என்னும் சப்தத்தால் இதர பிரஜைகளையும் சிருஷ்டித்தார் என்னும் சாந்தோக்யப் பிராமண சுருதியிலும்

**अनादिनिधना नित्या वागुत्सृष्टा स्वयंभुवा ।**
**आदौ वेदमयी दिव्या यतः सर्वाः प्रवृत्तयः ॥**

**नाम रूपञ्च भूतानां कर्मणाञ्च प्रवर्तनम् ।**
**वेदशब्देभ्य एवादौ निर्ममे स महेश्वरः ॥**

உத்பத்தி நாசமற்றதும் நித்தியமும் விரும்பத்தக்கதும் ஆகிய வேதவடிவ வாணியை பரமேஸ்வரன் சிருஷ்டியினாரம்பத்தில் வெளிப் படுத்தினார். இந்த வாணியினாலேயே சர்வப்பிரவிருத்திகளும் உண்டாம். பூதங்களினுடைய நாமத்தையும் ரூபத்தையும், கர்மங்களின் பிரவிருத்தி யையும் சிருஷ்டியின் ஆதியில் அப்பரமேஸ்வரன் வேத சப்தங்களாலேயே உண்டுபண்ணினார் என்னும் மனு ஸ்மிருதியினாலும் பிரபஞ்சத்தின் காரணத்தன்மை வேதவாக்கியங்களில் அறியப்படுகின்றது. **शब्द इति चेन्नाऽतः प्रभवात् प्रत्यक्षानुमानाभ्याम्** (1–3–28) "சப்தத்தின் கண் விரோதமுளது எனின் அற்றன்று – சப்தத்தினாலேயே தேவாதிகள் உத்பத்தியாகின்றமையின் இது பிரத்தியக்ஷ அனுமானங்களால் அறியப் படுகின்றது," என்னும் பிரம்ம ஸூத்திரத்தின் கண் மேற்கூறிய சுருதி ஸ்மிருதிகளே பிரத்தியக்ஷ அனுமான சப்தங்களால் சொல்லப்பட்டன.

அற்றேல் (**यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह**) 'எதினின்றும் மனத்தோடுகூட வாக்குகள் திரும்புகின்றனவோ' என சர்வ வாக்கின் அவிஷயத்தன்மை கேட்கப்படுதலால் அத்தகைய பிரம்மத்தின்கண் வாக்கிற்கு எங்ஙனம் சாமர்த்தியம் என்னுமிடத்துக் கூறுகின்றார்.

**अचिन्त्यशक्तिम्** (சிந்திக்கத்தகாத) என லக்ஷணையினுலேயாவது முக்கிய விருத்தியினுலேயாவது வாக்கிற்கும் மனதிற்கும் விஷயமாகா விடினும் தானுகவே ஷட்வித தாற்பரிய லிங்கங்களோடு கூடிய உப நிஷத்தானது நிர்விசேஷமாயினும் பிரம்மத்தை எவ்வாறு உணர்த்துமோ அவ்வாறு விஸ்தாரமாக ஸ்பஷ்டமாய் மேலே பிரதிபாதிக்கப்படும். இவ்வாறு நிர்விசேஷ பிரம்மத்தின் கண் வேதாந்த வாக்கியமே பிரமாணமாமென்பது இரண்டாவது வியாக்கியானத்தின் பொருள். இவ்வாறு பிரத்யக் பிரம்மங்களின் ஐக்கிய வடிவ விஷயத்தோடு வேதாந்த வாக்கியங்களுக்கு பிரதிபாத்திய பிரதிபாதக வடிவ சம்பந்தம் தெரிசிப் பிக்கப்பட்டது. வேதாந்தத்திற்குப்போன்று நான்கு அத்தியாய வடிவ சாரீரக மீமாம்சையெனப் பெயரிய சாஸ்திரத்திற்கும். சாஸ்திரத்திற்குப் போன்று அதன் பிரகரணமாயுள்ள இந்தச் சங்க்ஷேபசாரீரகமென்னுங் கிரந்தத்திற்கும் விஷயத்தோடு பிரதிபாத்ய பிரதிபாதகரூப சம்பந்தத்தைக் காண்க. சாரீரக மீமாம்சையின் ஆதியிலுள்ள நான்கு ஸூத்திரங்களின் பொருளைக் கூறுதல் வாயிலாக கிரந்தகாரரால் மங்கலம் செய்யப் பட்டது. இச்சுலோகம் இந்திர வஜ்ர உபேந்திர வஜ்ர உபஜாதிவிருத்தம்.

## *அவதாரிகை*

இனி விக்கினேஸ்வரரை மங்கலத்தால் பிரசன்னராக்குகின்ருர் :—

**आरम्भाः फलिनः प्रसन्नहृदयो यश्चेत्तिरश्चामपि**
**नो चेद्विश्वसृजोऽप्यलं विफलतामायान्त्युपायोद्यमाः ।**
**विश्वैश्वर्यमतो निरङ्कुशमभूद्यस्यैव विश्वप्रभोः**
**सोऽयं विश्वहिते रतो विजयते विघ्नेश्वरो विश्वकृत ॥ ५ ॥**

## *பதவுரை*

**यः** — யாதொரு கணேசரானவர்

**प्रसन्नहृदयः चेत्** — பிரசன்னஹிருதயராய் அநுக்கிரஹம் செய்வாராயின்

**तिरश्चाम्** — குறுக்குயோனிகளான சுக்கிரீவன் ஹனுமான் முதலானவருடைய

**आरम्भा अपि** — முயற்சிகளுங்கூட

**फलिनः** – பிரயோஜனமுடையனவாமோ

**नो चेत्** – பிரசன்னஹிருதயராய் அநுக்கிரஹஞ் செய்பவராகாராயின்

**विश्वसृजः** – பிரம்மாவினுடைய

**उपायोद्यमाः अपि** – சாதன விஷயக முயற்சிகளுங்கூட

**अलम्** – அத்தியந்தம்

**विफलताम्** – நிஷ்பலத்தன்மையை

**आयान्ति** – அடைகின்றனவோ

**अतः** – இக்காரணத்தால்

**यस्य विश्वप्रभोः** – சர்வப்பிரசாசக (ஆள்பவ) ரான எவருடைய

**विश्वैश्वर्यम् एव** – உலகின்கண் நிக்கிரஹானுக்கிரஹ சாமர்த்தியமே

**निरंकुशम् अभूत्** – தடையற்றதாயுள்ளதோ

**विश्वहिते रतः** – சர்வஜனங்களுடைய ஹிதத்தில் ரமிப்பவரும்

**विश्वकृत्** – பிரபஞ்சத்தை உண்டாக்குபவரும் ஆன

**सोऽयं विघ्नेश्वरः** – அந்த இக்கணேசர்

**विजयते** – சர்வோத்கிருஷ்டமாகவிருக்கின்றார்.

## விசேஷவுரை

எவர் அநுக்கிரஹம் செய்பவராயிருக்குங்காலத்து குறுக்கு யோனிகளான் சுக்ரீவன் முதலியோருடைய இஷ்ட சாதன முயற்சிகளுங்கூட **फलिनः**–பயனின் பிறழ்ச்சியின்றியனவாமோ அல்லது சர்வோத்கிருஷ்ட பயனுடையனவாமோ. எவர் அநுக்கிரஹம் செய்பவராயிராத காலத்து பிரம்மாவினுடைய பலசாதன விஷயக முயற்சிகளுங்கூட அத்தியந்தம் நிஷ்பலத்தன்மையையடைகின்றனவோ மற்றவரது முயற்சிகள் நிஷ்பலமாம் எனச் சொல்லவேண்டுவது என்னே. பிரம்மாவிற்கும் அபிமத பங்கம் (கருதப்பட்டதின் விநாசம்) கன்றைக் கவர்தல் முதலான இடங்களில் ஸ்மரிக்கப்படுகின்றது. (அதாவது பாகவதத்தில் சொல்லப் படுகின்றது) ஆதலால் அந்நுவயவ்யதிரேகங்களால் உலகின்கண் நிக்கிரகானுக்கிரக சாமர்த்தியம் **(भीषाऽस्माद्वातः पवते)** இப்பரமான்மா

வின் பயத்தால் வாயு சஞ்சரிக்கின்றது, என்பது முதலிய சுருதிசித்தரான சர்வப் பிரசாசக (ஆஞ்ஞாபிக்கின்ற) எவ்விக்கினேஸ்வரனுக்கே தடையற்றதாயுளதோ, விக்கினம் விக்கினத்தின் அபாவம் முதலிய சர்வப் பிரபஞ்சத்தையும் செய்கின்ற அந்த இப்பகவானே ஸ்ரீ கணேசரூபத்தால் அவதரித்தவராகி சர்வோத்கிருஷ்டராயிருந்துகொண்டு நம்மை அநுக்கிரகம் செய்யட்டும் என்பது பொருள். அபக்தர்களுக்கு விக்கினம் செய்கின்றவராயினும் அவருடைய பக்தரது விக்கினத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவதரித்தலில் ஏது சர்வ ஜனங்களின் இதத்தில் ரமிப்பவர் என்பது. கிருபையே அவருடைய அவதாரத்தில் காரணமென்பது பொருள். அவர் எல்லோரைக்குறித்தும் சமானவடிவினராயினும் அவருடைய பஜனையும் பஜனையின்மையுமே விஷமபயனுக்குக் காரணமாவதால் வைஷம்யமும் நைர்க்ருண்யமுமாகிய தோஷங்களின் அடைவு அவருக்கு இன்றுமென்பது கருத்து. இது சார்த்தூல விக்ரீடிதம்.

வைஷம்மியம் — விஷமத்தன்மை, அதாவது ஒருவருக்கு நன்மையும் ஒருவருக்குத் தீமையுஞ்செய்தல், நைர்க்ருண்யம் — குரூரத்தன்மை.

## அவதாரிகை

இனிமேல் சூத்திரக்காரர் பாஷியக்காரர் வார்திகக்காரர்களான ஆசிரியர்களை குருபூர்வக்கிரமத்தால் மூன்று சுலோகங்களால் பூஜிக்கின்றார். அவர்களுள் விஷ்ணுவின் அவதாரரும் சூத்திரத்தைச் செய்தவரும் முதற்குருவும் ஆன வியாசபகவானை சமுத்திரவுருவகத்தால் துதிக்கின்றார் :—

## சுலோகம்

**वाग्विस्तरा यस्य बृहत्तरङ्गा वेलातटं वस्तुनि तत्त्वबोधः ।**
**रत्नानि तर्कप्रसरप्रकाराः पुनात्वसौ व्यासपयोनिधिर्नः ॥**

## பதவுரை

**यस्य** — எந்த வியாச பகவானாகிற சமுத்திரத்திற்கு

**वाग्विस्तरा:** — வேத வாணி வடிவ வாக்கின் அவ்வச்சாகை விசேஷங்களே

**बृहत्तरङ्गा:** — பெரிய அலைகளாமோ

**वस्तुनि** — பிரம்மான்ம ஐக்கியத்தில்

**तत्त्वबोध :** – சிஷ்யர்களுக்குண்டாகும் சாக்ஷாத்காரமே

**वेलातटम्** – கரையின் சமீபதேசமாமோ

**तर्कप्रसरप्रकारा :** – யுக்திகளின் பிரயோகப் பிரகாரங்களோ

**रत्नानि** – ரத்தினங்களாமோ

**असौ व्याससपयोनिधि :**– அந்த வியாசராகிய சமுத்திரமானது

**न :** – நம்மை

**पुनातु** – பரிசுத்தம் செய்யட்டும்

## *விசேஷவுரை*

மஹத்தன்மை பவித்திரத்தன்மை கம்பீரத்தன்மை சுவச்சத்தன்மை முதலியசமத்துவம் உண்மையின் வியாசரே சமுத்திரமாம். அதற்கு வேதங்களேயே ஜலமாகவுணர்க. வாக்குகளே அலையாகக் கூறினமையானும் வியாச சப்தத்தால் வேதத்தை வகுத்தல் வடிவ குணத்தைக் கூறினமை யானுமென்க. **(दृष्टमात्राः पुनन्त्येते राजा भिक्षुर्महोदधिः)** தரிசன மாத்திரத்தினல் அரசனும் சந்நியாசியும் சமுத்திரமும் பரிசுத்தத்தைச் செய்கின்றார்கள், என்னும் ஸ்மிருதியினுல் அவர் நம்மைப் பாவமாகிய மலமற்றவராகச் செய்யட்டுமெனக்கூறப்பட்டது. வேதமாகிற ஜலத்தினை யுடைய ஸ்ரீவியாசராகிற சமுத்திரத்திற்கு வேதவாக்கின் அவ்வச்சாகை விசேஷங்களே பெரிய அலைகளாம். விஸ்தர சப்தத்தாலும் மஹத் சப்தத்தாலும் பெரிய அலை கூறப்பட்டமையின் சங்க்ஷிப்த வாணியானது சூட்சும அலை என குறிப்பிக்கப்பட்டது. தடம் என்பது கரையின் சமீபமென்பதாம். அதுவே அலைகளின் வேகத்திற்குப் பர்யவசான பூமியாகலின். அது=பிரம்மான்மைக்கிய சாட்சாத்காரம். சிஷ்யர்களின் என்பது எஞ்சிநின்றது. சூத்திரக்காரரது வாக்கின் பிரவிருத்தி சிஷ்யர்களது ஞானத்தின் பொருட்டாதலால், அந்த ஞான சித்தியின் கண்ணேயே உபதேசவசனத்தின் [1]உபரதி சித்தித்தலின். அந்த ஞானத்திற்குக் கரைத்தன்மை பொருத்தமாம். பதார்த்த சித்தி யிலும் பதார்த்ததுவயசோதனத்திலும், வாக்கியார்த்த நிச்சயத்திலும், அவற்றிலுபயோகமான பிரமேயத்தின் சித்திகளிலும் தர்க்கங்களினுடைய யாதொரு பிரயோகப் பிரகார விசேஷங்களுண்டோ அவையே உபாதேயத் தன்மை சொப்பிரகாசத்தன்மை முதலிய சமத்தன்மையினுல் ரத்தினங்

1. *உபரதி–விசிராந்தி*

களாம். இதனால் ரத்தினங்களுள் பத்மராகம் இந்திரநீலம் முதலிய நாநாவித வைலக்ஷண்யம் இருப்பதுபோன்று தர்க்கங்களுக்கும் நாநாவித வைலக்ஷண்யம் உளது என சூசிப்பிக்கப்பட்டது. எது என்னும் சப்தத்திற்கு அது என்னும் சப்தத்தின் அபேக்ஷையிருத்தலால் அசௌ என்றதற்கு அவர் என்றுபொருள். இஃது இந்திரவஜ்ர உபேந்திரவஜ்ர உபஜாதி விருத்தம். (6)

## *அவதாரிகை*

சத்சம்பிரதாயத்தால் (குரு சிஷ்ய சம்பிரதாயத்தால்) பாஷியத்தைச் செய்தவரும் பரமேஸ்வரனுடைய அவதார விசேஷருமான ஸ்ரீ சங்கராச்சார்யரை வணங்குகின்றார் :—

## *சுலோகம்*

**वक्तारमासाद्य यमेव नित्या सरस्वती स्वार्थसमन्विताऽऽसीत् ।**
**निरस्तदुस्तर्ककलङ्कपङ्का नमामि तं शंकरमर्चितांघ्रिम् ॥**

## *பதவுரை*

**यं वक्तारम्** – எந்த வக்தாவினை

**आसाद्य एव** – அடைந்தே

**नित्या** – நித்தியமாகிய

**सरस्वती** – வேதவடிவவாணி

**निरस्तदुस्तर्ककलङ्कपङ्का** – துஷ்ட தர்க்கங்களாகிற கலங்கவடிவ சேற்றினின்றும் நீங்கினதாய்

**स्वार्थसमन्विता** – தனது வாஸ்தவப்பொருளோடு கூடியதாய்

**आसीत्** – ஆயிற்றோ

**अर्चितांघ्रिम** – எல்லோராலும் பூஜிக்கப்பெற்ற பாதத்தினையுடைய

**तं शंकरम्** – அந்த ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளை

**नमामि** – நான் வணங்குகின்றேன்.

## *விசேஷவுரை*

எந்த பாஷியக்காரரையடைந்தே நித்தியமாகிய வேதம் சர்வதுஷ்ட தர்க்க வடிவதோஷத்தை நிராகரித்தலாலும், தனது தாத்பரிய விஷய

பூதமான அர்த்தத்தோடு சேர்ப்பித்தலாலும் பிரகடமாக ஆயிற்றே. சகலருக்குங் கல்யாணத்தைச் செய்கின்ற பகவானுடைய அநேகாரத் தன்மையினால எல்லோராலும் பூஜிக்கப்பெற்ற பாதத்திணையுடைத்தான அந்த ஆசாரியரை வணங்குகின்றேன் என ஒட்டுக. மலினத்தன்மைக்கு காரணமாந்தன்மையினால் கலங்கமாகவும், அவற்றில் (துஷ்ட தர்க்கத்தில்) மூழ்கினவருக்கு மீண்டும் எழுதல் சம்பவியாமையின் பங்கமாகவும் துஷ்ட தர்க்கங்களை கூறினர். ஜைமினி மகரிஷி முதலானோரால் கர்மகாண்டமே தனது அர்த்தத்தோடு கூடியதாகச் செய்யப்பட்டது. உபநிஷத்துக்களோ தனது அர்த்தத்தினின்றும் நீக்கப்பட்டன, பேதத்தை நிராகரிக்கும் சில அத்வைதவாதிகளாலோ உபநிஷத்துக்கள் தனது அர்த்தத்தோடு கூடினவையாக செய்யப்பட்டன.

கர்மகாண்டமோ தனது பொருளினின்றும் நீக்கப்பட்டது. (**तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति**) பிராமணர்கள் வேதாத்தியயன முதலியவற்றால் அந்த இவ்வான்மாவையறிய விரும்புகின்றனர் என்னும் விவிதிஷாவாக்கியத்தை விசாரிக்கின்ற வியாசபகவானால் கர்மகாண்ட பிரம்மகாண்டங்கட்கு சமானமாகவே பிராமாண்யம் அங்கீகரிக்கப்பட்டது, அங்ஙனமாயினும் அவ்வளவு மாத்திரத்தால் தனது அர்த்தத்தோடுகூடினதாக ஆகாது. அதாவது சூத்திரத்திற்கு வியாக்கியானஞ்செய்கின்ற பர்த்திருப்பிரபஞ்சர் முதலான சில வாதியரால் வேதார்த்தமல்லாத பேதாபேத முதலானவற்றையே வேதார்த்தமாக வர்ணித்தலால். ஸ்ரீமத் பகவத் பூஜ்யபாதரான சங்கராசார்ய சுவாமிகளாலோ வியாவகாரிகத் தன்மையால் கர்மகாண்டப்பிராமாண்யப் பிரவிருத்தி முதலானதை ஸ்தாபித்து வேதாந்தங்களுக்கு தாத்விக சுத்த அத்துவைத பரத்துவம் ஸ்தாபிக்கப்பட்டது. இதனால் சம்பூர்ண வேதத்திற்கும் தனது அர்த்தத்தோடு கூடியதாந்தன்மை சித்தித்தது. இவ்வாறு சர்வோத்கிருஷ்ட மஹிமையை தெரிசிப்பித்தற்கு அடைந்தே என ஏ கா ர ம் பிரயோகிக்கப்பட்டது. இஃது உபஜாதி விருத்தம். (7)

### *அவதாரிகை*

இப்போது இந்தக் கிரந்தக்காரரான சருவஞ்ஞாத்ம முனியானவர் தனது குருவாயுள்ள வார்த்திகக்காரரான **தேவேசுவராசார்ய சுவாமிகளை** மங்கலத்தால் பூஜிக்கின்றார்:—

## சுலோகம்

**यदीयसंपर्कमवाप्य केवलं वयं कृतार्था निरवद्यकीर्त्तयः ।**
**जगत्सु ते तारितशिष्यपङ्क्तयो जयन्ति देवेश्वरपादरेणवः ॥**

## பதவுரை

**यदीयसंपर्कं केवलम्** – எந்த ஆசார்யருடைய பாததூளிகளின் சம்பந்தத்தை மாத்திரம்



**अवाप्य**–அடைந்து

**वयम्**–நாங்கள்

**जगत्सु**–ஜகத்துக்களில்

**निरवद्यकीर्तयः**–நிர்மலமான யசசையுடையவராய்

**कृतार्थाः**–பிரம்மசாக்ஷாத்காரத்தால் கிருதகிருத்திய ஜீவன்முக்தரானோமோ

**तारितशिष्यपङ्क्तयः**–எத்தூளிகள் சிஷ்ய சமூகங்களை சம்சாரத்தினின்றுங் கடைத்தேற்றினவோ

**ते**–அந்த

**देवेश्वरपादरेणवः**- *தேவேசுவராசார்ய சுவாமிகளின் பாததூளிகள்*

**जयन्ति**–சர்வோத்கிருஷ்டமாக இருக்கின்றன.

## விசேஷவுரை

**ஸ்ரீ தேவேசுவரரின்** எப்பாத தூளிகள் சர்வோத்கிருஷ்டமாக இருக்கின்றனவோ, அவைகளைக்குறித்து வணக்கமுள்ளவனாக இருக்கின்றேனென்பது பொருள். எவருடைய பாததூளிகளும் சர்வோத்கிருஷ்டமாகவுள்ளனவோ, அவருடைய மேன்மையை யாரால் வர்ணிக்க முடியுமென்பது கருத்து. சுரபதஸ்தானத்தில் தேவபதத்தின் பிரயோகம் நேரே குருவின் நாமத்தை கிரஹிக்கக்கூடாதென்பதன் பொருட்டாம். **( गुरोर्नाम न गृह्णीयात् )** 'குருவின் பெயரை கிரஹிக்கலாகாது' என்னும் ஸ்மிருதியினால். அப்பாததூளிகள் எப்படிப்பட்டவையெனின் நம் முதலான சிஷ்யக் கூட்டங்களை சம்சாரசமுத்திரத்தின் தீரத்தை அடைவித்தவைகள்.

எவருடைய பாததூளிகளோ சிஷ்யரைக் கடப்பிக்கின்றனவோ அவர் சுவயம் கடப்பிக்கின்றார் எனக்கூறவேண்டியதென்னேயாது? எந்த தூளிகளின் சம்பந்திகளாகிய நாம் முதலானவற்றின் சம்பந்தத்தையும் கேவலம் அடைந்து வேறு சாதனமின்றியவர்களாயினும் அவரது சிஷ்யர்களான யாங்களெல்லோரும் கிருதார்த்தர்களாய் = பிரம்மசாக்ஷாத்காரத்தால் ஜீவன்முக்தர்களாய் உலகங்களில் நல்ல கிரந்தத்தைச் செய்தல் படிப்பித்தல் முதலானவற்றால் நிர்மலமான கீர்த்தியையுடையவராய் இருக்கின்றேமோ என்பது முக்கிய பல அவாந்தர பலன்களைக் கூறுதலாம். இதனால் சர்வப்பிரகாரத்தாலும் அத்தூளிகள் நமஸ்கரிக்கத் தக்கவைகளோ என்பது அபிப்பிராயம். இஃது வம்சஸ்தவிருத்தம். (8)

## அவதாரிகை

குருஸ்துதியின் அங்கத் தன்மையால் தனக்கு நிர்த்தேசம் செய்யப்பட்ட கிருதார்த்தத்தன்மை நிர்மலமான யசையுடைத்தாந் தன்மைகள் எவையோ அவற்றால் தனக்குப் பிராப்தமான கர்வத்தை நீக்குகின்றார் :—

## சுலோகம்

**गुरुचरणसरोजसंनिधानादपि वयमस्य गुणैकलेशभाजः ।**
**अपि महति जलार्णवे निमग्नाः सलिलमुपाददते मितं हि मीनाः ॥**

## பதவுரை

**महति**—விஸ்தாரமானதும்

**जलार्णवे**—ஜலத்தால் நிறையப்பெற்றதுமான சமுத்திரத்தில்

**निमग्नाः अपि**—முழுவடிவத்தால் இருப்பவையாயினும் (மூழ்கி இருப்பனவாயினும்)

**मीनाः**—மச்சங்கள்

**सलिलम्**—ஜலத்தை

**मितम्**—அற்பமாகவே

**उपाददते**—கிரகிக்கின்றன (அதுபோல்)

**गुरुचरणसरोजसंनिधानात् अपि** — குருமூர்த்தியினுடைய பாததாமரையின் சமீபத்திலிருந்தும்

**वयम्**–சிஷ்யர்களாகிய நாங்கள்

**अस्य**–குருமூர்த்தியினுடைய

**गुणलेशभाजः**–குணங்களின் ஓர் லேசத்தினையே அடைந்தவராய் இருக்கின்றோம்

### *விசேஷவுரை*

அநேக கல்யாணகுணக் கடலாயுள்ள குருமூர்த்தியின் மிஹா சௌபாக்கியசாலிகளான பாத தாமரைகளின் அநேக குணர்ப்பண யோக்கியமான சந்நிதானத்திலிருந்தும் அவரது சிஷ்யர்களாகிய நாங்க ளெல்லோரும் குருமூர்த்தியினுடைய குணத்தின் லேசத்தையே யடைந்திருக்கின்றோம். அதிகத்தையடைந்திலேம். எமக்கு யோக்யதையின்மையின். ( **स्तुतौ एकवचनमपि प्रयोज्यम्** ) ஸ்துதியின் கண் ஏகவசனமும் பிரயோகிக்கத் தக்கதாம் என்னும் வசனத்தால் 'குருமூர்த்தியின்' என்னும் ஏகவசனம் விருத்தமின்றாம்.

தனது அயோக்கியத் தன்மையினால் அதிகப்ராப்திக்கு ஏதுவான வரின் சமீபத்திலிருந்தும் அற்பக் கிரஹணத்தில் திருஷ்டாந்தத்தைக் கூறினர். விஸ்தாரமான என – அறுபத்திநான்கு லக்ஷயோசனை விஸ்தீர்ணமுடையதாந்தன்மையால் அதி வியாபகமான சுத்தோதக மெனப்பெயரிய ஏழாவது சமுத்திரத்தின்கண் முழு வடிவமும் சம்பந் தித்தவையாயினும் மீன்கள் தமது அயோக்கியத் தன்மையால் அற்ப ஜலத்தையே கிரஹிக்கின்றன என்பது லோகப்பிரசித்தம். இது அர்த்தாந்தர நியாசமென்னும் அலங்காரம் (9)

### *அவதாரிகை*

இவ்வாறு அற்பஞ்ஞத்தன்மையால் கிரந்தத்தைச் செய்வதில் ஆற்றலின்மை பிராப்தியாகுங்கால் கூறுகின்றார் :—

### *சுலோகம்*

**शक्तो गुरोश्चरणयोर्निकटे निवासान्नारायणस्मरणतश्च निरन्तरायः ।**
**शारीरकार्थविषयावगतिप्रधानं संक्षेपतः प्रकरणं करवाणि हृष्यन् ॥**

### *பதவுரை*

**गुरोः**–குருமூர்த்தியினுடைய

**चरणयोः**–பாதங்களின்

**निकटे**–சமீபத்தில்

**निवासात्**–வாசம் பண்ணுதலால்

**शक्तः**–கிரந்தந்தைச் செய்வதில் ஆற்றலுடையவனாயிருக்கின்றேன்

**नारायणस्मरणतः च**–நாராயணனது ஸ்மரணவடிவ மங்கலத்தாலும்

**निरन्तरायः**–விக்கினமின்றியவனாயிருக்கின்றேன்

**हृष्यन्**–(இதனால்) சந்தோஷமுடையவனாயிருந்துகொண்டு

**शारीरकार्थविषयावगतिप्रधानम्** } சாரீரகமெனப்பெயரிய நான்கத்தியாய வடிவ பிரம்மசூத்திரத்தின் பிரயோஜனத்தினையும் ஜீவப்ரம்மைக்யவடிவ விஷயத்தினையும் உடையதும் நிர்க்குணப் பிரம்ம வித்தையைப் பிரதானமாகவுடையதும் ஆன

**प्रकरणम्**–பிரகரணவடிவ இந்த கிரந்தத்தை

**संक्षेपतः**–சுருக்கமாக

**करवाणि**–செய்கின்றேன்

## *விசேஷவுரை*

சந்தனவிருக்ஷம்போன்று வேறிடத்தில் தனது குணங்களைச் செலுத்தும் ஆற்றலுடைய குருவின் சமீபத்தில் வாசம் பண்ணுதலால் ஆற்றலுடையவனாயிருக்கின்றேனென காரணத்தின் பூரணத் தன்மையைத் தெரிவித்து மஹத்தான கார்யாரம்பத்தில் தடைகள் மிகுதியாகச் சம்பவித்தலின் அவற்றின் அபாவத்தைக் கூறுகின்றார். நாராயணனுடைய என குருவினது நாராயணஸ்மரணை வடிவ ஆசீர்வாதத்தாலும் விக்கினமின்றியவனாய் இருக்கின்றேன். இதனால் குருவின் பாதகமலங்களின் சமீபத்தில் வசித்தலால் பாதங்களைப் பிடித்தல் முதலான காலங்களில் அவ்வவ்வினாக்களால் அஞ்ஞான விபரீதங்களை நீக்குதலால் சாஸ்திரார்த்தத்தின் ஞான வடிவ சாமக்கிரி சம்பவித்தலாலும் குருநாராயணர்களது ஸ்மரணத்தால் சர்வ விக்கினங்களின் நிவிர்த்தி சம்பவித்தலாலும் கிரந்தந்தைச் செய்வதற்கு அனுகூல

மான சகல உபகரணங்களின் சம்பத்திஞல் சந்தோஷமுடையவராயிருந்து கொண்டு சாஸ்திரத்தின் ஏகதேச சம்பந்தத்தினையுடையதும், சாஸ்திரப் பிரயோஜனத்தையபேக்ஷித்து பிரயோஜன அதிசயத்தோடு கூடியதுமான பிரகரண வடிவ கிரந்த விசேஷத்தைச் செய்வேனுக.

**शास्त्रैकदेशसंबद्धं शास्त्रकार्यान्तरे स्थितम् ।**
**आहुः प्रकरणं नाम ग्रन्थभेदं विपश्चितः ॥**

சாஸ்திரத்தின் ஏகதேச சம்பந்தத்தினையுடையதும், சாஸ்திரப் பிரயோஜனத்தையபேக்ஷித்து விசிஷ்டப்பிரயோஜனத்தையுடையதுமான கிரந்த விசேஷத்தைப் பிரகரணம் எனப் பண்டிதர்கள் கூறுகின்றூர்கள். என்னும் விஷ்ணு தர்மோத்தர ஸ்மிருதியில் பிரகரணத்தின் லக்ஷணத்தைக் காண்க.

சரீரமே நிகிருஷ்டத் தன்மையால் சரீரகம் எனப்படுகின்றது. இதில் இருக்கும் ஜீவன் சாரீரகன். அவனது சொரூபத்தை யாசிரயித்துச் செய்யப்பட்ட நான்கத்தியாய வடிவ சாரீரக மீமாம்சையாகிய கிரந்தமும் சாரீரகமாம். அல்லது சாரீரனுகிய ஜீவனை பிரம்மத் தன்மையால் " க " பிரதிபாதிப்பது சாரீரகமாம். அதனது பிரயோஜனத்தினையும் விஷயத் தினையும் உடையதும் அஞ்ஞானத்தை நிவர்த்தி செய்யும் நிர்க்குண பிரம்ம வித்தையினையே விசாரிக்கத் தக்கதாந்தன்மையால் தாத்பர்யத் திற்கு விஷயமாகவுடையதுமாம். இவ்விசேஷணத்தால் சாஸ்திரத்தின் ஏகதேச சம்பந்தம் தெரிவிக்கப்பட்டது. " சுருக்கம் " என்பது சகுண பிரம்ம வித்தையின் விசார பாகுல்யத்தின் பரித்தியாக வடிவமாம், ( பாகுல்யம் – அதிகத்தன்மை ) இவ்விசேஷணத்தால் சாஸ்திரத்தின் பிரயோஜனுந்தரம் தெரிவிக்கப்பட்டது. முன்பே இது விஸ்தரிக்கப் பட்டுள்ளது. குருவின் பிரசம்சை வாயிலாக கிரந்தாரம்பத்தின் பிரதிக்ஞை செய்யப்பட்டது. (10)

## கிரந்தாரம்பப்பிரயோஜனம்

### அவதாரிகை

தனக்கு மூல சாஸ்திரத்திஞல் ஞானமுண்டானதுபோல அந்நிய ருக்கும் மூல சாஸ்திரத்திஞலேயே தத்துவக்ஞானம் சம்பவிக்குமாதலின், இக்கிரந்தத்தைச் செய்தலெற்றிற்கு ? என்னுஞ் சங்கைக்கு தனக்கு வித்தையின் சுத்தியே அசாதாரணப் பிரயோஜனமாம் எனக் கூறு

கின்றார்; அல்லது குருவின் துதியினால் குருவின் வேறான வித்துவான்களிடத்தில் அநாதரவு ஏற்படுதலால் அவர்களால் கிரஹிக்கப்படாததாகி இந்தக்கிரந்தமானது உலகின்கண் யாண்டும் பரவுதலையடையாது, என்றபிப்ராயப்பட்டு அவர்களையுஞ் சன்மானிக்கின்றார்:—

### சுலோகம்

**पदवाक्यमाननिपुणा निपुणं विमृशन्त्विदं प्रकरणं मनसा।**
**गुणदोषनिर्णयनिमित्ततया प्रथिता हि पण्डितजना जगति ॥**

### பதவுரை

**पदवाक्यमाननिपुणाः**–பதநிபுணரான வையாகரணரும், வாக்கிய நிபுணரான மீமாம்சகரும், பிரமாண நிபுணராகிய நையாயிகரும்

**इदं प्रकरणम्**–இந்த சங்க்ஷேபசாரீரகமென்னும் பிரகரண வடிவ கிரந்தத்தை

**निपुणम्**–நன்றாய் ஏகாக்கிரமான

**मनसा**–தனது புத்தியினால்

**विमृशन्तु**–பதத்தாலும், வாக்கியத்தாலும், பிரமாணத்தாலும் விசாரிப்பாராகுக

**हि**–ஏனெனில்

**जगति**–இவ்வுலகத்தின்கண்ணே

**पण्डितजनाः**–வித்துவான்கள்

**गुणदोषनिर्णय निमित्ततया**–குணங்களையும், தோஷங்களையும் நிச்சயிப்பதில் நிமித்தத்தன்மையால்

**प्रथिताः**–பிரசித்தர்களாயுள்ளார்

### விசேஷவுரை

பதங்களையும், வாக்கியங்களையும், பிரமாணங்களையும், விசாரம் செய்வதில் வையாகரணரும் மீமாம்சகரும், நையாயிகரும் முறையே குசலராதலின் அப்பதங்களால் அவர்கள் கிரஹிக்கப்பட்டார்கள். இந்தப் பிரகரணத்தைப் பதத்தாலும் வாக்கியத்தாலும் பிரமாணத்தாலும் ஏகாக்

கிரமான மனதினால் விசாரிப்பாராகுக. ஏகாக்கிரம் மனது என்னும் விசேஷணங்களால் சஞ்சலத்தினையும் பிற ஞானத்தையும் நிவிர்த்திக்கின்றார். (பிறஞானம் அந்நியாபேக்ஷை) பிரார்த்திக்கப்பட்ட அவ் வித்துவான்களுக்கு குணதோஷ நிர்ணயத்தின் பொருட்டுப் பிரவர்த்தியில் கருணையே ஏது எனக் கூறுகின்றார்:—குணதோஷம் என—அவ்வாறே கவிகாளிதாசராலும் கூறப்பட்டுள்ளது.

**आ परितोषाद्विदुषां न साधु मन्ये प्रयोगविज्ञानम् ।**
**बलवदपि शिक्षितानामात्मन्यप्रत्ययं चेतः ॥ (शाकुं अं १)**

வித்வான்களுக்குச் சந்தோஷம் உண்டாகாதவரை கிரந்தத்தைச் செய்தல் வடிவ பிரயோகத்தின் விக்ஞானத்தை நல்லதென்று கருதேன். எதனாலெனின் அத்தியந்தம் சிக்ஷிக்கப்பட்ட வித்துவான்களின் சிந்தமும் தன்னுடைய கிருதியில் விசுவாசத்தை அடைகின்றதில்லை; என.

கிரந்தத்தை உண்டுபண்ணுதல் மாத்திரம் என்னுடைய அதீனமாம், விசுத்தியோ, பொருமையற்ற வித்துவான்களுடைய அதீனமாம் என்பது பொருள். (11)

## அவதாரிகை

அற்றேல் சாவதானமாய் விசாரிக்கின்ற எம்மால் தோஷம் சொல்லப்படும்போது உமக்குத் துக்கமேயுண்டாமென்னும் சங்கைக்குக் கூறுகின்றார்.—

## சுலோகம்

**विद्वांसो यदि मम दोषमुद्गिरेयुः यद्वा ते गुणगणमेव कीर्तयेयुः ।**
**तुल्यं तत् बहुमनुते मनो मदीयं कष्टं तद्गत मनुते यदाह मन्दः ॥**

## பதவுரை

**विद्वांसः**—மாச்சரியமற்ற பண்டிதர்கள்

**मम दोषम्**—என்னுடைய கிரந்தத்தின் கண் தோஷத்தை

**यदि उद्गिरेयुः**—கூறுபவராயினும் (ஆகுக)

**यद्वा**—அல்லது

**ते**–அவ்வித்வான்கள்

**गुणगणम् एव**–குணக்கூட்டங்களையே

**कीर्तयेयुः**–கூறுவாராயினும் (ஆகுக)

**मदीयं मनः**–என்னுடைய மனமானது

**तत्**–அத்தோஷக்கூற்றையும் குணக்கூற்றையும்

**तुल्यम्**–சமமாகவே

**बहुमनुते**–ஆதரவுபூர்வகமாக அங்கீகரிக்கின்றது

**मन्दः**–குணதோஷ விசாரத்தில் ஆற்றலற்ற மூடன்

**यत् आह**–(இக்கிரந்தத்தில் குணதோஷங்களைக்) கூறுவானாயின்

**तत्**–அதனை

**कष्टम् बत**–சமதுக்கமாகவே

**मनुते**–கருதுகிறது

## விசேஷவுரை

மாச்சரியமற்றவரும் குணதோஷ பரீக்ஷகரும் ஆகிய பண்டிதர்கள் என்னுடைய கிரந்தத்தில் தியாகம் செய்தற்பொருட்டுத் தோஷத்தைக் கூறுவாராயினும் கிரஹிக்கும்பொருட்டு குணக்கூட்டங்களைக் கூறுவாராயினும் அத்தோஷக் கூற்றையும் குணக்கூற்றையும் சமமாகவே என்னுடைய மனம் ஆதரத்தாலங்கீகரிக்கின்றது. வாக்குமாத்திர மன்றும். தோஷத்தைச் சொல்லுங்காலத்தில் அத்தோஷம் நிவர்த்தியாதலால் நிர்த்தோஷமாய்க் கிரந்தம் சுத்தமாம். என்னுமபிப்பிராயத்தால் தோஷத்தைக் கூறுதல் கிரந்தத்தின் சுத்திவடிவ குணத்தில் பரியவசானமாவதால் குணமேயாதலின் மஹத்தான அனுக்கிரஹமென்பது கருத்து. எவன் மாச்சர்யத்தாற் கவரப்பெற்றவனும் குண தோஷ விசாரத்திலாற்றலற்றவனுமாவானோ, அவன் விசாரிக்காமலே குருடன் சித்திரத்தினுடைய குணதோஷங்களைக் கூறுவது போன்று கூறுவானாயின் அதனையும் சமமாகவே எனது மனது துக்கமாகக் கருதுகின்றது. 'பத' என்பது துன்பத்தில் வந்த அவ்யயம். 'பகு' என்னும் பாடத்தில் 'பகுகஷ்டம் மனுதே' என அன்வயமாம். என்னுடைய மனது என்பது எஞ்சி நின்றது. அவ்விரண்டுமே கிரந்த சுத்திக்கு ஏதுவாகாமையினென்பது பொருள். 13

### அவதாரிகை

அற்றேல் எம்மால் நன்ருக விசாரித்து நிர்த்தோஷமாகக் கிரந்தம் நிச்சயிக்கப்படினும் மிகுந்தமாச்சர்யமுள்ள ஒருவன் வந்து இக்கிரந்தத்தில் தோஷத்தைப் பிரகடனஞ் செய்வானுயின் அப்போது எங்களுக்கு மஹத்தான அபகீர்த்தியுண்டாம். உமக்குங் கிரந்தசுத்தியுண்டாகாது. என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்: —

### சுலோகம்

**महामहिम्नामपि यश्चिकीर्षति स्वभावसंशुद्धतरं तिरो यशः ।**
**स नूनमाच्छादयितुं प्रवर्तते विवस्वतो हस्ततलेन मण्डलम् ॥ १३ ॥**

### பதவுரை

**महामहिम्नाम्** –மஹத்தான மஹிமையினையுடைய வித்துவான் களது

**स्वभावसंशुद्धतरम्** –இயற்கையாகவே அத்தியந்தம் சுத்தமான

**यशः अपि**–கீர்த்தியினையும்,

**यः**–எத்துஷ்ட பண்டிதன்

**तिरः चिकीर्षति**–(தோஷத்தையாரோபித்தலால்) மறைக்கவிச்சிக் கின்ருனே,

**सः**–அவன்

**विवस्वतः**–எங்கும் வியாபகப்பிரகாசமுள்ள சூரியனுடைய

**मण्डलम्** –லக்ஷயோஜனை விசாலமுள்ள மண்டலத்தை

**हस्ततलेन**–(மிகச்சிறிதான தனது) கரத்தால்

**आच्छादयितुं**–மறைத்தற்கு

**नूनम् प्रवर्तते**–நிச்சயமாய்ப் பிரவிருத்தித்தவனுகின்ருன்.

### விசேஷவுரை

பிரசித்தமான யஸஸையுடையவரும். குணதோஷ விசாரத்தில் ஆற்றலுடையவருமான உம்மைப்போன்ற * வித்துவான்களது மாச்சர்ய மில்லாமையாலும் பிரமாண குசலத்தன்மையாலும், சுபாவமாகவே

* வித்வான்களது கீர்த்தியை எனக்கூட்டுக.

அத்தியந்தம் நிர்மலமாயுள்ள அங்ஙியரது கிரந்தத்தில் நிர்த்தோஷத் தன்மையைச் சம்பாதித்தல் வடிவ கீர்த்தியைக் கற்பிதமான தோஷத்தைத் தோற்றுவித்தலால் எவன் மறைக்கவிச்சிக்கின்றானோ, அவன் ஜகன் மண்டலத்தில் வியாபகப் பிரகாசமுள்ள சூரியனுடைய லக்ஷயோஜனை விஸ்தாரமான மண்டலத்தை அதிற்சம்பந்தமின்றிய சிறு கரத்தால் மறைத்தற்கு பிரவிருத்தித்தவனாகின்றான். '**நூநம்**' (நிச்சயம்) என்பது. எங்ஙனம் சர்வப்பிரகாரத்தாலும் இஃது அசம்பாவிதமோ அங்ஙனமே, அசம்பவமான காரியத்தைச் செய்ய இச்சிப்பவன் சர்வஜனங்களாலும் பரிகசிக்கத்தக்கவனேயாவன். இதனால் பரிசுத்தஞானமுடைய உமக்கும் உம்மால் தரிக்கப்பட்ட எனது கிரந்தத்திற்கும், யாதொரு குறையுமின்று மென்பது பொருள். வித்துவான்களது மாஹாத்மியமும் துஷ்டரது துச்சத்தன்மையும் தெரிசிப்பிக்கப்பட்டன. (13)

## கிரந்தாரம்பப் பிரதிக்ஞை

### அவதாரிகை

அற்றேல் சாரீரக மீமாம்சாசாஸ்திரத்தின் பிரயோஜனத்தினையும், விஷயத்தினையும் உடைத்தானதும், நிர்க்குணப்பிரம்ம சாக்ஷாத்காரத்தைப் பிரதானமாகவுடையதுமான பிரகரணத்தைச் செய்கின்றேனென்று சொல்லப்பட்டது. அது பொருந்தாது, சாரீரக பிரம்மசூத்திரத்தின் விசாரத்திற்கே * பிரயோஜகமின்மையால் அசங்கதத்தன்மையுண்மையின். சிஷ்யனுடைய ஜிஞ்ஞாசைக்கு விஷயமானதும் சந்தேகத்திற்கு விஷயமானதுமான பொருளை நிர்ணயம் செய்யும்பொருட்டு சகல ஆசையுமற்ற வியாச பகவானால் 'அதாதோ பிரம்மஜிக்ஞாசா' என்பதாதி ஆரம்பிக்கப்பட்டதாகச் சொல்லுதல்வேண்டும். சிஷ்யனுக்கு அத்தியந்தம் அறியப்படாத பிரம்மத்தின் கண். ஜிஞ்ஞாசையாவது சந்தேகமாவது எவ்வாறு உண்டாம் ? அவைகள் தர்மிஞானத்தால் சாதிக்கத்தக்கனவா யிருத்தலின் தர்மிஞானத்தின் அதீனமாமென்பது பொருள். அத்தர்மி ஞானமும் நிர்விசேஷப் பிரம்மத்தின்கண் பிரத்தியக்ஷ முதலிய பிரமாணத்தால் சம்பவியாது. அதற்கு உருவ முதலியனவின்மையானும். அத்துவிதீயப்பிரம்மத்தின்கண். லிங்கம் சம்பவியாமையானும். (விசிஷ்ட பிரம்மத்தின்கண்ணே லிங்கம் சம்பவிக்கலாமே எனின்) அத்வயபிரம்மமே முமுக்ஷுவைக் குறித்துச் சாரீரக சாஸ்திரத்தால் விசாரிக்கப்படுகிறது.

---

* பிரயோஜகம்-பிரவிருத்தியில் காரணம்

சகுணப்பிரம்ம விசாரம் பிராசங்கிகமாதலின் (பிராசங்கிகம் இடையில் வந்தது) வேதாந்த வாக்கியத்தாலும் தர்மிஞானம் உண்டாவதின்று. விசாரத்திற்கு முன்பு அதனுல் (வேதாந்தத்தால்) அது (தர்மிஞானம்) பொருந்தாமையின். அப்படிக்கின்றேல் விசாரம் வியர்த்தமாம். ஆடாத ஞானம் விசாரமின்றியும் உண்டாம் என்று சொல்லற்க. அதனையே நிரூபிக்கமுடியாமையின். சாமான்ய விசேஷமற்ற பிரம்மத்தின்கண் சாமானிய விஷயமாக அது சம்பவியாமையின். அபரோக்ஷபிரம்மத்தின் கண் பரோக்ஷஞானவடிவமாகவும் ஆடாதஞானம் சம்பவியாமையின். இக்காரணத்தால் சிஷ்யனுக்கு ஜிஞ்ஞாசை சம்பவியாது. அதனுல் ஜிஞ்ஞாசிக்கப்படாத பொருளின் நிர்ணயத்தில் புத்திமான்களுக்குப் பிரவிருத்தி சம்பவியாது. அதனுல் சாரீரகமீமாம்சா சாஸ்திரத்தின் பிரவிருத்தி அசங்கதமேயாம். ஆதலின் அச்சாரீரகசாஸ்திரத்தினது பிரயோஜனத்தையும் விஷயத்தையுமுடைய இந்தப் பிரகரணமும் அத்தியந்தம் அசங்கதமாம், என்றுசங்கித்து விசாரத்திற்கு முன்பும் வேதாந்த வாக்கியத்தானேயே பத பதார்த்தத்தையறிந்த அதிகாரிக்கு நிர்விசேஷ பிரம்ம சாக்ஷாத்கார வடிவஞானம் உண்டாகின்றதேயாம். அது பிரமாண ஜன்னியமாயினும் கேட்பவனுடைய அசம்பாவனை விபரீத பாவனை முதலிய சித்த தோஷங்களால் அப்பிராமாண்ய சங்கையால் கலங்கப்பட்டுள்ளது. ஆதலின் அப்பியாசமில்லாத காலத்து உண்டான ஜலஞானம் போன்று. (வழியிற் செல்பவனுக்குத் தூரதேசத்தில் முதலி லுண்டான ஜலஞானம் போன்று என்பது பொருள்.) பலனின் பொருட்டாகிறதில்லை ஆதலின். அதனுல் (அப்பிராமாண்ய சங்கையால் ஞானங்கலக்கமுற்றிருத்தலின்) சிஷ்யனுக்கு விசாரப்பிரயோஜகமான ஜிஞ்ஞாசை பொருந்துகின்றது. ஆதலின் கூறிய அசங்கதத்தன்மை இன்றும். என்று அபிப்பிராயஞ்செய்து திருஷ்டாந்தத்தோடு நான்கு சுலோகங்களாற் கூறுகின்ருர்:—

### சுலோகம்

**पुरुषापराधमलिना धिषणा निरवद्यचक्षुरुदयाऽपि यथा ।**
**न फलाय भर्त्तृविषया भवति श्रुतिसंभवापि तु तथाऽऽत्मनि धीः ॥**

### பதவுரை

**भर्त्तृविषया**–(ரதத்தின்மீது காட்டிற்செல்லுங்காலத்தில் அரசனுக் குத் தனது மந்திரியாகிய) பர்ச்சுவை விஷயமாகவுடைய

**धिषणा**–ஞானமானது

**निरवद्यचक्षुरुदया अपि**–நிர்த்தோஷ நேத்திரத்தால் உண்டான தாயினும்

**पुरुषापराधमलिना**–பிரமாதாவினுடைய அசம்பாவனை முதலிய வடிவ அபராதத்தால் அப்பிராமாண்ய சங்கையினுல் கலங்கமுடையதாகி

**फलाय**–இவன் பர்ச்சுவே என்னும் நிச்சயவடிவ பலத்தின் பொருட்டு

**यथा न भवति**–எவ்வாறு ஆகிறதில்லையோ

**तथा**–அவ்வாறே

**आत्मनि धीः**–கூடஸ்த ஆன்மவிஷயகமான ஞானம்

**श्रुतिसंभवा अपि**–நிர்த்தோஷ வேதாந்தத்தாற் செனித்ததாயினும் அதிகாரி புருஷனது அபராதத்தால் ஆவரண நிவர்த்தி வடிவ பலத்தின்பொருட்டு ஏதுவாகிற தில்லை.

### *விசேஷவுரை*

பிரமாண ஜன்னிய தத்துவ ஞானம் பிரமாதாவின் அசம்பாவனை முதலிய வடிவ அபராதத்தால் உண்டான அப்பிராமாண்ய சங்கையினுல் கலங்கமுற்றது. பிரமாணத்தின் அபராதத்தாலோ அன்று, அதற்கு திருஷ்டாந்தத்தின் கண்ணும் தார்ஷ்டாந்தத்தின் கண்ணும் நிர்த்தோஷத் தன்மையுண்மையின், அற்றேல் தோஷமின்றிய பிரமாணத்தாலுண்டாய ஞானம் அப்பிராமாண்ய சங்கையின் வசத்தால் அத்தியாசத்தை நிவர்த்தி செய்கின்றதில்லையென்பது எங்கே காணப்பட்டது என்னும் சங்கைக்குத் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்ருர் நிர்த்தோஷ நேத்திரத்தாலென :— பர்ச்சு என்பவன் ஒரு பிராமணன். அவன் ஓர் அரசனுக்கு அத்தியந்தம் பிரிய மந்திரியாகவிருந்தான். ராஜாவை ஆசிரயித்திருக்கும் வேலைக் காரர்களால் மாச்சரியத்தினுல் துவேஷிக்கப்படுகின்றவனுயிருந்தான். அவன் ஒருபோது தெய்வயோகத்தால் நேத்திரங்களை மறைத்துக்காட்டில் விடப்பட்டவனுகி நீண்டகாலம் அவ்விடத்திலேயேயிருந்தான் பின் தெய்வயோகத்தால் ஆரண்யவாசி புருஷர்களோடு பட்டணத்தின் சமீபத் தில் வந்தானுயினும் துவேஷமுள்ள ராஜசம்பந்தி புருஷர்களால் பட்டணத் தின் வாசற்படியில் தடுக்கப்பட்டவனுகி பட்டணத்தில் பிரவேசிப்பதற்குச்

சாமர்த்தியமின்றியவனுனன். அரசனும் பர்ச்சு இறந்துவிட்டான், பிசாசாக ஆகிவிட்டான் என்று அவர்களால் போதிக்கப்பட்டவனுகி அவ்வாறே நிச்சயஞ் செய்தான் தெய்வவசத்தால் ஓர்போது வெளியிற் சென்றவனுய் வெளியிலுள்ள தோட்டத்தில் அவனை நேரே பார்த்தும் பிரம்மராக்ஷஸனுக நினைத்தான்.

**यथा सौम्य पुरुषं गन्धारेभ्योऽभिनद्धाक्षमानीय तं ततोऽतिजने विसृजेत्** (छां 6-14-1) "ஏ சௌமியனே கந்தார தேசத்தினின்றும் புருஷனைக் கண்ணைக்கட்டிக்கொண்டு வந்து அவனை ஜனமில்லாத காட்டில் எங்ஙனம் விடுவரோ" என்பது முதலிய சுருதியை கிரந்த கர்த்தாவின் திருஷ்டாந்தமானது மூலமாகவுடையது. எங்ஙனம் பர்ச்சு விஷயகமான ஞானமானது நிர்த்தோஷ நேத்திரத்தினுல் ஜனித்த தாய் பிரமை வடிவமாயிருப்பினும் பர்ச்சு இறந்துவிட்டான் காணுதற்கு அயோக்கியனேயாம் ஆனுல் அவன் பிசாசாகவே காணப்படுகிருன். என அசம்பாவனை விபரீத பாவனைவடிவ புருஷதோஷத்தால் அபிபவம் பண்ணப்பட்டதாகி இவன் பர்ச்சுவே என்னும் நிச்சயபயனின் பொருட்டு சமர்த்தமாகிறதில்லையோ, அங்ஙனம் நிர்த்தோஷ வேதாந்த மகாவாக்கியத்தால் ஜனித்ததாய் பிரமை வடிவமாயிருப்பினும் நான் பிரம்மமாகின்றேன் என்னும் ஞானம் வேதாந்தங்கள் பிரம்மத்தில் தாத்பரியமுடையனவாக ஆகின்றதேயில்லை. பிரம்மம் அத்துவிதீயமாய்ச் சம்பவிக்கிறதேயில்லை. சம்சாரி அசம்சாரிகளுக்கு ஐக்கியம் சம்பவிக்கிறதேயில்லை. என அசம்பாவனை விபரீதபாவனை வடிவ புருஷதோஷத்தால் அபிபவம் பண்ணப்பட்டதாகி விசாரத்திற்கு முன்பு அக்ஞானம் முதலியவற்றின் நிவர்த்திவடிவ பயனின்பொருட்டு ஆற்றலுடையதாவதின்று என்பது பொருள். (14)

## அவதாரிகை

பிரமாணவடிவ உபநிஷத்திற்கும் பிரமேயவடிவப் பிரம்மத்திற்கும் நிர்த்தோஷத்தன்மையுண்மையின் பரிசேஷத்தால் பிரமாதாவின் தோஷமே பலப்பிரதிபந்தகமாம். ஆதலின் சாஸ்திரீய விசாரத்தால் அது நீங்கும்போது அப்பிராமாண்ய சங்கை வடிவ பிரதிபந்தகமின்மையின் மீண்டும் நிர்த்தோஷவடிவ அந்த வேதாந்த வாக்கியத்தானேயே பயனுேடு கூடிய ஞானமுண்டாகிறது. துஷ்டர்களால் காட்டில் கொண்டுவிடப் பட்ட பர்ச்சுவானவன் சீவனுேடு கூடியிருந்தே மீண்டும் வந்தான் என்னும் உபபத்தியினுல் பர்ச்சுஞானத்தின் அப்பிராமாண்ய சங்கைக்குக்

காரணமான புருஷாபராதம் நீங்கும்போது பர்சுவிஷயகமான இவன் பர்சுவே என்னும் பயனோடு கூடிய ஞானமுண்டாகின்றது. அது போன்று எனக்கூறுகின்றார்: —

*சுலோகம்*

**पुरुषापराधविगमे तु पुनः प्रतिवंधकव्युदसनात्सफला ।**
**मणिमन्त्रयोरपगमे तु यथा सति पावकाद्भवति धूमलता ॥ १५ ॥**

*பதவுரை*

**पुरुषापराधविगमे तु** — பிரமாதாதியின் அசம்பாவனை விபரீதபாவனை வடிவ தோஷம் நீங்குங்கால் நிச்சயமாக.

**प्रतिवंधकव्युदसनात्** — அப்பிரமாணிய சங்கைவடிவ பிரதிபந்தகம் நீங்கி விடுதலின்

**पुनः** – மறுபடியும்

**सफला** – பயனோடுகூடிய ஞானமுண்டாகிறது

[இதில் அனுரூபமான வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.]

**मणिमन्त्रयोः** – தூமோத்பத்தியின் பிரதிபந்தகங்களான சந்திரகாந்த மணிமந்திரங்களின்

**अपगमे सति तु** – நிவர்த்தியுளதாயவழியே

**पावकात्** – எப்போதும் புகையையுண்டுபண்ணும் சாமர்த்திய முடைய அக்கினியினின்றும்

**यथा** – எவ்வாறு

**धूमलता** – கொடிவடிவ புகை

**भवति** – உண்டாகிறதோ வேறு பிரகாரத்தால் உண்டாகிறதில்லை. அதுபோன்று ஈண்டு மென்பது பொருள். **(15)**

*அவதாரிகை*

புருஷனுடைய அபராத நீக்கத்தால் பயனுடைய ஞானமுண்டாகுக. இத்துணையானே விசார சாஸ்திரத்திற்குச் சித்தித்து என்னையெனிற் கூறுகின்றார்:—

### சுலோகம்

**पुरुषापराधविनिवृत्तिफलः सकलो विचार इति वेदविदः ।
अनपेक्षतामनुपरुध्य गिरः फलवद्भवेत्प्रकरणं तदतः ॥ १६ ॥**

### பதவுரை

**गिरः** – வேதத்தினுடைய

**अनपेक्षताम्** – அந்நியத்தையபேக்ஷியாமை வடிவ ஸ்வதப் பிராமாண்யத்தை

**अनुपरुध्य** – பாதிக்காமல்

**सकलः विचारः** – தர்மத்தை விஷயஞ்செய்வதும் பிரமத்தை விஷயஞ் செய்வதுமான சம்பூர்ண விசாரமும்

**पुरुषापराध-निवृत्तिफलः** – புருஷனது தோஷநிவர்த்தியையே பயனாக வுடையது

**इति वेदविदः** – என வேதத்தையறிந்த சபரசுவாமி முதலியோர் கூறுகின்றனர்.

[விசாரத்திற்குப் பிரதிபந்த நிவர்த்தியின் சாதனத் தன்மை சித்தித்தபோது பலிதத்தை (திரண்ட பொருளைக்) கூறுகின்றார்.]

**अतः**–இக்காரணத்தால் (அதாவது பிரதிபந்தத்தை நிவர்த்திக்குந் தன்மையையங்கீகரித்தலால்)

**तत् प्रकरणम्** –தொடங்கிய இக்கிரந்தவடிவ பிரகரணமானது

**फलवत् भवेत्** –பயனுடையதாய் ஆகும்.

### விசேஷவுரை

பூர்வ மீமாம்சையின் பாஷ்யக்காரரான சபரஸ்வாமி முதலியோர் தர்ம ஜிஞ்ஞாசை சூத்திர வியாக்கியானத்தின்கண் கூறுகின்றார். பொருளால் என்பது எஞ்சிநின்றது. அவர்களது இத்தன்மை அபிப்பிராயத்தின்கண் பிரமாணத்தைக் கூறுகின்றார். அந்நியத்தை யபேக்ஷியாமை என —

பூர்வமீமாம்சையின் முதலாவது அத்தியாயத்தில் ஔத்பத்திக சூத்திரத்தின்கண் உலகத்தின்கண் பிரமாணந்தரத்தை மூலமாகவுடைய சப்தத்திற்கே பிராமாணத்தன்மையுண்மையின். அஃதின்றேல் அநாப்தனது வாக்கியம்போன்று வேதத்திற்கு அப்பிராமாண்யமாமெனச் சங்கித்து அநாப்தவாக்கியத்தின்கண் அப்பிராமாணத்தன்மை, மூலப் பிரமாணத்தின் அபாவத்தால் செய்யப்பட்டதின்றும். மற்றோ தோஷ முள்ள புருஷ மூலத்தன்மையாலாம். புருஷதோஷத்தால் நாஷிக்கப் பட்டமையின் சுவாபாவிகப் பிராமாண்யம் தடைபடுதலின். வேதத்தின் கண்ணோ பதபதார்த்தங்களின் சம்பந்தம் நித்தியமாதலால் அதனாலேயே வாக்கியார்த்த சம்பந்தத்தின்கண் அந்நியத்தை யபேக்ஷியாமையானும் வேதத்திற்கு அபௌருஷேயத் தன்மை யுண்மையானும் புருஷனை மூலமாகவுடையதன்றும். என நிரபேக்ஷத் தன்மையால் ஸ்வதப் பிராமாண்யம் கூறப்பட்டுள்ளது. விசாரம் முதலியவற்றை அபேக்ஷித்து வேதம் தனது அர்த்தத்தைப் பிரதிபாதிக்குமாயின் அப்போது சாபேக்ஷத்தன்மையால்—அதன் நிரபேக்ஷத் தன்மை பாதிக்கப்படும். ஆதலின் எல்லா விசாரமும் பிரதிபந்த நிவர்த்தி மாத்திரத்திற்கு ஏதுவாம். என்பது சர்வவேத வேத்தாக்களின் சம்மதமாம் என்பது பொருள். வேதத்திற்கு " அர்த்தே அனுபலப்தே தத்பிரமாணம் பாதராயணஸ்ய அனபேக்ஷத்வாத் " என்னும் சூத்திரத் தின்கண் பிரதிபாதிக்கப்பட்ட நிரபேக்ஷத் தன்மையைப் பாதிக்காமல் சகல விசாரமும் புருஷனது அபராத நிவர்த்தியை பயனாகவுடையது என வேதவேத்தாக்கள் கூறுகின்றார்கள். என ஒட்டுக.

அல்லது

**अतः** – கூறிய ரீதியினால் சாரீரக சாஸ்திரத்தின் ஆரம்பம் நிர்த்தோஷமாதலின்

**तत् प्रकरणम्** – அதன் பொருளை வெளிப்படுத்தும் பொருட்டுத் தொடங்கிய இப்பிரகரண வடிவ கிரந்தமும் (பயனுடையதாம்) (16)

**பிரகரணம்:**—பிர – சிறந்த, கரணம் – நிர்மாணம் எதற்கோ அது பிரகரணம்.

## அவதாரிகை

பிரதிபந்த நிவர்த்திக்கு ஒன்றைக் குறித்துக் காரணத்தன்மை யில்லாமையானும், சொரூபமாக புருஷார்த்தத்தன்மை யில்லாமையானும், அதன்கண்ணுள்ள (பிரதிபந்தக நிவர்த்தியைப் பயனாகவுடைய) பிரகரண வடிவ கிரந்தமானது எங்ஙனம் பயனுடையதாம் என்றாசங்கித்து விவட்சிக்கப்பட்ட காரிய (ஆவரண பங்க) விரோதியும், அதன் அனுத்பத்திக்கு (காரியத்தின் பிராகபாவத்திற்கு) அக்கிரம க்ஷண சம்பந்த ஏதுவானதும், (சாமக்கிரிக்ஷணத்தின் அடுத்த க்ஷணம் அக்கிரம க்ஷணமாம்) ஆன பிரதிபந்தம் இருக்கும்போது சாமர்த்தியமுடைய ஆயிரங் காரணங்களாலும் காரியம் உதயமாகாமையின் வர்ணிக்கப்பட்ட அக்கிரம சமய சம்பந்தத்தின் அபாவத்தைச் சம்பாதிக்குந் தன்மையால் அந்நியதாசித்தமாயினும் பிரதிபந்தகாபாவம் காரியத்தால் தனது உத்பத்தியின் பொருட்டு அபேக்ஷிக்கப்படுகின்றது. ஆதலின் பிரகரணம் பிரதிபந்த நிவர்த்தியின்கண் உள்ளதாயினும் பயனுடையது எனக் கூறுகின்றார் :—

## சுலோகம்

**पुरुषापराधशतसंकुलता विनिवर्तते प्रकरणेन गिरः ।**
**स्वयमेव वेदशिरसो वचनादथ बुद्धिरुद्भवति मुक्तिफला ॥**

## பதவுரை

**गिरः**—வேதவடிவமும் சாஸ்திரவடிவமுமான வாக்கியத்தின் கண்

**पुरुषापराध शतसंकुलता**—பிரமாதாக்களின் நூற்றுக்கணக்கான அசம்பாவனை விபரீத பாவனைவடிவ அபராதங்களால் அப்பிராமாண்ய சங்கை வடிவ யாதொரு பிரதிபந்தமுளதோ அது

**प्रकरणेन**—விசாரவடிவ கிரந்தத்தால்

**विनिवर्तते**—நிவர்த்தியாகின்றது

**अथ**—பிரதிபந்த நிவர்த்தியின் அனந்தரம்

**मुक्तिफला**—மோக்ஷத்தைப்பயனாகவுடைய

**बुद्धिः**—தத்துவஞானம்

**स्वयमेव**—தானே (இதரசஹகாரியின் அபேக்ஷையில்லாமலே)

**वेदशिरसः**–வேதாந்தத்தின்

**वचनात्**–வாக்கியத்தால்

**उद्भवति**–உண்டாகின்றது.

### *விசேஷவுரை*

சாஸ்திரத்தானேயே பிரதிபந்தம் நீக்கப்பட்டமையின் பிரகரண வடிவ இக்கிரந்தத்தால் யாது பயன் என்னும் சங்கைக்கு புருஷ தோஷங்கள் அனந்தமாதலின் "**आवृत्तिरसकृदुपदेशात्**" 4—1—1 (விருத்தியின் ஆவிருத்தி செய்யத்தக்கது அநேகந்தடவை உபதேசித்திருத்தலால்) என்னும் பிரம்மசூத்திரத்தால் அதற்குப்பயன் கூறப்பட்டுள்ளது என்கின்றார் நூற்றுக்கணக்கான என.

அப்பியாச தசையின் கண் கேவல நேத்திரத்தால் ஜலஞான முண்டாவதுபோன்று பிரதிபந்த நிவர்த்தியின்பின் இதரத்தால் சஹகரிக்கப்படாத கேவல வேதாந்த வாக்கியத்தாலேயே ஞானமுண்டாகிறது. ஆதலின் சாபேக்ஷத்தன்மையின்றென்பது பொருள். புருஷாபராத ஆகுலத்தன்மையென்பது அப்பிராமாண்ய சங்கையேயாம் எனக்கூறப்பட்டுள்ளது. ஜிஞ்ஞாசை பூர்வகமான விசாரத்தின் ஏதுவாகிய ஆபாத ஞானம் யுக்தியால் பிரதிபாதிக்கப்பட்டது. இஃது பிரமிதாக்ஷரா விருத்தம். (17)

### *அவதாரிகை*

அற்றேல் அன்வய வியதிரேகங்களால் சத்தி ஞானம்போன்று தாற்பரியஞானம் வாக்கியார்த்த ஞானத்திற்கு ஏதுவாம். அந்த தாற்பரிய ஞானமும் விசாரத்தின் அதீனமாம். அதாவது விசாரத்திற்குப் பிரதிபந்த நிவர்த்தி மாத்திரம் பயனன்று, மற்றே, தாற்பரிய ஞானவாயிலாக வாக்கியார்த்த ஞானமும் பயனும், என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார் :-

### *சுலோகம்*

**स्वाध्यायवन्न करणं घटते विचारो**
**नाप्यङ्गमस्य परमात्मधियः प्रसूतौ ।**
**सापेक्षताऽऽपतति वेदगिरस्तथात्वे**
**ब्रह्मात्मनः प्रमितिजन्मनि तन्न युक्तम् ॥ १८ ॥**

## பதவுரை

**परमात्मधियः**–பிரம்மஞானத்தின்

**प्रसूतौ**–உத்பத்தியின்கண்

**स्वाध्यायवत्**–தனது சாகையின்கண் உள்ள வேதவாக்கியம் போன்று

**विचारः**–விசாரமானது

**करणम्**–பிரமாணமாக

**न घटते**–பொருந்தாது

**अस्य**–இவ்வேதவாக்கியத்திற்கு

**अङ्गमपि**–சககாரிவடிவ அங்கமும்

**न**–ஆவதின்றும்

[விசாரத்தைக்காரணமாக அங்கீகரித்தலிலும், அங்கமாக அங்கீகரித்தலிலும் முற்கூறிய சாதாரண தூஷணத்தை நினைப்பூட்டுகின்றார்]

**तथात्वे**–அவ்வாறாயின் அதாவது விசாரம் கரணமாகவும் அங்கமாகவுமாயின்

**वेदगिरः**–வேதவாக்கியத்திற்கு

**सापेक्षता**–விசாரத்தை அபேக்ஷிக்குந்தன்மையாகிய சாபேக்ஷத்தன்மை

**आपतति**–அடைவுறுகின்றது (பொருளால் வேதவாக்கியத்தில் நிரபேக்ஷத்தன்மை வடிவ ஸ்வதப் பிராமாண்யத்தின் அழிவும்)

**(आपतति)**–அடைவுறுகின்றது. இதனால்

**ब्रह्मात्मनः**–பிரம்மவடிவ ஆன்மாவின்

**प्रमितिजन्मनि**–ஞானத்தின் உற்பத்தியில் (முற்கூறிய நியாயத்தால்)

**तत्**–சாபேக்ஷத்தன்மை

**न युक्तम्**–பொருத்தமன்று. என்பது பொருள்

## விசேஷவுரை

விசாரம் வேதாந்த வாக்கியம்போன்று வாக்கியார்த்த ஞானத்தின் கண், கரணமா ? அல்லது அங்கமா? முதற்பக்ஷம் சரியன்று. பிரத்தியக்ஷாதிப்பிரமாணம்போன்று விசாரமெனப் பெயரிய பிரமாணம் பிரசித்தமின்மையின். தருக்கவடிவ அவ்விசாரத்திற்கு பிரமாணத்திற்கு அநுக்கிரகத்தைச் செய்யுந்தன்மையால் சொரூபமாகப் பிரமாணத்தன்மையின்மையினும் வாக்கியத்தைக் கரணமாகவுடைய ஞானத்திற்கு வேறு கரணத்தினபேக்ஷையின்மையினும் வேறு ஞானமின்மையினும் என்க.

இரண்டாவது பக்ஷத்தின்கண்ணும் ஆக்கினேயம் முதலிய யாகத்திற்கு புரோக்ஷணம் முதலியவைபோன்று வேதத்திற்கு விசாரம் சொரூப உபகாரியங்கமன்று. அவ்விடத்திற்போன்று ஈண்டு வினியோஜகங்களான சுருதி முதலியவை இன்மையினும், (வினியோஜகங்கள்—அங்காங்கித்தன்மையை போதிக்கும் பிரமாணங்கள்) வேதவாக்கியத்தின் சொரூபம் தன்னாலேயே சித்தித்திருத்தலின் அதில் உபயோகமின்மையினும், என்க. அப்படியானால் பிரயாஜாதியாகப்போன்று பரமான்ம ஞானத்தின் உத்பத்தியில் ஆராதுபகாரியெனப்பெயரிய அங்கமாக இருக்கட்டுமே. அது மீமாம்சகராலும் நையாயிகராலும் "**इतिकर्तव्यताभागं मीमांसा पूरयिष्यति**" (கர்த்தவ்யத்தின் பிரகாரவடிவ அங்க யாகத்தை விசாரம் பூர்த்தி செய்யும்) எனவும் "**प्रमाणानामनुग्राहकः तर्कः**" (பிரமாணங்களுக்கு அநுக்கிரகஞ்செய்வது விசாரவடிவ தர்க்கமாம்) எனவும், கூறப்பட்டுளது எனின் அது பொருந்தாது. பிரயாஜாதி அங்க யாகங்களால் ஆக்கினேயாதி அங்கி யாகங்களில சொர்க்காதி பயனுக்கு அனுகூலமான சத்தியுண்டாவதுபோன்று வேதவாக்கியத்தின் கண் தத்துவ சாக்ஷாத்காரத்தின் உத்பத்திக்கு அநுகூலமான சத்தியின் உத்பத்தியின்மையின். ஏனெனின் வேதவாக்கியத்தின் கண் அருத்தத்தைப் பிரகாசிப்பிக்கும் சுவாபாவிக சத்தியினும் வேறாக விசார ஜன்னியம் யாதொன்றும் இன்றாம் ஆதலின். வேதாந்தப்பிரமாணத்திற்கு விசாரம் அங்கமாம் என அதன் அங்கத்தன்மையைப்போதிப்பிக்கும் பிரமாணத்தின் அபாவத்தைக் கூறினமையினும். வேதாந்தப் பிரமாணத்திற்கு உபகாரம் சத்தி முதலியவற்றின் ஞானத்தாலேயே சித்தித்தலானும், என்க, (18)

## அவதாரிகை

சக்தி ஞானம் முதலியதுபோன்று நியத அந்நுவயவியதிரேகங்களால் தாத்பரிய ஞானம் வாக்கியார்த்த ஞானத்திற்குக் காரணமாம். அத்தாற்பரிய ஞானமும் விசாரத்தினதீனமாம். ஆதலால் தாற்பரிய ஞானவாயிலாக விசாரம் வாக்கியார்த்த ஞானத்திற்கு ஏதுவாம், என்று யாதொரு சங்கை முன்பு செய்யப்பட்டதோ அதற்குச்சமாதானங் கூறுகின்றார்:—

## சுலோகம்

**व्युत्पन्नस्य हि बुद्धिजन्म सहसा वाक्यश्रुतौ दृश्यते**
**वाक्यार्थे न ततोऽस्ति बुद्धिजनने मीमांसनव्यापृतिः।**
**तेनार्थात्करणादिभावभजने मीमांसनस्याऽऽश्रिते**
**वेदार्थप्रमितौ तु वेदवचसः सापेक्षताऽऽयास्यति ॥ १९ ॥**

## பதவுரை

**व्युत्पन्नस्य**—சக்தி முதலியவற்றின் ஞானமுள்ள புருஷனுக்கு

**वाक्यश्रुतौ**—வாக்கியத்தைச்சிரவணிக்குங்காலத்தில்

**सहसा**—சீக்கிரமாக அதாவது தாற்பரிய ஞானபாவத்தை நிமித்தமாகவுடைய தாமதமின்றியே

**बुद्धिजन्म**—வாக்கியார்த்த விஷயக ஞானத்தினுற்பத்தி

**दृश्यते**—காணப்படுகிறது

**ततः**—நியத அன்வய வியதிரேகங்களின்மையினால்

**वाक्यार्थे**—வாக்கியார்த்த விஷயக

**बुद्धिजनने**—ஞானத்தினுத்பத்தியில்

**मीमांसनव्यापृतिः**—தாற்பரியஞானத்திற்கும் அதன் ஏதுவான விசாரத்திற்கும் உபயோகம்

**न अस्ति**—இன்றும்

**तेन**—வாக்கியார்த்தஞானத்தில் உபயோகமின்மையினால்

**अर्थात्**—சிரவணுதிவிதியின் அனுபபத்தி வடிவ அர்த்தாபத்திப் பிரமாணத்தால்

**मीमांसनस्य**–விசாரத்திற்கு (வாக்கியார்த்த ஞானத்தின்கண்)

**करणादि भावभजने** } கரணத்தன்மை முதலியவற்றையுடையதாக

**आश्रिते**–அங்கீகரிக்கின்

**वेदवचसः**–வேதவாக்கியத்திற்கு

**वेदार्थप्रमितौ**–வேதார்த்த விஷயமாகப் பிரமையை யுண்டு பண்ணுவதில்

**सापेक्षता**–சாபேக்ஷத்தன்மை வடிவ பரதப்பிராமாண்யம்

**आयास्यति**–அடைவுறும்

### *விசேஷவுரை*

தாற்பரிய ஞானம் நியமமாக வாக்கியார்த்த ஞானத்திற்கு முன்பு சம்பவிப்பதின்றும். பசுவைக்கொண்டு வா என்பது முதலிய வாக்கியத்தைக் கேட்போருக்கு தரற்பரிய ஞானம் நியதமாக இன்மையின், ஏனெனின், அப்போது அவருக்கு தாற்பரிய ஞானத்தால் வியாப்தமான லிங்கஞானம் இன்றும். அஹோ, நிர்மலமான ஜலம் நதியினுடையது. கரையில் எருமை சஞ்சரிக்கின்றது என்னும் வாக்கியங்களில் அனந்விதங் (சம்பந்தமின்றியவை)களான நதியினிடத்தும் கரையினிடத்தும் சமபிவியாகாரம் (சேர்த்து உச்சரித்தல்) காணப் படுதலால் சமபிவியாகார மாத்திரத்திற்கு அதன் லிங்கத்தன்மை பொருந்தாமையின். யாண்டு ஏகவாக்கியத்தன்மையுளதோ அவ் வாக்கியத்திற்கு விசிட்டார்த்தத்தில் தாற்பரியமாம், என்று சொல்லற்க – அதற்கும் (ஏகவாக்கியத்தன்மைக்கும்) வஞ்சகரது வாக்கியம் முதலியவற்றில் வியபிசார முண்மையின். ஏகவாக்கியத்தன்மை ஞானத் தானேயே நியத அர்த்தஞானம் சம்பவித்தலால் தாற்பரிய ஞானத்திற்கு ஏகவாக்கியத்தன்மை ஸ்தலத்தில் உபயோகமின்மையினுனும். அர்த்தவாதம் முதலிய வாக்கியத்திற்கு சத்தியினுல் தோன்றுகின்ற அர்த்தத்தில் தாத்பரியாபாவ நிச்சயமுளதாயினும் அதன் கண்ணுள்ள பதசக்தி முதலியவற்றின் சுவாரஸ்யத்தால் விசிட்டார்த்தப் பிரதீதியுண்டாவதாலும் ஆண்டு தாற்பரிய ஞானங்காரணமன்றும். நாநார்த்தகப் பதப்பிரயோகத் தாலும் அவ்வப்பதார்த்த உபஸ்திதியின் யோக்கியதை முதலியவற்றை யனுசரித்து ஓர்போது ஒரு பொருளின் ஞானம் பொருந்துதலினுலும்

ஆண்டு ஸர்வ பதார்த்தத்தின் ஸ்மரணம் நியமமாக வின்ருதலின். யாண்டு ஸர்வ பதார்த்தத்தின் ஸ்மரணம் உளதோ, ஆண்டு யோக்கியத் தன்மையின் ஞானமும் தாற்பரிய ஞானமும் காரணமாகவுளது எனின் ஆண்டு ஒரே காலத்தில் அர்த்த ஞானம் உண்டாகுக. தாற்பரிய ஞானத் தால் என்னைபயன். அவ்வச்சம்சர்க்கத்தோடுகூடிய தாத்பரிய ஞானம், அவ்வச்சம்சர்க்கான்மக வாக்கியார்த்த ஞானத்திற்கு முன்பு பொருந்தாமை யானும் ஆண்டு தாற்பரியஞானத்திற்கு ஏதுத்தன்மை சம்பவிப்பதின்ரும்.

அற்றேல். ஆன்மா தரிசிக்கத்தக்கது சிரவணஞ் செய்யத்தக்கது என்பது முதலிய வாக்கியத்தால் பிரம்ம சாக்ஷாத்காரத்தையுத்தேசித்து விசாரவடிவ சிரவணுதியை விதித்தலால் விசாரத்திற்கு சாக்ஷாத்காரத்தின் அஹேதுத்தன்மையெவ்வாரும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர் :— வாக்கியார்த்த ஞானத்தில் என.

யாதொரு காரணத்தால் விசாரம் அங்கத்தன்மையாலாவது கரணத் தன்மையாலாவது வாக்கியார்த்த ஞானத்தின் உபயோகி அன்ருே அக் காரணத்தாலென்பது பொருள். அர்த்தாபத்தியினுல் உத்தேசிய ஞானத்தின் விசேஷிய அம்சத்தில் கரணுதித் தன்மையை யங்கீகரிக்கின் வேத வசனத்திற்கு வேதார்த்தப்பிரமிதியை யுண்டுபண்ணுந் தன்மையில் சாபேக்ஷத்தன்மை யடைவுறும்.

சுருதியின்கண் திரஷ்டவ்யபதத்தால் ஆன்மஞானமாத்திரம் உத்தேசிக்கப்படுவதின்ரும். ஆபாத ஆன்மஞானம் முன்பே உத்பன்னமாயிருத்தலின். மற்ருே அப்பிரதிபந்த ஆன்மதர்சனம் உத்தேசியமாம். இவ்வாருகவே அதனை உத்தேசித்து விதிக்கப்பட்ட விசாரம் விசேஷணத்தின் கண்ணேயே பரியவசானமாகின்றது. முன்பு சித்தித்த ஞானமாத்திரத்தில் அதன் சாத்தியத்தன்மை பொருந்தாமை யின். சுருதியினுலும் விசாரத்திற்கு ஞானத்தைக் குறித்து ஏதுத் தன்மையின்ரும். ஆதலின் முற்கூறியதே கதியாம் என்பது கருத்து.

# அஞ்ஞான நிருபணம்

## அவதாரிகை

இவ்வாறு விசாரத்திற்கு முன்பு சாமானியருபமாக அறியப்பட்ட பிரம்மம் முமுக்ஷுக்களால் ஜிக்ஞாசிக்கத்தக்கதாம். விசாரமும் பிரதி பந்தக நிவர்த்தி மாத்திரத்தால் பயனுடையதாம் என்று கூறப்பட்டது.

இவ்வாருயினும் ஜிக்ஞாசிக்கத் தகுந்த பிரம்மம் திருசியமாயின், கடம் போன்று அனுன்மத்தன்மையால் முமுக்ஷுக்களால் ஜிஞ்ஞாசிக்கத் தகுந்த தாக ஆகாது. சொப்பிரகாசமெனின் அதற்கு உள்ளபடி விளங்கும் தன்மை உண்மையால் ஜிக்ஞாசியத்தன்மை பொருந்தாது. ஸ்பஷ்டமாக விளங்கும் வஸ்துவில் ஜிஞ்ஞாசையுண்டாகின்றதில்லையாதலின். சொப்பிரகாசமாயினும் அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டதாகியிருத்தலினுல் உள்ளபடி விளங்குகிறதில்லை என்று சொல்லற்க. நான் என்னும் ஞானத்திற்கே ஆன்மாவின் யதார்த்த சொரூபத்தை விஷயம் பண்ணுந் தன்மையுண்மையின். பிரம்மத்திற்கு அதன் அவிஷயத்தன்மையாயேல் அநாத்மத்தன்மை பிராப்தியாம். ஸ்வப்பிரகாச ஆன்மாவின்கண் ஞானசாத்தியப்பிரயோஜனம் விசாரமின்றியுஞ் சம்பவித்தலால் விசாரம் வியர்த்தமுமாம். மேலும் ஆன்மஞானமாத்திரம் விசாரத்தின் பிரயோஜனமன்ரும். அது சுகமும் துக்க நிவர்த்தியுமாகிய இரண்டனுள் ஒன்ருகாமையின் ஆன்மஞான சாத்தியப்பிரயோஜனம் சுகத்தினும் துக்க நிவர்த்தியினும் வேருயின் துக்கமிஸ்ரித சொர்க்காதிபோன்று முமுக்ஷுக்களால் விரும்பத்தக்கதாகாது. சம்சாரவடிவ அநர்த்தம் சத்தியமாயின் ஞானத்தால் நிவர்த்தியாகாது. அசத்தியமாயின் அத்தியந்தம் நிவிருத்தி கூடாது. ஏனெனின் எதற்குக் கொஞ்சமும் சொரூபமின்ருே அதற்கு நிவர்த்தி எப்படியுண்டாம்? இக்காரணத்தால் விஷயமும் பிரயோஜனமும் இன்மையின் இந்தப் பிரகரணவடிவ கிரந்தம் ஆரம்பிக்கத்தக்கதன்ரும். என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர் :—

### சுலோகம்

आच्छाद्य विक्षिपति संस्फुरदात्मरूपं
जीवेश्वरत्वजगदाकृतिभिर्मृषैव ।
अज्ञानमावरणविभ्रमशक्तियोगा-
दात्मत्वमात्रविषयाश्रयताबलेन ॥ २० ॥

### பதவுரை

**अज्ञानम्**--அநாதி பாவவடிவ அவித்தையானது

**आत्मत्वमात्र**—சத்ரூப அகண்ட சைதன்ய மாத்திரத்தினையே

**विषयाश्रयता**—விஷயமாகவும் ஆசிரயமாகவுமுடையதாந்தன்மை வடிவ

**बलेन**—வலிமையால்

**आवरणविभ्रम शक्तियोगात्** } ஆவரணசக்தி விக்ஷேபசக்திகளின் சம்பந்தத்தால்

**संस्फुरद्**—சொப்பிரகாச

**आत्मरूपम्**—ஆன்ம வடிவத்தை

**आच्छाद्य**—மறைத்து

**जीवेश्वरत्व जगदाकृतिभिः** } சீவத்தன்மை ஈஸ்வரத்தன்மை ஜகத்து என்னும் வடிவங்களால்

**मृषा एव**—மித்தையாகவே

**विक्षिपति**—தோற்றுவிக்கின்றது

## *விசேஷவுரை*

அஞ்ஞானத்தின் வடிவம் அநாதிபாவரூபமாய் ஞான நிவர்த்தியமாய் பின்பு சொல்லப்படும். சொப்பிரகாசத்தன்மையாலும் நிரவயவத் தன்மையாலும் உள்ளபடி விளங்குவதாயினும் அத்துவயாநந்த பிரம்ம சொரூபத்தை மறைத்து, (**विक्षिपति**) தோற்றுவிக்கின்றது. (அதாவது) நாநாப்பிரகாரம் அதன் சொரூபத்தினும் விபரீதப்பிரபஞ்சபாவத்தை அடைவிக்கின்றது. [நாநாப்பிரகாரத்தையே கூறுகின்றார் - சீவத் தன்மை என்பது முதலியவற்றால்] மூன்றும் வேற்றுமை பிரகாரார்த் தத்திலாம். அதாவது சொப்பிரகாசமாயினும் ஆன்மவடிவப் பிரம்மத்திற்கு அவித்தையால் உள்ளபடி விளங்குந்தன்மையின்மையின் ஜிஞ்ஞாசைக்கு விஷயமாந்தன்மை பொருந்துகின்றது. ஜீவத்தன்மை ஈஸ்வரத்தன்மை முதலிய பேதகற்பனையின் நிவர்த்திவடிவப் பிரயோஜனமுமுளது ஆதலின் காக்கையின் பல்லை விசாரித்தல்போன்று பிரம்ம விசாரம் நிஷ்பலமன்று என்பது கருத்து.

[பிரபஞ்சத்திற்கு ஞானநிவர்த்தியத்தன்மையைக் கூறுகின்றார்- 'மித்தையாகவே' என] இதனால் அத்துவயாநந்த பிரம்ம சொரூபத் திற்கு அதனின் விபரீத வடிவத்தன்மை எவ்வாறு பொருந்தும் என்னும் சங்கை கண்டிக்கப்பட்டது. சுத்தி முதலியவற்றிற்கு அஞ்ஞானத்தால்

இரஜதாதி வடிவத்தன்மைபோன்று ஆன்மாவிற் தப் பிரபஞ்சபாவமும் அஞ்ஞான கற்பிதத் தன்மையால் மித்தையாதலின் யாதொரு தோஷமும் இன்றுமென்பது கருத்து. மித்தியாத்துவமும் சதசத் விலக்ஷணத் துவமாம். ஆதலின் சத்து முதலிய பக்ஷங்களிற் கூறிய தோஷங் களின்றும். சதசதான்மகத்தன்மையை நிவர்த்திக்கும் பொருட்டு ஏகாரம் கூறப்பட்டது.

[அற்றேல் அஞ்ஞானம் சத்தியமாயின் அதனாற் செய்யப்பட்ட பிரபஞ்சவடிவ விட்சேபத்திற்கு மித்தியாத்வம் எவ்வாறு பொருந்தும். அஞ்ஞானம் மித்தையாயின் அதற்கு மறைக்குந்தன்மை எவ்வாறு கூடும். உலகின்கண் சத்திய வஸ்துவிற்கே மறைக்குந்தன்மை காணப்படுதலின். என்றுசங்கித்து அஞ்ஞானம் மித்தையாயினும் அருத்தக்கிரியையைச் செய்வதாதலின் மறைக்கின்றதும் பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கின்றது மாம். அக்காரியத்தைச் செய்யுந்தன்மையில் சத்தியத்தன்மை பிரயோஜகம் அன்றும். சத்திய பதார்த்தமே காரியத்தைச் செய்வது மித்தியா பதார்த்தம் காரியத்தைச் செய்வதின்றும் என்னும் நியமத்தை யங்கீகரியாமையின். மற்றே மறைத்தற்கனுகூலமான சத்தியையுடைய தாந்தன்மை காரியத்தைச் செய்வதில் ஏதுவாம். அதுவும் பொய் வடிவ சொப்பனத்திற் காணப்பட்ட வஸ்திர முதலியவற்றில் திருஷ்டமாம். ஆச்சாதக வஸ்துவிற்கு உலகின் கண்ணும் சத்தியத் தன்மை உடன்பாடின்றும் என்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்றார். ஆவரணசத்தி விக்ஷேப சக்திகளின் சம்பந்தத்தால் என. அத்வயப் பிரம்மம் இல்லை விளங்கவில்லை என்னும் வியவகார யோக்கியதை ஆவரணமாம், அதன் ஏதுவான சத்தி ஆவரண சத்தியாம், விக்ஷேப சத்தியோ நான் கருத்தா நான் போக்தா என்பது முதலிய பிராந்தி ஞானத்தையுண்டுபண்ணுஞ் சத்தியாம்.

[அற்றேல் அஞ்ஞானமும் சத்தியுடையதாயின் சாங்கியரது சம்மத மான பிரதானத்தினின்றும் பேதம் சித்தியாது என்னுமிடத்துக் கூறுகின்றார் சத்ரூப அகண்ட சைதன்னிய என.] அஞ்ஞானத்திற்கு ஆன்மாவை யாசிரயமாகவும் விஷயமாகவுமுடைய தன்மையே சாங்கியரது பிரதானத்தினும் வலியுடையதாம். அதுவே இரு சத்திகளின் ஆசிரயத் தன்மைக்குப் பிரயோஜகமாம். தனது சொரூபத்தாலன்று. பிரதானமோ

சுதந்திரமாகவே சத்திகளின் ஆசிரயத்தன்மைக்குப் பிரயோஜகமாம். ஆதலின், பிரதானத்தினின்றும் விலக்ஷணமாம் என்பது பொருள். (20)

## அவதாரிகை

அற்றேல் ஆன்மாவை அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டதாக அங்கீகரிக்கின் பிரகாசங் கூடாமையின் அவ்வான்மாவினுல் அஞ்ஞானம் அந்தக்கரணம் முதலியவற்றின் விளக்கம் எங்ஙனம் கூடும் அப்பிரகாச ஞானத்தால் விஷயப் பிரகாசம் உண்டாவதில்லையாதலின். என்னுமிடத்துக் கூறுகின்றூர் :—

## சுலோகம்

प्रत्यक्त्वमात्रविषयाश्रयताबलेन
प्रत्यक्स्वरूपमपिधाय पराग्विवर्तैः ।
प्रत्यञ्चमद्वयमशेषविशेषहीनं
विक्षिप्य तिष्ठति तदग्रहणं मृषैव ॥ २१ ॥

## பதவுரை

**प्रत्यक्त्वमात्रविषय आश्रयताबलेन** — சைதன்னியமாத்திரமான யாதொரு விஷயமுண்டோ அதன் ஆசிரயத்தன்மைச் சாமர்த்தியத்தால்

**प्रत्यक्स्वरूपम्** – பிரத்தியகான்மாவின் அஞ்ஞானத்திற்குச் சாதகமான சைதன்னியாம்சத்தினை

**अपिधाय**–மறைக்காமல்

**अशेषविशेषहीनम्**–சாதி முதலிய சகல விசேஷமும் அற்றதும்

**अद्वयम्**–அத்துவைதமுமான

**प्रत्यञ्चम्**–பிரத்தியகான்மாவின் பரிபூரண சொருபத்தை

**पराग्विवर्तैः**–ஜீவத்துவ முதலிய பாஹ்ய விவர்த்தங்களால்

**विक्षिप्य**–விபரீத ரூபமாகத் தோற்றுவித்து

**तद्ग्रहणम्**-அவ்வஞ்ஞானமானது

**मृषा एव**-பொய்யாகவே

**तिष्ठति**-நிற்கின்றது.

### விசேஷவுரை

இச்சுலோகத்தின்கண் விஷயபதம் விவக்ஷிதமின்றும். அல்லது கூறப்படும் ரீதியினல் அதிஷ்டானத்தின் ஆவரணத்திற்கு விக்ஷேப வடிவ பிரபஞ்சத்தின் ஏதுத்தன்மையுளது. இங்ஙனமாகவே, விஷயமும் அதாவது ஆவரணமும் ஆசிரயத் தன்மையுமாகிய இரண்டுமே விக்ஷேப ஏதுவாம். ஆதலின் விஷய பதம் கிரஹிக்கப்பட்டது.

அஞ்ஞானம் தனது ஆசிரயத்தால் விளங்குவதாம். அறியேன் என அநுபவமுளதாதலின், விளக்குகின்ற ஆசிரயமும் பிரகாசமாகவே யுளது. ஆதலின் அஞ்ஞானுசிரயசைதன்னியம் அநாவிருதமாம்.

இவ்வாறு அஞ்ஞானம் அதனையாசிரயித்தலானேயே அதனை மறைப்பதில்லை என்று அபிப்பிராயஞ் செய்து சுலோகத்தில் மறைக்காமல் ( **अपिधाय** ) என்று கூறப்பட்டது. இவ்வாருகவே அஞ்ஞானுதியின் பானம் விருத்தமின்றும். சைதன்னியமில்லையென வியவகாரங் காணப்படாமையின் அதன் ( வியவகார ) யோக்கிதை வடிவ ஆவரணம் இல்லையென்பது கருத்து.

அப்படியானல் அஞ்ஞாதப்பிரம்மம் அதனினும் ( அஞ்ஞானு சிரயப் பிரகாச வடிவப் பிரத்தியக்சேதனத்தினும் ) அன்னியமாமே எனின், அற்றன்று எனக்கூறுகின்றார் :— அத்துவிதமும் என.

அப்படியானல் பிரகாசமுள்ள வஸ்துவிற்கு அப்பிரகாசத்தன்மை எப்படிக்கூடும் என்றுசங்கித்து, பிரகாசமான தன்மையிலோ பிரமாணங் கூறப்பட்டது. இவ்வாறு ஜீவேஸ்வரத்துவாதி அத்தியாசத்தின் அதிஷ்டானத்தன்மையால் அதன்கண் அப்பிரகாசமான தன்மையும் சொல்லவேண்டும். விசேஷத்தின் ஆவரணமின்றி அத்தியாசம் பொருந் தாமையின், என்று அபிப்பிராயஞ் செய்து பிரத்தியக் சைதன்னியத்தை ஜீவத்துவாதிகளால் தோற்றுவிக்கிறது எனக்கூறப்பட்டது,

பிரம்மம் சைதன்னிய மாத்திரமேயாயினும் அது ஆவிருதமாய் அநுபவிக்கப்படுகின்றது. அதுவும் இனிக்கூறப்படும் பிரகாரத்தால் விருத்தமின்ரும்.

பிரம்மம் அத்துவயமும் சைதன்னிய ரூபத்தால் விளங்குவதும் ஆயின் ஜீவத்துவாதிகளுக்கு அத்தியாசம் இல்லாதொழிக. எனின், ஆண்டுக் கூறுகின்ருர் :— சகல விசேஷமுமற்றதும் என. அதாவது நிர்விசேஷ வஸ்துவில் ஜீவத்துவாதிகளின் பிரதீதி அத்தியாசமின்றிச் சம்பவியாது. ஆதலின் அதற்கு அதன்கண் ஆரோபம் சொல்ல வேண்டுமென்பது பொருள். (21)

# ஆன்ம சொரூப நிரூபணம்

## அவதாரிகை

அற்றேல் எங்ஙனம் சாங்கிய மதத்தின்கண் பிரகிருதியானது புருஷனது ஆசிரயத்தன்மை விஷயத்தன்மையின்றி ஜகத்தை யுண்டு பண்ணுகிறதோ அங்ஙனமே அஞ்ஞானமும் ஆகுக. அவ்வஞ்ஞானத்திற்கு பிரத்தியகான்மாவின்கண் ஆசிரயத்தன்மை விஷயத்தன்மையைக் கற்பித்தல் எற்றிற்கு ? அஞ்ஞானமு மதன் காரிய துவைதப்பிரபஞ்சமு மத்தியஸ்தமாம். ஆதலின் பிரகிருதியினின்றும் அஞ்ஞானத்திற்கு விலக்ஷணத்தன்மையுராது என்று கூறற்க. அதன் அத்தியாசமே இதுபரியந்தம் சித்தியாமையின், என்ருசங்கித்து ஆன்மாவின்கண் பிரபஞ்சத்தின் அத்தியாசத்தைத் தெரிசிப்பிக்கின்றவராய் அத்தியாச சித்தியின் பொருட்டு முதலில் அவ்வத்தியாசத்திற்கு ஆன்மாவின்கண் வாஸ்தவமாக அசம்பவத்தையும் அசம்பவத்தின் பொருட்டு பிரமாண சித்த ஆன்மாவின் சொரூபத்தையும் தெரிசிப்பிக்கின்ருர் :—

### சுலோகம்

**प्रत्यक्षलिङ्गवचनानि हि दर्शयन्ति**
**निर्दुःखनित्यसुखविग्रहतां प्रतीचः ।**
**निर्दुःखनित्यसुखविग्रहभूम्नि नास्मि-**
**न्संभाव्यते दृशि पुरोदितमल्परूपम् ॥ २२ ॥**

## பதவுரை

**प्रत्यक्ष**–சுழுத்திகாலத்திலுள்ள பிரத்தியக்ஷானுபவமும்

**लिङ्ग**–பரமப்பிரேமைக்கு விஷயமாந்தன்மை வடிவ அனுமானப் பிரமாணமும்

**वचनानि**–எது பூமாவோ அது சுகம் என்பது முதலிய சத்தப்பிரமாணமும்.

**प्रतीचः**–பிரத்யகான்மாவிற்கு

**निर्दुःखनित्य**–துக்கமற்றதும் அழிவற்றதுமான

**सुखविग्रहताम्**–அகண்டானந்த வடிவத்தன்மையினை

**दर्शयन्ति**–போதிக்கின்றன.

பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கள் இனி வரும் சுலோகங்களால் கூறப்படும். ஆண்டுக்காண்க பிரத்தியகான்மாவிற்குத் துக்கமற்றது என்பது முதலிய விசேஷணமானது பூமாவும் சைதன்னியமும் என்னும் இரண்டற்கும் உபலக்ஷணமாம். அப்படிக்கின்றேல் அநுவாத வாக்கியத்தில் அதனைக் கூறுதல் பொருந்தாமையின்.

[ அதனுல் சிந்தித்தது என்னையெனின் ஆண்டுக் கூறுகின்ருர்.]

**निर्दुःखनित्य**–துக்கமற்றதும் நித்தியமும்

**सुखविग्रह**–அகண்டானந்த வடிவமும்

**भूम्नि**–வியாபக வடிவமும்

**दृशि**–ஞான வடிவமுமான

**अस्मिन्**–அத்வய பிரத்தியகான்மாவின்கண்

**पुरा उदितम्**–அஙிர்தஜடாதி வசனத்தால் முன்பு கூறப்பட்ட

**अल्परूपम्**–ஜீவத்வாதியல்ப வடிவம்

**न संभाव्यते**–வாஸ்தவமாக எவ்வாற்ருனும் சம்பவியாது

## விசேஷவுரை

அஹங்காரம் முதலிய ஜடப்பிரபஞ்சம் ஆன்மாவினும் வேறிடத்திற் சித்திப்பதின்றும். ஆன்மாவிற்கே அதன் உபாதானத்தன்மை கூறப் படுதலின். காரியத்திற்கு உபாதானத்தினும் வேறிடத்தில் திதி பொருந் தாமையானும், அதன் (அகங்காராதியின்) சத்தையும் விளக்கமும், பொருந்தாமையானும் என்க. ஆத்மாவினும் வேறாகவும் கிஞ்சித்தும் சம்பவிப்பதின்றும். ஆன்மாவின்கண்ணும் தாதாத்மியத்தினும் வேறான சம்பந்தத்தால் அதற்கு ஸ்திதி சம்பவியாது. நிரவயவ அசங்க வஸ்துவின்கண் சம்பந்தாந்தரம் சம்பவியாமையின், தாதாத்மிய சம்பந்த மும் வாஸ்தவமாக விருத்த பதார்த்தங்களுக்குச் சம்பவியாது. அந்த ஜடாதி வடிவ பிரபஞ்சத்தினும் ஆன்மாவின் சத்திய ஞானுதி வடிவம் அத்தியந்தம் விருத்தமாம். அஃது பிரத்தியக்ஷாதி பிரமாணங்களால் சித்தமாம் ஆதலின் ஆன்மாவின்கண் எவ்வாற்றாலாயினும் பிரபஞ்சத் திற்கு வாஸ்தவமாகச் சம்பவமின்றும் என்பது கருத்து. (22)

# ஆன்மாவிற்குச்
# சுகரூபத்தன்மையை நிரூபித்தல்

## அவதாரிகை

பிரதிஞ்ஞை செய்யப்பட்ட பொருளை உபபாதனஞ்செய்கின்றவரும் முதலில் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் ஆன்மாவின் நிர்த்துக்க நித்திய சுகவடிவத் தன்மையைத் தெரிசிப்பிக்கின்றார் :—

## சுலோகம்

प्राज्ञे सुखं समनुभूय समुत्थितः सन्
सर्वप्रकारविषयप्रतिपत्तिशून्ये ।
सुप्तोऽहमत्र सुखमित्यनुसंदधानः
सर्वोऽपि जन्तुरवगच्छति तस्य सौख्यम् ॥ २३ ॥

## பதவுரை

सर्वप्रकार—சர்வப்பிரகாரத்தாலும்

**विषयप्रतिपत्तिशून्ये**—சப்தாதி விஷய ஞானங்களின்றிய

**प्राज्ञे**—சுழுத்தி காலத்தில் பிராஞ்ஞ ஆன்மாவின் கண் அபேதமா யிருந்துகொண்டு

**सुखम्**—நிர்மலமான சுகத்தை

**समनुभूय**—நன்றாக அனுபவித்து

**समुत्थितः सन्**—நித்திரையினின்றும் எழுந்தவனாகி

**अहं अत्र**—நான் சுழுத்தியவஸ்தையில்

**सुखं सुप्तः**—சுகமாகத் தூங்கினேன்

**इति अनुसंदधानः**—என்று இந்தப்பிரகாரம் அனுசந்தானம் செய்கின்றதாய்

**सर्वः अपि जन्तुः**—எல்லாப்பிராணியும்

**तस्य सौख्यम्**—ஆன்மாவின் சுகவடிவத்தை

**अवगच्छति**—அறிகின்றது

## *விசேஷவுரை*

உலகின் கண்ணுள்ள சுகப்பிரத்தியக்ஷமனைத்துமே ஆன்மாவின் சொரூப சுகத்தையே விஷயஞ் செய்கின்றது. அங்ஙனமாயினும் விஷய சுகம் அன்னியத்தால் (விஷயத்தால்) சித்தித்தது என்னும் சங்கையோடு கூடியதாயிருத்தலின் அதனை விடுத்து அன்னியத்தாற் சித்தித்தது என்னும் சங்கையில்லாமையானும் நிர்த்துக்கத் தன்மை முதலியதின் சித்தியின் பொருட்டும் சுழுத்திகாலத்திலுள்ள பிரத்தியக்ஷம் உதாகரிக்கப்பட்டது.

மூலத்திலுள்ள "பிராஞ்ஞே" என்னும் பதத்திற்கு சுழுத்தி யவஸ்தையில் எந்தச் சொரூபத்தின்கண் ஐக்கியத்தையடைந்தவனாகி ஜீவன் புத்தி முதலிய உபாதி தோஷங்களின்மையின் மிகுந்த பிரஞ்ஞை யுடையவனாகின்றானோ அந்தக் கூடஸ்த வடிவ பிராஞ்ஞ ஆன்மாவின் கண் அபேதமாயிருக்குங் காலத்தில் என்பது பொருள். நன்றாய் சொரூப சுகத்தையநுபவிக்கின்றான். சுழுத்தியின்கண் சுகமில்லை யாயின் சுழுத்தியின்பொருட்டு ஒருவருக்கும் பிரவிருத்தியுண்டாகலாகாது.

சுழுத்தியின் கண்ணுள்ள சுகமும் ஜன்னியமாய் அநித்யமாய் என் ஆகாது என்னும் சங்கை சர்வப்பிரகாரத்தாலும் என்பதாதியால் நிவர்த்திக்கப்பட்டது. அதாவது சுழுத்தியவஸ்தையின்கண் ஸ்மிருதி ரூபமாகவாவது அநுபவரூபமாகவாவது சப்தாதி விஷயஞானமின்றும். சுழுத்தியவஸ்தை சர்வ விசேஷ ஞானங்களின் உபரமவடிவமாதலின், விஷய ஞானமின்றி சுகத்திற்கு உற்பத்தி சம்பவியாமையின் சுழுத்தியில் ஆன்ம சுகத்தினும் வேறான சுகமில்லையென்பது பொருள். தூங்கி எழுந்தவன், சுகமாகத் தூங்கினேன் என சுழுத்தி காலத்திலுள்ள சுகத்தினையேயனுசந்தானஞ் செய்கின்றான். அவனது அநுசந்தானத்தால் சொரூப சைதன்னியத்திற்கு நிர்த்துக்க நித்தியசுக சொரூபத்துவம் சித்திக்கிறது.

நான் சுகமாகத் தூங்கினேன் என்னும் ஸ்மிருதி-சொரூப சைதன் யத்தின் நிர்ந்துக்கத் தன்மையையாவது, நித்தியத் தன்மையையாவது, விஷயம் செய்வதின்றும். ஆதலின் அதன் வலியால் பிராஞ்ஞ சுகத்தின்கண் நிர்த்துக்கத்தன்மை முதலியது சித்திப்பதின்றும். அங்ஙன மாயினும் சுழுத்தியவஸ்தையின்கண் அநுபவிக்கப்படுகிற சுகத்தின் வலியானே ஆன்மாவிற்கு நிர்த்துக்கத்தன்மை சித்திக்கின்றது. இக் காரணத்தானேயே தூங்கி எழுந்தவனுக்கு துக்கமின்றித் தூங்கினேன் என வியவகாரமுண்டாகின்றது. சுழுத்தி காலத்திலுள்ள சுகத்தின் சாமர்த்தியத்தானேயே அதற்கு நித்தியத்துவமும் சித்திக்கின்றது. ஆதலின் பிராஞ்ஞனிடத்தில் சுகப்பிரத்தியக்ஷத்தின் சாமர்த்தியத்தால், ஆன்மா நிர்த்துக்க நித்திய சுகவடிவமாம்எனச் சித்திக்கின்றது. (23)

## *அவதாரிகை*

இங்ஙனம் பிரத்தியக்ஷத்தாற்போன்று அநுமானத்தாலும் ஆன்மா விற்கு சுகசொரூபத்துவம் சித்திக்கின் அச்சுகந்திற்கு நிர்த்துக்க நித்தியத் தன்மையும் சித்திக்கும் என்று கருதி ஆன்மா சுகத்தினும், அபின்னமாம், சுகலக்ஷணமுடைமையின், விஷய சுகம்போன்று, எது எதன் இலக்கண முடையதாமோ அது அதன் வடிவமாம். அலேதாடி இலக்கணமுடைய பசு அலேதாடியுடையதனோடு அபின்னமாவதுபோன்று, என்னும் அநுமானத்தைக் கூறுகின்றார் :—

**சூ. 8**

**சுலோகம்**

सर्वं यदर्थमिह वस्तु यदस्ति किञ्चित्
पारार्थ्यमुज्झति च यन्निजसत्तयैव ।
तद्वर्णयन्ति हि सुखं सुखलक्षणज्ञा-
स्तत्प्रत्यगात्मनि समं सुखताऽस्य तस्मात् ॥

**பதவுரை**

**इह**—இச்சம் சாரத்தின்கண்

**यत् किञ्चित् वस्तु**-ஸ்திரீ புத்திரதனாதி யாதொரு பதார்த்தம்

**अस्ति**—உள்ளதோ

**सर्वम्**—அவ்வஸ்துக்களனைத்தும்

**यदर्थम्**-எதன்பொருட்டோ

**यत्**—எது (விரும்பப்படுகின்றதாகி)

**निजसत्तया एव**-தனது சொரூபத்தாலேயே

**पारार्थ्यम्**—அன்னியத்திற்குச் சாதனமாந்தன்மையை

**उज्झति**-விட்டு விடுகின்றதோ

**तत्**—அவ்வவ் வஸ்துவினை

**सुखम्**—சுகவடிவமாமென்று

**सुखलक्षणज्ञाः**—சுகத்தின் இலக்கணமறிந்த வித்வான்கள்

**वर्णयन्ति**—கூறுகின்றனர்

[வியாப்தியுடைய ஏதுவிற்குப் பக்ஷதருமத் தன்மையை கூறுகின்றார்]

**तत्**—அச் சுகத்தின் இல்க்கணம்

**प्रत्यगात्मनि**-அகம் விருத்தி விஷய பிரத்தியகான்மாவின் கண்

**सम्म्**–சமானமாம் (உளதென்பது பொருள்)
[ நிகமனஞ் செய்கின்றார் ]

**तस्मात्**–அக்காரணத்தால்

**अस्य**–இவ்வான்மாவிற்கு

**सुखता**–சுக சொரூபத்தன்மையாம்

### *விசேஷவுரை*

அனைத்தும் – என்பது பெரும்பான்மைக்கருத்தது. எதன் பொருட்டு – எதன் சம்பந்தித்தன்மையால் பிரீதிக்கு விஷயம். அதன் (ஆன்மாவின்) ஏதுவன்றும் என்பது பொருள். ஆன்மசுகம் ஜன்யமன்றுதலின். யாதொரு பதார்த்தம்–என்பதும் பெரும்பான்மையைக்கருதியதாம். பாரார்த்திபம் – அன்னியப் பிரயுக்த பிரீதி விஷயத்தன்மை. எது என்றவிடத்தில் விரும்பப்படுவது என்பது எஞ்சி நின்றது.

சமானமாம் – என்பதற்கு வைஷயிக சுகத்திற்குச் சமானமாகவுளது என்றும் பொருள் கொள்ளலாம். நிகமனம் – முடித்தல். ஈண்டு எது இச்சைக்கு விஷயமாயும் அன்னிய சேஷத்தன்மையின்றியதாயும் உளதோ அது சுகவடிவமாம் என்பது ஓர் இலக்கணம். எது தனது சொரூபத்தால் இச்சைக்கு விஷயமாமோ அது சுகவடிவம் என்பது மற்றோர் இலக்கணம். என இருவிலக்கணங்கள் விவக்ஷிதமாம். இதை உபபாதனம் செய்யும் பொருட்டு சர்வம் என்பதாதி கூறப்பட்டது. துக்காதியின் கண்ணும் சுகசாதனத்தின் கண்ணும். அதிவியாப்தியை நீக்கும்பொருட்டு இரண்டு தளங்களாம். பாகங்களாமென்பது பொருள். அதாவது முதல் இலக்கணத்தின்கண் இச்சைக்கு விஷயமாவது யாது. அது சுகமென இவ்வளவேகூறின் சுகசாதனமான ஸ்திரீ முதலியவற்றில் செல்லுகின்றது. ஏனெனில் ஸ்திரீ முதலிய பதார்த்தங்களும் இச்சைக்கு விஷயமாவதால் அதன் நிவர்த்தியின் பொருட்டு அன்னிய சேஷத்தன்மையின்மை கூறப்பட்டது. ஸ்திரீ முதலிய பதார்த்தங்களில் அன்னிய புருஷ சேஷத்தன்மையுண்மையின். அதனின்மை வடிவ இலக்கணம் செல்வதின்றும். அன்னிய சேஷத்தன்மையின்றியது எதுவோ அது சுகமாம் என இவ்வளவே சுகத்தின் இலக்கணமாகக்கூறின், துக்கம் முதலியவற்றில் அதிவியாப்தியுண்டாம் ஏனெனில் துக்கம் முதலியவற்றில் அன்னிய சேஷத்தன்மையின்மையின், அத்தோஷத்தை நீக்கும்

பொருட்டு இச்சைக்கு விஷயமாவது என விசேஷிக்கப்பட்டது. துக்கம் இச்சைக்கு விஷயமாவதின்றும் ஆதலின் அதிவியாப்தியின்றும். இவ்வாறு இரண்டாவது இலக்கணத்தின் கண்ணும், இச்சைக்கு விஷயமாவது யாது அது சுகம் என இவ்வளவே இலக்கணமாகக் கூறின் சுகசாதனத்தின் கண் அதிவியாப்தியுண்டாம் ஆதலின் தனது ஸ்வரூபத்தால் என விசேஷிக்கப்பட்டது. சுகசாதனம் சொரூபத்தால் விரும்பப்படுவதின்றும்.

அற்றேல் புத்திராதியரைப்போன்று சுகமும் எனக்கு சுகமுண்டாகுக என ஆன்மாவின் பொருட்டே விரும்பப்படுகின்றது, ஆதலின் அன்னிய சேஷத்தன்மையை விடுவது யாங்ஙனம் எனின். அது சரியன்று புத்திராதியரால் தனக்கு சுகமுண்டாவது போன்று சுகத்தால் வேறே யாதொரு இஷ்டமுமுண்டாவதின்றும். அங்ஙனம் உற்பன்னமாயின் சுகம் ஆன்மாவின் பொருட்டு எனக்கூறலாம், உற்பன்னமாகாமையின் சுகம் ஆன்ம சேஷமன்றும்.

சுகம் ஆன்ம சம்பந்தித்தன்மையாலேயே இச்சைக்கு விஷயமாம் என்பதும் சரியன்று. ஆன்மசம்பந்தித்தன்மை துக்காதிக்கும் இருத்தலின் சுகப்பிரீதிக்கு ஏதுவன்றும், ஆண்டு ஆன்மசம்பந்தி சுகத்தன்மை பிரீதிக்கு ஏதுவாம் என்பதும் சரியன்று. லாகவத்தால் சுகத்தன்மை மாத்திரமே யாண்டும் பிரீதிக்கு நிமித்தமாம் ஆதலின். சுகம் ஏகமேயாதலின் * எனக்குச் சுகமுண்டாகுக என்னும் அபிலாஷை எங்ஙனம் கூடும் என்னற்க. எனக்குப் பிரத்தியக்ஷ சுகமுண்டாகுக என்பதுதான் எனக்குச் சுகமுண்டாகுக என்பதனுல் விரும்பப்படுகின்றது. சுகவியக்தி ஏகமாதலின் வியாவர்த்தியமாக அன்னியமொன்றுமின்மையின்.

பிரத்தியக்ஷமோ அஞ்ஞாத பிரம்மவடிவ சுகாதியின் வியாவர்த்தகமாம். ஆதலின் அந்த பிரத்தியக்ஷ சுகமே எனக்கு என விசேஷிக்கப்படுகிறது. ஞாயமான (அறியப்படுகின்ற) சுகமே புருஷார்த்தமாகக் கருதப்படுகின்றது. ஆகலின் கூறிய தோஷமின்றும். என்னுடைய என்னும் விருத்திக்கு விஷயமான அகங்கார விசிஷ்ட ஆன்ம வடிவ சுகத்தினும் கேவலம் சுகம் அன்னியமாதலின், என்னுடையது என்னுந்தன்மையும் அறியப்படுகின்றதாகவே உள்ளது. ஆயினும் அது இச்சைக்கு ஏதுவாக ஆவதின்று என்பது கருத்து. (24)

* சத்துருவின் சுகமும் தனது பிரீதிக்கு விஷயமாதல் வேண்டுமென்னும் அதிப்பிரசங்கமின்றும். யாண்டும் சுகம் ஏகமேயாயின்

## அவதாரிகை

மற்றும் ஆன்மா சுகவடிவம். நிருபாதிகப்பிரேமைக்கு விஷயமாவதால், எஃதிங்ஙனமன்றோ அஃதங்ஙனமன்று. துக்காதியைப் போன்று என வேறனுமானத்தைக்கூறுகின்றார்:—

## சுலோகம்

प्रेमाऽनुपाधिरसुखात्मनि नोपलब्धः
स प्रत्यगात्मनि कृमेरपि नित्यसिद्धः ।
प्रेयःश्रुतेरपि ततः सुखतानुमानं
नैय्यायिकोऽपि न दृगात्मनि निह्नुवीत ॥ २५ ॥

## பதவுரை

**असुखात्मनि**-சுகத்தினும் வேறான கடாதியின் கண்

**अनुपाधिः प्रेमा**-நிருபாதிகமான பிரியம்

**न उपलब्धः**-காணப்படவில்லை (உண்டாவதில்லையென்பது பொருள்)

**प्रत्यगात्मनि**-அகங்கார ஸம்பந்தமற்றதும் அதன் சாக்ஷியுமான சைதன்னியத்தின் கண்ணே

**कृमेः अपि**--அத்தியந்தம் தாழ்வான புழுமுதலியவற்றிற்கும்

**सः नित्यसिद्धः**-அந் நிருபாதிகப் பிரியம், எப்போதும் சித்தித்துள்ளது

**प्रेयःश्रुतेः अपि**- அந்த இவ்வான்மா புத்திராதியினும் பிரியமென்பதாதி சுருதியினாலும் ஆன்மாவில் நிருபாதிகப் பிரேமை சித்தமாம்

**ततः**-அதனால் நிருபாதிகப் பிரேமைக்கு விஷயமாந்தன்மை வடிவ லிங்கத்தால்

**दृगात्मनि**-ஞானவடிவ பிரத்தியகான்மாவின் கண்

**सुखतानुमानम्**–சுக வடிவத் தன்மையின் யாதொரு அனுமான முண்டோ அதனை

**नैयायिकः अपि**–நையாயிகனும் கூட

**न निह्नुवीत**–நிராகரிக்கும் ஆற்றலுடையவனன்று

## *விசேஷவுரை*

நிருபாதிகமான–என்பதற்கு அன்னியத்தின் அதீனமன்றென்பது பொருள். புழுவிற்குங்கூட என்னும் சப்தத்தால் மிகுந்த துக்கமுள்ள தாழ்வான பிராணிகளுக்கும் ஆன்மாவின் கண்ணே பிரியங் காணப் படுகிறது. ஆகலின் உயர்ந்த மனிதர் முதலிய பிராணிகளுக்கு பிரத்தியகான்மாவின் கண் பிரியமிருக்கின்றதென்று சொல்ல வேண்டுவ தென்னே என்பது சூசிப்பிக்கப்பட்டது. கிருமிகளுக்கும் தமது துக்கத்தைப் பரிகரிக்கும் பொருட்டு ஓடுதல் முதலியவற்றைக் காண்ட லால் தமது துக்கத்தின் கண் துவேஷம் அவசியம் இருக்கின்றது. அந்தத் துவேஷமும் தனது ஆன்மாவின் கண் அவைகளுக்குப் பிரேமை யின்றாயின் பொருந்தாது. உதாசீனமான அந்நிய மனுஷிய னுடைய துக்கத்தின் கண் துவேஷங் காணப்படாமையின் என்பது கருத்து.

அற்றேல் கிருமிகளுக்காவது மற்ற ஜந்துக்களுக்காவது ஆன் மாவின் கண் நிருபாதிகப்பிரேமை எப்படியுண்டாகும்? சித்தித்த வஸ்துவில் பிரேமை பொருந்தாமையின் என்றாசங்கித்து எல்லோரது அநுபவத்தால் சித்தித்த அந்தப் பிரேமை எவ்வாறு நிராகரிக்கத்தக்கதா மெனக் கூறுகின்றார். எப்போதும் சித்தித்துள்ளது என. எப்போதும் அநுபவ சித்தம் என்பது பொருள். தனம் புத்திரன் முதலிய சித்தித்த பதார்த்தத்தின் கண்ணும் புத்திராதியாலுண்டாகும் உபகாரத்தைக் கருதாத பிதா முதலானோருக்கும் பிரேமை காணப் படுகின்றதல்லவா. இவ்வாறு நிரதிசய சுகசொரூப ஆன்மாவின் கண்ணும் பிரேமை விருத்தமின்றாம் என்பது பொருள்.

மேலும் **"तदेतत्प्रेयः पुत्रात्प्रेयो वित्तात्"** (பிரு 1–4–8) 'அந்த இவ்வான்மா புத்திரனினும் பிரியமாம், தனத்தினும் பிரியமாம்,' என்னும் பிரகதாரண்ய சுருதியினாலும், நித்திய சித்த ஆன்மாவின் கண் பிரேமை

சித்தித்தது எனக்கூறுகின்றார் புத்திராதியினும் பிரியமென. அதனால் (ततः)—வியாப்தியுடைய ஏதுவிற்கு பக்ஷவிருத்தித்தன்மையால், நையாயிகனும் என்ற உம்மையால் மீமாம்சகன் முதலியோரைக்கொள்க நையாயிகனே அநுமானத்திற்கு வியாப்தியும் பக்ஷதருமத் தன்மையும் என இரண்டு அங்கங்களைக் கூறுகின்றான். ஆதலின் தனக்குச் சம்மதமான இரண்டு அங்கங்களோடு கூடிய ஆன்மாவின் சுகத் தன்மையின் அநுமானத்தை நிராகரிக்கமாட்டான். சுருதியைப் பிரதான மாக வுடைய மீமாம்சகர் முதலியோர் நிராகரிக்கமாட்டார் என சொல்ல வேண்டியது என்னை என்பது கருத்து.

நான் துக்கியென ஆன்மாவின் கண் துக்கித் தன்மையை கிரகிக் கின்ற பிரத்தியக்ஷத்தால் ஆன்மாவில் சுகத் தன்மையைச் சாதிக்கும் அநுமானத்திற்கு பாதமாம் என்று சொல்லற்க.

துக்கித்தன்மை முதலியன புத்தி முதலிய உபாதி தருமங்களாம் ஆன்மாவின் கண் வாஸ்தவமாக இன்றும், பிராந்தியால் பிரதீதி யாகின்றன. ஆதலால் ஞானவடிவ ஆன்மாவின் கண் சுகத்தன்மையின் அநுமானத்திற்கு துக்க விஷயகப் பிரத்தியக்ஷத்தினும் பின்ன விஷயகத் தன்மை யுண்மையின் பாதமின்றாம். என்று கூறுகின்றார் ஞானவடிவ பிரத்தியகான்மாவின் கண் என.

## அவதாரிகை

பிரத்தியக்ஷ லிங்க வசனனி என்னும் சுலோகத்தால் கூறப்பட்ட பிரத்தியக்ஷமும் அநுமானமும் தெரிசிப்பிக்கப்பட்டது. இப்போது வசன சப்தத்தாற் சொல்லப்பட்ட சுருதியையும் ஆன்ம சுகத் தன்மையில் பிரமாணமாகக் கூறுகின்றார்:—

## சுலோகம்

आनन्दविग्रहमपास्तसमस्तदुःखं
वस्तुस्वभावपरिवर्जितसर्वभेदम् ।
आत्मानमध्ययनविध्यनुसारिणस्तं
प्रत्यक्षतः श्रुतिशिरःसु समामनन्ति ॥ २६ ॥

## பதவுரை

**अध्ययनविधनुसारिणः** — அத்தியயன விதியையனுசரித்து தனது வேத முழுதையும் அத்தியயனஞ் செய்த அதிகாரிகள்

**श्रुतिशिरःसु**—உபநிஷத்துக்களில்

**तं आत्मानम्**—பிரத்தியக்ஷ அநுமானங்களால் எல்லானந்தவடிவ அன்மாசித்தித்ததோ அந்த ஆன்மாவை

**आनन्दविग्रहम्**—ஆனந்தவடிவமாகவும்

**अपास्तसमस्तदुःखम्**—சர்வதுக்கமும் அற்றதாகவும்

**वस्तुस्वभाव**—அசங்க அத்துவிதீயப் பிரம்மசுபாவத்தால்

**परिवर्जितसर्वभेदम्**—சஜாதீயம் முதலிய சர்வபேதமின்றியதாகவும்

**प्रत्यक्षतः**-பிரதிபாதிக்கின்ற பிரத்தியக்ஷ வாக்கியங்களை

**समामनन्ति**—படிக்கின்றார்கள்

## விசேஷவுரை

சர்வதுக்கமும் அற்றது என்பதனால் பிரத்தியகான்மாவிற்கு புத்திசாலிகளான முமுக்ஷுக்களால் கொள்ளத்தக்கதாந்தன்மை சூசிப்பிக்கப்பட்டது. அற்றேல் துவைதத்தோடு கூடிய ஜீவனிடத்து "**नाल्पे सुखमस्ति**" (சா—7—23—1) அற்பத்தின்கண் சுகமில்லை என்னும் சாந்தோக்கிய சுருதியால் சுகம் நிஷேதிக்கப்படுதலால் அவனுக்கு ஆனந்த வடிவத்தன்மை எப்படிப்பொருந்தும் என்னுமிடத்துக் கூறுகின்றார்— அசங்க அத்துவிதீய என. ஜீவனுடைய வடிவம் பிரபஞ்ச சகிதமாகத் தோற்றுகின்றது. அப்படியாயினும் "**यत्र नान्यत्पश्यति नान्यच्छृणोति**" எதன்கண் அன்னியத்தைக் காண்கின்றதில்லையோ அன்னியத்தைக் கேட்கிறதில்லையோ என்பது முதலிய சுருதியால் சித்தித்த அத்துவயப் பிரம்மமே அவனுக்கு வாஸ்தவ வடிவமாதலின் அற்பனன்று. அதாவது சுகத்தை நிஷேதிக்குஞ் சுருதிக்கு இவன் விஷயமன்று என்பது கருத்து.

அற்றேல் சொர்க்ககாமன் என்பது முதலிய வாக்கியத்தால் சுகமுடையதாந்தன்மையே ஆன்மாவிற்கு சித்திக்கிறது. சுகவடிவத் தன்மையன்றும் என்னுமிடத்துக் கூறுகின்றார் ' அத்தியயன ' என.

தனது வேதம் அத்தியயனஞ்செய்யத்தக்கது என்னும் விதியானது வேத சத்தத்தால் பிரதீதியாகின்ற சம்பூர்ணமான தனது சாகையின் அத்தியயனத்தை விதிக்கின்றது. கருமகாண்டமாத்திரத்தின் அத்திய யனத்தையன்றும். இவ்வாறாகவே உபநிஷத்தை அத்தியயனம் பண்ணினவர்களான சாதன சதுஷ்டய சம்பன்னர்கள் தனது சாகையின் கண்ணுள்ள வாக்கியங்களைப் படிக்கின்றார்கள்.

அஃது வருமாறு " **न लिप्यते लोकदुःखेन बाह्यः** (क–2–5–11) சரீர சம்பந்தமான துக்கத்தால் ஆன்மா பற்றப்படுகிறதில்லை தேகசம்பந்த மற்றவன் **'योऽशनाया पिपासे शोकं मोहं जरां मृत्युमत्येति'** (बृ 3-5-1) எவ்வான்மா பசி தாகம் சோகம் மோகம் ஜரைமரணம் ஆகிய தருமங்க ளற்றதோ " **विज्ञानमानन्दं ब्रह्म** (बृ 4–3–ब्रा) பிரம்மம் விஞ்ஞான ஆனந்த வடிவமாம். **एषोऽस्य परम आनन्दः** இவனுக்கு இது பரம ஆனந்த வடிவம் " **यो वै भूमा तत्सुखम्** " (छां–7–23–1) எது வியாபகமோ அது சுகமாம், என்பது முதலிய ஆன்மாவிற்கு ஆனந்த வடிவத்தைப் பிரதிபாதிக்கின்ற பிரத்தியக்ஷ வாக்கியங்களைப் படிக் கின்றனர். படிக்கப்படுகின்ற வேதாந்த வாக்கியத்தால் நிர்த்துக்க நித்திய சுகவடிவமும் ஞானவடிவமும் வியாபக வடிவமுமாக ஆன்மாவை யறிகின்றனர் என்பது பொருள்.

அல்லது வேதங்களில் ஊஷரபூமிக்குச்சமானமாக சாரமற்றவையாய் இருப்பவை வேதாந்தங்களாம் என்னும் மதத்தினால் அவைகளுக்குப் பொருளின்மையின் அவற்றால் ஆனந்தாதி வடிவம் சித்திப்பதின்றும் என்றாசங்கித்து அத்தியயனவிதி திருஷ்டப்பிரயோஜனமுடையதாதலின் கருமகாண்ட வாக்கியம்போன்று அவைகளுக்கும் பொருளுடையதாந் தன்மையை நீக்கமுடியாதெனக்கூறுகின்றார். அத்தியயன என,

இது கூறப்பட்டதாகவாகின்றது ' அநித்த ஜட விரோதி ' என்னும் முதற்சுலோகத்தின் கண் ஆன்மா ஜட அகங்காரத்தினும் விலக்ஷணசித்து ரூபமாமெனக் கூறி வந்துளேம்என்.

அற்றேல் கூறியது வாஸ்தவந்தான் ஆண்டுச் சித்ரூபமாத்மா எனக் கூறியதே பொருந்தாது. ஞானத்திற்கு அநித்தியத்தன்மையுண்மையின் எனின் அற்றன்று ஞானபதவாச்சிய (அந்தக்கரண) விருத்திக்கு அநித்தியத்தன்மையிருப்பினும் அதன் ஆசிரய சாக்ஷி சைதன்னியத்திற்கு அநித்தியத்தன்மையின்மையின். அஃதாமாறு தேவதத்தன் முதலானேருக்கு சுகதுக்காதிகளின் சாக்ஷாத்காரமிருக்கின்றது. அச் சாக்ஷாத்காரம் கடசாக்ஷாத்காரம் நேத்திராதியால் உண்டாவதுபோன்று ஏதேனும் ஓர் கரணத்தால் உண்டாவதின்றும், அதில் பிரமாண மின்மையின்

சுகாதியின் உபலப்தி கரணஜன்னியம், கிரியையாதலால் உருவ ஞானம் போன்று, என அதன் கரணமாக மனம் சித்திக்கின்றது என்று கூறற்க. சுகசாக்ஷாத்காரத்தில் கிரியைத்தன்மை அசித்தமாதலின். சுக உபலப்தியின்கண் சாக்ஷாத்காரத்தன்மை ஏதுவால் கிரியைத்தன்மை சித்தமாமென்னற்க. உபலப்திக்கு நித்தியத்தன்மையை யொப்பிடினும் சாக்ஷாத்காரத்தன்மை பொருந்துதலின்.

மேலும் சுகாதியின் உற்பத்தி காலத்தில் உண்டாகும் அதன் ஞானத்திற்கு அக்காலத்தில் விஷயத்தில் ஆசத்தியுற்றிருக்கின்ற மனே ஜன்னியத்தன்மை பொருந்தாது.

இரண்டாவது க்ஷணத்திலேதான் சுகாதியின் ஞானமாம் என்பதும் சரியன்று. பிரமாணமின்மையினுலும் முதற்கணத்தின்கண் அஞ்ஞாத சுகத்தின் இருப்பின்கண் பிரமாணமும் பிரயோஜனமுமின்மையினுலும். இரண்டாவது கணத்தின் கண்ணும் சுகாதியையுண்டுபண்ணுகின்ற மனதின் சையோகத்திற்கு (சுகாதியின் உற்பத்தியினுலே) அன்னியதாசித்தத்தன்மையுண்மையினுல் அதனுல் அதன் ஞானம் சம்பவியாமையாலும். விஷயத்தின் அசமவாயிகாரணத்திற்கு ஞானத்தின் அசமவாயிகாரணத்தன்மை ஓரிடத்தும் காணப்படவுமில்லை. பிரகிருதத்தில் விஷயம் சுகாதி. அசமவாயிகாரணம் மனதின் சையோகமாம். சுகத்தின் அசமவாயிகாரண சையோகத்தினும் வேருன சையோகத்தைக் கற்பிக்கினும் அசமவாயிகாரண நாசத்தால் நசித்துப்போன சுகாதிகளின் அநுபவம் சம்பவியாமையானும்.

அப்படியாயின் சுகஞானம் உற்பன்னமாயிற்று நஷ்டமாயிற்று என்னும் அநுபவம் எவ்வாறு பொருந்துமெனின்

சுகாதியின் திதிகாலத்தில் சுகஞானத்தின் உற்பத்திவிநாசங்களின் அநுபவமின்ரும். எதனுல் ஞானத்தின்கண் தனியே உற்பத்தியாதி சித்திக்கும். சுகாதியின் உற்பத்தியாதி காலத்தில் சுகஞானத்தின் உற்பத்திநாசங்களின் அநுபவத்திற்கு சுகாதியின் உற்பத்தியாதிகளை விஷயமாகவுடையதாந்தன்மையால் அந்நியதாசித்தத்தன்மை யுண்மையின். ஞானத்தின் உற்பத்தியாதிகளைச் சாதிக்குந்தன்மையின்ரும். ஆதலால் சுகாதியினுல் உபலக்ஷிக்கப்பட்ட அவ்வவ்வநுபவம் துக்காதி சமயத்தும் இருத்தலின். அதனையுற்பத்தி செய்யுங்கரணத்தினை நிரூபிக்கமுடியாமையால் சுகாதி விசிஷ்ட அதன் உற்பத்தியாதி அன்னியதாசித்தமாதலினுல் சுகாநுபவத்தின் உற்பத்தியாதியின்றேயாம்.

இவ்வாறு சுகாதியின் பேதாநுபவமும் உபாதிபேதத்தானேயே பேதமாம். ஆகவே அபாதித லாகவத்தால் சுகதுக்காதி விஷயகாநுபவம் ஒன்றேயாம். அவ்வநுபவமே அன்னிய புருஷனுடைய சுகாதிக்கும் சாதகமாம். ஆதலின் சகத்துமாத்திரத்திற்குச் சாதகமான சைதன்னியம் ஒன்றேயாம். அச்சேதனமே கடாதிகளையும் பிரகாசஞ்செய்வதாதலின் அச்சைதன்னியமும் சுருதி சித்த ஆன்மவடிவமேயாம். சைதன்னியத்தோடு ஆன்மாவின் அபேதத்திற்குப் பாதகமின்மையின், ஆதலின் ஞானவடிவமே ஆன்மாவாம்.

இவ்வாறு கூறிய அநுமானத்தால் (பிரத்தியக்ஷாதி பிரமாணத்தால்) ஆன்மாவிற்கு ஆனந்தத்தன்மை சித்திக்கவே ஆனந்தத்திற்கு துக்க விரோதித் தன்மையுண்மையின் நிர்த்துக்கத்துவமும். ஆன்மாவிற்கு அநித்தியத்தன்மை பொருந்தாமையின் நித்தியத்துவமும் சித்தித்தது ஆதலின் நிர்த்துக்க நித்தியஞான சுகவடிவம் ஆன்மாவாம்.

இவ்வாறு சர்வப்பிரபஞ்சத்திற்கும் திருசியத்தன்மையாலும் இனி கூறப்படும் நியாயத்தாலும் அநிர்வசனீயத்தன்மை சித்திக்கவே ஆன்மா சஜாதீயாதி பேதசூனியமாம், ஆதலின் சுலோகத்திற்கூறிய விசேஷணங்களோடு கூடி ஆன்மாவின் சித்தியாம். இவ்வானந்தாதி விசேஷணமும் வேதாந்த வேத்திய சமஸ்த சொரூபத்திற்கும் உபலக்ஷணமாகக் கூறப்

பட்டது. ஆனந்தாதி வடிவ ஆன்மாவின்கண் ஜடப்பிரபஞ்சம் வாஸ்தவமாக எப்படிச்சம்பவிக்கும்.

ஜடப்பிரபஞ்சம் சம்பவியாதாயின் பிரபஞ்சத்தின் அநுபவம் எவ்வாறு கூடும் எனின் அத்தியாசத்தாலாம். எது அசம்பாவிதமும் அநுபவசித்தமும் ஆமோ அது அத்தியாசத்தாலேயாம் என்னும் நியமமிருத்தலின். (26)

## காரண சகித அத்தியாசத்தை நிரூபித்தல்

### அவதாரிகை

அற்றேல் பிரபஞ்சம் அத்தியஸ்தமன்றும். பாதகமின்மையின், சுத்தியாதியின்கண் இரஜதாதிக்குப்போன்று பாதகமின்றுதலின் என்று சங்கித்து பிரபஞ்சத்தின்கண் அத்தியஸ்தத்தன்மையைக் கிரகிக்கும் பிரமாணமே பிரபஞ்சத்தைப் பாதிப்பதாமெனக் கூறுகின்றார்.

### சுலோகம்

अध्यस्तमल्पवपुरस्य न वास्तवं तत्
प्रत्यक्पराग्द्वयमिदं हि परस्परस्मिन् ।
अध्यस्ततां प्रति समर्थमबोधमात्र-
मन्योन्यरूपमिथुनीकरणे निमित्तम् ॥

### பதவுரை

**अस्य**—வியாபக வடிவ இவ்வான்மாவிற்கு

**अल्पवपुः**—அகங்காராதி பரிச்சின்ன வடிவம் அதாவது தேகம்

**अध्यस्तम्**—ஆரோபிதமாம்

பாகிய ஆத்தியான்மிகப் பிரபஞ்சம் அத்தியஸ்தமாம். அல்லது வாஸ்தவமன்று. பரிச்சின்னமாதலால் சுத்திரஜதம் போன்று. என்னுங் க்ருத்தாற் பரிச்சின்ன வடிவம் எனப்பட்டது. இவ்வான்மாவிற்கு அகங்காராதிப் பிரபஞ்சம் தேகம் போன்றிருத்தலின் தேகமாம். அதாவது எப்படிப் பிரசித்த தேகம் தன்னினும் வேறான ஆன்மாவை

தனது வடிவத்தால் நிரூபிக்கின்றதாய் வியாவிருத்தி செய்கின்றதோ அப்படி அகங்காராதியும் சச்சிதானந்த ஆன்மாவைத் தனது ரூபத்தால் தோற்றுவிக்கின்றதாதலின் தேகமாம். இந்த் தேக சப்தமானது அத்தியஸ்தத் தன்மையின் திடத்தன்மையின் பொருட்டுக் கூறப்பட்டது.

[ அற்றேல் அத்தியஸ்தமாயினும் சுத்திரஜதாதி சத்தியமேயாம் என்னுமிடத்துக்கு கூறுகின்றார். ]

**न वास्तवम्** –( சுத்திரஜதாதி ) யதார்த்தமன்று.
இனிக் கூறப்படும் ரீதியினால் அதற்கு அநிர்வசனீயத் தன்மையைச் சாதித்தமையின் என்று பொருள்.

[ அற்றேல் கடமிருக்கின்றது என்பது முதலிய பிரதீதிக்கு விரோத மாவதால் இவ்வனுமானம் சரி யன்று என்றாசங்கித்து அதிஷ்டான மின்றி அத்தியாசம் பொருந்தாமையின் சச்சித்வடிவ ஆன்மாவிற்கே பிரபஞ்சாத்தியாசத்தின் அதிஷ்டானத்தன்மை சொல்லவேண்டும். அதனால் பிரபஞ்சத்திற்குச் சத்தியமும் அமிருதமும் என இருவடிவம் சித்திக்கின்றது. ஆகவே கடாதிப் பிரபஞ்சத்தின் கண் இருக்கின்றது என்னும் சத்விஷயக ஞானம் அதிஷ்டான விஷயகமாக அன்னியதா சித்தமாம் என்னுங்கருத்தாற் கூறுகின்றார். ]

**तत्** –அத்தியஸ்தமாகிய அவ்வற்ப வடிவம்

**प्रत्यक्परागद्वयम्** –ஆன்மா அனான்மா என்னுமிரண்டன் சமுதாய வடிவமாம்.

பிரபஞ்சத்தின்கண் பரிச்சின்னத் தன்மை வடிவ ஏது இருக்குக அத்தியஸ்தத் தன்மை வடிவ சாத்தியமில்லாதொழிக என வியபிசார சங்கையுண்டாகுங் காலத்து அதனைப் பாதிக்கும் அநுகூல தர்க்க வடிவப் பிரயோஜகமின்றாமென்று கூறற்க. பிரபஞ்சவிலக்ஷண அசங்க ஆன்மாவின்கண் பிரபஞ்சான்மகத் தன்மையானது அத்தியாசமின்றிச் சம்பவியாது என்னும் அநுகூல தர்க்கத்தைக் கூறி வந்தமையின்.

அல்லது [அற்றேல் பிராந்தி ஞானத்திற்கு அதிஷ்டானம் ஆரோபிதம் என்னுமிரண்டு அம்சங்களும் விஷயமாவதாகக் காணப்படுகின்றது. நான் என்னும் ஞானமோ ஏக ரூபமாம் திருஷ்டாவைமாத்திரம் விஷயஞ்

செய்வது அது எவ்வாறு அத்தியாசமாம் என்றுசங்கித்துக் கூறுகின்றார்.]

**प्रत्यक्परागद्वयम्** – ஆன்ம அநான்மாவென்னுமிரண்டின் சமுதாய வடிவமாம்.

நான் என்னும் அனுபவத்தின் கண்ணும் நன்றாய் விசாரித்துப் பார்க்கின் திருக்குரூபத்தால் பிரத்தியகான்மாவினம்சமும் திருசிய ரூபத்தால் பராக்கினம்சமும் விளங்குகின்றது. பிரத்தியக்கும் பராக்குமாகிய அதற்குத் தப்தாயபிண்டம் போன்று விருத்த உபயான் மகத்தன்மையுண்மையின் அத்தியாசமின்றி ஏகத்தன்மையின் ஞானம் சம்பவியாமையின்.

**इदम्** – பிரத்தியக்பராக் என்னும் உபய வடிவம்

**परस्परस्मिन्** – பரஸ்பரத்தில் பரஸ்பரான்மகத் தன்மையால்

**अध्यस्तताम् प्रति** – அத்தியாசமாதற்கு

**समर्थम्** – யோக்கியமாம். சூசகமாமென்பது பொருள்

[ அற்றேல் பிரத்தியகான்மாவிற்கும் பராக்வடிவ திருசியத்திற்கும் சாதிருசிய மின்மையினாலும் விசுத்த ஆன்மாவின்கண் தோஷம் சம்பவியாமையாலும் ஆரோப்ய வஸ்துவின் அநுபவம் முன்பின்மையால் சம்ஸ்காரமின்மையினாலும் பரஸ்பராத்தியாசம் எப்படிக் கூடும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

**अन्योन्यरूप-मिथुनीकरणे** – பரஸ்பர அர்த்தாத்தியாசத்தின் கண்ணும் ஞானத்தியாசத்தின் கண்ணும்

**अबोधमात्रम् हि** – ஒரு அஞ்ஞானமே

**निमित्तम्** – காரணமாம்

## *விசேஷவுரை*

சாமான்யரூபத்தால் விளங்கினும் அதிஷ்டானத்தின் விசேஷவுஞ் ஞானமே யாண்டும் அத்தியாசத்திற்கு நிறைவுற்ற (அவ்வியபிசாரி) காரணமாம் அவ்வஞ்ஞானம் ஆன்மாவின்கண் அநுபவசித்தமாதலின் அத்தியாசத்தில் சாமக்கிரியின் குறைவு இன்றாமென்பது பொருள்.

பிரத்தியக் பராக்வடிவம் அன்னியோன்னியான்மகமாயும் அன்னியோன்னிய தருமமுடையதாயும் அத்தியஸ்தமாம் அதனது மிதுனீகரணமென்பது ஞானத்தியாசமாம். பிரத்தியக் பராக்கென்னும் அவ்விரண்டினுலும் வளைபட்ட ஓர் ஞானமென்பது பொருள். அசம்சர்க்கத்தின் அக்கிரகணத்திற்குக் காரணத்தன்மையை அங்கீகரியாமையின். அர்த்தாத்தியாச ஞானத்தியாசமாகிய இரண்டிடத்தும் அஞ்ஞானமே நிமித்தமாம் என்பது கருத்து.

அக்காரணத்தால் பிரத்தியகான்மாவின் அஞ்ஞானமே புத்தியாதி அர்த்த வடிவத்தாலும் அதிஷ்டானம் ஆரோப்யமென்னும் இரண்டன் விஷயக ஞானவடிவத்தாலும் பரிணமிக்கின்றதாய் நான் என சாக்ஷிக்கு விஷயமாம். அது முன்னோர்களாலும் கூறப்பட்டுளது.

" அவித்தையே பாஹ்யதோஷத்தையபேக்ஷித்து இரஜதாதி வடிவத்தாலும் சாக்ஷிசைதன்னிய சம்பந்தி ரஜதவிஷயக ஞானவடிவத்தாலும் பரிணமிக்கின்றதாகி தனது காரியத்தோடுகூட சாக்ஷிவிஷயத்தன்மையையடைகின்றது " என.

இதன் பொருள் :–தோஷத்தோடுகூடிய இந்திரியத்திற்கு சுத்தியின் சம்பந்தத்தால் இது என்னும் ஆகாரமாக பிரமாண விருத்தியுண்டாகிறது. அவ்விருத்தியின்கண் பிரதிபலித்த சுத்தித்தன்மையால் அவச்சின்னமான சைதன்னியத்தின் கண்ணுள்ள சுத்தித்தன்மையின் அஞ்ஞானம் ராகம் சம்ஸ்காரம் முதலியவற்றோடு கூடியதாகி சுத்தியோடு மித்தியா தாதான்மியத்தையடைந்துள்ள இரஜத வடிவத்தால் பரிணமிக்கின்றது. இதமாகார விருத்தியவச்சின்ன சித்தின் கண்ணுள்ள சுத்தி விஷயக அஞ்ஞானமோ ஞானத்தின் சம்ஸ்காரத்தால் சஹகரிக்கப்பட்டதாகி சாக்ஷியோடு ரஜதத்திற்கு சம்பந்தத்தைச் சம்பாதிக்கின்ற ரஜதஞான வடிவத்தால் பரிணமிக்கின்றது. அவித்தையின் பரிணும வடிவ அந்த ஞானமும் ஜடமாதலின் தனது விஷயத்தின் சாதக (பிரகாசக) மன்றும், ஆதலின் காரியத்தோடுகூட அஞ்ஞானம் சாக்ஷிக்கு விஷயமாம்.

ஈண்டு சிலர் சங்கிக்கின்றனர் அதாவது இரஜதஞானவடிவ அவித்தையின் விருத்தி எற்றிற்கு. அஃதின்றியும் இதமாகார விருத்தியினுல் அபிவியக்தமான சாக்ஷியினுலேயே ரஜதத்தின் விளக்கம்

பொருந்துதலின். அத்தியஸ்த ரஜதாதி – பிரமாணத்திற்கு விஷய மாகாமையால் ஆவரணமின்றியதாயிருத்தலின். ஆவரண நிவர்த்தியின் பொருட்டாவது சித்தின் உபராகத்தின் பொருட்டாவது விருத்தியை வேறிடங்களில் அங்கீகரித்தலின். இதனாலேயே ஞான சுகாதியின்கண் வேறு விருத்தி அங்கீகரிக்கப்படுகின்றதில்லை. அவைகளுக்கு அநாவிருத சாக்ஷி சைதன்யத்தின் கண் அத்தியஸ்தத்தன்மை யுண்மையானேயே விளக்கம் சம்பவித்தலின். அநாவிருத சாக்ஷி சைதன்னியத்தானே ஞான சுகாதிகளுக்கு பானத்தை யொப்பாவிடின் விருத்தியின் கண்ணும் வேறு விருத்தியை யபேக்ஷிக்கின் அநவஸ்தைப் பிராப்தியாம். இரஜத விஷயக சம்ஸ்காரத்தின் பொருட்டு விருத்தி வேண்டியதா மென்னற்க.

சுகாதி விசிஷ்ட சைதன்னிய நாசத்தாலேயே சுகாதி விஷயக சம்ஸ்காரம் உண்டாவதுபோன்று இரஜத விசிஷ்ட சித்தின் நாசத்தாலேயே இரஜத விஷயக சம்ஸ்காரத்தின் உற்பத்தி பொருந்துதலின். சுகாதியின் கண்ணும் அருத்த நாச ஜன்னிய சம்ஸ்காரம் ஸ்மிருதிக்கு ஏதுவாகாமை யின் விருத்தி சித்தியாம் என்று சொல்லற்க.

சுகாதி தலத்தின் கண்ணேயே அருத்த நாச ஜன்னிய சம்ஸ்காரத் திற்கு ஸ்மிருதியின் ஏதுத் தன்மையைக் கற்பித்தலின். வேறு விருத்தி வடிவ தருமி கற்பனையை யபேக்ஷித்து ஸ்மிருதியின் ஏதுத்தன்மை வடிவ தரும மாத்திரத்தைக் கற்பித்தலில் இலகுத் தன்மை யுண்மை யானும். ஞான ஜன்னிய சம்ஸ்காரத்திற்கு அருத்த ஏதுத்தன்மை இன்றுமென்பதும் சரியன்று. அன்வய வியதிரேகங்களால் ஈண்டே அதனைக் கற்பித்தலின் இக்காரணத்தானேயே ரஜதம் பிராதீதிகமாம், தோஷத்திற்கும் ஆவஸ்யக ரஜதாதியை யுண்டுபண்ணுந் தன்மை யாலேயே பொருளுடைய தாந்தன்மையாம். என சிலர் சங்கிக்கின்றனர் என மேல் ஒட்டுக.

ஈண்டு சமாதானங் கூறப்படுகின்றது –

அநாவிருத சாக்ஷி சைதன்னியத்தின் கண் அத்தியஸ்தத் தன்மை மாத்திரத்திற்கு ஜடபானத்தின் பிரயோஜகத் தன்மையை யங்கீகரிக்கின் அநுமிதி விஷய வன்னியாதிகளின் பானம் பொருந்தாது. ஆண்டு விஷயத்திலுள்ள ஆவரண நாசத்தை யங்கீகரியாமையின்.

அப்படியாயின் ஆண்டு வன்னியின் பானம் எவ்வாறும் எனின், அநுமிதி வடிவ விருத்தியால் அந்தக்கரண அவச்சேதமாக வன்னி விஷயக அஞ்ஞானம் நீங்குதலின். 'வன்னியை யான் அறியேன்' என்னும் அநுபவத்தால் வன்னியின் கண்ணும் ஆன்மாவின் கண்ணும் அஞ்ஞானம் சித்தித்தலின். அவ்விரண்டஞ்ஞானங்களுள் ஒரு அஞ்ஞானத்தின் நாசத்திற்கு வன்னி வியவகார ஏதுத்துவமாமென பின்னர் கூறப்படும். ஆதலால் அதனுகார விருத்தி விஷயத்துவமே அஸ்வச்ச *தாமஸ பதார்த்தங்களில் பானப் பிரயோஜகமாம், என அங்கீகரிக்கத்* தக்கது.

ஸ்வச்ச அந்தக்கரணம் சுகம் முதலியவற்றின் பானத்தின் கண்ணும் விருத்தியின்றியும் சாக்ஷிக்கு அதனுகாரத்தன்மை சம்பவித்தலால் சித்பிரதிபிம்ப ஆசிரயத்துவமும் பிரயோஜகமாம் ஆகவே ஜட பதார்த்தத்தின் பானத்தில் இரண்டே வழியாம். சைதன்னியம் எதனுகார விருத்தியில் பிரதிபிம்பிக்கின்றதோ அதனை விளக்குகின்றது பிரதிபிம்ப ஆசிரய விருத்தியாதிகளையும் விளக்குகிறது அவ்வாறு காணப்படுதலின்.

ஓரிடத்து விருத்தியும் ஓரிடத்து பிரதிபிம்பாசிரயத்துவமும் ஏதுவாதலின் காரணம் அநநுகமமாம் என்று கூறற்க. சர்வ ஜட பதார்த்தத்தின் பானத்தில் அநுகதமான சைதன்னியாகாரத்தன்மையையே பிரயோஜகமெனக் கூறுகின்றோம். சைதன்னிய மெதனுகாரமாகின்றதோ அது விளங்குகின்றதென்பது பொருள். சைதன்னியத்திற்கு ஜட பதார்த்தத்தின் ஆகாரத்தன்மை சொரூபத்தாலன்றும், அசங்கமாதலின்; மற்றோ சிலவிடத்து பிரதிபிம்ப வாயிலால் உண்டாம். சிலவிடத்து அதனுகார விருத்தி சம்பந்தத்தால் உண்டாம். அவற்றுள் சாத்விக அந்தக்கரணத்தின் கண்ணும், அதன் தர்மங்களான சுகாதிகளின் கண்ணும் பிரதிபிம்ப வாயிலாக அதனுகாரத்தன்மை சைதன்னியத்திற்கு உண்டாம். தாமச கடாதி பதார்த்தங்களில் அதன் ஆகாரவிருத்தி சம்பந்தத்தானேயே சைதன்னியத்திற்கு அதனுகாரத் தன்மையுண்டாம். இவ்வாறுகவே ரஜதாகாரவிருத்தியின்றி ரஜதத்தின் பானம் எங்ஙனம் கூடும் ? அஸ்வச்சமும் தமப்பிரதானமுமான அந்தியஸ்த ரஜதத்திற்குச் சித்தின் பிரதிபிம்பாசிரயத் தன்மையை யங்கீகரிப்பதும் பொருந்தமின்றும். அஸ்வச்ச ரஜத ஸம்ஸ்காரத்தோடு கூடிய அவித்தையினால்

ஆரம்பிக்கப்பட்ட தன்மையால் ரஜதம் அஸ்வச்சமாதலின். பரிசேஷத்தால் ரஜதாகார அவித்யாவிருத்தி சித்தித்தது. அற்றேல் பரோக்ஷஸ்தலத்தில் அதனுகார விருத்தி யேதுவாகுக. அபரோக்ஷ ஸ்தலத்திலோ அநாவிருதசித்தின் கண் அத்தியஸ்தத் தன்மை யேதுவாகுக. எனின் அற்றன்று. விருத்திவடிவ சாமானிய சாமக்கிரியின்றி சித்தின் அத்தியஸ்தத் தன்மை வடிவ விசேஷ சாமக்கிரிக்கு ஏதுத் தன்மை பொருந்தாமையின். ஆண்டும் அஸ்வச்ச நாமசமாத்திரத்தின் பானத்தில் ஏதுவாய விருத்தி விஷயத் தன்மை பரிகரிக்கத்தகாது. மேலும் ரஜதத்திற்கு விஷயாவச்சின்ன சாக்ஷி பாசிபத் தன்மையை யங்கீகரிக்கின் சுகாதி போன்று நான் ரஜதமுடையவனென்று பிரதீதி யுண்டாதல்வேண்டும். நான் ரஜத ஞானமுடையவனென்று பிரதீதி யுண்டாகலாகாது. மேலும் உன்னுடைய மதத்தில் அர்த்த சம்ஸ்காரத்திற்கு ஸ்மிருதி ஏதுத் தன்மையும் ஞான சாமக்கிரிக்கு அர்த்த ஏதுத் தன்மையும் அப்பிரசித்த கற்பனையாம். ஆதலின் கௌரவம். பிராதீதிகத் தன்மையாவது பிரதீதிகாலத்தினும் அந்நியகாலத்தில் இல்லாமையாம். பிரதீதி ஜந்நியத்துவமன்றும். சம்ஸ்கார முதலியவற்றிற்கும் பிரதீதி ஜந்நியத்தன்மை யிருத்தலால் பிராதீதிகத் தன்மை பிராப்தியாம். ஆதலின் பிரதீதி சப்தத்தால் சாக்ஷியைக் கொள்ளலாமேயெனின்-சாக்ஷிகாலத்தினும் அன்னிய காலத்திற்குச் சம்பவமேயின்றும் ஆதலின் அவித்தையின் விருத்தியே ரஜத விஷயகப் பிரதீதியாம், சாக்ஷியன்று அற்றேல் உனக்கும் அவித்தையின் விருத்திக்கு ரஜதம் விஷயமாவதாலும் புத்தி விருத்திக்கு இதம் மாத்திரம் விஷய மாவதாலும் இச்சைக்கு விஷயமான இரஜத விசிட்ட புரோவர்த்தி (எதிரிலிருக்கின்ற) இதம் பதார்த்தத்தை விஷயஞ் செய்கின்றதான வேறொரு விருத்தியைப் பிரவிருத்திக் கேதுவாகக் கற்பிக்கவேண்டிவரும். ஆதலின் கௌரவமாமெனின் அற்றன்று.

ஓரிடத்திலிருக்கின்ற ஜலத்தின்கண்ணும் கண்ணாடியின்கண்ணும் ஒரே முகத்தின் பிரதிபிம்ப முண்டாவதுபோல பரஸ்பரம் தாதான்மியத்தை யடைந்துள்ளதும் சத்தியமித்தை வடிவமுமான சுத்தி ரஜத இருவஸ்துவிலும் ஒரே பிரதீதியை யங்கீகரித்தலால் சுத்தியோடு அபேதத்தை யடைந்துள்ள ரஜதஸ்புரண வடிவ பல சைதன்னியத்திற்கு ஏகத்தன்மையுண்மையின் இரஜத விருப்புடையோனுக்கு எதிர்

தேசத்தில் பிரவிருத்தி பொருந்துதலின், இது வியாக்கியானத்தின் சங்கிரகமாம். (27)

### அவதாரிகை

சாதிருசிய ஞான முதலியவற்றிற்கு அத்தியாச ஏதுத் தன்மையை வியபிசார தோஷத்தால் நிராகரிக்கின்றார்:—

### சுலோகம்

**सादृश्यधीप्रभृति न त्रितयं निमित्त-**
**मध्यासभूमिषु जगत्यनुगच्छतीदम् ।**
**ब्राह्मण्यजातिपरिकल्पनमात्मनीष्टं**
**जात्या न साम्यमुपलब्धमिहास्ति किंचित् ॥ २८ ॥**

### பதவுரை

**जगति**—இவ்வுலகின்கண்

**अध्यासभूमिषु**—அத்தியாஸ ஸ்தலங்களில்

**इदं सादृश्यधीप्रभृति**—இந்த சாதிருசிய ஞான முதலிய

**त्रितयं निमित्तम्**—மூன்று காரணங்களும்

**न अनुगच्छति**—தொடர்ந்து செல்லுவதின்றும்

ஏதுவாகக் கருதப்பட்டுள்ள சாதிருசிய ஞானம் தோஷம் சம்ஸ்காரம் என்னும் மூன்றும் சருவ அத்தியாசங்களிலும் அநுகதமாக இன்மையின் அத்தியாசத்திற்கு நிமித்தமன்றாம் என்பது பொருள்.

[சாதிருசிய ஞானத்திற்கு வியபிசார ஸ்தலத்தைக் கூறுகின்றார்.]

**आत्मनि**—ஆன்மாவின்கண்

**ब्राह्मण्यजाति परिकल्पनम्**—நான் பிராமணன் என பிராம்மணத் தன்மை ஜாதியினத்தியாசம்

**इष्टम्**—எல்லோருக்கும் சம்மதமாம்

ஆன்மாவின்கண் பிராம்மணத் தன்மை ஜாதியின் அத்தியாசத்தை யங்கீகரியாவிடின் "பிராமணன் யாகத்தைச் செய்க," "பிராமணனைக் கொல்லற்க" என்னும் விதி நிஷேத சாஸ்திரங்களின் வியவஸ்தை பொருந்தாமற்போம். ஆன்மாவின்கண் ஜாதியினத்தியாசத்தில் சாதிருசியமில்லை என்பது பொருள்.

[அற்றேல் ஆன்மாவில் சாதியினத்தியாசம் சாதிருசிய ஞானம் முதலிய மூன்றையும் நிமித்தமாகவுடையது, அத்தியாசத் தன்மையால் இரஜதாத்தியாசம் போன்று எனின் அற்றன்று எனக் கூறுகின்றார்.]

**इह**-இவ்வத்தியாசத்தின்கண் ஆன்மாவில்

**जात्या**-பிராம்மணத்தன்மை ஜாதியோடு

**किञ्चित् साम्यम्**-சமத்தன்மை அற்பமும்

**उपलभ्यम् न अस्ति**-அறியப்பட்டதாக இன்றும் ஆகலின்

ஆன்மாவின்கண் பிராம்மணத் தன்மை ஜாதியோடு சாதிருசியம் அநுபலப்திப் பிரமாணத்தால் பாதிதமாம். ஆன்மா, ஜாதி ஆகிய இரண்டிற்குமே சாதிருசியப் பிரயோஜந குணம் கிரியை அவயவம் இன்மையினாலும், "**न तस्य प्रतिमा**" ஆன்மாவிற்குச் சாதிருசிய மில்லை என்னும் சுருதியினாலும் என்க.

ஆதலால் இரஜதாதியத்தியாசங்களிலும் சாதிருசிய ஞானம் முதலிய மூன்றும் அர்த்தத்தால் பிராப்தமாம் அத்தியாச மாத்திரத்திற்கு அங்கமன்றும் என்பது கருத்து. (28)

### *அவதாரிகை*

அற்றேல் ஆன்மாவின் கண்ணும் பிரமேயத் தன்மை முதலிய வற்றால் சாதிருசியமிருக்கின்றது என்றுசங்கித்து அப்படிப்பட்ட சாதிருசியம் அத்தியாசப் பிரயோஜகமன்றும், எல்லாவற்றிற்கும் எல்லாவற்றோடும் பிரமேயத்தன்மை முதலியவற்றால் சாதிருசியமிருத்தலின் *அதிவியாப்தியாமாதலின் மற்றோ அதிக அவயவம் குணம் முதலிய

* *இங்கால (கரி) ஆதியின்கண் ரஜதாத்தியாசத்தின் பிராப்தியாமாதலின்,*

வற்ருல் சாதிருசியமே அத்தியாசப் பிரயோஜகமாம் இப்படிப்பட்ட சாதிருசியம் ஆன்மாவிற்கும் சாதிக்கும் இன்ருமெனக் கூறுகின்ருர் :—

**சுலோகம்**

**भूयस्त्ववत्तनुगुणावयवक्रियाणां**
**सामान्यपूगवपुरुक्तमिहाभियुक्तैः ।**
**सादृश्यवस्तु न चिदात्मनि किञ्चिदत्र**
**जात्यादिभिः सह निरीक्षितमस्ति तादृक् ॥ २९ ॥**

**பதவுரை**

**इह** – உலகில் 'கோ, கவயம்' முதலிய ஸ்தலங்களில்

**अभियुक्तैः** – ஜைமினிரிஷி முதலிய மஹானுபாவர்களால்

**तनुगुणावयव क्रियाणाम्** – பசு முதலியவற்றின் தேகத்தின் கண்ணுள்ள குணம், அவயவம், கிரியை என்னுமிவைகளின்

**भूयस्त्ववत्** – அதிகத் தன்மையினை யுடையதாகிய

**सामान्यपूगवपुः** – சாமான்ய சமூகமே சாதிருசியத்தின் வடிவமாம் என

**उक्तम्** – கூறப்பட்டுள்ளது

அதிகத் தன்மையினை யுடையது என்பது சாமான்ய சமூகமென்பதற்கு விசேஷணமாம். அநேக குண அவயவாதிகளுக்கு அநேக சாமான்ய வடிவம் என்பது பொருள்.

அல்லது ஈண்டு, கோ, கவயாதியின்கண் ஜைமினி முதலியோரால் சாமான்ய சமுதாயான்மக சாதிருசிய வஸ்து கூறப்பட்டது என்று அன்வயமாம். எவ்வியத்திகளுக்கு சாமான்ய சமுதாய வடிவசாதிருசியம் கூறப்பட்டது, என்னுமிடத்துக் கூறுகின்ருர் அதிகத் தன்மையினை யுடைய என,

கோ முதலிய வியக்தியிலுள்ள அதிக குணம் அதிக அவயவம் அதிகக் கிரியை என்னுமிவைகளுக்குக் கூறப்பட்டது, குணங்களுக்கு சுக்லத்தன்மை தீர்க்கத்தன்மை முதலியவைகள் சாமானியங்களாம். அவயவங்களுக்குப் பாதத்தன்மை பிருஷ்டத்தன்மை முதலியவை சாமானியங்களாம். கிரியைகளுக்கு கமனத்தன்மை பக்ஷணத்தன்மை சர்வணத்தன்மை முதலியவை சாமான்யங்களாம். இவைகளின் சமுதாயத்தினையே தேகமாகவுடையது என்று பொருள்.

நநு – என்னும் பாடத்தில் குணாதிகளுக்கு, பூயஸ்த்வம் – அதிகத் தன்மை, சாதிருசிய வஸ்துவாகக் கூறப்பட்டது என சுவார்த்தத்தில் வதிப்பிரத்தியயம் வியாக்கியானிக்கத்தக்கது.

[ அற்றேல் ஆன்மா ஆகாசம் போன்று " சர்வகதமும் நித்தியமுமா மென்னும் " வைதிகப் பிரயோகத்தாலும் அத்தியாசத்தின் அனுப பத்தியாலும் ஆன்மாவின்கண்ணும் சொற்ப சாதிருசியம் கற்பிக்கத் தக்கதாம் என்ருசங்கித்துக் கூறுகின்ருர்.]

**अत्र चिदात्मनि** – இந்தச் சிதாத்மாவின்கண்

**जात्यादिभिः सह** – பிராம்மணத்தன்மை ஜாதி முதலியவற்ருேடு

**तादृक्सादृश्यवस्तु** – அப்படிப்பட்ட சாதிருசிய பதார்த்தம்

**किञ्चित् निरीक्षितम्** –சொற்பமும் பார்க்கப்பட்டதாக

**न अस्ति**–இன்ருும்

நித்தியத்தன்மை சர்வகதத்தன்மை முதலியதும் ஜாதியோடு சாதி ருசியமன்ருும். பசு பசு என்னும் அநுகதப் பிரதீதிக்குக் காரணமான கோத்துவாதி ஜாதிக்கு அநித்தியத்தன்மையுண்மையானும் ஜாதியில் நித்தியத்தன்மைக்கு இருப்பின்மையானும் அசர்வகதத்தன்மையானும் என்பது கருத்து. (29)

## அவதாரிகை

தோஷத்திற்கு வியபிசாரஸ்தலத்தைக்கூறுகின்ருர் ;—

### சுலோகம்

**विषयकरणदोषान्न भ्रमः संविदि स्या-**
**दपितु भवति मोहात्केवलादेवमेव।**
**भगवति परमात्मन्यद्वितीये विचित्रा**
**द्वयमतिरियमस्तु भ्रान्तिरज्ञानहेतुः ॥ ३० ॥**

### பதவுரை

**संविदि** – பிரமாணத்தின் பயனுன கடாதிஞானத்தின் கண்

**भ्रमः** – நையாயிகர் முதலியோருக்குண்டாகும் வேத்தியத்தன்மை அநித்தியத்தன்மை முதலான யாதொரு பிராந்தியுண்டோ அஃது

**विषयकरणदोषात्** – சாதிருசியம் முதலிய விஷயதோஷத்தாலும் காசம் முதலிய கரணதோஷத்தாலும்

**न स्यात्** – சம்பவிக்கிறதில்லை

சம்வித் வடிவ ஞானத்திற்கு சொப்பிரகாசத்தன்மையினுல் அவிஷயத்தன்மையும் (அவேத்தியத்தன்மையும்) கரண அகோசரத் தன்மையும் உண்மையின் பிரமாதாவின் தோஷத்தானேயே உண்டாகுக எனின். அவ்வாருயின் தோஷாந்தரம் சம்பவியாமையான் பிரமாதா விஞலபிவியக்தமான அஞ்ஞானத்திஞலேயே உண்டாகிறது என்று கூற வேண்டும். அது எமக்கும் சம்மதமேயாம் எனக் கூறுகின்ருர்.

**अपितु** – மற்ருே

**केवलात् मोहात् एव** – கேவல அஞ்ஞானத்தானேயே

**भवति** – உண்டாகின்றது

அந்த ஞானத்தின்கண் அஞ்ஞான மாத்திரத்தால் ஜன்னியத் தன்மை சித்தித்தவழி. அதுபோலப் பிரகிருதத்தின் கண்ணும் அஞ்ஞான மாத்திர நிமித்தத்தன்மை சாதிக்கத்தக்கதாமெனக் கூறுகின்ருர்.

**एवम्** – எவ்வாறு சம்வித்தின்கண்ணே வேத்தியத்து வாதிஞானம் பிராந்தியாமோ அவ்வாறு

**अद्वितीये** – அத்விதீயமும்

**भगवति** – பகவானுமாகிய

**परमात्मनि** – பரமான்மாவின் கண்

**विचित्रा**–அநிர்வசநீயமான

**इयं द्वयमतिः**- இந்தத் தொய்த புத்தியானது

**भ्रान्तिः**–எதனுல் பிராந்தியாமோ அதனுல்

**अज्ञानहेतुः**–அஞ்ஞான மாத்திரத்தினை யேதுவாகவுடையதாக

**अस्तु**–இருக்குக

துவைத புத்தியின்கண் அஞ்ஞான ஜன்னியத் தன்மையில் யுக்தியைக் கூறுகின்ருர். அநிர்வசனீய என.

பின்னத்தன்மை, அபின்னத் தன்மை, சத்துவம், அசத்துவம் என்பது முதலிய வடிவத்தால் விசாரந்தைச் சகியாமையின் அநிர் வசனீயமாமென்பது பொருள். பிராந்தித் தன்மையின் சாதகத்தைக் கூறுகின்ருர். அத்துவிதீயத்தின்கண் துவைத புத்தியென. அஃதல்லாததின்கண் அஃது என்னும் புத்தி பிராந்தியாம்.

இது என்பதனுல் சாக்ஷி சித்தத் தன்மையைக் கூறினர் பகவான் என்பதனுல் மகா மகிமையை யுடையதாந் தன்மையினுல் பிரபஞ்சத்தை உண்டுபண்ணும் சாமர்த்தியம் சூசிப்பிக்கப்பட்டது. இருக்குக என்பது சாமர்தத்திய அர்த்தத்தில் லோட் ( வியங்கோள் ). பிராந்தி ஞானத்தில் அஞ்ஞான ஜன்னியத் தன்மையை சமர்த்தனம் செய்யக்கூடும் என்பது பொருள். இவ்வாறு சாதிருசியத்திற்குங் கரண தோஷத்திற்கும் அத்தியாசஸ்தலத்தில் வியபிசாரங் கூறப்பட்டது. சம்ஸ்காரமும் வியபிசாரியேயாம். சுக்தி ரஜதம் முதலியவற்றின் சம்பந்தம் முன்பு அநுபவிக்கப்படவில்லை ஆயினும் பிராந்தி ஞானத்திற்கு விஷயமாகின்ற தாதலின் இது ஸ்பஷ்டமாதலால் கிரந்தகாரரால் கூறப்படவில்லை. (30)

### அவதாரிகை

இவ்வாறு பரஸ்பர அத்தியாசமாயின் ஆன்மாவிற்கும் அனான்மாவின்கண் அத்தியஸ்தத்தன்மையால் பாத்தியத் தன்மையுண்மையின் அதிஷ்டானமின்றியதாய் ஜகத்து சூன்யமாகும். என்றாசங்கித்து அஞ்ஞாதமும், பாத அவதியும் அனத்தியஸ்தமுமான பிரம்ம தத்துவம் மிஞ்சுகின்றபடியால் கூறிய தோஷமின்றாம் என்னும் அபிப்பிராயங் கொண்டு கூறுகின்றார் :—

### சுலோகம்

संसिद्धा सविलासमोहविषये वस्तुन्यधिष्ठानगी-
नाधारेऽध्यसनस्य वस्तुनि ततोऽस्थाने महान्संभ्रमः ।
केषांचिन्महतामनूनतमसां निर्बन्धमात्राश्रया-
दन्योऽन्याध्यसने निरास्पदमिदं शून्यं जगत्स्यादिति ॥

### பதவுரை

**सविलासमोहविषये**–ரஜதாதி காரியசகித அஞ்ஞானத்தால் மறைபட்ட

**वस्तुनि**–சுக்தி முதலிய வஸ்துவின்கண்

**अधिष्ठानगीः**–அதிஷ்டானமென்னும் பெயர்

**संसिद्धा**–பிரசித்தமாம்

அஞ்ஞானம் எதனால் பிரகடமாகின்றதோ அது காரியம் அது கற்பித ரஜதாதி, காரியசகித அஞ்ஞானம் எதனை யாசிரயித்து இருக்கின்றதோ அது என்னும் வியுற்பத்தியினால், சவிலாசமோக விஷயம் – காரியசகித அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட சுத்தியாதியாம், அதன்கண் அதிஷ்டானமென்னும் பெயர் பிரசித்தமாம். ஆதலால் சூன்யத்தன்மையைச் சம்பாதிக்கும் முயற்சி நிர்விஷயகமாம் பொருத்த மன்று என்பது பொருள்.

[அற்றேல் எவ்வாதாரத்தின்கண் ஆரோப்பியம் விளங்குகின்றதோ அது அதிஷ்டானமாம். அதுவும் ஆரோப்பியத்தின்கண் அத்தியஸ்த

மேயாம். ஆரோப்பியத்தின்கண் அதிஷ்டானத்தின் அத்தியாசத்தை யங்கீகரியாவிடின் அன்னியோன்னியாத்தியாசம் சித்திக்காது என்னு மிடத்துக் கூறுகின்றார்.]

**अध्यसनस्य** – ரஜதம் முதலிய அத்தியஸ்த பதார்த்தத்திற்கு

**आधारे वस्तुनि** – ஆதாரமாக விளங்குகின்ற சுந்தி முதலிய வற்றின் இதமம்சத்தின்கண்

**न** – அதிஷ்டானமென்னும் பெயரின்றாம்

ஆதாரத்தினும் அதிஷ்டானம் வேறு என்பது பொருள்.

**ततः** – அக்காரணத்தால்

**अनूनतमसाम्** – குறைவில்லாத அஞ்ஞானத்தையுடையவர்களுள்

**महताम्** – பெரியோர்களான

**केषांचित्** – சிலருக்கு

**निर्बन्धमात्राश्रयात्** – அடமாத்திரத்தின் ஆசிரயத்தால்

**अन्योऽन्याध्यसने** – ஆன்மாவும் அனான்மாவும் பரஸ்பரம் அத்தியாச மாயின்

**इदं जगत्** – இந்த ஜகத்தானது

**निरास्पदम्** – அதிஷ்டானமின்றியதாய்

**शून्यं स्यात्** – சொரூப சூன்னியமேயாம்

**इति** – என்று

**महान् संभ्रमः** – வாதிகளைக் கண்டிப்பதில் பெரிதான முயற்சி யுண்டாகிறது, அல்லது பெரிதான பிராந்தி யுண்டாகிறது. அஃது

**अस्थाने** – பொருத்தமன்று.

*விசேஷவுரை*

மேலும் விசிஷ்ட (ரஜத) த்தின்கண் சம்பந்த விசிஷ்டத்தன்மையால் அத்தியஸ்தமான அதிஷ்டானத்தினம்ஸம் ஆதாரமாம். அது முதியோ ராலும் கூறப்பட்டுள்ளது " அவ்வடிவமன்றியதாயினும் அவ்வடிவத்தால் ஆரோப்பிய புத்தியில விளங்குவது ஆதாரமாம்," என. இது (ரஜத

சம்பந்த விசிஷ்ட இதமம்சம்) அதிஷ்டானமாதற்கு யோக்கியமன்றும். அதிஷ்டானம் சித்திக்கின் அத்தியாசமாம், அத்தியாசம் சித்திக்கின் அதிஷ்டானமாம் என அன்னியோன்னியாசிரய தோஷம் வருதலின்.

அல்லது அன்னியோன்னியாத்தியாசத்தினை யங்கீகரிக்கின் ஜகத்து நிராசிரயமாய் சூனியமாய்ப் போகும் என்னுந் தருக்கத்தால் சூனியவாதிகளுக்கு வேதாந்தியை ஜயிப்பதற்கு பெரிதான முயற்சியுண்டாகின்றது. இந்த முயற்சி நிர்விஷயமாமென்பது பொருள். நிர்ப்பந்தம் — பிற மதத்தைக் கண்டிப்பதில் சிரத்தையின் மிகுதி. (31)

## அவதாரிகை

அற்றேல் அதிஷ்டானமே ஆதாரமாம். அதிஷ்டானத்தையே யாசிரயமாகவும் விஷயமாகவுமுடைய அஞ்ஞானத்தின் காரியமான அத்தியஸ்த பதார்த்தந்திற்கு அதிஷ்டானத்தினும் வேறு ஆதாரம் பொருந்தாமையின். ஆதலால் கூறிய ரீதியால் சூனியத் தன்மையின் நிராகரணம் எங்ஙனமாம் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார் :—

## சுலோகம்

अधिष्ठानमाधारमात्रं यदि स्यात्
प्रसज्येत सत्यं तदा चोद्यमेतत् ।
न चैतत्सकार्यस्य मोहस्य वस्तु-
न्यधिष्ठानगीर्गोचरे लोकसिद्धा ॥ ३२ ॥

## பதவுரை

**आधारमात्रम्** – ஆதாரமாத்திரமே
**यदि अधिष्ठानं स्यात्** – அதிஷ்டானமாகுமாயின்
**तदा एतत् चोद्यम्** – அப்போது சூன்னியத்தன்மையின் ஆபாதகமான இந்தச் சங்கை
**सत्यं प्रसज्येत** – வாஸ்தவமாகப் பிராப்தியாம்
**नच एतत्** – ஆதாரமே அதிஷ்டானமாம் என்பது சரியன்றும்

सकार्यस्य— தனது காரியத்தோடுகூட

मोहस्य — அஞ்ஞானத்திற்கு

गोचरे वस्तुनि — விஷயமான வஸ்துவின்கண்

अधिष्ठानगीः— அதிஷ்டானமென்னும் பெயர்

लोकसिद्धा — உலகில் சுத்தி ரஜதாதிஸ்தலத்தில் பிரசித்தமாம்

## விசேஷவுரை

அஞ்ஞானத்திற்கு விஷயமென்பது அஞ்ஞானத்தால் மறைபட்டதாம். எதன்கண் இருப்பதாய் ஆரோபித ரஜதாதி விளங்குகின்றதோ, அதிஷ்டானத்தின் சாமானிய அம்ஸ வடிவ அது ஆதாரமெனக் கூறப்பட்டது. அத்துணையே அதிஷ்டானமாயின் சத்தியமாக சூன்னியத் தன்மை பிராப்தியாம். ஆதாரமே அதிஷ்டானமன்றும். எதனாலெனின் காரிய சகித அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட விசேஷ அம்ஸத்தின்கண்ணேயே அதிஷ்டானமென்னும் பெயர் உலகில் பிரசித்தமாம். அதன் ஞானத்தாலேயே பிராந்தி நிவர்த்தியாகின்றது.

"உலகின்கண் எப்பதத்திற்கு எது பொருளோ, சாஸ்திரத்தின் கண்ணும் அப்பதத்திற்கு அது பொருளாம்." என்னும் நியாயத்தால் பிரகிருதத்திலும் யாதொரு தோஷமுமின்றும்.

ஈண்டு சிலர் "அத்தியஸ்தமேவஹி" என்னும் (36) வது சுலோகத்திற் கூறும் ரீதியினால் பிராந்திஞானத்திற்கு விஷயமான இதமம்ஸம் சத்திய இதமம்ஸத்தினின்றும் வேறும், பிராந்தி விஷய இதமம்ஸம் அவித்தையின் விருத்திக்கு விஷயமாவதால் பாத்தியமாம். சுத்தியினிதமம்ஸமோ பிரமாண விருத்திக்கு விஷயமாவதால் பாத்தியமன்றும்.

இரண்டு இதமம்ஸமும் தனித்தனி தோற்றவேண்டுமென்று சொல்லற்க, பேதப்பிரதீதிக்கு நிமித்தமான சுத்தித்துவாதி மறைக்கப்பட்டமையானும் அதன் விவேக அக்கிரகணம் அத்தியாச ஏதுவாதலானும் என்க.

அவித்தையின் விருத்திவடிவ ரஜத ஞானத்தால் சுத்தியின்

இதந்தையோடபேதமாகவே ரஜதம் பிரதீதியாகுக மித்தையாகிய இதந்தையைக் கற்பித்தல் எற்றிற்கு என்று சொல்லற்க.

இதமாகாரப் பிரமாண விருத்தியும் இரஜதாகார அவித்தையின் விருத்தியும் விருத்தமாதலின் இது ரஜதம் என்னும் ஞானத்தில் ஒன்று சேர்ந்து பிரவிருத்தியாதாகலின். அவித்தையின் விருத்திக்கு இதந்துவம் விஷய மன்று மென்னற்க.

ரஜதப்பிரதீதி என்னும் 35 வது சுலோகத்தோடு விரோதம் வருதலின் என்று கூறுகின்றனர்.

அது சரியன்று—முற்கூறிய ரீதியினல் சுத்தியின் இதந்தையினது சம்சர்காத்தியாசத்தினுலேயே இது ரஜதம் என்று அத்தியாசம் பொருந்தும் போது மித்தையாகிய இதந்தையைக் கற்பித்தலில் பிரமாண மின்மையானும், கௌரவமாதலானும், "கிஞ்ச" என்னும் அடுத்த சுலோகத்திற்கு விரோதம் வருதலானும் என்க. அத்தியஸ்தமே பிராந்தி ஞான விஷயமாமென்பதற்கு சொருபத்தாலாவது சம்சிருஷ்டத் தன்மையாலாவது அத்தியஸ்தமே பிராந்திஞான விஷயமென்று பொருள். (சம்சிருஷ்டத்தன்மை — சம்பந்த விசிஷ்டத்தன்மை) பிரமாண விருத்தியிலும் அவித்தையின் விருத்தியிலும் பிரதிபிம்ப வடிவ ஒரு ஸ்புரணத்தின் உற்பத்தியால் ஓர் காரியத்தைச் செய்யுந் தன்மையை யுக்தியாற் கூறினமையானும், சிற்சுகாசாரியராலும் "இதந்தையின் சம்சர்க்கமும் அநிர்வசனீயமாம்" என்று கூறப்பட்டுள்ளது. இதந்தை கூறப்பட வில்லை யென்றறிக. **(32)**

## *அவதாரிகை*

ஆதாரத்தையவலம்பித்தலாலும் சத்திய வஸ்து, மித்தியாவஸ்துக் களுக்கு சேர்ந்து தோன்றுந் தன்மை புண்மையினுல் சம்சர்க்கம் பாத மாயினும் ஆதாரத்திற்குப் பாதமின்மையினுல் சூன்னியத் தன்மையின் ஆபத்தியைக் கண்டிக்கிறுர் :—

## *சுலோகம்*

**किं चानृतद्वयमिहाप्यसितव्यमिष्टं**
**स्याच्चेत्तदा भवति चोद्यमिदं त्वदीयम् ।**

सत्यानृतात्मकमिदं मिथुनं मिथश्चे-
दध्यस्यते किमिति शून्यकथाप्रसङ्गः ॥ ३३ ॥

*பதவுரை*

**किं च** – மற்றும்

**इह** – அந்நியோன்னியாத்தியாசத்தின்கண்

**अनृतद्वयम्** – இரண்டு பொய்ப்பொருள்

**अध्यसितव्यम्** – அன்னியோன்னியம் அத்தியசிக்கத்தக்கதாக

**इष्टं स्यात् चेत्** – சம்மதமாகுமாயின்

**तदा** – அப்போது

**त्वदीयम्** – உன்னுடைய

**इदं चोद्यम्** – இந்த சூன்னியத்தன்மை சம்பாதக சங்கையானது

**भवति** – உண்டாகும் இரண்டற்கும் பாத்தியத்தன்மையுண்மையின் அங்ஙனமன்றும் மற்றேரு

**इदं मिथुनम्** – இந்த மிதுனமானது (இரட்டையானது)

**सत्य अनृतात्मकम्** – சத்திய பிரத்தியகான்மவடிவமாகவும், அநிர்த புறப்பொருள் வடிவமாகவும் உள்ளது

**मिथः अध्यस्यते चेत्** – அவ்விரண்டும் பரஸ்பரம் அத்தியசிக்கப் படுமாயின்

**शून्यकथा प्रसङ्गः** – சூன்யமாமென்னுங் கூற்றினுடபத்தி

**किं इति** – எவ்வாறுண்டாம்

*விசேஷவுரை*

புறப்பொருள் சொரூபத்தாலும் அத்தியஸ்தமாதலின் அநிர்த மென்னப்பட்டது. பிரத்தியகான்மாவிற்கு பாஹிய சம்சிருஷ்டத் தன்மை வடிவத்தால் (அநான்ம சம்பந்த விசிட்டத் தன்மையால்) பாத்தியத்தன்மையாயினும் சுவ சொரூபத்தால் சத்தியத்தன்மை யுண்மையின், சூன்யப் பிரசங்கமின்றும் என்பது பொருள். (33)

### அவதாரிகை

அற்றேல் அன்னியோன்னியாத்தியாசத்திலேதான் பிரமாண மென்ன ? என்றுசங்கித்து அகங்காராத்தியாசம் வெளிப்படையாக வின்மையின் பிரசித்த ரஜதாத்தியாசத்தின் கண்ணேயே அன்னியோன்னி யாத்தியாசத்தை முதலிற் சாதிக்கிறார் :—

### சுலோகம்

**इदमर्थवस्त्वपि भवेद्रजते**
**परिकल्पितं रजतवस्त्विदमि ।**
**रजतभ्रमेऽस्य च परिस्फुरणा-**
**न्न यदि स्फुरेन्न खलु शुक्तिरिव ॥ ३४ ॥**

### பதவுரை

**इदमि** – சுத்தியாதி இதம் பதார்த்தத்தில்
**रजतवस्तु** – ரஜதமானது
**परिकल्पितं भवेत्** – அத்தியஸ்தமாம் (என்பது சர்வசம்மதமேயாம்) அதுபோன்று
**रजते** – இரஜதத்தின் கண்
**इदं अर्थ वस्तु अपि** – சுத்தியினது இதம் பதார்த்தமும் ( அத்தியஸ்தமாம் )
**रजतभ्रमे** – இது ரஜதமென்னும் பிராந்தி ஞானத்தின்கண்
**अस्य च** – இதம் வஸ்துவினதும்
**परिस्फुरणात्** – விளக்கமிருத்தலின்
**यदि न** – அத்தியஸ்தமன்றுயின்
**शुक्तिः इव** – சுக்தி போன்று
**न स्फुरेत्खलु** – பிரதீதியாகாதல்லவா

### விசேஷவுரை

ஈண்டு இஃது அனுமானமாம் இதமம்சம் ரஜதத்தின்கண் அத்தியஸ்தமாம் பிராந்தி ஞானத்தில் விளங்குவதால் ரஜதம் போன்று,

வியதிரேகத்தில் சுத்தி விசேஷம் போன்று. அல்லது இதந்தை அத்தியஸ்தமன்றுபின் பிராந்தி ஞானத்தில் பிரதீதியாகாது. சுத்தி போன்று. எனத் தர்க்கம் கூறப்பட்டது. இரஜதத்தின்கண் புரோவர்த்தித் தன்மை (எதிரில் இருக்குந் தன்மை) யாக இதந்தை பிரதீதியாகாதாயின் [1]இரஜதார்த்திக்குப் பிரவிருத்தியும் உண்டாகாது என்பது திரண்ட பொருள். (34)

### அவதாரிகை

இவ்வாறு அர்த்தாத்தியாஸத்தின்கண் அநுமானத்தைக்கூறி ஞானத்தியாசத்தின்கண் பிரத்தியக்ஷப் பிரமாணத்தைக் கூறுகின்றார் :—

### சுலோகம்

रजतप्रतीतिरिदमि प्रथते
ननु यद्वदेवमिदमित्यपि धीः ।
रजते तथा सति कथं न भवे-
दितरेतराध्यसननिर्णयधीः ॥ ३५ ॥

### பதவுரை

**इदमि** – இதமம்சத்தின்கண்

**रजतप्रतीतिः** - வெள்ளியின் தோற்றம்

**यद्वत्प्रथते** – எப்படி வெளிப்படையாயிருக்கின்றதோ

**एवम्** – இவ்வாறு

**रजते** – வெள்ளியின் கண்

**इदं इति अपि धीः** – இது வென்னும் பிரதீதியும்

**ननु** – நிச்சயமாக (இருக்கின்றது)

**तथा सति** – இவ்வாருகும்போது (அதாவது இதமம்சமும் ரஜதமுமாகிய இரண்டும் அன்னியோன்னிய தாதாத்மிய ரூபத்தால் பிரதீதியாகுங்காலத்து)

1. இரஜதார்த்தி – வெள்ளியை விரும்புபவன்

**इतरेतर अध्यसन निर्णय धीः** } அன்னியோன்னிய அத்தியாசத்தின் நிச்சய ஞானம்

**कथम् न भवेत्** – ஏனுண்டாகாது

### *விசேஷவுரை*

இது ரஜதமென்னும் ஞானமொன்றேயாம். அந்த ஞானத்தில் இரஜதத்திற்கு இதம்பதார்த்தத்தோடு தாதாத்மியம் எங்ஙனந்தோன்று கின்றதோ அங்ஙனமே இதம்பதார்த்தத்திற்கு ரஜதத்தோடு தாதாத்மிய மும் பிரதீதியாகின்றது என்னு மிவ்வனுபவமே அன்னியோன்னியாத்தி யாசத்தில் பிரமாணமாம் என்பதுபொருள். (35)

### *அவதாரிகை*

இதமம்சம் ரஜதத்தில் அத்தியஸ்தமாம். பிராந்தி ஞானத்தில் பிரதீதியாவதால். ரஜதம்போன்று. என முற்கூறிய அநுமானத்திற்கு மூல பூதமான வியாப்தியைப் பிரகடனஞ் செய்கின்றார் :—

### *சுலோகம்*

**अध्यस्तमेव हि परिस्फुरति भ्रमेषु**
**नान्यत्कथंचन परिस्फुरति भ्रमेषु ।**
**रज्जुत्वशुक्तिशकलत्वमरुक्षितित्व-**
**चन्द्रैकताप्रभृतिकानुपलम्भनेन ॥ ३६ ॥**

### *பதவுரை*

**भ्रमेषु** – பிராந்திஞானங்களில்

**अध्यस्तमेव हि** – ஆரோபித பதார்த்தமே

**परिस्फुरति** – விளங்குகின்றது.

அத்தியஸ்த வஸ்துவே பிராந்தியில் விளங்குதலின். இதமம்ச மும் அத்தியஸ்தமாம் என்று சாதிக்கப்பட்டது. அற்றேல் "சர்வ ஞானமும் தர்மியம்சத்தில் எதார்த்தமாம்" என்னும் நியாயத்தால் இதமம்சம் அத்தியஸ்த மாகாவிடினும் விளங்கலாமே எனின் அற்றன்று எனக் கூறுகின்றார்.

**अन्यत्** – அந்தியஸ்தத்திறும் வேருனது

**कथंचन** – எவ்வாற்ருனும்

**न परिस्फुरति** – விளங்குகின்றதில்லை

வேருனது – சொரூபத்தாலாவது சம்சிருஷ்டத்தன்மையாலாவது அத்தியஸ்தமாகாதது. 'தர்மியம்சத்தில் எதார்த்தமாம்' என்பதற்கு தர்மியின் சொரூபத்தில் எதார்த்தமாம், சம்சர்கத்தின் கண்ணும் யதார்த்தமென்பதன்ரும். என்று பொருள்.

[ பிராந்தியில் அனத்தியஸ்த பதார்த்தம் ஏன் தோற்றுகின்றதில்லை எனின் அநுபவத்தால் பாதிக்கப்படுதலினலேயே எனக் கூறுகின்ருர். ]

**भ्रमेषु** – ரஜதம் முதலிய பிராந்தி ஞானங்களில்

**रज्जुत्व** – சர்ப்ப ஞானத்தில் ரஜ்ஜுத்தன்மையும்

**शुक्तिशकलत्व** — வெள்ளி ஞானத்தில் இப்பியின் துண்டத் தன்மையும்

**मरुक्षितित्व** – கானற்சலப் பிராந்தியில் ஊஷரபூமித் தன்மையும்

**चन्द्र एकता** – இரண்டு சந்திரன் என்னும் பிராந்தியில் சந்திரனது ஏகத்தன்மையும்

**प्रभृतिकृ**–ஆகிய அனத்தியஸ்தமான இவை முதலியவற்றின்

**अनुपलम्भनेन** – பிரதீதியின்மையினல். (36)

### அவதாரிகை

அற்றேல் வெள்ளி முதலியவற்றின் பிராந்தியில் இருவடிவம் தோற்றுதலால் அன்னியோன்னியாத்தியாசம் ஆகுக. அஹமத்தியாஸத்தின்கண் அன்னியோந்நியாத்தியாஸம் வேண்டியதில்லை. இருவடிவம் தோற்ருமையால் என்ருசங்கித்து அதன் திருஷ்டாந்தத்தால் ஈண்டும் சாதிக்கத்தக்கதாமெனக் கூறுகின்ருர் :—

### சுலோகம்

**इतरेतराध्यसनमेव ततः चितिचैत्ययोरपि भवेदुचितम् ।**
**रजतभ्रमादिषु तथावगमान्नहि कल्पना गुरुतरा घटते ॥ ३७ ॥**

### *பதவுரை*

**ततः** – அத்தியாசத்தன்மை வடிவ யேதுவால்

**चितिचैत्ययोः अपि** – ஆன்மாவிற்கும் அஹங்காரவடிவ அநான்மாவிற்கும்

**इतरेतराध्यसनं एव** – அன்னியோன்னியாத்தியாசமே

**उचितं भवेत्** – யோக்கியமாகும்

வியாப்தியை ஞாபகப் படுத்துகின்றார்

**रजतभ्रतादिषु** – வெள்ளிப் பிராந்தி முதலியவைகளில்

**तथा अवगमात्** – அவ்விதம் அன்னியோன்னியாத்தியாசமே அறியப்படுதலின்

அன்னியப்பிரகாரத்தை யங்கீகரிக்கின் கௌரவமாமெனக் கூறுகின்றார்

**गुरुतरा कल्पना** – குருதரமான கற்பனை

**न हि घटते** – பொருத்தமன்று.

### *விசேஷவுரை*

சேதன ஆன்மாவிற்கும் ஜடவஹங்காரத்திற்கும் யாதொரு நான் என்னும் அத்தியாசமுண்டோ அதுவும் அத்தியாசத்தன்மை ஏதுவால் ரஜதாத்தியாசம் போன்று அன்னியோன்னியாத்தியாசமேயாம். நான் என்னும் அஹங்காராத்தியாசத்திற்கு அன்னியோன்னியாத்தியாசத்தை யங்கீகரியாவிடின் இரண்டு பிரகாரமாக அத்தியாசத்தைக் கற்பிக்க வேண்டிவரும். அது உசிதமன்றென்பது பொருள். அகங்காராத்தி யாசத்திற்கு அன்னியோன்னியாத்தியாசத்தன்மை யுண்மையானேயே "நான் அறிகின்றேன்" என அகங்காரத்தின்கண் சைதன்னியத்தி னநுபவமுண்டாகின்றது. அகங்காராத்தியாசத்தின் கண்ணும் இரு வடிவத் தோற்றம் விவேகிகளுக்கு உள்து என்பது கருத்து. சித்திரா என்பது முதலிய சப்தம் போன்று அகம் சத்தம் விசிஷ்டவாசக மாவதால் இரு சப்தப்பிரயோகமின்றும். சித்ரா – அநேக நிறங்களையுடைய பசு.

## அவதாரிகை

உபபாதனஞ்செய்த அன்னியோன்னியாத்தியாசத்தை யுக்தி சகிதமாக முடிக்கின்றார்:—

## சுலோகம்

**अनुभूतियुक्त्यनुमितित्रितयादितरेतराध्यसनसिद्धिरतः ।**
**चितिचैत्यवस्तुयुगलस्य न चेत् त्रितयस्य बाधनमिहापतति ॥**

## பதவுரை

**अतः** – முற்கூறிய இந்த

**अनुभूति** – நான் அறிகின்றேன் என்னும் அநுபவமும்

**युक्ति** – ரஜததிருஷ்டாந்தத்தில் '36வது' சுலோகத்தில் கூறிய வியாப்தி வடிவயுக்தியும்

**अनुमिति**-37வது சுலோகத்திற்கூறிய அநுமானப்பிரமாணமுமாகிய

**त्रितयात्** – மூன்றினாலும்

**चितिचैत्यवस्तु युगलस्य** – சேதன ஆன்மாவும் ஜடவகங்காரமுமாகிய இரண்டிற்கும்

**इतरेतराध्यसनसिद्धिः** – அன்னியோன்னியாத்தியாசத்தின் சித்தியாம்

**न चेत्** – அன்னியோன்னியாத்தியாசத்தையுடன்படாவிடின்

**इह** – ஈண்டு அகங்காராத்தியாசத்தின் கண்

**त्रितयस्य** – அனுபவம் யுக்தி அனுமானமென்னும் மூன்றிற்கும்

**बाधनम्** – பாதம்

**आपतति** – உண்டாகின்றது (38)

## அவதாரிகை

அற்றேல் அஞ்ஞாதமும் சாதிருசியாதியற்றதும் அம்ஸமின்றியதும் பிரத்தியக்கும் விஷயியுமாகிய ஆன்மாவிற்கு அத்தியாசத்தின் அதிஷ்டானத்தன்மை எவ்வாறு கூடும்? உலகின்கண் சமானமுடையதும் (சதிருசமும்) சாவயவமும், பராக்கும், விஷயமுமாகிய சுத்தி முதலியு

வற்றிற்கே அதிஷ்டானத்தன்மை காணப்படுதலின் என்று சங்கிக்கின்றார்:—

### சுலோகம்

**सदृशसांशपराग्विषयेषु चेत् भवति दोषवशाज्जगति भ्रमः ।**
**भवतु तत्सकलं वदितुं वयं तदुपचारवशाद्दृशि शक्नुमः ॥**

### பதவுரை

**जगति** – இவ்வுலகின்கண்

**सदृश** – சாதிருசியமுடையதும்

**सांश** – அவயவமுடையதும்

**पराग्** – பாஹ்யமும்

**विषयेषु** – விஷயமுமான சுத்தி முதலிய அதிஷ்டானங்களில்

**दोषवशात्** – தோஷவசத்தால்

**भ्रमः** – ரஜதாதிப் பிராந்தி ஞானம்

**भवति चेत्** – உண்டாகின்றது என்னின் [ஒருவாறு சாதிருசியாதிகளைச் சம்பாதித்தலால் பிரௌடிவாதத்தால் பரிகரிக்கின்றார்.

**भवतु** – உண்டாகுக

**तदुपचारवशात्** – அதன் வியவகார சாமர்த்தியத்தால்

**दृशि** – ஞானவடிவ ஆன்மாவின்கண்

**तत्सकलम्** – அவ்வெல்லாவற்றையும் (அதாவது சாதிருசியம் சாவயவத்துவம் முதலியவற்றை)

**वदितुं** – கூறுதற்கு

**वयम्** – நாங்கள்

**शक्नुमः** – சமர்த்தர்களாகின்றோம்.

### விசேஷவுரை

அஃதாமாறு அந்தக்கரணத்திற்கு தேகேந்திரியத்தையபேக்ஷித்து ஸ்வச்சத்தன்மையும் பிரத்தியக்தன்மையும் சைதன்னியத்தோடு சாதிருசிய

முளது. அகண்டமாயினும் சைதன்னியத்திற்கு அவித்தையின் சாமர்த்தியத்தால் ஜீவத்தன்மை பிரம்மத்தன்மை முதலிய வடிவமான * ஸாம்சத்தன்மை இருக்கின்றது. சிதாபாச விசிஷ்ட அந்தக்கரணத்தின்கண் அதன் அபேத ரூபத்தால் பிரதீதியாவதால் விஷயத்தன்மையை அடைந்தது போன்றிருக்கின்ற சைதன்னியத்திற்கு பராக்தன்மையும் உத்ப்ரேக்ஷிக்க யோக்கியமாம். அத்தியாசம் அநாதியாதலால் முன் முன் உள்ளதையபேக்ஷித்து சாதிருசியம் முதலிய எல்லாவற்றையும் உத்தரோத்தர அத்தியாசத்தில் ஏதுவாக கற்பிக்கலாம் என்பது கருத்து.

## அவதாரிகை

கூறிய பரிகாரத்தின்கண் அபசித்தாந்தத்தன்மையின் சங்கையை நீக்குகின்றார்:

## சுலோகம்

**अपिच भाष्यकृदेव तदब्रवीद्विषयताद्युपचारसमाश्रयात् ।**
**स्ववचसैव न तावदिति ब्रुवन्सकलमात्मनि विभ्रमसिद्धये ॥**

## பதவுரை

**अपिच** – மற்றும்

**आत्मनि** – ஞானவடிவ ஆன்மாவின்கண்

**विभ्रमसिद्धये** – அத்தியாசசித்தியின் பொருட்டு

**भाष्यकृत् एव** – பாஷ்யக்காரரான சங்கராசார்ய சுவாமிகளே

**स्ववचसा एव** – தனது வாக்கியத்தினுலேயே

**न तावत् इति ब्रुवन्** – இவ்வான்மா நியமமாக அவிஷயமன்றும் என்று கூறுகின்றவராய்

**उपचारसमाश्रयात्** – வியவகாரத்தை ஆசிரயித்தலால்

**विषयतादि** – விஷயத்தன்மை முதலிய

**तत् सकलम्** – அவ்வெல்லாவற்றையும்

**अब्रवीत्** – கூறியுள்ளார்.

*ஸாம்சத்தன்மை – அவயவமுடைய தன்மை

## *விசேஷவுரை*

ஆதலால், மேற் சுலோகத்திற் கூறிய பரிகாரம் எம்மாற் கற்பிக்கப் பட்டது அன்று, என்பது பொருள்.

[பாஷியக்காரரது வாக்கியமும் அனுபலப்தியால் பாதிதமன்று எனக்கூறுகின்றார்.] தனது வாக்கியத்தினாலேயே என. முகத்தால் சப்த உச்சாரணத்தினாலேயே கூறியுள்ளார். அபிப்பிராய வாயிலால் அன்று என்பது பொருள். [பாஷியவசனத்தைக் கூறுகின்றார்.] இவ்வான்மா என அத்தியாச பாஷியத்தின்கண்.

**"कथं पुनः प्रत्यगात्मन्यविषये अध्यासो विषयतद्धर्मणाम्"**

பிரமாண அகோசரமும் பிரத்யக்வடிவமுமாகிய ஆன்மாவின்கண் விஷயத்திற்கும் அதன் தர்மங்களுக்கும் அத்தியாசம் எங்ஙனம் கூடும் என்று ஆக்ஷேபம் செய்து

**"न तावदयं एकान्तेन अविषयः अस्मत्प्रत्ययविषयत्वात्"**

இவ்வான்மா நியமமாக அவிஷயமன்றும் நான் என்னும் விருத்திக்கு விஷயமாவதால் என்று கூறுகின்றவராய் என்பது பொருள். நான் என்னும் விருத்தி அந்தக்கரணம், அதில் அபிவியக்தமாயிருந்துகொண்டு விஷயம் போன்று ஆகிறது. அந்த சுத்தவான்மா சிதாபாசனோடு அபேத ரூபத்தால், அவித்தையின்கண் சூட்சுமப் பிரதி பிம்ப ரூபத்தால் பிரவேசித்ததாகி அஸ்பஷ்டமாம். அதாவது ஸ்பஷ்டமாக பிரதீதி யாவதின்றும். அங்ஙனமாயினும் சிதாபாச விசிட்ட அந்தக்கரண வடிவ தனித்தனியுபாதியின்கண் தூலப் பிரதிபிம்பரூபத்தால் பிரவேசித்ததாகி சந்திரனிடத்து ராகு அபிவியக்தியாவது போன்று அபிவியக்தமாம். அதாவது ஸ்பஷ்டப்பிரதீதிக்கு விஷயமாம் என்று பொருள். ஸ்வப்பிரகாசமாயினும் அந்தக்கரணத்தின்கண் அபிவியக்தமாத்திரத்தால் உபசாரத்தால் அஹம் விருத்திக்கு விஷயமெனச்சொல்லப்படுகிறது. (40)

## *அவதாரிகை*

சாதிருசியம் முதலியது சித்தாந்தத்தில் அத்தியாசகாரணமென அங்கீகரிப்பதின்றும். அங்ஙனமாயினும் அங்கீகரித்து கூறப்பட்டது.

வாஸ்தவமாக அபரோக்ஷ அத்தியாசத்தின்கண் அதிஷ்டானத்தின் அபரோக்ஷத்தன்மை ஏதுவாம். சாதிருசியம் முதலியது அன்று. எனக் கூறுகின்றார் :

*சுலோகம்*

**अपरोक्षरूपविषयभ्रमधी-**
**रपरोक्षमास्पदमपेक्ष्य भवेत् ।**
**मनसः स्वतो नयनतो यदि वा**
**स्वपनभ्रमादिषु तथा प्रथितेः ॥ ४१ ॥**

*பதவுரை*

**अपरोक्षं आस्पदम्** – அபரோக்ஷ அதிஷ்டானத்தை

**अपेक्ष्य** – அபேக்ஷித்து

**अपरोक्षरूप विषयभ्रमधीः** – அபரோக்ஷவடிவமாய் அபரோக்ஷ விஷயகமாய் பிராந்திஞானம்

**भवेत्** – உண்டாகிறது.

அதாவது அபரோக்ஷ வடிவமும் அபரோக்ஷ விஷயகமுமான பிராந்திஞானம் அபரோக்ஷ அதிஷ்டான மாத்திரத்தை அபேக்ஷிக்கின்றது. ஆரோப்பியத்தின் கண்ணும் அதிஷ்டானத்தின் கண்ணும் ஓரிந்திரியத்தாற் கவரப்படுந் தன்மை வடிவ சாதிருசிய முதலியவற்றை அபேக்ஷிக்கிறதில்லை. வியபிசாரம் வருதலின் என்பது பொருள்.

[ அற்றேல் இந்திரியத்திற்கு அவிஷயமான ஆன்மாவின் அபரோக்ஷத்தன்மையும் துர்க்கடமாம் ( பொருந்தாதாம் ) என்று சங்கித்துக் கூறுகின்றார்:]

**मनसः** – அதிஷ்டானத்தின் ஞானம் சிலவிடத்து மனதினாலும்

**स्वतः** – சிலவிடத்துத் தன்னாலும்

**यदि वा** – அல்லது சிலவிடத்து

**नयनतः** – நேத்திரத்தாலும் ( உண்டாகின்றது )

[ இஃது எங்கே நிச்சயம் பண்ணப்பட்டது என்னுமிடத்துக் கூறுகின்றார் ]

**स्वप्नभ्रमादिषु**–ஸ்வப்பனப்பிராந்தி முதலியவிடங்களில்

**तथा प्रथितेः**–அவ்வாறு பிரதீதியாதலின்

## *விசேஷவுரை*

அல்லது என்பது வியவஸ்தித விகல்பார்த்தத்தில் வந்தது. (41)

## *அவதாரிகை*

அற்றேல் ஆத்மாவினும் பின்னமான வஸ்துவிற்கு, தன்னால் அபரோக்ஷத் தன்மையின்மையின். அப்படிப்பட்ட அத்தியாசம் எங்கே காணப்பட்டது என்றுசங்கித்து. “**आत्मनि चैवं विचित्राश्च हि**” (2—1—28) “ஆன்மாவின்கண்ணும் இவ்வாறு விசித்ராத்தியாசங் காணப்படுகின்றது” என்னும் பிரம்ம சூத்திரத்தால் சித்தித்தமையின் ஸ்வப்னப் பிரமத்தில் எனக் கூறுகின்றார்:—

## *சுலோகம்*

**स्वतोऽपरोक्षा चितिरत्र विभ्रम-**
**स्तथापि रूपाकृतिरेव जायते ।**
**मनोनिमित्तं स्वपने मुहुर्मुहु-**
**र्विनापि चक्षुर्विषयं स्वमास्पदम् ॥ ४२ ॥**

## *பதவுரை*

**स्वपने**–ஸ்வப்பனுவஸ்தையின்கண்

**चितिः**–ஆன்மவடிவசேதனமானது

**स्वतः**–தன்னாலேயே

**अपरोक्षा**–பிரத்தியக்ஷமாம்

**तथाऽपि**–அங்ஙனமாயினும்

**अत्र**–அபரோக்ஷவடிவ இச்சேதனத்தின்கண் சொப்பனுவஸ்தையில்

**चक्षुर्विषयम्**–நேத்திரத்திற்கு விஷயமான உருவமுடைய

**स्वं आस्पदम्**–தனது அதிஷ்டானம்

**विनाऽपि**–இன்றியும் அல்லது

**मनोनिमित्तम्**–மனதை நிமித்தமாகவுடைய அதாவது மனதிற்கு விஷயமான அதிஷ்டானம்

**विनाऽपि**–இன்றியும்

**रूपाकृतिः एव**–உருவாகாரமாகவே

**विभ्रमः**–பிராந்திஞானம்

**मुहुः मुहुः**–அடிக்கடி

**जायते**–உண்டாகிறது

## *விசேஷவுரை*

சேதனமானது ஸ்வப்னுவஸ்தையில் தன்னைக் கிரஹிப்பதாக வேருென்று இன்மையாலும், தனது சத்தையில் சமுசயாதியின்மை யானும், சுயஞ்ஜோதித் தன்மையைப் போதிக்கும் சுருதியினுலும் தன்னுலே அபரோக்ஷமாம். உருவம் முதலியது இன்மையினுல் சாதி ருசிய முதலியது இன்றியதாம். இத்தகைய சேதனம் சொப்பனப் பிராந்திக்கு அதிஷ்டானமாம். அப்படியாயினும் இச்சேதனத்தின்கண் சொப்பனுவஸ்தையில் நித்திரை வடிவ தோஷத்தால் உருவாதியாகார மாகவே ஆரோபம் நேத்திரத்திற்கு விஷயமான அல்லது மனதிற்கு விஷயமான உருவமுடைய அதிஷ்டானமின்றியும் மீண்டும் மீண்டும் உண்டாகின்றது. "स हि स्वप्नो भूत्वा"; அவ்வான்மாவே சொப்பனப் பிரபஞ்ச வடிவமாகி என்னும் சுருதியால்

[அல்லது சொப்பனுவஸ்தையில் நேத்திர முதலியவற்றின் வியாபாரம் ஒடுங்கியிருத்தலின் உருவாகாரப் பிராந்தி எங்ஙன முண் டாகும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர் :—]

மனோ நிமித்தமென, மனதின் கண்ணுள்ள உருவாதி வாசனையை நிமித்தமாகவுடையது என்பது பொருள். சொப்பனத்தில் தைஜஸ ஜீவனுக்கு போக்கியத்தன்மையால் வாசனைக் கூட்டத்தின் சேஷம் மனதின்கணிருத்தலால். முதலாவது அர்த்தத்தில் மனோ நிமித்த

மென்பது அதிஷ்டானத்திற்கு விசேஷணம். இரண்டாவது அர்த்தத்தில் பிராந்திக்கு விசேஷணம்.

ஈண்டு இது விசாரிக்கத்தக்கது. சொப்பனப் பிரமத்திற்கு அதிஷ்டானம் பிரம்மசைதன்னியமா ? அல்லது ஜீவசைதன்னியமா ? முதற் பக்ஷத்தில் சாக்கிரப் பிரபஞ்சம்போன்று சொப்பனப்பிரபஞ்சமும் அஞ்ஞாத சத்தையுடையதாய் வியாவகாரிகமாகவேண்டும். இரண்டாவது பக்ஷத்தில் ஜாக்கிராவஸ்தையில் சொப்பனப்பிரபஞ்சத்திற்கு பாதமா, அல்லது லயமா ?

ஈண்டு சில ஆசிரியர்கள் கூறுகின்றனர் :—

ஜீவசைதன்னியம் ஜாக்கிர முதலிய மூன்று அவஸ்தையோடு கூடியிருக்கின்றது. ஜாக்கிரத்தில் தூலாந்தக்கரணோபகிதமாம். சொப்பனத்தில் வாசனையோடு கூடிய அந்தக்கரண உபகிதமாம். சுழுத்தியில் சூக்ஷும அந்தக்கரணோபகிதமாம். அவற்றுள் ஜாக்கிராவஸ்தையாலுபகிதமான ஜீவசைதன்னியம் சொப்பனப்பிரமத்திற்கு அதிஷ்டானமாம். ஜாக்கிரத்தின் ஆதியில் நான் சைத்திரன் என்று ஜாக்கிராவஸ்தையாலுபகிதமான ஜீவசைதன்னிய வடிவ அதிஷ்டான ஞானத்தால் சொப்பனத்திற்குப் பாதமாம். இவ்வாறுகவே இனி கூறப்படும் "பிரமாதா இருக்குங்காலத்தில் பாத்தியத்தன்மை" வடிவ சொப்பனத்தின்கண் ஜாக்கிரப்பிரபஞ்ச வைலக்ஷண்யமும் பொருந்துகின்றது.

சொப்பனத்தினந்தியத்தில் சுழுத்தியுண்டாகுமாயின் சொப்பன சிருஷ்டிக்கு லயமேயாம். இவ்வபிப்பிராயத்திலேயே "**क्षीणे तु तत्र लयमेति**" (3–117) சொப்பனபோகத்தைக் கொடுக்குங் கருமத்திற்கு நாசமுண்டாகும்போது சுழுப்தியில் சொப்பன சிருஷ்டி லயத்தை யடைகின்றது. என இக்கிரந்தத்தின் மூன்ருவது அத்தியாயத்தில் 117–வது சுலோகத்தில் கூறப்படுகின்றது. ஆதலால் முன்பின் விரோதமின்ரும்.

"புத்தியாதிகளைச் சிருஷ்டித்து அப்பரமான்மாவே அதில் பிரவேசித்தார்" என்னுஞ் சுருதியினுல் புத்தியாதியாலுபகிதமான சீவ சொருபம் ஈசுவரனுல் கற்பிக்கப்பட்ட தன்மையால் வியாவகாரிகமா

யிருத்தலின் சுத்தியாதியைப்போன்று அதிஷ்டானத் தன்மைக்கு யோக்கியமாம். அச்சீவசொரூபத்தில் உள்ளவைகளும் சொப்பனப் பிரமத்திற்கு உபாதானமாயுள்ளவைகளுமான சீவ கற்பித அஞ்ஞானத்தின் அவஸ்தா விசேஷங்கள் நான் சைத்ரன் என்பதாதி சாக்கிரத்தின் ஞானத்தால், சுத்திஞானத்தால் ரஜதத்தின் உபாதானமாயுள்ள அஞ்ஞானவஸ்தை ( தூலாஞ்ஞானம் )' பாதிக்கப்படுவது போன்று பாதிக்கப் படுகின்றன.

சீவசைதன்னியத்தின்கண் சொப்பனப் பிரபஞ்சம் அத்தியஸ்தமாகுமாயின் நான் யானை, நான் நீலம் என்றிவ்வாறு சொப்பனப் பிரபஞ்சம் உண்டாகவேண்டும் என்னற்க. எல்லாச் சொப்பனமும் சீவனிடத்துத் தாதான்மியத்தால் அத்தியஸ்தமன்றும் மற்றே சாக்கிர சம்ஸ்காரத்தை அநுசரித்து சிலவிடத்துத் தாதான்மிய அத்தியாசமும் சிலவிடத்து சம்சர்க்காத்தியாசமுமாம். நான் அரசன், இது யானை, என்னுடைய பூமி, என்று அதன் ஆகாரம் காணப்படுதலால் என்க. இம்மதம் தோற்றுமாத்திரத்தால் ரமணீயமாம். நலமுடையதன்று.

அஃதாமாறு ஈசுவரனாற் கற்பிக்கப்பட்ட தூல அந்தக்கரணோபகித சைதன்னியம் சொப்பன காலத்தில் இன்றும். அஃது எங்ஙனம் அதிஷ்டானமாகும் ? சாக்கிரத்தின் ஆதியிலுண்டாகும் சீவ சைதன்னியத்தின் ஞானமும் சொப்பனப் பிரபஞ்சத்தைப் பாதித்தற்கு யோக்கியமன்றும். எதனாலெனின் அதிஷ்டானத்தின் ஞானம் சாக்ஷி ஞானமா அல்லது அவித்தையின் விருத்திவடிவமா அல்லது அந்தக் கரணத்தின் விருத்தி வடிவமா ? முதல் இரண்டு பக்ஷங்களும் சரியன்று. சாக்ஷி ஞானத்திற்கும் அவித்தையின் விருத்தி வடிவ ஞானத்திற்கும் அஞ்ஞானத்தை நிவர்த்திக்குந் தன்மை இன்மையால் பாதகத் தன்மை பொருந்தாமையின்.

மூன்றாவது பக்ஷமும் சரியன்று. அந்தக்கரணவிருத்தியானது அஞ்ஞாத பதார்த்தத்தையறிவிக்கின்றது ஆகலின். அந்தக்கரணத்திற்கு அஞ்ஞாத சத்தையையங்கீகரியாமையால் பிரமாண வேத்தியத்தன்மை யின்மையினாலும் தன்னிடத்து (அந்தக்கரணத்தின் கண்) தனது பிரவிருத்தி சம்பவியாமையானும் கூறிய இம்மதத்தின் விசாரம் வீணேயாம்.

சில ஆசிரியர் இவ்வாறு கூறுகின்றனர்:—

அவச்சின்னம் அனவச்சின்னம் என்னும் இரண்டற்கும் பொதுவாகவுள்ள சின்மாத்திரமே சொப்பனத்திற்கு அதிஷ்டானமெனக் கூறுகின்றனர். அதுவும் பொருத்தமன்று. எதனுலெனின் "பரஸ்பரம் விரோதமுண்டாகுங்காலத்து வேறு பிரகாரமாக ஸ்திதி சம்பவியாது" என்னும் நியாயத்தால் சாதாரண சின்மாத்திரத்தை நிரூபிக்க முடியாமையின். இம்மதத்தினை விஸ்தாரமாக கண்டித்தலிலும் பயனின்ரும்.

வேறு சிலர் சரீராவச்சின்ன சைதன்னியமே சொப்பனப் பிரபஞ்சத்தின் அதிஷ்டானமெனக் கூறுகின்றனர். அவர் பக்ஷம் அத்தியந்தம் துலமாம். ஜாக்கிரத்தின் ஆதியில் சரீரத்தின் ஞானமின்றி சொப்பனத்தின் அநிவிருத்தியின்ரும். அதாவது சொப்பனம் நீங்காமல் இருப்பதின்ரும். கடஞானத்தாலும் சொப்பனம் நீங்குதலின்.

வேறு சிலரோ, அந்தக்கரண உபலக்ஷித சைதன்னியம் சொப்பனத்திற்கு அதிஷ்டானமாமெனக் கூறுகின்றனர். அவர் மதத்தில் சுத்த சேதனத்திற்கே அதிஷ்டானத் தன்மையுண்மையின் சாக்கிரத்தில் சொப்பனத்திற்குப் பாதமுண்டாகாது. எதனுலெனின் சுத்த சேதன வடிவ அதிஷ்டானத்தின் ஞான மின்மையின். இவ்வாருகும் போது (ஜாக்கிரத்தில் சொப்பனத்தின் பாதம் சித்திக்காதபோது) "பிரமாதா இருக்குங் காலத்து பாத்தியமாவது சொப்பனமாம்" என்னும் சொப்பன லக்ஷணம் பொருந்தாமற் போகும். ஆதலால் அநுபகித சைதன்னியம் ஜாக்கிரப் பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமாம். ஜாக்கிரப் பிரபஞ்ச உபகித சேதனமோ சொப்பனப் பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமாம் எனப் பெரியோர் கூறுகின்றனர். இவ்வாருகவே ஜாக்ரத்தின் ஆதியில் ஆவசியகமான ஜாக்கிரகால வஸ்துவினுல் உபகித சேதனவிஷயகமான பிரமாண விருத்தியினுலே பிரமாதா இருக்குங் காலத்தில் சொப்பனத்திற்குப் பாதம் பொருந்துகின்றது. சொப்பனுத்தியாசத்தில் அதிஷ்டானத் தன்மையை வரைந்துகொள்வது கடாதியேயாம். "அவனைக் கொண்டுவா" என்பது முதலிய இடங்களில் அவன் என்பது முதலிய சர்வநாம சப்தங்களின் சத்தியின்கண் புத்தியிலிருக்குந் தன்மைத் தர்மம் உபலக்ஷணமாவது போன்று ஜாக்கிர உபகிதத் தன்மை உபலக்ஷணமாம். அதாவது ஜாக்கிரத்தில்

அநுபவிக்கப்பட்ட வஸ்துவினுலுபகிதமான பிரம்ம சைதன்னியமே இந்திரியங்கள் உபராமமடைந்திருத்தலின் கடாதி உபகிதத் தன்மையால் தோன்றுததாகி உபாதி தடஸ்தமாதலின் (உபாதி சம்பந்தமின்றி) சொருப மாத்திரத்தால் தோன்றுவதாகி நித்திரா தோஷம், ஜாக்கிரத்தின் சம்ஸ்காரம், அதிருஷ்டம், என்னுமிவைகளாலுபகரிக்கப்பட்ட அஞ் ஞானத்தால் சூட்சுமப் பிரபஞ்சரூபமாகப் பரிணமிக்கின்றதாகித் தன்னுலேயே விளங்குகின்றது.

"अस्य लोकस्य सर्वावतो मात्रामुपादाय"

"ஜாக்கிரப் பிரபஞ்சத்தின் வாசனையை கிரஹித்துக்கொண்டு" என சுருதியுங் கூறுகின்றது. சொப்பனவஸ்தையின் கண்ணே திரோகிதமான ஜாக்கிரத்தாகிய உபாதி விசேஷத்தினையுடைய சைதன்னியமாத்திரத்தின் சுயம் அபரோக்ஷஸ்புரணமே அதிஷ்டானத் தின் சாமானிய ஞானமாம். உபாதியையறியாத புருஷனுக்கு உபகிதம் விளங்காமையின் அதிஷ்டானத்தன்மையின் அவச்சேதகமான ஜாக்கிரத் தின் கடாதியாகார புத்திவிருத்தியால் சொப்பனத்திற்குப் பாதமாம். மூலாஞ்ஞானத்தின் காரியத்தன்மையின்மையானும் அவித்தையினும் வேருன நித்திரைவடிவ தோஷ ஜன்னியத்தன்மையுண்மையானும் சொப்பனப் பிரபஞ்சத்திற்கு வியாவகாரிகத்தன்மையின்ரும் எனவறிக.

## அவதாரிகை

ஆரோப்பியமும் அதிஷ்டானமும் ஓரிந்திரியத்தால் கிரஹிக்கத் தக்கதாம் என்னும் நியமத்திற்கு வியபிசாரம் கூறுதற்பொருட்டு மனதிற்குப் பிரமாணத் தன்மையை அங்கீகரித்து மனதினுல் பிரதீதி யான ஆகாசத்தின்கண் சாட்சுஷ அத்தியாசத்தைத் தெரிசிப்பிக்கின்ருர்.

## சுலோகம்

मनोवगम्येऽप्यपरोक्षताबलात्तथाऽम्बरे रूपमुपोल्लिखन्भ्रमः ।
सितादिभेदैर्बहुधा समीक्ष्यते यथाऽक्षिगम्ये रजतादिविभ्रमाः ॥

## பதவுரை

**यथा अक्षिगम्ये** – எப்படி நேத்திரத்திற்கு விஷயமான சுத்தி முதலியவற்றின்கண்

**रजतादिविभ्रमः**—வெள்ளி முதலியவற்றின் அத்தியாசம் உண்டாகின்றதோ

**तथा** – அப்படியே

**मनोवगम्ये** – மனதிற்கு விஷயமான

**अम्बरे अपि** – ஆகாசத்தின் கண்ணும்

**अपरोक्षताबलात्** – அபரோக்ஷத்தன்மை மாத்திரத்தின் சாமர்த்தியத்தால்

**सितादिभेदैः** – வெண்மை முதலிய விசேஷ வடிவத்தால்

**रूपम् उपोल्लिखन्** – உருவத்தை விஷயஞ்செய்கின்ற

**भ्रमः** – பிராந்தி ஞானம்

**बहुधा** – அநேகப்பிரகாரமாக

**समीक्ष्यते** – காணப்படுகின்றது.

## *விசேஷவுரை*

ஆகாசவடிவ அதிஷ்டானம் மனதிற்கு அபரோக்ஷமாயினும் அதன் கண் அபரோக்ஷத்தன்மை மாத்திர சாமர்த்தியத்தால், வெண்மை நிறமுள்ளது ஆகாசம், கருமை நிறமுள்ளது ஆகாசம் என நானா உருவத்தை விஷயஞ் செய்கின்ற சாக்ஷிரூபப் பிரமம் காணப்படுகின்றது. ஆதலால் கூறிய ஏகேந்திரியக் கிராஹியத்தன்மைவடிவ நியமமின்றும் என்பது பொருள். [இவ்வாறு சுயம் அபரோக்ஷவடிவ சேதனத்தின்கண் சொப்பனப் பிரமத்தையும் மானச அபரோக்ஷவடிவ ஆகாசத்தின்கண் நீலத்துவாதிப் பிரமத்தையும் உதாரணமாகக்கூறி நேத்திரத்தால் என்பதற்கு உதாரணங் கூறுகின்றார்] எப்படி நேத்திரத்திற்கு விஷயமான என இது முன்பு வியாக்கியானிக்கப்பட்டது.

அற்றேல், ஆகாசம் மனதிற்கு அபரோக்ஷமன்றும். பாகியமாதலால், மனதிற்கு வெளிப்பதார்த்தத்தில் சுவதந்திரமாகச் செல்லுந் தன்மையின்மையின். ஆதலால் ஆகாசம் கேவலம் சாக்ஷிவேத்தியமாம் எனின், அற்றன்று. பாகிய கடாதிபதார்த்தம் பிரமாணத்தினாலே அறியப்பட்டதாகியே சாக்ஷிவேத்தியமாம். நேரே சாக்ஷி வேத்தியமன்று. ஆகாசமும் பாகியமாதலின் பிரமாணத்திற்கு விஷயமாகியே சாக்ஷி

வேத்தியமென ஒப்பவேண்டும். நேத்திரம் முதலிய வெளியிந்திரியங்களுக்கு விஷயமாகாமையின் மானசத்தன்மையும் ஒப்பாவிடின் அஞ்ஞாதத்தன்மையாலேயே ஆகாசத்தின் பிரதீதியுண்டாதல் வேண்டும். அங்ஙனம் உண்டாகின்றதில்லை மற்றோ ஞாதத்தன்மையாலேயேயுண்டாகின்றது. அது முதியோராலும் கூறப்பட்டுள்ளது எப்பதார்த்தம் ஞாதத்தன்மையால் சாக்ஷிக்கு விஷயமாகின்றதோ அது பிரமாணத்தின் வியவதான(துவார)த்தை அபேக்ஷிக்கின்றது என,

அப்படியானால் சுகாதிக்கும் கற்பிதரஜநாதிக்கும் ஞாதத்தன்மையால் அநுபவம் எப்படிக் கூடுமெனின், அவைகளுக்கு ஆந்தரத்தன்மையிருத்தலால் ஆவரணமின்மையின் ஞாதத்தன்மையநுபவத்தில் பிரமாணத்தின் அபேக்ஷையின்றாம். பாஹ்ய ஆகாசத்திற்கோ கடாதிக்குப்போன்று ஆவரணமிருத்தலின் ஆவரண நாசத்தின் பொருட்டுப் பிரமாணத்தையபேக்ஷித்தலால் வேறு கதியின்மையின் மானசப் பிரத்தியக்ஷ விஷயத்தன்மை அங்கீகரிக்கத்தக்கதாம். மனதிற்கு புறப்பொருளை விஷயஞ்செய்வதில் சுதந்திரத்தன்மையின்று மென்னற்க.

" மனதினாலேயே இவன் காண்கின்றான் " என்பது முதலிய சுருதியினால் புறப்பொருள்களிலும் மனதின் விஷயத்தன்மை தெரிசிப்பிக்கப்பட்டமையின். வெளியில் மனம் சுதந்திரமின்றுமென்னும் கூற்றோ கேவல மனதை விஷயஞ்செய்வதாம். அதாவது இந்திரியத்தின் அபேக்ஷையின்றி மனம் வெளியிற்செல்லாது என்பது கருத்து.

விஷயாகாரமாக ஆக்கப்படாத மனம் சாக்ஷாத்காரஞ்செயவதில் சாமர்த்தியமுடையதன்றாமாதலின் ஆண்டு நேத்திரமே மனதிற்கு ஆகாசாகாரத்தின் சமர்ப்பகமாக அங்கீகரிக்கத்தக்கதாம். அற்றேல் உருவமின்றிய ஆகாசத்தின்கண் நேத்திரத்திற்குப் பிரவிருத்தி எப்படிப் பொருந்தும் அதற்கு உருவவாயிலாகவே திரவியங்களில் பிரவிருத்தியுண்டாகின்றதாகலின் எனின், நீர் கூறியது வாஸ்தவந்தான் ஆனால் தனது உருவத்தை முன்னிட்டே விஷயத்திற் செல்கின்றது என்பதன்கண் அற்பமும் நியாமகமின்றாம். எதனாலெனின் சங்கு மஞ்சள் நிறமுடையது. படிகம் செம்மை நிறமுடையது என்பது முதலிய ஸ்தலங்களில் அன்னிய திரவியத்தின் உருவவாயிலாகவும் அன்னிய திரவியத்தின்கண் நேத்திரத்திற்குப் பிரவிருத்தி காணப்படுதலின்,

கூறிய ஸ்தலங்களில் உருவத்தின்கண்ணுள்ள வெண்மைத் தன்மைத்தருமத்திற்கே அபிபவமாம், உருவத்திற்கன்றும் என்னறக.

சங்கு மஞ்சள் நிறமுடையது என்பது முதலிய ஸ்தலங்களில் வெண்மை நிறத்தின் கண்ணுள்ள தருமமே அபிபவமாகின்றது உருவமபிபவமாகிறதில்லை. ஆதலின் தனது உருவத்தாலேயே தனது பிரத்தியக்ஷமாம். அன்னிய திரவியத்தின் உருவத்தால் அன்னிய திரவியத்தின் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை என்னும் நியமத்தை யங்கீகரிக்கும் வாதியின் மதத்தில் சுவர்ணத்தின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷ முண்டாகலாகாது. ஏனெனின் சுவர்ணம் அக்கினியின் காரியமாதலின் அதனது உருவம் பாஸ்வரசுக்லமாம் (விளக்கமான வெண்மை) பரிசம் உஷ்ண ஸ்பரிசமாம். சுவர்ணத்தோடு பிருதிவியின் கூறு சேர்ந்திருக் கின்றது. இதனுல்தான் சுவர்ணத்தின்கண் குருத்துவாதி பிரதீதி யாகின்றது. பார்த்திவ பாகத்தின் (பிருதிவிக்கூற்றின்) உருவத்தாலும் பரிசத்தாலும் சுவர்ணத்தின் உருவமும் பரிசமும் அபிபவமாகியிருக் கின்றது. ஆதலின் பார்த்திவ பாகத்தின் உருவத்தாலேயே சுவர்ணத் தின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷமுண்டாகின்றது. இவ்வாறு ஆலோகாதியின் உருவத்தாலுபகிதமான ஆகாசத்தின்கண் அவ்வுருவவாயிலாகவும் நேத்திரத்தின் பிரவிருத்திக்கு விரோதமின்றும்.

ஆகாசத்தைப் பிரத்தியக்ஷமாகவுடன்படின் அப்பிரத்தியக்ஷ மாயினும் ஆகாசத்தின்கண் பாலர்கள் தலம் மலினத்தன்மை முதலிய வற்றை ஆரோபிக்கின்றுர்கள் என்னும் பாஷிய வசனத்திற்கு விரோதம் வருமேயெனின், விரோதம் வராது. ஏனெனின், ஆகாசத்தின்கண் ஆலோகாதியுருவவடிவ உபாதியில்லாத காலத்துக் கூறியதாம். அல்லது நையாயிகமத அபிப்பிராயத்தால் கூறியதாம்.

அன்னியத்திரவியத்தின் உருவவாயிலாகவும் உருவமுடைய திரவியத்தின் கண்ணேயே நேத்திரத்திற்குப் பிரவிருத்தியாமென்னறக கௌரவதோஷம் வருதலின். உற்பூதவுருவத்தைக் கிரகிக்கின்றதாகியே நேத்திரம் பிரவிர்த்திக்கின்றது என்பது நியமமாம். அதன் உற்பூத உருவமுடையதன் கண்ணேயே பிரவிருத்திக்கின்றது என்னுந் நியமமின்றும்.

சங். 14.

அப்படியானல் ஆகாசம் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ விஷயமாகவே இருக்கட்டுமேயெனின்,

அற்றன்று ஆகாசம் உருவமுடைய திரவியமன்றாகையால், திரவிய சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின்கண் மஹத்துவமும் உற்பூதவுருவ முடைமையும் ஏதுவாதலின். ஆதலால் ஆகாசத்தின்கண் உருவ மையிலாக நேத்திரத்தால் அர்ப்பிக்கப்பட்ட ஆகாசாகார மனோவிருத்திக்கு விஷயத்தன்மையாகும்போது நீலத்துவாதியின் ஆரோபமாம் என்பது கருத்து. இவ்வாறே அந்தகாரமும் மானசப்பிரத்தியக்ஷத்திற்கு விஷயமாம். வெளிச்சமின்றி உருவமுடையதைக் கிரகிப்பதில் நேத்திரத் திற்கு சாமர்த்தியமின்மையின். (43)

## அவதாரிகை

அவ்வாறாயினும் ( ஆகாசம் மானசப்பிரத்தியக்ஷத்திற்கு விஷய மாயினும் ) எது சாமான்னிய ரூபத்தால் அறியப்பட்டும் விசேஷ ரூபத் தால் அறியப்படாமலுமிருக்கின்றதோ அது அதிஷ்டானமாம். ஆன்மா நிரவயவமாதலால் அதற்கு சாமானிய ரூபத்தால் ஞாதத்தன்மையும் விசேஷ ரூபத்தால் அஞ்ஞாதத்தன்மையும் சம்பவியா ஆகலின் அதிஷ்டானத்தன்மை எங்ஙனம் கூடுமென்னுஞ் சங்கைக்கு அபேதத் தின் கண்ணும் ஞாதத்தன்மை யஞ்ஞாதத்தன்மைகள் சம்பவிக்குமென்று யுத்தியாற் பிரதிபாதிக்கின்றார் :—

## சுலோகம்

ज्ञातेऽपि तावति ततोऽनतिरिक्तरूपे-
ष्यज्ञानतः स्फुरणमस्फुरणं च दृष्टम् ।
दूरस्थयोर्ननु वनस्पतिवस्तुनोस्तद्-
भेदो न दृष्टिविषयोऽवगते च ते नः ॥ ४४ ॥

## பதவுரை

**तावति** – தன்மாத்திரமும் (விருக்ஷமே வடிவமானதும்)

**ततोऽनतिरिक्तरूपेऽपि** – விசேஷத்தினும் (விருக்ஷத்தினும்) வேறாகாததுமான

**ज्ञातेऽपि** – இப்படிப்பட்ட வஸ்து (பேதவடிவ விருக்ஷம்) அறியப் பட்டதாயினும்

**अज्ञानतः** – அவித்தையின் வசத்தால்

**स्फुरणम्** – (அதற்குப்) பிரதீதியும்

**अस्फुरणं च** – அப்பிரதீதியும்

**दृष्टम्** – பார்க்கப்பட்டது

[ எங்கே காணப்பட்டது என்னுமிடத்துக் கூறுகின்றார் ]

**दूरस्थयोः** – வெகுதூரத்திலிருக்கின்ற

**वनस्पति वस्तुनोः** – இரண்டு விருக்ஷங்களின்

**तद्भेदः** – பிரசித்த பேதமானது

**दृष्टिविषयः न** – நேத்திரத்திற்கு விஷயமன்றும்

**ते च** – அவ்விருக்ஷங்களிரண்டும்

**नः** – நம்மால்

**ननु** – நிச்சயமாக

**अवगते** – அறியப்பட்டனவேயாம்

## *விசேஷவுரை*

தூரத்திலுள்ள இரண்டு விருக்ஷத்தின்கண் இவ்விருக்ஷம் ஒன்றும் என்னும் பிராந்தியுண்டாகின்றது. ஆண்டு அனவஸ்தை தோஷத்தின் பயத்தாலும் அன்னியோன்னியாபாவத்தின் பிரதியோகியையும் பிர மாணத்தையும் நிரூபிக்க முடியாமையாலும் பேதமானது விருக்ஷ சொரூபத்தினும் பின்னமன்றும்: விருக்ஷம் பிரதீதியாயினும் விருக்ஷ வடிவ பேதம் பிரதீதியாகவில்லை. இவ்வாறு விருக்ஷத்தின்கண் ஞாதத் தன்மை அஞ்ஞாதத்தன்மைகள் காணப்பட்டன என்பது பொருள். விருக்ஷங்கள் நம்மாலறியப்பட்டன. அவற்றின் பேதமோ அவற்றோடு பின்னமாயினும் நேத்திரத்திற்கு விஷயமின்றும் என்பது பொருள்.

[அற்றேல் கூறிய பிரமஸ்தலத்திலும் விருக்ஷத்தன்மையால் ஸ்புரணமும் பேதத்தன்மையால் அஸ்புரணமுமிருக்கின்றது. அதுவும் (விருக்ஷத்தன்மையும் பேதத்தன்மையும்) பரஸ்பரம் பின்னமேயாமென்னுஞ் சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு விருக்ஷத்தினும் வேறுகாதது எனப்பட்டது].

வெவ்வேறு சத்தங்களால் பிரதிபாதிக்கப்படுந் தன்மையால் பேதமுளதேனும் சொரூபத்தால் பேத வடிவம் விருக்ஷத்தினும் அபின்னமேயாமென்பது பொருள். இதனானும் ஞாதவஸ்துவிற்கு அஞ்ஞாதத்தன்மை விருத்தமின்றாம்:— "நீ கூறிய பொருளை யானறியேன்" என்று விளங்குகின்ற பொருளிலேயே அதன் அஞ்ஞானம் அநுபவிக்கப்படுதலால் ஞானம் போன்று அஞ்ஞானமும் விஷயத்தால் நிரூபிக்கத்தக்கதாதலினானும் ஸவிஷயக அஞ்ஞானத்தின்கண் விஷயமே விசேஷணமாதலானும் அறியப்பட்டதுவே விசேஷணமாதலானும் என்க.

ஸவிஷயக அஞ்ஞானத்தின்கண் அறியப்பட்ட சாமான்னிய அம்ஸமே அஞ்ஞானத்தை நிரூபிப்பதாமென்று சொல்லற்க. பிரமாணத்தாலறியப்பட்ட அச்சாமானிய அம்ஸத்திற்கு அஞ்ஞான விஷயத்தன்மையின்மையின்.

சங்கை :—அன்னியனது புத்தியின் கண்ணுள்ள விசேஷத்தையறியக்கூடாமையின் விசேஷம் அஞ்ஞானத்திற்கு விசேஷணமாக எப்படியாகும்? எனின், அற்றன்று அக்ஞாதத்தன்மையால் சாக்ஷி வேத்தியத்தன்மைக்கு விரோதமின்மையினானும் அஞ்ஞானத்தால் மறைப்புற்ற சேதனத்தின்கண் அஞ்ஞானத்தின் அவிரோதம் அனுபவசித்தமாகலானும், நையாயிகரும் அனப்பியாசதசையின்கண் அறியப்பட்டதாயினும் ஜலாதியின்கண் சம்சயத்தை அங்கீகரித்தலின் எனக்காண்க. (44)

## அவதாரிகை

அற்றேல் சுக்தி முதலியவற்றின்கண் ஞாத அக்ஞாத அம்சங்களுக்கு இது, சுக்தி என்னும் இரு சப்தங்களின் வாச்சியத்தன்மையால் பேதங்காணப்படுதலின் ஒரு வஸ்துவிற்கு ஞாதத்தன்மை அக்ஞாதத்

தன்மையின்றும். என்னும் சங்கைக்கு ஆண்டு அம்ச பேதம் உள தாயினும் அப்பேதம் அஞ்ஞாதத்தன்மைக்குப் பிரயோஜகமன்றுமெனக் கூறுகின்றார் :—

*சுலோகம்*

**यत्रापि दैवगतितोऽस्त्यतिरिक्तभावो**
**रूपात्प्रतीतिविषयादितरत्र रूपे ।**
**तत्राप्यबोधघटनां प्रति नाङ्गभाव-**
**स्तस्यातिरिक्तवपुषोऽपुनरुक्तरूपात् ॥ ४५ ॥**

*பதவுரை*

**यत्र अपि** – எந்த சுக்தியாதி ஸ்தலத்தில்

**प्रतीतिविषयात् रूपात्** – அறியப்பட்ட இதமம்சத்தினின்றும்

**इतरत्र रूपे** – அறியப்படாத விசேஷ அம்சத்தின்கண்

**दैवगतितः** – தைவவசத்தால்

**अतिरिक्तभावः** – வேற்றுமை

**अस्ति** – உளதோ

**तत्रापि** – அவ்விடத்திலும்

**अपुनरुक्तरूपात्** – இது என்னும் சப்தவாச்சிய இதம் அம்சத்தினின்றும்

**अतिरिक्तवपुषः** – வேறான சுக்தியாதிக்கு

**अबोधघटनां प्रति** – அக்ஞாதத்தன்மையைச் சம்பாதித்தற்கு

**तस्य** – அந்த வேற்றுமைக்கு

**अङ्गभावः न** – ஏதுத்தன்மையின்றும் (45)

*அவதாரிகை*

இதந்துவ சுக்தித்துவ தர்ம விசேஷமே ஞாதத்தன்மை அக்ஞாதத் தன்மைகளின் அவச்சேதகமாம் எனின், அற்றன்றெனக் கூறுகின்றார்:—

*சுலோகம்*

**शुक्तीदमंशात्पृथगप्रतीता त्रिकोणता स्यान्ननु वस्तुवृत्त्या ।**
**तथाऽपि तत्स्थं न पृथक्त्वमिष्टं तदप्रबुद्धत्वनिमित्तभूतम् ॥**

*பதவுரை*

**अप्रतीता** –( இது ரஜதமென்னும் அத்தியாச காலத்தில்) அறியப்படாத

**त्रिकोणता** – முக்கோணத்தன்மை வடிவ சுக்தித்தன்மை

**शुक्तीदमंशात्** – அறியப்பட்ட சுக்தியினது இதமம்சத்தினின்றும்

**वस्तुवृत्त्या** – வாஸ்தவமாக

**पृथक् स्यात्** – பின்னமாம்

**ननु** – இது நிச்சயம்

**तथाऽपि** – அங்ஙனமாயினும்

**तत्स्थम्** – அச்சுத்தியின் கண்ணுள்ள

**पृथक्त्वम्** – வேற்றுமையானது

**तदप्रबुद्धत्वनिमित्तभूतम्** – சுக்தியின் அக்ஞாதத்தன்மைக்கு நிமித்தமாக

**न इष्टम्** – அங்கீகரிக்கப்படுவதின்றும் (46)

*அவதாரிகை*

எதனுல் சம்மதிக்கப்படுவதின்று எனின் கூறிய வியபிசாரத்திஞலேயே எனக்கூறுகின்றூர்:—

*சுலோகம்*

**यतः प्रपश्यन्नपि भेदिनः स्वं वनस्पते रूपमभिन्नमस्मात् ।**
**न भेदमस्य प्रतिपद्यतेऽक्ष्णा वनस्पतेः पार्श्वगतात्परस्मात् ॥**

## பதவுரை

**यतः** – யாதொரு காரணத்தால்

**भेदिनः** – பேதமுடைய

**वनस्पतेः** – விருக்ஷத்தின்

**स्वं रूपम्** – தனது அசாதாரண வடிவத்தை

**प्रपश्यन् अपि** – பார்க்கின்றவனுயினும்

**अस्मात्** – இந்த விருக்ஷத்தினின்றும்

**अभिन्नम्** – அபின்னமான

**पार्श्वगतात्** – சமீபத்திலுள்ள

**परस्मात् वनस्पतेः** – இதர விருக்ஷத்தினின்றும்

**अस्य भेदम्** – இதனிடத்திலுள்ள பேதத்தை

**अक्ष्णा** – நேத்திரத்தால்

**न प्रतिपद्यते** – ஒருவனும் அறிகிறதில்லை அதனுற் சம்மதமின்று

## விசேஷவுரை

அபின்னமான பேதத்தை எனக்கூட்டுக சொரூபத்தால் தரும தருமிகளுக்கு அபேதமுளதாயினும் அதாவது பேதவடிவ தருமத்திற்கும் விருக்ஷவடிவ தருமிக்கும் அபேதமிருக்கினும் பேதவடிவ தருமத்தின்கண் அஞ்ஞாதத்தன்மையும் விருக்ஷவடிவ தருமியின்கண் ஞாதத்தன்மையும் காணப்படுதலின் சாமானிய ரூபத்தாலும் விசேஷ ரூபத்தாலும் பேதம் அஞ்ஞாதத்தன்மைக்குப் பிரயோஜகமன்றும் என்பது கருத்து. (47)

## அவதாரிகை

அநுயோகியினும் பேதம் பின்னமாம் என்னும் வாதியின் மதத்தின் கண்ணும் ஞாதவஸ்துவிற்கு அஞ்ஞாதத்தன்மை விருத்தமன்றுமெனக் கூறுகின்றார் :—

## சுலோகம்

**सप्रत्यभिज्ञनयनोत्थधियो घटादेः**
**स्वाभाविकात्स्ववपुषोऽनतिरिक्तरूपः ।**

स्थेमाऽप्रबोधविषयो विषयत्वमेती-
त्यङ्गीकृतं ननु मितेऽपि घटादिकेऽर्थे ॥ ४८ ॥

*பதவுரை*

**घटादिकेऽर्थे** – குடம் முதலிய பதார்த்தங்கள்

**मितेऽपि** – பிரத்தியக்ஷாதிப் பிரமாணத்தால் அறியப்பட்டன வாயினும்

**घटादेः** – அக்குடம் முதலியவற்றின்

**स्वाभाविकात्** – இயற்கையான

**स्ववपुषः** – தனது வடிவத்தினின்றும்

**अनतिरिक्तरूपः** – அபின்ன வடிவ

**स्थेमा** – ஸ்திரத்தன்மை

**अप्रबोधविषयः** – முன்பு அஞ்ஞானத்திற்கு விஷயமாகி (அறியப் படாததாகி)

**सप्रत्यभिज्ञनयनोत्थधियः** – பின்னர் சம்ஸ்காரத்தோடுகூடிய நேத்திரத்தாலுண்டான பிரத்திய பிஞ்ஞைவடிவ ஞானத்திற்கு

**विषयत्वम् एति** – விஷயத்தன்மையையடைகின்றது

**इति अङ्गीकृतम् ननु** – என்று வித்துவான்களால் அங்கீகரிக்கப் பட்டதல்லவா ?

*விசேஷவுரை*

அல்லது **सप्रत्यभिज्ञनयनोत्थधियः**–பிரத்தியபிக்ஞையோடுகூடிய புருடனது நேத்திரத்தாலுண்டான அதுவேயிக்குடமென்னும் ஞானத்திற்கு என்று பொருள். ஸ்திரத்தன்மை என்பது குணமோ அல்லது கிரியையோ அல்லது தருமாந்தரமோ அன்று. மற்றோர் வஸ்துவின் சொரூபமே. முன்பின் கால சம்பந்தத்தை நிமித்தமாகக்கொண்டு ஸ்திரத்தன்மையென கூறப்படுகின்றது.

இவ்வாறு க்ஷணிகவாதிகளுக்கும் கடாதிகள் பிரத்தியக்ஷமாயினும் அவற்றின்கண் ஸ்திரத்தன்மையின் அஞ்ஞானமுளதாயின் ஞான சாம்ராஜ்யத்தின் எல்லையான பிரத்தியகான்மா அறியப்பட்டதாயினும் அதன்கண் அஞ்ஞானத்திற்கு விரோதமின்றாம். என்று கூறவேண்டியது என்னை ? என்பது கருத்து. ஈண்டிது சங்கிரகமாம் :— கடாதியின் ஸ்திரத்தன்மை முன்பின்கால சம்பந்தத்தால் வியக்தமாகின்றது. அதுவும் கடாதி சொரூபத்தினும் வேறன்றாம் மற்றே கடாதி சொரூபமாம். அபிஞ்ஞைப் பிரத்தியக்ஷத்தால் கடாதி அறியப்படுகின்றது ஆயினும் கடாதியின் அபின்னமான ஸ்திரத்தன்மையறியப்படுகிறதில்லை. அதாவது அறியப்பட்ட கடாதியின் சொரூபபூதமான ஸ்திரத்தன்மை அஞ்ஞாதமாயிருக்கின்றது. பின்னர் பிரத்தியபிஞ்ஞைப் பிரத்தியக்ஷத்தால் பிரதீதியாகின்றது. இவ்வாறு அம்ஸபேதமின்றிய ஒரே வஸ்துவின்கண் பானமும் அபானமும் எல்லோருக்கும் அநுபவசித்தமாம்.

### அவதாரிகை

இவ்வாறு நிரம்ஸமாகிய ஆன்மாவிற்கும் அதிஷ்டானத்தன்மை சித்தமாமென முடிக்கின்றார் :—

### சுலோகம்

एवं स्फुरत्यपि दृगात्मनि तत्स्वरूपे-
णास्फूर्तिभाजि परिकल्पिततोपपन्ना ।
स्वाज्ञानतो जगदिदं परमेश्वरोऽसौ
जीवोऽहमित्यपि विभागवतोऽल्पकस्य ॥ ४९ ॥

### பதவுரை

एवं – இவ்வாறு (முற்கூறிய பிரகாரம்)

दृगात्मनि – சித்ரூபப் பிரத்தியகான்மா

स्फुरत्यपि – விளங்குவதாயினும்

तत्स्वरूपेण – தற்பதார்த்த அத்வய அகண்டானந்த ரூபத்தால்.

अस्फूर्तिभाजि – விளங்காததான சருவாதிஷ்டான சேதனத்தின் கண்

**स्वाज्ञानतः** – தனது அஞ்ஞானத்தால்

**इदं जगत्** – இது சகத்து

**असौ परमेश्वरः**–அவன் பரமேஸ்வரன்

**अहं जीवः**–நான் சீவன்

**इति विभागवतः**–என்று வேற்றுமையினையுடைய

**अल्पकस्य अपि**–பரிச்சின்ன சமுசாரத்திற்கும்

**परिकल्पितता**–ஆரோபிதத்தன்மை

**उपपन्ना**–பொருத்தமேயாம்

## *விசேஷவுரை*

[பரிச்சின்ன வடிவத்தை விசேஷிக்கின்றார்] சகத் என. சாக்ஷிசித்த மாதலின் இதுவெனப்பட்டது. பரோக்ஷமாதலின் அவன் எனப் பட்டது. வேற்றுமை-நாநாத்தன்மை. பிரகாசிக்கின்ற சிதான்மாவின்கண் இல்லை, விளங்கவில்லை என்னும் வியவகார யோக்கியத்தன்மை வடிவ ஆவரணமின்றாம். அங்ஙனமாயினும் பிரத்தியகான்மாவோடு அத்தியந்தம் அபின்னமான அத்துவய ஆனந்தவடிவதில் அத்துவய ஆனந்தம் இல்லை, விளங்கவில்லை என்று அநுபவிக்கப்படுந்தன்மை யானேயே அவ்வாவரணம் அங்கீகரிக்கப்படுகின்றது. அஞ்ஞான ஆவிருதத்துவம் என்பதற்கு அஞ்ஞானத்தாற் சூழப்பட்டது எனப் பொருள் கொள்ளின் விரோதமுண்டாம். அப்படிப் பொருள் கொள்வதில்லை. மற்றோ கூறிய வியவகாரயோக்கியத்தன்மையேயாம் என்பது கருத்து. (49)

## *அவதாரிகை*

இவ்வாறு பரிச்சின்ன அஹங்காராதிதுவைதப் பிரபஞ்சத்திற்கு அத்தியஸ்தத்தன்மை சாதிக்கப்பட்டபோது பந்தமும், அதன் கண் அநர்த்தத்தன்மையும், அதன் காரணமும், மோக்ஷமும், அதன் கண் புருஷார்த்தத்தன்மையும், அதன் காரணமும் ஆகிய ஆறும் சித்தித்தது எனக் கூறுகின்றார் :—

## சுலோகம்

अल्पं रूपं बन्धनं प्रत्यगात्मा
बद्धोऽनेन स्वच्छचैतन्यमूर्तिः ।
स्वात्माज्ञानं कारणं बन्धनेऽस्य
स्वात्मज्ञानाच्चन्निवृत्तिश्च मुक्तिः ॥ ५० ॥

### பதவுரை

**अल्पं** – பரிச்சின்ன கர்த்திருத்துவாதியும்

**रूपम्** – நாமரூபான்மகத்துவைதப் பிரபஞ்சமும்

**बन्धनम्** – பிரத்தியகான்மாவிற்குப் பந்தனமாம் (விலங்காகு மென்பது பொருள்)

ரூபிக்கப்படுகின்றது ரூபம் என்னும் வியுத்பத்தியினுல் நாமரூப கர்மவடிவம் ரூபமாம். அத்தன்மைய ரூபமும் பரிச்சின்ன கர்த்திருத்துவாதியும் வியாபக வடிவ ஆன்மாவிற்குப் பந்தனம்போன்றிருத்தலின் பந்தனமாம். என்பது பொருள். [அற்றேல் பரிச்சின்ன வடிவ கர்த்திருத்துவாதி துவைதப் பிரபஞ்சத்திற்கு அநர்த்தத்தன்மை எதனுலென்னும் சங்கைக்குக் கூறுகின்ருர்]

**अनेन** – இந்தப்பந்தனத்தால்

**स्वच्छचैतन्यमूर्तिः** – இயற்கையாகவே பரிசுத்த சேதனவடிவு

**प्रत्यगात्मा** – பிரத்தியகான்மாவானது

**बद्धः** – கட்டுப்பட்டுள்ளது

தர்ம தர்மிகளின் அத்தியாசவடிவமான பரிச்சின்ன ரூபத்தால் ஆன்மா கட்டுப்பட்டுள்ளது. சுபாவமாக சுத்தமாயினும் அசுத்தி அடைந்ததுபோன்றும், ஞானமுடையதாயினும் அஞ்ஞன் போன்றும் ஆனந்த சொரூபமாயினும் பசி தாகம் முதலிய நாநாவித துக்கமாகிற காட்டக்கினியினுல் தகிக்கப்பட்ட சிரசுடையவன்போன்றும், எபபோதும் மிகுதியாகச் சுழல்கின்றது.

[ அற்றேல் கூடஸ்த அசங்க சித்தேகரசமாயிருந்தும் இவ்வான்மா இப்படிப்பட்ட தசையை எதனாலடைந்தது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார். ]

**अस्य** – பிரத்தியகாத்மாவின்

**बन्धने** – கட்டுப்பாட்டில்

**कारणम्** – காரணமானது

**स्वात्म अज्ञानम्** – தனது சொரூபத்தின் அஜ்ஞானமேயாம்

தன்னையே ஆஸ்ரயமாகவும் விஷயமாகவும் உடைய அஞ்ஞானமே பிரத்தியகான்மாவிற்குப் பந்தகாரணமாம், அந்நியமன்று என்பது பொருள்.

[ அற்றேல் சுவாபாவிக அஞ்ஞானமாகிற பாழுங்கிணற்றில் முழுகிக் கிடப்பவனும் பராதீனனுமான இப்படிப்பட்ட ஜீவனுக்கு பந்தத்தின் நிவர்த்தியெதனாலாம், எனின் கூறுகின்றார். ]

**स्वात्मज्ञानात्** – தனது சொரூப ஞானத்தினால்

**तन्निवृत्तिः** – அஞ்ஞானதத்தின் நிவிருத்தியாம்

பிரத்தியகான்மாவிற்கு அத்வயானந்த பிரம்மத்தோடு அபேதமாக யாதொரு ஞானமுண்டோ அதனானேயே இவனுக்கு காரணச்சித பந்தத்தின் நிவர்த்தியாம் என்பது பொருள்.

[ அந்நிவர்த்தியின்கண் உபாதேயத் தன்மையைக் கூறுகின்றார். ]

**मुक्तिः च** – அதுவே மோக்ஷமாம்.

சர்வஅனர்த்தங்களினின்றும் விடுபட்ட பூர்ணானந்தத்தின் பிராப்தி வடிவமாதலால் பரமபுருஷார்த்தமாமென்பது பொருள். (50)

## அவதாரிகை

அற்றேல்; அநாதி பாவவடிவ அஞ்ஞானத்திற்கு பிரம்மத்திற்குப் போன்று நிவிருத்தி சம்பவியாமையின் அதன் நிவிருத்திவடிவ மோக்ஷமாகிய பயன் எப்படியாமென்று ஆசங்கித்து அவ்வஞ்ஞானத்திற்கு மித்தியாத்தன்மையினால் ஞான நிவர்த்தியத்தன்மையைச் சாதிக்கின்றார்.

### சுலோகம்

अज्ञानमप्यविदुषोऽस्य न तु स्वतोऽस्ति
चैतन्यनिर्विकृतिताद्वयताविरोधात् ।
अज्ञातताऽप्यनवबोधनिबन्धनैव
नाऽऽत्माश्रयत्वमपि चोदयितव्यमत्र ॥ ५१ ॥

### பதவுரை

**अज्ञानम् अपि** – அஞ்ஞானமும்

**अविदुषः** – அஞ்ஞானிக்கு

**अस्य** – பிரத்தியகான்மாவின்கண் உளது.

[ அஞ்ஞபுருஷனுக்குத் தனதான்மாவின்கண் அஞ்ஞானத்தின் சம்பந்தம் சுவாபாவிகமா ? அல்லது கற்பிதமா ? முதற்பக்ஷம் சரியன்றெனக் கூறுகின்றார் ]

**स्वतः तु** – பாரமார்த்திகமாகவோ

**न अस्ति** – இன்றாம்.

[ எதனாலின்றாம் என்னுமிடத்துக் கூறுகிறார் ]

**चैतन्यनिर्विकृतिता** – ஆன்மாவின் சேதனத்தன்மை நிர்விகாரத் தன்மை

**अद्वयता विरोधात्** – அத்துவிதீயத்தன்மைவடிவ சொரூபத்தோடு அஞ்ஞானத்திற்கு விரோதமிருத்தலின்

சுவாபாவிகமாக ஆன்மாவின்கண் அஞ்ஞானமிருக்குமாயின் அது வாஸ்தவமாகும். சொப்பிரகாச சிதான்மாவின்கண் வாஸ்தவமாக அஞ்ஞானம் இருக்க யோக்கியமன்றாம். பிரகாசத்திற்கும் அந்தகாரத்திற்கும் விரோதமாதலின். அஞ்ஞானம் ஆன்மாவின் தருமமாகுமாயின் சொயம் அஞ்ஞானம் ( ஞானத்தால் ) நசிக்கின்றதாய் ஆன்மாவை விகாரப் படுத்தும், " தருமமானது விருத்தியாகின்றதும் குறைகின்றதுமாகி தருமியை விகாரியாக ஆக்குகின்றது " என்னும் நியாயத்தால், அஞ் ஞானத்தை வாஸ்தவமென அங்கீகரிக்கின் துவைதத்தின் அடை-

வுண்டாம் ஆகவே சேதனத்தன்மை நிருவிகாரத்தன்மை அத்துவயத் தன்மைகளைப் பிரதிபாதிக்கும் சுருதிக்கு விரோதம்வரும், என்பது பொருள்.

[ இரண்டாவது பக்ஷத்தையங்கீகரிக்கின்றார். ]

**अज्ञातता अपि** – ஆன்மாவின்கண் அஞ்ஞான சம்பந்தமும்

**अनवबोधनिबन्धना एव** -அஞ்ஞானத்தையே காரணமாகவுடையது

அஞ்ஞான சம்பந்தமும் என்பதிலுள்ள உம்மை சத்தம் நீக்கப் பொருளில் வந்தது. அஞ்ஞானத்திற்கு கற்பிதத்தன்மை சித்தித்தபோது மத்தியான்ன காலத்தில் சூரியமண்டலத்தில் கோட்டான் முதலியவற்றால் கற்பிக்கப்பட்ட அந்தகாரம் போன்று விரோதமின்றாம் என்பது கருத்து. [அற்றேல் இவ்வாறு அஞ்ஞானத்தாலேயே அஞ்ஞான கற்பனையை யங்கீகரிக்கின் ஆன்மாசிரயதோஷத்தின் பிராப்தியாமெனின் அன்றெனக் கூறுகின்றார்].

**अत्र** – இவ்வர்த்தத்தில்

**आत्माश्रयत्वम् अपि** – ஆன்மாசிரய தோஷமும்

**न चोदयितव्यम्** – சங்கிக்கத்தக்கதன்றாம்.

அஞ்ஞானம் அநாதியாம் அஞ்ஞானத்தினதீனமான அஞ்ஞாதத் தன்மையும் ( அஞ்ஞான சம்பந்தமும் ) அநாதியாம் ஆதலின் ஆன்மா சிரயதோஷம் இல்லை என்பது கருத்து. அல்லது அநிர்வசனீயவாதத் தின்கண் ஆன்மாசிரய தோஷத்தால் அஞ்ஞானத்தினநுபபத்தி தூஷண மின்றாம். சில ஆசாரியர் சத்காரியவாதியாகிய சாங்கியன் முதலானோர்க்கு அபிவியத்தியின் கண்ணும் அசத்காரியவாதியாகிய நையாயிகன் முதலானோர்க்கு உற்பத்தியின்கண்ணும் ஆன்மாசிரய தோஷமுண்டாகாத போது மாயாவாதிக்குக் கூறவேண்டியதென்னை என்னும் பொருளைக் கூறுகின்றனர். (51)

## அவதாரிகை

அஞ்ஞானத்தாலேயே அஞ்ஞானத்தின் கற்பனையில் பிரமாணத் தைக் கூறுகின்றார் :—

### சுலோகம்

द्वारं तमोऽन्वयमपेक्ष्य दृशा हि दृश्यं
सङ्गच्छते सकलमत्र न नो विवादः ।
मोहोऽपि दृश्यवपुरत्र च संवदध्वे
तस्मात्तदन्वयनिमित्तमपीह मोहः ॥ ५२ ॥

### பதவுரை

**तमोऽन्वयम्** – அஞ்ஞான சம்பந்தமாகிய

**द्वारम्** – நிமித்தத்தை

**अपेक्ष्य** – அபேக்ஷித்து

**सकलं दृश्यम्** – கடம் முதலிய சருவத்திருசியப் பிரபஞ்சமும்

**दृशा** – அசங்க சித்ரூப ஆன்மாவோடு

**संगच्छते** – சம்பந்தித்திருக்கின்றது

**अत्र** – இவ்விஷயத்தில்

**नः** – நமக்கு

**न विवादः** – விவாதமின்றும்

[ ஏதுவின் அசித்தியை உத்தாரணஞ் செய்கின்றார் ]

**मोहः अपि** – அஞ்ஞானமும்

**दृश्यवपुः** – திருசியவடிவமாம்

நான் அஞ்ஞன் என்னும் அனுபவத்தால் என்பது பொருள்.

**अत्र** – இதன்கண்

**संवदध्वे च** – நீங்களும் சம்மதமுடையவராயிருக்கின்றீர்கள்.

**तस्मात्** – அக்காரணத்தால்

**इह** – ஆன்மாவின்கண்

**तदन्वयनिमित्तम् अपि** – அஞ்ஞான சம்பந்தத்தின் நிமித்தமும்

**मोहः** – அஞ்ஞானமேயாம்

## விசேஷவுரை

ஆன்மாவின்கண் அஞ்ஞான சம்பந்தம் அஞ்ஞானத்தாலுண்டானது. திருக் (ஞான) திருசிய சம்பந்தமாவதால் கட ஞான சம்பந்தம் போன்று. சாத்தியத்தின் சித்தியில் வியாப்தி, அங்கமாதலின் வியாப்தியை சூசிப்பிக்கும் பொருட்டு 'ஹி' சத்தமாம்.

பொருளிதுவாம்: யாதொரு காரணத்தால் அசங்கசேதனத்தோடு சகல கடாதி திருசியமும் சம்பந்திக்கின்றதாகி அஞ்ஞான சம்பந்தத்தை நிமித்தமாகக்கொண்டு ஆத்தியாசிகதாதான்மியத்தாலேயே சம்பந்திக்கின்றது. தாதான்மியத்தினும் வேறான சம்யோக சமவாயாதிகளை நிரூபிக்க முடியாமையின் என்க. 'न सङ्करो नापि च संयुतिस्तयोः' 'திருக் திருசியங்களுக்கு வாஸ்தவதாதாத்மியமும் சம்யோகமும் சம்பவியாது' என்பதாதியால் இந்நூலின் 3வது அத்தியாயத்தில் 233வது சுலோகத்தில் கூறுவர். "ஆன்மாவிற்கு அனான்மாவோடு வாஸ்தவ சம்பந்தம் பொருத்தம் (யுக்தியுக்தம்) அன்றாம்" என வார்த்திகமும் கூறுகின்றது. ஆதலால் எண்டு யாண்டு யாண்டு திருக்திருசிய சம்பந்தமோ ஆண்டு ஆண்டு அஞ்ஞானம் நிமித்தமாம். என்னும் வியாப்தியின்கண் விவாதஞ்செய்யத்தக்கது அன்றாம் என்பது பொருள்.

வியாப்தியின்கண் விவாதமாம். ஏதுவின் பக்ஷ தருமத்தன்மையின் கண் விவாதமின்றாம். ஆதலால் ஏது பக்ஷத்தின்கண் இருத்தலால் பக்ஷத்தின் கண்ணும் அஞ்ஞானத்தை நிமித்தமாகவுடையதாந்தன்மை யுளது என நிகமனஞ்செய்கின்றார். அக்காரணத்தாலெனை. (52)

## அவதாரிகை

அற்றேல் பிரபஞ்ச கற்பனையாலே சரிதார்த்தமான அஞ்ஞானத்திற்கு தன்னைக் கற்பிக்குந்தன்மை எப்படிக்கூடுமென்றுசங்கித்து தன்னையும் பிறவற்றையுங் கற்பிப்பது அஞ்ஞானத்திற்கு சுபாவமாதலாலெனக் கூறுகின்றார் :—

## சுலோகம்

संविद्धुरं वहति तद्विषयोपयुक्तां
स्वात्मन्यपि स्वरसतः स्वकरूपसिद्धेः ।

**कार्यप्रपञ्चपरिकल्पनमात्ममोहात्**
**मोहप्रकल्पनमपीति तथोपपन्नम् ॥ ५२ ॥**

### *பதவுரை*

**संवित्** – கடாதியின் ஞானம்

**तद्विषयोपयुक्ताम्** – தனது விஷய கடாதியின் வியவகாரத்தில் உபயோகியான

**धुरम्** – சத்தி வடிவ பாரத்தைத்

**वहति** – தாங்குகின்றது

**स्वात्मनि अपि** – சம்வித் வடிவ விஷயத்திலும்

**स्वकरूपसिद्धेः** – தனது வியவகார சித்தியின் பொருட்டு

**स्वरसतः** – சுபாவத்தாலேயே

**(धुरं वहति)** – அந்தப்பாரத்தை வகிக்கின்றது

**तथा** – (எப்படியோ) அப்படி

**आत्ममोहात्** – ஆன்மாவின் அஞ்ஞானத்தால்

**कार्यप्रपञ्चपरिकल्पनम्** – கடாதி காரியப் பிரபஞ்ச கற்பனையும்

**मोहप्रकल्पनमपि** – அஞ்ஞான கற்பனையும்

**उपपन्नम् इति** – பொருத்தமுடையதேயாம்

### *விசேஷவுரை*

எப்படிப் பிரத்தியக்ஷாதிப் பிரமாணத்தின் பயனுயுள்ள கடாதியின் ஞானம் தனது விஷய கடாதியின் சித்தியிலும் தனது சித்தியிலும் உபயோகமாயுள்ள, துரம்=அதன் விஷயத்தின் அஞ்ஞான சந்தேகாதியின் நிவிருத்திவடிவ பாரத்தை வஹிக்கின்றதோ, அதாவது கடாதி விஷயத்தையும் ஞானவடிவ தன்னையும் கடாதி ஞானம் அன்னியத்தின் அபேக்ஷையின்றியே சாதிக்கின்றது, (பிரகாசிக்கின்றது) என்பது பொருள்.

அப்படி அஞ்ஞானத்தாலேயே பிரபஞ்ச கற்பனையும் அஞ்ஞான கற்பனையும் யுக்திக்குப் பொருத்தமாம். ஞானம் வேறு ஞானத்திற்கு விஷயமேயாம் தனக்கு தனது விஷயத்தன்மை சம்பவியாமையின் என்னும் சங்கை சுபாவத்தால் என்பதனுல் நிவர்த்திக்கப்பட்டது. ஞானத்தின் கண் வேறு ஞான விஷயத்தன்மையையங்கீகரிக்கின் அநவஸ்தா தோஷம் பிராப்தியாம். தனது சத்தையில் சம்சயாதியின்மையினுல் ஞானமானது தனது வியவகாரத்தில் அந்நியத்தின் அபேக்ஷையின்றியதேயாம் என்பதும் கூறப்பட்டதேயாகும். (53)

### அவதாரிகை

ஞானத்தின் ஸ்வப்பிரகாசத் தன்மையில் விவாதம் செய்யும் பிரதிவாதியைக் குறித்து வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்ருர் :—

### சுலோகம்

आत्मा प्रसाधयति वेद्यपदार्थजातं
स्वात्मानमप्यवगतिक्षमशक्तियोगात् ।
स्वाज्ञानमेवमिदमात्मपरप्रक्लृप्तौ
शक्तं भवेदिति न किंचन दौस्थ्यमस्ति ॥ ५४ ॥

### பதவுரை

आत्मा — பிரமாதாவாகிய ஜீவன்

अवगतिक्षमशक्ति योगात् — பிரகாசஞ் செய்வதில் சமர்த்தமான ஞானசக்தியின் சம்பந்தத்தால்

( அதாவது ஞாதிருத் தன்மையை நிர்வகிக்கின்ற சாமர்த்தியத்தின் சம்பந்தத்தால் )

वेद्यपदार्थजातम् — திருசியகடாதி பதார்த்தத்தின் சமுதாயத்தினையும்

स्वात्मानं अपि — தனது சொரூபத்தையும்

**प्रसाधयति** – சித்திக்குட்படி செய்கின்றது (விளக்குகின்றது என்பது பொருள்)

**एवम्** – இவ்வாறே

**इदं** – அநுபவசித்தமான

**स्व अज्ञानम्** – தன்னையே ஆசிரயமாகவும் விஷயமாகவுமுடைய அஞ்ஞானம்

**आत्मपरप्रक्लृप्तौ** – தனது கற்பனையிலும் தனது காரிய துவ்வைதப் பிரபஞ்சத்தின் கற்பனையிலும்

**सक्तं भवेत्** – சாமர்த்திய முடையதாக ஆகும்

**इति** – இவ்வாறு அங்கீகரிப்பதில்

**किंचन दौस्थ्यम्** – அற்பமாவது தூஷணம்

**न अस्ति** – இன்றும்.

### *விசேஷவுரை*

எப்படி ஆன்மாவானது வேத்தியகடாதியையும் தன்னையும் பிரகாசஞ் செய்வதில் சாமர்த்தியமுள்ள ஞானவடிவ குண சம்பந்தத்தால் சாதிக்கின்றதோ. அப்படி அஞ்ஞானமும் சக்தி வசத்தால் தன்னையும் பிறவற்றையுங் கற்பிப்பதாக ஆகும். ஆன்மாவின் காரிய வியவ காரத்தில் சககாரியாதலால் ஞானம் சக்தியெனப்பட்டது. (54)

### அவதாரிகை

அற்றேல், ஆன்மாவிற்கு ஞானமெனப் பெயரிய சக்தியையுடைய தாந்தன்மையால் சுவபர சாதகத்தன்மையிருக்குக். அங்கியத்தின் சக்தி வடிவமாயுள்ள அஞ்ஞானத்திற்கோ, வேறு சக்தியின்மையின் வேறு அஞ்ஞானமே அஞ்ஞானத்தின் சாதகமாக் அங்கீகரிக்கத்தக்கதாம். இந்தப் பிரகாரம் அந்த அங்கிய அஞ்ஞானத்திற்கும் சாதகமாக வேறு அஞ்ஞானம் அங்கீகரிக்கத்தக்கதாம். இவ்வாறு அங்கிய அங்கிய அஞ் ஞானங்களையங்கீகரிப்பதில் அநவஸ்தா தோஷம் பிராப்தியாம். என்னுஞ் சங்கைக்கு பரதிருஷ்டியினலேயே (அதாவது லௌகிகமதப்படி) வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் :—

சுலோகம்

**भेदं च भेद्यं च भिनत्ति भेदो यथैव भेदान्तरमन्तरेण ।**
**मोहं च कार्यं च बिभर्ति मोहस्तथैव मोहान्तरमन्तरेण ॥**

பதவுரை

**यथा** – எப்படி
**भेदः** – அந்நியோன்னியாபாவமானது
**भेद्यं च** – அநுயோகிப் பிரதியோகிவடிவ கடபடத்தையும்
**भेदं च** – பேதமாகிய தன்னையும்
**भेदान्तरं अन्तरेण एव** – வேறு பேதமின்றியே
**भिनत्ति** – பரஸ்பரம் வியாவிருத்தியைச் செய்கின்றதோ
**तथा मोहः** – அப்படியே அஞ்ஞானமும்
**मोहान्तरमन्तरेण एव** – அந்நிய அஞ்ஞானமின்றியே
**मोहं च** – அஞ்ஞானமாகிய தன்னையும்
**कार्यं च** – தனது கார்யமாகிய துவைதப் பிரபஞ்சத்தினையும்
**बिभर्ति** – கற்பிக்கின்றது

*விசேஷவுரை*

எப்படி பேதமானது கடபடாதிகளைப் பரஸ்பரம் பின்னமாகப் போதிக்கின்றதோ பேதமாகிய தன்னையும் பேத்திய கடாதியினின்றும் பின்னமாகப் போதிக்கின்றதோ தன்னைப் பிரதியோகியாகவுடைய வேறு பேதத்தை அபேக்ஷிக்கின்றதில்லையோ அனவஸ்தாதோஷம் வருதலின். அப்படியே அஞ்ஞானமும் வேறு அஞ்ஞானமின்றியே அஞ்ஞானமாகிய தன்னையும் தனது காரியத்தையுங் கற்பிக்கின்றதென்பது பொருள். (55)

*அவதாரிகை*

இந்தப் பிரகாரம் பாஷியத்தில் கூறப்பட்ட பந்தத்தின் மித்தியாத் தன்மை சாதிக்கப்பட்டபோது சாஸ்திராரம்பத்தின் உபோத்காதத்தில் ஆதியில் அத்தியாசம் பாஷ்யகாரரால் வர்ணிக்கப்படுமாயின் சூத்திரக்

காரரான வியாசபகவானுல் அவ்வத்தியாசம் ஏன் உபேக்ஷிக்கப்பட்டது. என்னும் சங்கைக்கு பாஷியத்திற்கூறிய பொருளனைத்தும் சூத்திரங்களிலுள்ளதேயாமென்னும் நியாயத்தால் சூத்திரத்தாற் கூறப்படாத பொருள் பாஷியத்திற்கு விஷயமாகாமையின் அர்த்தாபத்தி மார்க்கத்தால் சூத்திரிக்கப்பட்டதே எனக்கூறுகின்றார்.

### சுலோகம்

**ब्रह्मज्ञानं सूचयन्सूत्रकारो बन्धोत्पत्तेर्हेतुविध्वंसनाय ।**
**एतत्सर्वं सूचयामास तस्मादेतत्सर्वं भाषते भाष्यकारः ॥ ५६ ॥**

### பதவுரை

**बन्ध उत्पत्तेः** – கர்த்திருத்துவாதி சம்சாரவடிவ பந்தத்தின் உத்பத்திக்கு

**हेतुविध्वंसनाय** - காரணமாயுள்ள அஞ்ஞானத்தினுசத்தின் பொருட்டு

**सूत्रकारः** – பிரம்மசூத்திரத்தின் கர்த்தாவான வியாசபகவான்

**ब्रह्मज्ञानं** – பிரம்மக்ஞானத்தை

**सूचयन्** – " அதாதோ பிரம்மஜிக்ஞாஸா " என்னும் சூத்திரத்தால் பிரதிபாதிக்கின்றவராய்

**एतत् सर्वम्** – முற்கூறிய அத்தியாச சாதன கிரந்தமனைத்தையும்

**सूचयामास** – குறிப்பித்தனர்

**तस्मात्** – அக்காரணத்தால்

**एतत् सर्वम्** – அத்தியாசத்தின் சாதகமான கிரந்தமனைத்தையும்

**भाष्यकारः** - சங்கராசார்ய சுவாமிகள்

**भाषते** – வர்ணிக்கின்றனர்.

### விசேஷவுரை

" அதாதோ பிரஹ்ம ஜிக்ஞாஸா " என்னுஞ் சூத்திரத்தால் முமுக்ஷுவுக்கு பிரம்மஜிக்ஞாஸையை உபயோகித்தலின், பிரம்மக்ஞான அதிகாரியின்கண் பந்தஹேதுவான அக்ஞானத்தின் துவம்ச வடிவ

மோக்ஷம் விசேஷணமாம். அத்தகைய மோக்ஷத்திற்கு பிரம்மஞானம் சாதகமாம் என பிரதிபாதிக்கின்றவராய் பந்தம் சத்தியமாயின் ஞான நிவர்த்தியத்தன்மை பொருந்தாமையின் முற்கூறிய அத்தியாச சாதனக் கிரந்தத்தை வியாசமுனி குறிப்பித்தனர் என்பது பொருள். அதனுல் சூத்திரத்திற் சொல்லப்படாத பொருளை வர்ணித்தல் பாஷியக்காரருக்கு இன்ரும். எனக் கூறுகின்ருர் :— அக்காரணத்தால் என.

அற்றேல், ஞானம் அத்தியஸ்த பதார்த்தத்தினையே நிவர்த்திப்பது என்னும் நியமமின்ரும். எதனுலெனின் பூர்வஞானத்திற்கு உத்தர ஞானத்தாலும் ஞானவிஷய்க இச்சைக்கு தனது விஷய ஞானத்தாலும் சோகத்திற்கு பிரிய மித்திரனது தரிசனத்தாலும் பாபத்திற்குச் சேது தரிசனத்தாலும், விஷத்திற்குக் கருடத்தியானத்தாலும், பிரவிருத்திப் பிராகபாவத்திற்கு பிரவிருத்தியையுண்டுபண்ணுகின்ற ஞானத்தாலும் நிவர்த்தி காணப்படுதலின் எனின், அற்றன்று —

தத்துவக் ஞானத்தன்மையினுல் தத்துவ ஞானத்திற்கு அத்தியாஸ நிவர்த்தகத்தன்மை விவக்ஷிக்கப்பட்டமையின், அதாவது அத்தியஸ்தத்தின் கண்ணுள்ள நிவர்த்தியத்தன்மையால் நிரூபிக்கப்பட்ட நிவர்த்தகத் தன்மையை வரைந்துகொள்வது தத்துவஞானத் தன்மையாம். உத்தர ஞானம் விரோதி குணத்தன்மையால் பூருவ ஞானத்தினையும் இச்சையின் விஷயமான ஞானம் விஷய சித்தித்தன்மையால் இச்சையினையும் பிரிய மித்திர தெரிசனம் பிரியமித்திர தெரிசனத்தன்மையால் சோகத்தையும் சேதுதரிசனம் விதிக்கப்பட்ட கிரியைத்தன்மையால் பாபத்தினையும் கருடத்தியானமும் விதிக்கப்பட்ட கிரியைத் தன்மையால் விஷத்தினையும் பிரவர்த்தக ஞானம் பிரவிருத்தி சாமக்கிரித் தன்மையால் பிரவிருத்திப் பிராக்பாவத்தையும் நிவர்த்திப்பனவாம். தத்துவஞானத் தன்மையால் அன்ரும்; ஆதலால் ஞானம் அத்தியஸ்தத்தையே நிவர்த்திப்பது என்னும் நியமத்திற்கு பங்கமின்ரும்.

பிரகிருதத்திலும் (அதாவது பிரம்மஞானமும்) ஆன்மஞானத் தன்மையாலேயே நிவர்த்தகமாகட்டுமே எனின் அற்றன்று.

நான் என்னும் ஞானமும் ஆன்மஞானமாம் அதனுலும் பந்த நிவிருத்தியுண்டாதல் வேண்டுமாகலின், நான் பிரம்மமாயிருக்

கின்றேனென்னும் ஞானமே பந்தநிவர்த்தகமாமெனின் அதுவே தத்துவ ஞானமாம். **आत्मानं चेद्विजानीयात् अयमस्मीति पूरुषः** ‘இவ்வபரோக்ஷ பிரத்தியகபின்ன பிரம்மமே நானுகின்றேன்என புருஷன் தனதான்மாவை யறிவானுயின்’ என்பது முதலிய சுருதியினுல். தத்துவஞானத் தன்மை யால் நிவர்த்தகத் தன்மையும் நிவர்த்திக்கத்தக்க பந்தத்தின் மித்தியாத் துவமின்றிச் சித்திக்கிறதில்லை. அஃதெப்படியெனின் புத்தி முதலிய பிரபஞ்சத்தாலுபகிதமான பிரம்மத்தின் ஞானம் தத்துவ ஞானமாகின்ற தில்லை பிரம்மத்திற்கு வாஸ்தவமாக பிரபஞ்சத்தாலுபகிதத் தன்மை யின்மையின் மற்றோ விசுத்தப்பிரம்மத்தின் ஞானமே தத்துவஞானமாம். பிரம்மத்தின்கண் விசுத்தியும் பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவமேயாம். சத்தியபிரபஞ்சாசிரய பிரம்மத்தின்கண் அதே காலத்தில் பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவம் சம்பவிக்கிறதில்லை. அவர்த்தமான (வர்த்தமான காலத்திலில்லாத) அத்தியந்தாபாவம் சாக்ஷாற்காரத்திற்கு விஷயமாகின்ற தில்லை எதனுல் சாக்ஷாத்காரம் எதிர்கால நிஷ்பிரபஞ்சத் தன்மையை விஷயம்பண்ணும் ?

பிரபஞ்சத்தின் உபாதானத்தன்மையால் பிரம்மத்தின் ஞானமே தத்துவஞானமாகுக எனின் அற்றன்று கடாதிகாரியத்தின் உபாதானத் தன்மையால் மண் முதலியவற்றின் ஞானமுண்டாயினும் கடாதி காரியத்தின் நிவிருத்தி யுண்டாகாமையின். காணப்பட்டதினும் விபரீ தத்தின் கற்பனைத் தகுதியின்மையின்

ஆதலால் பிரபஞ்சத்தின் சத்துவ காலத்திலும் பிரம்மத்தின்கண் நிஷ்பிரபஞ்சத்தன்மையின் பிரமை சொல்லத்தக்கது அந்தப் பிரமையும் பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மையின்றிச் சம்பவிக்கிறதில்லை.

அப்படியாயினும் பிரபஞ்சமுடைய பிரம்மத்தின்கண் பிரபஞ்சத்தின் அபாவம் எப்படிக்கூடும் அதையுடையதன்கண் அதனத்தியந்தாபாவ மின்மையின் எனின்.

அற்றன்று பிரதியோகியின் சமானசத்தையுடைய பிரதியோகியின் அத்தியந்தாபாவமே பிரதியோகியின் அதிகரணத்திலிருப்பதின்றும். விஷமசத்தையுடைய அபாவம் பிரதியோகியின் அதிகரணத்துமிருக்கும், வியாவகாரிகப் பிரபஞ்சத்திற்கு ஆசிரயமான பிரம்மத்தின்கண் பிரபஞ்ச

காலத்திலும் பாரமார்த்திகாத்தியந்தாபாவத்திற்கு விரோதமின்மையின், இதனுலேயே விவரணக்கிரந்தத்தில் முக்காலத்திய நிஷேத ஞானத்திற்கு பரமார்த்தமாகப் பார்க்கப்பட்ட இரஜதாபாவ விஷயகத்துவம் கூறப் பட்டது, சுத்தியின்கண் இரஜதம் இருந்ததில்லை இருக்கின்றதில்லை இருப்பதில்லை என.

சுத்தியின்கண் பரமார்த்தமாகக் காணப்பட்ட யாதொரு மித்தை யாகிய ரஜதமுண்டோ அதனைப் பிரதியோகியாகவுடைய அபாவவடிவ அதிஷ்டானமே முக்காலத்திய நிஷேத ஞானத்திற்கு விஷயமாம். என்பது விவரணக்கிரந்தத்திற்குப் பொருளாம். கடையின்கண்ணுள்ள ரஜதாபாவம் முக்காலத்திய நிஷேதத்திற்கு விஷயமன்றும். கடையிலுள்ள ரஜதத்திற்கு சுத்திதேசத்திலுள்ள நிஷேதத்திற்கு விஷயமாந்தன்மையை யங்கீகரிக்கின் மித்தியாத்தன்மை சித்தியாதாகலின். ஈண்டு நாநா வானவை சிறிதும் இல்லை என்னுஞ் சுருதியால் காணப்படுகின்ற பிரபஞ்சத்தின் திரைகாலிக நிஷேதம் பிரம்மத்தின்கண் பிரதீதியாவது போன்று சுத்தியின்கண் தோற்றுகின்ற ரஜதத்திற்கே அதன்கண் திரைகாலிகாபாவம் பிரதீதியாதலின், கடத்திற்கு அதனபாவாபாவத் தன்மைபோன்று பாவவடிவ அதிஷ்டானத்திற்கும் ஆரோபிதத்தால் நிரூபிக்கப்பட்ட அபாவத்தன்மை விருத்தமின்றும்.

சில நூலாசிரியர் ரஜதத்திற்கு பரமார்த்தந்தன்மையாகாரத்தால் பிரதியோகியுடைய சுத்தியின்கண் யாதொரு திரைகாலிகாபாவமுண்டோ அதன்கண் விவரண கிரந்தத்திற்குத் தாற்பரியமாம். ரஜதத்தன்மையால் ரஜதத்தின் நிஷேதம் அக்கிரந்தத்திற்கு விஷயமின்றும் பரமார்த்தத் தன்மை ரஜதத்தினும் பின்னுதிகரணத்திலிருக்கும்போது பிரதியோகிக்கு மித்தியாத்தன்மையும் சித்திக்கின்றது எனக்கூறுகின்றனர். சருவப் பிரகாரத்தாலும் பிரபஞ்ச காலத்திலும் பிரம்மத்தின்கண் பிரபஞ்சத்தினபாவம் பொருத்தமுடையதேயாம். (56)

## அவதாரிகை

அத்தியாசபாஷியத்தின் வியாக்கியானத்தையுபஸம்ஹாரஞ் செய் கின்றவராய் சாஸ்திரத்திற்கு விஷயமும் பிரயோஜனமும் சம்பாவிக்கப் பட்டமையின் சாஸ்திரத்தின் ஆரம்பப் பிரதிஞ்ஞையை முடிக்கின்றார்:—

சுலோகம்

तस्माद्ध्यस्तमेतत्सकलमपि दृशौ भूमरूपातिरिक्तं
रूपं स्वाज्ञानमात्रादिति भवति परब्रह्मधीबाध्यमेतत् ।
ईशित्रादिप्रभेदप्रतिहतिफलकज्ञानदौस्थ्यापनुत्त्यै
श्रीमच्छारीरकार्थप्रकटनपटुताशालिशास्त्रं विदध्मः ॥ ५७ ॥

பதவுரை

**तस्मात्** – சூத்திரக்காரராலும் பாஷியகாரராலும் சாஸ்திரத்தின் விஷயப் பிரயோஜனங்களின் சித்தியின்பொருட்டு பந்தத்தின் மித்தியாத்தன்மை யுபபாதனஞ் செய்யப் பட்டமையின்

**भूमरूपातिरिक्तम्** – வியாபகவடிவ பிரம்மத்தினும் வேறான

**एतत् सकलम् अपि रूपम्** – பிரத்தியக்ஷ கருத்திருத்துவாதி திருசியப்பிரபஞ்சமனைத்தும்

**दृशौ** – சிதான்மாவின்கண்

**स्वाज्ञानमात्रात्** – ஆன்மாவின் அஞ்ஞானமாத்திரத்தாலேயே

**अध्यस्तं भवति** – ஆரோபிக்கப்பட்டதாகின்றது.

கருத்திருத்துவ போக்திருத்துவாதி சகலமும் சிதான்மாவின்கண் கேவல அஞ்ஞானமாகிய தோஷத்தாலேயே அத்தியஸ்தமாம். எதனால் எனில் கூறுகின்றார்-வியாபக என. வியாபகவடிவ பிரம்மத்தின்கண் அற்ப வடிவம் அத்தியஸ்தமாகவே சம்பவிக்கின்றது, அன்னியத்தின்கண் அன்னியத்தின் பிரதீதி வடிவ அத்தியாச லக்ஷணமிருத்தலின் என்பது பொருள்.

[அதனாலென்னையெனிற் கூறுகின்றார்.]

**इति** – ஆதலின்

**एतत्** – காணப்படுகின்ற அனைத்தும்

**परब्रह्मधीबाध्यम्** – நிருவிசேஷபிரம்மஞானத்தால் பாத்தியமாம்.

**ईशित्रादिप्रभेद** – ஈசுவரன் சீவன் முதலிய பேதாத்தியாசத்தின்

**वृत्तिफलक** – நிவிருத்தியைப் பயனாக வுடைய

**ज्ञानदौस्थ्य** – பிரம்மஞானத்தின் ( அசம்பாவனை முதலிய தோஷத்தால்) அதிருடத் தன்மையின்

**अपनुत्त्यै** – நிவர்த்தியின் பொருட்டு

**श्रीमत् शारीरक** – ஸ்ரீமத் பிரம்மசூத்திர பாஷ்யத்தின்

**अर्थ** – பிரம்மான்மாக்களின் ஐக்கியவடிவ அர்த்தத்தை

**प्रकटन** – பிரகாசஞ் செய்வதில்

**पटुताशालि** – குசலமாக விளங்குகின்ற

**शास्त्रम्** – இந்தப் பிரகரணவடிவ கிரந்தத்தை

**विदध्मः** – செய்கின்றோம்.

### *விசேஷவுரை*

திருசியப் பிரபஞ்சத்திற்கு அத்தியஸ்தத் தன்மை சித்திக்கும் போது பிரம்மஞான பாத்தியத் தன்மை சூத்திரத்தால் சித்தித்ததாக ஆகின்றது என்பது பொருள். அதனால் (சாரீரக சாஸ்திரத்தால்) விஷயம் பிரயோஜனம் முதலியவை சித்தித்தலின் ஸ்ரீமத் சாரீரக சாஸ்திரத்தின் விஷயமான பிரம்மான்ம ஐக்கியத்தின் அசம்பாவனை முதலிய தோஷத்தை நிவர்த்தித்தலால் யாதொரு பிரகடனமுண்டோ அதன்கண் படுத்துவவடிவ யாதொரு உபபத்தியின் அதிகத்தன்மையுண்டோ அதனோடு கூடியது இந்தக் கிரந்தம். சுருக்கமாகவும் விரிவாகவும் நான்கத்தியாய வடிவ பிரம்மசூத்திரத்தின் நியாயங்களைச் சங்கிரகித்தலால் இந்தப் பிரகரணம் சாஸ்திரம் போன்றிருத்தலால் சாஸ்திரமாம்.

[ இந்நூலைச் செய்வதன் பயனைக் கூறுகின்றார் ] ஈசுவரன் என. சீவேசுவராதிபேத கற்பனையின் நிவிருத்தியைப் பயனாகவுடைய தத்துவமசி மகாவாக்கியத்தாலுண்டான பிரத்தியக்ஷ ஞானத்திற்கு பிரதிபந்தத்தால் யாதொரு பலபரியந்தத் தன்மையினின்மை வடிவ அதிருடத் தன்மையுண்டோ அதனை நிராகரிப்பதற்கு இந்நூலைச் செய்கின்றோமென்று பொருள். பலபரியந்தத்தன்மை – அவித்தை முதலிய அனர்த்தங்களை நிவர்த்திக்குந் தன்மை. (57)

# பிரம்ம விசாரத்தின் கர்த்தவ்வியத் தன்மையை நிரூபித்தல்

## அவதாரிகை

இதர சாஸ்திரவிசாரத்தால் இந்நூல் சரிதார்த்தமன்ரும் என்று அவதாரிகை செய்கின்றவராய் முதலில் சங்கித்துச் சமாதானங் கூறுகின்ருர் அஃதாமாறு.—அற்றேல் பிரம்மம் அந்நியத்தால் சித்தித்ததாயின் அதன் விசாரத்தால் பயனின்ரும். அந்நிய பிரமாணத்தால் சித்திக்கவில்லை யெனின் அதனை விசாரித்தற்கு முடியாதாம். உத்தேசிய வஸ்துவின் ஞானம் விசாரத்திற்கு ஏது என்பது கருத்து. வேதாந்தத்தால் போலியாக அறியப்பட்ட பிரம்மம் விசாரிக்கத் தக்கதாம் எனின் அந்த போலி ஞானமென்பது யாது? பதத்தால் ஜன்னியமன்ரும் பிரம்மபதத்தில் வியுத்பத்தி இன்மையின். இதனுனேயே பதங்களின் சமுதாயவடிவ வாக்கிய ஜன்னியமுமன்ரும். பிரம்மம் என ஒரு வஸ்துவிருக்கின்றது என்னும் ஞானம் போலி ஞானமாம் எனின், அற்றன்று. அந்த ஞானம் ஜிக்ஞாசை மாத்திரத்திற்கு ஏதுவாந்தன்மையால் விசாரத்திற்கு ஏதுவாகாமையின். ஆதலால் பிரம்மம் விசாரிக்கத்தக்கதன்ரும். பந்தநிவர்த்தி அதன் பயனுவதுமன்ரும். என்று முதலில் ஆக்ஷேபித்துச் சமாதானம் கூறுகின்ருர் :—

## சுலோகம்

**मीमांसितव्यमनयैव सदद्वितीयं**
**मीमांस्यमेव च सदात्मतयाऽनयैतत् ।**
**ज्ञातं प्रयोजनमनेन पथेदमस्या-**
**स्तन्नान्तरीयकतया च तमोनिवृत्तिः ॥ ५८ ॥**

## பதவுரை

**सत् अद्वितीयम्** – சத்ரூப அத்வைதப் பிரம்மம்

**अनया एव** – இந்தச் சாரீரக மீமாம்சையினுலேயே

**मीमांसितव्यम्** – விசாரிக்கத்தக்கது.

**सत् एतत्** – சத்ரூப இந்த பிரம்மமானது

**आत्मतया च** – பிரத்தியகான்ம வடிவமாகவும்

**अनया** – இந்த மீமாம்சையினுல்

**मीमांस्यमेव** – விசாரிக்கத்தக்கதேயாம்

**अस्याः** – இந்த மீமாம்சைக்கு

**अनेन पथा** – கூறிய இந்த வழியினுல்

**ज्ञातं इदम्** – அறியப்பட்டதாகி பிரத்தியகபின்ன பிரம்மமே

**प्रयोजनम्** – பயனும்

**तद् नान्तरीयकतया** – அதன் வியாப்பியத் தன்மையினுல்

**तमोनिवृत्तिश्च** – அஞ்ஞானத்தின் நிவர்த்தியும் அதன் பயனும்.

### விசேஷவுரை

பிரத்தியக்ஷாதி பிரமாணத்தால் சித்தித்த பிரம்மமே ஈண்டு விசாரிக்கத்தக்கது என்பதின்ரும். அந்தப் பிரம்மம் உபநிஷத் பிரமாணத்தினும் இதரப் பிரமாணங்களுக்கு விஷயமாகாமையின். ஆதலால் அத்துவிதீய சத்பிரம்மம் விசாரிக்கப்படாத மஹாவாக்கியத்திலுலே சாமான்ய ரூபத்தால் உபஸ்திதமாம். அது இந்த மீமாம்சையினுலே விசாரிக்கத்தக்கது. (அகண்டானந்தரூபத்தால் அறியத்தக்கது) பிரம்மம் உபநிஷத்திற்கே விஷயமாதலின் உபநிடதத்தின் விசாரத்திற்கே பிரம்மத்தை நிச்சயிக்குந் தன்மையில் உசிதத்தன்மை யிருத்தலால்.

பிரம்மபதத்திற்கு பிருஹத்பதத்தின் அர்த்த அநுசாரத்தால் சர்வத்திலுந் தொடர்ந்துள்ள சத்தாஸ்புரணவடிவ ஆன்மாவின்கண் வியுத்பத்தி சித்தித்திருத்தலின். ஆன்மசப்தந்திற்கும் எது சகலத்தையும் வியாபிக்கிறதோ எது தன்னிடத்தில் ஒடுக்கிக்கொள்கிறதோ என்னும் வியுத்பத்தியினுல் பிரத்தியக் வஸ்துவிலேயே பிரசித்தியிருத்தலின்.

[ பிரம்ம ஆன்மாக்களின் ஐக்கியத்திற்கு விசாரிக்கத்தக்கதாந் தன்மை சம்பவித்தலால் அதனைத் தெரிசிப்பிக்கின்ருர் ] விசாரிக்கத் தக்கதே என. சத்ரூப பிரம்மத்தை ஆன்மரூபத்தால் அறியாமையின் இந்த மீமாம்ஸையினுல் அந்த பிரம்மமே ஆன்மாவோடபேதமாக விசாரிக்கத்தக்கது. இதர கர்மகாண்டாதி விசாரிக்கத் தக்கதன்ரும் என்பது

பொருள். அற்றேல், பிரம்மான்மாக்களின் ஐக்கியம் விசாரிக்கத்தக்கதா யிருத்தலின் விஷயமாகுக பலத்தின் அசித்தியோ முன்போலன்றேயாம். [நிவாரணஞ் செய்யப்படவில்லை யென்பது கருத்து]. என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார் அறியப்பட்ட என. முற்கூறிய வழியினால் இந்த மீமாம்சைக்கு பிரத்தியகபின்ன அத்வயானந்த பிரம்மம் அறியப் பட்டதாகி பிரயோஜனமாகின்றது.

[இவ்வாறாயின் = அறியப்பட்ட பிரம்மம் பிரயோஜனவடிவமாயின் பந்தநிவர்த்தி பயனாகாது அதனால் முற்கூறியதற்கு விரோதமாம். என்னுமிடத்துக் கூறுகின்றார்.] அதன் வியாப்யத்தன்மையாலென பிரம்மான்ம ஞானம் உளதாய வழி அஞ்ஞானத்தின் நிவர்த்தி அர்த்தத் தால் சித்தித்தமையின் தனியே வியாபாரத்தை அபேக்ஷியாமையின் தராசைத் தூக்குதல்போல. அஞ்ஞானத்தின் நிவர்த்தியும் தனியே உத்தேசியத்தன்மையால் பயனன்றாமென்பது பொருள்,

அற்றேல் அஞ்ஞானத்தின் நிவர்த்தி அதிஷ்டானமாத்திரமாதலின் ஆன்மாவின் அபின்னமாம். ஆன்மவடிவ அஞ்ஞானத்தின் நிவர்த்தி முன்னருமிருத்தலின் ஞானத்தால் சாதிக்கப்படுவது எவ்வாறும் எனின் அற்றன்று. எது இருக்கும்போது அடுத்த க்ஷணத்தில் எது இருக்குமோ எது இல்லாவிடின் இராதோ அது அதனால் சாத்தியமாம் என்பது நியம மாதலின் பிரகிருதத்தில் ஞானமிருக்கும்போது அடுத்த க்ஷணத்தில் அஞ்ஞானத்தின் நிவர்த்திவடிவ ஆன்மாவுளது. ஞானமில்லையாயின் அஞ்ஞானநிவர்த்தியின் அபாவவடிவ அஞ்ஞானமிருக்கின்றது. ஆன்மா விற்கு அஞ்ஞானத்தின் அபாவத்தன்மை இருப்பதுபோல அஞ்ஞானத் திற்கும் அதன் (ஆன்மாவின்) அபாவவடிவத்தன்மை யுண்மையின்

அற்றேல் அஞ்ஞானத்தின் நிவிர்த்தி அஞ்ஞானத்தின் அத்தியந்தா பாவமாகுக அதற்கு அநாதித் தன்மையுண்மையின் பிரம்மாபேத யோக் கியத்துவமாதலின் அஞ்ஞானநிவர்த்தியை அஞ்ஞானத்தின் த்வம்ஸ வடிவமாகக்கொள்ளற்க. த்வம்ஸத்திற்கு பிரதியோகியின் அசமான காலத்தன்மையுண்மையின் எனின் (அன்றியும் சாதித்துவம்ஸத்திற்கு அநாதிப்பிரம்மத்தோடு அபேதம் எங்ஙனமாம் என சங்கையின் அபிப் பிராயம் கொள்ளலாம்,)

அற்றன்று பிரதியோகியின் சமானசத்தையுடைய துவம்ஸத்திற்கே அதன் அசமான காலத்துவமாம் என்று கூறப்பட்டமையின், (விஷம சத்தையுடைய துவம்ஸத்திற்குப் பிரதியோகியின் சமானகாலத்திலும் ஸ்திதி கூடும். பிரகிருதத்தில் அஞ்ஞானத்தின் துவம்ஸம் அதிஷ்டான வடிவமாதலின் பாரமார்த்திகமாம் அஞ்ஞானமாகிய பிரதியோகி வியாவ காரிகமாம் ஆதலின் விரோதமின்றும்.

அல்லது அற்றேல் நிரதிசய சுகமே புருஷார்த்தமாமென்பது எவ்வாறு பொருந்தும் அவித்தையின் நிவர்த்திக்கும் புருஷார்த்தத் தன்மை யிருத்தலின் என்று ஆசங்கித்து அத்துவயானந்தபிரம்மப் பிராப்தியின்பொருட்டு பிரம்மத்தைப் பிரதிபாதிக்குங்கால் அதன் அஞ்ஞானத்தின் நிவர்த்தி உத்தேசிக்கப்படாவிடினும் ஞானத்தின் சாமர்த்தியத்தால் உண்டாகிறது ஆதலின். அது பரமப்பிரயோஜனமன்றும் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றுர். அதன் வியாப்பியத்தன்மையால் என.

அற்றேல் விசாரிக்கப்படாத மகா வாக்கியத்தால் சாமானியரூபத்தால் அறியப்பட்ட அத்துவிதீய சத்பிரம்மம் இந்த மீமாம்சையினுலேயே விசாரிக்கத்தக்கது; அகண்டானந்தரூபத்தால் அறியத்தக்கது என்று கூறப்பட்டது. அதுபொருந்தாது சைமினி முதலிய கருமகாண்டிகள் சம்பூர்ணமான வேதத்திற்கும் எதனை, எதனுல், எந்தப் பிரகாரம், என்னும் மூன்று அம்ஸங்களோடு கூடிய அர்த்தபாவனை யெனப் பெயரிய புருஷப்பிரவிருத்தி வடிவகிரியையில் தாற்பரியமாமென்று அறிகின்றுர்கள். இதனுலேயே தருமத்தின் யதார்த்த ஞானத்தை யுண்டுபண்ணும் பிரயோஜனமின்மையின் கிரியையை போதிக்காத அர்த்தவாத வாக்கியங்கட்கு இலௌகிகவாக்கியம்போன்று அப்பிரா மாண்யத் தன்மையைச் சங்கித்து சிஷ்டபுருஷர்களால் அத்தியயனவிதி யால் கிரஹிக்கப்பட்டமையின் விதிவாக்கியத்தோடு ஏக வாக்கியத் தன்மையிருத்தலின் சித்தித்த அர்த்தத்தைப் பிரதிபாதிப்பனவான அர்த்தவாத வாக்கியங்கட்கும் பிரயோஜனமுடைமை யிருக்கின்றதாகலின் லக்ஷணையினுலும் கிரியையாலபேக்ஷிக்கப்பட்ட துதி முதலியவற் றைப் போதிக்குந்தன்மையால் பிராமாண்யமிருப்பது போன்று வேதாந்த வாக்கியங்களுக்கும் விதியினுலபேக்ஷிக்கப்பட்ட கர்த்தாவைத் துதிக்குந் தன்மையினுல் அல்லது உபாசனை விதிக்கு அங்கமாந்தன்மையினுல்

ஆன்மபிரம்மத்தைப் பிரதிபாதிக்குந் தன்மையுளது. ஆதலின் வேதாந்த வாக்கியங்கள் விசாரிக்கத்தக்கனவாம் என்று அபிப்பிராயப்படுகின்றனர். எனின் அற்றன்று.

ஜைமினி முதலான மஹரிஷிகள் கிரியார்த்தமின்றிய வாக்கியங்களுக்கு கிரியையைப் பிரதிபாதிக்குந் தன்மையால் பிராமாண்யத்தை வர்ணித்தல் கர்மகாண்டப் பிரகரணத்திலுள்ள சித்தார்த்தபோதகவாக்கிய அபிப்பிராயத்தால் செய்தனர். பின்னைப் பிரகரணத்தின் கண்ணுள்ள வேதாந்த வாககியங்களினபிப்ராயத்தாலன்று. வேதாந்த வாக்கியங்களுக்கு அகர்த்தா அபோக்தாவாயுள்ள ஆன்மாவைப் போதிக்குந்தன்மையால் கர்மத்தாலபேக்ஷிக்கப்பட்ட கர்த்தாவைத் துதிக்குந்தன்மை சம்பவியாமையானும் கர்த்தாவின் அதீனமாகாத ஞானத்தின்கண் விதி சம்பவியாமையால் விதியின்சேஷத்தன்மையால் பிரம்மத்தைப் பிரதிபாதிக்குந் தன்மை சம்பவியாமையானும் என்க. (58)

## *அவதாரிகை*

அற்றேல், ஜைமினி முதலான மஹரிஷிகளின் அபிப்பிராயத்தை இவ்வாறு வர்ணித்தல் தகாது. அவரால் சர்வவேதார்த்தங்களின் விசாரமும் செய்யப்பட்டமையின் அப்படிக்கின்றேல், அதாவது கர்மகாண்டத்தையே விசாரித்தனர் ஞானகாண்டத்தை விசாரித்திலர் எனக் கொள்ளின் தர்மஜிக்ஞாசை சூத்திரத்தின் கண்ணுள்ள 'அத அத:' என்னும் சப்தத்திற்கு விரோதமுண்டாம். அனந்தரவாசக 'அத' சப்தத்தினுல் சம்பூர்ண சாகைகளின் அத்தியயனத்தின் அனந்தரம் தனது (வேதார்த்தத்தின்) விசாரத்தைத் தெரிவிக்கின்றுர். வேதாந்தங்கள் விசாரிக்கத் தக்கதன்றுயின் வேதாந்த அத்தியயனத்தின் அனந்தரமென்பதற்கு வேதார்தத விசாரத்தில் (பூர்வமீமாம்ஸையில்) பிரயோஜனமென்னே. இவ்வாறு ஏதுவாசக 'அத:' சப்தத்தால் சம்பூர்ண வேதத்திற்கும் சுவார்த்தத்தில் பிராமாண்யத்தைத் தெரிவிக்கின்றுர். அதுவும் வேதாந்தத்தை விசாரிக்கத்தக்கதாகக் கொள்ளாவிடின் பொருந்தாமற் போம். ஆதலால் வேதாந்தங்கள் ஜைமினி முதலிய மஹரிஷிகளாலேயே விசாரிக்கப்பட்டமையின் வேதவியாசர் முதலியோரால் அது விசாரிக்கத்தக்கதன்றும் என்னுமிடத்துக் கூறுகின்றுர் —

## சுலோகம்

न च गतार्थमिदं प्रतिभाति नो
न हि विधेः पदमात्मसमीक्षणम् ।
न खलु यागददातिजुहोतिव-
त्पुरुपतन्त्रमिहाऽऽत्मनिदर्शनम् ॥ ५९ ॥

## பதவுரை

**नः** – எங்களுக்கு

**इदम्** – வேதாந்த சாஸ்திரம்

**गतार्थम्** – கர்மகாண்ட விசாரத்தால் சரிதார்த்தமாக

**न च प्रतिभाति** – தோன்றுகிறதில்லை.

**आत्मसमीक्षणम्** – ஆன்மஞானம்

**विधेः पदम् नहि** – விதிக்கு விஷயமன்றும்.

**यागददातिजुहोतिवत्** – யாகதானஹோமங்களைப் போன்று

**इह** – வேதாந்த சாஸ்திரத்தில்

**आत्मनिदर्शनम्** – ஆன்மஞானம்

**न खलु पुरुषतन्त्रम्** – கர்த்தாவினதீனமன்றும்.

## விசேஷவுரை

கத = விசாரபூர்வகம் அறியப்பட்டது அர்த்தம் எந்த வேதாந்த சாஸ்திரத்திற்கோ அது கதார்த்தமாம். வேதாந்தத்தால் அடையப்படுவது அத்வயப் பிரம்மமாம். அதுவும் ஜைமினி முதலியோரால் நிரூபிக்கப்பட்டது என்று கூறுகின்றனையா ? அல்லது வேதாந்தங்களுக்கும் காரியமே அர்த்தமாம் அதுவும் ஜைமினியினுல் சம்பூர்ணமாக நிரூபிக்கப்பட்டது. ஆதலின் இந்த உத்தரமீமாம்ஸா சாஸ்திரம் பூர்வமீமாம்சையினுல் கதார்த்தமாம் என்று கூறுகின்றனையா ? முதற் பக்ஷம் சரியன்று ஜைமினியாற் செய்யப்பட்ட பூர்வமீமாம்சா சாஸ்திரத்தின்கண் அத்வயப்பிரம்மம் பிரதீதியாகாமையின் ; சாத்தியவடிவ தர்மத்தின்

அநுகூலமான யுக்திகளினுல் சித்தவடிவ பிரம்மத்தின் நிச்சயம் சம்பவி யாமையின், தர்மஜிக்ஞாஸா சூத்திரத்தின்கண் தர்மமே விசாரிக்கத்தக்க தாக பிரதிக்ஞை செய்யப்பட்டமையானும் என்க.

தர்மஜிக்ஞாஸா சூத்திரத்தின் கண்ணுள்ள ' அத, அத: ' என்னும் சப்தங்களை அநுசரித்துத் தர்மசப்தத்தினுல் வேதார்த்தமாத்திரம் லக்ஷணுவிருத்தியினுல் அறியப்படுகின்றது. அதாவது தர்மபதம் பிரம்மத்திற்கு உபலக்ஷணமாம் என்று சொல்லற்க. அத, அத: சப்தங் கள் அந்நியதாசித்தமாம் ஆதலின் அவற்றை யனுசரித்து விசாரிக்கப் படுந்தன்மையினுல் அனந்நியதாசித்த தர்மவடிவபிரதானவாசக தர்ம சப்தத்திற்கு லக்ஷணை பொருந்தாமையின்

தனது வேதம் அத்தியயனம் செய்யத்தக்கதென்னும் விதியானது சம்பூர்ண சாகைகளின் அத்தியயனத்தை விதிக்கின்றது. ஏகதேச கர்மகாண்டமாத்திரத்தின் அத்தியயனத்தை விதிக்கிறதில்லை ஆதலின் அத்தியயன விதியின் பலத்தால் கர்மகாண்டமாத்திரத்தின் அத்தியயனம் சம்பவிக்கின்றதில்லை இந்தப் பிரகாரம் வேதாந்த அத்தியயனமானது கர்மவிசாரத்தில் உபயோகி அன்றும். அப்படியாயினும் ஒரு விதியினுல் விதிக்கப்பட்டமையின் வேதாந்தாத்தியயனமும் ஆவசியகமாம் ஆதலின் வேதாந்தாத்தியயனமுடையவனுக்கே கரும விசாரமாமாதலின் அத- பதம் அன்னியதாசித்தமாம். அதாவது தரும பதத்திற்கு பிரம்மத்தின் கண் லக்ஷணையின்றியும் அத-பதம் கருமவிசாரத்தின்கண் சம்பூர்ண வேதாத்தியயனத்தினுனந்தர்ய வடிவ தனது அர்த்தத்தைப் போதித்துச் சரிதார்த்தமாகிவிட்டது ஆதலின் லக்ஷணைக்குப் பீஜமின்றும்.

இவ்வாறே அத: சத்தத்தால் சூசிப்பிக்கப்பட்ட அத்தியயனத்தின் திருஷ்டாந்தத்தன்மையும் வேதாந்தாத்தியயனத்தில் சமமாதலினுலேயே அதசத்தத்திற்குப் பொருளுடைமை சித்தித்தலின் (அதாவது அதசத்தம் சம்பூர்ண வேதாத்தியயனத்தின்கண் திருஷ்டார்த்தத்தன்மை வடிவ தனது பொருளைப் போதித்துச் சரிதார்த்தமாகிவிட்டது ஆதலின்) அத:- சத்த வலிமையானும் தரும சத்தத்தில் லக்ஷணையின்றும். ஆதலின் அத்துவயப் பிரம்மத்தின் விசாரம் கதார்த்தமன்றும் என்பது கருத்து.

**சங். 18.**

இரண்டாவது பக்ஷமும் சரியன்றும் அக்கினிஹோத்திராதி வடிவ காரியமும் உபாஸனை வடிவ காரியமும் ஞானப்பிரகரணத்தினும் பின்னைப் பிரகரணத்தின்கண் பிரதிபாதிக்கப்பட்டமையினாலும் பிரம்மத்தைப் பிரதி பாதிக்கும் வேதாந்த வாக்கியங்களால் அவற்றின் பிரதீதி யுண்டாகாமை யினாலும் என்க.

அற்றேல் "ஏ மைத்திரேயி ஆன்மாவைச் சாக்ஷாத்கரிக்குக" என்பது முதலிய சுருதியினால் ஞானம் விதிக்கப்படுகின்றதாகலின் காரியமே வேதாந்தத்திற்குப் பொருளாமெனின் ஆண்டுக் கூறுகின்றார் விதிக்கு விஷயமன்றும் என. ஆன்மஞானம் விதேயமன்றும். எதனா லெனின் எது வாக்கியார்த்தத்தின் யதார்த்தஞானத்தாலுண்டான சிகீர்ஷை (செய்வதற்கு இச்சை) யத்தினங்களால் உண்டாக்கப் படுகின்றதோ அது விதேயமாம், அக்கினிஹோத்திராதிபோன்று அல்லது உபாஸனைபோன்று. ஆன்ம ஞானமாவது லௌகிக கடாதி ஞான மாவது புருஷனது இச்சையாலும் முயற்சியாலும் ஜன்னியமன்றும் இச்சையில்லாதவனுக்கும் முயற்சியில்லாதவனுக்குங்கூட சத்தத்தாலாவது பிரத்தியக்ஷாதிப் பிரமாணத்தாலாவது ஞானம் உண்டாவதாகக் காணப் படுதலின். இதுவே (கூறிய இவ்விஷயமே) "விதேயகருமமே கருத்தாவின் அதீனமாம் ஞானம் கருத்தாவின் அதீனமன்று" என்று பூருவாசாரியர்களால் கூறப்படுகின்றது. ஆதலின் ஞானம் விதிக்கத் தக்கதன்று மென்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார் கர்த்தாவின தீனமன்றும் என.

தேவதையை யுத்தேசித்துத் திரவியத்தின் தியாகம் யாகமாம். திரவியத்தின்கண் அன்னியனது உடைமைத்தன்மையைச் சம்பாதிக்கும் வியாபாரம் தானமாம். யாகமே ஆசேசனத்தை யதிகமாகவுடையதாகி ஓமமாம். இவ்வாறு வேற்றுமையை யுணர்க ஆசேசனம்=அக்கினியில் நெய் முதலிய அவிசைப்பிரக்ஷேபணஞ் செய்தல். பிரக்ஷேபணம்= போடுதல், அல்லது விடுதல். (59)

## அவதாரிகை

மேலும் விதேய பதார்த்தத்தின் ஞானம் விதிவாக்கியார்த்தத்தின் பிரதீதிக்கு முன்பு சொல்லவேண்டும். பரமான்மஞானத்தில் அது (பூருவப்பிரதீதி) சம்பவிக்கிறதில்லை எனக் கூறுகின்றார் :—

### சுலோகம்

अपि च रूपितगोचरता विधे-
र्न परमात्मधियोऽस्ति च रूपणम् ।
अविदिते परमात्मनि तद्धियो
न खलु रूपितता घटनान्विता ॥ ६० ॥

### பதவுரை

**अपि च** – மற்றும்

**विधेः** – விதிவாக்கியத்திற்கு

**रूपितगोचरता** – அறியப்பட்ட விஷயத்தை யுடையதாந் தன்மை யுளது

விதிக்கு ஞா தாதுவின் பொருளைக் கோசரிக்கும் தன்மையைச் சொல்லவேண்டும் என்பது எஞ்சி நின்றது.

[ அதனாலென்னை யெனின் அதற்குக் கூறுகின்றார். ]

**परमात्मधियः** – பரமான்மஞானவடிவ விதேயத்தின்

**रूपणम् च** – ஞானமோ

**न अस्ति** – சிரவணாதிக்கு முன்பு இன்றாம்.

முன்பு என்பது எஞ்சி நின்றது, பிரம்மஞானத்தின் ஞானம் முன்பு இன்றாம். ஆகவே பரமான்மஞானம் செய்யத்தக்கது என் வாக்கியார்த்த ஞானம் சம்பவிக்கிறதில்லை என்பது கருத்து. [ பரமான்ம ஞானத்தின் நிரூபணம் (ஞானம்) எதனாலின்றாமெனின், பரமான்மா அறியப்படாத போது பரமான்மஞானம் அறியப்படுகின்றதா அல்லது அறியப்பட்ட போது அறியப்படுகின்றதா ? முதற்பக்ஷம் சரியன்றெனக் கூறுகின்றார்.] அறியப்படாதபோது என.

**परमात्मनि** – பிரம்மசொரூபம்

**अविदिते** – அறியப்படாதபோது

**तद्धियः** – பரமான்மாவின் ஞானத்திற்கு

**ज्ञपितता** - ஞாதத்தன்மை

**घटनान्विता** – யுக்தம்

**न खलु** - அன்று.

விசேஷணமாயுள்ள பரமாத்மாவை யறியாமல் பரமான்மஞானம் என்று விசிட்டத்தை யறியமுடியாது தண்டத்தையறியாமல் தண்ட விசிட்ட புருஷனை யறியமுடியாதது போன்று என்பது பொருள். விசிட்ட ஞானத்தில் விசேஷண ஞானம் காரணமாதலின். (60)

## அவதாரிகை

இரண்டாவது பக்ஷத்தைக் கூறுகின்றார் :—

## சுலோகம்

विदितता परमात्मन इष्यते
यदि वृथा विधिरस्य धियो भवेत् ।
निखिलभेदनिदाननिवृत्तितो
भवति तद्विषयादि च दुर्लभम् ॥ ६१ ॥

## பதவுரை

**परमात्मनः** – (ஞானவிதிவாக்கியத்தின் அர்த்தஞானத்திற்கு முன்பு) பரமான்மாவின்

**विदितता** – ஞாதத்தன்மை

**यदि इष्यते** – அங்கீகரிக்கப்படுமாயின்

**अस्य** – இந்த பரமான்மாவின்

**धियः** – ஞானத்தின்

**विधिः** – விதியானது

**वृथा भवेत्** - வீணேயாகும்,

**निखिलभेदनिदान- निवृत्तितः** – ஏதனுலெனின் (பரமான்மா அறியப்பட்ட போது) சருவபேதத்திற்கும் காரணமான அஞ்ஞானம் நிவிருத்தியானமையின்

**तद्विषयादि च** – விதிக்கு விஷயம் முதலானவை

**दुर्लभं भवति** – கிடைக்காமற்போம்.

## *விசேஷவுரை*

ஆன்மா முன்பே அறியப்பட்டதாயின் ஞானவிதி வியர்த்தமாம். புருஷார்த்தசாதனமான ஆன்மஞானம் முன்னரே சித்தித்தமையின் என்பது பொருள். மேலும் ஆன்மஞானம் உளதாய வழி அவித்தை அதன் காரிய சகல நியோஜ்யன் (யாகாதிகாரி) விஷயம் முதலிய பேதம் நீங்கிவிடுதலின், பேதத்தினபேக்ஷையோடு கூடிய ஞானவிதி சம்பவிக் கிறதில்லை அதன் அநுஷ்டானமும் சம்பவிக்கிறதில்லை என்பதுபொருள். எவன் யாகாதிகாரியத்தைத் தனது சம்பந்தியாக அறிகின்ருனே அவன் நியோஜ்யன். (61)

## *அவதாரிகை*

அற்றேல், ஆன்மாவின்கண் பரோக்ஷ ஞானம் முதலில் உண்டாயினும் அதன் விசிஷ்ட ஞானம் (விலக்ஷண ஞானம்) விதேய மாம் எனின். அந்த விசிட்ட ஞானமானது பரோக்ஷமா அல்லது அபரோக்ஷமா ? முதற்பக்ஷம் சரியன்று முதல் ஞானத்தினுலேயே அதன் பிரயோஜனம் சித்தித்தலின் பரோக்ஷ ஞானவடிவ விசிட்ட ஞானத்தை விதித்தல் வியர்த்தமாதலினுலும் எச் சப்தத்திற்கு தனது அர்த்தத்தோடுள்ள சக்திவடிவ சம்பந்தம் அறியப்பட்டதோ அப்படிப் பட்ட சப்தம் முதலானவற்ருலேயே முதலில் உண்டான பரோக்ஷ ஞானம்போன்று இரண்டாவது பரோக்ஷஞானத்திற்கும் புருஷவியாபாரம் இன்றியும் உத்பத்தி சம்பவித்தலால் விதிக்கு வியர்த்தத் தன்மை யுண்மையானும். இரண்டாவது பக்ஷமும் சரியன்று. கர்த்தவ்யத் தன்மையால் அறியப்பட்ட சாப்தஞானமே விதியின் சாமர்த்தியத்தினுல் அபரோக்ஷமாகின்றதா ? அல்லது அதனுல் (விதியினுல்) அது (அபரோக்ஷஞானம்) உத்பத்தியாகின்றதா ? முதற்பக்ஷம் சரியன்று, கர்த்தவ்யரூபத்தாலறியப்பட்ட அந்த சாப்தஞானமானது சப்தத்தா

லுண்டானமையின் வாதியாகிய உன்னுடைய மதத்தில் அதற்கு அபரோக்ஷத்தன்மை பொருந்தாமையின் அப்படிக்கின்றேல் சப்த ஜன்னிய ஞானத்திற்கு விதியின் பலத்தால் அபரோக்ஷத்தன்மையை அங்கீகரிக்கின் முதலிலேயே அபரோக்ஷ ஞானம் ஏன் உண்டாவதில்லை? இரண்டாவது பக்ஷமும் சரியன்று. அபரோக்ஷ ஞானகரணம் சம்பவியாமையின். அபரோக்ஷஞானத்தின் கரணமாகிய இந்திரியம் ஆன்மாவின்கண் பிரவிருத்திப்பதின்றும் ஆதலின் ஞானவிதி சம்பவியாது என்று உபசம்மாரஞ்செய்கின்றார் :—

### சுலோகம்

**इति न धर्मविशेषसमर्पणं श्रुतिशिरोवचनैः क्रियते ततः ।**
**भवति धर्मविचारगतार्थतानवसरः परमात्मविचारणे ॥ ६२ ॥**

### பதவுரை

**इति** – இந்தப்பிரகாரம் ஞானத்திற்கு விதேயத்தன்மை சம்பவியாமையின்

**श्रुतिशिरोवचनैः** – வேதாந்தவாக்கியங்களால்

**धर्मविशेषसमर्पणं** – உபாசனை முதலிய தர்ம்விசேஷத்தை நிரூபித்தல்

**न क्रियते** – செய்யப்படுகிறதில்லை

**ततः** – அக்காரணத்தால்

**परमात्मविचारणे** – பிரம்மவிசாரத்தின்கண்

**धर्मविचारगतार्थता** – கர்மகாண்டவிசாரத்தால் யாதொரு சரிதார்த்தத் தன்மையுண்டோ அதற்கு

**अनवसरः भवति** – அவகாசம் இன்றும்.

### விசேஷவுரை

விதேயஞானமே அவாந்தரதர்மமாம் அதற்கு நிர்விஷயகத்தன்மை பொருந்தாமையின் விஷயாகாங்க்ஷை யுண்டாக ஆன்மாவைப் பிரதிபாதிக்கின்ற வேதாந்த வசனங்களினுலே விதிவாக்கியத்தோடு ஏகவாக்கியத்தன்மையால் தர்ம விசேஷ சமர்ப்பணம் செய்யப்படுகின்றது என் யாதொரு (பூர்வமீமாம்சை) மதமுண்டோ அது சரியன்று.

[ஈண்டு இஃது அபிப்பிராயமாம் பூர்வ மீமாம்சையின் மதத்தில் தர்சபூர்ணமாசங்களால் எஜிக்கக்கடவது என்பது முதலிய விதியால் சாதிக்கத்தக்க அபூர்வமே முக்கிய தர்மமாம் இந்த முக்கிய தர்மத்திற்குச் சாதகமானதால் தர்சபூர்ணமாசாதி கர்மமும் தர்மமெனப்படுகின்றது அக்கர்மங்களின் கர்த்தா ஜீவான்மாவாம். இதனால் கர்மாங்கத்தன்மையால் ஆன்மாவும் அவசியம் அறியத்தக்கதேயாம். ஆதலால் ஆன்மஞானமும் அவாந்தரதர்மமாம். இதனேயே 'ஆன்மா தரிசிக்கத்தக்கது' என்பது முதலிய சுருதி வசனங்கள் ஆன்ம ஞானவடிவ அவாந்தர தர்மத்தை விதிக்கின்றது. அந்த ஆன்ம ஞானமும் நிர்விஷயகமாக ஆகின்றதில்லை. ஆதலால் விஷயத்தின் ஆகாங்க்ஷையுளதாயவழி சம்பூர்ண வேதாந்தங்களும் ஆன்மாவின் சொரூபத்தைப் பிரதிபாதிக்கின்றனவாம். இந்தப் பிரகாரம் சம்பூர்ண வேதாந்தவாக்கியங்களுக்கு விதிவாக்கியத்தோடு ஏக வாக்கியத்தன்மையிருத்தலின் சம்பூர்ண வேதமும் தர்ம விசேஷத்தையே உபதேசிக்கின்றது. ஆதலால் தர்ம விசாரத்தால் வேதாந்த விசாரம் சரிதார்த்தமாகிவிட்டது. என யாதொரு மதமுண்டோ அது சரியன்று.]

அவர் கூறிய வழியானும் பிரம்ம விசாரத்தின்கண் தர்ம விசாரத்தால் சரிதார்த்தத்தன்மைக்கு அவகாசமின்ரும் என்பது பொருள்.

[ஈண்டு இது அபிப்பிராயமாம் :– வேதாந்தத்தின்கண் மூன்று பிரகாரமாக வாக்கியமுளது. அவற்றுள் ஒன்று துவம் பதார்த்த ஜீவான்மாவைப் பிரதிபாதிக்கும் வாக்கியமாம். அது "ஹிருதயத்தினுள் ஜோதிவடிவ புருஷன்" "ஆன்மா தரிசிக்கத்தக்கது" என்பது முதலிய வாக்கியமாம். 2-வது தத் பதார்த்த பிரம்மத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியமாம். அது "சிருஷ்டிக்கு முன்பு ஈதெல்லாம் சத்தாகவேயிருந்தது." "சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்ம" என்பது முதலிய வாக்கியமாம். 3-வது ஜீவப்பிரம்மங்களின் அபேதத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியம் அது "தத்துவமசி" "அஹம் பிரஹ்மாஸ்மி" என்பது முதலிய வாக்கியமாம். இவ்வாறு துவம்பதார்த்த கர்மகர்த்தா ஜீவனது சொரூபவிசாரம் தர்மவிசாரத்தால் சரிதார்த்தமாயினும் தத்பதார்த்த பிரம்மவிசாரமும் ஜீவப்பிரம்மங்களின் ஐக்கிய விசாரமும் தர்மவிசாரத்தால் சரிதார்த்தமன்ரும்.]

இவ்வாருகவே ஜைமினி முதலிய மஹரிஷிகளுடைய அபிப்பிராயமும் முன்பு 58-வது சுலோகத்தின் வியாக்கியானத்தின்கண் நம்மால் கூறப்பட்டதேயாம் என்பது கருத்து. (62)

### அவதாரிகை

அவ்வாருயின் "ஏ மைத்திரேயி, ஆன்மா தரிசிக்கத்தக்கது" "ஆன்மாவின்கண்ணேயே ஆன்மாவைக் காண்க." என்பது முதலிய விதி விபக்திகளுக்கு கதி யாது என்னுமிடத்துக் கூறுகின்ருர் :—

### சுலோகம்

अर्हाद्यर्थे च कृत्यस्मरणमभिमतं पाणिनेः प्रार्थनादौ
लिङ्लोडादेश्च वृत्तिः प्रचुरमभिमता पाणिनेर्जैमिनेश्च ।
तस्माद्वेदान्तवाक्ये पठितमपि लिङाद्यन्यथा योजनीयं
विध्यर्थासंभवेन स्फुटमुदितनयादेतदन्यागतार्थम् ॥ ६३॥

### பதவுரை

**अर्हाद्यर्थे** – யோக்கியம் முதலிய அர்த்தத்தில்

**कृत्यस्मरणम्** – கிருத்தியமென்னும் பொதுப்பெயர்வாய்ந்த தவ்யப் பிரத்தியயத்தின் பிரதிபாதனம்

**पाणिनेः** – பாணினிமகரிஷிக்கு

**अभिमतम्** – சம்மதமாம்

**प्रार्थनादौ** – பிரார்த்தனை முதலிய அர்த்தத்தில்

**लिङ्लोडादेश्च** – லிங் லோட் முதலிய பிரத்தியயங்களுக்கு

**वृत्तिः** – பிரவிருத்தியானது

**पाणिनेः** – பாணினி மகரிஷிக்கும்

**जैमिनेः च** – சைமினி மகரிஷிக்கும்

**प्रचुरम् अभिमता** – பெரும்பான்மை சம்மதமாம்

**तस्मात्** - அக்காரணத்தால்

**वेदान्तवाक्ये** – '**द्रष्टव्यः**' '**पश्येत्**' 'பார்க்கத்தக்கது' 'காண்க' என்பது முதலிய வேதாந்தவாக்கியத்தின் கண்

**पठितमपि** – படிக்கப்பட்டனவாயினும்

**लिङ् आदि** – லிங் லோட் தவ்யம் முதலிய பிரத்தியயங்கள்

**स्फुटम्** – ஸ்பஷ்டமாக

**उदितनयात्** – முற் சுலோகங்களில் கூறப்பட்ட யுக்திகளால்

**विध्यर्थासंभवेन** – செய்க என்னும் விதிப்பொருள் சம்பவியாமையால்

**अन्यथा** – அன்னியப்பிரகாரமாக அதாவது யோக்கியம் முதலிய அர்த்தத்தில்

**योजनीयम्** – பொருத்தத் தக்கனவாம்

**एतद्** – ஆதலால் இந்த உத்தரமீமாம்ஸா சாஸ்திரம்

**अन्यागतार्थम्** – பூருவமீமாம்சை சாஸ்திரத்தாற் சரிதார்த்தமன்ரும்.

## *விசேஷவுரை*

"**अर्हे कृत्यतृचश्च**" "**विधिनिमन्त्रणामन्त्रणाधीष्टसंप्रश्नप्रार्थनेषु लिङ्**" "**लोट् च**" (யோக்கியார்த்தத்தில் கிருத்தியப் பிரத்தியயமும் திருச் பிரத்தியயமும் வருக. விதி நிமந்த்ரண ஆமந்த்ரண அதீஷ்ட ஸம்ப்ரஸ்ன பிரார்த்தனை அர்த்தங்களில் லிங்பிரத்தியயமும் லோட் பிரத்தியயமும் வருக) என்பது முதலிய பாணினி சூத்திரத்தானும் '**विष्णुरुपांशु यष्टव्यः**' (விஷ்ணுவை தேவதையாகவுடைய உபாம்ஸு யாகம் செய்யத்தக்கது) என்பது முதலிய இடங்களில் ஜைமினியின் நியாயத்தானும் தவ்யப்பிரத்தியயம் முதலியவற்றிற்கு விதியினும் வேருன பொருளுடைமை யாதொரு காரணத்தால் சித்தித்ததோ அக்காரணத்தால் கூறிய வேதாந்த வாக்கியத்தின் கண் படிக்கப்பட்ட லிஙாதியும் விதியின்றி யோக்கியார்த்தத்தில் பொருத்தத்தக்கது. [ஏதனுலெனின்] ஸ்பஷ்டமாகக் கூறிய நியாயத்தால் விதிப்பொருள் பொருந்தாமையின், ஆதலால் இந்த வேதாந்த விசாரசாஸ்திரம் தரும விசாரசாஸ்திரத்தால் சரிதார்த்தமன்ரும் ஆதலால் வியாசபகவானுல்

**"अथातो ब्रह्मजिज्ञासा"** அதாதோபிரம்மஜிஞ்ஞாஸா என்பது முதலிய சூத்திரத்தினை யாரம்பித்து வேதாந்த வாக்கியம் விசாரிக்கப்பட்டது. பாஷியக்காரரான ஸ்ரீசங்கராசாரியசுவாமி முதலிய பூருவாசாரியர்களாலும் சூத்திரக்காரரின் அபிப்பிராயத்தையனுசரித்து சூத்திரத்திற்குப் பொருள் வர்ணிக்கப்பட்டது. ஆதலின் சருவஞ்ஞான்மமுனியாகிய என்னாலும் சூத்திரபாஷியாதிகளின் பொருளை வெளிப்படுத்துதற்கு யத்தினம் செய்யப்படுகின்றது.

பாணினி சூத்திரத்தின் கண்ணுள்ள பதங்களுக்கு இது பொருளாம், தன்னினும் நிகிருஷ்டமான வேலைக்காரன் முதலியோரை ஏதேனும் ஓர் வேலையில் ஏவுவது விதியாம். ஆவசியக சிராத்தபோஜனம் முதலியவற்றில் பேரன் முதலியோரைப் பிரவிர்த்திப்பித்தல் நிமந்த்ரணமாம். உனக்கு எவ்வாறு இச்சையோ அவ்வாறு செய் என்று ஆஞ்ஞாபித்தல் ஆமந்த்ரணமாம். சற்காரபூருவக வியாபாரம் அதீஷ்டமாம். ஏதேனும் ஓர் பக்ஷத்தை நிர்ணயிக்கும்பொருட்டு சங்கித்தல் சம்பிரஸ்னமாம், யாசித்தல் பிரார்த்தனையாம். (63)

## அதிகாரியை நிரூபித்தல்

### அவதாரிகை

அற்றேல் இவ்வாறுயினும் அதிகாரியின்மையின் இந்த சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதன்றாம். சுவர்க்காதியில் விருப்பமுள்ளவன் அதிகாரியாவன். அவனை யுத்தேசித்துச் சாஸ்திரத்தின் ஆரம்பமாம் எனக் கூறுதலும் பொருந்தாது. அக்கினிஹோத்திரம் முதலியவற்றானேயே சுவர்க்காதி சித்தித்தலின்.

நிரதிசயவிஷயபோகத்தை விரும்புகின்றவனை யுத்தேசித்து சாஸ்திரத்தின் ஆரம்பமாம் என்றலும் கூடாது. நிரதிசயவிஷயபோகமும் உபாஸனையாலேயே சித்தித்தலின். இச்சாஸ்திரத்தின்கண் முமுக்ஷு அதிகாரியாம் என்றலும் கூடாது. சகலவிஷயானந்தத்தினும் விலக்ஷணமான மோக்ஷத்தின்கண் ஒருவருக்கும் இச்சை காணப்படாமையின் விஷயஜன்னிய சுகத்தின்கண்ணேயே காமமுடையராய் மனிதர்கள் காணப்படுகின்றனர் ஆதலின்,

இதனுலேயே பிரம்மஜிஞ்ஞாசு இச்சாஸ்திரத்தில் அதிகாரியாவன் என்பதும் கண்டிக்கப்பட்டது. பிரம்மஞானம் புருஷார்த்தமன்ருதலின் அதன்கண் காமனை பொருந்தாமையின் நிரதிசயமாய் அபிலாஷைக்கு விஷயமாய் உள்ள சுவர்க்காதி சுகத்திற்கு பிரம்மஞானம் விரோத மாதலானும்.

சம்சாரத்தில் விரத்தியின்றிய புருஷனுக்கு சுவர்க்காதியில் ஆசையுளதேனும் விரக்தனுக்கு அஃதின்மையின் மோக்ஷ இச்சை சம்பவிக்கின்றது. ஆதலின் மோக்ஷத்தின்பொருட்டு பிரம்மத்தையறியும் வேட்கையுடையவன் இச்சாஸ்திரத்தில் அதிகாரியாவன் என்றலும் பொருந்தாது. நிரதிசயப் பிரீதிக்கு விஷயமான சுவர்க்காதியின்கண் ஒருவருக்கும் வைராக்கியம் சம்பவியாதாகலின்.

துக்கத்தோடு கலந்துள்ளமையின் சுவர்க்காதி சுகத்தின்கண்ணும் வைராக்கியம் சம்பவிக்குமெனின் அற்றன்று. துக்கத்தோடு கலந்திருப்பினும் அற்பதுக்கத்தோடு கூடிய அதிக சுகத்தின்கண் பிரவிருத்தி காணப்படுகின்றதாகலின் துக்கத்தின் பரிகாரத்தில் யத்தினஞ் செய்யத்தக்கது. துக்கத்தோடு சேர்ந்து சுகமும் தள்ளத்தக்கதன்ரும், வேறேயும் எவனேனுமொருவன் அதிகாரியாகச் சம்பவிக்கின்றதில்லை ஆதலின் அதிகாரியின்மையின் இந்தக் கிரந்தம் ஆரம்பிக்கத்தக்கதன்ருமென்னுமிடத்துக் கூறுகின்ருர் :—

சுலோகம்

एकाहाहीनसत्रद्वयविधिविहितानेककर्मानुभाव-
ध्वस्तस्वान्तोपरोधाः कथमपि पुरुषाश्चिद्दिदृक्षां लभन्ते ।
यज्ञेनेत्यादिवाक्यं शतपथविहितं कर्मवृन्दं गृहीत्वा
स्वोत्पत्त्याम्नानसिद्धं पुरुषविविदिषामात्रसाध्ये युनक्ति ॥ ६४ ॥

பதவுரை

**एकाह** — ஏகாஹமும்

**अहीन** — அஹீனமும்

**सत्रद्वय** — இரண்டு சத்திரமுமாகிய யஞ்ஞங்களின்

**विधिविहित** – விதிவாக்கியங்களால் விதிக்கப்பட்ட

**अनेककर्म** – அநேக சுபகருமங்களின்

**अनुभाव** – பிரபாவத்தால்

**ध्वस्त** – நசித்துப்போன

**स्वान्तोपरोधाः** – அந்தக்கரணத்தின் கண்ணுள்ள பாபமாகிய பிரதிபந்தமுடையவரான

**पुरुषाः** – அதிகாரி புருஷர்கள்

**कथमपि** – எப்படியாவது (அநேக ஜன்மங்களினந்தத்தில் புண்ணிய புஞ்சபரிபாகவசத்தால்)

**विविदिषाम्** – பிரம்மசாக்ஷாத்காரத்தினிச்சையை

**लभन्ते** – அடைகின்றனர்

**यज्ञेन इत्यादि वाक्यम्** – யஞ்ஞத்தால் தானத்தால் என்பது முதலிய சுருதிவாக்கியமானது

**शतपथविहितम्** – சதபதப்பிராம்மணத்தில் விதிக்கப்பட்டதும்

**स्वोत्पत्त्याम्नानसिद्धम्** – கருமத்தின் சொரூபத்தை போதிக்கின்ற யஜிக்குக என்பது முதலிய உற்பத்தி வாக்கியத்தால் சித்தித்ததுமான

**कर्मवृन्दम्** – கருமசமுதாயத்தை

**गृहीत्वा** – கிரகித்து

**पुरुषविविदिषा मात्रसाध्ये** – பிரம்மஜிஞ்ஞாசை மாத்திரவடிவ சாத்தியத்தில்

**युनक्ति** – சேர்ப்பிக்கின்றது.

### *விசேஷவுரை*

மீண்டு பிரம்மஜிஞ்ஞாசையின் பிராப்திப்பிரகாரமிதுவாம். அநாதியான ஜனனமரணவடிவ இச்சம்சாரத்தின்கண் சுழல்கின்றவனுகி சீவன் ஓர்போது அந்தந்த தார்மிக தேசவிசேஷத்தில் சிறந்த வர்ணத்தையும் ஆசிரமத்தையும் உடைத்தானவனுகி ஜீவனகால பர்யந்தமுங் கர்மங்களை

அனுஷ்டிக்கவேண்டும் என்னும் சுருதியினால் விதிக்கப்பட்ட நித்திய அக்கினிஹோத்திராதி கர்மங்களை நன்றாக அனுஷ்டிக்கின்றான். இச்சுப கர்மங்களின் அனுஷ்டானத்தால் ஓர்போது பரமேஸ்வரனுடைய சொற்பப் பிரசாதத்தை யடைந்து அக்கினிஹோத்திராதி கர்மங்களில் திடமான சிரத்தையுடையவனாகின்றான்.

அதன்பிறகு ஈச்வரனுடைய பிரசாதத்தால் இவ்வாறு சிந்திக்கின்றான். 'என்னுடைய மனமானது ஸ்வர்க்காதி ஸுகத்தையும், அதன் ஸாதன யாகாதி கர்மங்களையுமே இச்சிக்கின்றது. மோக்ஷத்தை யாவது அதன் சாதனமான ஞானத்தையாவது இச்சிக்கிறதில்லை. அதன் கண் (மோக்ஷசாதன ஞானவிஷயக இச்சையின்கண்) அதிருஷ்டமே கேவலம் நிமித்தமாம் ஆதலின் அவ்வதிருஷ்டத்தின் பொருட்டு யத்தனஞ் செய்யத்தக்கது.' என்று கருதி விவிதிஷையை யுத்தேசித்து அக்கர்மங்களையே அனுஷ்டிக்கின்றான். அதனால் பரிசுத்தமான மனமுள்ளவனாகி "இந்த லோகத்தின்கண்ணே உழவு முதலிய தொழிலாற் செய்யப்பட்ட தான்ய முதலிய பயன் எப்படி நசித்துப்போகின்றதோ அப்படியே பரலோகத்தில் புண்ணியத்தாற் சம்பாதிக்கப்பட்ட அப்சரஸ்திரீ முதலான போகமும் க்ஷீணமாகின்றது." என்னும் சுருதியையும் எது காரியமோ அது அநித்தியம் என்னும் நியாயத்தையும் அனுசந்தானம் செய்து, பிரம்மலோகபர்யந்தமாய் கர்மசாத்தியமாய் உள்ள பலன்களனைத்தும் அநித்தியமாமென்று நிச்சயிக்கின்றான். சுருதி நியாயங்களால் ஆன்மா நித்திய ஆனந்தவடிவமாம் என நிச்சயிக்கின்றான். இது நித்தியாநித்திய வஸ்து விவேகமாம். விவேகத்தின் அனந்தரம் நித்தியானந்தப் பிராப்தியின்பொருட்டு சகல விஷய சுகபோகங்களை விடவேண்டுமென்ற இச்சை அடிக்கடி இவனுக்கு உண்டாகின்றது. நித்தியபதார்த்தம் சம்பவிக்கும் காலத்தில் அநித்தியத்தில் எவன் திருப்தியடைவன். அவ்விது கர்மபலனின் வைராக்கியமாம். அதன்பிறகு சமம் தமம் முதலான சாதனங்களோடு கூடினவனாய் திருடதரமான மோக்ஷ இச்சையைச் செய்கின்றான். இதுதான் சாதன சதுஷ்டய சம்பத்தி. அதன்பிறகு இச்சிக்கப்படுகிற மோக்ஷத்தின் சாதனமான சிதானந்த வடிவ ஆன்மஞானத்தை விரும்புகின்றான். ஆதலின் ஈண்டு (இச்சாஸ்திரத்தில்) அதிகாரி துர்லபன் அன்றும். அவ்விப்பொருள் இச்சுலோகத்தால் சூசிப்பிக்கப்பட்டது.

## இனி பதங்களின் விசேஷவுரை

எந்த யாகத்தில் சோமலதை ஒரு தடவை பிழியப்படுகிறதோ அது ஏகாஹமென்னும் கிரதுவாம். இரண்டு நாள் முதலாக பனிரண்டு நாள் பரியந்தம் எந்த யாகத்தில் சோமலதை ரசம் பிழியப்படுகின்றதோ அது அஹீனமென்னுங் கிரதுவாம். சத்திரம் இரண்டு விதமாம். ஒன்று அநேக தினங்களின் சமுதாயத்தால் சாத்தியமாம். துவாதசாஹம் போன்று. "யஜேந்" "உபயந்தி" என்கிருக. கூடுகின்றன. என்னும் இரண்டு சுருதிகளின் பலத்தால் துவாதசாஹமென்னும் சத்திரம் அஹீனசத்திர வடிவமாக அறியப்பட்டது மற்றோர் சத்திரம் வருஷக் கூட்டத்தால் சாத்தியமாம். இது அக்கினிஹோத்திராதி கர்மத்திற்கும் உபலக்ஷணமாம். இக்கர்மங்களின் எவ்விதிவாக்கியங்களுண்டோ அவை களால் விதிக்கப்பட்ட அக்கினிஹோத்திர முதலாக சகஸ்ரசம்வத்ஸர மெனப் பெயரிய கர்மபர்யந்தமான எக்கர்மங்களுண்டோ அவைகளின் அநுபாவம் = பாவத்தை நிவர்த்திக்கும் சாமர்த்தியம். அதனுல் நஷ்ட மானது தனது அந்தக்கரணத்தின்கண்ணுள்ள உபரோதம் = விவிதிஷை யின் பிரதிபந்தம் எவர்களுக்கோ அவர்கள் அவ்வாறு கூறப்பட்டனர். கதம் அபி = அநேக ஜன்மங்களால் வியவதானம் உளதேனும், சாதன சதுஷ்டயசம்பன்னரான அதிகாரிகள் அகண்ட சைதன்னியான்மக பிரத்தியக் பிரம்மத்தின் சாக்ஷாத்கார இச்சையைப் பெறுகின்றனர்.

அற்றேல், அக்கினிஹோத்திரம் முதலிய சுபகர்மத்திற்கு பிரம்மஜிக் ஞாசையின் பிரதிபந்தமான பாபத்தை நிவர்த்திக்குந் தன்மை எதனுலறிய பட்டது. எதனுல் பாபநிவர்த்தியின்பொருட்டு அக்கினிஹோத்திராதி கர்மங்களை அனுஷ்டிப்பார்கள். பிரத்தியக்ஷாதிப் பிரமாணத்தால் அதனை யறியமுடியாது. அக்கினிஹோத்திராதி வாக்கியத்தாலும் அதனை யறிய முடியாது. அவ்வாக்கியத்தின்கண் பாபநிவர்த்தியைப் போதிக்கும் பதமின்மையின், என்னுமிடத்துக் கூறுகின்றார்: யஞ்ஞத்தாலென "அந்த இவ்வான்மாவை பிராம்மணர்கள் வேதாத்தியயனத்தாலும், யக்ஞத் தாலும், தானத்தாலும், தபசினுலும், அனசனத்தினுலும் அறிய விரும்பு கின்றனர்" என்பது முதலிய சுருதிவாக்கியம் பிரமாணமாம். சுலோகத் தில் சதபதமென்னும் சப்தத்தின் கிரஹணம் வினியோஜக வாக்கியத் தோடு வினியோஜ்யகர்மத்தின் சம்பந்தத்தை யறிவித்தற் பொருட்டாம்.

அற்றேல், சொர்க்கத்தை விரும்பும் புருஷன் யாகத்தைச் செய்க ஜீவனம் உள்ளவரை அக்கினிஹோத்திரத்தைச் செய்க என்பது முதலிய சுருதிவாக்கியத்தால் அக்கினிஹோத்திரம் முதலிய கர்மம் சொர்க்கம் முதலிய அவ்வப்பயனில் விநியோகிக்கப்பட்டது. அவ்வாறாக பிரம்ம ஜிக்ஞாசையின்கண் அதற்கு வினியோகம் எப்படிப் பொருந்தும். ஏனெனின் ஓரிடத்தில் வினியோகம் பண்ணப்பட்டதற்கு வேறிடத்தில் வினியோகம் செய்தலில் விரோதம் வருதலின், என்னுமிடத்துக் கூறுகின்றார். கருமத்தின் சொரூபத்தை யென, அக்கினிஹோத்திராதி கர்மஸ்வரூபமாத்திரத்தைப் போதிக்கும் வாக்கியத்தால் சித்தித்தது என்பது பொருள். அக்கிஹோத்திரத்தைச் செய்க என்பது முதலிய வாக்கியங்களால் முதலில் பல விசேஷசூனியமாகவே அக்கினிஹோத்தி ராதிகருமம் விதிக்கப்படுகின்றது. பிறகு பயனைப் போதிக்கின்ற வேறு சுருதிவாக்கியத்தால் கருமத்தால் அபேக்ஷிக்கப்பட்ட பல விசேஷத்தில் அக்கருமத்திற்கு சம்பந்தம் பிரதிபாதிக்கப்படுகின்றது. இவ்வாறு சுவர்க்காதி பலவிசேஷத்தோடு சம்பந்தமிருப்பதுபோன்று அக்கினி ஹோத்திராதி கருமத்திற்கு விவிதிஷையின்கண்ணும் சம்பந்தம் விருத்த மன்றும் விநியோஜகவாக்கியங்களுக்கு சமானத்தன்மை யுண்மையின்.

சுவர்க்காதிபயனை யுத்தேசித்து அக்கினிஹோத்திராதி கருமத்தைச் செய்யின் அதனால் சுவர்க்கம் பிராப்தியாகின்றது. விவிதிஷையை யுத்தேசித்து அக்கருமத்தைச் செய்யின் விவிதிஷை யுண்டா கிறது இவ்வாறு விஷயத்தின் சுந்தரத்தன்மை ஞானத்தால் அடையப் படுவதாகிய இச்சையின்கண் கருமத்திற்கு சாக்ஷாத் சாதனத்தன்மைச் சம்பவியாமையால் சாமர்த்தியத்தால் (அருத்தாபத்திப் பிரமாணத்தால்) பிரதிபந்தகபாபநிவிருத்தியின் கண்ணேயே சாதனத்தன்மை கற்பிக்கப் படுகின்றது. புருஷன் = பரமான்மா, சுலோகத்திலுள்ள மாத்திர சத்தத்தால் அக்கினிஹோத்திராதி கருமத்திற்கு ஞானுதிபரியந்தமான பிரவிருத்தியை நிவர்த்திக்கின்றார். சில நூலாசிரியர் அக்கினிஹோத்தி ராதி கருமத்திற்கு தத்துவஞானத்தின் ஏதுத்தன்மையை யங்கீகரிக் கின்றனர். அவர் மதத்தைக் கண்டித்தற்பொருட்டு மாத்திர சத்தத்தால் ஜிஞ்ஞாசையிலேயே ஏதுத்தன்மையைக் கூறினர். இவ்வாறாக அதிகாரியினபாவமின்றும் என்பது கருத்து. (64)

## அவதாரிகை

இவ்வாறு விஷயமும் பிரயோஜனமும் சம்பவித்தலால் இக்கிரந்தம் பூருவமீமாம்ஸையினுல் சரிதார்த்தமன்ருமாதலினுலும் சாதனசதுஷ்டய அதிகாரி கிடைத்தலானும் பிரம்மவிசார சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதாமென்று கூறப்பட்டது. இப்போது குருசிஷ்ய சம்வாதமுகத்தால் சாஸ்திரத்தைப் பிரவிர்த்திப்பித்தற்கு ஜிஞ்ஞாசை சூத்திரத்தின் கண்ணுள்ள **अथ** = அத சத்தத்தால் கிரகிக்கப்பட்ட சாதன சதுஷ்டய அதிகாரியின் " பிரம்மான்மஞானத்தின் பொருட்டு அதிகாரி புருஷன் கையில் சமித்தையுடைத்தானவனுகி சுரோத்திரிய பிரம்மநிஷ்ட குருவைச் சரணடைக " என்னும் சுருதியால் தெரிசிப்பிக்கப்பட்ட குருபசதனத்தைக் கூறுகின்ருர் :—

அதிகாரியின் குருபசதனத்தை எனக் கூட்டுக.

## சுலோகம்

**उपससाद चतुष्टयसाधनो**
**निशितबुद्धिरशुद्धिपरिक्षयात् ।**
**विविदिषुर्विहितैर्विविधाध्वरै-**
**र्विदितवेद्यतमं विधिवद्गुरुम् ॥ ६५ ॥**

## பதவுரை

**विहितैः** – நன்ருக அனுஷ்டிக்கப்பட்ட

**विविधाध्वरैः** – நாநாப்பிரகாரமான யஞ்ஞாதி சுப கருமங்களால்

**अशुद्धिपरिक्षयात्** – சித்தத்தின்கண்ணுள்ள பாபவடிவமலம் நசித்துவிடுதலால்

**निशितबुद्धिः** – கூர்மையான புத்தியுடைத்தானவனுய்

**चतुष्टयसाधनः** – விவேகாதி சதுஷ்டய சாதனங்களை யுடைத்தானவனுய்

**विविदिषुः** – பிரம்மத்தையறியும் வேட்கை யுடைத்தானவனுயுள்ள ஓர் அதிகாரி சிஷ்யன்

**विदितवेद्यतमम्** – பிரம்மதத்துவத்தை யறிந்தவரும் ( சுரோத்திரி யரும் ) ஆகிய

**गुरुम्** – குரு மூர்த்தியை

**विधिवत्** – சுருதியிற் கூறிய விதிப்படி

**उपससाद** – சரணடைந்தான்

## *விசேஷவுரை*

பிரம்மஞான சாதனமான விவேகாதி நான்கும் எவனுக்கிருக்கிறதோ அவன் சதுஷ்டய சாதனனெனப்படுவன், கூர்மையான= அதிசூக்ஷ்மமும் பிரம்மாகாரத்தன்மைக்கு யோக்கியமுமான, புத்தி= அந்தக்கரணம் எவனுக்கோ. அவன் கூர்மையான புத்தியுடையவன் எனப்படுவன்.

" சுரோத்திரியரும் பிரம்ம நிஷ்டரும் " என்னுஞ் சுருதியால் தெரிசிப்பிக்கப்பட்ட குருவின் விசேஷணத்தைக் கூறுகின்றார் பிரம்ம தத்துவத்தையறிந்தவர் என. " சமித்தைக் கரத்திலுடையவனாய் " என்னுஞ்சுருதியால் தெரிசிப்பிக்கப்பட்ட உபசதனப் பிரகாரத்தைக் கூறுகின்றார் விதிப்படி என. உபசதனம்–அடைதல். " அக்கினி ஹோத்திரம், கிருஹம், க்ஷேத்திரம், கர்ப்பிணி, விருத்தர், பாலர், அரசன், தேவதை, குரு ஆகிய இவர்களிடத்திற்போகும்போது வெறுங் கையோடு போகலாகாது." என்னும் ஸ்மிருதி வசனத்தால் ஏதேனும் கையிற்கொண்டுபோகவேண்டும் என்பது கருத்து. பகவற்கீதையிற்கூறப் பட்ட பத்திரம் புஷ்பம் பலம் தோயம் எப்படி இதரபூஜாதிரவியங்களுக்கு உபலக்ஷணமோ அப்படி சுருதியிற்கூறப்பட்ட சமித்பதம் இதர பூஜா திரவியங்களுக்கு உபலக்ஷணமாம். பூஜா திரவியங்களைக் கொண்டு போவதில் அத்தியந்தம் அசமர்த்தனுயின் பல் தேய்த்தலாதியில் உபயோகமாயுள்ள குச்சி முதலியவற்றையாவது கையிற்கொண்டு செல்லவேண்டும் என்பது கருத்து. (65)

## *அவதாரிகை*

அற்றேல் மோக்ஷத்திலிச்சையுடைய அதிகாரியானவன் குருவைச் சரணமாக அடைந்தான் என்று யாதொன்று கூறப்பட்டதோ அது

பொருந்தாது அனுபவிக்கப்பட்ட விஷய சுகத்தினும் விஜாதீயமான நிர்விஷய மோக்ஷத்தின்கண் இச்சை பொருந்தாமையின் இதனாலேயே சருவ அனர்த்தத்தின் நிவிருத்தியை இச்சிப்பவன் முமுக்ஷுவாவன் என்பதும் சம்பவிக்கின்றதில்லை. அனர்த்த நிவர்த்திக்கு சொருபமாக புருஷார்த்தத் தன்மையின்மையின் நிர்விஷய அகண்டானந்த புருஷார்த்தத்திற்கு அங்கத் தன்மையாலேயே இச்சிக்கப்படுந்தன்மையுண்மையின் அங்கிவடிவ அகண்டசுகமில்லையாயின் அங்கவடிவ அனர்த்தநிவர்த்தியின் காமனையும் பொருந்தாது என்னுஞ் சங்கைக்கு கைமுதிக நியாயத்தால் பிரகிருத (பிரசங்கத்தில் வந்த) அதிகாரிக்கு மோக்ஷ இச்சையைத் தெரிவித்தற்பொருட்டு உலகத்தின் கண்ணும் மோக்ஷ இச்சையின் மிக எளிதாந்தன்மையைக் கூறுகின்றார்—

### சுலோகம்

इह जगति हि सर्व एव जन्तु-
निरतिशयं सुखमुत्तमं ममास्तु ।
उपरमतु तथोपघातरूपं
विषयजदुःखमिति स्पृहां करोति ॥ ६६ ॥

### பதவுரை

**इह जगति** – இவ்வுலகின் கண்
**सर्व एव जन्तुः** – எல்லாப்பிராணியுமே
**निरतिशयम्** – எல்லாவற்றினும் மேலானதும்
**उत्तमम्** – துக்கசம்பந்தமற்றதுமான
**सुखम्** – ஆனந்தம்
**मम अस्तु** – எனக்கு உண்டாகுக
**तथा** – அவ்வாறே
**उपघातरूपम्** – புருஷார்த்த விரோதி வடிவ
**विषयजदुःखम्** – விஷயத்தாலுண்டாகும் துக்கமானது
**उपरमतु** – சாந்தியாகுக (உண்டாகாதொழிக)

**इति** – என்று

**स्पृहाम् करोति** – ஆசையைச் செய்கின்றது

**हि** – இது பிரசித்தமாம்

### *விசேஷவுரை*

எல்லாப் பிராணியும் என்பது பிராணி மாத்திரத்தில் நிரதிசய சுகாதியின் வாஞ்சையுண்டாவதில் பிரமாணமின்மையின் யோக்கிய மனுஷியரின் அபிப்பிராயமாம். (66)

### *அவதாரிகை*

இவ்வாறாயினும் மோக்ஷ இச்சையின்கண் வந்ததென்னை ? அதாவது மோக்ஷ இச்சை யெவ்வாறு சித்தித்தது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார் :—

### *சுலோகம்*

**निरतिशयसुखं च दुःखजात-**
**व्युपरमणं च वदन्ति मोक्षतत्त्वम् ।**
**उभयमपि जनोऽभिवाञ्छतीति**
**स्फुटतरमस्य सदाऽस्ति मोक्षवाञ्छा ॥ ६७ ॥**

### *பதவுரை*

**निरतिशयसुखं च** – நிரதிசயானந்தத்தினையும்

**दुःखजातव्युपरमणं च** – சருவதுக்கத்தின் நிவர்த்தியினையும்

**मोक्षतत्त्वं वदन्ति** – மோக்ஷத்தின் சொரூபமாமெனஆசாரியர்கள் கூறுகின்றார்கள்

இலௌகிக ஜனங்களால் விரும்பப்படுகின்ற நிரதிசய சுகாதிக்கு மோக்ஷத்தன்மை சித்தித்தவழி பலிதத்தைக் கூறுகின்றார்.

**उभयमपि** – கூறிய இரண்டினையும்

**जनः** – மனிதர்கள்

**अभिवाञ्छति** – விரும்புகின்றார்கள்

**इति**–ஆதலின்

**अस्य**–இந்த ஜனங்களுக்கு

**मोक्षवाञ्छा**–மோக்ஷ இச்சையானது

**स्फुटतरम्** –அத்தியந்தம் ஸ்பஷ்டமாக

**सदा अस्ति**–எப்போதுமிருக்கின்றது

இவ்வாறு பிராணிமாத்திரத்திற்கு மோக்ஷ இச்சை சித்தித்தவழி சித்தத்தின் கண்ணுள்ள சருவமலமுமற்றவனும் தீவிர வைராக்கியாதி சாதனமுடையவனுமாகிய புருஷனிடத்தே மோக்ஷ இச்சையுள்ள தென்பதன் கண் கூறவேண்டிய தென்னையுள, மோக்ஷ சுகமே அவ்வச் சத்தாதி விஷய சம்பந்தமாயிலாக இலௌகிக ஜனங்களால் விரும்பப் படுகின்றமையின் மோக்ஷ சுகம் இலௌகிக சுகத்தினும் விலக்ஷணமன்று என்பது கருத்து. (67)

## அவதாரிகை

அற்றேல் நிரதிசயசுகாதிவடிவ மோக்ஷம் அறியப்படாதபோது அதன்கண் சருவப்பிராணிகட்கும் இச்சை யெப்படிப் பொருந்தும் எதனு லெனின் இச்சையானது அறியப்பட்டதனையே விஷயஞ் செய்கின்ற தாகலின் எனின் அதற்குக் கூறுகின்றார் :—

## சுலோகம்

**उभयमपि परात्मनः स्वरूपं**
**विमलचिदेकरसं स्वयंप्रकाशम् ।**
**इति भवति विना प्रमाणमस्मि-**
**न्नुदितनयादभिवाञ्छनोपपत्तिः ॥ ६८ ॥**

## பதவுரை

**उभयमपि** – நிரதிசயசுகமும், சர்வதுக்கநிவர்த்தியுமாகிய இரண்டும்

**विमलचिदेकरसम्** – நிர்மலஞான ஏகரசமாய்

**स्वयं प्रकाशम्** – சுயம்பிரகாசமாய் உள்ள

**परात्मनः** – அகங்காரவிலக்ஷண சாக்ஷியின்

**स्वरूपम्** – வடிவமாம்.

இவ்வாறாக நிரதிசயசுகாதிக்கு சுயம்பிரகாச ஆன்மசொரூபத் தன்மையுண்மையின் எல்லோருக்கும் நிரதிசய சுகவடிவ சுயம்பிரகாச ஆன்மவடிவமோக்ஷத்தின் பிரதீதி விருத்தமின்றும். எனக் கூறுகின்றார்.

**इति** – ஆதலின்

**प्रमाणम् विना** – பிரமாணமின்றியும்

**उदितनयात्** – 66-வது சுலோகத்திற் கூறிய வழியினால்

**अस्मिन्** – நிரதிசயசுகவடிவமும் சர்வதுக்கநிவர்த்தி வடிவமுமாகிய மோக்ஷத்தின்கண்

**अभिवाञ्छनोपपत्तिः** – அபிலாஷையின் சித்தி

**भवति** – உண்டாகிறது.

மோக்ஷவடிவநிரதிசய சுகஞானத்தின்பொருட்டு சாக்ஷியின் சொரூபத்தை விசேஷிக்கின்றார் :— 'சுயம் பிரகாசம்' என. அச்சுயம் பிரகாசத்தின்கண் ஏதுவைக் கூறுகின்றார். "விமல" என. 'விமல' என்னுஞ் சொல்லால் சாக்ஷி சொரூபத்தின் அநாவிருதத்தன்மை வடிவ நிர்மலத்தன்மை கூறப்பட்டது. (68)

## அவதாரிகை

அற்றேல், அநாவிருத சாக்ஷிவடிவ சுகாதிக்கு நிரதிசயத்தன்மை எங்ஙனம் கூடும். உலகின்கண் அவ்வாறு நிரதிசய சுகவடிவமாக அனுபவிக்கப்படாமையின் உலகின்கண் அநுபவமின்றேனும் வாஸ்தவமாக சாக்ஷிவடிவ சுகாதி நிரதிசயவடிவமேயாம் எனின். நீ சொல்வது சரிதான். அங்ஙனமாயினும் அஞ்ஞானத்தால் சுகப்பிரகாசம் மறைக்கப் பட்டிருத்தலின் அதன்கண் அதன் ஞானமின்றி இச்சை யுண்டாகாது. என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார் :—

*சுலோகம்*

**कर्मकाण्डकृतबुद्धिशुद्धितस्तर्किते च खलु मोक्षवस्तुनि ।**
**अर्थिताऽस्य घटते प्रयोजकज्ञाननुन्नमनसो महात्मनः ॥ ६९ ॥**

*பதவுரை*

**कर्मकाण्डकृत** – எக்ஞாதிகர்ம சமுதாயத்தின் அனுஷ்டானத்தாலுண்டான

**बुद्धिशुद्धितः** – அந்தக்கரணத்தின் சொச்சத்தன்மையினுல் (அதாவது சுத்த புத்தியினுல்)

**मोक्षवस्तुनि** – நிரதிசயானந்தவடிவ ஆன்மவஸ்துவானது.

**तर्किते** – பரமப்பிரேமைக்கு விஷயமாந்தன்மைவடிவ ஏதுவால் ஊகிக்கப்பட்டபோது அவ்வான்மவடிவ மோக்ஷத்தின்கண்

**प्रयोजकज्ञाननुन्नमनसः** – ஆபாதக்ஞானவடிவ பிரயோஜகத்தினுல் பிரேரிக்கப்பட்ட அதாவது பிரம்மவிசாரத்தில் அபிமுகமாக்கப்பட்ட மனதையுடையவனும்

**महात्मनः** – புருஷஸ்ரேஷ்டனுமாய

**अस्य** – விசிஷ்டாதிகாரிக்கு

**अर्थिता** – அபிலாஷை

**घटते** – பொருந்துகின்றது.

*விசேஷவுரை*

பிரயோஜகஞானம் = ஆனந்தாத்வயான்மாவைப் பிரதிபாதிக்கும் வாக்கியத்தாலுண்டான ஆபாத ஞானம், அந்த ஞானத்தினுல் நுன்னம் = பிரேரிக்கப்பட்டது. அதாவது ஆன்மாவினபிமுகமாக்கப்பட்டது மனது எவனுக்கோ அவன் பிரயோஜக ஞானநுன்ன மனசன், இதனுலேயே மஹாத்மா = நித்திய நைமித்திகாதி கருமங்களையனுஷ்டித்தலால் அத்தியந்தம் நிருமலமான மனதையுடையவன், இத்தன்மைய விசிஷ்டாதிகாரிக்கு பரமபிரேமைக்கு விஷயமாந்தன்மை முதலிய லிங்கத்

தாலும் வேதாந்த வாக்கியத்தாலும் ஆபாதரூபத்தாலறியப்பட்ட ஆனந்தாதி வடிவ ஆன்மாவில் பிரேப்ஸை எனுண்டாகாது அவசிய முண்டாகுமென்பது கருத்து, பிரேப்ஸை = அடைய இச்சை. (69)

## அவதாரிகை

அற்றேல் குருவாயிலாக செய்யப்பட்ட சிரவணத்திற்கு முன்பே அதிகாரியினல் சுருதியாலும் யுக்தியாலும் ஆனந்தாதி வடிவ வஸ்து அறியப்படுமாயின் அவ்வதிகாரிக்குக் குருவைச்சரணடைதல் ஸேவை செய்தல் முதலியவை வியர்த்தமேயாகும் என்னுஞ்சங்கைக்கு தானே வேதவாக்கியத்தைப் படித்தலால் உண்டான ஞானத்திற்கு அன்னிய தாத்துவ (விபரீத ஞானத்துவ) சங்கை வடிவ கலங்கம் சம்பவித்தலாலும் "ஆசாரியனையுடைய புருஷனே வஸ்துவையுள்ளபடியறிகின்ருன்" என்னுஞ் சுருதியினலும் ஆசாரியனது முகத்தாலேயே பிரம்மம் நிச்சயிக் கத்தக்கதாம் என திருஷ்டாந்த சகிதம் கூறுகின்ருர் :—

## சுலோகம்

धर्मनिर्णयनिमित्तमिष्यते
वेदवित्परिषदेव मानवे ।
तद्वदत्र गुरुणाऽस्य सङ्गति-
स्तेन चास्य घटतेऽर्थिता गुरौ ॥ ७० ॥

## பதவுரை

मानवे – மனுஸ்மிருதியின்கண்

धर्मनिर्णय-निमित्तम् } – தருமத்தை நிச்சயஞ் செய்வதில் நிமித்தமாக

वेदवित्परिषदेव – வேதார்த்தங்களையறிந்த வித்துவான்களுடைய சபையே

इष्यते – அங்கீகரிக்கப்படுகிறது.

तद्वत् – அப்படி

अत्र – பிரம்மநிச்சயத்தின்கண்

**गुरुणा** – சுரோத்திரிய பிரம்மநிஷ்ட குருவோடு

**अस्य** – விவேகாதிசாதன சம்பன்ன அதிகாரிக்கு

**सङ्गतिः** – சம்சர்க்கமே நிமித்தமாக அங்கீகரிக்கப்படுகிறது.

பலிதத்தைக் கூறுகின்றார் :—

**तेन** – அதனால்

**गुरौ** – குருவினிடத்தில்

**अस्य** – விசிஷ்டாதிகாரிக்கு

**अर्थिता** – அபிலாஷை

**घटते** – பொருந்துகின்றது.

## *விசேஷவுரை*

**चत्वारो वेदधर्मज्ञाः पर्षत् त्रैविद्यमेव वा ।**
**सा ब्रूते यं स धर्मः स्यादेको वाऽध्यात्मवित्तमः ॥**

வேதத்தின் தருமத்தையறிகின்றவர்கள் நான்கு பேர்கள் வித்வான்களுடைய சபை, இருக்முதலிய மூன்று வேதத்தையறிந்தவர்களுடைய சபை, அல்லது ஆன்மாவையறிந்த ஞானியொருவனே, இவர்கள் எதனை தருமமென்று கூறுகின்றனரோ அதுவே தருமமாம் என்று இந்தப் பிரகாரம் மனுபகவானால் வேத வேத்தாக்களின் சபையினால் தருமத்தின் நிச்சயம் உண்டாகின்றது, என்று சொல்லப்பட்டிருக்கின்றது, அதுபோல ஆன்ம ஞானத்திற்கும் குருவினுபதேசத்தால் சாத்தியத்தன்மையுண்மையின் அவ்வான்ம ஞானத்தின்பொருட்டு முமுக்ஷுவுக்கும் குருவின் சமீபத்திற் செல்லுதல் பொருத்தமேயாம் என்பது அபிப்ராயம்.

## *அவதாரிகை*

அற்றேல் பூருவமீமாம்ஸையில் ஆறுவது அத்தியாயத்தின்கண் வேதார்த்தத்தின் அதிகாரியின் நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது ஆதலின் பிரம்மமீமாம்ஸையின்கண் அதிகாரியை நிருபணஞ்செய்கின்ற ஜிஞ்ஞாசை சூத்திரத்தின் கண்ணுள்ள ( **अथ** ) அத சத்தம் எற்றிற்கு பிரமமும் வேதார்த்தமாதலின், பிரம்மமீமாம்ஸை தருமமீமாம்ஸையினும்

வேறு சாஸ்திரமாதலின் புநருத்தியானது தோஷத்தின் பொருட்டன்றும் என்னற்க. அங்ஙனமாயினும் செய்ததைச் செய்தல் வியர்த்தமேயாம் அதாவது எதன் நிரூபணம் ஒரு தடவை செய்யப்பட்டதோ அதனை மீண்டும் நிரூபித்தல் பிஷ்ட பேஷணம்போன்று வீணேயாதலின் அன்றேல் = செய்ததைச் செய்தல் வியர்த்தமன்றாயின் பூருவ மீமாம்சையின்கண் நிரூபணஞ்செய்யப்பட்ட வேதத்திற்குப்பொருளுடைய தாந்தன்மை முதலியவற்றையும் ஈண்டு நிரூபணஞ்செய்தல் வேண்டும் என்னுமிடத்துக் கூறுகின்றார் :—

*சுலோகம்*

**यः कर्मकाण्डविषयेऽभिहितोऽधिकारी**
**सोऽयं प्रवृत्तिषु निवृत्तिषु तुल्यरूपः ।**
**अत्राभिधित्सितविशेषणपूगयुक्तोऽ-**
**साधारणस्त्वभिमतः पुरुषो निवृत्तौ ॥ ७१ ॥**

*பதவுரை*

**कर्मकाण्डविषये** – கருமகாண்டத்தின்கண் அதாவது பூருவ மீமாம்ஸையின் ஆருவதத்தியாயத்தின்கண்

**यः अधिकारी** – யாதொரு அதிகாரியானவன்

**अभिहितः** – நிரூபிக்கப்பட்டானோ

**सोऽयम्** – அந்த இவ்வதிகாரி

**प्रवृत्तिषु** – ஜ்யோதிஷ்டோமாதிவடிவ விகிதப் பிரவிருத்தியின் கண்ணும்

**निवृत्तिषु** – கலஞ்சபக்ஷணாதி நிஷித்தகருமத்தின் தியாகவடிவ நிவிருத்தியின் கண்ணும்

**तुल्यरूपः** – சமானவடிவத்தாலதிகாரியாவன்

**अत्र तु** – இந்த உத்தரமீமாம்ஸையின்கண்ணோ

**अभिधित्सितविशेषण पूगयुक्तः** – சொல்ல வாஞ்சிக்கப்பட்ட விவேகாதி சாதன சமுதாயமுடையவனான

**पुरुषः** — எப்புருஷனுண்டோ அவன்

**निवृत्तौ** — கருமஸந்நியாஸபூருவக பிரம்மவிசார மாத்திரத்தில்

**असाधारणः** — அசாதாரணவடிவத்தால்

**अभिमतः** — கருதப்பட்டுளன்.

## *விசேஷவுரை*

கருமகாண்டவிஷய என்பதற்கு கருமசமுதாயத்தை யுத்தேசித்து எனவும் பொருள் கொள்ளலாம். அதாவது பூருவமீமாம்ஸையில் ஆருவது அத்தியாயத்தில் கருமசமுதாயத்தை யுத்தேசித்து நிருபிக்கப் பட்டவன் எவனே அவன் பிரவிருத்தியிலும் நிவிருத்தியிலும் சமனுவன், ஈண்டி:.தபிப்பிராயமாம் அக்கினிஹோத்திராதிகளை யநுஷ்டிக்கின்ற புருஷனுக்கும் கலஞ்ச பக்ஷணுதியின் நிவிருத்தியைக் கடக்குங்கால், அங்ஙனமே கலஞ்ச பக்ஷணுதியின் நிவிர்த்தியில் தற்பரனுயுள்ள புருஷனுக்கும் அக்கினி ஹோத்திராதி கருமங்களினநுஷ்டானத்தைக் கடக்குங்கால் பிரத்தியவாயம் சமமாதலின் இவன் பிரவிருத்தி நிவிருத்தியில் சமனும். பிரகிருத அதிகாரிக்கு அவனினின்றும் விசேஷத்தைக் கூறுகின்ருர் இந்த உத்தரமீமாம்ஸையின் கண் என.

பிரம்மஜிஞ்ஞாசை சூத்திரத்தின்கண்ணுள்ள (**अथ**) அத சத்தத்தால் வியாசபகவானுல் அதிகாரியின் விசேஷணமான விவேகாதிகள் சூசிப்பிக்கப்பட்டனவாயினும் பூருவமீமாம்ஸையில் அங்கத்தன்மையைப் பிரதிபாதிக்கின்ற மூன்ருவதத்தியாயத்தின்கண்ணுள்ள யுக்திகளாலேயே சித்தமாகின்றன என்று சங்கையுண்டாக அபிதித்சித எனப்பட்டது. ஆண்டு பலேச்சையுடையவனும் சமர்த்தனும் சாஸ்திரத்தால் அநிஷித்தனும் வித்வானும் ஆன புருஷன் கருமத்திலதிகாரியாவன் என யுத்தியால் சாதிக்கப்பட்டுளது. வேதாந்தசாஸ்திரத்தின்கண்ணே சாதன சதுஷ்டயசம்பன்னனும் சகலகருமத்தியாகியுமான புருஷனுல் பிரம்மம் விசாரிக்கத்தக்கது என நிருபிக்கப்படுகின்றது. ஆதலின் அவனினின்றும் இவனுக்கு விசேஷமுளது. இவ்விசிஷ்டாதிகாரி ஆருவதத்தியாயத்திற்கூறிய நியாயத்தாற் சித்திக்கிறதில்லை. ஆதலின் பிரம்மமீமாம்ஸையில் அதிகாரியை நிருபித்தல் வியர்த்தமின்ரும், வேதத்திற்குப் பொருளுடையதாந்தன்மை முதலானதோ ஆருவதத்தியாயத்திற் கூறிய

யுத்திகளைப் பார்க்கிலும் வேறு யுக்திகளை யபேக்ஷிக்கிறதில்லை ஆதலின் ஈண்டு அதன் நிரூபணமின்றும் என்பது கருத்து.

பிஷ்டபேஷணம் = அரைத்த மாவை அரைத்தல். (71)

## அவதாரிகை

அற்றேல் சாதனசம்பன்ன இவ்வதிகாரிக்கும் சிரவணாதிகளில் பிரவிருத்தியும் அக்கினி ஹோத்திராதி கருமங்களில நிவிர்த்தியுமிருத்தலின் இவனும் பிரவிருத்தி நிவிர்த்திகளில் சாதாரணனேயாவன் என்னுஞ் சங்கைக்கு கூறுகின்றார் :—

## சுலோகம்

**शास्त्रं प्रवृत्तिषु निवृत्तिषु तुल्यरूपं**
**साधारणस्य पुरुषस्य पुराऽभ्यधायि ।**
**अस्योच्यते सकलकर्मनिवृत्तिभाजः**
**सर्वं निवृत्तिविषयं श्रवणादिशास्त्रम् ॥ ७२ ॥**

## பதவுரை

**प्रवृत्तिषु निवृत्तिषु** – பிரவிருத்தி நிவிருத்திகளில்

**साधारणस्य पुरुषस्य** – சமானத்தன்மையினையுடைய புருஷனுக்கு

**तुल्यरूपं शास्त्रम्** – சமானபலமுடைய விதிநிஷேத சாஸ்திரம்

**पुरा अभ्यधायि** – பூர்வமீமாம்ஸையின்கண் ஜைமினி மஹரிஷியாற் கூறப்பட்டது.

**सकलकर्मनिवृत्तिभाजः** – சர்வகர்மங்களின் சந்நியாசத்தையடைந்துள்ள

**अस्य** – இந்த ஞானாதிகாரிக்கு

**सर्वं श्रवणादिशास्त्रम्** – சிரவணாதியைப் போதிக்கின்ற சாஸ்திரங்களனைத்தும்

**निवृत्तिविषयम्** – கேவலநிவிருத்திவிஷயமேயாம் என்று

**उच्यते** – வியாசர் முதலிய மஹரிஷிகளாற் சொல்லப்படுகின்றது.

## விசேஷவுரை

அக்கினிஹோத்திரம் முதலியவற்றைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரமானது அந்தக்கர்மத்தின் அதிகாரிக்கு அக்கினிஹோத்திராதி கர்மங்களின் கர்தவ்யந்தன்மையையே பிரதிபாதிக்கின்றது. தனது பொருளில் பாதகமின்மையினால் அக்கினிஹோத்திராதியினும் இதர வியாபாரத்தை நிஷேதிக்கின்றதில்லை. ஆதலின் அவ்வதிகாரியானவன் பிரவிருத்தி நிவிருத்தியென்னும் உபய சாதாரணனுவன் ஆதலால் அவ்விதி சாஸ்திரம் நிஷேத சாஸ்திரமாகிய இரண்டும் அவ்வதிகாரியைக் குறித்து சமபலமுடையதாகவே ஜைமினி மஹரிஷியால் விசாரிக்கப்பட்டது. வியாச மஹரிஷியோ "சமமுடையவனும் தமமுடையவனும் உபரதியுடையவனும் திதிக்ஷுவும் சிரத்தையாகிற தனமுடையவனுமாயிருந்துகொண்டு ஆன்மாவின் கண்ணேயே ஆன்மாவைப்பார்க்குக" என்னும் சாஸ்திரத்தை அனுசரித்து ஞானத்தையுந்தேசித்து சகல கர்மத்தின் தியாகத்தை நிரூபணம் செய்து சந்நியாசியினலேயே பிரம்மம் விசாரிக்கத்தக்கது எனக் கூறுகின்றார். ஆண்டுசிரவணுதியை விதிக்கும் சாஸ்திரமானது இந்த ஞானுதிகாரிக்கு ஏதேனும் பிரவிருத்தியையுபதேசிக்குமாயின் அப்போது சகலகர்ம சந்நியாசத்தைப் பிரதிபாதிக்கும் சமமுடையன் என்பதாதியாக கூறிய சாஸ்திரமானது பாதிக்கப்படும். ஆதலின் சிரவணுதி சாஸ்திரம் நிவர்த்தி விஷயமேயாம். ஆதலின் இரண்டு அதிகாரிகளும் பரஸ்பரம் விலக்ஷணமேயாவர் என்பது பொருள். (72)

## அவதாரிகை

இவ்வாறு தர்ம மீமாம்சா சாஸ்திரத்திற்கு பிரவிருத்தி நிவிருத்திகளில் சாதாரண அதிகாரி விஷயமாமெனவும் பிரம்மமீமாம்சைக்கோ நிவர்த்திமாத்திரத்தின்கண் நிஷ்டையுள்ள புருஷன் விஷயமாமெனவுங் கூறப்பட்டது. இதுவும் பூர்வ மீமாம்சகருக்குஞ் சம்மதமாம் எனக் கூறுகின்றார் :—

## சுலோகம்

शास्त्रद्वैविध्यदृष्टेर्द्विविधमधिकृतेर्भेदमप्याश्रयन्ते
तद्द्वैविध्योपलब्धेः पुरुषमधिकृतं शास्त्रयोर्भिन्नमाहुः ।

शास्त्रार्थद्वित्वहेतोः पुरुषमधिकृतं तद्गतं चाधिकारं
नो चेद्भिन्नं प्रतीयुर्द्विविधमिह वृथा शास्त्रमापद्यते हि ॥

### பதவுரை

**शास्त्रद्वैविध्यदृष्टेः** – சாஸ்திரத்தின் இருவிதத் தன்மையைக் காண்டலால்

**अधिकृतेः अपि** – (விதிபுருஷசம்பந்தாதிவடிவ) அதிகாரத்திற்கும்

**द्विविधं भेदम्** – இரண்டுவிதமான பேதத்தினை

**आश्रयन्ते** – வித்வான்கள் அங்கீகரிக்கின்றார்கள்

**तद्द्वैविध्योपलब्धेः** – அதிகாரத்தின் இருவிதத்தன்மைப் பிரதீதியால்

**शास्त्रयोः** – இரண்டு சாஸ்திரங்களுக்கும்

**अधिकृतं पुरुषम्** – அதிகாரியான புருஷனையும்

**भिन्नं आहुः** – வெவ்வேருகக் கூறுகின்றனர்.

கூறிய பொருளை விபக்ஷ முண்டாகும் போது அதனைப்பாதிக்கும் வாயிலால் திடப்படுத்துகின்றார்.

**शास्त्रार्थद्वित्वहेतोः** – சாஸ்திரார்த்தத்தின் இருவிதத்தன்மை வடிவ காரணத்தால்

**अधिकृतं पुरुषम्** – அதிகாரி புருஷனையும்

**तद्गतं च अधिकारम्** – புருஷனிடத்துள்ள அதிகாரத்தையும்

**भिन्नं** – வெவ்வேருக

**नोचेत्प्रतीयुः** – அறியார்களாயின் ( அதாவது அங்கீகாரஞ் செய்யாராயின் )

**द्विविधं शास्त्रम्** – இருவிதமான சாஸ்திரமும்

**इह** – ஈண்டு

**वृथा हि आपद्यते** – வியர்த்தத்தன்மையையே அடையும்.

## *விசேஷவுரை*

பிரமாணுந்தர சம்பந்தமின்றிய (அஞ்ஞாத) சுவர்க்காதி அர்த்தத்தைப்பிரதிபாதிக்கும் வசனம் சாஸ்திரமெனப் படுகின்றது. மீமாம்ஸகர் இவ்வாறு கூறுகின்றனர் பிரமாணுந்தரத்தோடு சங்கிருஷ்டமின்றிய அர்த்தத்தைப் பிரதிபாதிக்கும் வசனம் சாஸ்திரம். அது பேதமாகுங்கால் அதனர்த்தமும் பேதமாகின்றது. அசங்கிருஷ்ட அர்த்த பேதமின்றி சாஸ்திரபேதம் பொருந்தாமையின் அதனர்த்தம் பேதம் ஆகுங்கால் அதனநுஷ்டான நிமித்தமான அதிகாரமும் பேதமாகின்றது. அதிகாரபேதத்தையங்கீகரியாவிடின் சித்திராயாகம் காரீரியாகம் முதலியவற்றின் கண்ணும் சுவர்க்ககாமன் முதலானேருக்கு அதிகாரசம்பந்தம் பிராப்தியாம். அதிகாரபேதத்தாலும் சாஸ்திர பேதத்தாலும் அதிகார விசிஷ்ட அதிகாரியும் பின்னமாகின்ருன். அதிகாரி பேதத்தை யங்கீகரியாவிடின் சாஸ்திர பேதம் சித்திக்காது என்று, கூறுகின்றனர் என மேலொட்டுக அது போல ஈண்டு பிரகிருதத்திலும் பிரவிருத்தி நிவிருத்தி விஷயத்தன்மையாலும் கேவல நிவிருத்திவிஷயத்தன்மையாலும் தருமமீமாம்ஸையும் பிரம்ம மீமாம்ஸையும் பரஸ்பரம் பின்னமாம் அவைகள் பின்னமாகவே அவற்றின் அர்த்தமும் அதிகாரியும் அவசியம் பின்னமாகவே ஆகவேண்டும் என்பது கருத்து. (73)

## *அவதாரிகை*

அற்றேல் சிரவணுதி சாஸ்திரமனைத்தும் நிவிர்த்திவிஷயமேயாம் என்று கூறப்பட்டது அது பொருந்தாது ஞானதிகாரியாகிய சன்னியாசிக்கு அஹிம்ஸை முதலிய யமம் உபதேசிக்கப்படுவது போன்று சௌசம் முதலிய நியமமும் உபதேசிக்கப்படுகின்றது அதுவோ பிரவிருத்தி வடிவமாமாதலின் என்னுமிடத்துக் கூறுகின்ருர் :—

## *சுலோகம்*

यमनियमविधानैर्वाङ्मनःकायचेष्टा-
व्युपरमणमशेषैः कथ्यते न प्रवृत्तिः ।
यदि भवति कदाचित्काचिदस्य प्रवृत्तिः
श्रुतिविहितनिवृत्तेः कर्मणां कस्थनं स्यात् ॥ ७४ ॥

## பதவுரை

**यमनियमविधानैः** – இயமத்தையும் நியமத்தையும் விதிக்கின்ற
**अशेषैः** –சம்பூர்ணவாக்கியங்களால்
**वाङ्मनःकायचेष्टा व्युपरमणम्** மனவாக்குக்காயங்களின் வியாபாரத்தின் நிர்த்தியே
**कथ्यते**–சொல்லப்படுகிறது
**न प्रवृत्तिः**–பிரவிருத்தி சொல்லப்படுவதின்றும்
அதிலேதுவைக் கூறுகிருர் :—
**कदाचित्**–ஓர்போது
**अस्य**–ஞானுதிகாரியான சன்னியாசிக்கு
**काचित् प्रवृत्तिः** –ஏதேனும் ஓர் பிரவிருத்தி
**यदि भवति**–அங்கீகரிக்கப்படுமாயின்
**कर्मणाम्** –கருமங்களின்
**श्रुतिविहितनिवृत्तेः** –சுருதியால் விதிக்கப்பட்ட நிவர்த்திக்கு
**कथनं स्यात्**–பீடையுண்டாகும்.

## விசேஷவுரை

விதானம்=விதிக்கின்ற வாக்கியம், சுலோகத்தில் யமத்தைக் கூறுதல் திருஷ்டாந்தத்தின் பொருட்டாம் பிரவிருத்தி=சௌசாதிக் கிரியை. அஹிம்ஸைமுதலிய இயமசாஸ்திரத்திற்குப் போன்று சௌசம் முதலிய நியம சாஸ்திரத்திற்கும் நிவர்த்தியிலேயே தாற்பரியமாம் பிரவிருத்தியில் தாற்பரியமன்றும். கரும சத்தந்திற்கு நிவர்த்தியோடு அன்வயம், "எந்நத்தினத்தில் விராக முண்டாகுமோ அந்தத்தினத்திலேயே சந்நியாசத்தையடைக" என்னுஞ்சுருதி ஞானத்தில் விருப்பமுடையவனுக்கு சருவ கருமங்களின் தியாகத்தை விதிக்கின்றது. ஞானர்த்தியாகிய சந்நியாசிக்கு ஏதேனும் பிரவிருத்தியை யங்கீகரிக்கின் மேற்கூறிய சுருதிக்கு விரோதம் வருமென்பது பொருள்.

" சீவனகாலம் வரை அக்கினி ஹோத்திரத்தைச் செய்க " என்னுஞ் சுருதியையநுசரித்து காமியகருமத்தியாக மாத்திரமே சன்னியாச சுருதிக்குப் பொருளாம் என்று சொல்லற்க. ஆண்டு சன்னியாச சுருதியால் யஞ்ஞோபவீதாதிக்கும் தியாகத்தை விதித்தலின்,

சன்னியாசிக்கு தருமங்களை விதிக்கின்ற வாக்கியத்தின்கண் "முண்டன் அபரிக்கிரகன் " என சிகை முதலியவற்றின் அபாவம் நியமமாகக் காணப்படுதலால். பிரதிப்பிரஸவநியாயத்தாலும் யஞ்ஞோபவீதாதியை யங்கீகரியாமையின், ஆதலால் " எந்தத் தினத்தில் விராகமுறுகின்றானோ " என்னுஞ் சுருதியால் சன்னியாசத்தில் அதிகாரமான வைராக்கியம் கேட்கப்படுதலால் சன்னியாச சாஸ்திரம் விரக்த முமுக்ஷுவையே விஷயமாகவுடையது.

சீவனகால பரியந்தம் அக்கினிஹோத்திரத்தைச் செய்க என்னுஞ் சாஸ்திரமோ சன்னியாச சுருதியின் சமானவிஷயகமன்றும் ஆதலின் விராகமின்றியவனையே விஷயமாகவுடையது. ஆதலால் எந்த பிரகாரத்தாலும் சந்நியாச சாஸ்திரத்தைச் சங்கோசஞ் செய்வதில் காரணமின்மையின் சன்னியாச சாஸ்திரம் சகல கருமங்களின் நிவர்த்தியையே விதிக்கின்றது. அச்சன்னியாச சாஸ்திரம் சன்னியாசிக்கு சௌசாதிப் பிரவிருத்தியை யங்கீகரிக்கின் பாதிதமாகும், சௌசாதிகளின் அநேக விதியின் வலிமையால் சன்னியாச சாஸ்திரத்தின் பாதம் இஷ்டமேயாமென்று சொல்லற்க சௌசாதி சாஸ்திரத்திற்கு சன்னியாச சாஸ்திரம் போன்று விரக்தமுமுக்ஷுமாத்திர விஷயகத்தன்மையின்மையால் விரக்த அவிரக்தசாமானிய விஷயகத்தன்மை யுண்மையினுல் விசேஷவிஷயக சன்னியாஸ சாஸ்திரத்தினும் துர்ப்பலத்தன்மையுளது ஆதலின் ஞானதிகாரிக்கு விதியினுல் ஓர் பிரவிருத்தியுமின்றுமென்பது கருத்து. அபவாதத்திற்குஅபவாதஞ் செய்யுங்கால் சாமானியத்தின் விதி பிரதிப்பிரசவநியாயமாம், அபவாதம் = விசேஷ சாஸ்திரம், ஈண்டுப் பிரசங்கத்தில் சௌசாதி சாஸ்திரம் சாமானியமாம் சன்னியாச சாஸ்திரம் அபவாதமாம் சீவனகால பரியந்த சுருதி அபவாதாபவாதமாம் என்று அங்கீகரிக்கினும் "முண்டன் அபரிக்கிரகன்" என்னும் வசனத்தால் யஞ்ஞோபவீதாதியை யங்கீகரியாமையின் சன்னியாசிக்கு விதியினுல் யாதொரு பிரவிருத்தியுமின்றுமென்பது கருத்து. (74)

## அவதாரிகை

இவ்வாறுயின் சிரவணுதியின்கண் பிரம்மஜிஞ்ஞாசுவாகிய முமுக்ஷுவுக்குப் பிரவிருத்தி யெப்படிக் கூடும் அதனை விதிக்கும் சாஸ்திரமின்மையின், அன்வயவியதிரேகங்களால் சிரவணுதியின்கண் ஞானசாதனத்தன்மை யறியப்படுதலின் தன்னுலேயே முமுக்ஷுவுக்கு அதில் பிரவிருத்தியுண்டாம் என்று சொல்லற்க நியமமாக சிரவணத்தின் கண் பிரவிருத்தி பொருந்தாமையின் தியானம் முதலிய இதர சாதனத்தானும் வாஞ்சிக்கப்பட்ட ஞானம் சம்பவித்தலின், அன்றியும் சிரவணுதி சாஸ்திரத்திற்கு நிவர்த்தியின்கண் தாற்பரியந்தான் எங்ஙனம் கூடும் என்னுமிடத்துக் கூறுகின்ருர் :—

## சுலோகம்

**औदासीन्यविशेषमेव हि परब्रह्मात्मधीजन्मने**
**शास्तीदं श्रवणादिशास्त्रममुना त्वाक्षिप्यते व्यापृतिः ।**
**तां तां व्यापृतिमन्तरेण घटते सा सा न शास्त्रार्थधी-**
**रित्यर्थाल्लशुनादिभक्षणगतौदासीन्यबोधादिव ॥ ७५ ॥**

## பதவுரை

**इदं श्रवणादिशास्त्रम्** – ஆன்மா சிரவணிக்கத்தக்கது என்பது முதலிய சிரவணுதி சாஸ்திரமானது

**परब्रह्मात्मधीजन्मने** – பிரத்தியகபின்ன பிரம்மசாக்ஷாத்காரத்தின் உத்பத்தியின் பொருட்டு

**औदासीन्यविशेषम् एव हि**–அநான்ய சிரவணுதி வடிவ பிரவிருத்தி விசேஷத்தினபாவத்தினையே

**शास्ति** – உபதேசிக்கின்றது.

**अमुना तु** – ஞானத்தின் பொருட்டுபதேசிக்கப்பட்ட இந்த ஔதாசீன்ய விசேஷத்தாலோ

**व्यापृतिः** – ஆன்மசிரவணுதி பிரவிருத்தி

**अर्थात्** - அர்த்தாபத்திப் பிரமாணத்தால்

**आक्षिप्यते** – கிரஹிக்கப்படுகின்றது.

(அர்த்தாபத்தியைக் காட்டுகின்றார்)

**तां तां व्यापृतिं अन्तरेण** – சிரவணமனனாதிவடிவ அவ்வவ்வியாபாரமின்றி

**सा सा शास्त्रार्थधीः** – அநான்ம சிரவண மனனாதியின் நிவர்த்தி வடிவ ஔதாசீன்யான்மக "ஆன்மா சிரவணிக்கத்தக்கது" என்பது முதலிய அவ்வச்சாஸ்திரார்த்தத்தின் ஞானம்

**न घटते इति** – பொருந்துகிறதில்லையாதலின்

**लशुनादिभक्षणगत औदासीन्यबोधादिव** – பூண்டு முதலியவற்றின் பக்ஷணத்தின்கண் ஔதாசீன்ய ஞானத்தால்போன்று

## *விசேஷவுரை*

ஔதாசீன்யம் என்பது பிரவிருத்தியின் அபாவமாம். அதனது விசேஷம் – அநான்ம சிரவணாதி பிரவிருத்தி விசேஷத்தின் அபாவம் என்பது பொருள். சிரவணமனனாதி வடிவப் பிரவிருத்தியின்றி அநான்ம சிரவணமனனாதி நிவிருத்தி வடிவ ஔதாசீன்ய விஷயக சிரவணாதி சாஸ்திரார்த்தத்தின் ஞானம் பொருந்தாததாய் ஆன்ம சிரவணமனனாதியைக் கற்பிக்கின்றது. "ஏ மைத்திரேயி ஆன்மா தரிசிக்கத்தக்கது சிரவணிக்கத்தக்கது மன்னிக்கத்தக்கது" என்பதாதி சாஸ்திரத்தால் ஆன்மஞான விரோதியாய அநான்ம சிரவணாதியின் அபாவவடிவ ஔதாசீன்யம் விதிக்கப்படுகின்றது. சிரவணாதி வியாபாரமானது விதிக்கப்படுகின்றதில்லை. எதனாலெனின் சிரவணாதியின்கண் ஆன்ம ஞானத்தின் சாதனத்தன்மை அந்நுவய வியதிரேகத்தால் சித்தித்தமையின் சிரவணாதியிருக்கின் ஆன்மசாக்ஷாத்காரம் உண்டாகின்றது. சிரவணாதி யின்றேல் ஆன்ம சாக்ஷாத்காரம் உண்டாவதில்லை என்பது அந்நுவயவியதிரேகமாம். கூறிய பாதக பலத்தாலும் சிரவணாதிக்கு விதி சம்பவிக்கின்றதில்லை. அப்பாதகமாவது :— ஞானார்த்தியாகிய சந்நியாசிக்கு '**प्रव्रजेत्**' ப்ரவ்ரஜேத் என்னும் சுருதியால் சர்வகர்மத்தின் சந்நியாசமும் '**मुण्डः अपरिग्रहः**' முண்டன் அபரிக்கிரகன் என்னுஞ் சுருதியினால் கர்மாங்கமாகிய சிகை முதலியவற்றின் சந்நியாசமும்

போதிக்கப்படுகின்றது என்பதாம். இந்த ஔதாசீன்ய விதியானது பரிசங்கியா விதியாம். அநான்ம சிரவணாதி வியாபாரத்தை விடுதலின்றி அநேகமாயிரந்தடவை யனுஷ்டிக்கப்பட்ட சிரவணாதியினாலும் அத்வய ஆத்மஞானம் சம்பவியாமையாலும் அநான்ம சிரவணாதிரூப வியாபாரத்தைத் தியாகஞ்செய்தபோதிலும் சித்தத்திற்கு நிர்வியாபாரத் தன்மை சம்பவியாமையால் அநான்ம சிரவணாதியின் தியாகமாத்திரத் தாலும் வாஞ்சித்த ஞானம் சித்தியாமையாலும், அந்வய வியதிரேகாதி யினால் எதன்கண் ஞானசாதனத்தன்மை நிச்சயிக்கப்பட்டதோ அந்த சிரவணாதிப் பிரவிருத்தியானது அர்த்தாபத்தியால் ஆக்ஷேபிக்கப்படு கின்றதென்பது கருத்து. அந்நிய அர்த்தத்தின் நிஷேத சாமர்த்தியத் தால் அந்நிய அர்த்தத்தின் சித்தியில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

பூண்டைப் புசியற்க கலஞ்சத்தை உண்ணற்க என்பது முதலிய நிஷேத வசனத்தால் அவ்வப்பக்ஷணாதியின் கண் இஷ்டசாதனத் தன்மையின் அபாவவடிவ ஔதாசீன்யத்தின் ஞானத்தால் எப்படி அதன் பக்ஷணாதியையடைவிக்கின்ற ராகாதி நிவர்த்தியில் புருஷன் முயல் கின்றானோ அதுபோலென்பது பொருள். பக்ஷண ஆதி சப்தத்தால் பானம் முதலியவற்றைக் கொள்க. கலஞ்சம் — விஷம் பூசிய பாணத் தால் கொல்லப்பட்ட மான்மாமிசம். (75)

### அவதாரிகை

திருஷ்டாந்தத்தை வெளிப்படையாக்குகின்றார்:—

### சுலோகம்

**औदासीन्ये बोधिते शास्त्रवृन्दै-**
**रर्थादस्मात्प्रच्युतस्यास्त्यनर्थः ।**
**इत्यालोच्य प्रच्युतेः प्रापकस्य**
**प्राबल्येऽर्थे प्रातिलोम्यं विधत्ते ॥ ७६ ॥**

### பதவுரை

**शास्त्रवृन्दैः** — லசுனம் முதலிய பக்ஷணத்தை நிஷேதிக்கின்ற சாஸ்திரக்கூட்டங்களால்

**औदासीन्ये** – லசுனம் முதலிய பக்ஷணத்தில் இஷ்ட சாதனத் தன்மையினபாவமென்ற ஔதாசீன்யம்

**बोधिते** – போதிக்கப்பட்ட போது

**अस्मात्** – இந்த ஔதாசீன்ய வடிவ அர்த்தத்தில் நின்றும்

**प्रच्युतस्य** – பிரஷ்டனுக்கு (அதாவது லசுனாதி பக்ஷணத்தில் பிரவர்த்தித்தவனுக்கு)

**अनर्थः अस्ति** – நரக வீழ்ச்சியுண்டாகின்றது

**इति अर्थात् आलोच्य** – என்று அர்த்தத்தால் விசாரித்து

**प्रच्युतेः** – ஔதாசீன்யத்தினின்றும் நழுவுதலை

**प्रापकस्य** – அடைவிக்கின்ற (உண்டு பண்ணுகின்ற) இராகாதிதோஷத்தின்

**प्राबल्येऽर्थे** – பிரபலத்தன்மை வடிவ அர்த்தத்தில்

**प्रातिलोम्यम्** – பிரதிகூலத்தை (அதனை நிவர்த்திக்கும் பொருட்டு விரோதாநுஷ்டானத்தை)

**विधत्ते** – செய்கின்ருன்.

## விசேஷவுரை

பூண்டைப் புசியற்க என்பது முதலிய நிஷேதவாக்கியத்தால் அதன் பக்ஷணத்தின்கண் பலமுடைய அநிஷ்டத்தோடு கூடாததான இஷ்ட சாதனத்தன்மை நிஷேதிக்கப்படுகிறது. இப்படிப்பட்ட இஷ்ட சாதனத்தன்மையே லிங் (வியங்கோள்) முதலிய விபக்தி (விகுதி)யால் பிரதிபாத்தியமாம் ஆதலின். (நகாரத்தால் அதுவே நிஷேதிக்கப் படுகின்றது) ஆண்டு லசுனம் முதலிய பக்ஷணத்தில் இஷ்ட சாதனத்தன்மை பிரத்தியக்ஷத்தால் அறியப்படுகின்றமையின். இஷ்ட சாதனத்தன்மை வடிவ விசேஷியாபாவத்தால் வருணிக்கப்பட்ட விசிஷ்டாபாவம் (பலமுடைய அநிஷ்டத்தோடு கூடாத இஷ்ட சாதனத் தன்மையினபாவம்) பொருந்துவதின்ருமாதலின் பலமுடைய அநிஷ்டத் தோடு கூடாத என்னும் விசேஷணுபாவத்தாலேயே விசிஷ்டாபாவம் சொல்லவேண்டும். இவ்வாறு நரகசாதனத்தன்மை அதன்கண் நிச்சயஞ் செய்யப்படுகிறது. இதுதான் அர்த்தத்தால் விசாரித்து. என்று கூறப்பட்டது.

இவ்வாறு லசுனபக்ஷணத்தில் அனர்த்த ஹேதுத் தன்மையின் நிச்சயமுடையவன் லசுன பக்ஷணத்தில் பிரவிருத்தியை யுண்டு பண்ணுகிற இராகாதிப் பிரபலமாகுங்கால் அதனைக்கெடுத்தற் பொருட்டு யத்தினஞ் செய்கின்றான். எவ்வாறு மீண்டும் அப்பக்ஷணத்தியில் உற்கடராகம் உண்டாகாதோ அவ்வாறு சுயம் முயல்கின்றான் என்பது பொருள். இவ்வாறாக எப்படி லசுனாதி பக்ஷணத்தில் பிரவிர்த்திப்பிக்கின்ற அதிக ஆசையின் நிவர்த்தியின் பொருட்டு சுருதியின்றி தானே பிரவிர்த்திக்கின்றானோ அப்படிப் பிரகிருதத்திலும் ஆம் என்று அறிந்து கொள்ளவேண்டும். (76)

லசுனம்=பூண்டு

*அவதாரிகை*

தார்ஷ்டாந்தத்தை வெளிப்படுத்துகின்றார் :—

*சுலோகம்*

**औदासीन्यं बोधयच्छास्त्रमेत-**
**न्नित्यं पथ्यं बोधयत्यस्य पुंसः ।**
**पथ्यादस्मात्प्रच्युतस्यास्त्यपथ्यं**
**बुद्ध्वाऽपथ्यप्रातिलोम्ये यतेत ॥ ७७ ॥**

*பதவுரை*

**एतत्-शास्त्रम्** - சுரோதவ்யாதி சாஸ்திரம்

**औदासीन्यं** – உதாசீனத் தன்மையை

**बोधयत्** – போதிக்கின்றதாய்

**अस्य पुंसः** – இந்த முமுக்ஷுவாகிய புருஷனுக்கு

**नित्यं पथ्यं** – ஆத்தியந்திக இஷ்டத்தை, (அதாவது ஔதாசீன்யம் ஞானவாயிலாக மோக்ஷத்திற்கு அத்தியந்தம் சாதனமாமென)

**बोधयति** – தெரிவிக்கின்றது

அனுன்ம விசாரம் முதலியவற்றின்கண் மோக்ஷ சாதனத் தன்மையினாவம் ஔதாசீன்யமாம். அதனைப் போதிக்கின்ற "ஆன்மா சிரவணஞ் செய்யத்தக்கது மனனஞ் செய்யத்தக்கது" என்பது முதலிய சாஸ்திரம் ஞான வாயிலாக ஆத்தியந்திக மோக்ஷ சாதனத்தை முமுக்ஷுவிற்கு உபதேசிக்கின்றது. அப்படியே "அன்னியமான அனுன்ம விஷயகமான வாக்கியங்களை விட்டு விடுங்கள்" எனச் சுருதி கூறுகின்றது. [ அதனுலென்னே யெனின் ஆண்டுக் கூறுகின்ருர். ]

**अस्मात् पथ्यात्** – இந்த ஔதாசீன்ய வடிவ பத்தியமாகிய இஷ்ட சாதனத்தினின்றும்

**प्रच्युतस्य** – நழுவிய புருஷனுக்கு

**अपथ्यम् अस्ति** – சம்சார வடிவ அனர்த்தமுண்டாகின்றது

**बुद्ध्वा** – என்றறிந்து

**अपथ्यप्रातिलोम्ये** – அனுன்மசிரவணுதி வடிவ அனர்த்தத்தின் நிவர்த்தியில்

**यतेत** – முயற்சிசெய்வன்.

அதாவது எவ்வாறு அபத்திய முண்டாகாதோ அவ்வாறு முற்கூறிய பிரகாரத்தால் ஆன்ம சிரவணுதியின்கண் முயல்வன் என்பது பொருள் பத்தியம்=நல்லது, சுகசாதனமென்று பொருள் அபத்தியம்=தீயது, துக்கசாதனமென்று பொருள். (77)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் கருமகாண்டம் ஞானகாண்டமென்னுமிரண்டற்கும் வெவ்வேறு அதிகாரிகளை யுத்தியாற் பிரதிபாதித்து இப்பொழுது பிரகிருத விஷயத்தை யுபஸம்மாரஞ் செய்கின்ருர்:—

## சுலோகம்

वृत्ता प्रवर्तकनिवर्तकशास्त्रसिद्धयै
षष्ठे प्रवृत्तिविनिवृत्त्यधिकारिचिन्ता ।

**अत्रैकमेव तु निवृत्त्यधिकारमार्ग-**
**माश्रित्य सूत्रकृदथात इति प्रवृत्तः ॥ ७८ ॥**

*பதவுரை*

**षष्ठे** – ( பூர்வமீமாம்சையின் ) ஆறுவது அத்தியாயத்தில்

**प्रवर्तकनिवर्तकशास्त्रसिद्ध्यै** – பிரவர்த்தகவடிவ விதி சாஸ்திரத்தினதும், நிவர்த்தக வடிவ நிஷேத சாஸ்திரத்தினதும் அர்த்தாநுஷ்டான சித்தியின் பொருட்டு

**प्रवृत्तिविनिवृत्त्यधिकारिचिन्ता** – பிரவிருத்தி நிவிருத்திகளில் அநுகூலமான அதிகாரியின் விசாரம்

**वृत्ता** – செய்யப்பட்டது

**अत्र तु** - இந்த உத்தர மீமாம்சையின் கண்ணே

**एकम् एव निवृत्त्यधिकारमार्ग** – சர்வ அநான்ம விஷயகப் பிரவிருத்தியின் நிவர்த்தி மாத்திர அதிகாரத்தினை.

**आश्रित्य** – அங்கீகரித்து

**सूत्रकृत्** – சூத்திரக்காரரான ஸ்ரீ வியாசபகவான்

**अथ अतः इति** – பிரம்ம ஜிக்ஞாசை சூத்திரத்தின் கண்ணுள்ள 'அத அத:' என்னும் சப்தங்களால் ( அதிகாரி விசேஷத்தை நிரூபித்தற்கு )

**प्रवृत्तः** – ஆரம்பித்தார்.

*விசேஷவுரை*

பூர்வ மீமாம்சையின் ஆறுவது அத்தியாயத்தில் சொர்க்க காம அதிகரணம் முதலியவற்றிலும் கலஞ்ச பக்ஷணத்தின் நிஷேத அதிகரணம் முதலியவற்றிலும் பிரவிர்த்தி நிவிருத்திகளின் அதிகாரி விசாரம் செய்யப்பட்டது. இந்தச் சாஸ்திரத்தின் கண்ணே கேவல நிவிர்த்தி

மாத்திர அதிகாரத்தினை யங்கீகரித்துப் பிரவிருத்தித்தனர். இவ்வாருகவே ஈண்டு அதிகாரியைச் சிந்தித்தலில் கூறியது கூறலென்னுங் குற்றமின்ரும் என்பது கருத்து. (78)

*அவதாரிகை*

இப்போது சிம்மாவலோகன நியாயத்தால் நழுவுதலையுண்டுபண்ணுகின்ற என்று 76வது சுலோகத்தால் கூறப்பட்ட அந்தப் பிராபகத்தினையே வெளிப்படுத்துகின்ருர் :—

*சுலோகம்*

**औदासीन्यप्रच्युतेः प्रापकौ च रागद्वेषौ नापरो हेतुरस्ति ।**
**रागद्वेषप्रातिलोम्ये प्रवृत्तिरौदासीन्यप्रापणाच्छास्त्रतोऽर्थात् ॥ ७९ ॥**

*பதவுரை*

**औदासीन्यप्रच्युतेः** – ஔதாசீன்யத்தினின்றும் நழுவுதலாகிய பிரவிருத்தியை

**प्रापकौ** – உண்டுபண்ணுகின்றவை

**रागद्वेषौ** – விருப்பு வெறுப்புகளாம்

**अपरः हेतुः** – வேறு யாதொரு காரணமும்

**न अस्ति** – இன்ரும்

**रागद्वेषप्रातिलोम्ये** – விருப்பு வெறுப்புகளைத் தடுத்தற்பொருட்டு

**प्रवृत्तिः** – முமுக்ஷுவிற்கு யாதொரு ஆன்ம சிரவணாதி வடிவப் பிரவிருத்தியுண்டோ அது

**औदासीन्यप्रापणात्** – உதாசீனத்தன்மையை யடைவிக்கின்ற (போதிக்கின்ற)

**शास्त्रतः** – சிரவணாதி சாஸ்திரத்தால்

**अर्थात्** – அர்த்தத்தால் சித்திக்கின்றது

அல்லது உத்தரார்த்தத்திற்கு இவ்வாறு பொருள் கொள்க

**रागद्वेषप्रातिलोम्ये** – விருப்பு வெறுப்புகளின் விரோதமான யாதொரு லசுன பக்ஷணாதியின்கண் அநிஷ்ட ஸாதனத்தன்மையினநுசந்தான முண்டோ அதன்கண்

**प्रवृत्तिः** – முயற்சி

**औदासीन्यप्रापणात्** – உதாசீனத்தன்மையைப் போதிக்கின்ற

**शास्त्रतः** – பூண்டை உண்ணற்க என்பதாதி சாஸ்திரத்தால்

**अर्थात्** – அர்த்தத்தால் சித்திக்கின்றது

## *விசேஷவுரை*

ஔதாசீன்யப் பிரச்சுதிக்குக் காரணம் இராகத்துவேஷங்களாம். இராகமாவது பக்ஷணம் ஹநநம் முதலிய பகுதிப்பொருளில் இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தால் பகுதிப்பொருளை விஷயமாகவுடைய இச்சையாம். அநிஷ்ட சாதனத்தன்மை ஞானத்தால் அதிலுண்டாகும் வெறுப்பு துவேஷமாம்.

லௌகிக போஜனாதியின் கண்ணும் வைதிகாக்கினிஹோத்திராதி யின் கண்ணும் பொதுவாக இராகமே பிரவர்த்தகமாம்.

மீமாம்ஸகர் வேதத்தின்கண் இராகம் பிரவர்த்தகமன்றும் மற்றோ லிங் முதலியவற்றின் பிரவர்த்தனை வடிவ வியாபாரத்தால் (சாப்தீ பாவனையால்) ஆர்த்தீபாவனை வடிவ புருஷப்பிரவிருத்தியுண்டாகின்றது எனக் கூறுகின்றனர் அது சரியன்று. லிங் முதலிய சத்தப்பிரமாணத் திற்கு இஷ்டசாதனத்தன்மை முதலிய தனது பிரமேயத்தைப் போதிக்கும் வியாபாரமின்றி வேறு வியாபாரமின்மையின் என்னும்பிப்பிராயத்தால் கூறுகின்றார்–வேறு யாதொரு காரணமுமின்றுமென.

இவ்வாறு பிரவர்த்தக நிவர்த்தகங்கள் இராகத்துவேஷங்களாமெனக் கூறி இப்போது லசுனபக்ஷணாதியின்கண் இராகி புருஷனுக்கு அதன் நிவர்த்தியின் பொருட்டு முன் 76-வது சுலோகத்தில் "என்று விசாரித்து நழுவுதலையடைவிக்கின்ற" என்பதாதியாற் கூறப்பட்ட பிரவிருத்திப் பிரகாரத்தை ஞாபகப்படுத்துகின்றார்–விருப்பு வெறுப்புக்களைத் தடுத்தற் பொருட்டு என.

பிராதிலோம்யம்–பிரதிகூலம்.

ஈண்டிது சங்கிரகமாம். லசுனபக்ஷணுதியின்கண் ஔதாசீன்யத் தன்மையைப் போதிக்கின்ற சாஸ்திரத்தின் பலத்தால் லசுனுதியின்கண் இராகாதிக்கு விரோதமான லசுனபக்ஷணம் அநிஷ்ட சாதனமாம் என்னு மநுசந்தானத்தின்கண் புருஷனுக்கு நிரந்தரம் அர்த்தத்தால் பிரவிர்த்தி யுண்டாகின்றது. அதுபோன்று அனுன்மசிரவணுதியின்கண் ஔதா சீன்யத்தைப் போதிக்கின்ற சிரவணுதி சாஸ்திரத்தால் அனுன்ம சிரவணுதியின் பிரதிகூலமான ஆன்ம சிரவணுதியில் அர்த்தத்தால் முமுக்ஷுவிற்கு நிரந்தரம் பிரவிருத்தியுண்டாம்.

பிரச்சுதி–நழுவுதல்.

சிம்மாவலோகன நியாயமென்பது சிங்கம் வழியில் நடக்கும்போது கொஞ்சதூரம் சென்று பிறகு பின்னுல் திரும்பிப்பார்க்கும் அதுபோல் என்பது பொருள். (79)

### அவதாரிகை

இவ்வாறு முமுக்ஷுவிற்கு நிவர்த்தி மாத்திரத்தில் அதிகாரமா மாதலின் சாரீரக சாஸ்திரத்தைப் பிரதிபாதித்தல் வியாசமகரிஷிக்கு சார்த்தகமா (பயனுடையதா)மெனக் கூறப்பட்டது. இவ்வாருயின் முமுக்ஷுவிற்கு சௌசாதியின் சித்தி எப்படியாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர் ;—

### சுலோகம்

**अशुचेः प्रतिषेधशास्त्रतो न भवत्येव हि वेदचिन्तनम् ।**
**श्रवणादिनिवृत्तिशास्त्रतः स्वयमर्थादथ शौचमापतेत् ॥ ८० ॥**

### பதவுரை

**प्रतिषेधशास्त्रतः**–நிஷேதிக்கின்ற சாஸ்திரத்தால்

**अशुचेः**–சுத்தியின்றிய புருஷனுக்கு

**वेदचिन्तनम्**– வேதத்தின் சிந்தனம்

**न भवत्येव**–உண்டாகிறதேயில்லை. (செய்யலாகாது)

**श्रवणादिनिवृत्ति-शास्त्रतः** — அஜுன்மசிரவணுதியின் நிவர்த்திபரமான சிரவணுதி சாஸ்திரத்தால்

**अर्थात् अथ**–அர்த்தாபத்தியிஞலேயே

**स्वयं हि**–தானே

**शौचमापतेत्**–சௌசாநுஷ்டானம் சித்திக்கும்.

*விசேஷவுரை*

பிரதிஷேத சாஸ்திரமாவது '**द्वावेव वर्जयेन्नित्यमनध्यायौ प्रयत्नतः । स्वाध्यायभूमिं चाशुद्धामात्मानं चाशुचिं द्विजः ॥**' (துவிஜன் அசுத்தமான சுவாத்தியாய பூமியும் அசுத்தமான தனது தேகமுமாகிய இரண்டு அநத்தியாயங்களை நித்தியம் முயற்சியால் விடுக. அதாவது அசுத்த பூமியில் அசுத்த தேகத்தோடு வேதத்தைப்படிக்கலாகாது) என்னும் ஸ்மிருதியாம், இந்த ஸ்மிருதியால் வேதாத்தியயனஞ் செய்பவனுக்கு அசுசித்தன்மையை நிஷேதித்திருத்தலால் அசுசிபுருஷனுக்கு வேத சிந்தனம் சம்பவிக்கின்றதே இல்லை. வேத சிந்தனமின்றி முற்கூறிய நியாயத்தால் வேதாந்த சிரவணுதி சித்தியாது வேதவாக்கியத்தை யநுசந்தானஞ் செய்யாத புருஷனுல் வேதாந்த வாக்கியத்தை விசாரித்தற்கு முடியாதாதலின் அஜுன்மசிரவணுதி நிவர்த்திபரமான சிரவணுதி சாஸ்திரத்தின் சாமர்த்தியத்தாலேயே சௌசாதி விதியின்றியும் மூமுக்ஷுவிற்கு சௌசாதி சித்திக்கின்றது. (80)

*அவதாரிகை*

இவ்வாறு சௌசாதிகள் சித்திக்கினும் "சன்னியாசிகளுக்கு பாதப்பிரக்ஷாலநம் முதலிய சௌசம் கிருகஸ்தரைக்காட்டிலும் நான்கு பங்கு அதிகமாம்" "நான்கு வருணங்களிலும் பிக்ஷான்னத்தைக்கிரகிக்குக" என்பது முதலிய சாஸ்திரத்தால் சித்தித்த சௌசாதிகளினநுஷ்டானத்தின்கண் நான்கு பங்கு அதிகம் முதலிய நியமம் எப்படி சித்திக்குமென்னுமிடத்துக் கூறுகின்றுர்.

*சுலோகம்*

**अचतुर्गुणशौचवारणात् स्वयमेवास्य चतुर्गुणं भवेत् ।**
**अचतुर्ष्वशनस्य वारणात् स्वयमेवास्य चतुर्षु भोजनम् ॥ ८१ ॥**

### பதவுரை

**अचतुर्गुणशौच वारणात्** – "யதிகளுக்கு நான்கு மடங்கு சௌசம்" என்னும் சாஸ்திரம் அசதுர்குண சௌசத்தை நிஷேதித்தலால்

**स्वयमेव** – தானேயே

**अस्य** – சன்னியாசிக்கு

**चतुर्गुणम्** – நான்கு பங்கு சௌசம்

**भवेत्** – சித்திக்கும்

**अचतुर्षु** – நான்கு வருணங்களில் பிக்ஷை வாங்குக என்னும் சாஸ்திரமானது நான்கு வருணங்களல்லாத சண்டாளாதி சாதிகளில்

**अशनस्य** – பிக்ஷான்னத்தை

**वारणात्** – நிஷேதித்தலால்

**अस्य** – சன்னியாசிக்கு

**स्वयमेव** – தானேயே

**चतुर्षु** – பிராம்மணாதி நான்கு வருணங்களில்

**भोजनम्** – பிக்ஷான்னம் சித்திக்கும்

### விசேஷவுரை

யதிகளுக்கு நான்கு மடங்கு சௌசம் என்பது முதலிய சாஸ்திரத்தாலும் சருவகருமங்களின் நிவிருத்தியை விதிக்கின்ற சன்னியாச சாஸ்திரத்தை யநுசரித்து அசாதுர்க்குண்யாதியை (சதுர்க்குணமல்லாதவற்றை) நிவர்த்தித்தலால் அர்த்தத்தால் சௌசத்திற்கு சாதுர்க்குண்யமும் அசனத்திற்கு சாதுர்வர்ண்யமும் சித்திக்கின்றது ஆதலின் சௌசாதிப் பிரவிருத்தியின்கண் சன்னியாசிக்கு யாதொரு அநுபபத்தியும் (யுத்திக்கு விரோதமும்) இன்றும். என்பது கருத்து

அசதுர்க்குண சௌசம்=நான்கு பங்கு சௌசத்தினும் குறைந்ததும் மிக்கதுமான சௌசம். அசனம்=அன்னம், (81)

## அவதாரிகை

இந்தப் பிரகாரம் சர்வ கர்மங்களின் சந்நியாசத்தை விதிக்கின்ற சாஸ்திரத்தின் வலியால் முமுக்ஷுவிற்கு ஆன்ம சிரவணாதி சாஸ்திரமும் ஆன்ம சிரவணாதியினும் அன்னியமான அநான்ம சிரவணாதிகளை நிவர்த்திப்பதிலேயே தாத்பர்யமுடையது. முமுக்ஷுவிற்குப் பிர விருத்தியை விதிக்கின்ற சாஸ்திரம் கிஞ்சித்துமின்றும். என்று யுக்தியாற் பிரதிபாதிக்கப்பட்டதனை யுபசம்மாரஞ் செய்கின்றூர் :—

## சுலோகம்

इति योजय सर्वमीदृशं कथितन्यायवशेन सादरम् ।
विधिहीननिवृत्तिशास्त्रतः कथितेऽस्मिन्नधिकारवर्त्मनि ॥ ८२ ॥

## பதவுரை

**इति** – இந்தப்பிரகாரம்

**ईदृशं** – பிரவிர்த்தியைப் போதிப்பதாகத் தோற்றுகின்ற திரிகால ஸ்நாநாதிவாக்கியம்

**सर्वम्** – அனைத்தும்

**विधिहीननिवृत्तिशास्त्रतः** – விதியின்றிய நிவர்த்தி சாஸ்திரத்தின் பலத்தால்

**कथितन्यायवशेन** – கூறப்பட்ட இதர நிவர்த்தி வடிவ பரிசங்கியா நியாயத்தால்

**कथिते** – நிவர்த்தி ரூபமாகச் சொல்லப்பட்ட

**अस्मिन् अधिकारवर्त्मनि** – இந்த அதிகார மார்க்கத்தின்கண்

**सादरं योजय** – ஆதரவோடு பொருத்தவேண்டும்.

## விசேஷவுரை

இந்தப் பிரகாரம் தூலதிருஷ்டியினுல் மூன்று காலஸ்நாநாதியில் பிரவிருத்தியை விதிப்பதாகத் தோற்றுகின்ற சாஸ்திரமும் நிவர்த்தி பரமாகப் பொருத்தத்தக்கது. இந்தப் பக்ஷமானது மஹான்களால் ஆதரிக்கப்பட்டமையினுலும் இதன்கண் உன்னுல் ஆதரத்தின்

சிதிலத்தன்மை (குறைவைச்) செய்யாந்தக்கதன்று என்னும் அபிப்பிராயத்தால் ஆதரவோடு எனக்கூறப்பட்டது. (82)

## அவதாரிகை

கூறிய பரிசங்கியாவிதியையனுவாதஞ்செய்து அதன் விரோதமான வேறு பக்ஷத்தினை ஆரம்பிக்கின்றார்:—

## சுலோகம்

**इति केचन वर्णयन्ति तद्विपरीतं प्रवदन्ति केचन ।**
**प्रविभज्य तदप्युदीर्यते निपुणाचार्यपरम्परागतम् ॥ ८३ ॥**

## பதவுரை

**इति** – இந்தப்பிரகாரம்

**केचन** – சில ஆசிரியர்

**वर्णयन्ति** – ஞானாதிகாரிக்கு கேவல நிவர்த்தி மார்க்கத்தையே வர்ணிக்கின்றார்கள்.

**केचन** – சில நூலாசிரியர்

**तद्विपरीतम्** – அதன் விருத்தமான பிரவிருத்தி மார்க்கத்தையும்

**प्रवदन्ति** – பிரதிபாதனஞ் செய்கின்றனர்

அற்றேல், சர்வகர்மங்களினின்றும் நிவர்த்தியை விதிக்கின்ற சாஸ்திரம் உளதாய வழி நிவர்த்தி மார்க்கத்தினும் விபரீதமான பிரவர்த்தி பக்ஷத்தின் உத்தானம் எங்ஙனங்கூடும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

**निपुणाचार्यपरंपरागतं** – குசல ஆசார்யர்களின் பரம்பரையால் வந்துள்ள

**तत् अपि** – அந்த பிரவிருத்தி மார்க்கத்தினையும்

**प्रविभज्य** – வேறுபடுத்தி

**उदीर्यते** – (என்றால்) சொல்லப்படுகிறது.

அற்றேல் சுருதி விருத்தமாதலால் பிரவிருத்தி பக்ஷத்தை உபேக்ஷித்தலே நியாயமாகும். என்னும் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு நிபுண ஆசார்யர் எனப்பட்டது. பிரவிர்த்தி பக்ஷம் நிபுண ஆசார்ய பரம்பரையில் வந்தமையின் உபேக்ஷைக்கு யோக்கியமன்று என்பது பொருள். நிபுண என்னும் சப்தத்தால் பூர்வபக்ஷத்தினும் இந்தப் பக்ஷத்தில் சிறப்பு காண்பிக்கப்பட்டது. அது பின்னர் வெளியாகும்.

உத்தானம்—எழுச்சி. (83)

### *அவதாரிகை*

இவ்வாறுயின் (பிரவிர்த்தி பக்ஷத்தையங்கீகரிக்கின்) சகல கர்மங்களின் தியாகத்தைப்போதிக்கும் சுருதிக்குக் கதியாது ? என்றுசங்கித்துச் சகல கர்மத்தியாக சுருதியினுல் சாமான்ய ரூபத்தால் சர்வ கர்மத்தின் நிவர்த்தி சித்தித்ததாயினும் ஞானுதிகாரிக்கு விசேஷித்துச் சிரவணுதி வடிவப்பிரவிர்த்தியும் பிரதிப்பிரசவ வடிவ சிரவணுதி சாஸ்திரத்தினுல் சித்திக்கின்றது. ஆதலின் ஞானுதிகாரிக்கு பிரவிர்த்தி நிவர்த்தியென்னும் இரண்டன் அனுஷ்டானமுங்கூடும் என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்ருர் :—

### *சுலோகம்*

**उत्सर्गतः सकलकर्मनिवृत्तिनिष्ठा**
**संन्यासशास्त्रशतकोटिभिरर्पिताऽस्य ।**
**अस्ति प्रतिप्रसवशास्त्रमुखात्प्रतीता**
**चेष्टाऽऽत्मबुद्धिपरिपाकफलाऽपि काचित् ॥ ८४ ॥**

### *பதவுரை*

**संन्यासशास्त्रशतकोटिभिः** – சன்னியாசத்தை விதிக்கின்ற நூறு கோடி சாஸ்திர வசனங்களால்

**अस्य** – இந்த முமுக்ஷுவிற்கு

**उत्सर्गतः** – சாமானிய வடிவத்தால்

**सकलकर्मनिवृत्तिनिष्ठा** – சருவ கருமங்களின் நிவிருத்தியின் கண்ணேயே அதிகாரம்

**अर्पिता** – பிரதிபாதிக்கப்படுகின்றது அங்கமாயினும்

**प्रतिपसवशास्त्रमुखात्** – பிரதிப் பிரசவ வடிவ சுரோதவ்யாதி சாஸ்திரவாயிலால்

**प्रतीता** – அறியப்பட்டதும்

**आत्मबुद्धिपरिपाकफला** – ஆன்ம ஞானத்தின் பரிபாகமாகிய பயனை யுடையதுமான

**काचित् चेष्टाऽपि** – சிரவணாதி வடிவ ஓர் பிரவிருத்தியும்

**अस्ति** – அவசியமிருக்கின்றது.

சன்னியாசத்தை விதிக்கும் சாஸ்திரத்தையநுசரித்து சாமானிய ரூபத்தால் சகல கருமத்தையுஞ் தியாகஞ்செய்த முமுக்ஷுவாகிய சன்னியாசிக்கு விசேஷ ரூபத்தால் சிரவணாதியை விதிக்கின்ற சாஸ்திரத்தின் பலத்தால் சிரவணாதிப் பிரவிர்த்தியும் சௌசாதிப் பிரவிர்த்தியும் அவசியம் செய்யத்தக்கதாம் எதனாலெனின் நேராகவாவது பரம்பரையாகவாவது ஆன்ம சாக்ஷாத்காரத்தின் நிச்சயத்தன்மைக்குக் காரணமாதலின். (84)

## அவதாரிகை

அற்றேல் சன்னியாச சாஸ்திரத்தை யநுசரித்து சிரவணாதி சாஸ்திரத்திற்கும் முற்கூறிய நிவிருத்திமாத்திர பரத்தன்மையை யங்கீகரித்தலால் ஞானாதிகாரியாகிய சன்னியாசிக்கு நிவிருத்தி மாத்திர நிஷ்டை சம்பவிக்கும்போது பிரவிருத்தி நிவிருத்தியாகிய இரண்டன்கண் நிஷ்டையை எதற்காக அங்கீகரிக்கவேண்டும் என்னுஞ் சங்கைக்கு சிரவணாதி சாஸ்திரத்திற்கு இதர நிவிருத்திமாத்திர பரத்தன்மையை யங்கீகரிக்கின் தனது ஆன்ம சிரவணாதி வடிவ பொருளின் தியாகமும் அன்னியத்தின் அனான்ம சிரவணாதியின் தியாக வடிவ பொருளைக் கற்பித்தலும் ஆன்ம சிரவணாதிப் பிரவிர்த்திவடிவ பிராப்தத்தின் பாதமுமாகிய முத்தோஷங்களினடைவுண்டாம் ஆதலின் நியம விதிபக்ஷமே அங்கீகரிக்கத்தக்கது ஆதலால் ஞானாதிகாரிக்கும் பிரவிருத்தி நிவிருத்தி என்னும் உபயநிஷ்டத்தன்மை பொருத்தமாம். உபயநிஷ்டத்தன்மையை யங்கீகரியாவிடின் யமம் நியமம் முதலிய விபாகப்பிரசித்தியும் பொருந்தாமற்போம். என்று கூறுகின்றார் :—

### சுலோகம்

**यमस्वरूपा सकला निवृत्तिस्तथा प्रवृत्तिर्नियमस्वरूपा ।**
**निवर्तकादत्र यमप्रसिद्धिः प्रवर्तकात्स्यान्नियमप्रसिद्धिः ॥ ८५ ॥**

### பதவுரை

**यमस्वरूपा** – அஹிம்ஸை சத்தியம் முதலிய யமவடிவம்

**सकला** – அனைத்தும்

**निवृत्तिः** – ஹிம்ஸை பொய் முதலியவற்றின் நிவர்த்திவடிவமாம்

**तथा** – அப்படியே

**नियमस्वरूपा** – சௌசம் சந்தோஷம் முதலிய நியம சொரூபம் அனைத்தும்

**प्रवृत्तिः** – பிரவிருத்திவடிவமாம்

யம நியமங்களுக்கு சுருக்கி சொரூபத்தினைக் கூறுகின்றார்

**अत्र** – இவ்விரண்டினுள்

**निवर्तकात्** – பிராணிகளுக்கு ஹிம்ஸை செய்யற்க, பொய் புகலற்க, திருடற்க, பரஸ்திரீயைச்சேரற்க, ஒருவரிடத்தினும் ஒன்றும் வாங்கற்க, என இம்ஸை முதலிய வற்றை நிஷேதிக்கும் சாஸ்திரத்தால்

**यमप्रसिद्धिः** – அஹிம்ஸை முதலிய யமத்தின் சொரூபம் பிரசித்தமாம்

**प्रवर्तकात्**-ஸ்நானஞ்செய்க, கிடைத்ததில் திருப்தியாயிரு, தபஸைச் செய்க, நித்தியம் அத்யயனஞ் செய்க, ஈசுவரனை வணங்குக என சௌசம் முதலியவற்றை விதிக்கின்ற சாஸ்திரத்தால்

**नियमप्रसिद्धिः स्यात्**–சௌசம் முதலிய நியமத்தின் வடிவம் பிரசித்தமாம்

### விசேஷவுரை

சர்வப் பிரகாரத்தாலும் பிராணிகளுக்குப் பீடை பொய்புகலுதல் முதலியவற்றின் நிவர்த்திக்கு யோகசாஸ்திரத்தில் 'யம'மென்று பெயர் வைக்கப்பட்டுள்ளது. அப்படியே சௌசாதிரூபப் பிரவிருத்திக்கு

நியமமென்று பெயர் வைக்கப்பட்டுள்ளது. அவ்விரண்டனுள் ஹிம்ஸை முதலியவற்றின் நிவர்த்தக சாஸ்திரத்தால் பிரதிபாத்தியம் யமமாம். சௌசாதி பிரவர்த்தக சாஸ்திரப் பிரதிபாத்தியம் நியமமாம் என்பது பொருள். (85)

## அவதாரிகை

அதிகாரியை நிரூபிக்கும் அவசரத்தில் முக்தி யோக்கியமான அவ்வதிகாரியின் சொரூபம் யாதொன்று முன்பு அஹங்காராதியின் அத்தியஸ்தத்தன்மையை நிரூபித்தலால் அர்த்தத்தால் சித்தித்துளதோ "ஈதனைத்தும் பிரம்மமே" என்பது முதலிய சாஸ்திரசம்மதமோ அதனை நேரே தெரிசிப்பித்தற்கு ஆரம்பிக்கின்றார். அல்லது சகல நிவர்த்தியும் யமத்தின் வடிவமாம் என்று கூறியது எங்ஙனம் பொருந்தும். பிரம்ம சொருபத்திற்கு அசங்கத்தன்மையினல் பிறவற்றோடு அசம்பத்தத் தன்மையானும் "பிரபஞ்சத்தின் உபசமம் சிவம்" என்பது முதலிய சுருதியினுலும் பிரபஞ்சத்தின் நிவர்த்தி வடிவமாக அறியப்பட்ட பிரம்மத்திற்கு நிவர்த்திவடிவத் தன்மை உண்மையின். சித்தப்பிரம்மவடிவ நிவர்த்தி சாத்தியவடிவ சாதனாத்மக யமவடிவம் ஆவதின்றும். என்றுசங்கித்து நிவர்த்தியை விதிக்கின்ற சாஸ்திரத்தினுலே யாதொரு நிவர்த்தி சித்தித்துளதோ, அதுவே யம வடிவமாம் சர்வத்தின் நிவர்த்தி யம வடிவமன்றும் என்று கூறுதற்கு நிவர்த்தியைப் பிரிக்கின்றார் :—

## சுலோகம்

**निवृत्तिरस्ति द्विविधा बहिःस्थिता शरीरसर्वेन्द्रियसंयमात्मिका ।**
**तथाऽपराऽऽभ्यन्तरवस्तुसंश्रया सदात्मकूटस्थचिदेकविग्रहा ॥ ८६ ॥**

## பதவுரை

**निवृत्तिः द्विविधा अस्ति**–நிவர்த்தியானது இரண்டுவிதமாக இருக்கின்றது

நிவர்த்தியின் இருவிதத் தன்மையினையே கூறுகின்றார்.

**बहिः स्थिता**–ஒன்று ஆன்மாவினும் பாஹ்ய தேகாதியை ஆச்ரயித்துளது.

அதிலேதுவைக் கூறுகின்றார்.

**शरीरसर्वेन्द्रिय-संयमात्मिका-** } தேகத்தினதும் சகல இந்திரியங்களினதும் நிக்ரஹவடிவமாம் ஆதலின்

**तथा अपरा**–அப்படியே மற்றோர் நிவர்த்தி

**आभ्यन्तरवस्तुसंश्रया**– சர்வாந்தர ஆன்மவஸ்து வடிவமாயுளது

அதன் சித்தியின் பொருட்டுக் கூறுகின்றார்

**सदात्मकूटस्थचिदेकविग्रहा**–சத்வடிவ சாக்ஷி நிர்விகார சின்மாத்திரவடிவமாம். (86)

## *அவதாரிகை*

இவ்வாறாக, பிரகிருதத்தில் சித்தித்ததென்னை என்று சங்கை யுண்டாக இனி சொல்லப்போவதான இஷ்டசித்தியின் பொருட்டு இரண்டு பிரகாரமான நிவர்த்திகளின் அவாந்தர விசேஷத்தைக் கூறுகின்றார்:—

## *சுலோகம்*

**तयोस्तु बाह्या विधिशास्त्रलभ्या प्रयत्ननिर्वर्त्यतया प्रतीतेः ।**
**विधानशास्त्रं विरहय्य लभ्या चितिस्वरूपा त्वितरा निवृत्तिः ॥**

## *பதவுரை*

**तयोः** -அவ்விருவிதமான நிவர்த்திகளில்

**बाह्या तु**–பாஹ்ய நிவர்த்தியோ

**विधिशास्त्रलभ्या**–ஹிம்சை முதலியவற்றை நிஷேதிக்கின்ற விதி சாஸ்திரத்தால் சித்திக்கின்றது (எதனாலெனின்)

**प्रयत्ननिर्वर्त्यतया**–ஹிம்சை முதலியவற்றின் நிவர்த்தியின் கண் பிரயத்தனத்தால் சாத்தியத்தன்மை

**प्रतीतेः** –தோற்றுகின்றமையின்

சேதனரூப நிவர்த்தியோ விதி சாஸ்திரலப்யமன்றெனக் கூறுகின்றார்.

**इतरा तु निवृत्तिः** – இரண்டாவதான ஆப்பியந்தர நிவர்த்தியோ

**विधानशास्त्रं विरहय्य**–விதிக்கின்ற சாஸ்திரமின்றியே

**लभ्या**-அடையத்தக்கது
**चितिस्वरूपा**-ஸ்வதஸ்ஸித்த சேதனவடிவமாதலின்

### விசேஷவுரை

"இம்சை செய்யற்க" என்பது முதலிய நிஷேத சுருதியினுல் அஹிம்சையைச் செய்க என்று அர்த்தம் பிரதீதியாதலின் அஹிம்சை முதலிய நிர்த்தி 'விதிசாஸ்திர லப்யம்' எனப்பட்டது இதுவும் பர சித்தாந்தத்தை அனுசரித்துக் கூறப்பட்டது. தன்னுடைய மதத்தில் ஹிம்சை முதலியவற்றின்கண் சிரேயஸ் சாதனத்தன்மையின் அபாவமே நிஷேதவிதிக்குப் பொருளாமாதலின்.

ஆப்யந்தர நிவர்த்தி யத்ன சாத்தியமன்று என்பதன்கண் சேதன வடிவம் என்பது ஏதுகர்ப்பவிசேஷணமாம் சேதன ஸ்வரூபமாவதால் யத்ன சாத்தியமன்று என்பதாம். இப்பொருள் பதவுரையில் விவரிக்கப் பட்டது. லப்யம் = அடையத்தக்கது. (47)

### அவதாரிகை

பாஹ்ய நிவர்த்தியானது சாத்தியமாம் ஆந்தரநிவர்த்தியானது சாத்தியமன்ரும் என்பதன்கண் மற்றோர் ஏதுவைக் கூறுகின்றுர் :—

### சுலோகம்

**मायामयी बाह्यनिवृत्तिरिष्टा चितिस्वरूपा परमार्थसत्या ।**
**तयोर्निवृत्त्योश्च निवृत्तिशास्त्रं विधायकं बाह्यनिवृत्त्यपेक्षम् ॥**

### பதவுரை

**बाह्यनिवृत्तिः** – தேகேந்திரியாதிகளினிரோதவடிவபாஹ்ய நிவிருத்தி யானது

**मायामयी** – அநிர்வசனீயமாக

**इष्टा**–அங்கீகரிக்கப்பட்டுளது.

இதனுலேயே அதற்குச் சாந்தியத்தன்மை சம்பவிக்கின்றதென்பது பொருள்.

**चितिस्वरूपा**-சேதனவடிவ நிவிருத்தியோ

**परमार्थसत्या**–பாரமார்த்திக சத்தியமாம்,

அதற்கு முன்பு அசத்துவமின்மையின் சாத்தியத்தன்மையின்றென்பது பொருள்.

அதனுற்றுனென்னையெனின் ஆண்டுக்கூறுகின்றார்.

**निवृत्तिशास्त्रम्** –நிவிருத்தியைப் போதிக்கும் சாஸ்திரமானது

**तयोः निवृत्त्योः च**–அவ்விருவிதமான நிவிருத்திகளுக்குள்

**बाह्यनिवृत्त्यपेक्षम्** – பாஹ்யநிவிருத்தியையபேக்ஷித்து

**विधायकम्** – விதானத்தைச் செய்கின்றது.

## *விசேஷவுரை*

பாஹ்யமும் ஆந்தரமுமான இரண்டு நிவிருத்திகளில் பாஹ்ய நிவிருத்திக்கே கிருதி சாத்தியத்தன்மை சம்பவித்தலால் இம்சை முதலியவற்றை நிஷேதிக்கும் சாஸ்திரம் இம்சை முதலியவற்றினின்றும் உதாசீனத் தன்மைக்கநுகூலமான ஆந்தரக்கிரியை வடிவ அதனை (நிவிருத்தியினை)யே விதிக்கின்றது. இவ்வாறு விதேயான்மக யமமும் பாஹ்ய நிவிருத்திவடிவமேயாம் என்பது கருத்து. (88)

## *அவதாரிகை*

அற்றேல் நிஷேத சாஸ்திரமும் நிவிருத்திக்கிரியையை விதிக்குமாயின் சருவமும் விதிசாஸ்திரமேயாகும். ஆகவே விதிநிஷேத சாஸ்திரங்களுக்கு பேதம் சித்திக்காது என்னும் சங்கைக்குக் கூறுகின்றார். :—

## *சுலோகம்*

**प्रवृत्तिशास्त्रेण समेऽपि सम्मते निवृत्तिशास्त्रस्य विधेयबोधने ।**
**निवृत्त्यनुष्ठाननिबन्धनत्वतो निवर्तकं शास्त्रमिदं प्रचक्षते ॥**

## *பதவுரை*

**निवृत्तिशास्त्रस्य**–யமம் முதலியவற்றை விதிக்கின்ற நிவர்த்தி சாஸ்திரத்திற்கு

**विधेयबोधने**–கர்த்தவ்யத்தைப் போதிக்கும் விஷயத்தில்

**प्रवृत्तिशास्त्रेण**–யஞ்ஞாதியநுஷ்டானத்தைப் போதிக்கின்ற பிரவிருத்தி சாஸ்திரத்தோடு

**समे सम्मतेऽपि**–சமத்துவம் சம்மதமாயினும்

**निवृत्त्यनुष्ठान निबन्धनत्वतः**– } நிவிருத்தியின் அநுஷ்டானத்திற்குக் காரணமாந்தன்மையினுல்

**इदं शास्त्रम्** –அஹிம்ஸை முதலியவற்றைப் பிரதிபாதிக்கும் யம சாஸ்திரத்தினை

**निवर्तकम्** –நிவர்த்தகசாஸ்திரமென்று

**प्रचक्षते**–கூறுகின்றுர்கள்

## விசேஷவுரை

பிரவிருத்தி நிவிருத்தி வடிவ விதேயத்தின் வேற்றுமை இருத்தலின் அதனைப்போதிக்கின்ற விதி சாஸ்திர நிஷேத சாஸ்திரங்களுக்கும் வேற்றுமை சித்திக்கின்றது என்னுமபிப்பிராயத்தால் நிவர்த்தியின் அனுஷ்டானத்திற்குக்காரணமாந்தன்மையினுல் என்று கூறப்பட்டது. ஈண்டு இது கூறப்பட்டதாகின்றது ஞானுதிகாரியாகிய முமுக்ஷு நிவிருத்திமாத்திரத்தில் நிஷ்டையுடையவனன்று. அவ்வாருயின் சிரவணுதி சாஸ்திரத்தின்கண் முத்தோஷத்தோடு கூடிய பரிசங்கியாவிதியின் பிராப்தியாம் ஆதலின், மற்ருே சிரவணுதி வடிவப்பிரவிருத்தியின்கண்ணும் நிஷ்டையுடையவனுகின்ருன். சிரவணுதியின்கண் ஆன்மஞானத்தின் சாதனத்தன்மை அன்வயவியதிரேகத்தால் சித்தித்ததாயினும் உமியைப்போக்குவதில் சாதனத்தன்மையாற்சித்தித்த குத்துதலின்கண் நியமவிதியையுடன்படுவதுபோன்று ஈண்டும் நியமவிதிசம்பவித்தலின் நியமாபூருவத்திற்கு ஞானப்பிரதிபந்தக நிவர்த்தியினுல் பயனுடையதாந்தன்மைப் பொருந்துதலின் என்க. (89)

## அவதாரிகை

அற்றேல் ஞானுதிகாரிக்கு ஆன்மசிரவணுதிப் பிரவிருத்தி, இம்சை முதலியவற்றின் நிவிர்த்தியாகிய இரண்டன் கண்ணும் அதிகாரமிருக்குமாயின் பூருவமீமாம்ஸையின் ஆருவதத்தியாயத்திற் கூறப்பட்ட அதிகாரியினும் இந்த ஞானுதிகாரிக்கு வேற்றுமையின்ருும் ஆதலின் வியாசபகவானுக்கு சாரீரக மீமாம்ஸையின்கண் ஞானுதிகாரியை வேருகப்பிரதிபாதித்தலாற்பயனென்னையென்னுஞ்சங்கைக்கு ஞானுதிகாரிக்கு கருமாதிகாரியினும் மகத்தான வேற்றுமையுளதெனக் கூறுகின்ருர்:–

*சுலோகம்*

**शास्त्रद्वयेन परिदर्शितसाधनेन
साध्यस्पृहापरवशः पुरुषो मुमुक्षुः ।
शुश्रूषते गुरुमथेत्युदितः स चात्र
वेदान्तवाक्यविषयश्रवणाधिकारी ॥ ९० ॥**

*பதவுரை*

**शास्त्रद्वयेन**–பூர்வமீமாம்சை உத்தர மீமாம்சை யென்னும் இரண்டு சாஸ்திரங்களினுல்

**परिदर्शितसाधनेन**-போதிக்கப்பட்ட யஞ்ஞாதியும் வைராக்கியாதியுமாகிய சாதனத்தினுல்

**मुमुक्षुः पुरुषः**–மோக்ஷ இச்சையுடைய புருடன்

**साध्यस्पृहापरवशः**–ஆன்ம சாக்ஷாத்காரத்தின் இச்சையினுல் பராதீனனுகி

**गुरुं शुश्रूषते**–சுரோத்திரிய பிரம்மநிஷ்டகுருவைச் சரணடைந்து எவன் சேவை செய்கின்றனனே

**वेदान्तवाक्यविषय श्रवणाधिकारी**-வேதாந்த வாக்கியத்தின் விஷயமாகிய ஜீவப்பிரம்ம ஐக்கியத்தினை கேட்டலின்கண் அதிகாரியாகிய

**स च**–அவனே

**अत्र**–ஜிக்ஞாஸா சூத்திரத்தின் கண்ணுள்ள

**अथ इति**–'அத' என்னும் சப்தத்தால்

**उदितः**–கூறப்பட்டுள்ளான்

*விசேஷவுரை*

பூருவ மீமாம்ஸையின் கண் பிரதிபாதிக்கப்பட்டதும் விவிதிஷையின் பொருட்டு அநுஷ்டிக்கப்பட்டதுமான யஞ்ஞம் முதலியவற்ருலும் அஹிம்ஸை முதலியவற்ருலும் எவனுக்கு அந்தக்கரணம் சுத்தமாயிற்ருே வேதாந்த சாஸ்திரத்திற்கூறிய விவேகம் வைராக்யம் சமம், தமம் முதலிய சாதனவடிவ ஏதுவால் எவனுக்கு மோக்ஷ இச்சையுண்டாயிற்ருே சாத்தியு

மாகிய தத்துவ சாக்ஷாத்காரத்தின் இச்சையினுல் பரவசனுகி=சிரவணுதி விஷயக பிரவிருத்திபரியந்தமான ஞானேச்சையால் பிரேரிக்கப்படுகின்றவனுகி, எவன் குருவிற்கு சேவை செய்கின்றனனே வேதாந்த வாக்கிய விஷயக சிரவணத்தின் அதிகாரியான அவனே ஜிஞ்ஞாசைசூத்திரத்தின்கண் அதசத்தத்தாற் கூறப்பட்டுளான் என்பது பொருள். இவ்வாறு சாதன சதுஷ்டய சம்பன்னனும் பிரம்மஜிஞ்ஞாசுவும் குருவை சேவை செய்கின்றவனும் வேதாந்தசிரவணத்திலதிகாரியுமாகிய புருஷனுக்கு விவேகமின்றியவனும் விரத்தியின்றியவனும் சமதமாதியின்றியவனும் முமுக்ஷுத்துவமின்றியவனும் குருகுலவாசத்தினின்றும் நிவிருத்தியடைந்தவனுமாகிய கருமாதிகாரியினும் வேற்றுமை அத்தியந்தம் ஸ்பஷ்டமேயாம் அத்தன்மைய வேற்றுமை பூருவமீமாம்ஸையில் கருமாதிகாரியை நிரூபிக்கும் யுக்திகளால் சாதிக்க முடியாதாமாகலின் ஞானுதிகாரியை நிரூபிக்கின்ற பிரம்மமீமாம்ஸையின் யுக்திகளாலேயே சாதிக்கத்தக்கதாக இருக்கின்றது ஆதலின் ஈண்டு ஞானுதிகாரியைப்பிரதிபாதித்தல் வியர்த்தமன்றும் என்பது கருத்து. (90)

## சிஷ்யன் வினவையும் குருவினுபதேசத்தையும் நிரூபித்தல்.

### அவதாரிகை

இவ்வாறு "நான்கு சாதனமுள்ளவனுகிக் குருவைச் சரணம் அடைந்தான்" என்பது முதலியவற்றுல் ஆரம்பித்த அதிகாரியின் நிரூபணத்தைச்சமாப்தி செய்து இப்போது அவன் குருவையடைந்து என்ன செய்தான் என்று ஜிஞ்ஞாசையுண்டாகக் கூறுகின்றுர். :—

### சுலோகம்

स परिपृच्छति कोऽहमसौ च कः
सहजमस्य च तस्य च किं पृथक् ।
उत तयोरभिदेश्वरजीवयो-
रिति च संशयसंकुलमानसः ॥ ९१ ॥

### பதவுரை

**सः**–முற்கூறிய அதிகாரியானவன்

**संशयसंकुलमानसः**–சந்தேகத்தால் வியாபிக்கப்பட்ட மனதை யுடைத்தானவனாகி (குருவையடைந்து)

**अहम् कः**–நான் யார்

**असौ च कः**–ஈஸ்வரன் யார்

**अस्य च**–ஜீவனுக்கும்

**तस्य च**–ஈஸ்வரனுக்கும்

**पृथक्** –பேதமானது

**सहजं किं** –ஸ்வாபாவிகமா ?

**उत**–அல்லது

**तयोः ईश्वरजीवयोः**–அந்த ஈசுவரஜீவர்களுக்கு

**अभिदा**–அபேதமானது சுவாபாவிகமா ?

**इति च**-என்று இந்தப்பிரகாரம்

**परिपृच्छति**–வினவுகின்றான்.

### விசேஷவுரை

சம்சயப் பிரகாரத்தைத் தெரிசிப்பிக்கின்றவராய் அர்த்தத்தால் வினவின் பிரகாரத்தை நான் யார்? என்பதாதியால் கூறுகின்றார். நான் என்னும் அனுபவத்தில் விளங்குகின்ற ஆன்மா என்னுடைய சொரூபமாம். நான் என்னும் அனுபவமும் தேஹேந்திரியாதி சங்காதத்தின் கண் உண்டாகின்றது அச் சங்காதத்தினுள் அஹமனுபவ மானது எதை விஷயஞ் செய்கின்றது என்பது அறியப்படவில்லை. ஆதலின் "நான் யார்" என்று துவம்பதார்த்த விஷயகப் பிரச்னம் உண்டாகிறது. தன்னுடைய சொரூபம் எல்லாவற்றையும் பார்க்கினும் அதிகப் பிரியத்திற்கு விஷயமாதலின் முதலில் தனது சொரூபத்தை யறியும் வேட்கையுண்டாயது என அறிக. தத்பதார்த்தத்தில் பிரசினத்தை கூறுகின்றார் ஈஸ்வரன் யார் என. 'தத்துவமசி' வாக்கியத்தின் கண் யாதொரு தத்பதார்த்தமுண்டோ அது யாது? "பரமான்மா தேஜஸைச் சிருஷ்டித்தது" என்பதாதியால் ஜகத்

கர்த்திருத்தன்மை முதலிய பிரபஞ்ச முடையதாக நிர்த்தேசம் பண்ணப் பட்ட வஸ்துவே ஈஸ்வரனு? அல்லது "ஈதனைத்தும் சிருஷ்டிக்கு முன்பு சத்தாகவேயிருந்தது. ஒரே அத்துவிதீயமாம்" என்னும் சுருதிப்பிரசித்த மாகிய சர்வபேதம் அற்ற சத்வஸ்துவே ஈஸ்வரனு? வாக்கியார்த்தத்தில் பிரசினத்தைக் கூறுகின்ருர் ஜீவனுக்கும் என்பதாதியால். இரண்டு பக்ஷிகள் என்பது முதலிய இடங்களில் ஜீவேஸ்வரர்களுக்குப் பேதத்தைக் கேட்டலாலும் தத்துவமசி முதலிய இடங்களில் அபேதத்தைக் கேட்ட லாலும் விருத்தமான இரண்டு வாக்கியத்திற்கும் தாற்பரிய விசேஷம் அறியப்படாமையானும் சந்தேகம் உண்டாகின்றது. (91)

## *அவதாரிகை*

இப்போது சிஷ்யனிடத்தில் முற்கூறிய லக்ஷணமனைத்தையுமறிந்தே குருவினுல் அத்வயப்பிரம்மம் உபதேசிக்கத்தக்கது. என்று சிக்ஷிக் கின்றவராய் குருவானவர் உபதேசிக்கின்ருர் எனக்கூறுகின்ருர் :—

## *சுலோகம்*

**तीर्थेन तं विविदिषन्तमनन्यभक्तं**
**संसारसागरभयातुरचित्तवृत्तिम् ।**
**एकं मुमुक्षुमधिकारिणमात्मतत्त्व-**
**ज्ञाने समीक्ष्य गुरुराह दयात्रिधेयः ॥ ९२ ॥**

## பதவுரை

**तीर्थेन**—பவித்திரயாகாதி வடிவ தீர்த்தத்தால் அல்லது குரு வடிவ தீர்த்தத்தால்

**विविदिषन्तम्**—ஆன்மாவையறிய விரும்புகிறவனும்

**अनन्यभक्तम्**—அனன்யமான பக்தனும்

**संसारसागरभय**—சமுசாரமாகிய சமுத்திரத்தின் பயத்தால்

**आतुरचित्तवृत्तिम्**—துன்பமுற்ற சித்தவிருத்தியையுடையவனும்

**आत्मतत्त्वज्ञाने**—ஆன்மஞானத்தின்கண்

**अधिकारिणम्**—அதிகாரமுடையவனும்

**मुमुक्षुम्** –மோக்ஷத்திலிச்சையுடையவனுமாகிய

**तं एकम्** –அந்த ஒருவனை

**समीक्ष्य** –நன்ருகக்கண்டு

**दयाविधेयः**–கிருபையின் வசத்தராகி

**गुरुः आह**–குருவானவர் கூறுகின்ருர்.

## *விசேஷவுரை*

விவிதிஷையின் பொருட்டு அநுஷ்டிக்கப்பட்ட யஞ்ஞம் முதலியவற்ருலும் கங்கையின் ஸ்நானம் முதலியவற்ருலும் சித்தசுத்தியடைந்தவனுய் ஆன்மாவையறிய விரும்புகின்றவன் என்பது பொருள். ஆன்மாவையறிய விருப்பமுள்ளவனுயினும் எவன் தன்னினும் வேருகத் தேவதையையுபாசிக்கின்ருனே அவன் குருவால் உபதேசிக்கத்தக்கவனன்று என்னுமபிப்பிராயத்தாற்கூறுகின்ருர் அனன்யமான பக்தனென. கேவலப்பிரத்யகான்மாவிலேயே அழுந்திய சித்தமுடையவனென்பது பொருள்.

அல்லது "எவனுக்கு தேவதையினிடத்தில் மேலான பக்தியிருக்கிறதோ அதுபோலவே குருவினிடத்துமிருக்கிறதோ" என்பது முதலிய வசனத்தால் குரு தேவதைகளின் பக்திக்கு ஆன்ம ஞானத்தின் அங்கத் தன்மையுண்மையால் பக்தியின் சம்பத்தியைக் கூறுகின்ருர் :— 'அனன்ய' என. குருவினிடத்திலும் தேவதையினிடத்திலும் சமமான பக்தியுடையவனென்பது பொருள்.

அனன்யபக்தனுயினும் ஒருவன் சமுசாரபோகத்தின் பரித்தியாகத்தால் கவலையுற்ற சித்த முள்ளவனுகின்ருன் ஆதலில் அவனை விலக்குதற்பொருட்டு சமுசாரமாகிய என்பதாதியால் விசேஷிக்கப்பட்டது. தியாகியாயினும் போகத்தின்கண் தீன சித்தமுள்ளவனுயின் அவனுக்கு உபதேசம் ஏறுகிறதில்லையென்பது பொருள். அற்றேல் இப்படிப்பட்ட அதிகாரி உலகின்கண் கிடைப்பது அரிது எனின் வாஸ்தவந்தான் அங்ஙனமாயினும் எவனே ஒருவன் சம்பவிக்கின்ருன். ஸ்ரீ கிருஷ்ண பகவானுலும் "ஆயிரம்மனிதர்களுக்குள் ஒருவன் சித்தியின் பொருட்டு முயல்கின்ருன்" எனக்கூறப்பட்டுளது. என்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்ருர் ஒருவனையென, சிஷ்யனுக்கு உபதேசித்தல் வடிவ

குருவின் வியாபாரத்தில் நிமித்தத்தைக் கூறுகின்றார் கிருபையின் வசத்தராகியெனை. இவ்வாறு உபதேசத்தின்கண் கிருபையே நிமித்த மாமெனை சித்திக்கவே "சிஷ்யர்களைச்சேர்க்கலாகாது" என்னும் நிஷேதம் ஈண்டுப்பிரவிர்த்திக்கிறதில்லை என்பது கருத்து. (92)

## அவதாரிகை

இப்போது குருவிற்கு சிஷ்யனுக்குச்செய்யுமுபதேசப்பிரகாரத்தை சிக்ஷிக்கின்றவராய் குருவினுபதேசத்தைக் கூறுகின்றார்:—

## சுலோகம்

वक्ष्यामि वत्स तव वाञ्छितमत्यवस्थ-
मत्यन्तमेव च हितं शृणु तन्मनस्कः ।
त्वं प्रत्यगव्यवहितं तव सुप्रसिद्धं
ब्रह्माद्वितीयमुदितं च तदस्यजस्रम् ॥ ९३ ॥

## பதவுரை

वत्स—ஏ பிரிய சிஷ்யனே

तव—உனக்கு

वाञ्छितम्—அபீஷ்டமும்

अत्यवस्थम्—சாக்கிர முதலிய அவஸ்தைகளுக்கு அப்பாற்பட்டதும்

अत्यन्तमेव च हितम्—அத்தியந்தம் இதத்தைச் செய்வதும்

वक्ष्यामि—உபதேசிக்கின்றேன்

तन्मनस्कः—அதன் கண் ஏகாக்கிரமனதுடையவனாய்

शृणु—கேள்

त्वम् प्रत्यक्—நீ தேகாதியினின்றும் விலக்ஷணப் பிரத்திய
கான்மாவாய்

अव्यवहितम्—நித்தியாபரோக்ஷமாய் இருக்கின்றாய்

तव सुप्रसिद्धम्—அது உனக்கும் அநுபவ சித்தமாம்,

**ब्रह्म अद्वितीयम्** – பரமான்மா பெரிதாகவும் அத்விதீயமாகவும் உளது.

**उदितं च**– அஃது சுருதியின் கண்ணும் கூறப்பட்டுள்ளது.

**अजस्रं तदसि**–எப்போதும் நீ பிரம்மமாயிருக்கின்றாய்

## விசேஷவுரை

உத்வேகமின்றிய மனதையுடையவனாகி உபதேசத்தின் பொருளை யறியவேண்டும் என்னுமபிப்பிராயத்தால் வத்ஸ என புத்திரனுக்கு சமானமாக விளித்தார் "ஏ சௌமிய, ஈதனைத்தும் சத்தாகவேயிருந்தது" என்பது முதலிய சுருதியின் கண்ணும் பிரிய வாசக சௌம்மிய பதத்தின் பிரயோகம் காணப்படுதலின்.

சரணடைந்த சிஷ்யனுக்கு வாஞ்சைக்கு விஷயமாயினும் அனர்த்தத்தைச் செய்யுமாயின் குருவால் அவ்வனர்த்தவஸ்து எங்ஙன முபதேசிக்கத்தகும் என்னுஞ் சங்கைக்கு வாஞ்சித வஸ்துவை விசேஷிக்கின்றார் அவஸ்தைகளுக்கு அப்பாற்பட்டது என. மூன்றவத்தையையுங் கடந்தது. துரீய மென்று பொருள். இவ்வாறாகவே "பிரபஞ்சத்தின் உபசமம் சிவம்" என்னுஞ் சுருதியால் நிஷ்பிரபஞ்சப் பிரம்மத்திற்கு சுகரூபத்தன்மையைப் பிரதிபாதித்தலால் கூறிய தூஷண மின்றா மென்னு மபிப்பிராயத்தாற் கூறுகின்றார் அத்தியந்தமென.

கூறப்படும் பொருள் அத்தியந்தம் சூக்ஷுமமாதலின் சிஷ்யனுக்கு அதன் கண் சித்தைகாக்கிரத்தின் பொருட்டுக் கூறுகின்றார் ஏகாக்கிர மனமுடையவனாய் என. சிரவணஞ் செய்யத்தக்க வஸ்து யாது என்னுமபேக்ஷையுண்டாக வினாவின் கிரமப்படியே உத்தரத்தைக் கூறுகின்றார்- நீ என்பதாதியால். நீ தேகமன்று இந்திரிய மனங்களுமன்று பிராணாகங்காரங்களுமன்று அவைகளுக்கு சாவயவத்தன்மையால் காரியத்தன்மையுண்மையினாலும் விநாசித்தன்மை யுண்மையானும் கடாதி போன்று அநான்மத்தன்மை யுண்மையானும். ஆன்மாவிற்கு கிருதநாசம் முதலிய தோஷத்தைப் பரிகரிக்கும் பொருட்டு அநாதித்தன்மையுண்மையானும் தேகாதிகளுக்கு சடத்தன்மையினால் அவற்றினும் வேறான சாக்ஷிபாஸ்யத்தன்மை யுண்மையினாலும் அவைகட்கு ஆன்மத்தன்மையின்றாம்.

சாக்ஷியோ சொப்பிரகாசசைதன்னிய வடிவ ஆன்ம சொரூபமே யாம் ஆதலின் தனது பிரகாசத்தின் பொருட்டு அந்நியத்தையபேக்ஷிக் கிறதில்லை அச்சாக்ஷியும் நிர்த்தருமமேயாம் உருவாதிபோன்று சாக்ஷி பாஸ்யபதார்த்தங்கள் சாக்ஷியின் தருமமாகாமையின் என்னுமபிப்பிராயத் தாற் கூறுகின்றார் பிரத்தியகான்மா என. சடம் அநிருதம் முதலிய சொரூபமான தேகாதியினும் மாறாக விளங்குதலின் பிரத்தியக்-சொப்பிரகாசசைதன்னியமாம். இதனாலேயே நித்திய அபரோக்ஷவடிவ மாம். அதன்கண் எல்லாருடைய அநுபவமே பிரமாணமெனக் கூறு கின்றார் அநுபவசித்தமாமென. சொப்பிரகாச வடிவ ஆன்மா இல்லை யாயின் சகத்திற்கு அந்தகாரத்தன்மைப்பிராப்தியாம் என்பது கருத்து.

இரண்டாவது வினாவிற்கு உத்தரங் கூறுகின்றார் பரமான்மா என. அந்தப்பிரம்மம் ஆகாசத்திற்குச் சமானமாம் என்னும் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு அத்துவிதீய மெனப்பட்டது. சஜாதீயம் முதலிய மூவித பேதமற்ற சத்துமாத்திர மென்பது பொருள் அதில் பிரமாணத்தைக் கூறுகின்றார் கூறப்பட்டுளதென. சாந்தோக்ய சுருதி யின் கண் 'சத்தாகவேயிருந்தது' என்று ஆரம்பித்து "எல்லாம் இவ் வான்மாவே. அது சத்தியம். அது ஆன்மா" என்பது பர்யந்தமான கிரந்தத்தால் தெரிசிப்பிக்கப்பட்டது. என்பது பொருள். மூன்றாவது வினாவின் உத்தரத்தைக் கூறுகின்றார் — நீ பிரம்மமாயிருக்கின்றாயென.

அத்வைதப் பிரம்மத்தின் உபாசனையினால் ஜீவனுக்கு பிரம்மபாவ மானது உண்டாகின்றது. என்று சிலர் கூறுகின்றனர். அவர்களைக் கண்டித்தற் பொருட்டு எப்போதும் எனப்பட்டது. ஜீவனுக்குப் பிரம்ம பாவத்தைச்சாத்தியமாகவுடன்படின் அநித்தியத்தன்மை பிராப்தியாம். உம்மையால், தத்துவமசியென்னும் சுருதி விரோதம் தெரிசிப்பிக்கப் பட்டது. அவ்வாக்கியத்தின்கண் இருக்கின்றாய் என பிரம்ம பாவத் திற்கு வர்த்தமானத்தன்மை கேட்கப்படுதலின். ஆதலால் சாக்ஷி சைதன்னிய வடிவமான நீ எப்போதும் அத்வய சத்வடிவ பிரம்மமேயாம். அதில் நின்றும் வேறல்ல. என்பது பொருள். உத்வேகம்=கலக்கம்.

## அவதாரிகை

இவ்வாறு சுருக்கமாகச் சீடனுடைய வினாக்களுக்கு விடையளிக்கப் பட்டது, இப்போது அதன் கண் சிஷ்யனுடைய அங்கீகாராதியின்

அபாவத்தின் லிங்கத்தால் ஐக்கிய போதக நமது வாக்கியத்தால் திட அனுபவம் இனுைக்கு உண்டாகவில்லை யென்று தானே யூகித்து (அனுமித்து) வாக்கியத்தால் சொரூபானுபவத்தின் பிரதிபந்தத்தை நீக்கு தற்பொருட்டு முயற்சிக்கின்ருர். முயற்சி செய்யாவிடின் உனக்குக் கூறுகின்றேன் என்பது முதலிய பிரதிக்ஞை சித்தியாதாதலின். அவற்றுள்ளும் மகாவாக்கியார்த்தமாகிய அபேதம் புருஷார்த்தமாதலினு லும் மறைப்பின்றி உபஸ்திதமாதலானும் அதன் விரோதத்தினையே முதலில் பரிகரித்தற்குக் கூறுகின்ருர் :—

*சுலோகம்*

**यद्यत्र पश्यसि विरोधमुदीरय त्वं**
**सद्यस्ततः परिहराणि तमप्रयत्नात् ।**
**वाक्यं निरस्तसकलप्रतिबन्धकं सत्**
**त्वां बोधयिष्यति करार्पितबिल्वतुल्यम् ॥ ९४ ॥**

*பதவுரை*

**त्वम्**—சிஷ்யனே நீ

**अत्र**—தத்துவமசி முதலிய மகாவாக்கியார்த்த வடிவ அபேதத்தின் கண்

**विरोधं यदि पश्यसि**—விரோதத்தினைக் காண்பையாயின்

**उदीरय**—கூறுவாயாக

**ततः**—கூறியதன் அநந்தரம்

**सद्यः**—உடனே

**तम्**—அந்த விரோதத்தினை

**अप्रयत्नात्**—அநாயாசமாகவே

**परिहराणि**—நிவர்த்தி செய்வேன்

**निरस्तसकलप्रतिबन्धकम्** - அசம்பாவனை முதலிய சகலப்பிரதி பந்தமுமற்றதாய்

**सत्**—இருந்து கொண்டு

**वाक्यम्** –தத்துமெசி முதலிய மஹாவாக்கியமானது

**त्वाम्** –உன்னை

**करार्पितबिल्वतुल्यम्** – உள்ளங்கையில் வைக்கப்பட்ட வில்வக் கனி போன்று அபரோக்ஷமாய்

**बोधयिष्यति**–அறிவிக்கும்

### விசேஷவுரை

பரிகாரஞ் செய்வதில் உமக்குக்கிலேசம் உண்டாகுமே என்னும் சிஷ்யனுடைய சங்கை அநாயாசமாக என்பதனால் நிவர்த்திக்கப்பட்டது. விரோதத்தைப் பரிகரித்தலின்கண் பிரயோஜனத்தைக் கூறுகின்றார் உள்ளங்கை என்பதால். உள்ளங்கையிலுள்ள நெல்லிக்கனி முதலியவை எவ்வாறு அபரோக்ஷமோ அவ்வாறு அபரோக்ஷமாகும்படி அறிவிக்கும் என்பது பொருள். **(94)**

### அவதாரிகை

இவ்வாறு குருவினால் அநுமதிக்கப்பெற்ற சீடனானவன் நிர்ப்பயனாய் இருந்து கொண்டு வாக்கியார்த்தத்தின் அசம்பவத்தை வினவுகின்றான் :-

### சுலோகம்

**अत्राऽऽह सद्वयमहं मम रूपमीक्षे**
**तच्चाद्वयं त्विगणयामि परोक्षमेव ।**
**पारोक्ष्यसद्वयविभागयुजोर्विरोधा-**
**द्वाक्यार्थबोधमतिदुर्लभमेव मन्ये ॥ ९५ ॥**

### பதவுரை

**अत्र आह**–ஈண்டு சீடன் சங்கிக்கிறான்

**अहम्** – ஏ குருவே நான்

**मम रूपम्** – துவம் பதார்த்தமாகிய என்னுடைய சொரூபத்தை

**सद्वयम्** – தேகந்தோறும் பேதமுடையதாகவும் கர்த்திருத்துவாதியையுடையதாகவும்

**ईक्षे**–காண்கிறேன்

[அதனுலென்னையெனில் ஆண்டுக் கூறுகின்ருர்]

**तत्** – தத்பதார்த்த ஈஸ்வரசொரூபத்தினை

**अद्वयं च** – அத்வயமாகவே

**परोक्षमेव**–பரோக்ஷமாகவே

**विगणयामि**- ஊகிக்கின்றேன்

[அதனுலென்னை என்னுமிடத்துக் கூறுகின்ருர்]

**पारोक्ष्यसद्वयविभागयुजोः**-பரோக்ஷத்தன்மை(அபரோக்ஷத்தன்மை ஏகத்தன்மை) அநேகத்தன்மை முதலிய விருத்ததர்மங்களையுடைய ஜீவேஸ்வரர்களுக்கு

**विरोधात्** – விரோதமிருத்தலின்

**वाक्यार्थबोधम्** – ஜீவேஸ்வரர்களின் ஐக்கியவடிவ வாக்கியார்த்தத்தின் ஞானம்

**अतिदुर्लभं एव**–அத்தியந்தம் அசம்பவமென்றே

**मन्ये**–கருதுகிறேன்.

## *விசேஷவுரை*

காண்கிறேனென்பதினுல் ஜீவேஸ்வரர்களுக்கு விரோதத்தைத் தெரிவிக்கும் பொருட்டுத் தன்னிடத்தில் அபரோக்ஷத்தன்மையையும் தெரிவித்தனன்.

ஊகிக்கின்றேன் – கார்யவடிவலிங்கத்தால் அதன் உபாதானத் தன்மையினுல் தர்க்கிக்கின்றேன் பரோக்ஷமாகவே என்பதனுல் தர்க்க யோக்கியமான ஈஸ்வரனது சொரூபம் கூறப்பட்டது. அபரோக்ஷ வஸ்துவின்கண் தர்க்கத்தின் உதயமின்மையின் ஈஸ்வரனுடைய சொரூபம் தர்க்கிக்கப்படுமாயின் பரோக்ஷமேயாகும் என்பது பொருள். பரோக்ஷத்தன்மை என்னும் பதமும் அத்வயத்தன்மைக்கு உபலக்ஷணமாம், அநேகத்தன்மையும் அபரோக்ஷத்தன்மைக்கு உபலக்ஷணமாம். ஏதனுலெனில், பரோக்ஷத்தன்மை அநேகத்தன்மைகளுக்குப் பரஸ்பர விரோதமின்மையின் விரோதியாகிய ஏகத்தன்மை அபரோக்ஷத் தன்மைகளுக்கு உபலக்ஷணம் செய்யத்தக்கதாயிருத்தலின். இவ்வாறுக

பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மை சத்வயத்தன்மை அத்வயத் தன்மைவடிவவிரோத தர்மங்களினையுடைய ஜீவேஸ்வரர்களுக்கு அபேதம் சம்பவியாது என்னும் பொருள் சித்தித்தது. இவ்வாறு வாக்கியார்த்தவடிவ அபேதத்தின் அசம்பவம் உளதாயவழி தத்துவமசி மகாவாக்கியத்தினாலே அபேதத்தின் போதமும் சம்பவிக்கின்றதில்லை யெனக்கூறுகின்றார் - வாக்கியார்த்தமெனை. ஈண்டு இது கூறப்பட்டதாகின்றது. தத்துவமசி முதலிய மஹாவாக்கியம் ஜீவப்பிரம்மங்களின் அபேதத்தின் கண் தாத்பரியமுடையது எனக்கூறவேண்டும். வேறு பிரகாரமாக மகாவாக்யத்திற்கு அர்த்தம் சம்பவியாமையின் அத்தாத்பர்யமும் ஸம்பவிக்கின்றதில்லை. சத்வயமும் அத்வயமும் பரோக்ஷமும் அபரோக்ஷமுமான ஜீவப்பிரம்மங்களுக்கு அபேதம் சம்பவியாமையின். இவ்வாறாக அவ்வபேதத்தை விஷயஞ்செய்யும் உபநிஷத்தால் ஜன்னியமான ஞானமானது எப்படிச் சம்பவிக்கும் என்பது. (95)

## வாக்கியார்த்த விரோத பரிகாரத்தை நிரூபித்தல்

### அவதாரிகை

அற்றேல், ஜீவேஸ்வரர்களுக்கு "தத்துவமசி" முதலிய சப்தங்களால் அபேத விரோதியான சத்வயத்தன்மை முதலியது அறியத்தகாததாம் எதனாலெனில் அச்சப்தங்களுக்கு அதன்கண் சாமர்த்தியமின்மையின். ஆகவே ஜீவேஸ்வரர்களுக்கு அபேத ஞானம் ஏன் உண்டாகிறதில்லை. என்றுசங்கித்து தத்துவமசி முதலிய சப்தங்கள் பிரசித்த அர்த்தத்தைப் பிரதிபாதிப்பனவாம். ஆதலின் துவம்பதார்த்த ஜீவனுக்கு பிரமாதிருத்தன்மை கருத்திருத்தன்மை முதலிய சத்வயரூபத்தாலேயே பிரசித்தியிருத்தலானும் தத்பதார்த்த ஈஸ்வரனுக்கும் பிரகரணத்தால் அத்வயத்தன்மையாலேயே அறியப்படுகின்றமையாலும். அபேத விரோதியாகிய சத்வயத்துவாதி வடிவத்தின் அப்பிரதீதி அசித்தமாம். அதாவது தத் துவம் ஆதி சப்தங்களாலும் அபேத விரோதிகளாகிய சத்வயத்துவாதிகளின் பிரதீதி உண்டாகிறது. ஆதலின் ஜீவேஸ்வரர்களுக்கு அபேதம் சித்திக்கின்றதில்லை. என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார் :—

### சுலோகம்

यद्वस्तु सद्वयतयाऽवगतं स्वशब्दा-
त्तस्याद्वयत्वमवगन्तुमशक्यमेव ।
यद्वस्तु च व्यवहितं प्रतिपादितं त-
त्प्रत्यक्तया न तु जनः प्रतिपत्तुमीशः ॥ ९६ ॥

### பதவுரை

**यद्वस्तु**–யாதொரு சீவவடிவ வஸ்துவானது

**स्वशब्दात्**–தனது வாசக துவம் முதலிய சத்தங்களால்

**सद्वयतया**–பேதமுடையதாக

**अवगतम्**–அறியப்பட்டதோ

**तस्य**–அந்த சீவனுக்கு

**अद्वयत्वम्**–சருவபேதமுமற்ற பிரம்மத்தோடு அபின்னத்தன்மை

**अवगन्तुम्**–அறிதற்கு

**अशक्यमेव**–சருவப்பிரகாரத்தாலும் அசக்கியமேயாம்

**यद्वस्तु**–யாதொரு ஈஸ்வர வடிவ வஸ்துவானது

**व्यवहितं च**–பரோக்ஷமாக

**प्रतिपादितं**–பிரதிபாதிக்கப்பட்டுளதோ

**तत्**–அந்த சருவஞ்ஞ ஈசுவரனை

**प्रत्यक्तया**–அபரோக்ஷ ஆன்ம வடிவமாக

**प्रतिपत्तुम्**–அறிதற்கு

**जनः**–எந்த மனிதனும்

**नतु ईशः**–சமர்த்தனன்றும்

### விசேஷவுரை

பேதமுடையது என்பது அபரோக்ஷத்திற்கும் உபலக்ஷணமாம், தத் (அது) என்னுஞ்சத்தத்தால் அத்துவயவஸ்து பரோக்ஷமாகவே பிரதீதியாகின்றது ஆதலின் பரோக்ஷமென்று கூறப்பட்டது. (96)

## அவதாரிகை

அற்றேல் அபேதத்திற்கு அயோக்கியங்களான சுத்திரஜதங்களுக்கும் சத்தத்தால் அபேதஞானம் காணப்படுதலின் சாத்தஞானத்தின்கண் யோக்கியதை அபேக்ஷிக்கப் படுவதின்றும். மற்றோ ஆகாங்க்ஷையாதியே அபேக்ஷிக்கப் படுகின்றது சிலோகரைர்களுக்கு அபேத வடிவ யோக்கியதையின்றேனும் சத்தத்தால் அபேத ஞானமுண்டாகலாமென்றுசங்கித்து சாத்தப்பிரமையின்கண் யோக்கியதை சொரூப சத்தியமாய் அபேக்ஷிக்கப்படுகின்றதேயாகும் ஆகாங்க்ஷையாதி மாத்திரமன்றும் என்று கூறுகின்றார்:—

## சுலோகம்

आकाङ्क्षितं भवति पूरणशक्तियुक्तं
यत्सन्निधौ पतितमस्य हि सङ्गतिः स्यात् ।
नाकाङ्क्षयैव न तु सन्निधिनैव वा स्यात्
सम्बन्धिता हि विरहय्य पदार्थशक्तिम् ॥ ९७ ॥

## பதவுரை

**आकाङ्क्षितम्** - ஆகாங்க்ஷையோடுகூடியதாய்

**पूरणशक्तियुक्तं**—அன்வய யோக்கியமாய்

**सन्निधौ**—சமீபத்திலுள்ள பதத்தால்

**पतितम्** – போதிக்கப்பட்டதாய்

**यत् भवति**—எவ்வஸ்து விருக்கின்றதோ

**अस्य**—அதற்கு

**सङ्गतिः स्यात्** – சாப்தஞானஹேதுத்தன்மையிருக்கின்றது.

[கூறியதனையே ஸ்பஷ்டஞ்செய்கின்றார்.]

**पदार्थशक्ति विरहय्य**—பதார்த்தசத்திவடிவயோக்கியதையின்றி

**आकाङ्क्षया एव**-கேவல ஆகாங்க்ஷையினுல்

**न संम्बन्धिता स्यात्** –அன்வயபோதமுண்டாகிறதில்லை

**न तु सन्निधिना एव वा**—அல்லது கேவல சன்னிதியினுலுமுண்டாகிறதில்லை.

## விசேஷவுரை

எப்பதமின்றி எப்பதத்திற்கு தனது அர்த்தத்தினநுபவத்தை யுண்டு பண்ணுந்தன்மையின்றே அப்பதத்தோடு அப்பதத்திற்கு யாதொரு அபேக்ஷையுண்டோ அது ஆகாங்க்ஷையெனப்படும். அவற்றின் பொருள் களுக்கும் ஆகாங்க்ஷையோடு கூடிய சத்தங்களால் பிரதிபாதிக்கப் படுந்தன்மையினல் சத்தத்திலுள்ள ஆகாங்க்ஷையே பொருள்களிடத்து மங்கீகரிக்கப்படுகின்றது. ஆகாங்க்ஷையோடு கூடியது ஆகாங்க்ஷித் மெனப்படுகின்றது.

சாத்த ஞானமாத்திரத்தில் சொரூபசத்தையாகிய யோக்கியதை யபேக்ஷிக்கப்படுகின்றதில்லை. எதனுலெனின் ஆபாசசப்தத்தால் பிரதி பாத்தியகற்பிதார்த்தத்தில் யோக்கியதையின்மையின். யோக்கியதை யின் ஞானமும் அபேக்ஷிக்கப்படுவதின்ரும் அதில் பிரமாணமின்மையின் யோக்யதை ஞானத்தின் அபாவத்தாற் சஹகரிக்கப்பட்ட ஆகாங்க்ஷை முதலிய இதர காரணங்களின் சமுதாயத்தாலேயே சாப்தப் பிராந்தி ஞானம் பொருந்துதலின். அப்படியாயினும் சாத்தப்பிரமையின் கண் சொரூபமாக யோக்கியதை அபேக்ஷிக்கப்பட்டதேயாம் யாதொரு காரணத்தால் ஆகாங்க்ஷை முதலியவையிருந்தும் யோக்கியதையின்றி சாத்தப்பிரமையுண்டாகின்றதில்லையோ அக்காரணத்தால் அன்வய வியதிரேகங்களால் ஆகாங்க்ஷை முதலிய மூன்றுமே சாத்தப்பிரமையின் கண் காரணமாமென்பது கருத்து. **पतितं** என்ற இடத்தில் **पठितं** எனப்பாடபேதமுளது **पठितं** என்ற பாடமே நல்லதாகத்தோன்று கின்றது. ஆகாங்க்ஷை முதலியவைகட்கு மற்றுமோர் லக்ஷணம். எப் பதத்திற்கு எப்பதமின்றி சாப்தபோதத்தையுண்டாக்குந் தன்மை யின்றே அப்பதத்திற்கு அப்பதத்தின் அபேக்ஷை ஆகாங்க்ஷை எனப்படும். ஒரு பதார்த்தத்தின்கண் மற்ருேர் பதார்த்தத்தின் சம்பந்தம் இருத்தல் யோக்கியதை எனப்படும். அல்லது பாதத்தின் அபாவம் யோக்கியதையாம். பதங்களை விலம்பமின்றியுச்சரித்தல் சந்நிதியாம். அல்லது பதங்களால் பதார்த்தங்களின் வியவதானமின்றிய உபஸ்திதி சந்நிதியெனப்படும். ஆகாங்க்ஷை யோக்கியதை சந்நிதி யின்றிய வாக்கியம் பிரமாணமாகின்றதில்லை. பசு, குதிரை, புருஷன், யானை, என்னும் வாக்கியம் போன்று. இவ்வாக்கியத்தின்கண் பரஸ் பரம் ஆகாங்க்ஷையின்ரும். 'நெருப்பாற்றெளிக்குக' என்னும் வாக் கியமும் பிரமாணமின்ரும், எதனுலெனின், இவ்வாக்கியார்த்தத்தில்

வன்னியைக் காரணமாகக் கொண்டு தெளித்தல் யோக்கியதையின்றும். ஒவ்வொரு ஜாமத்திற்குப்பிறகு உச்சரிக்கப்பட்ட 'பசுவை கொண்டு வா' என்பது முதலிய பதமும் பிரமாணமன்றும். ஏதனாலெனின் இவற்றில் சந்நிதியின்றாம். (97)

### அவதாரிகை

அற்றேல், ஜீவர்களுக்குப் பிரம்மத்தின் விகாரத்தன்மையுண்மையானும் அல்லது பிரம்மத்தின் அம்சத்தன்மையுண்மையானும் மண் முதலியவற்றோடு குடமுதலியவைகட்குப்போன்று அபேத யோக்கியத் தன்மை உளதேயாம். என்று பேதாபேதவாதிகள் கூறுகின்றனர். அவர் பொருட்டுப்பூர்வபக்ஷங்கூறி சமாதானங்கூறுகின்றார்:—

### சுலோகம்

**योग्यत्वमत्र न च तत्त्वमसीति वाक्ये**
**संबन्धितां प्रति पदार्थयुगस्य भाति ।**
**पारोक्ष्यसद्वयविभागविरोधहेतो-**
**र्गौरश्व इत्यभिहिते तु यथैव वाक्ये ॥ ९८ ॥**

### பதவுரை

**अत्र** - ஈண்டு

**तत्त्वमसीतिवाक्ये** - நீ பிரம்மமாயிருக்கின்றாய் என்னும் மகா வாக்கியத்தின் கண்

**पदार्थयुगस्य**—தத்பதார்த்தத் துவம்பதார்த்தங்களான ஜீவேஶ்வரர் களுக்கு

**संबन्धितां प्रति**—அபேதவடிவ சம்பந்தத்தைக் குறித்து

**योग्यत्वं न च भाति**—யோக்கியதை விளங்குவதேயின்றும்

**पारोक्ष्यसद्वयविभाग विरोधहेतोः** — பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மை, ஏகத்தன்மை அநேகத்தன்மை, முதலிய விபாகத்தால் விரோதமிருத்தலின்,

(அதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்)

**गौः अश्वः इति अभिहिते तु वाक्ये**—பசு, குதிரை என்று கூறப்பட்டவாக்கியத்தின் கண்

**यथा एव**–யோக்கிதையின்மையால் எங்ஙனம் சம்பந்தித் தன்மை யறியப்படுவதின்றே அதுபோன்று.

### விசேஷவுரை

ஜீவனுக்குப் பிரம்ம விகாரத்தன்மையையுடன்படின் அநித்தியத் தன்மை முதலிய தோஷத்தின் அடைவுண்டாம் ஆதலினாலும், நிரவயவப் பிரம்மத்திற்கு அம்சமுடையதாந்தன்மை பொருந்தாமையானும் மண்ணிற்கும் குடத்திற்கும் போன்று ஜீவப்பிரம்மங்களின் அபேதம் வாக்கியார்த்தமன்று. மற்றே ஆத்யந்திக அபேதமே வாக்கியார்த்த மாம். அதுவும் முற்கூறிய யுக்தியால் சம்பவிக்கின்றதில்லை என்னும் அபிப்பிராயத்தால் திருஷ்டாந்தசகிதமாகக் கூறப்பட்டது பரோக்ஷத் தன்மை என்பதாதியால். (98)

### அவதாரிகை

அற்றேல், தத்துவம் பதங்களின் வாச்சியார்த்தங்களுக்குப் பரஸ் பரம் அபேதயோக்கியத்தன்மையின்றேனும் விருத்த அம்சங்களின் பரித்தியாகத்தால் இருபதங்களின் லக்ஷியார்த்தங்களுக்கு அபேதம் விரோதமாவதின்றும். ஆதலின் அதனையே மஹாவாக்கியமானது அறிவிக்கட்டும். எங்ஙனம் அவன் இத்தேவதத்தன் என்னும் பிரத்திய பிக்ஞை வாக்கியமானது அவன் இவன் என்னும் பதங்களின் வாச்சியார்த்தங்களான அத்தேசகால இத்தேசகால விசிஷ்டங்களுக்கு அபேதஞ் சம்பவியாமையால் அத்தேச காலமும் இத்தேசகாலமுமாகிய அம்சத்தினை விட்டு லக்ஷியவஸ்துவின் சொரூபத்திற்கு அபேதத்தைப் பிரதிபாதிக்கின்றதோ அதுபோல என்னுஞ்சங்கைக்குக் கூறுகின்றார்.

### சுலோகம்

**सोऽयंगिरोरिव न लक्षणयाऽपि वृत्ति-**
**र्मानान्तराधिगतिहीनतयाऽऽत्मनि स्यात् ।**
**मानान्तराधिगतगोचर एव दृष्टः**
**शब्दप्रयोग इह लाक्षणिकस्तु लोके ॥ ९९ ॥**

### பதவுரை

**मानान्तराधिगतिहीनतया** – பிரமாணாந்தரத்தால் ஆன்மாவின் ஞானமின்மையின்

**सोऽयंगिरोः इव**- அவன் இவன் என்னும் பதங்களுக்கு லக்ஷணை யினால் தேவதத்தனுடைய சொரூபத்தில் பிரவிருத்தி உண்டாவது போன்று

**लक्षणया अपि**-தத்துவம் பதங்களுக்கு லக்ஷணையினாலும்

**आत्मनि वृत्तिः न स्यात्**-கூடஸ்த ஆன்மாவின் கண் பிரவிருத்தி யுண்டாகாது.

[அற்றேல் ஆன்மாவின் கண் பிரமாணாந்தரததின் பிரவிருத்தி யின்றேனும் அதன் கண் லக்ஷணை ஏன் கூடாது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்]

**इह लोके**-இவ்வுலகின் கண்

**मानान्तर अधिगत गोचर एव** - வேறுபிரமாணத்தால் அறியப் பட்ட விஷயத்தின் கண்ணேயே

**लाक्षणिकः शब्दप्रयोगः**-லக்ஷண விருத்தியாற்சப்தப் பிரயோகம்

**दृष्टः**-காணப்பட்டுளது.

## *விசேஷவுரை*

பிரமாணாந்தரத்தால் சக்திய சம்பந்தியாக அறியப்பட்டதன் கண்ணேயே லக்ஷணையுண்டாகிறது. பிரமாணாந்தரப்பிரவிருத்தி யின்றேல் லக்ஷிய சொரூபத்தின் நிச்சயமே பொருந்தாதாதலின். சப்தத்தானேயே லக்ஷிய சொரூபத்தின் நிர்ணயஞ்செய்யின் அச் சப்தமும் லாக்ஷணிகமாதலின் அனவஸ்தையுண்டாம் ஆதலின். அக் காரணத்தால் லக்ஷியத்தின்கண் பிரமாணாந்தர விஷயத்தன்மை லக்ஷணைக்கு வியாபகமாம். அதாவது யாண்டு யாண்டு லக்ஷணை, ஆண்டு ஆண்டு பிரமாணாந்தர விஷயத்துவம் என்னும் வியாப்தி கங்கை யின் கரை முதலியவற்றின்கண் அறியப்பட்டுள்ளது. ஆன்மாவின் கண் வியாபகவடிவ பிரமாணாந்தர விஷயத்தன்மை நீங்குகின்றதாகி லக்ஷணையையும் நிவர்த்திக்கின்றது என்பது கருத்து. வியாபகாபாவத் தால் வியாப்பியாபாவம் என்பது பொருள். (99)

## *அவதாரிகை*

ஆன்மாவின்கண் லக்ஷணையின் அசம்பவசமர்த்தனத்தின் பயனைக் கூறுகின்றார் :—

### சுலோகம்

तस्मादखण्डविषया न वचःप्रवृत्तिः
संसर्गबोधनमपास्तमयोग्यभावात् ।
एवं न वाक्यगतशब्दसमन्वयोऽपि
दूरे प्रमान्तरविरोधनिरासलिद्धिः ॥ १०० ॥

### பதவுரை

**तस्मात्** –(யாதொரு காரணத்தால் லக்ஷணையிலுலும் சாமானாதி கரணியம் பொருந்துவதின்றே) அக் காரணத்தால்

**अखण्डविषया**–அகண்ட பிரம்மான்மதத்துவத்தை விஷயஞ் செய்வதாக

**न वचःप्रवृत्तिः** – தத், துவம் முதலிய சப்தங்களின் பிரவிருத்தி யின்றும்

**अयोग्यभावात्** – ஜீவேஸ்வரர்களுக்கு அபேத வடிவ யோக்கியதை யின்மையினுல்

**संसर्गबोधनम्** – தத்துவமசி மகாவாக்கியத்தின்கண் ஜீவேஸ்வரர் களுக்கு தாதாத்மிய சம்பந்தத்தைப் போதிக்கும் தன்மை

**अपास्तम्** – கண்டிக்கப்பட்டது

**एवम्** –இந்த பிரகாரம்

**वाक्यगतशब्दसमन्वयोऽपि**–தத்துவமசி மகா வாக்கியத்திலுள்ள தத் துவம் என்னும் சப்தங்களுக்கு சாமானுதிகரணியத்தால் சம்பந்தமும்

**न**– சரியன்றும் (இவ்வாருகவே)

**प्रमान्तरविरोधनिरासलिद्धिः** – பேதத்தைக் கவருகின்ற பிர மாணுந்தரவிரோதத்தினை நிரா கரித்தலின் சித்தி

**दूरे**– வெகுதூரமாம்

## விசேஷவுரை

சாமாநாதிகரணிய வாக்கியமானது உலகின் கண் இரண்டு விதமாகக் காணப்பட்டுள்ளது. ஒன்று விருத்தாம்சத்தை விடுதலால் லக்ஷணையினால் சொரூபமாத்திரபரமாம். அவன் இத் தேவதத்தன் என்னும் வாக்கியம் போன்று. மற்றொன்றோ வாச்சியார்த்தங்களுக்கே தாதாத்மிய வடிவ சம்பந்தத்தைப் போதிக்கும் பரமாம். மட்குடம், நீலோத்பலம் என்பது முதலிய வாக்கியம் போன்று. பிரம்மத்தின்கண் லக்ஷணை சம்பவியாமையானும் முற்கூறிய நியாயத்தால் விரோதமிருத்தலானும் இந்த இரண்டுவித சாமாநாதிகரணியமுஞ் சம்பவிக்கின்றதில்லை. அற்றேல், அபேதத்தைப் போதிக்கும் வேதாந்த வாக்கியங்களோடு விரோதமிருத்தலின் பேதத்தைப் போதிக்கும் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களுக்கே அப்பிரமாணத்தன்மையிருக்குக எனின் அதற்குக் கூறுகின்றார் இந்தப் பிரகாரமென.

வேதாந்த வாக்கியத்தின்கண் பிரயோகிக்கப்பட்ட யாதொரு தத்துவம் பதங்களுண்டோ அவற்றிற்கு சாமாநாதிகரணியத்தால் அந்நுவயமும் சம்பவியாதபோது தத்துவம் பதார்த்தங்களான ஜீவேஸ்வரர்களுக்கு விசேஷண விசேஷியத்தன்மையால் பிரமிதியே சித்திக்காது. (இவ்வாறாகவே) விரோதத்தைக் கிரகிக்கின்ற பிரத்தியக்ஷாதிகளின் பிராமாணியத்தை நிராகரித்தலின் சித்தி வெகு தூரமாம். நிராகரிக்க முடியாதென்பது கருத்து. அக்கினி அநுஷ்ணம் என்னும் வாக்கியம் போன்று பிரத்தியக்ஷாதிப் பிரமாணத்தால் பாதிக்கப்பட்ட அர்த்தத்தினை வேதமும் பிராமாணிகமாக்குதற்குச் சாமர்த்தியமுடையதன்றாம். ஆதலின் வேத வாக்கியத்திற்கு விரோதமாதலால் அதனினும் இதரப் பிரத்தியக்ஷாதி பிரமாணங்களுக்கு அப்பிராமாணியத்தன்மை எப்படிச் சித்திக்கும் என்பது கருத்து. (100)

## அவதாரிகை

மற்றும், வேதாந்தங்கள் சித்தித்த பிரம்மத்தைப் பிரதிபாதிக்குமாயின் பிரமாணாந்தர சம்வாதத்தின் அதீனமான பிராமாணியத்தையுடையனவாகவாகும். ‘ ஆற்றின் கரையில் பழங்கள் இருக்கின்றன ’ என்னும் லௌகிக வாக்கியத்தின்கண் அவ்வாறு காணப்படுதலால்,

பிரம்மத்தின்கண் பிரமாணாந்தரத்தின் சம்வாதமும் சம்பவிக்கின்றதில்லை. அதன்கண் பிரமாணாந்தரம் சம்பவியாமையானும். வேதத்திற்கு அனபேக்ஷத்தன்மை வடிவ சுவதப் பிராமாணியத்திற்குப் பங்கம் வருதலினாலும். என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார் :—

*சுலோகம்*

**किं च प्रमान्तरमपेक्ष्य गिरः प्रवृत्तिः**
**सिद्धेषु वस्तुषु जगत्युपलब्धपूर्वा ।**
**ब्रह्मात्मवस्तुनि तथा वचसः प्रवृत्ति-**
**र्युक्ताऽऽत्मनस्तु फलवत्परिनिष्ठितत्वात् ॥ १०१ ॥**

*பதவுரை*

**किं च**—மேலும்

**जगति**—உலகின்கண்

**सिद्धेषु वस्तुषु**—சித்தித்த பதார்த்தங்களில்

**प्रमान्तरम् अपेक्ष्य**—பிரத்தியக்ஷாதிப்பிரமாணங்களையபேக்ஷித்தே

**गिरः प्रवृत्तिः**—வாக்கியத்தின் பிரவிருத்தி

**उपलब्धपूर्वा** - உண்டாகின்றதென்பது முன்னர் அறியப் பட்டுள்ளது

[அதனாலென்னையெனின் ஆண்டுக்கூறுகின்றார்]

**तथा**—அப்படியே

**ब्रह्मात्मवस्तुनि**—பிரம்மவடிவ ஆன்மாவின்கண்

**वचसः प्रवृत्तिः**—தத்துவமசி முதலிய மகா வாக்கியத்தின் பிரவிருத்தியானது பிரமாணாந்தரத்தை யபேக்ஷித்தே உண்டாகின்றது என்றல்

**युक्ता**—பொருத்தமுடையதாம்

[எதனாலெனின் ஆண்டுக் கூறுகின்றார்]

**फलवत्**—ஆற்றின் கரையிலுள்ள கனிபோன்று

**आत्मनः तु**-ஆன்மாவிற்கும்

**परिनिष्ठितत्वात्**-சித்தித்த தன்மையுண்மையின்.

### விசேஷவுரை

பிரயத்தினத்தால் சாதிக்கத்தகாத வஸ்து எதுவோ அது சித்த மெனப்படுகின்றது. அல்லது மீமாம்ஸகரது அபிமதமான அபூர்வ வஷவ காரியத்தின் விலக்ஷணம் சித்தமாம். 101

### அவதாரிகை

கனிபோலெனக்கூறிய திருஷ்டாந்தத்தை விஸ்தரிக்கின்றவராய் தார்ஷ்டாந்தத்தையும் விஸ்தரிக்கின்றார் :—

### சுலோகம்

**नद्यास्तीरे फलमितिगिरः सिद्धवस्तुप्रवृत्ते-**
**र्दृष्टा स्वार्थप्रमितिजनने स्वान्यमानव्यपेक्षा ।**
**तद्वद्ब्रह्मण्यपि तु वचसो वैदिकस्याभ्युपेया**
**तस्मादस्मिन्न खलु घटते मानमात्रः श्रुतीनाम् ॥**

### பதவுரை

**सिद्धवस्तुप्रवृत्तेः** - சித்தித்த வஸ்துவின்கண் பிரவிருத்தியினை யுடைய

**नद्याः तीरे फलमिति गिरः** -ஆற்றின் கரையில் கனியிருக்கின்றது என்னும் வாக்கியத்திற்கு

**स्वार्थप्रमितिजनने**- தனது விஷயத்தின் யதார்த்த ஞானத்தை யுண்டுபண்ணுவதன் கண்

**स्वान्यमानव्यपेक्षा**-தன்னினும் வேறான பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணத்தினபேக்ஷை

**दृष्टा**-காணப்பட்டுளது

**तद्वत् तु** -அதுபோலவே

**ब्रह्मणि**-சித்தப்பிரம்மத்தின்கண்

**वैदिकस्य वचसोऽपि**— பிரவிர்த்திக்கின்ற தத்துவமசி முதலிய வேதாந்தவாக்கியத்திற்கும் பிரமாணாந்தரத்தின பேக்ஷயுரா தென

**अभ्युपेया**—அங்கீகரிக்கத்தக்கது

[இவ்வாருகுக அதனுலென்னையெனிற் கூறுகின்ருர்]

**तस्मात्** அவ்வாறு அங்கீகரித்தலால்

**अस्मिन्** – சேதனுன்மக பிரம்மத்தின் கண்

**श्रुतीनाम्** – வேதாந்தங்களுக்கு

**मानभावः** – சுவதப்பிரமாண த்தன்மை

**न घटते खलु**—பொருந்துவதேயின்ரும்

## விசேஷவுரை

வேதாந்தப் பிரதிபாத்தியப் பிரம்மத்தின்கண் பிரமாணாந்தரம் பிர விருத்திக்குமாயின் பிரமாணாந்தரத்தாற் சித்தித்த அர்த்தத்தினநுவாதகத் தன்மையால் வேதாந்தங்களுக்கு பிரமமத்தின் கண் தாற்பரியமின்மையின் அப்பிரமாணத்தன்மை பிராப்தியாம், பிரம்மத்தின்கண் பிரமாணாந்தரத் தின் பிரவிருத்தியை யங்கீகரியாவிடின் சித்தித்ததைப் போதிக்கும் வாக்கியத்தின்கண் பிரமாணத் தன்மைக்குப் பிரயோஜகமான அன்னியப் பிரமாணத்தின் சம்வாதமின்மையின் அப்பிரமாணத்தன்மைப் பிராப்தி யாம் என்பது கருத்து. 102

## அவதாரிகை

முன்பு அவனித்தேவதத்தன் என்பது முதலிய இலௌகிக வாக்கி யத்திற்கு அகண்டார்த்தத் தன்மையையங்கீகரித்து வேதாந்தத்தின்கண் லக்ஷணையின் அசம்பவத்தால் அகண்டார்த்தத்தன்மை தூஷிக்கப் பட்டது இப்போது அவனித்தேவதத்தன் என்பது முதலிய இடங்களிலும் அகண்டார்த்தம் அங்கீகரிக்கப்படுவதின்ரும் இவ்வாருகவே அதன் திருஷ்டாந்தத்தால் வேதாந்தங்களில் அகண்டார்த்தத் தன்மைக்கு அவகாசமெப்படியுண்டாகுமென்று கூறுகின்ருர்;—

### சுலோகம்

**नाखण्डवस्तुविषया वचसः प्रवृत्तिः**
**लोकेऽपि दृष्टिपथमापतिता कदाचित् ।**
**नानापदार्थघटनाविषयत्वहेतोः**
**दूरेत्यता श्रुतिशिरोवचनेषु तस्याः ॥ १०३ ॥**

### பதவுரை

**लोकेऽपि** - உலகத்தின் கண்ணும், அவனித் தேவதத்தன் என்பது முதலிய இடங்களில்

**अखण्डवस्तुविषया** – அகண்டார்த்தத்தை (அசம்பத்தார்த்தத்தை) விஷயஞ் செய்வதாக

**वचसः प्रवृत्तिः** – வாக்கியத்தின் பிரவிருத்தியானது

**दृष्टिपथम्** - திருஷ்டிமார்க்கத்தை

**कदाचित्** -ஓர்போதும்

**न आपतिता**–அடைவதின்றும்
(அதிலேதுவைக் கூறுகின்றார்)

**नानापदार्थघटना विषयत्वहेतोः** } வாக்கியத்திற்கு அபரியாய அநேக பதங்களால் உபஸ்திதமான அர்த்தங்களின் சம்பந்தத்தை விஷயமாகவுடைய தாந்தன்மை யுண்மையின்

அற்றேல் எப்படி பிராபாகரருடைய மதத்தில் உலகின்கண் லிங்லோட் (வியங்கோள்விடுதி) முதலிய விகுதிகளுக்கு அபூர்வமென்னும் நியோக வடிவார்த்தத்தையுடையதாந் தன்மையின்றேனுங் வேதத்தின் கண் அப்பொருளையுடையதாந் தன்மையுளதோ அப்படி ஈண்டும் இலௌகிக வாக்கியத்தின் கண் அகண்டார்த்தத் தன்மையின்றேனும் வைதிக வாக்கியத்தின் கண் அஃது உளதாகுக என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்:—

**श्रुतिशिरोवचनेषु**–வேதாந்த வாக்கியங்களில்

**तस्याः**—அகண்டவஸ்து விஷயகப் பிரவிருத்திக்கு

**दूरेत्यता**-வெகு தூரத்திலிருக்குந் தன்மையாம், அதாவது மகா வாக்கியங்களில் அகண்ட விஷயகப் பிரவிருத்தியின்றும்

தூரத்திற் செல்கின்றது என்பது தூரேத்யமென்னும் சொல்லிற்குப் பொருளாம். அதாவது அகண்டவஸ்து விஷயகப் பிரவிருத்திக்கு சுருதியினின்றும் வெகுதூரத்திற் கமனமாம். இனி சொல்லப்படுந் தோஷத்தாலும் கூறிய லிங் முதலிய திருஷ்டாந்தத்தினங்கீகார மின்மையாலும் என்பது கருத்து. (103)

## அவதாரிகை

அற்றேல், அவன் இத்தேவதத்தன் என்பது முதலிய வாக்கியங்களுக்கு வேறு அர்த்தம் சம்பவியாமையால் அகண்டார்த்தத் தன்மையே பொருத்தமாம். என்னுஞ் சங்கைக்கு பதங்களின் முக்கிய விருத்தியால் அவ்வாக்கியமானது அகண்டப்பொருளைப் போதிப்பதா? அல்லது கௌணீவிருத்தியாலா? அல்லது லக்ஷணுவிருத்தியாலா? சர்வப் பிரகாரத்தாலும் அவ்வாக்கியமானது அகண்டார்த்தபோதகம் அன்றும் எனக் கூறுகின்றார் :—

## சுலோகம்

**आदाय मुख्यगुणलाक्षणिकप्रवृत्ती-**
**रर्थं समर्पयति शब्द इति प्रसिद्धम् ।**
**आस्वेष नान्यतमयाऽपि वदत्यखण्डं**
**शब्दान्तरात्तविषयादधिकार्थवृत्तेः ॥ १०४ ॥**

## பதவுரை

**शब्दः**—பதமானது

**मुख्यगुणलाक्षणिकप्रवृत्तीः**—சக்தியும், கௌணியும், லக்ஷணையும் ஆகிய விருத்திகளை

**आदाय**—கிரஹித்துக்கொண்டு

**अर्थं समर्पयति इति**—அர்த்தத்தைப் போதிக்கின்றது என்பது

**प्रसिद्धम्**—உலகின் கண் பிரசித்தமாம்

[இவ்வாறுக அதனுலென்னே என்னும் சங்கைக்குக் கூறுகின்ருர்]

**एषः**—இந்தப் பதமானது

**आसु**—சக்தி முதலிய இம்மூவித விருத்திகளுள்

**अन्यतमया अपि**—ஏதேனும் ஓர் விருத்தியாலும்

**अखण्डं न वदति**—அகண்ட வஸ்துவைப் பிரதிபாதிக்கின்றதில்லை

[அதில் ஏதுவைக் கூறுகின்ருர்]

**शब्दान्तरात्तविषयात्**—அந்நிய பதத்தால் போதிக்கப்பட்ட அர்த்தத்தில் நின்றும்

**अधिकार्थवृत्तेः**—அதிகார்த்தத்தைப் போதிப்பதாயிருத்தலின்

## *விசேஷவுரை*

அவன் இத் தேவதத்தன் என்னும் வாக்கியமானது அகண்டார்த்தத்தைப் போதிக்கின்றதில்லை. அவன் என்னும் பதத்தால் அறியப்பட்ட விஷயத்தில் நின்றும் இவன் என்னும் பதமானது அதிகார்த்தத்தைப் போதிப்பதாயிருத்தலின் யாண்டு ஒரு பதத்தால் போதிக்கப்பட்ட விஷயத்தில் நின்றும் அந்நிய பதத்தால் போதிக்கப்பட்ட விஷயம் அதிக (விலக்ஷண)மன்ருே ஆண்டே அகண்டார்த்தமாம். பிரகிருத வாக்கியத்தில் ஒரு பதத்தின் அர்த்தத்தில் நின்றும் மற்ருேர் பதத்தின் அர்த்தத்தினை விலக்ஷணம் என உடன்படாவிடின் பத சமுதாய வடிவ வாக்கியத்தன்மையே பொருந்தாது என்பது கருத்து. (104)

## *அவதாரிகை*

வாக்கியத் தன்மையின் பொருந்தாமையினையே வெளிப்படுத்துகின்ருர் :—

## *சுலோகம்*

**आधिक्यमुत्सृजति शब्दगणो निजेऽर्थे**
**शब्दान्तरात्तविषयादिति मन्यमानाः ।**
**वाक्यत्वमेव पदजातगतं विहन्यु-**
**र्न ह्यस्ति हस्तकरशब्दगतं तदेषाम् ॥ १०५ ॥**

## பதவுரை

**शब्दगणः**—வாக்கியத்தின் கண் பிரயோகிக்கப்பட்ட பதசமுதாயம்

**शब्दान्तरात्तविषयात्**—மற்றோர் பதத்தால் கிரகிக்கப்பட்ட அர்த்தத்தில் நின்றும்

**निजे अर्थे**—தனது விஷயத்தில்

**आधिक्यं उत्सृजति**—அந்ய பதத்தால் கிரகிக்கப்படாத விசேஷத்தினை பரித்தியாகம் செய்கின்றது அதாவது போதிக்கின்றதில்லை

**इति मन्यमानाः**—என்று கருதுகின்ற வேதாந்திகள்

**पदजातगतम्**—பத சமுதாயத்தின் கண்ணுள்ள

**वाक्यत्वं एव**—வாக்கியத்தன்மையினையே

**विहन्युः**—நாசம் செய்பவராவார்

[வாக்கியத்தன்மையின் விநாசத்தில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்]

**एषाम्**—வாதிகளுக்கு அல்லது சப்தங்களுக்கு

**हस्तकरशब्दगतम्**—அஸ்தம், கரம், பாணி என்னும் பர்யாய சப்தங்களின் கண்

**तत्**—வாக்கியத்தன்மை

**नहि अस्ति**—இன்றாதலின்

## விசேஷவுரை

வாக்கியத்தின் கண் பிரயோகிக்கப்பட்ட பதங்கள் சக்தி முதலிய மூவித விருத்திகளுள் ஏதேனும் ஒரு விருத்தியினால் வெவ்வேறு பொருள் விசேஷத்தைப் பிரதிபாதிக்காது, மற்றோர் ஒரு பொருளையே பிரதிபாதிக்கும் எனின் அப்போது அவைகளுக்கு ஹஸ்தம் முதலிய பத சமுதாயம் போன்று பரியாயத் தன்மை அடைவுறுதலின் வாக்கியத் தன்மை சித்தியாது. அபர்யாய பதங்களின் சமூகத்திற்கே வாக்கியத் தன்மையுண்மையின். (105)

## அவதாரிகை

மேலும், பிரம்மத்திற்கு வேதாந்த ஜன்னிய ஞானவிஷயத் தன்மையையங்கீகரிக்கின் சித்தாந்தத்திற்கு ஹானியாம் எனக் கூறுகின்றார் :—

சங். 28

### சுலோகம்

किं च स्वयंप्रभमलुप्तचिदेकरूपं
सर्वप्रमाणविषयाद्बहिरभ्युपेत्य ।
आत्मानमात्मनि च शास्त्रमुदाहरन्तः
सिद्धान्तमभ्युपगतं परिपीडयन्ति ॥ १०६ ॥

### பதவுரை

**किं च**-மற்றும்
**स्वयंप्रभम्**—சுவப்பிரகாச சொரூபமும்
**अलुप्तचिदेकरूपम्**—நித்திய சைதன்னிய ஏகரூபமும் ஆன
**आत्मानम्**—கூடஸ்த ஆன்மாவை
**सर्वप्रमाणविषयात्**—சர்வப்பிரமாணங்களின் விஷயத்தில் நின்றும்
**बहिः अभ्युपेत्य**—புறம்பாக அங்கீகரித்து அதாவது அப்பிரமேயம் என அங்கீகரித்து
**आत्मनि च**-மீண்டும் ஆன்மாவின்கண்
**शास्त्रं उदाहरन्तः**-சாஸ்திரப்பிரமாணத்தைக் கூறுகின்றவர்களான வேதாந்திகள்
**अभ्युपगतं सिद्धान्तं**—தம்மால் அங்கீகரிக்கப்பட்ட சித்தாந்தத்தை
**परिपीडयन्ति**-துன்புறுத்துகிறார்கள்.

### விசேஷவுரை

நித்திய சைதன்னிய ஏக ரூபமென்பது சொப்பிரகாசத்தன்மையில் ஏதுவாம். [இதனாலேயே ஆன்மா சருவப்பிரமாணத்திற்கும் அவிஷயமாம் எனக்கூறுகின்றார்] சருவப்பிரமாண என. இதனாலேயே "அறியப்பட்டதினின்றும் ஆன்மா வேறு" என்னும் சுருதியும் பொருந்துகின்றது. அவ்வாறாயின் (அதாவது ஆன்மாவை பிரமேயத்தினின்றும் வேறு என சுருதி கூறுங்கால்) அப்பிரமேயமாக அதனையுடன்படல் உசிதமேயாமென்னுஞ்சங்கைக்கு இவ்வாறாயின் அப்பிரமேய ஆன்மாவிற்கு வேதாந்த ஜன்னிய பிரமை விஷயத்தன்மைச் சித்தியாது என்னுமபிப்பிராயத்தை மனதில் வைத்துக்கொண்டு விபக்ஷத்தில் (வேதாந்தமேயத்தன்மையின்கண்) பாதகத்தைக் கூறுகின்றார் ஆன்மாவின்கண் என.

### அவதாரிகை

மற்றும் வேதாந்தங்களுக்கு பிரம்மத்தின்கண் பிரகாசத்தைச் செய்தல் முதலிய பிரயோஜனமின்மையின் பிரமாணத்தன்மையின்று மெனக்கூறுகின்றார்:—

### சுலோகம்

सर्वत्र वस्तुषु जडेष्वजडप्रकाशं
कुर्वत्प्रमाणमिति संप्रतिपन्नमेतत् ।
ब्रह्मात्मवस्त्वजडबोधवपुः कुतोऽस्मिन्
वेदान्तवाक्यजनिताऽजडसंविदन्या ॥ १०७ ॥

### பதவுரை

**सर्वत्र**—உலகில் எல்லாவிடங்களிலும்
**जडेषु वस्तुषु**—அஸ்வப்பிரகாச கடம் முதலிய சடபதார்த்தங்களில்
**अजडप्रकाशं**—சொயம்பிரகாசமாகிய விஷயஸ்புரணத்தை
**प्रमाणं**—பிரமாணமானது
**कुर्वत् इति**—செய்கின்றது என்னும்
**एतत्**—இது
**संप्रतिपन्नम्**—நன்றாக அறியப்பட்டுள்ளது.
**ब्रह्मात्मवस्तु**—பிரத்தியகபின்ன பிரம்மமானது
**अजडबोधवपुः**—சொப்பிரகாச ஞானவடிவமாம் (ஆதலின்)
**अस्मिन्**—இதன்கண்
**वेदान्तवाक्यजनिता**—வேதாந்த வாக்கியத்தாலுண்டாவதும்
**अन्या**—தன்னினும் பின்னமானதுமான
**अजडसंवित्**—சொப்பிரகாச ஞானமானது
**कुतः**—எப்படிச்சம்பவிக்கும்

### விசேஷவுரை

கடாதிகளுக்கு சடத்தன்மையுண்மையானும் தன்னாற் பிரகாசம் சம்பவியாமையானும் நேத்திரம் முதலானது கடாதியின்கண் பிரகாசத்தை

யுண்டுபண்ணுகின்றதாய் அதனது ஆநானம் முதலிய வியவகாரத்தில் உபயோகமாகின்றது ஆதலின் கடாதியின்கண் நேத்திராதிக்கு பிரமாணத் தன்மை பொருத்தமாம். பிரம்மான்மாவோ சொப்பிரகாச ஞானவடிவமாந் தன்மையால் தனது மகிமையாலேயே சித்தித்திருத்தலாலும் அதனினும் வேருக சொப்பிரகாச ஞானம் சம்பவியாமையாலும் அதன்கண் எதனை யுண்டுபண்ணி வேதாந்தங்கள் பிரமாணத்தன்மையையடையும் என்று கூறுகின்ருர் பிரத்தியக்பின்ன என. (107)

## அவதாரிகை

மேலும், வேதாந்த வாக்கியங்களுக்கு சித்தப்பிரம்மத்தின் கண் தாற்பரியமிருக்குமாயின் அவற்றிலுள்ள பதங்களுக்கு பரஸ்பரம் சம்பந்தமே சித்திக்காது கிரியாபதத்தோடேயே சித்தார்த்தபோதக பதங்களுக்கு அன்வயம் நியமமாதலினுலும் பிரம்மவாக்கியத்தின்கண் கிரியை சம்பவியாமையாலும் என்று கூறுகின்ருர் :—

## சுலோகம்

किंच क्रियापदमपेक्ष्य पदानि वाक्य-
भावेन सम्यगिह सङ्गतिमाप्नुवन्ति ।
नात्र क्रियापदमपेक्षितमामनन्ति
वाक्यं कुतो भवति वेदशिरस्तदानीम् ॥ १०८ ॥

## பதவுரை

किञ्च - மற்றும்

इह - இவ்வுலகின்கண்

पदानि—பதங்களானவை

क्रियापदम् -கிரியையைப் பிரதிபாதிக்கும் பதத்தினை

अपेक्ष्य—அபேக்ஷித்தே

वाक्यभावेन—வாக்கிய வடிவத்தால்

सम्यक् -நின்ருக்

सङ्गतिम् -அன்வ்யத்தை

आप्नुवन्ति–அடைகின்றன

அற்றேல் இலௌகிக வாக்கியத்திற் போன்று வேதாந்த வாக்கியத்தின் கண்ணும் (அசி) இருக்கின்றாய் (அஸ்மி) இருக்கின்றேன் என்பது முதலிய கிரியாபதமிருக்கின்றதெனின் அதற்குக் கூறுகின்றார்.

अत्र–வேதாந்தத்தின் கண்
अपेक्षितम्–நாம பதங்களாலபேக்ஷிக்கப்பட்ட
क्रियापदम्–கிரியையைப் பிரதிபாதிக்கும் பதத்தினை
न आमनन्ति–வேதாந்திகள் கூறுகின்றிலர்
तदानीम्–கிரியாபதமில்லாதபோது
वेदशिरः–வேதாந்தமானது
वाक्यम्–வாக்கியமாக
कुतो भवति–எப்படியாகும்

### விசேஷவுரை

வேதாந்தத்தில் அசி முதலிய கிரியாபதங்களை விவக்ஷிக்கப்பட்ட பொருளையுடையனவாக வேதாந்திகள் கூறுகின்றதில்லை. அசி முதலிய கிரியாபதங்களுக்கும் சின்மாத்திர பிரம்மத்தின் கண் தாற்பரியத்தினை யங்கீகரித்தலால் அசி முதலியவற்றிற்குக் கிரியாபதத்துவமின்றாம். சாத்திய அர்த்தத்தைப் பிரதிபாதிப்பதற்கே கிரியாபதத்துவமாமாதலின் அசி முதலிய பதத்தினை நிமித்தமாகக்கொண்டு பதங்களுக்கு அன்வயஞ் சித்திக்கின்றதில்லை என்பது பொருள். (108)

### அவதாரிகை

அவ்வாறாயின் அதாவது வேதாந்தங்களுக்கு வாக்கியத்துவம் பொருந்தாதாயின் பதவடிவமாக இருந்தே வேதாந்தபதங்கள் பிரம்மத்தைப் பற்றிவிக்குமெனின் அற்றன்றெனக் கூறுகின்றார் :—

### சுலோகம்

नापूर्वमर्थमुपलम्भयितुं पदानां
सामर्थ्यमस्ति परिहृत्य तु वाक्यभावम् ।

स्वार्थस्मृतिं हि जनयन्ति पदानि लोके
विज्ञातसंगतितया नतु कार्यमन्यत् ॥ १०९ ॥

*பதவுரை*

**वाक्यभावं परिहृत्य**–வாக்கியத்தன்மையினை விட்டு,

**पदानाम्** –கேவலபதங்களுக்கு

**अपूर्वम् अर्थम्** –நூதனப்பொருளாகிய சம்பந்தத்தை

**उपलम्भयितुम्** –அறிவித்தற்கு

**सामर्थ्यम्** –ஆற்றல்

**न तु अस्ति**–இன்றேயாம்

[எதனுல் சாமர்த்தியமில்லை எனின் ஆண்டுக் கூறுகின்ருர்]

**लोके**–உலகில் (விருத்த வியவகாரத்தின்கண்)

**पदानि**–பதங்கள்

**विज्ञातसंगतितया** – அறியப்பட்ட சக்தியினையுடையதாந்தன்மையால் (சத்திஞானவாயிலால்)

**स्वार्थस्मृतिं हि**–தத்தம் பொருளின் ஸ்மிருதியையே

**जनयन्ति**-உண்டுபண்ணுகின்றன

**अन्यत् कार्यम्**–அநுபவவடிவ காரியத்தினை

**न तु**–உண்டாக்குவதின்ரும்.

*விசேஷவுரை*

பதங்களானவை விருத்த வியவகாரத்தின்கண் தமது அர்த்தத்தில் கிரஹிக்கப்பட்ட சக்தியையுடைத்தானவைகளாகியே வாக்கியார்த்தத்தை வாக்கிய ரூபமாகவிருந்து அறிவிக்கின்றன எனக்கூறுதல் வேண்டும். அங்ஙனங்கூருக்கால் சக்தி ஞானமின்றிய புருஷருக்கும் வாக்கியத்தின் சிரவணகாலத்தில் வாக்கியார்த்தத்தின் அநுபவம் உண்டாதல்வேண்டும். இந்தப் பிரகாரம் பதங்கள் பதரூபத்தால் முன்பு அநுபவிக்கப்பட்ட தமது அர்த்தத்தின் ஸ்மிருதியினையே உண்டுபண்ணுகின்றன. அநுபவத்தை யுண்டுபண்ணுகிறதில்லை, அஞ்ஞாத அர்த்தத்

தன்மையின்மையின். பதங்களுக்கு வாக்கிய வடிவத்தாலேயே அஞ்ஞாத அர்த்தத்தைப் போதிக்கும் சக்தியுளது. விசிஷ்ட வடிவ அல்லது வைசிஷ்டிய வடிவ வாக்கியார்த்தத்திற்கு அஞ்ஞாதத்தன்மையிருத்தலின். வாக்கியத்தன்மையில்லாதபோது வேதாந்தங்களுக்கு அக்ஞாதார்த்தத்தை அறிவிக்கும் ஆற்றலின்றும் என்பது கருத்து. வைசிஷ்டியம்-சம்பந்தம்.

## அவதாரிகை

அவ்வாறாயின் வர்ணங்களுக்கே முன்பு அறியப்படாத அர்த்தத்தை யுடையதாந்தன்மையால் பிராமாண்யத்தின் பிராப்தியாம் எனின், ஆண்டுக் கூறுகின்றார் :—

## சுலோகம்

हित्वा न वाक्यपदते प्रतिपत्तिहेतु-
वेंदो भवेदिति कथश्चन वक्तुमीशः ।
कश्चित्कदाचिदपि तत्र कुतः श्रुतीनां
प्रामाण्यमात्मनि भवेदिति वर्णयन्ति ॥ ११० ॥

## பதவுரை

वेदः–வேதமானது
वाक्यपदते–வாக்கியத்தன்மையினையும் பதத்தன்மையினையும்
हित्वा–பரித்தியாகம் செய்து
कथश्चन–எவ்வாற்றானும் வர்ணரூபத்தானும்
प्रतिपत्तिहेतुः–சாப்தபோதத்தின் காரணம்
भवेत् इति–ஆகும் என்று
कश्चित् अपि–ஒருவனும்
कदाचित् –ஓர்போதும்
वक्तुम् –கூறுவதற்கு
न ईशः–சமர்த்தனன்று
तत्र–இவ்வாறாகும்போது=சுருதிகளுக்கு அர்த்த போதத்தன்மை இலதாய வழி

आत्मनि–ஆன்மாவின் கண்

श्रुतीनाम् –சுருதிகளுக்கு

प्रामाण्यम् –பிரமாணத்தன்மை

कुतः भवेत् –எவ்வாறு கூடும்

इति वर्णयन्ति–என்று கூறுதல் வேண்டும் என்று வேதாந்தியை வினவவேண்டுமென்பது பொருள். (அல்லது)

तत्र–இவ்வாறுகும்போது

आत्मनि–ஆன்மாவின்கண்

श्रुतीनां प्रामाण्यम् –சுருதிகளுக்குப் பிரமாணத்தன்மை

भवेत् इति –கூடும் என்று

वर्णयन्ति –யாதொன்றை வர்ணிக்கின்றனரோ அது

कुतः–எவ்வேதுவினுற்சித்திக்கும் ? சித்தியாதென்பது பொருள்.

## *விசேஷவுரை*

வர்ணமாத்திரத்தினுல் ஓரிடத்தும் அனுபவமின்ரும் என்பது கருத்து. (110)

## *அவதாரிகை*

மேலும் வேதாந்த வாக்கியத்திலுள்ள சத்தியம் ஞானம் முதலிய பதங்களுக்கு அநான்மாவின்கண் சாதி ஞானம் சம்பவிக்கின்றதில்லை. எதனுலெனின் ஆன்மாவினும் வேருகச்சத்தியாதி வடிவவஸ்து கிஞ்சித்துமின்ரும். ஆதலின், ஆன்மாவின் கண்ணும் சத்திய ஞானுதி பதங்களுக்குச் சக்தி ஞானமின்ரும். சக்தியைக் கிரஹிக்கின்ற பிரமாணங்களுக்கு ஆன்மாவின் கண் பிரவிர்த்தியுளதாயின் வேதாந்த வாக்கியம் அநுவாதகமாகும். ஆன்மாவின் கண் பிரமாணுந்தரத்தின் பிரவிருத்தியின்ருயின் அவ்வான்மாவின் கண் சத்து முதலிய சப்தத்திற்குச் சக்தி ஞானம் எவ்வாறுண்டாம். சத்தி ஞானமின்றி வேதாந்தங்களுக்கு ஆன்மாவின் கண் பிரமாணத்தன்மை தான் எவ்வாறு கூடும் என்று கூறுகின்ருர் :—

# வேதாந்தங்களுக்கு சித்தவஸ்து போதகத் தன்மையை ஆட்சேபித்தல்

சுலோகம்

किंच प्रमान्तरमिहाभ्युपयन्प्रतीचि
वेदान्तवाक्यमनुवादकमभ्युपेयात् ।
मानान्तरं यदि च नेच्छति शब्दशक्ते-
स्तत्र ग्रहः कथमिति प्रतिपादनीयम् ॥ १११ ॥

பதவுரை

किंच—மற்றும்
इह प्रतीचि—ஈண்டு பிரத்தியகான்மாவின் கண்
[சக்தி ஞானத்தின் பொருட்டு]
प्रमान्तरम् —வேறு பிரமாணத்தை
अभ्युपयन् —வேதாந்தியானவன் அங்கீகரிப்பானாயின்
वेदान्तवाक्यम् —சுருதி வாக்கியத்தினை
अनुवादकम् —அநுவாதகமாக
अभ्युपेयात् —அங்கீகரிப்பவனாவன்
मानान्तरम् —ஆன்மாவின்கண் வேறு பிரமாணத்தை
यदि च न इच्छति—அங்கீகரியான் ஆயின்
तत्र - பிரத்தியகான்மாவின் கண்
शब्दशक्तेः ग्रहः —சப்தத்திலுள்ள சக்தியின் ஞானமானது
कथं इति—எவ்வாறுண்டாம் என்று (உண்டாகும் விதத்தினை)
प्रतिपादनीयम् — பிரதிபாதிக்கத்தக்கது.

எவ்வாற்றானும் சக்தி ஞானம் கூடாதென்பது பொருள். (111)

## அவதாரிகை

இவ்வாறு வேதாந்தங்களுக்கு சித்தப்பிரமாணத்தைப்போதிக்குந் தன்மையையங்கீகரிக்கின் நதியின் கரையில் கனியிருக்கின்றது என்னும்

வாக்கியம் போன்று பிரமாணாந்தரத்தினபேக்ஷையுண்டாம் பிரமாணாந்தரமின்றாயினோ சத்தி ஞானம் சம்பவியாமையின் பிரம்மத்தின்கண் வேதாந்தங்களுக்குப் பிராமாண்யமின்றெனக் கூறப்பட்டது. இப்போது சித்த வஸ்துவின் ஞானத்தால் பிரவிருத்தி நிவிருத்தி சம்பவியாமையாலும் பிரவிருத்தி நிவிருத்தியின்றி சுகப் பிராப்தி துக்க நிவர்த்தி வடிவப் பிரயோஜனம் சம்பவியாமையாலும் பிரயோஜனமின்றி அத்தியயன விதியால் கிரகிக்கப்பட்ட வேதாந்தங்களுக்குப் பிராமாண்யம் பொருந்தாமையானும் சித்தவஸ்துவின்கண் வேதாந்தத்திற்குப் பிராமாண்யமின்றெனக் கூறுகின்றார் :—

## சுலோகம்

किञ्च प्रवृत्तिविनिवृत्तिविहीनवस्तु-
तत्वप्रतीतिजननान्न च किञ्चिदस्ति ।
पुंसः प्रयोजनमतोऽपि न तत्र मानं
वेदान्तवाक्यमिति युक्तिमदुच्यमानम् ॥ ११२ ॥

## பதவுரை

किञ्च–மற்றும்
प्रवृत्तिविनिवृत्तिविहीन–பிரவிருத்திநிவிருத்திக்கு அயோக்கியமான
वस्तुतत्व–ஆன்மதத்துவத்தின்
प्रतीतिजननात् –ஞானத்தையுண்டுபண்ணுதலால்
पुंसः –புருஷனுக்கு
किञ्चित् च प्रयोजनम् –அற்பமும் பிரயோஜனம்
न अस्ति–இன்றாம்
अतोऽपि–இக்காரணத்தானும்
तत्र–சித்தப்பிரம்மத்தின்கண்
वेदान्तवाक्यम् –சுருதி வாக்கியமானது
न मानम् –பிரமாணமின்றாம்
इति उच्यमानम् –என்று கூறுதல்
युक्तिमत् –யுத்தியோடு கூடியது.

## விசேஷவுரை

தள்ளத்தக்கதும் கொள்ளத்தக்கதுமான கலஞ்சபக்ஷணாதியின் கண்ணும் அக்கினிஹோத்திராதியின் கண்ணும் அனர்த்த சாதனத் தன்மை அர்த்தசாதனத்தன்மைகளின் ஞானத்தால் கலஞ்சபக்ஷணாதி யினின்றும் நிவர்த்தியும் அக்கினி ஹோத்திராதியின்கண் பிரவிருத்தியும் சம்பவிக்கின்றது ஆதலின் கலஞ்சத்தைப்புசிக்கலாகாது அக்கினி ஹோத்திரத்தைச்செய்க என்னும் விதிநிஷேத வாக்கியம் பிரயோஜன முடைய அர்த்தத்தின்கண் தாற்பரியமுடையது ஆன்ம தத்துவமோ நித்திய சித்தமாதலின் தள்ளத்தக்கதும் கொள்ளத்தக்கதுமன்றும் ஆதலின் அதன் ஞானத்தால் பிரவிருத்தியாதி சம்பவிக்கின்றதில்லை ஆதலின் ஆன்மதத்துவத்தைப் போதிக்கும் வேதாந்த வாக்கியத்தினத்தி யயனம் நிஷ்பிரயோஜனமேயாம். அங்ஙனம் கொள்ளுதலும் பொருந்தாது அத்தியயனவிதியால் கிரகிக்கப்பட்டமையின். உபேக்ஷை ஞானத்தால் வேதாந்தத்தினத்தியயனவிதி பயனுடையதாகின்றதில்லை ஆதலின் பிரம்மத்தின்கண் வேதத்திற்குப் பிராமாண்யம் பொருத்தமன்றும் மற்றோ விதிவாக்கியத்தோடு ஏக வாக்கியத்தன்மையால் பிராமாண்யமா மென்பது கருத்து. கலஞ்சா்=மாம்ஸம். (112)

## அவதாரிகை

மற்றும் அறியப்படாத பொருளையறிவிப்பது பிரமாணமாமென பிரமாணத்தின் சாமானியலக்ஷணத்தினை வேத வேத்தாக்கள் கூறு கின்றனர். விசேஷித்து வேதத்திற்கும் அவ்வாறே லக்ஷணங்கூறுதல் வேண்டும். "அஞ்ஞாத அர்த்தத்தின் கண்ணேயே சாஸ்திரம் பிர மாணமாம் என்பது பாதராயணருடைய மதம்" என சைமினிமகரிஷி யாற் கூறப்பட்டிருத்தலின் ஓர் பிரமாணத்தாலறியப்பட்ட அர்த்தத்தில் மற்றோர் பிரமாணத்தின் அபாவத்தை முன்னிட்டு உண்டாவதான அசத்துவசங்கையின்மையால் வேதத்திற்கு ஞாத அர்த்தத்தில் தாற்பரி யத்தைக் கற்பித்தல் சம்பவியாமையானும் தாற்பரியமின்றி சத்தமானது தனது அர்த்தத்தில் பிரமாணமாவதின்றும் எனக்கூறுகின்றார் :—

## சுலோகம்

अज्ञातमर्थमवबोधयतः प्रमायां
हेतुत्वमभ्युपगतं ननु वेदविद्भिः ।

**अज्ञातता च परमात्मनि दुर्निरूपा**
**विज्ञानमात्रवपुषीति न मानकृत्यम् ॥ ११३ ॥**

## பதவுரை

**अज्ञातम् अर्थम्** -அறியப்படாத பொருளை

**अवबोधयतः**-அறிவிக்கின்ற நேத்திரம் முதலிய கரணத்திற்கு

**प्रमायां हेतुत्वम्** -பிரமைஞானத்தின் காரணத்தன்மை

**वेदविद्भिः**-வேதத்தை யறிந்தவர்களால்

**अभ्युपगतं ननु**-அங்கீகரிக்கப்பட்டுள்ளது

[அதனால் சித்தித்தது என்னை என்னுமிடத்துக் கூறுகின்றார்]

**विज्ञानमात्रवपुषि**-சுவப்பிரகாச சைதன்னியவடிவ

**परमात्मनि**-பிரம்மத்தின் கண்

**अज्ञातता**-அறியப்படாத்தன்மை அதாவது அஞ்ஞான விஷயத் தன்மை

**दुर्निरूपा च**-நிரூபிக்கமுடியாததேயாம்

**इति**-ஆதலின்

**न मानकृत्यम्**-ஆன்மாவின் கண் வேதாந்தப் பிரமாணத்திற்குப் பிரயோஜனமற்பமுமின்றாம்

[நிரூபிக்க முடியாதென்பதில் ஏது சுவப்பிரகாச சைதன்னிய வடிவம் என்பது]

## விசேஷவுரை

சொப்பிரகாச சைதன்னியவடிவ ஆத்மாவின் கண் அஞ்ஞான முளதெனக்கூற முடியாது. பிரகாசப்பிரகாசமுள்ள சூரியனிடத்து இருள் சம்பவிக்கின்றதில்லையன்றோ? ஆதலால் அஞ்ஞாதார்த்தத்தைப் போதித்தல் வடிவ பிரமாண வியாபாரமின்மையின் ஆன்மாவின் கண் வேதாந்த வாக்கியங்களுக்குப் பிரமாணத்தன்மை சம்பவிப்பதின்று மென்பது கருத்து. (113)

## அவதாரிகை

அற்றேல். அக்ஞாதார்த்த ஞாபகத்துவமாகிய இந்த லக்ஷணம் பிரமாண சாமானியத்திற்கு லக்ஷணமன்று. தாரையாக ஏற்படும் ஞானங்களில் இரண்டாவது முதலிய ஞானங்களில் அஞ்ஞாதார்த்த ஞாபகத் தன்மை இன்மையின். மற்றோ எதார்த்த அநுபவம் பிரமையாம். அதன் கரணம் பிரமாணமாம். இது பிரமாண சாமானியத்தின் லக்ஷணமாம், எனின், அற்றன்று. தாராவாகிக புத்தியையுடன்படினும் அதன் விஷயம் முதல் ஞானத்தாலேயே நிச்சயிக்கப்பட்டமையின். அதன் விஷயத்தில் அசத்வ சங்கை உதயமாகாமையின் இரண்டாவது முதலிய ஞானங்களுக்குத் தமது விஷயத்தில் அசத்துவ சங்கையை நிவர்த்திக்குந் தன்மையின்றாம். அது இன்றாகவே பிரமேயத்தின் சத்துவப்பிரயோஜக பிராமாண்யம் இன்மையின் இரண்டாவது முதலிய ஞானங்களில் லக்ஷணஞ்செல்லாமை தோஷமன்றாதலின். யதார்த்தானுபவத்துவம் பிரமாத்துவம் என்னும் லக்ஷணம் சரியன்று. சுத்திரஜதம் முதலிய பிராந்தி ஞானத்திலும் செல்லுதலால். அபாதிதார்த்தக்ஞானம் பிரமை யென்பதும் சரியன்று, பாதமானது பாத்தியாபாவத்தின் பிரமை வடிவமாதலால் ஆன்மாசிரய தோஷம் வருதலால். ஆதலால் அக்ஞாதார்த்த போதகத் தன்மையே பரீக்ஷகருக்குச் சம்மதமான பிரமாணத்தின் லக்ஷணமாம். அத்தன்மைய பிரமாணத்துவம் ஆன்மாவின் கண் வேதாந்த வாக்கியங்களுக்குச் சம்பவியாது அஞ்ஞானமின்மையின் என்று கூறப்பட்டது. ஆன்மாவின் கண் அஞ்ஞானத்தையங்கீகரிக்கின் அதன் சொப்பிரகாசத்தன்மைக்குக் கேடுண்டாம். ஆன்ம தத்துவமானது சொப்பிரகாசம் அடியுத்தம் (அஞ்ஞானத்தோடு கூடியது) என்னும் வியாகாதத்தோடுகூடிய இவ்விரு சொனங்களுக்கும் பிரமாணத்தன்மை சம்பவிக்கின்றதில்லை என்த்திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார் :—

## சுலோகம்

बोधस्वभावकमबुद्धमनुष्णमुष्णं
शीतस्वभावकमशीतमितीदृशानि ।
कः श्रद्दधीत पुरुषो वचनानि तस्मात्
ब्रह्माप्रबुद्धमिति वाक्यमयुक्तमाहुः ॥ ११४ ॥

### பதவுரை

**बोधस्वभावकम्** –ஞானஸ்வரூப பிரம்மம்

**अबुद्धम्** –அஞ்ஞானத்தோடு கூடியது

**अनुष्णम् उष्णम्**–உஷ்ணமுடைய வன்னி உஷ்ணமின்றியது

**शीतस्वभावकम्** –குளிர்ச்சியினையுடைய ஜலம்

**अशीतम्** –குளிர்ச்சியின்றியது

**इति ईदृशानि**–என்னும் இப்படிப்பட்ட

**वचनानि**–வாக்கியங்களில்

**कः पुरुषः**–எந்தப் புருஷன்

**श्रद्धीत**–விஸ்வாசத்தைச் செய்வன்

**तस्मात्** –ஆதலால்

**ब्रह्म अप्रबुद्धम् इति**–ஸ்வப்பிரகாச பிரம்மம் அஞ்ஞானத்தோடு கூடியது என

**अयुक्तं वाक्यम्**–பொருத்தமின்றிய வாக்கியத்தினை

**आहुः**–வேதாந்திகள் கூறுகின்றனர் (114)

## ஆன்மாவில் அஞ்ஞானமின்மையால் பிரமாணங்களின் அப்ரவிருத்தியை கூறுதல்

### அவதாரிகை

அற்றேல், அஞ்ஞானவிசிட்ட சேதனம் பிரமாணத்திற்கு விஷயமன்ரும். அவ்வஞ்ஞானத்திற்கும் பிரமாண விஷயத்தன்மையின் அடைவு வருதலினாலும், அஞ்ஞானத்திற்குப் பிரமாணத்தால் நிவிருத்தி பொருந்தாமையானும்.

அஞ்ஞான உபலக்ஷித சேதனமும் பிரமாணத்திற்கு விஷயமன்ரும் வஸ்துமாத்திரத்தில் பிரமாணத்திற்குப் பிராப்தி வருதலின் அஞ்ஞான மில்லாவிடினும் அனுபபத்தியின்மையின் என்ருசங்கித்து அஞ்ஞான மானது சேதனத்தின் கண் விசேஷணமுமன்று உபலக்ஷணமுமன்று மற்ருே உபாதியாம் உபாதியும் ஈகாரியமுள்ள பர்யந்தமு மிருப்பதாய்க்

காரியத்திற் பிரவேசியாதது. கர்ணசஷ்குலி சுரோத்திரத்தன்மைக்கு உபாதியாவது போன்று. ஈண்டு காரியமென்பது விதேயத்திற்காம். இவ்வாறு கர்ணசஷ்குலி இலதாயவழி சுரோத்திரத்தன்மை சம்பவியாதது போன்று, அஞ்ஞானம் இலதாயவழி வஸ்துவிற்குப் பிரமேயத் தன்மை சம்பவியாது என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார் :—

### சுலோகம்

**उपाध्यभावे न भवेदुपाधिमत्तटस्थमज्ञानमुपाधिरिष्यते ।**
**प्रमाणबुद्धेर्न तदात्मवस्तुनि स्वयंप्रकाशे न ततोऽत्र मानधीः ॥**

### பதவுரை

**उपाध्यभावे** - கர்ணசஷ்குலி முதலிய உபாதியில்லாதபோது

**उपाधिमत्** - கர்ணசஷ்குல்யாதி உபாதியினதீனமான சுரோத்திரத் தன்மை முதலிய உபாதியினையுடையது

**न भवेत्** – சம்பவிக்கின்றதில்லை. (இது உபயவாதிசித்தமாம்) (வேதாந்திகளின் மதத்தில்)

**प्रमाणबुद्धेः**–பிரமாண ஜன்னியஞானத்திற்கு

**तटस्थं अज्ञानम्** –சேதனவடிவ பிரமேயத்தில் நின்றும் பஹிர் பூதமான அஞ்ஞானமானது

**उपाधिः इष्यते**–ஆன்மாவில் உபாதியாக அங்கீகரிக்கப்படுகின்றது

சேதனவடிவ பிரமேயத்தினின்றும் பஹிர்பூதமானது—தடஸ்தம்

அது உபலக்ஷணமாமாலோ என்னும் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு உபாதியெனக் கூறுகின்றார். ஈண்டு தடஸ்தம் என்பதனுலே விசேஷணத்தில் நின்றும் உபாதியின் கண் விலக்ஷணத்தன்மை தெரிசிப்பிக்கப்பட்டது. ஏனெனின் விசேஷணமானது தடஸ்தமாகின்றதில்லை. விதேயத்தின் அன்வயியேயாகின்றது. ஆதலின் உபாதியின் அபாவம் என்பதாதியினுல் உபலக்ஷணத்தில் நின்றும் உபாதியின் கண் விலக்ஷணத்தன்மை தெரிசிப்பிக்கப்பட்டது ஏனெனில் உபலக்ஷணமில்லாத காலத்தும் உபலக்ஷிதத்தன்மையிருக்கின்றது. உபாதியில்லாத போது உபசிதத் தன்மையின்றும். ஆதலின் எனக்

காண்க. பிரமாணஜன்னிய ஞானத்திற்கு அஞ்ஞானம் உபாதியாகி அங்கீகரிக்கப்படுகின்றது எனக்கூட்டுக. வேதாந்தி அஞ்ஞானத்திற்கு உபாதித்தன்மையை அங்கீகரித்தபோது பலிதத்தைக் கூறுகின்றார்:

**स्वयंप्रकाशे आत्मवस्तुनि**—சுவயம் பிரகாச ஆன்மாவின் கண்

**तत्**—அஞ்ஞானவடிவ உபாதியானது

**न**—சம்பவிக்கின்றதில்லை

**ततः**—அக் காரணத்தால்

**अत्र**—ஆன்மாவின் கண்

**न मानधीः**—பிரமாண ஜன்னிய புத்தி பிரவர்த்திப்பதின்றும்

## *விசேஷவுரை*

அஞ்ஞானமானது சுயம் பிரகாச ஆன்மாவின் கண் தடஸ்தத் தன்மையாலும் உபாதியாகப் பொருந்துகின்றதில்லை யென்பது பொருள் யாதொரு காரணத்தினுல் ஆன்மாவின் கண் இங்ஙனம் அஞ்ஞானம் சம்பவிக்கிறதில்லையோ அக்காரணத்தினுல் ஆத்மாவின் கண் பிரமாண ஜன்னிய புத்தி சம்பாவனை செய்யப்படுவதின்று. என்பது சங்கையின் உபசம்மாரமாம். **(115)**

## *அவதாரிகை*

மற்றும் அத்வைத பிரம்மவாதியினுல் வேதாந்தார்த்தத்தை அறிப வனுன பிரமாதாவும் வேதாந்தங்களாகிய பிரமாணமும் அதனை உபதேசிப் பவரான குருவும் உபதேசத்திற்கு உபகரணமான யுக்தி முதலியதும் அங்கீகரிக்கப்படுகின்றதா? அல்லது இன்ரு? முதற்பக்ஷத்தில் வியாகாத மாம். இரண்டாவது பக்ஷத்தில் பிரமேயத்தின் சித்தியின்றும். இவ்வாறு ஸொப்பிரகாசப் பிரம்மம் தன்னினும் வேருன பிரமாணத்தால் போத்திய மாம் என்பதும் பிரமாண விருத்தமாம் எனக்கூறுகின்ருர் :—

## *சுலோகம்*

**अद्वैतमात्मपदमाहुरनन्यमानं**
**द्वैतं प्रमाणमिह च प्रतिपादयन्ति ।**

**वाक्ये निजे पदविरोधमनीक्षमाणाः**
**पाण्डित्यमप्रतिहतं प्रतिलभ्य धीराः ॥ ११६ ॥**

## பதவுரை

**आत्मपदम्** –வேதாந்திகள் ஆன்மசொரூபத்தினை
**अद्वैतम्** -சஜாதீயம் முதலிய துவைதமற்றதாகவும்
**अनन्यमानम्** –பிரமாணத்திற்கு அவிஷயமெனவும்
**आहुः**–கூறுகின்றனர்
**इह च**–மறுபடியும் ஆன்மாவின் கண்
**द्वैतम्** –பிரமாதா முதலிய துவைதத்தினையும்
**प्रमाणम्** –வேதாந்த வாக்கியமாகிய பிரமாணத்தினையும்
**प्रतिपादयन्ति** –கூறுகின்றார்கள்
**अप्रतिहतं पाण्डित्यम्** –தடையற்ற வித்துவத்துவத்தை
**प्रतिलभ्य**–அடைந்து
**धीराः**–தைரியசாலிகளான வேதாந்திகள்
**निजे वाक्ये**-தமது வாக்கியத்தின் கண்
**पदविरोधम्** –அத்வைதம் துவைதம் அப்பிரமேயம் பிரமேயம் என்பது முதலிய பதவிரோதத்தினை
**अनीक्षमाणाः**–பாராதவர்களாயிருக்கின்றனர். இது மகத்தான ஆச்சரியமாம்

பிரமாணம்=பிரமிதி சாதனம், வித்துவத்தன்மை என்பதாதியால் வேதாந்தியைப் பரிகசித்தனன். (116)

## அவதாரிகை

அற்றேல் பிரமாதா முதலிய பேதமனைத்துமுள்ளதேயாம் இவ்வாறு கொள்வதனுல் அத்துவிதத்திற்குக் குறைவுமின்ரும். அத்துவிதப் பிரம்மமே சருவப்பிரபஞ்ச வடிவமாகப் பரிணமித்திருத்தலால் பிரமாதா முதலிய துவைதப்பிரபஞ்சமனைத்தும் உபாதானப்பிரம்மத்தோடு அபின்னமாதலின் என்றிவ்வாறு கூறுகின்றவனும் ஔபத்தமத பக்ஷபாதியுமான வேதாந்தி ஏகதேசியைக் குறித்துக் கூறுகின்ருர் :—

## சுலோகம்

मातृप्रमाणमितिमेयविभागभिन्नं
ब्रह्मैव चेद् भवति तत्र च वर्णयामः ।
कूटस्थताऽपहतिरेकरसत्वहानिः
शाक्यैश्च सन्धिरिति दूषणमन्यदत्र ॥ ११७ ॥

## பதவுரை

**ब्रह्म एव**—பிரம்மமே

**मातृप्रमाणमिति**—பிரமாதா பிரமாணம் பிரமை

**मेयविभागभिन्नम्**—பிரமேயம் என்னும் வேற்றுமையால் வெவ்வேருக

**भवति चेत्**—பரிணமித்து இருக்குமாயின்

**तत्र च**—அதன் கண்ணும்

**दूषणं वर्णयामः**—தூஷணத்தை வருணிக்கின்ருேம் (அத்தூஷணமாவது)

**कूटस्थतापहतिः**-ஒரு தூஷணம் பிரம்மத்தின் நிருவிகாரத் தன்மைக்கு விநாசமாம்

**एकरसत्वहानिः**—இரண்டாவது தூஷணம் பிரம்மத்தின் ஏகரசத் தன்மைக்கு விநாசமாம்

**शाक्यैः सन्धिः इति**—மூன்ருவது தூஷணம் பௌத்தரோடு சந்தி செய்யப்பட்டதாகும்

**अत्र अन्यत् च**—இந்தப் பக்ஷத்தில் வேறு தூஷணமுமுளது, அதாவது அத்துவிதவஸ்துவில் பேதாபேத விரோதமுமாம்

## விசேஷவுரை

நிருவிகாரப் பிரம்மத்திற்கு பிரமாதா முதலிய விகாரத்தையங்கீகரிக்கின் நிருவிகாரத்தைப் போதிக்கும் சுருதிக்கு விரோதமாம். இவ்வாறு பிரம்மத்திற்கு அநேகான்மகப் பிரபஞ்சத்தோடு அபேதத்தையங்கீகரிக்கின் விஞ்ஞான கனமே என்பது முதலிய சுருதியாலறியப்பட்ட ஏகரசத் தன்மைக்குக் குறைவு உண்டாம் இவ்வாறு ஞானவடிவப் பிரம்மத்திற்கு

தன்னால் விளக்கப்படும் பிரபஞ்சவடிவத்தையுடன்படின் சாக்கிய ரென்னும் விஞ்ஞானவாதியரோடு சந்திசெய்யப்பட்டதாகும் அவர் மதத்திற் பிரவேசத்தினுபத்தியாமென்பது பொருள். அதன்கண்ணும் என்ற உம்மையால் தெரிசிப்பிக்கப்பட்ட வேறு தூஷணத்தையுங் கூறுகின்றார் இந்தப்பக்ஷத்திலென. ஏககாலத்தில் ஏகாதிகரணத்தின்கண் பேதாபேதத்திற்கு விரோதமிருத்தலால் என்பது பொருள். இத்தன்மைய தூஷணங்களிருத்தலின் பிரம்மத்தின் பரிணமபக்ஷம் சரியன்றாம்,. சந்தி—உறவு. (117)

## பிரமாதா முதலியவை கல்பிதமானதால் பிரஹ்மத்தில் பிரமாணஸம்பவம்

### அவதாரிகை

அற்றேல் பிரமாதா முதலிய விபாகம் சத்தியமன்றாம் எதனாற்கூறிய தூஷணமுண்டாம் மற்றே திருசியமாதலால் சுத்தி ரஜதம்போன்று பிரம்மத்தின்கண் அஞ்ஞான கற்பிதமாம் ஆதலின் யாதொரு தோஷமுமின்றாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார் :—

### சுலோகம்

अज्ञानकल्पितमनिर्वचनीयमिष्टं
मात्रादिमानफलपर्यवसानमेतत् ।
इत्युच्यते यदि तदा परमात्मनोपि
मेयत्वतो भवति कल्पितताप्रसङ्गः ॥ ११८ ॥

### பதவுரை

**मात्रादि**–பிரமாதா முதலாக

**मानफलपर्यवसानम्** – பிரமாணத்தின் பயனாகிய பிரமிதிபர்யந்தமாகிய

**एतत्** – சர்வப்பிரபஞ்சமும்

**अज्ञानकल्पितम्** – அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்டதாம்

(அற்றேல், அவ்வஞ்ஞான கற்பிதமும் சத்தியமாயின் முற்கூறிய தோஷம் எவ்வாறின்றும், என்னுமிடத்துக் கூறுகின்றார்)

**अनिर्वचनीयम्** – அஃது அநிர்வசனீயமாக

**इष्टम्** – எம்மால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது

**इति यदि उच्यते** – ஆதலின் கூறியதோஷமின்றும் என்று இவ்வாறு கூறப்படுமாயின்

**तदा**–அப்போது

**परमात्मनोऽपि**–பிரம்மத்திற்கும்

**मेयत्वतः**–பிரமேயத்தன்மையுண்மையால்

**कल्पितताप्रसंगः**–கற்பிதத்தன்மையினுடைத்தி

**भवति**–உண்டாகின்றது.

திருசியத்தன்மையால் பிரமாதா முதலியவற்றிற்குக் கற்பிதத் தன்மையையங்கீகரிக்கின் பிரம்மத்திற்கும் கற்பிதத்தன்மை பிராப்தியாம். அதற்கும் வேதாந்த வேத்தியத்தன்மையுண்மையால் திருசியத்தன்மை யுண்மையின் என்பது பொருள். (118)

## அவதாரிகை

அற்றேல், பிரம்மத்திற்குத் திருசியத்தன்மையின்றும் சொப் பிரகாசத் தன்மையுண்மையின் எனின், அப்போது சொப்பிரகாசத் தன்மையினேயே வேதாந்த வேத்யமுமாகாது. அதிருசிய பதார்த்தத்தில் பிரமாண விஷயத்தன்மை பொருந்தாமையின் என்று கூறுகின்றார்:—

## சுலோகம்

**ब्रह्म प्रमेयमथ नेष्टमिह प्रमाणं**
**वेदान्तवाक्यमिति पक्षपराहतिर्वः ।**
**न ह्यप्रमेयमवबोधयदस्ति मानं**
**नादाह्यदाहक इति प्रथितः कृशानुः ॥ ११९ ॥**

## பதவுரை

**ब्रह्म प्रमेयम्**–பரமான்மா பிரமாணத்திற்கு விஷயமாம் என்பது

**अथ न इष्टम्**–எமக்குச் சம்மதமின்றும் எனக் கூறுவீராயின்

**इह**-பிரம்மத்தின் கண்

**वेदान्तवाक्यम्** -சுருதி வாக்கியமானது

**प्रमाणं इति**-பிரமாணமாக விருக்கின்றது என்னும்

**वः**-உங்களுடைய

**पक्षपरादृतिः**-பக்ஷத்திற்குக் கேடுண்டாம் (வேதாந்த வாக்கியம் பிரம்மத்தின்கண் பிரமாணமாம் என்னும் பக்ஷத்தின் கேட்டினையே திருஷ்டாந்த சகிதமாக வெளிப்படுத்துகின்றார்)

**कृशानुः**-அக்னியானது

**अदाह्यदाहकः इति**-தகிக்கத்தகாத ஆகாசாதிகளைத் தகிக்கின்றதென்பது

**न प्रथितः**-பிரசித்தமின்றும், அதுபோல்

**मानम्** - பிரமாணமானது

**अप्रमेयम्** - பிரமைக்கு விஷயமாகாததனை

**अवबोधयत्** - அறிவிக்கின்றதாய்

**न हि अस्ति**-பிரசித்தம் இன்றும், ஆதலின் (119)

## அவதாரிகை

அஞ்ஞானத்தாற் கற்பிதமாய் அநிர்வசநீயமாய் சமஸ்தப் பிரபஞ்சமும் இருக்கின்றது. என்ற இடத்தில் பிரமாதா முதலிய துவைதப் பிரபஞ்சத்திற்கு கூறப்பட்ட அநிர்வசநீயத்தன்மையை அங்கீகரித்து பிரம்மத்திற்கும் அநிர்வசனீயத்தின் ப்ராப்தியாமெனத்தூஷிக்கப்பட்டது. இப்போது, அவ்வனிர்வசனீயத் தன்மையே பிரபஞ்சத்தின்கண் அசித்தம் எனக்கூறுகின்றார் :—

### சுலோகம்

किं चाप्रसिद्धमिदमत्र जगत्त्रयेऽपि
स्वाज्ञानकल्पितमनिर्वचनीयमेकम् ।
निःशेषतीर्थदृगुदीरिततन्त्रमार्गे
सिद्धे यतः सदसती सकलेऽपि तन्त्रे ॥ १२० ॥

## பதவுரை

**किं च अत्र**-மற்றும் ஈண்டு
**जगत्त्रये अपि**-மூவுலகின் கண்ணும்
**स्व अज्ञानकल्पितम्**-ஆன்மாவின் அஞ்ஞானத்தாற் கற்பிக்கப் பட்டதாய்
**अनिर्वचनीयम्**-சதசத்விலக்ஷணமாய்
**एकं इदम्**-ஒரு வஸ்துவாயினும்
**अप्रसिद्धम्**-பிரசித்தமின்றும்

அற்றேல் உலகின்கண் அப்பிரசித்தமாயினும் வைசேஷிக சாஸ் திரத்தின்கண் விசேஷபதார்த்தம் அங்கீகரிக்கப்பட்டிருப்பது போன்று ஏதேனும் ஒரு சாஸ்திரத்தின் கண் அநிர்வசனீயபதார்த்தம் சித்தமாம் எனின் அற்றன்றெனக் கூறுகின்றார்.

**निःशेषतीर्थदृक्**-சர்வசாஸ்திரத்தினையுமுணர்ந்த பெரியோரால்
**उदीरिततन्त्रमार्गे**-கூறப்பட்ட சாஸ்திரார்த்தத்தின் ஞானசாதன மாயுள்ள
**सकले अपि तन्त्रे**-வைசேஷிகம் முதலிய சகல சாஸ்திரத்தின் கண்ணும்
**सदसती**-சத்தும் அசத்து மாகிய இரு பதார்த்தங்களே
**यतः सिद्धे**-சித்தித்துள்ளன அக்காரணத்தால்

## விசேஷவுரை

வைசேஷிகர் முதலியோரால் தமது சாஸ்திரத்தின் கண் சத்துமசத்து மாகிய இரண்டு வஸ்துவே நிரூபிக்கப்பட்டன. அவ்விரண்டினும் வேறாக யாதொன்றும் நிரூபிக்கப்பட வில்லை. விசேஷபதார்த்தமோ உலகின் கண் அப்பிரசித்தமாயினும் பிரமாண பலத்தால் அவரால் அங்கீகரிக்கப் பட்டுள்ளது. ஆதலின் பிராமாணிக விசேஷபதார்த்தம் போன்று அப் பிராமாணிக அநிர்வசனீய பதார்த்தத்தினை யங்கீகரித்தல் உசிதமன் றென்பது கருத்து. தந்தரிக்கப்படுகின்றது=பிரதிபாதிக்கப்படுகின்றது. என்னும் கருமவியுற்பத்தியால் தந்திரம் = சாஸ்திரார்த்தமாம், கரணவி யுற்பத்தியால் = சாஸ்திரமாம் விசேஷபதார்த்தத்தின் கண் அநுமானம் பிரமாணமாம் அஃதாமாறு பரமாணுவின் பேதம் கிஞ்சித்லிங்கத்தால்

ஞாப்யமாம் பேதமாவதால், கடபடபேதம் போன்று கடபட பேதத்தின் கண் பேதத்தன்மை வடிவரது இருக்கின்றது, கடபடத்தின் கண்ணுள்ள அசாதாரண தரும வடிவலிங்கத்தால் ஞாப்யத்தன்மை வடிவசாத்தியமு மிருக்கின்றது. இவ்வாறு பரமாணுக்களின் பரஸ்பர பேதத்தின் கண் பேதத்தன்மை வடிவ ஏது இருக்கின்றது. இதனாலேயே அப்பேதத்தின் கண் கிஞ்சித் அசாதாரண தருமவடிவலிங்கத்தால் போத்தியத்தன்மை யங்கீகரிக்கத்தக்கதாம் அவ்வசாதாரணதருமந்தான் தன்னையும் பிறவற்றையும் வேறுபடுத்துகின்ற விசேஷமெனப்பெயரிய பதார்த்தமாம்.

## அவதாரிகை

அற்றேல் வைசேஷிகர் முதலிய வித்வான்களால் அஞ்ஞானத்தை யங்கீகரியாமையின் அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட அநிர்வசனீய பதார்த்தமும் அங்கீகரிக்கப்படவில்லை அத்வைத சித்தாந்தத்தின் கண்ணே அஞ்ஞானத்தை யங்கீகரித்திருத்தலால் அதனால் கற்பிக்கப் பட்ட அநிர்வசனீயபதார்த்தம் ஏன் அங்கீகரிக்கத்தகாது என்னுஞ் சங்கைக்கு அஞ்ஞானமே சம்பவியாதபோது துவைத பதார்த்தத்தில் அஞ்ஞான கற்பிதத்தன்மை எவ்வாறு சம்பவிக்கும் என கூறுகிறார்:—

## சுலோகம்

अज्ञानमप्यसदभावतया प्रसिद्धे-
द्वैतप्रसूतिकृदतो न तदभ्युपेयम् ।
नासत्कदाचिदपि सज्जनने समर्थं
वन्ध्यासुता न खलु पुत्रशतं प्रसूते ॥ १२१ ॥

## பதவுரை

**अज्ञानमपि**—அஞ்ஞானமும்

**असत्**—சத்தன்றும்

(அதன்கண் ஏதுவைக் கூறுகின்றார்.)

**अभावतया**—அபாவரூபத்தால்

**प्रसिद्धेः**—பிரசித்தமாதலின்

அஞ்ஞானம் என்னும் பதத்திலுள்ள அகரவடிவ நகாரத்தால் ஞானபாவரூபத்தால் அஞ்ஞானம் தோற்றுகின்றது. அபாவமும் சத்தன்று அதன் கண் சத்தா ஜாதியின்மையின் அஞ்ஞானத்திற்கு பாவத்துவாதிவடிவமும் நிரூபிக்க முடியாமையாலென்பது பொருள், அஞ்ஞானத்திற்கு அசத்துவ சமர்த்தனத்தின் பயனைக் கூறுகின்றார்.

**अतः**–இதனாலேயே (அசத்தாயிருத்தலினாலேயே)
**तद्**–அஞ்ஞானம்
**द्वैतप्रसूतिकृत्**–துவைதப் பிரபஞ்சத்தையுற்பத்தி செய்வதாக
**न अभ्युपेयम्**–அங்கீகரிக்கத்தக்கதன்றாம்.

அஞ்ஞானம் அசத்தாயினும் பிராகபாவம்போன்று துவைதத்தை ஏன் உண்டுபண்ணாது என்னுஞ்சங்கைக்கு கடப்பிராகபாவம் கடத்திற்குக் காரணமென்பது சம்மதமின்மையால் அசத்திற்கு அகாரணத்தன்மையை திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார்.

**वन्ध्यासुता**–மலடியின் மகளானவள்
**पुत्रशतम्**–நூறு புத்திரரை
**न खलु प्रसूते**–ஓர்போதும் பிரசவிக்கின்றதில்லை அதுபோன்று
**असत्**–அசத்தாகிய அஞ்ஞானமும்
**सज्जनने**–சத்தாகிய பிரபஞ்சத்தையுண்டுபண்ணுவதில்
**कदाचिदपि**–ஓர்போதும்
**न समर्थम्**– சாமர்த்தியமுடையதன்றாம்

ஞானபாவவடிவ அஞ்ஞானம் பாவவடிவ சத்தியப்பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமாதற்கு யோக்கியமன்றாம் என்பது கருத்து. (121)

## சப்தத்திற்கு அபரோக்ஷ போதகத் தன்மையின் அனுபபத்தி

### அவதாரிகை

மற்றும் இனிக்கூறப்படும் ஏதுவாலும் வேதாந்த வாக்கியங்களுக்கு அபரோக்ஷப்பிரம்மத்தின்கண் பிராமாண்யம் சம்பவிக்கின்றதில்லையெனக் கூறுகின்றார் :—

**சுலோகம்**

**वाक्यप्रसूतमतिरिन्द्रियजन्यधीव-**
**न्नार्थापरोक्ष्यजननी भवितुं समर्था ।**
**तेनास्तु वाक्यजनितात्मपरोक्षबुद्धि-**
**र्भ्रान्तिः सदाऽजडतयाऽनुभवेऽपरोक्षे ॥ १२२ ॥**

**பதவுரை**

வேதாந்த வாக்யங்கள் பிரம்மவிஷயக அபரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணுகின்றனவா அல்லது பரோக்ஷஞானத்தையுண்டுபண்ணுகின்றனவா? முதற்பக்ஷம் சரியன்றெனக் கூறுகின்றார்.

**इन्द्रियजन्यधीवत्**-நேத்திரம் முதலிய இந்திரியத்தால் உண்டான ஞானம் கடாதி விஷயத்தின் அபரோக்ஷத் தன்மையில் சமர்த்தமாவது போன்று

**वाक्यप्रसूतमतिः**-வேதாந்த வாக்யத்தாலுண்டான ஞானமானது

**अर्थापरोक्ष्यजननी भवितुं**-அர்த்தத்தின் கண்ணுள்ள அபரோக்ஷத் தன்மையை யுபிவியத்தி செய்தற்கு

**न समर्था**-ஆற்றலுடையதன்றாம்

ஏதனாலெனின் வாக்கிய ஜன்னிய ஞானம் நியமமாகப் பரோக்ஷமே யாகின்றது. அபரோக்ஷமாகின்றதில்லை. ஆன்ம ஞானமும் வாக்கிய ஜன்னியமாதலால் பரோக்ஷமேயாகுமென்பது பொருள். அதனால் இரண்டாவது பக்ஷம் மிஞ்சுகின்றது எனக் கூறுதலோடு அதன்கண் தோஷத்தையும் கூறுகின்றார்.

**तेन**-அதனால்

**अजडतया**-சுயம்பிரகாச ரூபத்தால்

**सदा अपरोक्षे**-நித்தியாபரோக்ஷ

**अनुभवे**-அநுபவ வடிவ ஆன்மாவின் கண்

**वाक्यजनित**-சுருதி வாக்யத்தாலுண்டான

**आत्मपरोक्षबुद्धिः**-ஆன்மவிஷயகபரோக்ஷஞானம்

**भ्रान्तिः अस्तु**-பிராந்தியேயாகும்

### விசேஷவுரை

பிராந்தி சித்தியின் பொருட்டு பிரம்மான்மாவை விசேஷிக்கின்றார் 'ஸதா' (நித்யம்) என. நித்திய அபரோக்ஷத்தன்மையின் சித்தியின் பொருட்டுக்கூறுகின்றார் 'அனுபவ' என. அனுபவமும் வேத்தியமாயின் அதற்கு நித்திய அபரோக்ஷத்தன்மை சித்தியாது. அதன்பொருட்டுக் கூறுகின்றார் 'அஜட' (சுயம்பிரகாசம்) என. அதாவது சொப்பிரகாச ஆன்மாவின்கண்ணே வேதாந்தங்களுக்கு அப்பிராமாண்யமேயா மென்பது கருத்து. (122)

### அவதாரிகை

அற்றேல் ஆன்மா நித்திய அபரோக்ஷமாயின் கடாதியின்கண் இந்திரிய ஜன்னிய ஞானம்போன்று வேதாந்த ஜன்னிய ஞானமும் ஆன்மாவின்கண்ணே அபரோக்ஷமாகுக. வேதாந்தங்களுக்கு அப்பிராமாண்யம் ஒழிக, எனின் அற்றன்றெனக் கூறுகின்றார் :—

### சுலோகம்

नित्यापरोक्षमपि वस्तु परोक्षरूपं
वेदान्तवाक्यमवबोधयति स्वभावात् ।
प्रामाण्यमत्र कथमस्य वदोपपन्नं
न ह्यन्यदन्यदिति बोधयतः प्रमात्वम् ॥ १२३ ॥

### பதவுரை

**वेदान्तवाक्यम्** – உபநிடதவாக்கியமானது

**स्वभावात्** – சப்தத்திற்குப் பரோக்ஷ ஞானத்தையுண்டுபண்ணும் தன்மை சுபாவமாதலால்

**नित्यापरोक्षम् अपि** – எப்போதும் அபரோக்ஷமாயினும்

**वस्तु** – ஆன்ம வஸ்துவை

**परोक्षरूपम्** – பரோக்ஷ வடிவமாக

**अवबोधयति** – அறிவிக்கின்றது

உலகின்கண் கடாதியை விஷயஞ்செய்யும் சப்தமும் வேதத்தின் கண் அக்னிஹோத்திராதியை விஷயஞ்செய்யும் சப்தமும் அவ்வவ் விஷயங்களில் பரோக்ஷ ஞானத்தையே உண்டுபண்ணுகின்றன.

ஆதலின் சப்தத்திற்குப் பரோக்ஷஞான ஜனகத்தன்மையே சுவபாவமாம். இந்திரியத்திற்கு அபரோக்ஷ ஞானத்தை உண்டுபண்ணும் தன்மையிருப்பதுபோன்று சப்தத்திற்கு அபரோக்ஷ ஞானத்தை உண்டுபண்ணுந் தன்மையின்ரும். ஆதலின் அபரோக்ஷ வஸ்துவின்கண் பரோக்ஷ ஞானத்தையுண்டுபண்ணுகின்ற வேதாந்த வாக்கியங்களுக்கு அப்பிரமாணத் தன்மை எவ்வாறின்ரும் எனக்கூறுகின்ரூர்.

**अत्र** – இவ்வான்மாவின்கண்

**अस्य** – வேதாந்த வாக்கியத்திற்கு

**प्रामाण्यम्** – பிரமாணத்தன்மை

**कथम् उपपन्नं वद** – எவ்வாறு பொருந்தும் ? சொல்வாயாக

அற்றேல், சத்தியஞானதிவடிவ பிரம்மம் அபரோக்ஷவடிவமாம். அதனை அவ்வாறே (அபரோக்ஷரூபத்தால்) வேதாந்தங்கள் போதிக்கின்றன. விபரீதத்தன்மையால் அதாவது பரோக்ஷரூபத்தால் போதிக்கின்றதில்லை. அந்த ஞானம் சப்தசுபாவத்தால் பரோக்ஷம் என்னும் இவ்வளவு மாத்திரமேயாம். ஆதலின் பிரமாணத்தன்மை எவ்வாறின்ருகும் என்னுமிடத்துக் கூறுகின்ரூர்.

**अन्यत् अन्यत् इति** – ஒன்றை மற்ருென்ருக

**बोधयतः** – அறிவிக்கின்ற வாக்கியத்திற்கு அதாவது அபரோக்ஷ வடிவ ஆன்மாவைப் பரோக்ஷ வடிவமாக அறிவிக்கின்ற வேதாந்த வாக்கியத்திற்கு

**नहि प्रमात्वम्** – பிரமாணத்தன்மை சம்பவிப்பதின்ரும். ஆதலின்.

## விசேஷவுரை

வேதாந்த ஜன்னிய ஞானம் பரோக்ஷமாயின் அதன் விஷய பிரம்மமும் பரோக்ஷமாம் எனக் கூறத்தக்கது. பரோக்ஷப் பொருளை விஷயமாகவுடைய ஞானத்திற்கே பரோக்ஷத் தன்மை காணப்படுதலின். இவ்வாருகவே பரோக்ஷவடிவ பிரம்மத்தினை சாக்ஷாத் அபரோக்ஷவடிவ பிரம்மம் நானுயிருக்கின்றேன் என்னும் வாக்கியம் அபரோக்ஷத் தன்மையால் பிரதிபாதிக்கின்றதாகி எவ்வாறு பிரமாணமாம். அபரோக்ஷ ஞானத்திற்கு விஷயம் பரோக்ஷவடிவப் பிரம்மம் ஆகின்றதில்லை. அபரோக்ஷ ஞானத்திற்குப் பரோக்ஷவடிவப் பிரம்மம் விஷயமாகுமாயின்

அபாதிதார்த்தத்தன்மையால் வாக்கிய ஜன்னிய பரோக்ஷஞானம் பிரமாணமாகும் என்பது பொருள். ஒன்று என்பது பரோக்ஷவஸ்து பிரம்மம் மற்றொன்று என்பது அபரோக்ஷம். 123

## அவதாரிகை

அற்றேல், அக்கினிஹோத்திரம் முதலிய வாக்கியத்திற்கு பரோக்ஷ ஞானத்தையுண்டுபண்ணுந்தன்மையுளதாயினும் சப்தத்திற்கு பரோக்ஷ ஞானத்தையுண்டுபண்ணுமியற்கை கற்பிக்கத் தக்கதன்றும். நீ தசமனுகின்றாய் என்பது முதலிய வாக்கியத்திற்கு அபரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணுந்தன்மையிருத்தலின் நீ தசமன் என்னும் வாக்கியத் திற்கு அபரோக்ஷ ஞானத்தையுண்டுபண்ணுந்தன்மையை யங்கீகரியா விடின் தசமன் விளங்கவில்லையெனும் அபரோக்ஷப் பிராந்தியானது ஆண்டு அவ்வாக்கியத்தால் நிவர்த்தியாகாது என்னுஞ் சங்கைக்கு திருஷ்டாந்தத்தின் சம்மதியின்மையினுல் தூஷிக்கின்றார் :—

## சுலோகம்

वस्त्वस्तु नित्यमपरोक्षमिदं तु वाक्यं
वद्वस्तु वक्तुमपरोक्षमशक्तमेव ।
न ह्यस्ति शब्दजनिताऽत्र जगत्त्रयेऽपि
बुद्धिः करोति खलु या विषयापरोक्ष्यम् ॥ १२४ ॥

## பதவுரை

**वस्तु**—பிரம்ம வஸ்துவானது

**नित्यमपरोक्षमस्तु** - எப்போதுமபரோக்ஷமாயிருக்குக. அங்ஙன மாயினும்

**इदं तु वाक्यम्** —இந்த வேதாந்த வாக்கியமானது

**तद्वस्तु**—பிரம்ம வஸ்துவினை

**अपरोक्षं वक्तुम्** —அபரோக்ஷமாகக் கூறுதற்கு

**अशक्तमेव**—ஆற்றலின் றியதேயாம்

**अत्र जगत्त्रयेऽपि**—ஈண்டு மூவுலகின்கண்ணும்

**शब्दजनिता**—சத்தத்தாலுண்டான

**या बुद्धिः नास्ति**—யாதொரு ஞானமுண்டோ அது

**विषयापरोक्ष्यम्** –விஷயத்தின் அபரோக்ஷத்தன்மையினை

**न खलु करोति**–செய்கின்றதாக இன்றேயாம்

### *விசேஷவுரை*

அபரோக்ஷம் எவ்வாருகுமோ அவ்வாறு பிரம்மவஸ்துவினைக் கூறுதற்த வேதாந்த வாக்கியம் சாமர்த்தியமுடைய்தன்ருமென்பது பொருள். தசமன் விளங்கவில்லை என்னும் அபரோக்ஷப்பிராந்தியும் ஆண்டு இந்திரிய ஜன்னிய சாக்ஷாற்காரத்தாலேயே நிவிருத்தியாதலின் ஆண்டும் சத்தத்திற்கு பரோக்ஷ ஞானத்தையுண்டுபண்ணுந்தன்மையே யுளது. ஆதலின் சத்தத்தின் சுபாவத்திற்கு பங்கமின்ருமென்பது கருத்து. (124)

### *அவதாரிகை*

முன்பு கடாதிகளின்கண் நேத்திரம் முதலிய பிரமாணமானது சொப்பிரகாச ஸ்புரணத்தையுண்டுபண்ணுவதுபோன்று சிதான்மாவின் கண் வேதாந்த வாக்கியம் ஸ்புரணத்தையுண்டுபண்ணுமையின் பிரமாண மன்ருமெனக் கூறப்பட்டது. இப்போது வேதாந்த ஜன்னிய விருத்தி யால் சிதான்மாவில் ஸ்புரணத்தினுற்பத்தியின்றேனும் வேதாந்தங் களுக்கு வியர்த்தத்தன்மையின்ரும். வேதாந்த வாக்கியத்தால் அவித்தையின் நிவிருத்தி சாதிக்கப்படுதலின் அவித்தையின் நிவிருத்தி யின்கண் வேதாந்தங்களுக்குப் பிரமாணத்தன்மை சம்பவித்தலால் என்னும் சித்தாந்தியின் சங்கையைத் தூஷித்தற்பொருட்டு அநுவதிக் கின்ருர் :—

### *சுலோகம்*

**अत्राह यद्यपि किमप्युपनेयमेत**
**चैतन्यवस्तुनि न संभवति प्रमाणैः ।**
**अस्त्येव तत्र भवभीतिनिदानभूत-**
**मज्ञानमात्रमपनेयमनन्यमानै ॥ १२५ ॥**

### *பதவுரை*

**अत्र** – ஈண்டு அதாவது மீமாம்ஸகனுல் சிதான்மாவின்கண் வேதாந் தங்களுக்குப் பிரமாணத்தன்மையின்ருமென தூஷிக்கப் பட்டபோது

**आह** – வேதாந்தியானவர் கூறுகின்றார்

**अत्र चैतन्यवस्तुनि** – இவ்வபரோக்ஷ சிதான்மாவின்கண்

**प्रमाणैः** – வேதாந்த வாக்கிய வடிவ பிரமாணங்களால்

**उपनेयम्** – ஆதேய ஸ்புரணம்

**किमपि न संभवति** – யாதொன்றும் சம்பவிக்கின்றதில்லை

**यद्यपि (तथापि)** - அங்ஙனமாயினும்

**तत्र अनन्यमाने** – சொப்பிரகாச சைதன்னிய வடிவ ஆன்மாவின் கண்

**भवभीतिनिदानभूतम्** – சமுசார பயத்திற்குக் காரணமான

**अज्ञानमात्रम्** – அவித்தை மாத்திரம்

**अपनेयम् अस्त्येव** – வேதாந்தத்தால் நிவர்த்திக்கத்தக்கதாக இருக்கின்றதேயாம்

### விசேஷவுரை

ஞானம் அஞ்ஞான மாத்திரத்தை நிவர்த்திக்கின்றது பிரபஞ்சமோ அதன் நிவர்த்தியால் நிவர்த்தியாகின்றது அல்லது பிரபஞ்சமும் அதன் விகாரமாதலின் அதன் வடிவமேயாம் ஆதலின் மாத்திரமெனப்பட்டது, ஜன்னியம் ஆதேயம் என்பன ஒரு பொருட்சொற்கள். (125)

### அவதாரிகை

கூறப்பட்ட சித்தாந்தியின் சங்கையைப் பூர்வவாதி தூஷிக்கின்றான் :—

### சுலோகம்

**नैतत्प्रमाणमपनेतृ सतो न ताव-**
**न्नैतन्नियोज्यमसतोऽप्युपघातसिद्धयै ।**
**नाप्यन्यदस्ति सदसद् यदनेन हेयं**
**तस्मात्प्रमाणमपनेतृ न कस्यचिद्वः ॥ १२६ ॥**

### பதவுரை

**एतत् न** – உன்னால் கூறப்பட்ட இஃது சரியன்றாம், எதனால் சரியன்று என்னுமிடத்துக் கூறுகின்றார்

**प्रमाणम्** – வேதாந்த வாக்கியவடிவப் பிரமாணமானது

**सतः** – சத்வடிவ அஞ்ஞானத்தின்

**न तावत् अपनेत्** – நிவர்த்தகமன்றும் ஆன்மாவைப் போன்று சத்வடிவ அஞ்ஞானம் அநிவர்த்தியமாதலின்

**असतोऽपि**–அசத்வடிவ அஞ்ஞானத்தின்

**उपघातसिद्ध्यै**–நிவர்த்தி சித்தியின் பொருட்டும்

**एतत्** –இவ்வேதாந்தவாக்கியம்

**न नियोज्यम्** -பிரயோகிக்கத்தக்கதன்றும். அசத்திற்கு முயற்கோடு போன்று நிவர்த்தி பொருந்தாமையின்

**अन्यत्** –சத்தினும் அசத்தினும் வேருக

**सदसदपि**–சதசத்வடிவமாகவும் அஞ்ஞானம்

**न अस्ति**–இன்றும் (பரஸ்பரம் விரோதமாதலின்)

**अनेन**–இவ் வேதாந்த வாக்கியத்தால்

**यत् हेयम्** –எது தள்ளத்தக்கதாம். ஒன்றற்கே சதசதான் மகத்தன்மை பொருந்தாமையின்

**तस्मात्** –ஆதலால்

**वः**–வேதாந்திகளாகிய உங்கள் மதத்தில்

**प्रमाणम्** –வேதாந்த வாக்கியவடிவ பிரமாணமானது

**कस्यचित्** –எதனையும்

**न अपनेत्** –நிவர்த்தி செய்வதின்றும்.

## *விசேஷவுரை*

யாதொரு காரணத்தால் அஞ்ஞானத்திற்குக் கூறிய மூன்று பக்ஷத்தின் கண்ணும் நிவர்த்தி சம்பவிக்கின்றதில்லையோ அக்காரணத்தால் உமது மதத்தில் வேதாந்தவாக்கியம் ஞானவாயிலாக எதனையும் நிவர்த்திப்பதன்றும். ஆதலின் வேதாந்தத்திற்கு வியர்த்தத் தன்மை முன்போலவேயாம் என்பது கருத்து. **(126)**

## *அவதாரிகை*

மற்றும் அவித்தையின் நிவர்த்தி அசத்ரூபமாயின் பிரமாணத்தால் ஓர்போதும் உத்பத்தியாகாது. அவித்தையின் நிவர்த்தி சத்தாயின்

அதனை உண்டுபண்ணுகின்ற பிரமாணத்திற்குக் காரகத் தன்மையின் பிராப்தியாம். ஜடக்கிரியையை சாதிக்கும் தண்டம் முதலிய பதார்த்தத் திற்கு நியமமாகக காரகத்தன்மையுண்மையின். வேதாந்த வாக்கியத்திற்கு அக்காரகத்தன்மையும் பொருந்தாது. பிரமாணத்திற்கு வியஞ்சகத் தன்மையுண்மையால் அகாரகத்தன்மை வியாப்திக்கு விரோதம் வருதலின். அதாவது யாது யாது பிரமாணமோ அது அது அகாரகமாம் என்னும் வியாப்தி நேத்திராதிகளில் காணப்பட்டுள்ளது. அதற்கு விரோதம் வருதலின் வேதாந்த வாக்கியப்பிரமாணமும் ஞாபகமேயாம். காரகம் அன்று என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார் :—

### சுலோகம்

**मानं न कारकमिति प्रथितं पृथिव्यां**
**स्याच्चेत्क्रियावदिदमुज्झति मानभावम् ।**
**जन्यं न मानफलमित्यपि युष्मदीयाः**
**संविद्रते न खलु जातुचिदक्षरेऽस्मिन् ॥ १२७ ॥**

### பதவுரை

**मानं न कारकम् इति**—பிரமாணம் காரகம் ஆகின்றதில்லை என்பது

**पृथिव्यां प्रथितम्**—பூமண்டலத்தில் பிரசித்தமாம்

பிரமாணம் காரகமாகின்றதில்லையென்பதை யங்கீகரியாவிடின் காரகத்திற்குப் போன்று அப்பிரமாணத்தன்மையும் எது பிரமாணமோ அது அகாரகம் என்னும் முற்கூறிய வியாப்திக்கு விரோதமும் உண்டாமெனக் கூறுகின்றார்.

**स्यात् चेत्**—பிரமாணம் காரகமாகுமாயின்

**क्रियावत्**—அக்கினிஹோத்திராதிகிரியையைப் போன்று பிரமாணத் தன்மையை விட்டுவிடும் அல்லது இவ்வாறு அன்வயஞ் செய்க

**क्रियावत् स्यात् चेत्**—கிரியாஜனக காரகமாகுமாயின்

**इदं मानभावं उज्झति**—பிரமாணமானது பிரமாணத்தன்மையை விட்டுவிடும்

அற்றேல் நேத்திரம் முதலிய பிரமாணத்தின்கண் சடமாகிய ஞானக்கிரியையையுண்டுபண்ணுந்தன்மை எல்லோருக்கும் சம்மதமாதலின் பிரமாணத்தின் கண்ணும் காரகத்தன்மையுளதென்னுஞ் சங்கைக்கு அதுவும் அத்வைதவாதிகளாகிய உங்களுக்குச் சம்மதமின்றுமெனக் கூறுகின்றார்.

**जन्य्**—உற்பத்தியாவது

**मानफलं न इति**—பிரமாணத்தின் பயனன்றும் என

அசடமும் அஜன்னியமுமான அபிவியக்த அநுபவமே சருவப்பிரமாணத்தின் பயனுமென பிரம்மவாதிகளால் அங்கீகரிக்கப்படுதலின் சடமாகிய விருத்திமாத்திரத்தை யுண்டுபண்ணுதலால் நேத்ராதிக்குப் பிரமாணத் தன்மையின்றுமென்பது கருத்து அல்லது எப்படி பிரமாணம் காரகமன்று என்னும் நியமத்தைக் கூறுகின்றார்களோ அப்படி ஜன்னியம் பிரமாணத்தின் பயனன்று என்னும் நியமத்தினையும் சொரூபாநுபவத்திற்கே சருவப்பிரமாணத்தின் பயனுந்தன்மையைமிச்சிக்கின்ற வார்த்திககாரர் முதலியோர் அங்கீகரிக்கின்றனர். அதுவும் பிரமாணம் காரகமாமெனா அங்கீகரிக்கின் விருத்தமாமெனக் கூறுகின்றார் உற்பத்தியாவது என.

**युष्मदीया अपि**—அத்வைத வாதியாகிய உர்மை அநுசரித்த வேதாந்திகளும்

**संविद्रते**—அங்கீகரிக்கின்றனர்.

அப்படியாயின் கடாதியின் கண் அபிவியக்தசைதன்னியம் பிரமாணத்தின் பயனுவது போன்று பிரம்மத்தின் கண்ணும் அபிவியக்த சைதன்னியமே பிரமாணத்தின் பயனுகுக என்னுஞ் சங்கைக்கு பிரம்மத்திற்கு பலவியாப்பியத்தன்மையின்மையின் இது சரியன்றெனக் கூறுகின்றார்.

**अक्षरे अस्मिन्**—ஸ்வப்பிரகாச அவிநாசிவடிவ இவ்வான்மாவின்கண்

**जातु**—ஓர்போதும்

**चित् न खलु**—வேதாந்த வாக்கியம் ஸ்புரணத்தைச் செய்கின்றதில்லை

ஓர் போதும் அக்ஷரப்பிரம்மத்தின் கண் அபிவியக்த சைதன்னி யத்தை பிரமாணத்தின் பயனுக அங்கீகரிப்பதின்ரும் வேதாந்தத்தால் அபிவியக்த சைதன்னியத்திற்கு நிஷ்பிரபஞ்ச ஆன்ம சொரூபத்தன்மை யுண்மையால் பிரமாணத்தின் பயனுந்தன்மை சம்பவியாமையின் என்பது கருத்து. 127

## அவதாரிகை

அற்றேல் அஞ்ஞானம் சத்தா அல்லது. அசத்தா என்பது முதலிய விகற்பத்தினைச்செய்து அஞ்ஞானத்திற்கு அநிவர்த்தியத்தன்மை கூறப்பட்டது. அது பொருந்தாது அநிர்வசநீயத்தன்மை யுண்மையால் அதற்கு ஞானநிவர்த்தியத்தன்மை சம்பவித்தலின் இவ்வாறு அங்கீகரித்தலால பிரமாணததிற்குகாரகத் தன்மைப் பிராப்தியுமின்ரும் அநிர்வாச்சியத்தின் நிவர்த்திக்கு அதிஷ்டான சின்மாத்திரத்தன்மை யுண்மையால் அதன் கண் பரிபவசானமாகின்ற பிரமாணத்திற்கு வியஞ்சகத்தன்மையுண்மையால் காரகத்தன்மையின்மையின் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர் :—

## சுலோகம்

नाद्यापि वेद्म्यहमनिर्वचनीयभाषां
सर्वप्रवादहृदयान्यपि गाहमानः ।
तात्पर्यतो नच तथाविधमस्ति किञ्चि-
ल्लोकप्रसिद्धमपि यद्विषयेयमिष्टा ॥ १२८ ॥

## பதவுரை

तात्पर्यतः—சாஸ்திரவிசாரத்திலுள்ள ஏகாக்கிரமனதினுல்
सर्वप्रवादहृदयानि—சருவசாஸ்திரத்தின் தாற்பரியங்களை
गाहमानः अपि—விசாரிக்கின்றவனுயினும்
अहम् – நான்
अद्यापि—இதுபரியந்தமும்
अनिर्वचनीयभाषाम्— சதசத்விலக்ஷணம் அநிர்வசநீய மஞ்ஞான மென்னும் வார்தையை

**न वेद्मि**—அறிகின்றிலேன்
**इयम्** — இந்த அநிர்வசனீய பரிபாஷை
**यद्विषया**—எதனை விஷயஞ்செய்வதாக
**इष्टा**—அங்கீகரிக்கப்பட்டுள்ளதோ
**तथाविधम्** — அப்படிப்பட்ட சதசத்விலக்ஷண அநிர்வசனீய வஸ்து
**किञ्चिदपि**—அற்பமாயினும்
**लोकप्रसिद्धम्** — உலகின்கண் பிரசித்தம்
**नच अस्ति**—இன்றும்

## விசேஷவுரை

இது பரியந்தமும் என்பதற்கு வைசேஷிகம் முதலிய சருவசாஸ்திரங்களின் அப்பியாசத்தினனந்தரமும் என்று பொருள் அப்படியாயின் நன்றும் இதரசாஸ்திரங்களையப்பியாசஞ் செய்யாமையால் அநிர்வசனீய வஸ்துவின் அஞ்ஞானமாம் என்னும் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு, சாஸ்திரவிசாரத்திலுள்ள என்பதாதி விசேஷணம் கூறப்பட்டது. அதனுல் அநிர்வசனீய வஸ்து இன்மையினுலேயே அதன் அஞ்ஞானமாம் அநிர்வசநீய வஸ்துவினறியாமையில் வேறு நிமித்தமன்றும் என்பதனைத் தெரிசிப்பிக்கின்றவராய் உலகின் கண்ணும் அதன் அப்பிரசித்தியைத் தெரிசிப்பிக்கின்றுர் இந்த அநிர்வசநீய என. லௌகிக இரஜதாதிப்பிராந்திக்கும் அந்நியதாக்கியாதி முதலிய வடிவத் தன்மையுண்மையால் உலகின் கண்ணும் அநிர்வசநீயவஸ்துவிற்குப் பிரசித்தியின்றும் என்பது கருத்து. 128

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் முற்கூறிய யுத்திகளால் வேதாந்தங்களுக்குப் பிரம்மத்தின் கண் பிராமாண்ய அசம்பவத்தின் சமர்த்தனத்தை யுபசம்மாரஞ்செய்கின்றுர் :—

## சுலோகம்

**तस्मात्प्रमाणफलमत्र निरूप्यमाणं**
**ब्रह्मात्मवस्तुनि न संभवतीह किञ्चित् ।**
**कृत्यं विना नच निरूपयितुं प्रमाणं**
**वेदान्तवाक्यमिह शक्यमनर्थकत्वात् ॥ १२९ ॥**

## பதவுரை

तस्मात् – ஆதலால்
इह – ஈண்டு
ब्रह्मात्मवस्तुनि – பிரம்மான்மவஸ்துவின்கண்
प्रमाणफलम् – பிரமாணத்தின் பயன்
निरूप्यमाणम् – விசாரிக்கப்படுகின்றதாகி
अत्र – ஸ்புரணமும் அவித்தையி.ர் நிவர்த்தியுமாகிய இரண்டனுள்
किञ्चिद् – சொற்பமாவது
न संभवति – சம்பவிக்கின்றதில்லை
कृत्यं विना – பிரயோஜனமின்றி
वेदान्तवाक्यं प्रमाणम् – வேதாந்த வாக்கியமாகிய பிரமாணத்தை
निरूपयितुं – நிரூபித்தற்கு
इह – இங்கு
नच शक्यम् – சாமர்த்தியமேயின்றும்
अनर्थकत्वात् – வியர்த்தமாதலின்

## விசேஷவுரை

இவ்வசம்பவதோஷம் பரோக்ஷத்தன்மை ஸத்துவயத்தன்மை முதலானவற்றால் உண்டான விரோதம் முதலானவற்றிற்கும் உபலக்ஷணம். (129)

## காரிய சம்பந்த சம்பந்தியின் கண் சக்தியை நிரூபித்தல்.

## அவதாரிகை

இந்தப் பிரகாரம் வேதாங்தங்களுக்கு பிரமாணாந்தரத்தோடு விரோதம் முதலியவையிருத்தலால் சுவதஸ்ஸித்தமாயும் உதாசீனமாயுமுள்ள பிரத்தியகபின்ன பிரம்மத்தின் கண் பிராமாண்யமின்றெனக் கூறப்பட்டது. இப்போது சர்வவேதத்திற்கும் காரியபரத்தன்மை நியமமாகவிருத்தலால் சுத்தப்பிரம்மத்தின் கண்ணே பிரமாணத்தன்மையின்றும். உலகின் கண் சப்தங்களுக்கு சத்திக்கிரஹணம் காரியத்தின் கண்ணேயே காணப்படுகின்றது. அந்தப்பிரதீதியின் பலத்தால் வேதத்

திற்கும் காரியபரத்தன்மையே யுசிதமாம் என்னுமபிப்பிராயத்தை மனதில் வைத்துக்கொண்டு பூர்வபக்ஷி கார்யத்தின் கண்ணேயே சகல பதங்களுக்கும் சக்திக்கிரஹணமாம் என்பதை உலகின்கண் தரிசிப்பிக் கின்றார். :—

சுலோகம்

कार्यान्वयान्वयिनि वस्तुनि शब्दशक्ति
श्रोतुः प्रवर्तकधियं परिकल्प्य बालः ।
चेष्टावशात्पुनरपि प्रविभज्य भागं
भागस्य वाचकमिति स्वयमेव वेत्ति ॥ १३० ॥

பதவுரை

बालः-சப்தத்தின் சக்திஞானத்தை விரும்பும்சிறுவன்

श्रोतुः-உத்தம விருத்தனுடைய 'பசுவைக் கொண்டுவா' என்னும் வாக்கியத்தைக் கேட்பவனான மத்தியம விருத்தனது

चेष्टावशात् - பசுவைக் கொண்டுவருதலின் பிரவிருத்தி வடிவ லிங்கத்தால்

प्रवर्तकधियम् - பசுவைக் கொண்டுவருதலாதி செய்யத்தக்கது என்னும் ஞானத்தை

परिकल्प्य-மத்தியம விருத்தனிடத்தில் அனுமித்து

அந்த ஞானமும் பசுவைக் கொண்டுவா என்னும் சப்தத்தின் சிரவணாநந்தரம் உண்டாயிருத்தலின் அச்சப்த ஜன்னியமாமென்றறிந்து,

शब्दशक्तिम् - பசுவைக் கொண்டுவா வெனனும் சப்தத்தின் சாமர்த்தியத்தினை

कार्यान्वय अन्वयिनि-கார்யசம்பந்தத்தின் ஆசிரயமான

वस्तुनि-வியக்தியின் கண்

स्वयमेव वेत्ति-தானேயறிகின்றான்

पुनः अपि-மறுபடியும்

प्रविभज्य-கொள்ளுதல் தள்ளுதல்களினாலே வாக்கியத்தினைப் பிரித்து.

भागम् - வாக்கியத்தின் ஒருபிரிவான பதமானது

भागस्य-வாக்கியார்த்தத்தின் ஒரு பிரிவான அர்த்தத்திற்கு

**वाचकं इति**–வாசகமாம் என்று

**स्वयमेव वेत्ति**–தானே அறிகின்றான்.

## *விசேஷவுரை*

சக்தி ஞானத்தை விரும்பும் பாலகனானவன் பசுவைக் கொண்டுவா வென்னும் பிரயோஜக விருத்தனுடைய வாக்கிய சிரவணானந்தரம் பிரவிருத்திக்கின்ற பிரயோஜ்ய விருத்தனுடைய பசுவைக் கொண்டு வருதல் முதலிய சேஷ்டையின் வசத்தால் பிரவர்த்தக புத்தியாகிய பசுவைக் கொண்டுவருதல் என்னால் செய்யத்தக்கது என்னும் ஞானத்தைக் கற்பித்து அதாவது விவாத விஷயமான மத்தியம விருத்த னுடைய, பிரவிருத்தியானது பசுவைக்கொண்டு வருதலாதிகார்ய விஷயக ஞானத்தைப் பூர்வமாகவுடையது. இந்தப் பசுவைக்கொண்டு வருதலாதி பிரவிருத்தித்தன்மையால், எந்த எந்தப் பிரவிருத்தி எந்த எந்த கர்த்தவ்யார்த்த விஷயகமாக வுண்டாகின்றதோ அந்த அந்தப் பிரவிருத்தி அந்த அந்த கர்த்தவ்யார்த்த விஷயக ஞான பூர்வகமாம். எனது ஸ்தன்யபானுதிப்பிரவிருத்தி போன்று, என்று அனுமானஞ் செய்து பிரவர்த்தகஞானத்திற்குக் காரணத்தை விசாரிக்கின்றவனும் பசுவைக் கொண்டுவா என்பது முதலிய சப்தங்களின் அந்நுவயவியதிரேகங்களால் அதாவது பசுவைக் கொண்டுவா வென்னும் சப்தமிருக்கின் அத்தன்மைய ஞானமுண்டாகின்றது. இன்றேல் உண்டாகின்றதில்லை என்னும் அந்நுவய வியதிரேகங்களால் பிரவர்த்தக ஞானத்தின் கண் சப்த ஜன்னியத் தன்மையை நிச்சயித்து அந்த ஞானத்தின் விஷயமான காரிய வஸ்துவின்கண் பசுவைக் கொண்டுவா வென்னும் வாக்கியத்தின் சாமர்த்தியத்தினைச் சுயமே அறிகின்றான்.

வாக்கியத்தின் கண்ணே பிரயோகிக்கப்பட்ட சர்வ பதங்கட்கும் ஒரு கார்யவடிவ அர்த்தத்தின் கண் சக்தியா ! அவ்வாறாயின் பரியாயத் தன்மை பிராப்தியாம் எனின் அற்றன்று. இனிச் சொல்லப்படும் நியாயத்தால் பதங்களுக்குத் தனித்தனி பொருளிருத்தலினால் எனக் கூறுகின்றார் மறுபடியுமென சம்முக்தத்தன்மையால் அதாவது விசேஷண விசேஷியத்தன்மையைவிட்டு சாமான்ய ரூபத்தால் வாக்கியத்தின் சக்திக் கிரஹணானந்தரம் வாக்கியத்தின் பாகமாகிய பதங்களைப் பிரித்து

அவ்வப்பதத்தினை வாக்கியார்த்தத்தின் பாகமாகிய காரியான்வித அவ்வவ்வர்த்தத்தினது வாசகமாமெனவும். அறிகின்றான் என்பது பொருள்.

உலகின்கணுள்ளே சப்தங்களுக்கு விருத்தருடைய வியவகாரத்தையநுசரித்து சக்தியறியப்படுகின்றது. விருத்தருடைய வியவகாரமும் பிரவர்த்தக வாக்கியத்தினதீனமாம் பிரவர்த்தக வாக்கியத்தினும் வேறான காரணத்தினால் பிரவர்த்திக்கு ஏதுவான ஞானம் சம்பவியாமையின் பசு நிற்கின்றது என்னும் வாக்கியத்தினால் ஒருவனும் பிரவர்த்திக்கின்றதில்லையாகலின்.

வாக்கியத்தின்கண் முதலிற் சத்தியினையறிய வேண்டும், எவ்வாக்கியத்தினையறிந்து மனிதன் பிரவர்த்திக்கின்றானோ அது பிரவர்த்தக வாக்கியமாம் அந்தப்பிரவர்த்தகமும் தன்னிடத்து காரியமென நிச்சயிக்கப்பட்டுள்ளது ஆதலால் அந்தக்காரியஞானமே பசுவைக் கொண்டுவா என்னும் வாக்கியத்தைக் கேட்டலின் பின்பு மத்திமவிருத்தனுடைய பசுவைக்கொண்டுவருதலாதிப் பிரவிருத்தியால் மத்திமவிருத்தனிடத்தில் அநுமிக்கப்படுகின்றது. மத்தியம விருத்தனது அக்காரிய ஞானமும் பசுவைக் கொண்டுவா என்னும் வாக்கியத்தாலுண்டானது என்பதும் அநுமிக்கப்படுகின்றது. அதன் பின்பு அந்த ஞானத்தின் விஷயமான விசிஷ்டகாரியத்தின் கண் அந்த வாக்கியம் சமர்த்தமாமென நிச்சயிக்கப்படுகின்றது பிரவர்த்தக வாக்கியத்திற்கு காரியஞானத்தினும் அன்னியஞானத்தின் ஜனகத்தன்மைச் சம்பவியாமையின் அன்னியத்தின் சாமர்த்தியம் இல்லாமையால் ஈண்டு இஃதபிப்ராயமாம் எதற்கு ஏது ஜனகமோ அக்காரியத்தால் அக்காரணம் அநுமிக்கப்படுகின்றது. என்பது நியமமாம் பிரகிருதத்தில் பிரவர்த்தக வாக்கியத்திற்கு ஜனகம் காரியஞானமாமாதலின் பிரவர்த்தக வாக்கியத்தால் காரியஞானமே அநுமிக்கப்படுகின்றது.

இந்தப்பிரகாரம் சம்முக்தத்தன்மையால் பதசமுதாயத்திற்கு, விசிஷ்டகாரியத்தின் கண் சாமர்த்தியத்தினையறிந்து பின்பு பசுவைக் கட்டு கன்றைக்கொண்டுவா என்பது முதலிய இடங்களில் பிரித்து அவ்வப்பதங்களைப் பிரயோகிக்குங்கால் அன்வயவியதிரேகங்களாலேயே காரியான்வித அவ்வப்பொருளில் அவ்வப்பதம் சத்தியினையுடையது என

பாலகன் அறிகின்றான் ஆதலின் சருவ சப்தங்களுக்கும் காரியமே பொருளாம்.

சருவபதங்களுக்கும் காரியத்தின் கண் சத்தியை யங்கீகரிக்கின் பரியாயத்தன்மையின் பிராப்தியாமென்னற்க அவ்வவ்விடத்தில் அவ்வக் காரிய விசேஷஞானம் உண்டாவதால் அங்ஙனமாயின் வியபிசாரமாம் என்னற்க. காரியவிசேஷத்திற்கு வியபிசார முளதாயினும் காரிய சாமானியத்திற்கு வியபிசாரமின்மையின் காரியசாமானியத்தோடு கூடிய தற்கு சப்தார்த்தத்தன்மைப்பொருந்துதலின்.

அற்றேல் இவ்வாறங்கீகரிக்கின் காரியபதத்திற்குச் சக்தி எங்ஙனம் சம்பவிக்கும் காரியாந்தரமின்மையால் காரியத்தோடு கூடிய காரியம் சம்பவியாமையின் கோ முதலிய சித்த வஸ்துவின் கண்ணும் காரியபதத்திற்குச் சக்தியின்றாம்.

காரியபதம் காரியமாத்திரத்திற் சமர்த்தமாம் காரியான்விதத்தி லின்றாம் என்றும் கூறற்க சத்தார்த்தத்திற்கு அநேக ரூபத்தன்மைப் பிராப்தியாதலின் அதாவது ஆநயனுதிகாரிய பதத்திற்கு ஆனயனுதி காரியத்திற்சக்தியாம் இதரகோ முதலிய பதங்கட்கு ஆனயனுதி காரியான்விதத்திற் சத்தியாம் என இவ்வாறு அர்த்தங்கட்கு விலக்ஷணத் தன்மைப் பிராப்தியாமென்னும் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டுக் காரிய சம்பந்தத்தின் ஆசிரயமெனக் கூறப்பட்டது.

காரியத்தின் யாதொரு சம்பந்தமுண்டோ அதனுசிரயத்தின் கண் சருவபதத்திற்கும் சக்தியாம் காரியத்திற்கு சித்தித்தவஸ்துவோடு சம்பந்தமாம் அச்சம்பந்தமும் சித்தித்த வஸ்துவிலும் காரியத்திலுமுளது. சம்பந்தமிரண்டன் கண்ணிருப்பதாகலின், இவ்வாறு காரியான்வயான் விதத்தில் சத்தியையங்கீகரிக்கின் சத்தசத்தியின் பிரயோஜகததிற்கு அநேக வடிவத்தன்மையின்றாம். (130)

## அவதாரிகை

அற்றேல் காரியான்வயான்விதத்தன்மையை யபேக்ஷித்து அன் விதத்திற்கு சரீரம் லகுவாயிருத்தலால் அதன் கண்ணேயே சத்தத்தின் சத்தியுளதாகுக அப்படிக்கின்றி காரியான்வயான்விதத்தில் சத்தியை யங்கீகரிக்கின் கௌரவ தோஷமுண்டாம் இவ்வாறாயின் அத்தியந்தம் லாகவமாயிருத்தலால் அவ்வப் பொருள் மாத்திரத்தில் சத்தியுளதாகுக

என்று கூறற்க பசுவைக் கொண்டுவா என்னும் சத்தத்தைக் கேட்டதன் பின்பு அன்விதார்த்தமே நியமமாகப் பிரதீதியாதலின் என்னும் சித்தாந்தியின் சங்கையைப்பூருவ பக்ஷியநுமோதிக்கின்றார். :—

## சுலோகம்

त्यक्तः कार्यान्विताथं वदितुमलमयं शब्द इत्येष पक्षो
नोक्तो योग्येतरार्थान्वितमिति तु पुनः पूर्वमप्येष पक्षः ।
किं तु स्यादस्य शक्तिर्निजसहजवशादन्विताथाभिधाने
योग्यत्वादेस्तु पश्चात्स्वयमुपनिपतत्यस्य कार्यैकमर्थ्यम् ॥ १२१ ॥

## பதவுரை

कार्यं अन्वित अर्थम् – கொண்டு வருதல் முதலிய காரியத்தோடு கூடிய பொருளை

वदितुम् – பிரதிபாதித்தற்கு

अयं शब्दः—பசுவைக் கொண்டுவா என்பது முதலிய இந்த சப்தமானது

अलम् – சாமர்த்தியமுடையது.

इति एष पक्षः—என்னும் இந்த பக்ஷமானது

त्यक्तः—மேற்கூறிய கௌரவ தோஷத்தால் தள்ளப்பட்டதாம்.

அப்படியாயின், யோக்கிய இதர அன்விதத்தில் சக்தி அங்கீகரிக்கப் பட்டதா! எனின் அதுவுமன்று மிகவும் கௌரவமாதலால் என்று அபிப்பிராயப்பட்டுக் கூறுகின்றார்.

पुनः—மற்றும்

योग्येतरार्थ अन्वितम् – அன்வயயோக்கிய இதர அர்த்தத்தோடு கூடிய பொருளை

(சப்தம் பிரதிபாதித்தற்கு ஆற்றலுடையது)

इति तु एष पक्षः—என்னும் இந்தப்பக்ஷமும்

पूर्वमपि न उक्तः மிக்கௌரவ தோஷமாதலால் முன்னமே எம்மால் கூறப்படவில்லை.

அவ்வாறுயின் உனது மத்தில் சப்தார்த்தந்தான் யாது என்னு மிடத்துக் கூறுகின்றார்.

किंतु–ஆனல்

**अस्य**—இந்த சப்தத்திற்கு

**निजसहजवशात्** – தன்னுடைய இயற்கைவசத்தால்

**अन्वितार्थ अभिधाने**—அன்விதார்த்தத்தைப் பிரதிபாதித்தலில்

**शक्तिः स्यात्** – ஆற்றலாம்

அப்படியாயின் சித்தவஸ்துவும் சப்தார்த்தமாகும். ஆகவே உமது இஷ்டசித்தியின்றும். என்னுமிடத்துக் கூறுகின்றார்.

**पश्चात्** – பின்பு

**अस्य**—இந்த சப்தத்திற்கு

**योग्यत्वादेस्तु**—யோக்கியதை ஆகாங்க்ஷை முதலியவற்றால்

**कार्य ऐदम् अर्थ्यम्** – கார்யபரத்துவம் (அதாவது கார்யப்பிரதி பாதகத்துவம்)

**स्वयं उपनिपतति**—தானே பிராப்தியாகின்றது.

## விசேஷவுரை

சித்த பதார்த்தங்களுக்கு சாத்தியவடிவ காரியத்தோடேயே அன்வயம் உளது. சித்தபதார்த்தத்தோடு இன்றும். சித்தபதார்த்த சாத்தியபதார்த்தங்களின் அன்வயத்தின் கண்ணேயே ஆகாங்க்ஷை யோக்யதை சம்பவித்தலால் அன்விதமாத்திரத்தில் சாமர்த்தியமுடைய கோ முதலிய பதத்தாலும் யோக்யதை முதலியவற்றின் மகிமையால் கோ முதலியவற்றிற்குக் காரிய அன்வயமே சித்திக்கும் ஆதலின் சர்வசப்தத்திற்கும் கார்ய சேஷத்தன்மை அதாவது கார்யப்பிரதிபாதகத் தன்மையே உளது. (131)

# மதபேதத்தால் காரியத்தின் லக்ஷணத்தை நிரூபித்தல்

## அவதாரிகை

அற்றேல் யோக்யதை முதலியவற்றின் வலிமையினால் எந்தக் கார்யத்தின் அன்வயம் பதார்த்தங்களுக்குப் பிராப்தியாகுமோ அந்தக் காரிய மென்பது யாது ? யாகம் முதலிய பகுதிப்பொருளும் காரியமன்று. அது க்ஷணிகமாதலின் சாக்ஷாத் சொர்க்க சாதனமாகாமையின் அதற்கு சொர்க்ககாமி புருஷனது கார்யத்தன்மை சம்பவியாமையால் மற்றையதுக்கும் அவ்வியாகாதியின்கண் தற்பரத்தன்மை சம்பவியாமையின்.

நியோகவடிவ அபூர்வம் கார்யமாம் என்றலுஞ்சரியன்று உலகின் கண் கடத்தைக் கொண்டுவா என்பது முதலிய இடங்களில் அபூர்வத்தின் பிரசித்தியின்மையின். லோகம் வேதமென்னுமிரண்டிற்கும் பொதுவாக் கிருதிசாத்தியத்துவ விசிஷ்டம் கார்யமாம். என்பதும் சரியன்று சொர்க்கம் கடம் முதலியவற்றிற்கும் நியோகம் போன்று பரம்பரையால் கிருதிசாத்தியத்தன்மை சம்பவித்தலால் அவற்றின் அன்வயத்திற்கும் சப்தார்த்தத்தன்மை பிராப்தியாம். ஆதலால் சித்தார்த்தபோதக பிறமதத்தினும் விசேஷமின்மையின். ஆதலால், உலகத்திலும் வேதத்திலும் அநுகதமாக சப்தார்த்தத்தன்மைக்குப் பிரயோஜகம் சித்திக்காது என்னும் சங்கைக்குக் கூறுகின்றூர் :—

## *சுலோகம்*

**प्रवृत्त्यभावस्य विरोधि कार्यं कालत्रयानन्वितमाहुरेके ।**
**स्वगोचरस्येप्सितसाधनत्वं विज्ञापयत्प्रेरकमाहुरन्ये ॥ १३२ ॥**

## *பதவுரை*

**एके**—பிரபாகரமதத்தின் ஏகதேசிகள்
**प्रवृत्त्यभावस्य**—பிரவிருத்தியினபாவத்திற்கு
**विरोधि**—விரோதியும்
**कालत्रयानन्वितम्** — இறப்பு முதலிய மூன்று காலத்தோடு கூடாததும் யாது அதனை
**कार्यम् आहुः**—காரியமென கூறுகின்றனர்.
**अन्ये**—வேறுசிலர்
**स्वगोचरस्य**—தனது விஷயமான பகுதிப் பொருளில்
**ईप्सितसाधनत्वम्**—இஷ்டசாதனத்தன்மையை
**विज्ञापयत्** — அறிவிப்பதும்
**प्रेरकम्** — ஏவுவதும் யாது அந்த நியோகத்தினை
**आहुः**—காரியமெனக் கூறுகின்றனர்.

## *விசேஷவுரை*

யாதொரு நிமித்தமிருக்குங்கால் இராகாதியோடு கூடிய புருஷனுக்கு நியமமாகப் பிரவிருத்தியினபாவம் இன்ருமோ அதாவது அவசியம் பிரவிருத்தியுண்டாமோ அது (பிரவர்த்தனை யெனும் விதி வியாபாரம்)

காரியமாம், இராகாதியின் கண் அதிவியாப்தியை நீக்குதற்பொருட்டு காரியத்தின் லக்ஷணத்தில் விசேஷணத்தைக் கூறுகின்றார் மூன்று கால என. இறப்பு எதிர்வு நிகழ்வு என்னும் மூன்று காலங்களுள் ஏதேனும் ஓர் காலத்தோடு சேர்ந்துக் காரியம் தோன்றுவதின்றும், சொரூபமாகக் காரியத்தில் எதிர்கால சம்பந்தம் பிரதீதியாகின்றது ஆயினும் பிரவிருத்தியில் எதிர்கால சம்பந்தம் பிரயோஜகமன்றும் வன்னியின் கண்ணுள்ள பிங்கலத்தன்மை அன்னியதாசித்தமாதலால் தூமத்திற்குப் பிரயோஜகமாகாதது போன்று. இராகாதியோ வர்த்தமானகால சம்பந்த முடையதாகியே பிரவிருத்தியினபாவ விரோதியாகிப் பிரவர்த்தக மாமாதலின். எது மூன்று காலத்தோடு கூடாததாய் பிரவிருத்தியின் அபாவத்திற்கு விரோதியோ அது காரியமாம், ராகாதியின் கண்ணும் கடாதிபதத்தாற் பிரதீதியாகின்ற கடாதியின் கண்ணும் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டு லக்ஷணத்தில் இரு தலங்களாம்.

பிரபாகரரது மதத்தையநுசரித்த வேறு சிலருடைய நியோகவடிவ காரிய லக்ஷணத்தைக் கூறுகின்றார். தனது விஷயத்தில் இஷ்டசாதனத் தன்மையை போதிப்பதாய் பிரேரிப்பது எதுவோ அது காரியம் என காரியத்தின் லக்ஷணம் இம்மதத்திற் சித்தமாகின்றது. இந்த லக்ஷணத் தில் பிரேரிப்பது காரியம் என இவ்வளவே கூறின் ராகத்தின் கண் அதிவியாப்தியாம் ஆதலால் தனது விஷய என்பதாதி கூறப்பட்டது. தனது விஷயத்தின் கண் இஷ்டசாதனத் தன்மையைப் போதிப்பது காரியம் என இவ்வளவு மாத்திரங்கூறின் இஷ்டசாதனத் தன்மையைப் போதிக்கும் பிரமாணத்தின் கண் அதிவியாப்தியாம். ஆதலால் பிரேரிப்பது எனக் கூறப்பட்டது. பிரமாணத்திற்குப் போதகத் தன்மையேயுளது பிரேரகத்தன்மையின்றும். ஆதலின் பிரமாணத்தில் நின்றும் வியாவிருத்தி சித்திக்கின்றது. இந்த லக்ஷணமோ பகுதியின் பொருளான யாகாதிவடிவகாரியத்தினும் விலக்ஷணமான நியோகவடிவ காரியவிஷயகமாம். தனது விஷயத்தின் கண் இஷ்டசாதனத்தன்மை யின் போதகத்தன்மையை நிர்த்தேசித்தலால் (சொல்லுதலால்) இந்த லக்ஷணத்திற்கு நித்தியகர்மத்தாலுண்டான நியோகத்தின் கண் அவ்வியாப்தியாம், அதன் விஷயமான சந்தியாவந்தனம் முதலிய நித்தியகர்மத்தின் கண் இஷ்டசாதனத்தன்மையை யங்கீகரியாமையின். என்று சொல்லற்க. ஆண்டும் நியோகத்திற்கே கிருதியின் உத்தேசியத்

தன்மையால் இஷ்டத்தன்மையுண்மையின் ஆண்டு பகுதியின் பொருளிற்கும் இஷ்டசாதனத்தன்மை பொருந்துதலின். ஆண்டும் லக்ஷணம் சம்பவித்தலாலென்று உணர்க. இவ்வாறு லக்ஷணம் சித்தித்தபோது கிருதி சாத்தியத்துவம், பலவதனிஷ்ட அநுபந்தித்துவம் முதலிய ஏதேனும் ஓர் விசேஷணத்தோடு கூடியதாந்தன்மையால் இஷ்டசாதனத்தன்மை ஞானத்திற்குப் பிரோகத்தன்மையைக் கற்பிக்கினும் அந்த ஞானத்தின் கண் காரியத்தின் லக்ஷணம் செல்லுகின்றதில்லை. இஷ்டசாதனத்வத்தின் போதகத்தன்மை இஷ்டசாதனத்வ ஞானத்தின் கண் இன்மையாலென்பது கருத்து.

'சொர்க்ககாமன் யஜிக்குக' என்பது முதலிய வாக்கியங்களில் லிங் (வியங்கோள்விகுதி) முதலியவற்றால் உலகின் கண்ணே கார்ய வித்பத்தியை யநுசரித்துக் காரியம் அறியப்படுகின்றது. அந்தக் காரியமும் பகுதியின் பொருளான யாகாதியினும் வேறேயாம். இச்சிக்கப் படுகின்ற சொர்க்கத்தின் சாதனத்திற்கே சொர்க்ககாமியினது கார்யத் தன்மையுண்மையின் யாகத்திற்கு க்ஷணிகவிநாசத்தால் சொர்க்க சாதனத்தன்மையின்மையின் யஜிக்குக என்னும் சப்தத்தாற் பிரதீதியாகின்ற சொர்க்கசாதனவடிவ காரியமும் யாருடையது? எவ்விடத் திருக்கின்றது? என்னும் ஆகாங்க்ஷையின் வசத்தால் நியோஜ்யவடிவ அதிகாரியும் விஷயமுமாகிய இரண்டனையும் அபேக்ஷிக்கின்றது. யஜிக்குக என்னும் சப்தத்தால் கிருதிசாத்தியத் தன்மைவடிவத்தால் பிரதீதியாகின்ற கார்யத்திற்கு; கார்யம் எதனையாசிரயித்ததும் எதனை விஷயஞ் செய்வதுமான கிருதியினால் சாத்தியமாம் என்னும் ஆகாங்க்ஷையினால் கிருதியின் ஆசிரயமும் விஷயமும் கிருதியை நிரூபிக்கும் வாயிலாக அபேக்ஷிக்கப் படுதலின் (அதாவது கிருதியானது ஆகாங்க்ஷையோடுகூடிய பதார்த்தமாம்.) கிருதி சப்தத்தைக்கேட்டலினால் எதனை விஷயஞ் செய்யும் கிருதி, எதன் கண்ணுள்ள கிருதியென ஆகாங்க்ஷையுண்டாகின்றது. பிரகிருதத்தில் கிருதிக்கு ஆசிரயம் சொர்க்ககாமி புருஷன். கிருதிக்கு சாக்ஷாத் விஷயம் யாகம் முதலிய தாதுவின் அர்த்தமாம். இவ்விரண்டும் கிருதியை நிரூபிக்குந்தன்மையால் அபேக்ஷிக்கப்படுதலின்.

ஆண்டு சொர்க்ககாமன் அபூர்வவடிவ கார்யத்தை தனது கிருதி சாத்தியத்தன்மையால் அறிகின்றான். ஆதலின் நியோஜ்யனவன்.

தாத்வர்த்தயாகாதி சாக்ஷாத் கிருதி சாத்தியமாம். அது கிருதியின் அவச்சேத வாயிலாக நியோகத்தையும் அவச் சேதகஞ் செய்கின்றது. யாகவிஷயககிருதியால் சாத்தியம் அது (அபூர்வம்) எனப்பிரதீதியாகலின் ஆதலால் அது (யாகம்) அதற்கு (நியோகத்திற்கு) விஷயமாம், நியோஜ்ஜியன் யாகம் இரண்டோடுங்கூடிய நியோகவடிவ காரியம் சொர்க்ககாமன் யஜிக்குக என்னும் வாக்கியத்திற்குப் பொருளாம், இவ்வாறு பகுதிப்பொருளினும் வேறான நியோகவடிவ காரியத்திற்கு சுபாவமாகக்காரியத் தன்மைச் சம்பவியாமையின் தன்னிடத்து (நியோகத்தில்) கிருதி சாத்தியத்தன்மையின் நிருவாகத்தின் பொருட்டு தனது விஷயமான பகுதிப் பொருளின்கண் கிருதிசாத்தியத்தன்மையை ஆக்ஷேபிக்கின்றது யாகாதியின் கண் பரம்பரையால் காம்ய சொர்க்க சாதனத்தன்மை யின்றுயின் கிருதிசாத்தியத்தன்மை பொருந்தாது. சொர்க்கத்தை விரும்பும் புருஷன் எவனும் அதன் அசாதனத்தை யநுஷ்டிக்கின்றதில்லை யாகலின் நியோகவடிவகாரியமே பகுதிப் பொருளாயயாகாதியின் கண் இஷ்ட சாதனத்தன்மையையாக்ஷேபிக்கின்றதாகி அதன் கண் புருஷனைப் பிரேரிக்கின்றது ஆதலின் தனது விஷயத்தின் கண் இஷ்ட சாதனத்தன்மையைப் போதிப்பதாய்ப் பிரேரிப்பது எதுவோ அதனைக் காரியமென பிரபாகரமதத்தை யநுசரித்த சிலர் கூறுகின்றனர் என்பது பொருள் (132)

### அவதாரிகை

இப்போது அன்னியத்தையுத்தேசித்து எது கிருதிசாத்தியமன்றோ அதாவது தன்னை (காரியத்தை) யுத்தேசித்தே கிருதிசாத்தியமாமோ அது காரியமாம் என பிரபாகரரது மதத்தையநுசரித்த சிஷ்ட புருஷரது லக்ஷணத்தைக் கூறுகின்றார் :—

### சுலோகம்

या नान्यमुद्दिश्य कृतिः प्रवृत्ता
तयैव यद्व्याप्यतया प्रतीतम् ।
तदेव कार्यं कथयन्ति केचिद्
विचक्षणाः कार्यनिरूपणायाम् ॥ १३३ ॥

## பதவுரை

**अन्यम् उद्दिश्य**—சொர்க்கம் முதலிய அந்நியத்தை யுத்தேசித்து
**या कृतिः**—யாதொரு புருஷப்பிரயத்தனமானது
**न प्रवृत्ता**—உண்டாகவில்லையோ
**तया एव**—அந்தப்பிரயத்தினத்தினலேயே
**यद् व्याप्यतया**—எது சாத்தியத்தன்மையால்
**प्रतीतम्** — அறியப்பட்டதோ
**तदेव**—அதனையே
**कार्यम्** — காரியமென
**कार्यनिरूपणायाम्** —காரியத்தை நிருபணஞ்செய்வதில்
**विचक्षणाः**—நிபுணர்களான
**केचित् कथयन्ति**—சிலர் கூறுகின்றனர்

## *விசேஷவுரை*

பிரபாகரரையநுசரித்த பிராபாகரர் இங்ஙனங் கூறுகின்றனர் கிருதி சாத்திய சுபாவமுடைய காரியமே புருஷார்த்தமாம். சொர்க்காதி சொரூபமாக புருஷார்த்தமன்றும், சொர்க்காதி அபூர்வத்தாற் சாத்திய மாயினும் அபூர்வவடிவகாரியத்தைக் குறித்தே கருப்பதாசன் போன்று அங்கமாமாதலின், ஆதலால் காரியத்தை யுத்தேசித்தே சொர்க்ககாமனது முயற்சி பிரவிருத்தித்தது. என அன்னியத்தை யுத்தேசித்து என்பதாதி கூறப்பட்டது.

உலகின் கண் எப்படி ஒரு தனிகனுனவன் கர்ப்பமுள்ள ஸ்திரீயை, கர்ப்பத்திலுள்ள பாலகனைத் தனது தாசனுக்குதற்கு உத்தேசித்து ரக்ஷிக்கிறுன். இதனுனேயே கர்ப்பத்திலுள்ள தாசனுன பாலகனுனவன் தனிகனது ரக்ஷணக்கிரியைக்கு அங்கமாக அங்கீகரிக்கப்படுகின்றுனோ அப்படி சுகரூப சொர்க்கத்தைத் தனது சம்பந்தியாக்குதற்பொருட்டு காரியமானது புருஷனுடைய கிருதியினுல் சாத்தியமாகின்றது. இதனுனேயே சொர்க்கசுகம் காரியத்திற்கு அங்க மெனப்படுகின்றது. இப்பொருள் தான் கர்ப்பதாசன் என்னும் திருஷ்டாந்தத்தால் கூறப்பட்டது. (133)

## *அவதாரிகை*

அற்றேல் உலகின் கண் பகுதிப்பொருளாய யாகாதி விஷயக இராகமே பிரவர்த்தகமாகக் காணப்பட்டுள்ளது. அதனினும் வேறுகக்

காரியமானது அற்பமும் காணப்படவில்லை. என்னும் சங்கைக்கு அக்காரியத்தினது ராகத்தின் வியாவர்த்தகமான அசாதாரண வடிவத்தை கூறுகின்றார்:—

## சுலோகம்

**भूत्वा रागः कारणं पुंप्रवृत्तेर्नैवं कार्यं कार्यरूपं विहाय ।**
**रूपेणान्येनेष्यतेऽस्या निमित्तं भिन्दन्त्येवं रागकार्ये बहुज्ञाः ॥**

## பதவுரை

**रागः**—இச்சையானது
**भूत्वा**—பூர்வக்ஷணத்தில் இருந்து கொண்டு
**पुंप्रवृत्तेः कारणम्** – புருஷனது பிரவிருத்திக்குக் காரணமாம்
**एवं कार्यम्** – அது போன்று கார்யமானது
**कार्यरूपं विहाय**—சாத்திய சொரூபத்தை விட்டு
**अन्येन रूपेण**—சித்தஸ்வரூபத்தால்
**अस्याः निमित्तम्** – புருஷனது பிரவிருத்திக்குக் காரணமாக
**न इष्यते**- அங்கீகரிக்கப்படுகின்றதில்லை
**एवम्** – இந்தப்பிரகாரம்
**रागकार्ये**—இச்சையினையும் நியோகவடிவகார்யத்தினையும்
**बहुज्ञाः**—வித்துவான்கள்
**भिन्दन्ति**—வேறு பிரித்தறிகின்றனர்.

## விசேஷவுரை

சாத்தியவடிவம்—கிருதி உத்தேசியத்தன்மைவடிவம். ராகமானது சித்தித்ததாகி யாண்டும் பிரவிருத்தியிற் காரணமாகின்றது. அசித்த மாகி ராகமானது ஓரிடத்தும் பிரவிருத்திக்குக் காரணமாகின்றதில்லை, காரியமோ ராகத்தினும் விலக்ஷணவடிவமாம். அசித்தாவஸ்தையினை யுடையதற்கே கிருதியின் உத்தேசியத்தன்மை யுண்மையின் அத் தன்மைய காரியத்திற்கே தனது சித்தியின் பொருட்டு புருஷனைப் பிரவிருத்திப்பிக்குந்தன்மையானும், சித்தித்த காரியத்திற்கு கிருதியின் உத்தேசியத் தன்மை பொருந்தாமையால் பிரவிர்த்திப்பிக்குந்தன்மை பொருந்தாமையானும் என்க.

உலகின் கண் ராகத்திலும் வேருகப் பிரவிருத்தியைச் செய்வது காணப்படவில்லையே யென்று சொல்லக் கூடாது. சொர்க்காதி பல

விஷயக இச்சைக்கு நேரே யாகாதி பகுதிப் பொருளின் கண் பிரவிருத்திப்பிக்குந்தன்மையின்றும் பின்ன விஷயகத்தன்மை யுண்மையால். அதாவது ராகத்திற்கு விஷயம் சொர்க்கமாம் பிரவிருத்திக்கு விஷயம் யாகமாம். இராகமும் பிரவிருத்தியும் சமான விஷயகமாகவே கார்யகாரண பாவமாகின்றது என்பது பொருள். பகுதிப் பொருளாகிய யாகாதி விஷயக கர்த்தவ்யத்தன்மையின் ஞானமின்றி கிருதி சாத்தியத் தன்மையை விசேஷண மாகவுடைய பகுதிப் பொருளைவிஷயஞ் செய்கின்ற இச்சை சம்பவியாமையின் சமான விஷயக ஞானமின்றி சமான விஷயக இச்சை சம்பவிக்கின்றதில்லை, அந்த கர்த்தவ்வியத் தன்மையின் ஞானத்திற்கும் பகுதிப்பொருளினும் வேறாய விஷயம் இன்மையின் பகுதிப்பொருளே அதற்கு விஷயமாம். ஆதலின் அதுவே உலகின் கண் காரியமாம் என்னுங் கருத்துடையோராய்க் கூறுகின்றார் வேறுபிரித்தறிகின்றனர் என. (134)

## காரிய சேஷத்தின்கண் வேதாந்தப் பிராமாண்ய உபபாதனம்

### அவதாரிகை

இந்தப் பிரகாரம் காரியாந்நுவிதத்தின்கண் கோ முதலிய பதங்களிலுள்ள சத்தியின் நிர்வாகத்தின் பொருட்டு லௌகிககார்யத்தின் சொரூபத்தினையும் வைதிக கார்யத்தின் சொரூபத்தினையும் நிரூபித்து இப்போது வாக்கியத்தின் பாகவடிவ பதமானது வாக்கியார்த்தத்தின் ஒரு பாகவடிவ அர்த்தத்திற்கு வாசகமாமென்று தானேயறிகின்றான். என 130வது சுலோகத்தில் கூறப்பட்ட கார்யாந்நுவிதமான அவ்வவ் வர்த்த விசேஷத்தின் கண் கோ முதலிய பதங்களின் சக்தி நியமத்தினை உபபாதனம் செய்கின்றார் :—

### சுலோகம்

आवापोद्वापहेतोः पदमिदममुकस्याभिधाने समर्थं
स्योत्पत्त्यैवेति शक्तिप्रतिनियममिमं पार्श्ववर्ती तटस्थः ।
ज्ञानात्यालोच्य भूयो नयनिपुणमतिर्भागशः कार्ययुक्ते
वस्तुन्येतस्य हेतोरुपनिषदखिला कार्यशेषे प्रमाणम् ॥

## பதவுரை

**नयनिपुणमतिः** நியாயத்தை யநுசந்தானஞ் செய்வதில் குசலபுத்தி யுள்ளவனும்

**पार्श्ववर्ती**–சமீபத்திலிருப்பவனும்

**तटस्थः**–உதாசீனனுமாகிய பாலகன்

**आवापोद्वापहेतोः**-பசுவைக் கொண்டுவா என்னும் வாக்கியத்தில் கட்டு என்னும் பதத்தைச் சேர்த்தலும் கொண்டுவா என்னும் பதத்தை நீக்குதலுமாகிய ஏதுவால்

**भूयः आलोच्य**–அநேகந்தடவை அந்நுவயத்தை விசாரித்து

**इदं पदम्** – இந்தப்பதமானது

**अमुकस्य**–இந்தக்காரியான்வித அர்த்தத்தினை

**अभिधाने**–பிரதிபாதித்தலில்

**स्वउत्पत्त्या एव**–சுபாவத்தாலேயே

**समर्थ इति**–ஆற்றலுடையது என

**कार्ययुक्ते वस्तुनि**–காரியான்வித கோமுதலிய வஸ்துவின் கண்

**भागशः**–தனித்தனிப்பதத்திற்கு

**इमं शक्तिप्रतिनियमम्** – இந்த தனித்தனிநியதமான சத்தியினை

**जानाति**–அறிகின்றான்

**एतस्य हेतोः**–இக்காரணத்தால்

**अखिला उपनिषत्** – எல்லாச்சுருதிவாக்கியங்களும்

**कार्यशेषे**-காரியத்திற்கு அங்கமாயுள்ள பிரம்மத்தின் கண்

**प्रमाणम्** – பிரமாணமாம்

## விசேஷவுரை

குதிரையைக் கொண்டுவா என்னும் பிரயோகத்தில் குதிரை பதத்தைச் சேர்த்தலும் பசுவைக் கொண்டுவா என்னும் பிரயோகத்திலுள்ள பசுபதத்தின் நீக்கமுமிருக்கின்றது இவ்வாறு பசுவைக்கட்டு என்னும் பிரயோகத்தில் கட்டு என்னும் பதம் சேர்க்கப் பட்டிருக்கின்றது

பசுவைக்கொண்டுவா என்னும் பிரயோகத்திலுள்ள கொண்டுவா என்னும் பதம் தள்ளப்பட்டிருக்கின்றது இத்தன்மைய கொள்ளுதல் தள்ளுதல் வடிவ ஏதுவால் கோமுதலிய பதந்திற்கு கோத்துவ முதலிய காரியான்வித அர்த்தத்தினைப் பிரதிபாதித்தலில் இயற்கையாலேயே சாமர்த்திய முடையது என தனித்தனிப்பதத்தில் தனித்தனிப்பதார்த்தத்தில் நியதமான சத்தியினை காரிய விசிஷ்ட வஸ்துவின்கண் அறிகின்றான் என் அன்வயஞ்செய்க

சமீபத்தில் இருப்பவனும் சக்தி ஞானத்தை விரும்புபவனுமான பாலகன் மத்திம விருத்தனுடைய பசுவைக் கொண்டுவருதல் முதலிய பிரவிருத்தியினால் பசுவைக் கொண்டுவருதல் கர்த்தவ்வியமாம் என்னும் பிரவர்த்தக ஞானத்தை அநுமித்து அந்த ஞானத்தின் கண் பசுவைக் கொண்டுவா என்பது முதலிய வாக்கியத்திற்கு அந்நுவயவியதிரேகங்களால் காரணத்தன்மையையும் அநுமித்து அந்த வாக்கியத்திற்கு அந்தப்பிரவர்த்தக ஞானத்தின் கண் சம்முக்தத்தன்மையால் (சாமான்ய ரூபத்தால்) சக்தியையறிகின்றான். என்று கூறப்பட்டது அதன் பின்பு பசுவைக் கட்டு என்பது முதலிய வேறு பிரயோகங்களில் கோபதத்தினை பிரயோகிக்குங் காலத்து முன்பு அறியப்பட்ட கோபதத்தின் பொருளைக் காண்கின்றவனும் கன்றைக்கொண்டுவா என்பது முதலிய வேறு பிரயோகங்களில் கோபதமின்மையின் கோபதத்தின் பொருளைக் காணுதவனும் அந்நுவயவியதிரேகங்களால் கோபத மானது யாதாவதொரு காரியான்வித கோத்துவத்தின் கண் சக்தியினை யுடையது. என அறிகின்றான் காரியசாமான்யத்திற்கு வியபிசாரமின் மையின். இவ்வாறு கொண்டுவா என்பது முதலிய பதமும் யாதாவ தொரு காரகான்வித ஆனய்நதியின் கண் சக்தமாம் என அறிகின்றான். இவ்வாறு அந்நியகாரகபதமும் அந்நிய கிரியாபதமும் அவ்வப் பதங்களின் கொள்ளுதல் தள்ளுதல் வடிவ ஏதுக்களால் அவ்வக் காரியான்வித அர்த்தத்தின் கண் சக்தியினையுடையது என தனித்தனிப் பதத்தின் கண் தனித்தனிச் சக்தியின் நியமத்தினையறிகின்றான். முதலில் காரிய சம்பந்தமுடைய கவாதியின்கண் கிரஹிக்கப்பட்ட சக்திக்குப் பங்கம் வருதலால் கேவலவஸ்துவின் கண் சக்திஞானம் பொருந்தாது ஆதலின், இத்துணை கிரந்தமே நியாயத்தில் குசலபுத்தியுள்ளவன் என்பதனுல் கூறப்பட்ட நியாயமாம்;

பிரவர்த்தக வாக்கியத்தின் அதீனமாகச் சக்திஞானம் உண்டாகின்றது. பிரவர்த்தகமும் காரியஞானமாம் என்பது முதலிய வேறு நியாயமும் அநேகந்தடவை விசாரித்து என்பதனுல் தரிசிக்கப்பட்டது. ஆதலால் கோ முதலிய பதங்களுக்குக் கார்யான்விதத்தின்கண் சக்தியாம் என்பது நியாயசித்தமாம். இவ்வாறு வேதங்களுக்கும் கார்யத்திற்கு அங்கபூதமாயுள்ள பிரம்மத்தின் கண்ணேயே பிராமாண்யமாம் என்பது பொருள் (135)

## காரியத்தில் மதபேதத்தால் லிஙாதிகட்கு சக்திக் கிரஹண உபபாதனம்

### அவதாரிகை

அற்றேல், கோ முதலிய பதங்களுக்கு கார்யான்வித அர்த்தத்தின் கண் சக்திஞானம் இருக்குக. யஜிக்குக என்பது முதலிய காரிய பதத்திற்கு சக்திக்கிரஹணம் எவ்வாறுண்டாம்? நியோகத்திற்குப் பிரமாணந்தர விஷயத்தன்மையின்மையால் அதன் கண் லிங் முதலிய விகுதிகளுக்கு சக்திக்கிரஹணம் சம்பவியாமையின் லிங் முதலிய விகுதிகளாலேயே உபஸ்தித (அறியப்பட்ட)மான நியோகத்தின் கண் சக்தி ஞானம் உண்டாம் என்று சொல்லற்க சக்தி ஞானம் உண்டாவதற்கு முன்பு லிங் முதலிய விகுதிகளுக்கு நியோகத்தினைத் தோற்றுவிக்குந் தன்மை பொருந்தாமையின் என்னுஞ் சங்கைக்கு பிரபாகரரை யநுசரித்த வாது மதபேதத்தால் லிங் முதலியவற்றின் சக்திக்கிரஹணத்தின் பிரகாரங்களைத் தெரிசிப்பிக்கின்றார், ஆண்டு முதலில் உலகின்கண் ஆக்ஞை முதலியவையே பிரவர்த்தகங்களாம் வேதத்தின் கண்ணே சொர்க்காதி பலபரியந்தம் நிலைத்திருப்பதான நியோக வடிவ காரியம் பிரவர்த்தகமாம். இரண்டிடத்தும் பிரவர்த்தகத் தன்மை வடிவ சாதாரண தர்மம் ஒன்றேயாம். ஆதலால் பிரவர்த்தகத் தன்மை தர்மத்தினுல் நியோகத்தின் கண் லிங் முதலிய விகுதிகளுக்குச் சக்தி ஞானமுண்டாம். என்று சிலர் கூறுகின்றனர். அவர் மதத்தினைக் கூறுகின்றார் :—

### சுலோகம்

आज्ञादिभेदेष्वनुवर्तमाने प्रवृत्त्यभावस्य विरोधिमात्रे ।
लिङादिशब्दस्य स वेत्ति शक्तिं प्रवर्तकाख्याविषयत्वयोग्ये ॥

## பதவுரை

**प्रवर्तकाख्याविषयत्वयोग्ये**-பிரவர்தக சப்தத்தின் விஷயத் தன்மைக்கு யோக்கியமும்.

**आज्ञादि भेदे अपि**-ஆக்ஞை முதலிய விசேஷத்திலும்

**अनुवर्तमाने**-தொடர்ந்திருப்பதும்

**प्रवृत्त्यभावस्य**-பிரவிருத்தியினபாவத்திற்கு

**विरोधिमात्रे**-கேவல விரோதியுமான பிரவர்த்தகத்துவ சாமானியத்தில்

**लिङादिशब्दस्य**-லிங் முதலிய பதத்திற்கு

**शक्तिम्**-சக்தியினை

**सः वेत्ति**-அவன் (சக்திஞானத்தை விரும்பும்பாலகன்) அறிகின்றான்

## விசேஷவுரை

நிகிருஷ்ட புருஷனைக்குறித்து உத்கிருஷ்ட புருஷனுடைய பிரேரணை ஆக்ஞையாம். முதலிய என்னும் பதத்தால் யாசனையும் அநுக்ஞையும் கிரஹிக்கப்படுகின்றது. உத்கிருஷ்ட புருஷனைக்குறித்து நிகிருஷ்ட புருஷனுடைய பிரேரணை யாசனையாம். சமான புருஷனைக் குறித்து சமான புருஷனுடைய பிரேரணை அநுக்ஞையாம்.

பிரவர்த்தக சப்தத்தின் அபிதேயத்தன்மைக்கு யோக்கியமான பிரவர்த்தகத்துவ சாமானியத்தில் லிங் முதலிய சப்தத்தின் சக்தியினை உலகின் கண் மனிதர்கள் அறிகின்றார்கள். இவ்வாறு கோத்துவம் முதலிய சாமானியத்தில் சக்தியினையுடைய கோமுதலிய பதத்தால் கோமுதலிய வியக்தியின் ஞான முண்டாவது போன்று லிங் முதலிய பதத்தால் பிரதிபாதிக்கப்பட்ட பிரவர்த்தகத்வ சாமானிய மாத்திரத்தில் ஆக்ஞை முதலிய விசேஷமின்றி லிங் முதலிய பதத்திற்கு பரியவஸான மின்மையின் ஆக்ஞை முதலியவையும் நியோகமும் சித்திக்கின்றது. என்பது கருத்து. அதாவது விசேஷமின்றி சாமானியம் இருப்பதில்லை யென்னும் நியாயத்தால் சாமானியத்தால் விசேஷம் ஆக்ஷேபிக்கப் படுகின்ற தென்பது கருத்து. பிரகிருதத்தில் பிரவர்த்தகத்துவம் சாமான்யம் ஆக்ஞை முதலியவை விசேஷமாம். (136)

## அவதாரிகை

வேறு சில வித்துவான்களோ உலகின் கண்ணும் நியோகம் உளது. ஆனால் அது உபாதியோடு கூடியது. வேதத்தின் கண்ணே அந்த நியோகமானது சுவதந்திரமாம். அதாவது உபாதியற்றது. அவ்விரண்டின் கண்ணும் அனுகதமான நியோகத்துவ சாமான்யத்தின் கண் லிங் முதலிய பதத்தின் சக்திக்கிரஹணமாம் என்று கூறுகின்றனர். அவர் மதத்தைக் கூறுகின்றார் :—

## சுலோகம்

अन्ये वदन्ति निरुपाधिनियोगरूपं
वेदे भवत्यपुरुषप्रभवे स्वतन्त्रम् ।
लोके पुनः पुरुषधीरचितेषु कार्यं
सोपाधिकं तदिति कारणतो वचःसु ॥ १३७ ॥

## பதவுரை

अन्ये—வேறுசில வித்துவான்கள்
अपुरुषप्रभवे-அபௌருஷேய
वेदे—வேதத்தின் கண்
नियोगरूपम्—நியோகத்தின் வடிவமானது
निरुपाधि—உபாதியற்றதும் இதனாலேயே
स्वतन्त्रम्—சுதந்திரமுமாக
भवति—இருக்கின்றது எனக் கூறுகின்றார்
लोके पुनः—உலகின் கண்ணே
पुरुषधीरचितेषु—புருஷருது புத்தியாற் செய்யப்பட்ட
वचःसु—பௌருஷேயவாக்கியங்களில்
कारणतः—புருஷ சம்பந்தவடிவ காரணத்தால்
तत् कार्यम्—நியோக வடிவ காரியத்தினை
सोपाधिकम् इति—உபாதியோடு கூடியது என
वदन्ति—கூறுகின்றார்கள்

## விசேஷவுரை

அபௌருஷேய என்பதனுல் வைதிகநியோகத்தின் நிருபாதிகத் தன்மையில் யுத்தி கூறப்பட்டது, இதனுல் அபௌருஷேய வேதத்தின் கண் ஆஞ்ஞை முதலியவை சம்பவியாமையின் நியோகமானது அவற்றை யுபாதியாகவுடையதன்றும் என்பது பொருள் உலகின் கண்ணே அதனினும் மாறுபாட்டைக் கூறுகின்ருர் உலகின் கண்ணே தான.

ஓகாரம் விசேஷத்தைத் தோற்றுவிக்கின்றது, விசேஷத்தினையே கூறுகின்ருர் உபாதியோடு கூடியது என இனிக் கூறப்படும் உபாதி யோடு கூடியது என்பது பொருள். இலௌகிகநியோக வடிவ காரியத்தின் கண் உபாதியை யுபாதானஞ் செய்யும் பொருட்டு காரணத்தால் என்று கூறப்பட்டது அதனையே விஸ்தரிக்கின்றனராய் வாக்கியங்களை விசேஷிக்கின்ருர் புருஷரது புத்தியாற்செய்யுப்பட்ட என இலௌகிக வாக்கியங்களுக்கு புருஷசம்பந்த மிருத்தலால் என்பது பொருள். (137)

## அவதாரிகை

உலகின் கண் அவ்வுபாதி யாது என்னும் ஜிஞ்ஞாசையுண்டாகக் கூறுகின்ருர் ; —

## சுலோகம்

आज्ञायाच्ञाद्युपाधिप्रणिपतितवपुः साधनेहानुबद्धं
विज्ञातोपायभावं विषयमनुसरत् पौरुषेयीषु वाक्षु ।
वेदे कर्तृस्वरागाद्युपधिविरहिते कर्तृशून्ये ततोऽस्मिन्
सर्वत्रैकस्वभावस्थितवपुषि भवेल्लब्धशक्तिर्लिङादिः ॥

## பதவுரை

**पौरुषेयीषु वाक्षु**—பௌருஷேயமான லௌகிக வாக்கியங்களில்
**आज्ञा याच्ञादि उपाधि**—ஆக்ஞை, யாசனை, முதலிய நிமித்தத்தால்
**प्रणिपतितवपुः**—சித்தித்த சொரூபமுடைய
**साधन ईहा**—பலஸாதன சேஷ்டை (இச்சை) யோடு
**अनुबद्धं**—கூடியதும்

**विज्ञात उपायभावम्** - அறியப்பட்ட சாதனத்தன்மையினையுடைய

**विषयम्** – பகுதிப் பொருளாய விஷயத்தை

**अनुसरत्** – அனுசரிக்கின்றதுமாய நியோகத்தின் வடிவம் இருக்கின்றது,

**कर्तृशून्ये वेदे**–அபௌருஷேய வேதத்தின் கண்

**कर्तृस्थरागादि उपधि विरहितम्** – கர்த்தாவின் கண்ணுள்ள ராகாதி உபாதியற்றதாய் நியோக மிருக்கிறது,

**ततः**–ஆதலால்

**सर्वत्र**–லோகத்திலும் வேதத்திலுமாகிய எவ்விடத்தும்

**एकस्वभावस्थितवपुषि**-ஒரேவடிவத்தால் நிலைத்த சொரூபமுடைய

**अस्मिन्** – இந்த நியோகத் தன்மையின் கண்

**लिङादिः**–லிங்முதலிய பதம்

**लब्ध शक्तिः भवेत्** – கிரஹிக்கப்பட்ட சக்தியினையுடையதாய் ஆகும்.

அல்லது

**आज्ञा याञ्चादि उपाधि प्रणिपतितवपुः** } ஆக்ஞை யாசனை முதலிய நிமித்தத்தால் பிராப்தமான சொரூப முடையதும்

**साधनईहानुषक्तम्** – பலசாதன இச்சையை விசேஷணமாக வுடையதும்

**विज्ञात उपाय भावम्** –அறியப்பட்ட உபாயத்தன்மையினையுடைய

**विषयं अनुसरत्** – பகுதிப்பொருளைவிஷயஞ் செய்கின்றதுமான வடிவம் நியோகத்தின் சொரூபமாம்.

மற்றது முன்போலவே

### *விசேஷவுரை*

மாணாக்கர் முதலியோர் உபாத்தியாயர் முதலியோரது ஆக்ஞை முதலியவற்றாலேயே பசுவைக் கொணர்தல் முதலியவற்றில் பிரவர்த்திக் கின்றனர். இவ்வாறாகவே ஆக்ஞை முதலிய வடிவமான யாதொரு நிமித்தமுண்டோ அதனால் பிராப்தமான சொரூபத்தினையுடைத்தான

பலசாதன சேஷ்டையை விசேஷணமாகவுடையது. அல்லது சொரூபத் தினையுடைத்தான என்பதும் பல சாதன சேஷ்டையை விசேஷணமாக வுடைய தென்பதும் தனித்தனியே நியோகத்திற்கு விசேஷணமாம்.

அதற்கு வைதிக கார்யத்தில் நின்றும் வேறு விலக்ஷணத்தன்மை யையும் கூறுகின்றார் அறியப்பட்ட சாதனத்தன்மை என். நியோகப் பிரதீதிக்கு முன்னரே எதன் கண் இஷ்ட சாதனத் தன்மை யறியப் பட்டதோ அப்படிப்பட்ட பகுதிப் பொருளாகிய விஷயத்தை அநுசரிப்பது. அதாவது பகுதிப் பொருளானது எப்பலசாதனத்தன்மையால் முன்னர் அறியப்பட்டதோ அதற்கு அநுகூலமாகின்றது. பகுதிப் பொருளிற்கு நியோகத்தின் அதீனமாகப் பலசாதனத்தன்மையின்றும் என்பது பொருள். காரிய மென்னும் பதத்தை முன் சுலோகத்தில் நின்றும் ஈண்டும் ஆவிருத்தி செய்க.

வேதத்தின் கண் உபாதியற்ற நியோகத்தின் சொரூபம் உண்டு என்று கூறப்பட்டது. அதனையிப்போது உபபாதனம் செய்கின்றார், அபௌருஷேய வேதத்தின் கண் என வேதத்தின் கண் கர்த்தாவின் ஆக்ஞை முதலிய உபாதியின்றும் என்பது பொருள். எதனால் உபாதியின்று என்னும் சங்கை அபௌருஷேய என்பதனால் நிவர்த்திக்கப்பட்டது. அபௌருஷேய வேதத்தின் கண் கர்த்தா இன்மையின் அவனது ஆக்ஞை முதலியது மின்றும்.

ஆதலால், வேதத்தின் கண் நியோகம் நிருபாதிகம் என்பது பொருள். அற்றேல், இங்ஙனம் லோகத்தினும் வேதத்திலும் நியோகத் திற்கு வைலக்ஷண்யத்தையுடன்படின் விலக்ஷண நியோகத்தின் கண் லிங் முதலியவற்றின் வாச்சியத்தன்மை எப்படிக் கூடும் என்னு மிடத்துக் கூறுகின்றார் ஆதலாலென. லோகத்தின் கண்ணும் வேதத்தின் கண்ணும் நியோகத்துவ வடிவ ஒரே தன்மையால் நிலைத் திருக்கின்ற சொரூபமுடைய நியோகத்தின் கண் அதாவது நியோகத்துவ சாமானியத்தில் லிங் முதலிய பதத்திற்கு சக்திக்கிரஹணம் உண்டாகின்றது. ஆதலின் லிங்காதிக்கு ஏகார்த்தத்தன்மை பொருத்த மேயாம் என்பது கருத்து. (138)

**அவதாரிகை**

நியோக விஷயத்தில் நவீன பிராபாகரர் மதத்தைக் கூறுகின்றார் :—

## சுலோகம்

अन्ये भिन्नस्वभावं विविधमभिदधत्यानुरूप्येण कार्यं
लोके धात्वर्थरूपं श्रुतिवचसि पुनस्तन्नियोगाख्यमेव ।
संमुग्धे तत्र शक्तिं शिशुरयमवगम्याऽऽदितो न्यायचक्षुः
पश्चाद्वैदिकवेद्यं वदति लिङिति च प्रेक्षते निश्चयेन ॥ १३९ ॥

## பதவுரை

आनुरूप्येण—யோக்கியதையின் மகிமையால்

कार्यम्— நியோகவடிவ காரியமானது

विविधम्—(உலகின் கண்ணும் வேதத்தின் கண்ணும்) நானாவித மாகிய

भिन्नस्वभावम्— வேற்றுச்சொரூபத்தினையுடையதாயிருக்கின்றது.

( அவ்வேற்றுமையினையே கூறுகின்றார் )

लोके धात्वर्थरूपं—உலகின் கண் பகுதிப் பொருள் வடிவமாம்

पुनः श्रुतिवचसि—வேதத்தின் கண்

तत् नियोगाख्यमेव-கார்யமானது சொர்க்கபர்யந்தம் நிலைத்திருப்ப தான நியோகவடிவமேயாம்

( சக்தியின் கிரகணப்பிரகாரத்தைக் கூறுகின்றார் )

संमुग्धे—தாத்வர்த்தரூபத்தாலும் நியோகரூபத்தாலும் விசேஷ விவக்ஷையற்ற

तत्र—கார்யமாத்திரத்தில்

आदितः—முதலில்

अयं शिशुः — இந்தப்பாலகனானவன்

शक्तिमवगम्य—சக்தியினையறிந்து,

पश्चात् —பின்பு

न्यायचक्षुः — இனி சொல்லப் போகும் நியாயத்தையறிந்தவனும்

लिङ्—லிங் பதயானது

वैदिकवेद्यम् — வைதிக நியோகத்தை

**वदति**—கூறுகின்று

**इति निश्चयेन**—என்று நிச்சயமாக

**प्रेक्षते**—அறிகின்றான் என்று

**अन्ये**—வேறு சில நவீன மீமாம்சகர்கள்

**अभिदधति**—கூறுகின்றார்கள்.

***விசேஷவுரை***

நாநாவிதம் என்னும் பதத்தின் வியாக்கியானம் வேற்றுச் சொரூபம் என்பது. தாத்வர்த்தம்=பகுதிப்பொருள். (139)

***அவதாரிகை***

அந்த நியாயத்தினையே தெரிசிப்பிக்கின்றார் :—

***சுலோகம்***

**धात्वर्थाख्यानशक्तो यदि भवति गुणाद्वर्तितुं वैदिकेऽयं**
**संबन्धाज्ञानहेतोरनलमथ पुनर्वैदिके शक्तिमान्स्यात् ।**
**तत्संबन्धात्क्रियामप्यभिवदितुमलं लक्षणावृत्तितोऽयं**
**लिङ्शब्दस्तेन कार्ये श्रुतिवचनगते शक्त इत्यध्यवस्येत् ॥**

***பதவுரை***

**अयम्**— லிங் முதலிய சத்தமானது

**धात्वर्थाख्यानशक्तः**—பகுதிப்பொருளைப் பிரதிபாதித்தலில் சாமர்த்தியமுடையதாய்

**यदि भवति**—ஆகுமாயின்

**संबन्धाज्ञानहेतोः**—பிரமாணாந்தரத்தால் நியோகத்தின் கண் சக்தியார்த்தசம்பந்தித்தன்மையினை அறியாமை ஆகிய ஏதுவால்

**वैदिके**—வைதிகநியோகத்தின் கண்

**गुणाद्वर्तितुं**—லக்ஷணையால் பிரவிர்த்தித்தற்கு

**अनलम्** — அசமர்த்தமாகும்

**वैदिके**—லிங் முதலிய சத்தமானது வைதிக நியோகத்தின் கண்

शक्तिमान् – சக்தியினையுடையதாக

अथ पुनः स्यात् – ஆகுமாயின்

तत्संबंधात् – முக்கியார்த்த நியோக சம்பந்தத்தால்

लक्षणावृत्तितः–இலக்ஷணா விருத்தியால்

क्रियाम् अपि–பகுதிப்பொருளினையும்

अभिधवितुम् – பிரதிபாதித்தற்கு

अलम् –ஆற்றலுடையதாம்

तेन–அக்காரணத்தால்

श्रुतिवचनगते–வேதவாக்கியத்தாற்சித்தித்த

कार्ये–நியோக வடிவ கார்யத்தின் கண்

अयं लिङ्शब्दः–இந்த லிங் பதமானது

शक्त इति–ஆற்றலுடையதாமென்று

अध्यवस्येत् – நியாய குசல பாலகன் நிச்சயிப்பான்

## விசேஷவுரை

உலகின்கண் பசுவைக்கொண்டுவா என்பது முதலிய பிரவர்த்தக வாக்கியத்தால் முதலில் ஆநயனாதி காரியத்தின்கண் லிங் முதலிய பதத்திற்கு சக்தி ஞானமுண்டாகின்றது காரியமும் உலகின் கண்ணும் வேதத்தின் கண்ணும் விலக்ஷணமாம். அதாவது உலகில் பகுதிப் பொருள் வடிவமாம் வேதத்தில் நியோகவடிவமாம். லிங் முதலிய பதத் திற்கு அநேக காரிய வடிவ அர்த்தத்தைக் கொள்ளுதலும் பொருத்தமன்று.

(சங்கை) காரியத்துவ சாமானியமே லிங் பதத்திற்குப் பொருளாம் ஆதலால் முற்கூறிய அநேகார்த்தத்துவ வடிவதோஷமின்றும் காரியத்துவ சாமானியம் விசேஷம் (பகுதிப்பொருள் நியோகம்) இன்றி பரியவசானமாகாமையினாலும் கோத்தன்மையின்கண் சக்தியுள்ள கோ முதலிய பதத்தால் கோமுதலிய வியத்தியின் பிரதீதியுண்டாவதுபோன்று லிங் முதலிய பதத்தால் காரியத்தின் பிரதீதி லோகவேதமாகிய இரண்டிடத்துமுண்டாகும் என்று கூறற்க.

(சமாதானம்) ஜாதி சக்தி வாதி மதத்தில் கோமுதலிய சப்தத்திற்கு கோமுதலிய வியக்தி வாச்சியம் எங்ஙனம் ஆகின்றதில்லையோ அப்படி வைதிக நியோக வடிவ காரியத்திற்கும் வாச்சியத்தன்மையினபாவம் பிராப்தியாம். ஆதலினாலும் பிரமாணாந்தரத்தால் வாச்சிய சாமான்ய சம்பந்தித்தன்மையால் அறியப்பட்டதற்கே கோமுதலிய வியக்திக்கு ஆட்சேபத்தால் அடையப்படுந்தன்மையிருப்பதுபோன்று ஆட்சேபத்தால் அடையப்படுந்தன்மையுண்மையினாலும் என்க. ஆதலால் ஓரிடத்து லிங் பதமானது லாக்ஷணிகமாம் எனக்கொள்ளுதல் வேண்டும்.

இவ்வாறாகவே எவ்வர்த்தத்தில் லக்ஷணை ? எவ்வர்த்தத்தில் சக்தி உளது ? என்று விசாரிக்கவேண்டும். தாத்வர்த்தத்தின்கண் லிங்காதி பதமானது சக்தியுடையதாமாயின் அப்போது லக்ஷணையால் வைதிக நியோகத்தின்கண் லிங்காதி சப்தமானது பிரவிர்த்தித்தற்கு அசமர்த்த மாகும். எதனாலெனின் வாச்சியார்த்த சம்பந்த ஞானமின்மையின். அதாவது வாச்சியார்த்த சம்பந்தமுடையதாக பிரமாணாந்தரத்தாலறியப் பட்ட கரை முதலியவற்றில் கங்கை முதலிய பதத்திற்கு லக்ஷணை காணப்படுகின்றது. தாத்வர்த்த சம்பந்தமுடையதாக வைதிக நியோக வடிவ காரியமானது பிரமாணாந்தரத்தால் அறியப்படவில்லை. அபூர்வ வடிவ காரியத்திற்கு பிரமாணாந்தரத்தாலறியத் தகுதியின்மையின். ஆதலால் சக்திய சம்பந்த ஞானமின்மையின் நியோகத்தின் கண் லிங் முதலிய பதத்திற்கு லக்ஷணையின்று மென்பது பொருள்.

அல்லது, வைதிக நியோகத்தின் கண் லிங் சப்தமானது சக்தியை யுடையதாக ஆகுமாயின் வாச்சியார்த்த நியோக சம்பந்தத்தினாலே பகுதிப் பொருளையும் லக்ஷணா விருத்தியால் பிரதிபாதித்தற்குச் சமர்த்தமாகும். அதாவது லிங் முதலியவற்றால் வைதிக காரியம் சக்தி விருத்தியால் கூறப்படுமாயின், அப்போது விஷயபூதமான நியோகமானது தாத்வர்த்த சம்பந்தமுடையதாகவே லிங் முதலியவற்றால் கூறப்படுதலின் வாச்சி யார்த்த சம்பந்தித் தன்மையாலறியப்பட்ட தாத்வர்த்தத்தின் கண் லக்ஷணை பொருத்தமாம். லௌகிக ஆநயனாதி கிரியையானது வைதிக நியோக சம்பந்தமுடையதாக அறியப்படவில்லை. அங்ஙனமாயினும் வைதிக நியோக சம்பந்தமுடைய யாகாதி தாத்வர்த்தத்தின் சஜாதீயக்கிரியையாம். ஆதலின் லௌகிகக் கிரியையும் வைதிக

நியோக சப்பந்தமுடையதாக அறியப்படுகின்றது. ஆதலின் பகுதிப் பொருளின் கண்ணேயே லக்ஷணையாம் வைதிக நியோக வடிவ காரியம் உலகில் சக்திக்கிரஹண காலத்தில் அறியப்படாதாயினும் சொர்க்க காமியாகிய நியோஜ்யன் எனப்பெயரிய அதிகாரியின் சமீப உச்சாரணத்தினால் வைதிக காரியம் அறியப்படுகின்றது. அதாவது சொர்க்காதி பலபர்யந்தம் நிலைத்திருப்பதான அபூர்வவடிவ வைதிக நியோகமின்றி சொர்க்ககாமியாகிய நியோஜ்யனுக்கு யாகாதி பகுதிப்பொருளின்கண் பிரவிருத்தி பொருந்தாது என்னும் அர்த்தாபத்திப் பிரமாணத்தினால் நியோகம் அறியப்படுகின்றது. இவ்வாறு அறியப்பட்ட நியோகத்தின் கண் லிங் முதலிய பதத்திற்குச் சக்திவிருத்தியே உசிதமாம் என்பது அபிப்பிராயம். தாத்வர்த்தம்=பகுதிப்பொருள் **(140)**

## அவதாரிகை

அற்றேல், லிங் முதலிய பதத்தினது சமீப உச்சாரணமின்றியும் மலர்ந்த தாமரையின் மத்தியில் தேனை பிரமரம் குடிக்கின்றது. என்பது முதலிய இடங்களில் தாமரை முதலிய பிரசித்த பதங்களின் சமீப உச்சாரணத்தினால் பிரமரம் முதலிய பதங்களின் சக்தி கேவல வியக்தியில் கிரஹிக்கப்படுகின்றது. இவ்வாருகும்போது சர்வபதங்களுக்கும் கார்யான்விதத்தின் கண் சக்தி எங்ஙனம் சம்பவிக்கும்? மேற்கூறிய வாக்கியத்தின் கண் கார்யபோதக லிங் முதலிய பதமின்மையின் என்னுமிடத்துக் கூறுகின்ருர்:—

## சுலோகம்

एवं शब्दान्तराणां नयनिपुणमतिः शक्तिवित्स क्रमेण
प्रक्षेपोद्धारदर्शी भवति कतिपयैर्वासरैस्तत्र तत्र ।
तस्मात्कार्यान्वितार्थे सकलमपि पदं शक्तिमद्बुध्यमानो
भूताद्यर्थप्रतीतिं प्रति विमुखमनाः शाश्वतः स्यान्मनुष्यः ॥

## பதவுரை

**एवम्** – இந்தப்பிரகாரம்
**नयनिपुणमतिः** – நியாயத்தில் குசலபுத்தியுள்ள
**सः** – சக்திஞானத்தை விரும்பும் பாலகன்

**प्रक्षेपउद्धारदर्शी**–பிரமரம் முதலிய பதத்தின் பிரயோகத்தினையும் அதனினும் வேறான பதத்தின் அப்பிரயோகத்தினையும் காண்கின்றவனாகி

**कतिपयैः वासरैः** – சிலதினங்களினால்

**क्रमेण**–கிரமமாக

**शब्दान्तराणाम्** – லிங் முதலிய சப்தமின்றிய பிரமரம் முதலிய சப்தாந்தரங்களுக்கும்

**तत्र तत्र**–கார்யான்வித அவ்வப்பொருளில்

**शक्तिवित् भवति**–சக்தியை அறிகின்றவனாக ஆகிறான்.

( திரண்ட பொருளைக் கூறுகின்றார் )

**तस्मात्** – ஆதலால்

**सकलम् अपि पदं**–எல்லா பதமும்

**कार्यान्विते अर्थे**–ஆநயனாதி கார்யத்தோடு கூடிய பொருளின் கண்ணேயே

**शक्तिमत्** – சக்தியினையுடையது என்று

**बुध्यमानः**–அறிகின்றவனாய்

**मनुष्यः** – சக்தி ஞானத்தை விரும்பும் பாலகன்

**शास्त्रतः** – வேதாதி சாஸ்திரத்தால்

**भूतादिअर्थप्रतीतिं प्रति**–கார்ய சம்பந்தமற்ற பூதம் முதலிய அர்த்தத்தின் ஞானத்தைக் குறித்து

**विमुखमनाः स्यात्** –பராமுகமனமுள்ளவனாய் ஆவன். அதாவது வேதாதியினால் கார்ய சம்பந்தமின்றிய பூதார்த்தத்தின் பிரதீதியுண்டாகின்றதேயில்லை என நிச்சயிக்கின்றான்.

### விசேஷவுரை

லிங் முதலிய விதிவிகுதியின்றிய மலர்ந்த தாமரையினுள் தேனை வண்டு குடிக்கின்றது என்பது முதலிய வாக்கியங்களிலும் பிரவர்த்தக வாக்கியத்தால் காரியான்விதத்தின் கண் கிரகிக்கப்பட்ட சக்தியினையுடைய பதங்களின் பிரயோகத்தாலேயே பிரமரம் முதலிய பதங்களுக்கும் சக்தியின் ஞானம் உண்டாகின்றது. ஆதலின் உபஜீவிய லிங்காதி

விசிஷ்ட கார்ய வியுத்பத்தியின் அனுசாரத்தால் விபாதியின்றிய பிரமாம் முதலிய பதங்களுக்கும் அத்தியாஹாரம் செய்யப்பட்ட 'காண்க' என்பது முதலிய கார்யான்விதமே அதன் பொருளாம் என அறிகின்றான். ஆதலின் சகலபதமும் கார்யான்வித அர்த்தத்தின் கண்ணேயே சக்தி யுடையது என்னும் நியமத்திற்கு ஓரிடத்தும் வியபிசாரமின்றாம். என்பது பொருள். இப்பொருள் நியாயத்தில் குசலபுத்தியுள்ள என்றதால் கூறப்பட்டது. பூதம்=அதீதம். முதலிய சப்தத்தால் வர்த்தமான பவிஷ்யத் பதார்த்தங்களையுங்கொள்க. (141)

## அவதாரிகை

அற்றேல், பிரவர்த்தகவாக்கியத்தின் அதீனமாக முதலில் சக்திக் கிரஹணம் உண்டாகின்றது என்னும் நியமமின்றாம். அப்படி நியமமிருக்குமாயின் சர்வபதங்களுக்கும் கார்யான்விதத்தின் கண்ணேயே சக்தி அங்கீகரிக்கப்படும். மற்றோ, உனக்குப் புத்திரன் பிறந்துளன் என்பது முதலிய சித்தார்த்த போதக வாக்கியம் முதலியவற்றாலும் முதலில் சக்தி ஞானம் உண்டாகின்றது. உனக்குப் புத்திரன் பிறந்துளான் என்னும் வாக்கியத்தின் சிரவணானந்தரம், பிதாவின் முகத்தின் பிரசன்னத்தன்மை முதலிய லிங்கத்தால் சமீபத்தில் நிற்கும் சுரோதாவினிடத்து அவ்வாக்கியார்த்த ஞானத்தின் உன்னயனம் (அநுமானம்) சம்பவித்தலாலும் அவ்வாக்கியார்த்த ஞானத்தின் கண் வாக்கியத்திற்கு அந்நுவய வியதிரேகங்களால் காரணத்தன்மையின் ஞானம் சம்பவித்தலாலும் அன்விதத்தின் கண்ணேயே பதங்களுக்குச் சக்தியிருக்குக. யோக்கியதை முதலியவற்றின் மகிமையால் அன்விதத்தின் கண் கிரகிக்கப்பட்ட சக்தியினையுடைய பதங்களுக்கு கார்ய பரத்தன்மையை அங்கீகரிப்பது உசிதமன்றாம். என்னும் சங்கை யுண்டாகக் கூறுகின்றார்:—

## சுலோகம்

वाक्याद्भूतार्थनिष्ठाद्भवति न तु नृणां शब्दशक्तिप्रतीति-
लिङ्गं श्रोतृस्थबुद्धेर्न हि किमपि भवेदत्र बालोपलभ्यम् ।
न ह्येतत्पुत्रजन्माद्यवगतिनियतं नित्यवन्निश्चितं नो
यद्वक्त्रादिप्रसादक्षितितललुठनादीक्ष्यते श्रोतृदेहे ॥ १४२ ॥

## பதவுரை

**भूतार्थनिष्ठात्** –உனக்குப் புத்திரன் பிறந்துளான், உன்னுடைய புத்திரன் இறந்தான் என்பது முதலிய சித்தார்த்தபோதக

**वाक्यात्** –வாக்கியத்தினுல்

**नृणाम्** –மனிதர்களுக்கு

**शब्दशक्तिप्रतीतिः**–புத்திரன் முதலிய சப்தங்களின் சக்திஞானம்

**न तु भवति**–உண்டாகின்றதேயில்லை

ஏதனுலெனின் நியதலிங்கமின்மையால் சித்தார்த்த ஞானத்தின் அநுமானம் சம்பவியாமையின் எனக்கூறுகின்றுர்.

**अत्र**–உனக்குப் புத்திரன் உண்டானுன் என்பது முதலிய இடங்களில்

**श्रोतृस्थबुद्धेः**–கேட்கின்ற புருஷனிடத்திலுள்ள ஞானத்தின் கண்

**किमपि लिङ्गम्** –யாதொரு ஏதுவும்

**बालोपलभ्यम्** –சக்திஞானத்தை விரும்பும் பாலகனுக்கு அறியுத் தக்கதாக

**न हि भवेत्** –இன்றும் ஆதலின்

அற்றேல் பிதாவின் முகப்பிரசன்னத்தன்மை முதலிய லிங்கம் கூறப்பட்டதே என்னுமிடத்துக் கூறுகின்றுர்.

**श्रोतृदेहे**–புத்திரனது உற்பத்தி முதலியவற்றைப் போதிக்கும் வாக்கியத்தைக் கேட்கின்ற பிதாவின் தேகத்தின் கண்

**यत् वक्त्रादिप्रसाद**–யாதொரு முகம் முதலியவற்றின் பிரசன்னத் தன்மையும்

**क्षितितललुठनादि**–பூமியில் விழுந்து புரளுதல் முதலியனவும்

**ईक्ष्यते**–காணப்படுகின்றதோ

**एतत्** –அந்த இவ்லிங்கமானது

**पुत्रजन्मादि अवगति नियतम्** – புத்திரனது உற்பத்தி நாசங்களின் ஞானத் தினையே நிமித்தமாக உடையது என

**नियवत्**—வியபிசாரமின்றியதாய்

**नः**—நம்மால்

**न हि निश्चितम्**—நிச்சயிக்கப்படவில்லை ஆதலின்

### *விசேஷவுரை*

பூமியில் விழுந்து புரளுதல் முதலியது சோகத்தின் காரியமாம் அது உன்னுடைய புத்திரன் இறந்தான் என்பது முதலிய வாக்கியார்த்த ஞானத்தின் கண் ஏதுவாம் என்று கூறுபவனைக் குறித்துக்கூறப்பட்டது.

பிதாவின் முகத்தின் பிரசன்னத்தன்மை முதலியது மனைவியின் சுகப்பிரசவம் தனப்பிராப்தி முதலியவற்றின் ஞானத்தாலும் சம்பவிக்கலாம் அப்படியே பிதா கீழே விழுந்து புரளுதல் தனத்தின் வியோகம் முதலியவற்றின் ஞானத்தாலும் சம்பவிக்கலாம் ஆதலின் புத்திரனது உற்பத்தி ஞானத்தின் கண்ணும் மரண ஞானத்தின் கண்ணும் பிரசன்னத்தன்மையும் புரளுதலும் நியதமாக ஏதுவாகாமையின் அவற்ருல் அவற்றின் அநுமானம் சம்பவியாமையின் சித்த வஸ்துவின் அன்விதம் சத்தார்த்தமன்ரும் மற்ருே காரியான்விதமே சத்தார்த்தமாம் என்பது கருத்து. (142)

## பூருவ பக்ஷத்தின் உபசம்மாரம்.

### *அவதாரிகை*

ஆதலால் உலகின் கண் சருவபதங்களுக்கும் காரியான்வித அர்த்தத்தின் கண்ணேயே சத்திஞானமுண்டாகின்றது ஆதலின் வேதத்தின் கண்ணும் சருவபதங்களுக்கும் காரியான்வித அர்த்தமே பொருத்தமாம். உலகின் கண் எப்பதத்திற்கு எது பொருளோ வேதத்தின் கண்ணும் அப்பதத்திற்கு அதுவே பொருளாம் என்னும் நியாயத்திஞல் உலகின் கண்ணும் வேதத்தின் கண்ணும் பதபதார்த்தங்களுக்குப் பேதமின்மையின் இவ்வாருகவே வேதாந்தங்களுக்கும் காரியான்வித பிரம்மத்தின் கண்ணேயே பிரமாணத்தன்மைக் கூறுதல் வேண்டும் ஆதலின் காரிய சூனிய நிருவிசேஷ பரப்பிரம்மத்தின்கண் எவ்வாற்ருலும் வேதாந்தங்களுக்குப் பிரமாணத்தன்மை சம்பவியாது எனக் கூறுகின்ருர்:—

ச்லோகம்

तस्मादाध्वं निराशाः श्रुतिशिरसि न तस्यास्ति निष्पन्नरूपे
प्रामाण्यं कार्यशून्ये कथमपि च परब्रह्मणि स्वप्रधाने ।
भूतं भव्यप्रधानं भवति हि न पुनः स्वप्रधानं कदाचित्
शास्त्रस्थाः शब्दशक्तिस्थितिनिपुणधियो विस्तरादेवमाहुः ॥

பதவுரை

**तस्य**–யாதொரு காரணத்தால் வேதாந்தத்திற்கு

**निष्पन्नरूपे**-சுவத சித்தமாயும்

**कार्यशून्ये**–காரிய சூனியமாயும்

**स्वप्रधाने**-சுவப்பிரதானமாயுமுள்ள

**परब्रह्मणि**–பரப்பிரம்மத்தின் கண்

**कथमपि**–எல்லாவற்ருலும்

**प्रामाण्यम् न च अस्ति**–பிரமாணத்தன்மையின்ருமோ

**तस्मात्**– அக்காரணத்தால்

**श्रुतिशिरसि**–வேதாந்தத்தின் கண்

**निराशाः**– (சித்தார்த்தத்தைப் பிரதிபாதிக்கின்றது என்னும் பொருளில் வேதாந்திகளாகிய நீங்கள்) நிராசையுடையவர்களாய்

**आध्वम्**–ஆவீராக

**हि**–ஏனெனின்

**भूतं भव्यप्रधानम्**–சித்த வஸ்து சாத்தியத்தினைப்பிரதானமாகவுடையதாக

**भवति**–ஆகின்றது அதாவது சாத்தியத்திற்கு அங்கமாகின்றது

**कदाचित् पुनः** –ஓர் போதும்

**स्वप्रधानम्** – பூத வஸ்து சுவப்பிரதானம்

**न** – ஆகின்றதில்லை என

**एवम्** – இந்தப்பிரகாரம்

शाब्दस्थाः – மீமாம்ஸை சாஸ்திரத்திற் குசலரும்

शब्दशक्तिस्थिति निपुणधियः – வைதிக சத்தத்தின் சத்தியை வியவஸ்தை செய்வதில் குசல புத்தியுள்ளவருமான சைமினி முதலிய மகரிஷிகள்

विस्तरात् – விஸ்தாரமாக

आहुः – கூறுகின்றார்கள்

## விசேஷவுரை

மற்றும் "சித்தார்த்தபோதக வாக்கியங்களுக்கு கிரியையைப் போதிக்கும் வாக்கியங்களோடு சேர்த்தே உபதேசமாம்" "சித்தமும் சாத்தியமும் சேர்த்து உச்சரிக்கப்பட்டபொழுது "சித்த வஸ்து சாத்தியத்தின்பொருட்டு உபதேசிக்கப்படுகின்றது". என்பது சைமினி மகரிஷியினதும் சபர சுவாமிகளினதும் மதமாம், இவ்விரண்டுபேரும் வேதார்த்த நிர்ணயத்தின் கண் அதிகாரிகளாவர் ஆதலால் அவரால் கூறப்பட்ட அர்த்தமே கிரகித்தற்கு உசிதமாம் என்பது அபிப்பிராயமாம்.

பவ்யம் = சாத்தியம், பிரதானம் எதற்கோ அது பவ்யப்பிரதானம்– பவ்யசேஷமென்று பொருள் சுவப்பிரதானமென்பது பவ்ய அன்வய மற்றது சாஸ்திரப்பிரதிபாத்திய மன்றென்பது பொருள் குசலபுத்தி யுள்ளவர்–பாதிக்கப்படாத மதியினையுடையவர் (143)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் வருணிக்கப்பட்ட நியாயத்தின் பலத்தினாலும் சைமினி மகரிஷி முதலியோரது வசனத்தின் பலத்தாலும் காரியான்வித அர்த்தத்தின் கண்ணேயே சுருதிகளுக்குத் தாற்பரியமாம் ஆதலின் அத்துவயசொரூப சித்தப்பிரம்மத்தின் கண் வேதாந்த வாக்கியம் பிரமாணமாமென்று உம்மால் கூறப்பட்டது பொருத்தமன்று என பூருவ பக்ஷத்தையுபசம்மாரஞ் செய்கிறார்:—

## சுலோகம்

तस्मादसङ्गतमिदं प्रतिभाति यन्मे
वाक्यप्रमाणकमुदीरितमद्वयवस्तु ।

इत्येवमेष मम बुद्धिपथं विरोधः
प्राप्तः प्रभो परिहरैनमनुग्रहाय ॥ १४४ ॥

*பதவுரை*

**तस्मात्** – ஆதலால் (பூருவமீமாம்ஸகர் சித்தப் பிரம்மத்தின் கண் வேதாந்த வாக்கியம் பிரமாண மன்றெனக் கூறுதலால்)

**वाक्यप्रमाणकम्** – வேதாந்த வாக்கியத்தைப் பிரமாணமாக வுடையதாய்

**यद् अद्वयत्वम्** – யாதொரு சீவப்பிரம்மங்களின் ஐக்கிய வடிவ அபேதம்

**मे उदीरितम्** = என் பொருட்டு தேவரீரால் கூறப்பட்டதோ

**इदं** – அந்த இவ்வர்த்தம்

**असङ्गतम्** – எனக்கு அசங்கதமாக

**प्रतिभाति** – தோன்றுகின்றது

இந்தப்பிரகாரம் பூருவபக்ஷத்தைச் செய்தலினால் தன்னிடத்து குருவுக்கு உண்டான, இவன் சிரத்தையில்லாதவன் நாஸ்திகன் என்னும் பிராந்தியை நிவர்த்திக்கின்றவனாய் சிஷ்யன் குருவைப் பிரார்த்திக்கின்றான்.

**इति एवम्** – இவ்வாறு முற்கூறிய பிரகாரத்தால்

**एषः विरोधः** – வேதாந்தங்களுக்குப் பிரம்மத்தின் கண் பிரமாணத்தன்மையின் அசம்பவ வடிவ விரோதம்

**मम बुद्धिपथम्** – என் து புத்தியின் வழியை

**प्राप्तः** – அடைந்துளது (ஆதலால் அசங்கதமாகத் தோன்றுகின்றது)

**प्रभो** – சாமர்த்தியமுடைய குருவே

**अनुग्रहाय** – எனதநுக்கிரகத்தின் பொருட்டு

**एनम्** – இந்த விரோதத்தினை

**परिहर** – கிருபையினால் நீக்குவீராக

### விசேஷவுரை

யாதொரு காரணத்தால் முற்கூறிய பிரகாரத்தால் வேதாந்தங்களுக்குப் பிரம்மத்தின் கண் பிரமாணத்தன்மையின் அசம்பவ வடிவ விரோதம் எனது புத்திக்கு விஷயமாயிற்றோ அக்காரணத்தால் எனது புத்தி தோஷத்தாலேயே வாக்கியப் பிரமாணமுடையதாய் உம்மால் கூறப்பட்ட அத்துவய வஸ்து அசங்கதம் போல் தோன்றுகின்றது. உம்மால் அசங்கதம் கூறப்படவில்லை யென்பது பொருள், சாமர்த்திய முடைய குருவே என்பதனால் விரோதத்தினை நிவர்த்தி செய்வதில் குருவிற்கு ஆயாசமின்மையைச் சூசிப்பித்தனன். (144)

## அகண்டவாக்கியார்த்த உபபாதனம்

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் பிரத்தியகபின்னமும் அத்துவயமும் சுவப்பிரதானமுமான பிரம்மத்தின் கண் வேதாந்தப் பிரமாணத்தன்மையின் அசம்பவம் சங்கிக்கப்பட்டபோது குரு சிஷ்யனைப் பார்த்து வினவுகின்றார் தத்துவம் பதங்களின் வாச்சியார்த்தங்களான சீவஈசுவரர்களுக்கு அபேதம் சம்பவிக்கின்றதில்லை என வினவுகின்றனையா அல்லது அவ்விருபதங்களின் லக்ஷியார்த்தங்களான கூடஸ்தப்பிரம்மங்கட்கு அபேதம் சம்பவிக்கின்றதில்லை யென வினவுகின்றனையா அவற்றுள் முதற்பக்ஷத்தினை யங்கீகரிக்கின்றார்:—

### சுலோகம்

सत्यं यदाह गुरुमान् यदि वाक्यगम्यं
संसर्गरूपमिह वेदशिरःस्वभीष्टम् ।
अस्त्येव तत्र पदयोरुभयोर्विरोधः
पारोक्ष्यसद्वयविरोधकृतस्तदानीम् ॥ १४५ ॥

### பதவுரை

**गुरुमान्** – குருபக்தனாகிய நீ

**यद् आह** – வாச்சியார்த்தங்களின் அபேதத்தில் யாதொரு அசம்பவத்தினைக்கூறுகின்றனையோ அது

**सत्यं** – உண்மையேயாம்

**इह वेदशिरःसु** – ஈண்டு உபநிஷத்தின் கண்

**संसर्गरूपम्**–வாச்சியார்த்தங்களுக்குத்தாதான்மிய வடிவ சம்பந்த மானது

**वाक्यगम्यं** – தத்துவமசி முதலிய மகாவாக்கியத்தால் பிரதி பாத்தியமாம் என

**यदि अभीष्टम्** – அங்கீகரிக்கப்படுமாயின்

**तदानीम्** – அப்போது

**तत्र** – வாச்சியார்த்தங்களின் பேதத்தில்

**पारोक्ष्यसद्वय विरोध कृतः** பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மை ஏகத் தன்மை அநேகத்தன்மைகளின் பரஸ்பர அர்த்த விரோதத்தாலுண்டான

**विरोधः**–பத விரோதமானது

**उभयोः पदयोः**–தத் துவம் என்னும் இரண்டு பதங்களுக்கும்

**अस्त्येव**–இருக்கின்றதேயாம்

## *விசேஷவுரை*

குருபக்தன் —சிக்ஷிக்கப்பட்ட மதியினையுடையவன். அன்னி யனுக்கு அதாவது சிக்ஷிக்கப்படாத புத்தியுடையவனுக்கு சூக்ஷுமார்த்தத் தில் இப்படிப்பட்ட ஆக்ஷேபம் பொருந்தாமையின் இத்தன்மைய சங்கை செய்தலினால் சிக்ஷிக்கப்பட்ட மதியுடையவ னென்னும் பொருள் சித்திக்கின்றது என்பது பொருள் (145)

## *அவதாரிகை*

அற்றேல் சம்சர்க்கமாவது விசிஷ்டமாவது வாக்கியார்த்தமாமென வித்துவான்களால் அங்கீகரிக்கப்படுகின்றது ஆதலின் வேதாந்த வாக்கியத்திற்கும் அவ்விரண்டனுள் யாதானும் ஓர் அர்த்தம் அங்கீகரிக்கத் தக்கதாம் அவற்றில் அதாவது சம்சர்க்கத்திலாவது விசிஷ்டத்திலாவது தத்துவம் பதத்திற்கும் அவற்றினருத்தங்கட்கும் விரோதம் உம்மால் அங்கீகரிக்கப்பட்டுளது ஆதலின் மகாவாக்கியத்தினர்த்தம் எவ்வாறு சித்திக்கும் என்னுஞ்சங்கைக்கு வேதாந்தத்தினும் வேறான வாக்கியங்

கட்கே சம்சர்க்கமாவது விசிஷ்டமாவது பொருள் வித்துவான்களால் அங்கீகரிக்கப்பட்டுளது. வேதாந்தங்களுக்காவது வேதமாத்திரத்திற்காவது அன்றும். ஆதலால் ஈண்டு வித்வான்களது வாக்கியத்தின் விரோதம் தோஷத்தின் பொருட்டன்றும் எனக் கூறுகின்றுர்:—

*சுலோகம்*

यत् कर्मकाण्डनिपुणैरुदितं पुरस्तात्
वाक्यार्थलक्षणमदः पुनरत्र नेष्टम् ।
भेदादिवर्जितमखण्डमुशन्ति यस्मात्
श्रीबादरायणमतानुगता महान्तः ॥ १४६ ॥

*பதவுரை*

**कर्मकाण्डनिपुणैः**—கருமகாண்டத்தில் குசலரான குமாரில பட்டர் முதலியோரால்

**पुरस्तात्** — பூருவமீமாம்ஸையின் கண்

**वाक्यार्थलक्षणम्** — வாக்கியார்த்தத்திற்கு லக்ஷணமாக

**यत् उदितम्** — யாதொன்று சம்சர்க்கமாவது விசிஷ்டமாவது என கூறப்பட்டதோ

**अदः**—அது

**पुनः अत्र**—ஈண்டு வேதாந்தத்தின் கண்

**न इष्टम्** — சம்மதமின்றும்

**यस्मात्** — எதனுலெனின்

**श्रीबादरायणमतानुगताः** — ஸ்ரீ வியாச மகரிஷியின் அத்துவித மதத்தையநுசரித்த

**महान्तः**—பெரியோர்களான ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் முதலானவர்கள்

**भेदादिवर्जितम्** — சம்சர்க்கமும் விசிஷ்டமுமின்றிய

**अखण्डम्** — அகண்ட நிருவிசேஷவஸ்துவையே

**उशन्ति**—( வாக்கியார்த்தமாக ) விரும்புகின்றனர்

## விசேஷவுரை

கருமகாண்ட நிபுணரால் பூருவகாண்டத்தின் கண் வாக்கியார்த்தத்திற்கு யாதொரு லக்ஷணம் கூறப்பட்டதோ அது வேதாந்த வாக்கியத்தில் இஷ்டமின்றாம் அதாவது ஓர் வாக்கியார்த்தத்தின் லக்ஷணம் மற்றோர் வாக்கியார்த்தத்தின் கண் அங்கீகரிக்கப்படாதாயின் அதனால் யாதொரு குறைவுமின்றாமென்பது கருத்து. பிரகிருதத்தில் கருமகாண்ட வாக்கியார்த்த சம்சர்க்கமாவது விசிஷ்டமாவது லக்ஷணம் வேதாந்த வாக்கியத்தின் அர்த்தத்தில் அங்கீகரிக்கப்படாதாயின் யாதொரு குறைவுமின்றாம்.

அற்றேல் சம்சர்க்கமாவது விசிஷ்டமாவது வாக்கியார்த்தத்தின் சாமான்யலக்ஷணமேயாகுக இதனைவாக்கிய விசேஷார்த்தத்தின் லக்ஷணமாக ஏன் அங்கீகரிக்கவேண்டும்? சம்சர்க்காதியினும் வேறாக வாக்கியார்த்தத்தின் சாமானிய லக்ஷணம் சம்பவியாமையின் சம்சர்க்காதியை சாமான்ய லக்ஷணமாகவுடன்படாவிடின் வேதாந்த வாக்கிய விசேஷத்தின் அர்த்தம் எப்படிப்பட்டதாகும்? அதாவது எவ்வித லக்ஷணமும் சம்பவியாதென்று லக்ஷணாந்தரத்தின் அசம்பவத்தைக் கருதுகின்றவனைக்குறித்துக் கூறுகின்றார்- சம்சர்க்கமும் என.

அபரியாய அநேகபதங்களால் பிரதிபாதிக்கப்படுவதாய் சம்சர்க்கமற்ற வஸ்து யாது அது அகண்டார்த்தமாம். அல்லது ஒரு பிராதிபதிகார்த்த மாத்திரம் அகண்டார்த்தமாம் என இவ்வாறு பாதராயணமதத்தையநுசரித்த வித்வான்கள் விரும்பத்தக்கதாகக் கூறுகின்றனர்.

ஸ்ரீ வியாஸபகவான் "तत्तु समन्वयात्" 'தத்து சமன்வயாத்' என்னும் நான்காவது சூத்திரத்தால் அகண்டைகரசப் பிரம்மத்தின் கண் வேதாந்தங்களுக்குப் பிரமாணத்தன்மையை நிரூபணஞ் செய்தனர் ஆதலால் அவரது மதத்தினையநுசரித்த பூஜ்ஜியபாதரான ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகளும் அவரது சிஷ்யர்களான சுரேசுவராசாரியர் பத்மபாதாசாரியர் முதலியோரும் அவ்வாறே விரும்புகின்றனர். அதாவது வேதாந்த வாக்கியங்களுக்கு அகண்டார்த்தத்தையே பிரதிபாதிக்கின்றனர் ஆதலின் வேதாந்த வாக்கியார்த்தத்திற்கு லக்ஷணாந்தரத்தின் அசம்பவமின்றாம்.

பாதராயணரது மதத்தையநுசரித்த மகான்களிடத்துள்ள மகத்துவ வடிவ பெருமையாவது பக்ஷபாதமின்றி சுருதியின் பொருளை விசாரிக்கும் சாமர்த்தியமாம்.

சாமானிய லக்ஷணத்தின் அசம்பவமுமின்றும் வாக்கியப்பிரதி பாத்தியத்துவமே வாக்கியார்த்தத்தின் சாமானியலக்ஷணமாம் சம்சர்க்காதி வடிவமன்றும் அநநுகமமாதலின் என்பது கருத்து. (146)

## *அவதாரிகை*

அற்றேல் கூறிய வாக்கியார்த்த சாமானிய லக்ஷணத்தின் அவாந்தர சம்சர்க்காதிவடிவ லக்ஷணத்தின் பேத வியவஸ்தையில் பிரமாணம் யாது என்னுஞ் சங்கைக்கு அவ்வவ்வாக்கியார்த்தத்தில் அவ்வவ்வாக்கியத்திற்குத் தாற்பரியத்தைத் கிடகிக்கின்ற பிரகரணம் அநுமானம் முதலிய பிரமாணமே அதன் கண் பிரமாணமாம் என்று இரண்டு சுலோகத்தாற்கூறுகின்றார் ஆண்டு முதலில் கருமகாண்ட நிபுணர் என்பது முதலியவற்றால் பேதாதி வாக்கியார்த்தத்திற்குக் கூறப்பட்ட சம்சர்க்காதி வடிவ லக்ஷணத்தை அங்கீகரிக்கின்றார் :—

## *சுலோகம்*

भेदादिरूपमवबोधयितुं समर्थं
यद्वाक्यमस्ति तदखण्डविलक्षणार्थम् ।
तल्लौकिकं भवतु वैदिकमेव वाऽस्तु
नास्माकमत्र विषये विमतिः कदाचित् ॥ १४७ ॥

## *பதவுரை*

यद् वाक्यम्–யாதொரு வாக்கியமானது

भेदादिरूपम् – சம்சர்க்காதிவடிவார்த்தத்தை

अवबोधयितुं समर्थम् – அறிவித்தற்கு ஆற்றலுடையதாக

अस्ति–இருக்கின்றதோ

तद् – அந்த வாக்கியமானது

अखण्डविलक्षणार्थम् - மகாவாக்கியத்தால் போதிக்கப்படுகின்ற அகண்டார்த்தத்தினும் விலக்ஷணமான அருத்தத்தினையுடையது

तद् लौकिकं भवतु–அந்த வாக்கியம் லௌகிகமாகுக

**वैदिकमेव वाऽस्तु**-அல்லது வைதிகமாகுக

**अत्र**—ஈண்டு

**विषये**-வாக்கியத்தின் சம்சர்க்காதிவடிவ விஷயத்தின் கண்

**अस्माकम्** – எங்களுக்கு

**कदाचित्** – ஓர்போதும்

**न विमतिः**—விவாதமின்றும்

### விசேஷவுரை

பசுவைக்கொண்டுவா என்பது முதலிய வாக்கியம் இலௌகிகமாம் அக்கினிஹோத்திரத்தைச் செய்க என்பது முதலிய வாக்கியம் வைதிகமாம் கூறிய சம்சர்க்காதி வடிவ வாக்கியார்த்தத்தின் கண் எங்களுக்கு ஓர் போதும் விவாதமின்றும், எல்லா வாக்கியங்களிலும் வியசனித் தன்மையால் (அதிகப்பற்றுதலினுல்) நாங்கள் அகண்டார்த்தத்தை இச்சிக்கின்றதில்லை யென்பது கருத்து. (147)

### அவதாரிகை

இப்போது சம்சர்க்காதியின்றியது என 146 வது சுலோகத்தாற் கூறப்பட்ட வேதாந்த வாக்கியார்த்தத்தின் சொரூபம் யுக்தியோடு சொல்லப்படுகின்றது எனக் கூறுகின்றார் :—

### சுலோகம்

**यद्वाक्यजातमथ वेदशिरोनिविष्टं**
**यद्वापि लौकिकमखण्डमपास्य नान्यत् ।**
**शक्नोति वस्तु वदितुं तदशेषमेव**
**ब्रूयादखण्डमिति तु प्रतिपादयामः ॥ १४८ ॥**

### பதவுரை

**अथ**—இனிமேல்

**वेदशिरोनिविष्टं**-வேதாந்தத்தின் கண்ணுள்ள "சத்தியம் ஞானமனந்தம் பிரம்ம" "தத்துவமசி" முதலிய

**यद् वाक्यजातम्** – யாதொரு வாக்கிய சமுதாயமுண்டோ

**यत्रापि लौकिकम्**–யாதொரு 'மிக்கப்பிரகாசமுள்ளவன் சந்திரன்' "அவனித்தேவதத்தன்" என்பது முதலிய லௌகிகவாக்கியமுண்டோ

**तद् अशेषम्** – அவ்வெல்லா வாக்கியமும்

**अखण्डम् अपास्य**–சம்சர்க்காதி சூனிய அகண்டார்த்தத்தை விட்டு

**अन्यत् वस्तु वदितुं** – சம்சர்க்காதி வடிவவேறு அர்த்தத்தைப் பிரதிபாதித்தற்கு

**न शक्नोति**–சாமர்த்தியமுடையதாகின்றதில்லை. மற்றோ

**अखण्डमेव**–அகண்டார்த்தத்தினையே

**ब्रूयात् इति**–பிரதிபாதிச்கும் என்று

**प्रतिपादयामः**–நாங்கள் யுக்தியோடு பிரதிபாதிப்போம். (148)

## அவன் இவன் என்பதாதிகட்கு அகண்டார்த்தத்வ உபபாதனம்

### அவதாரிகை

பிரம்ம விஷயகவேதாந்த வாக்கியம் இரண்டுவிதமாம். ஒன்று அகங்காராதியின் சாக்ஷியான பிரத்தியக் சைதன்னியத்திற்கு நிரதிசயானந்த அத்துவைய நித்யமுத்த பிரம்மத்தோடு அபேதத்தைப்போதிப்பது அஃது தத்துவமசி முதலிய வாக்கியமாம் இதுவும் பரமபுருஷார்த்த வடிவ சீவப்பிரம்மங்களின் ஐக்கியத்தைப்போதிப்பதாயிருத்தலின் மகாவாக்கிய மெனப்படுகின்றது. மற்றொன்று தத்பதார்த்தத்தினதும் துவம் பதார்த்தத்தினதும் சொரூபத்தைப் போதிப்பது அது "விஞ்ஞானம் ஆனந்தம் பிரம்ம" "இவ்வான்மா விஞ்ஞானமயன் பிராணன்களில்" என்பது முதலிய வாக்கியமாம். இதுவும் பதார்த்தத்தைப் போதித்தலால் அவாந்தரவாக்கிய மெனப்படுகின்றது அவற்றுள் தத்துவமசி முதலிய மகாவாக்கியம் அகண்டார்த்தத்தைப் பிரதிபாதிக்கின்றது என்பதில் உலகின் கண் அவன் இத்தேவதத்தன் என்னும் வாக்கியம் திருஷ்டாந்தமாம் அவாந்தர வாக்கியத்திற்கு மிக்கப்பிரகாசமுள்ளவன் சந்திரன் என்னும் வாக்கியம் திருஷ்டாந்தமாம் அவற்றுள் அவன் இத்தேவதத்தன் என்னும் வாக்கியத்திற்கு அகண்டார்த்தத்தன்மை இன்றும் பிரமாணமின்மையின் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்:—

### சுலோகம்

**सोऽयं पुमानिति हि मुख्यपदार्थयुक्त-**
**वाक्यार्थबुद्धिजननस्य न वाक्यमेतत् ।**
**ईशीत वाच्यशबलस्थपदद्वयेन**
**संसृष्टबुद्धिजनने पदयोर्विरोधात् ॥ १४९ ॥**

### பதவுரை

**योऽयं पुमान् इति हि**-அவன் இப்புருஷன் என்னும்
**एतत् वाक्यम्** – இந்த வாக்கியமானது
**मुख्यपदार्थयुक्त**-தூரதேச அதீதகாலத்தோடும் சமீபதேசவர்த்தமான காலத்தோடுங் கூடிய பிண்டங்களின்
**वाक्यार्थबुद्धिजननस्य**-அபேத வடிவ வாக்கியார்த்த ஞானத்தையுண்டாக்குவதில்
**न ईशीत**-சாமர்த்தியமுடையதன்றும் ( எதனுலெனின் )
**वाच्यशबलस्थ**-வாச்சியார்த்தமாகிய விசிஷ்டத்தினைப் போதிக்கின்ற
**पदद्वयेन**-அவன் இவன் என்னுமிருபதங்களால்
**संसृष्टबुद्धिजनने**-(அத்தேசகால இத்தேசகால) சம்பந்த விசிஷ்ட ஞானத்தையுற்பத்தி செய்வதில்
**पदयोः**-அவன் இவன் என்னும் இருபதங்கட்கும்
**विरोधात्** – (விருத்தார்த்த போதக வடிவ) விரோதமிருத்தலின்

### விசேஷவுரை

அவன் இவன் என்னும் சத்தங்களுக்கு யாதொரு முக்கியார்த்த வடிவ அந்த இந்தத்தேசகால வைசிஷ்ட்யமாகிய அது என்னுந் தன்மை இது என்னுந்தன்மை விசிஷ்ட பிண்டமுளதோ அதனுல் நிரூபிக்கப்பட்ட வாக்கியார்த்த வடிவ யாதொரு அபேதமுளதோ அதன் ஞானத்தை யுற்பத்தி செய்வதில் அவனிவன் என்னும் வாக்கியம் சாமர்த்தியமுடைய தன்றும் என்பது பொருள்.

அவனிவனென்னும் வாக்கியம் சமானுதிகரணவாக்கியமாதலால் பிராதிபதிகார்த்தமாத்திர ஓர் பொருளைப் போதிப்பது எனக்கூறுதல்

வேண்டும் ஆண்டு முக்கிய பதார்த்தங்கட்கு ஐக்கியத்தை யங்கீகரிக்கின் அப்போது அந்த இந்தத்தேசகால விசிஷ்ட இருபதார்த்தங்கட்கு விரோத மிருத்தலால் அபேதம் சம்பவியாமையின் இந்த வாக்கியம் முக்யார்த்தத் தின் அபேதத்தைப் பிரதிபாதித்தற்கு அசமர்த்தமாம் என்பது கருத்து.

அற்றேல் தேவதத்தன் அந்த இந்தத்தேசகாலங்களின் வைசிஷ்டிய வடிவதத்தை ( அது என்னுந்தன்மை ) இதந்தை ( இது என்னுந்தன்மை ) களோடு கூடினவன் அல்லது தேவதத்தனிடத்தில் தத்தை இதந்தைகள் உள்ளன என்று ' அவன் இத்தேவதத்தன் ' என்னும் வாக்கியத்தின் பொருள் ஆகுக இதில் யாதொரு விரோதமுமின்று மென்னுமிடத்துக் கூறுகின்றார் - வாச்சியசபா என. அவன் இவன் என்னுமிருபதங் களால் புருஷனது விசேஷணமாக உபஸ்திதமான ( அறியப்பட்ட ) தத்தை இதந்தைகளுக்கு சுதந்திரத்தன்மையின்மையின் தேவதத்தன் தத்தை இதந்தைகளோடு கூடினவன் என்னும் முதற் பிரகார வாக்கியார்த்த போதம் சம்பவியாது. முதல் வேற்றுமையினையுடைய பதத்தால் உபஸ்திதமான புருஷனிடத்தில் ஏழாம் வேற்றுமைப்பொருள் சம்பவியாமையின் தேவதத்தனிடத்தில் தத்தை இதந்தைகள் உள்ளன என்னும் இரண்டாவது பிரகாரமான வாக்கியார்த்தமும் சம்பவியாது.

மேலும் தேவதத்தனிடத்தில் தத்தை இதந்தைகள் உள்ளன என்னும் ஞானத்தால் பேதப்பிராந்தியின் நிவர்த்தி சம்பவிக்கின்றதில்லை இந்த வாக்கியமோ பேதப்பிராந்தியின் நிவர்த்தியின் பொருட்டே பெரியோ ரால் பிரயோகிக்கப்படுகின்றது. தேவதத்தனிடத்தில் தத்தை இதந்தை கள் என்னும் ஞானம் தேவதத்தனது பேதத்தின் கண்ணும் சம்பவித்தலின். ஆதலால் அவனித்தேவதத்தன் என்னும் வாக்கியத் திற்கு தேவதத்தனிடத்தில் தத்தை இதந்தைகள் என்னும் பொருளைக் கற்பித்தல் வியர்த்தமாம்.

ஓர் தேவதத்தனிடத்தில் தத்தை இதந்தைகளுள்ளன என்னும் ஞானத்தால் பேதப்பிராந்தியின் நிவர்த்தி சம்பவிக்கு மென்று கூறற்க சமானுதிகிருத ( ஓர் வேற்றுமையினையுடைய ) அவன் இவன் என்னு மிருபதங்களை விட்டு தேவதத்தனது ஏகத்தன்மையில் வேறு பிரமாண மின்மையின். ஆதலால் வேறு அர்த்தம் சம்பவியாமையின் வாச்சிய மாகிய விசிஷ்டத்தைப் போதிக்கும் அவன் இவன் என்னுமிருபதங்களால்

அந்த இந்தத்தேசகால விசிஷ்ட தேவதத்தனது ஞானத்தின் உற்பத்தியே கூறுதல் வேண்டும் அதுவும் சம்பவிக்கின்றதில்லை பதங்களுக்கு பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மை முதலிய விருத்தார்த்த முடைமையின் என்பது பொருள். (149)

## அவதாரிகை

அப்படியாயின் அவனிவன் என்னும் வாக்கியத்திலுள்ள ஒரு பதத்தின் கண்ணேயே லக்ஷணையுளதாகுக அவ்வாறாகவே விரோத மின்றும் வேறு பிரதியோகி ( விரோதி )யின்மையின் அதாவது அவன் இவன் என்னுமிரண்டு பதத்தின் கண்ணும் லக்ஷணை செய்யவேண்டிய தின்றும் அகண்டார்த்தத் தன்மையுமின்றும் அவனித்தேவதத்தன் என்னும் வாக்கியத்தால் தேவதத்தனிடத்தில் ஒரு தேசகால விசிஷ்டத் திற்கே தாதான்மியத்தைப் பிரதிபாதித்தலால் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்: —

## சுலோகம்

एतद्धि सोऽयमिति वाक्यमखण्डनिष्ठं
वक्तव्यमत्र गतिरस्ति न काचिदन्या ।
तद्देशकालमनुकृष्य स इत्यनेन
नायंपदार्थमुपढौकयते हि नैतत् ॥ १५० ॥

## பதவுரை

**सोयमिति हि**–அவன் இத்தேவதத்தன் என்னும் பிரசித்தமான

**एतत् वाक्यम्** – இந்த வாக்கியமானது

**अखण्डनिष्ठं**–இருபதங்களின் லக்ஷணையால் அகண்டார்த்தத்தை போதிப்பது என

**वक्तव्यम्** – கூறுதல் வேண்டும்

**अत्र**–இந்த வாக்கியத்தின் கண்

**अन्या**–அகண்டார்த்தத்தினும் வேறாக

**काचित् गतिः**–( அவிருத்தார்த்தத்தில் ) யாதொருகதியும்

**न अस्ति**–இன்றும்

( எதனாலின்றெனின் ஆண்டுக் கூறுகின்றார் )

**स इत्यनेन**–( அவனித்தேவதத்தன் என்னும் வாக்கியமானது ) அவன் என்னும் பதத்தால்

**तद्देशकालम्** – அந்தத்தேசகால விசிஷ்டத்தை

**अनुकृत्य**–கிரகித்து

**अयंपदार्थम्** – ( அதற்கு ) இவன் என்னும் பதத்தின் லக்ஷியார்த்தத்தோடபேதத்தை

**न उपढौकयते**-போதிப்பதில் சமர்த்தமன்று

**हि**–அது போல

**एतत्** – இவன் என்னும் பதமும் தனது வாச்சியார்த்தத்தைக் கிரகித்து அவன் என்னும் பதத்தின் லக்ஷியார்த்தத்தோடு அபேதத்தை

**न**–போதிக்கின்றதில்லை

## விசேஷவுரை

அவன் இத்தேவதத்தன் என்னும் வாக்கியமானது ஓர் பதத்தால் லக்ஷிக்கப்பட்ட சொருபத்திற்கு மற்றோர் பதத்தின் வாச்சியார்த்தத்தோடு அபேதத்தைப் போதிக்கின்றது என அங்கீகரிக்கின் தேவதத்தனுடைய சொருபமனைத்தும் அவ்வத்தேசகால விசிஷ்டமாகவேயிருக்கும் இவ்வாறாகவே வர்த்தமான சமயத்திலுள்ள தேவதத்தனிடத்தில் தேவதத்தனது பேதவிஷயக சந்தேகம் முதலியவற்றை நிவர்த்திக்குந்தன்மை அவனித்தேவதத்தன் என்னும் வாக்கியத்திற்குச்சித்திக்காது.

அவனித்தேவதத்தன் என்னும் வாக்கியத்தால் தேவதத்தனது பேதவிஷயக சம்சயாதி நிவர்த்தியாகின்றது ஆதலின் இருபதங்களினிடத்தும் பாகத்தியாக லக்ஷணையால் அந்த இந்தத்தேசகால மிரண்டிலுமிருக்கின்ற தேவதத்தனது அபேத போதகமாதலின் இந்த வாக்கியம் அகண்டார்த்தத்திலேயே நிஷ்டையுடையது.

இவ்வாறாயின் தேவதத்தனது சுத்த சொருபம் ஒவ்வொரு பதத்தாலும் பிரதீதியாதலின் ஒரு பதார்த்தத்தின் ஞானத்தாலும் பேத விஷயகசமுசயாதியின் நிவர்த்தியுண்டாதல் வேண்டும் அல்லது பதார்த்த சொருபத்தினும் அதிகமாக வாக்கியார்த்தத்தைக் கூறுதல் வேண்டும்

பதார்த்தத்தினும் வாக்கியார்த்தமதிக மின்றேல் வாக்கியத்தானும் சமுச யாதியின் நிவிருத்தி பொருந்தாது என்று கூற்றக இருபதங்களின் லக்ஷியமும் வாக்கியார்த்தமும் குறைவுமிகுதிகளின்றி சமானமாகவே ஒன்றுகவேயிருப்பினும் வாக்கியத்தால் அந்த இந்தத்தேசகாலங்களின் பராமரிசவாயிலாக அகண்ட தேவதத்தனது சொருபத்தின் அபேதத்தைப் பிரதிபாதிக்கின் அவ்வகண்டார்த்த ஞானம் நிச்சய ரூபமாகின்றது ஆதலின். அதனுல் சமுசயாதியின் நிவிருத்தி பொருந்துகின்றது. இவ்வாறு ஒவ்வொரு பதத்தின் லக்ஷிய ஞானம் நிச்சயவடிவமன்று மாதலின் அதனுல் சமுசயாதியின் நிவிருத்தி உண்டாகின்றதில்லை இவ்வாறுகவே அவனித்தேவதத்தன் என்பது முதலிய வாக்கியத்திற்கு அகண்டார்த்தத்தினும் வேறு அர்த்தம் சம்பவியாமையானும் அகண்டார்த்தத்திற்கு எந்தப் பிரகாரத்தாலும் பாதமின்மையானும் அகண்டார்த்தத்தன்மையை யங்கீகரித்தலே உசிதமாமென்பது கருத்து.

கதி = பூருவபக்ஷியாகிய உன்னுல் கூறப்பட்ட பிரகாரத்தின் ஞானம். (150)

## தத்த்வமஸ்யாதிகட்கு அகண்டார்த்தத்வ உபபாதனம்

### அவதாரிகை

தத்த்வமசி முதலிய மகாவாக்கிய வ்ஷ்வத்ரார்ஷ்டாந்தத்தின் கண்ணும் அகண்டார்த்தத்தைக் கூறுகின்றார் :—

### சுலோகம்

एवं सतीदमपि तत्त्वमसीतिवाक्य-
माश्रित्य लाक्षणिकवृत्तिमखण्डनिष्ठम् ।
सोऽयं पुमानिति यथा वचनं तथाऽस्तु
नो चेत् समं हि तदलाबुनिमज्जनोक्त्या ॥ १५१ ॥

### பதவுரை

एवं सति — இவ்வாருகும்போது
सोऽयं पुमान् — அவனித்தேவதத்தன்

சங். 38

**इति वचनम्** – என்னும் வாக்கியமானது

**यथा** – எப்படி அகண்டார்த்த போதகமோ

**तथा** – அப்படியே

**तत्त्वमसि इति** – தத்துவமசி என்னும்

**इदमपि वाक्यम्** – இந்த வாக்கியமும்

**लाक्षणिकवृत्तिम्** – இரு பதங்களிலும் லக்ஷணவிருத்தியை

**आश्रित्य** – ஆசிரயித்து

**अखण्डनिष्ठम् अस्तु** – அகண்டார்த்தத்தைப் போதிப்பதாகுக

உலகின்கண் இருபதங்களின் லக்ஷணையால் அவனித்தேவதத்தன் என்னும் வாக்கியத்திற்கு அகண்டார்த்தத் தன்மை சித்தித்தபோது எமக்கு அலௌகிக கற்பனையின்றென்பது கருத்து. தத்துவமசி மகா வாக்கியம் அகண்டார்த்த போதகமாம். காரிய காரண பாவமின்றிய திரவிய மாத்திர விஷயக சமானாதிகரண (ஒரு வேற்றுமையினையுடைய) வாக்கியமாதலால், அவனித்தேவதத்தன் என்னும் வாக்கியம் போன்று என்னும் அபிப்பிராயத்தால் திருஷ்டாந்தம் கூறப்பட்டது. இரு பதங்களின் லக்ஷணையால் அகண்டார்த்தத் தன்மையையங்கீகரியாவிடின் பூருவபக்ஷ தசையின்கண் கூறிய வாக்கியத்தின் அப்பிரமாணத்தன்மையினைக் கூறுகின்றார் அங்கீகரியாவிடின் என.

**नो चेत्** – அகண்டார்த்தத்தைப்போதிப்பதென அங்கீகரியாவிடின்

**अलाबुनिमज्जनोक्त्या** – சுரக்குடுக்கை நீரில் மூழ்கியது என்னும் வாக்கியத்தோடு

**तत् समम्** – தத்துவமசி முதலிய வாக்கியமும் சமமாகும், அதாவது அப்பிரமாணமாகும்.

## *விசேஷவுரை*

அத்தியந்தம் உலர்ந்ததும் துவாரமின்றியதும் கல் முதலியவற்றின் சம்பந்தமின்றியதுமான சுரக்குடுக்கை நீரில் மூழ்குகின்றது என்னும் வாக்கியம் எப்படி அப்பிரமாணமோ அப்படி தத்துவமசி வாக்கியமும் அப்பிரமாணமாம் என்பது பொருள். தத்துவமசி மகா வாக்கியத்திற்கும் இனிக் கூறப்படும் விரோதத்தால சம்சர்க்கம் முதலிய வாக்கியார்த்தம்

சம்பவியாமையால் இருபதங்களின் லக்ஷணையால் அகண்டார்த்தத் தன்மையே உசிதமாம் என்பது கருத்து. இங்ஙனம் கூறியதனுல் சித்தாந்தத்தின் ஆரம்பத்தில் 145வது சுலோகத்தில் தத்துவம் பதங்களின் வாச்சியங்களான சீவேசுவரர்கட்கு அபேதம் சம்பவிக்கின்றதில்லை யென வினவுகின்றனையா அல்லது அவ்விரு பதங்களின் லக்ஷியங்களுக்கு அபேதம் சம்பவிக்கின்றதில்லை யென வினவுகின்றனையா என்று கூறப்பட்டது. அவற்றுள் இரண்டாவது பக்ஷத்தின்கண் விரோதத்திற்குக் காரணமின்மையின் அச்சங்கை பொருந்தாது எனக் கூறப்பட்டதாக அறிக.

அநுமானத்தில் ஏதுவின்கண் மண்குடம் என்பது முதலியவற்றில் வியபிசாரத்தை நிவர்த்திக்கும் பொருட்டு காரியகாரண பாவமின்றியது என திரவியத்திற்கு விசேஷணம் கொடுக்கப்பட்டது. நீலக்குடம் என்பது முதலியவற்றில் வியபிசாரத்தை நீக்கும் பொருட்டு திரவிய மாத்திரத்தை விஷயமாகவுடையது என்னும் விசேஷணம் கொடுக்கப் பட்டது. அரசனது புருஷன் என்பது முதலியவற்றில் வியபிசாரத்தை நீக்கும் பொருட்டு சமானுதிகரணமென்னும் விசேஷணம் கொடுக்கப் பட்டது. (151)

### அவதாரிகை

யாதொன்று பூருவபக்ஷத்தின் அவசரத்தில் வாச்சியார்த்த சம்பந்தியாக பிரமாணுந்தரத்தால் லக்ஷியவஸ்துவின் ஞானம் லக்ஷணைக்குப் பீஜமாமென்வும் அவ்வாறு பிரம்மம் அறியப்படாமையின் பிரம்மத்தின்கண் லக்ஷணையின்றுமெனவும் கூறப்பட்டதோ அதனை அநுவாதம் செய்து தூஷிக்கின்றுர்:—

### சுலோகம்

मानान्तराधिगतगोचरगामिनी सा-
च्छब्दस्य लाक्षणिकवृत्तिरिति प्रलापः ।
सिद्धत्वमात्रमिह लाक्षणिकप्रवृत्ते-
र्निर्वाहकारणमनङ्गमतोऽन्यदस्याः ॥ १५२ ॥

## பதவுரை

**गाङ्गस्य** – கங்கை முதலிய சத்தத்தின்

**लाक्षणिकवृत्तिः** – லக்ஷணு விருத்தியானது

**मानान्तराधिगत गोचरगामिनी स्यात्** – பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணுந்தரத்தாலறியப்பட்ட தீரம் முதலிய விஷயத்தின் கண்ணே செல்வதாகும்

**इति प्रलापः** – என்பது மித்தியாவசனமேயாம்

**इह** – லக்ஷிய வஸ்துவின்கண்

**लाक्षणिकप्रवृत्तेः** – லக்ஷணு விருத்தியின் பிரவிருத்திக்கு

**सिद्धत्वमात्रम्** – சித்தத்துவமாத்திரமே (வாச்சியார்த்த சம்பந்தியாக ஞாதத்துவமாத்திரமே)

**निर्वाहकारणम्** – நிருவகிக்கும் காரணமாம்

**अस्याः** – லக்ஷணு விருத்திக்கு

**अतः अन्यत्** – சித்தத் தன்மையினும் வேறுனது (பிரமாணுந்தரத்தால் ஞாதத்துவம்)

**अनङ्गम्** – காரணமாகின்றதில்லை

## விசேஷவுரை

பிரலாபம் = பொய்மொழி, அற்றேல் லாக்ஷணிகபதத்திற்கு லக்ஷியத்தோடு சாக்ஷாத் சம்பந்தம் அறியப்படாமையின் தனது வாச்சியார்த்த வாயிலாகவே லக்ஷியத்தைப் போதிக்குந்தன்மைக் கூறுதல் வேண்டும் அதுவும் (போதிக்குந் தன்மையும்) பிரமாணுந்தரத்தால் அவ்வாறு (வாச்சியார்த்த சம்பந்தியாக) அறிதலின்றிச் சம்பவிக்கின்றதில்லையாதலின் இம்மொழி (லக்ஷணுவிருத்தி பிரமாணுந்தரத்தாலறியப்பட்டதனையே விஷயஞ்செய்கின்றது என்னும் வசனம்) பொய்மொழியாவது எவ்வாறு பொருந்துமெனின், நீ கூறியது வாஸ்தவந்தான். ஆயினும் பிரமாணுந்தரமின்றியும் வாச்சியார்த்த சம்பந்தித்தன்மை ஞானமாத்திரத்தால் லக்ஷணை சித்திக்கின்றது அந்த ஞானமும் நீ நான் என்பது முதலிய பதங்களின் லக்ஷியமும் அகங்காராதிக்குச் சாக்ஷியும் சொப்பிரகாசமுமான, ஆன்மாவின்கண் சொப்பிரகாசத்தன்மையும் பலத்தால்

தானே சித்திக்கின்றது பிரமாணாந்தரத்தின் அபேக்ஷையின்றும், பிரம்மம் முதலிய பதங்களின் லக்ஷியமோ அத்துவய சுத்தப் பிரம்மமாம், பிரம்மம் முதலிய பதங்களின் வாச்சியம் விசிஷ்டப்பிரம்மமாம் அது வாஸ்தவமாகத் தனது சம்பந்தமின்றிய சைதன்னியத்தின்கண் கற்பிதமாம் விசிஷ்ட மாதலால் அல்லது அத்தியஸ்தமாதலால் வேறு விசிஷ்டம்போல அல்லது இராஜநாதிபோல, என்னுந்தருக்கத்தால் வாச்சியார்த்த சம்பந்தியாக லக்ஷியம் சித்திக்கின்றது. அதாவது லக்ஷியத்தின் ஞானமுண்டாகின்றது. அதனாலேயே லக்ஷணாவிருத்தி சித்தித்தலின் பிரமாணாந்தரத்தின் அபேக்ஷையின்றுமென்பது பொருள். (152)

## அவதாரிகை

அற்றேல் கங்கை முதலிய பதங்களின் லக்ஷியமான தீரம் முதலியவற்றின் பிரமாணாந்தரத்தால் வாச்சியார்த்த சம்பந்தித்தன்மையால் பிரதீதி நியமமாகக் காணப்பட்டுள்ளது. ஆதலின் பிரமாணாந்தரத்தால் லக்ஷியத்தின் ஞானம் லக்ஷணாவிருத்தியில் அப்பிரயோஜகமாவது யாங்ஙனமென்னுமிடத்துக்கூறுகின்றார் :—

## சுலோகம்

मानान्तराधिगतता हि न लक्षणायां
किञ्चित्करी भवति पिङ्गलतावदग्नेः ।
धूमस्य जन्मनि हि पिङ्गलता न हेतु-
र्यद्यप्यवस्थितवती हुतभुक्शरीरे ॥ १५३ ॥

## பதவுரை

நியமமாக இருப்பதாயினும் கௌரவ தோஷத்தால் பிரயோஜக மாகின்றதில்லை என்பதன்கண் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்,

**अग्नेः पिङ्गलतावत्** — நெருப்பின் பொன்மை நிறம்போன்று, அதாவது

**हुतभुक्शरीरे** — நெருப்பின் சொருபத்தில்

**पिङ्गलता** — பொன்மை நிறம்

**यद्यपि अवस्थितवती** – இருந்தபோதிலும்

**धूमस्य जन्मनि** – புகையின் உற்பத்தியில்

**न हेतुः हि** – காரணமன்றும் என்பது பிரசித்தமாம் அதுபோன்று

**मानान्तराधिगतता** – பிரத்தியக்ஷாதி பிரமாணாந்தரத்தால் அறியப் பட்ட தன்மை

**लक्षणायाम्** – லக்ஷணாவிருத்தியின்கண்

**किञ्चित्करी** – நிமித்தம்

**नहि भवति** – ஆகின்றதேயில்லை.

## *விசேஷவுரை*

புகையின் ஜனகத்தன்மையில் நெருப்பிலுள்ள நெருப்புத் தன்மையே பிரயோஜகமாம் அதாவது ஜனகத்தன்மையை வரைந்து கொள்வது, பொன்மை நெருப்புத்தன்மையன்றும் கௌரவமாதலின் என்பது கருத்து.

சிப்பி வெள்ளி முதலியவற்றின்கண்ணும் இது என்பது முதலிய பதாந்தரத்தின் லக்ஷியத்தன்மைச் சம்பவித்தலால் அவற்றில் பிரமாணாந் தரத்தால் ஞானமின்மையின் பிரமாணாந்தர விஷயத்தன்மை லக்ஷியத் தன்மைக்குப் பிரயோஜகமன்றுமென்பது கருத்து. (153)

## *லக்ஷணையின் மூவிதத்தன்மை*

### *அவதாரிகை*

அற்றேல் பிரம்மம் முதலிய சத்தங்களுக்கு பிரம்மத்தினும் வேறான பொருளில் சத்தி பொருந்தாமையின் பிரம்மத்தின் கண்ணேயே சத்தி கற்பிக்கத்தக்கது. இவ்வாறாகவே அதன் கண்ணேயே அவைகளுக்கு லக்ஷணையெவ்வாறு பொருந்தும். சேதனப்பிரம்மத்தின்கண் சத்தி யுடைய பிரம்மம் முதலிய பதங்களால் லக்ஷிக்கப்பட்ட அசேதன பதார்த்தத்தைக் கிரகிக்கின் இந்த சாரீரக சாஸ்திரமும் அநான்மாவைப் போதிப்பதாகும் என்னுஞ் சங்கையைப் பரிகரித்தற்கு லக்ஷணையின் மூவிதத்தன்மையைக் கூறுகின்றார். அல்லது உலகின்கண் லக்ஷணா

அநேகவிதமாம் அவற்றுள் தத்துவமசி மகாவாக்கியத்தின்கண் எவ்விலக்ஷணை அங்கீகரிக்கப்பட்டுளது என்னுஞ்சங்கைக்கு அவ்விலக்ஷணையைப் பிரித்தற்கு உலகிற்பிரசித்தமான லக்ஷணையின் பேதத்தையங்கீகரித்துக் கூறுகின்றார்.

*சுலோகம்*

**शब्दस्य लाक्षणिकवृत्तिरपि त्रिधैषा**
**काचिज्जहाति न जहाति च वाच्यमन्या**
**भागं जहाति न जहाति च भागमन्या**
**सोऽयं त्रिधा भवति लाक्षणिकप्रकारः ॥ १५४ ॥**

*பதவுரை*

**शब्दस्य** – சத்தத்தின்

**एषा लाक्षणिकवृत्तिरपि** - இந்த லக்ஷணாவிருத்தியும்

**त्रिधा** – மூன்றுவிதமாகின்றது

[ மூவிதத்தினையே கூறுகின்றார் ]

**काचिद् जहाति** – ஒன்று வாச்சியார்த்தத்தை விடுகின்றது அதாவது ஜஹல்லக்ஷணையாம்

**अन्या** – மற்றொன்று

**वाच्यं न जहाति च** – வாச்சியார்த்தத்தை விடுகின்றதில்லை அதாவது அஜஹல்லக்ஷணையாம்

**अन्या** – மற்றொன்று

**भागं जहाति**–வாச்சியத்தின் ஏகதேசத்தை விடுகின்றதும்

**भागं न जहाति च** – வாச்சியத்தின் ஏகதேசத்தை விடாததுமாகின்றது. அதாவது ஜஹதஜஹத் லக்ஷணையாம்

**सोऽयं लाक्षणिकप्रकारः**–அந்த இவ்லக்ஷணாவிருத்தியின் பிரகாரம் (இவ்வாறு)

**त्रिधा भवति** – மூன்றுவிதமாகின்றது.

## அவதாரிகை

உலகின்கண் கிரமமாக அம்மூன்று லக்ஷணைக்கும் உதாரணத்தை இரண்டு சுலோகங்களால் கூறுகின்றார்:—

## சுலோகம்

गंगापदं हि निजमर्थमपास्य तीरे
यद्वर्तते भवति सा जहती प्रसिद्धा ।
शोणः स्थितो बहिरितीह तु लक्षणाया-
मादाय शोणिमगुणं तुरगे प्रवृत्तिः ॥ १५५ ॥

## பதவுரை

**गंगापदं हि** – கங்கையில் இடைச்சேரியிருக்கின்றது என்னும் வாக்கியத்திலுள்ள கங்கைப்பதமானது

**निजमर्थम्** – தனது வாச்சியார்த்தமாகிய சலப்பிரவாகத்தை

**अपास्य** – பரித்தியாகஞ்செய்து

**यत्** – யாதொரு காரணத்தினால்

**तीरे वर्तते** – கரையின்கண் பிரவிருத்திக்கின்றதோ அதனால்

**सा** – அது

**जहती प्रसिद्धा भवति** – விட்ட லக்ஷணை எனப்பிரசித்தமாம்

**शोणः बहिः स्थितः** – செகப்பு வெளியில் நிற்கின்றது

**इति इह तु** – என்னும் இவ்வாக்கியத்தின் கண்ணோ

**लक्षणायाम्** – விடாத லக்ஷணையினால்

**शोणिमगुणम्** - செகப்பு என்னும் பதமானது தனது வாச்சியார்த்தமாகிய செகப்பு நிறத்தை

**आदाय** – கிரகித்துக்கொண்டு

**तुरगे प्रवृत्तिः** –அதனையுடைய குதிரையின்கண் பிரவிருத்திக்கின்றது

செகப்பு = அசுவத்தன்மையோடு நியதமாய்ச் சேர்ந்திருக்கும் செந்நிறம். (155)

## *சுலோகம்*

सोऽयं पुमानिति वचस्युभयप्रकारा
देशादिभागपरिवर्जनतः प्रसिद्धा ।
पुंसश्च केवलमुपात्ततया पदाभ्या-
मेवं त्रिधा भवति लाक्षणिकी प्रवृत्तिः ॥ १५६ ॥

## *பதவுரை*

सोऽयं पुमानिति—அவனிப்புருடன் என்னும்
वचसि—வாக்கியத்தின் கண்
देशादिभाग—அந்த இந்தத்தேசம் முதலிய பாகங்களை
परिवर्जनतः—பரித்தியாகஞ் செய்தலாலும்
पदाभ्याम्—அவன் இவன் என்னும் பதங்களால்
केवलं पुंसः च—கேவலம் புருஷ வியத்திமாத்திரத்தை
उपात्ततया—கிரகித்தலாலும்
उभयप्रकारा—விட்டு விடாத லக்ஷணை
प्रसिद्धा—உலகிற்பிரசித்தமாம்

(உபசம்மாரஞ் செய்கின்றார்)

एवम्—இவ்வாறு
लाक्षणिकी प्रवृत्तिः—லக்ஷணையின் பிரவிருத்தியானது
त्रिधा भवति—மூன்றுவிதமாகின்றது.

## *விசேஷவுரை*

அந்த இந்தத்தேசகாலவைசிஷ்டியபாகத்தை விடுதலாலும் கேவல வியத்தி எவ்வாறு சித்திக்குமோ அவ்வாறு அவன் இவன் என்னும் பதங்களால் புருஷனைக் கிரகித்தலாலும் பாகத்தியாக லக்ஷணை சித்திக்கின்றது, என்பது பொருள். கங்கையில் இடைச்சேரியிருக்கின்றது என்னுமிடத்து வாஸ்தவமாக கங்கையின் சம்பந்தியாயும் இடைச்சேரியின் அன்வய யோக்கியமாயும் உள்ள யாதொரு கரையுண்டோ அதுவே

லக்ஷணையால் பிரதீதியாகின்றது, கங்கை விசிஷ்டகரை பிரதீதியாகின்றதில்லை கங்கை விசிஷ்டகரைக்கு கங்கை விசிஷ்டகரைத் தன்மையால் இடைச்சேரியின் அன்வயயோக்கியதையின்மையின், ஆதலால் கங்கைப் பதத்தில் விட்ட லக்ஷணையேயாம்.

இவ்வாறு வெளியில் செகப்பு நிற்கின்றது என்பது முதலிய இடங்களில் ஆசிரயத்திரவியமின்றிக்கேவல குணமாத்திரத்திற்கு வெளித் தேசத்தில் நிற்றல் பொருந்தாமையினுலும் செகப்பு நிறத்தோடு கூடிய குதிரையின் நிற்றலையே நியமமாக அறிதலாலும் அது விடாத லக்ஷணையாம் எதனுலெனின் செகப்புப் பதமானது தனது வாச்சியார்த்தமாகிய செந்நிறத்தைக் கிரகித்துக்கொண்டே குதிரை வடிவ திரவியத்தின் கண் பிரவிருத்தித்தலின். அவன் இப்புருடன் என்பது முதலிய இடங்களிலோ முற்கூறிய நியாயத்தால் அபேதத்திற்கு விருத்தமான தேசகாலாதி பதார்த்தபாகங்களைப் பரித்தியாகஞ்செய்து கேவல தருமி வடிவ பதார்த்த பாகத்தைக் கிரகித்துக் கொண்டு அவன் இவன் என்னும் வாக்கியமானது அபேதத்தைப் பிரதிபாதிக்கின்றது ஆதலின் ஆண்டு அது விட்டுவிடாத லக்ஷணையேயாம். இவ்வாறு லக்ஷணையின் பிரவிருத்தி மூன்று விதமாகின்றதென்பது பொருள். (156)

## வேதத்தின் கண் லக்ஷணையின் மூவிதத்தன்மையை உதாகரித்தல்

### அவதாரிகை

இவ்வாறு வேதத்தின் கண்ணும் லக்ஷணையின் மூவிதத் தன்மையினைத் திருஷ்டாந்தத்தால் கூறுகின்றார் :—

### சுலோகம்

वेदेऽपि लाक्षणिकवृत्तिरियं त्रिधैषा
यज्ञायुधीति वचने तु जहत्प्रवृत्तिः ।
वैश्वानरादिवचनेष्वजहत्प्रवृत्तिः
तत्त्वंगिरोरुभयरूपतया प्रवृत्तिः ॥ १५७ ॥

## பதவுரை

**वेदेऽपि**–வேதத்தின் கண்ணும்

**इयं लाक्षणिकवृत्तिः**–இந்த லக்ஷணாவிருத்தியானது

**एषा त्रिधा**–மூன்றுவிதமாம்

**यज्ञायुधी इति वचने तु**–அக்கினிஹோத்திர கபாலம் முதலிய பாத்திரவடிவ ஆயுதத்தோடு கூடிய யஜமானன் சுவர்க்கலோகத்திற்குச் செல்கின்றான் என்னும் வாக்கியத்தின் கண்

**जहत्प्रवृत्तिः**–விட்டலக்ஷணையின் பிரவிருத்தியாம்

**वैश्वानरादिवचनेषु**–வைசுவானரனையுபாசிக்குக என்பது முதலிய வாக்கியங்களில்

**अजहत्प्रवृत्तिः**–விடாதலக்ஷணையின் பிரவிருத்தியாம்

**तत्त्वंगिरोः**–தத்துவமசிமகாவாக்கியத்தின் கண்ணுள்ள அது நீ என்னும் பதங்களில்

**उभयरूपतया**–விட்டுவிடாத லக்ஷணையின்

**प्रवृत्तिः**–பிரவிருத்தியாம்

## விசேஷவுரை

அந்த்யேஷ்டி பிரகரணத்திலுள்ள '**यज्ञायुधी यजमानः स्वर्गलोकमेति**' என்னும் வாக்கியத்தின் கண் அக்கினிஹோத்திரத்தின் கபாலம் அகப்பை முதலிய பாத்திரத்தோடு கூடிய யஜமானன் சொர்க்கத்திற்கு செல்கிறான் எனப் பொருள் தோற்றுகின்றது, ஆனால் பாத்திரத்தோடு கூடிய யஜமானனுக்கு சொர்க்க கமனம் பொருந்தாது அக்கினிஹோத்திர பாத்திரங்களுக்குப் பிரத்தியக்ஷத்தாலேயே தாகம் காணப்படுதலின், அக்கினிஹோத்திர கபாலாதி வடிவ யஞ்ஞாயுத விசிஷ்ட யஜமானனுக்கு சொர்க்க கமனம் பொருந்தாமையின் யஞ்ஞாயுதீ சத்தமானது யஜமானனிடத்து தனது வாச்சியார்த்தத்தைப் பரித்தியாகஞ் செய்துப் பிரவிருத்திக்கின்றது ஆதலின் அது ஜஹத் லக்ஷணையாம் யஞ்ஞாயுதீ என்னும் சத்தத்திலுள்ள ஈவிகுதியானது சம்பந்திவாசகமாம் அதற்கு சம்பந்தமாத்திர அர்த்தத்தை யங்கீகரித்து சம்பந்தியாகிய

யஜமானனிடத்து விட்ட லக்ஷணையாம், என்று கூறப்பட்டது அல்லது விசிஷ்டத்திலும் சுத்தம்வேறு என்னுமபிப்பிராயத்தால் கூறப்பட்டதாம்,

"பிராதேசமாத்திரமும் அபிவிமானமும் ஆன்மாவுமான வைசுவானரனை" என்னும் வாக்கியத்தின் கண்ணுள்ள வைசுவானர சத்தமானது உதர அக்கினியின் கண் ரூட (இடுகுறி) மாகி அதனால் வரைந்து கொள்ளப்பட்ட ஆன்மாவின்கண் இருக்கின்றது. அதாவது வைசுவானர சத்தம் ஜாடராக்கினி விசிஷ்ட ஆன்மாவைப் போதிக்கின்றது. இவ்வாறு கொள்ளாவிடின் "வைசுவானரம் ஆத்மாநம்" என ஓர் வேற்றுமையினையுடைய சாமானாதிகரண்யம் பொருந்தாது ஆதலின், இவ்வாறாகவே வைசுவானர சத்தமானது தனது வாச்சியார்த்தமாகிய ஜாடராக்கினியைப் பரித்தியாகஞ்செய்யாமல் ஆன்மாவின் கண் பிரவிருத்திக்கின்றது. ஆதலின் அதற்கு ஆண்டு அஜஹல்லக்ஷணையாம்.

தத்துவமசி மகாவாக்கியத்திலுள்ள தத் துவம் என்னும் இரு பதங்களும் தமது வாச்சியார்த்தத்தில் அபேதவிரோதியாகிய விசேஷணம் சத்தைப் பரித்யாகஞ்செய்து அபரோக்ஷ சைதன்னிய அத்துவய ஆனந்தவடிவ பிரம்மத்தின் கண் பிரவிருத்தித்தலின் அது விட்டுவிடாத லக்ஷணையாமென்பது பொருள். இனி கூறப்படும் ஏதுவால் பிரம்மான்மாவின் கண் சத்தியினையுடைய பிரம்மம் முதலிய பதத்திற்கு பிரம்மத்தின் கண் லக்ஷணையெவ்வாறு பொருந்தும் (எப்பதத்திற்கு எப்பொருளில் சக்தி விருத்தியுண்டோ அப்பதத்திற்கு அப்பொருளில் லக்ஷணா விருத்தி பொருந்துவதின்றும் கடபதத்திற்கு கடத்தின் கண் போன்று என்பது கருத்து) பிரம்மம் முதலிய பதத்தால் லக்ஷணா விருத்தியாலறியப்பட்ட வஸ்துவே சாஸ்திரார்த்தமாமெனின் அப்போது சகல சாஸ்திரமும் அநாத்ம நிஷ்டமேயாகும் என்று யாதொரு தூஷணத் துவயம் கூறப்பட்டதோ அது பரிகரிக்கப்பட்டதாம். விசிஷ்டப் பிரம்மத்தின் கண் கிரகிக்கப்பட்ட சக்தியினையுடைய பிரம்மம் முதலிய சத்தத்திற்கு சுத்தப்பிரம்மத்தின் கண் லக்ஷணை பொருந்துதலின்,

## அவதாரிகை

அப்படியானால் பிரம்ம சத்தத்திற்கு பூர்ணப்பிரம்மம் (வாச்சியம்) பொருளாவது எப்படிப் பொருந்தும் சுத்தப் பிரம்மத்திலும் வேறான

சகலமும் பரிச்சின்னமாதலின் அந்த விசிஷ்டப் பிரம்மத்தின்கண் பூர்ணத்தன்மை வடிவ பிருஹத்தன்மைச் சம்பவியாமையின் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்:—

### சுலோகம்

ब्रह्माज्ञाने ह्यद्वितीयत्वमेकं ब्रह्मण्यन्यच्चाद्वितीयत्वमस्ति ।
तत्सम्पर्कात्तत्र चाद्वैतताऽन्या व्युत्पन्नोऽयं ब्रह्मशब्दस्तु तत्र ॥

### பதவுரை

**हि**—யாதொரு காரணத்தினால்

**ब्रह्माज्ञाने**-பிரம்மத்தினையாசிரயமாகவும் விஷயமாகவுமுடைய அஞ்ஞானத்தின் கண்

**एकम् अद्वितीयत्वम्**-ஒருவித அத்துவிதீயத்தன்மையிருக்கின்றதோ

**ब्रह्मणि**—பிரம்மத்தின் கண்

**अन्यच्च अद्वितीयत्वम्** —மற்றோர்விதமான அத்துவிதீயத்தன்மை

**अस्ति**—இருக்கின்றதோ அதனால்

**तत्सम्पर्कात्** - பிரம்மத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் பரஸ்பரம் அதிஷ்டான அத்தியஸ்தத்தன்மையால் தாதான்மிய சம்பந்தத்தால் உண்டான

**तत्र च**—மாயாவிசிஷ்டப் பிரம்மத்தின் கண்ணும்

**अन्या अद्वैतता**-மற்றோர்விதமான அத்துவிதீயத்தன்மையிருக்கின்றது

**अयं ब्रह्मशब्दः**-இந்தப் பிரம்ம சத்தமானது

**तत्र** — மாயா விசிட்டப்பிரம்மத்தின் கண்

**व्युत्पन्नः** — சத்தியுடையதாக அறியப்பட்டது

### விசேஷவுரை

பிரம்ம சம்பந்தி அஞ்ஞானம் சருவப்பிரபஞ்ச பரிணாமாசிரயமாதலாலும் பிரம்மத்தின் கண் அத்தியஸ்தத்தன்மையால் அதன் கண் அந்தர்ப்பூதமாதலாலும் அவ்வஞ்ஞானத்தின் கண் சஜாதீயம் முதலிய

பேத சூனியத்தன்மையால் ஒரு வித அத்துவிதீயத்தன்மையுளது, சுத்தப் பிரம்மத்தினும் வேறான அனைத்தும் மித்தையாதலினாலும் சீவர்களும் பிரம்மமாத்திரமாதலினாலும் சஜாதீயம் முதலிய பேதமின்மையின் சுத்தப்பிரம்மத்தின் கண் மற்றோர் வித அத்துவிதத்தன்மையுளது. பிரம்மத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் பரஸ்பரம் அதிஷ்டானத்தன்மை அத்தியஸ்தத்தன்மையிருத்தலால் தாதான்மிய சம்பந்தமுளது அச்சம்பந்தத்தாலுண்டான அவ்விரண்டன் வடிவமான விசிஷ்டத்தின் கண் மற்றோர் விதமான அத்துவிதீயத்தன்மையுளது இரண்டு அத்துவிதீய வடிவ வஸ்துவின்கண் அத்துவிதீயத்தன்மை நியம (வியாபக) மாதலின்.

இந்தப்பிரகாரம் உபநிஷத்துக்களில் ப்ரம்மசத்தத்தின் பிரயோகம் சகத்காரணப் பிரம்மத்தின் கண் அதிகமாக இருத்தலாலும் சுத்தப் பிரம்மத்தின் கண் சகத்காரணத்தன்மைச் சம்பவியாமையாலும் "மாயையைப் பிரகிருதியென அறிய வேண்டும்" "தேவான்ம சத்தியை" என்பது முதலிய வசனங்களால் சகத்காரண பிரம்மம் மாயா விசிஷ்டமென சித்தித்தலானும் வியாபகசபளப் பிரம்மத்தின் கண் பிரம்மம் முதலிய சத்தங்களுக்கு சத்திஞானம் அவிருத்தமாம் என்பது பொருள். (158)

சபளம் = கூடியது

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் நான் பிரம்மமாயிருக்கின்றேன் என்பது முதலிய மகா வாக்கியத்தின் கண்ணுள்ள பிரம்மம் முதலிய சத்தங்களின் வாச்சியார்த்தமாகிய மாயா விசிஷ்டப் பிரம்மத்தினையும் அதன் கண் சத்தத்தின் சத்தியினையும் சத்தி ஞானத்தையும் காண்பித்து அவ்வாக்கியத்தின் கண்ணுள்ள நான் என்பது முதலிய பதங்களின் வாச்சியார்த்தமாகிய விசிஷ்டசீவனையும் அவ்விசிஷ்டான்மாவின் கண் நான் என்பது முதலிய பதங்களின் சத்திஞானத்தையும் தெரிசிப்பிக்கின்றார் :—

## சுலோகம்

**प्रत्यग्भावस्तावदेकोऽस्ति बुद्धौ प्रत्यग्भावः कश्चिदन्यः प्रतीचि ।**
**प्रत्यग्भावस्तत्कृतस्तत्र चान्यो व्युत्पन्नोऽयं तत्र चात्मेति शब्दः ॥**

## பதவுரை

**बुद्धौ**—அந்தக்கரணத்தின் கண்

**एकः प्रत्यग्भावः**—ஒருவித ஆந்தரத்தன்மை

**अस्ति**—இருக்கின்றது

**प्रतीचि**—பிரத்தியகான்மாவின் கண்

**अन्यः कश्चित्**—மற்றோர் விதமான

**प्रत्यग्भावः**—ஆந்தரத்தன்மையிருக்கின்றது

**तत्र च**—அவ்விரண்டன் வடிவ புத்தி விசிஷ்டான்மாவின் கண்

**तत्कृतः**—அவ்விரண்டு ஆந்தரத்தன்மையாலும் செய்யப்பட்ட

**अन्यः प्रत्यग्भावः**—மற்றோர்விதமான ஆந்தரத்தன்மையிருக்கின்றது

இவ்வாறு கூறியதனுற்சித்தித்ததென்னையெனிற் கூறுகின்றார்.

**तत्र च**—அவ்விரண்டன் வடிவ புத்திவிசிஷ்டான்மாவின் கண்

**आत्मा इति**—ஆன்மா (நான்) என்னும்

**अयं शब्दः**—இந்தப்பதமானது

**व्युत्पन्नः**—சக்தியுடையதென அறியப்பட்டது.

## விசேஷவுரை

தேகேந்திரியாதிகளையபேக்ஷித்து அவற்றின் அதிஷ்டாதாவான அந்தக்கரணம் ஆந்தரமென்பது பொருள், அந்தக்கரணத்தின் கண்ணுள்ள ஆபேக்ஷிக ஆந்தரத்தன்மையைப் பார்க்கிலும் பிரத்தியகான்மாவாகிய சாக்ஷியின் கண்ணுள்ள ஆந்தரத்தன்மை விலக்ஷணமாம் "**यः आत्मा सर्वान्तरः**" (யாதொரு ஆன்மா எல்லாவற்றினுமாந்தரமோ) என்னுஞ்சுருதியால் ஆன்மாவின்கண் சருவாந்தரத்தன்மை வடிவ விலக்ஷணப் பிரத்தியக்துவமிருக்கின்றது என்பது பொருள். அந்தக்கரணமும் சாக்ஷியுமாகிய இரண்டன் வடிவமான விசிஷ்டத்தில் அவ்விரண்டு ஆந்தரத்தன்மையைப்பார்க்கிலும் விலக்ஷணமான ஆந்தரத்தன்மையுளது.

ஆன்மா என்னும் சத்தம் = நீ நான் என்பது முதலிய சத்தம்.

நீ நான் என்பது முதலிய சத்தங்களுக்கு சத்தியைக் கிரகிக்கும் காலத்தில் அவற்றினருத்தத்தில் சபளத்தன்மை (விசிஷ்டத்தன்மை) தோற்றுகின்றதில்லை அப்படியாயினும் விசாரகாலத்தில் அருத்தத்தில் சபளத்தன்மை சித்திக்கின்றது எனக்கூறுவர் ஆதலினால் சக்திஞான காலத்திலும் அருத்தம் உபயவடிவமேயாமாதலின் விசிஷ்டத்தின்கண் ஆன்மா முதலிய சத்தம் வியுற்பன்னம் எனப்பட்டது. வியுற்பன்னம்= கிரகிக்கப்பட்ட சத்தியினையுடையது. (159)

## விட்டுவிடாத லக்ஷணையால் அகண்டார்த்தத்துவ உபபாதனம்

### அவதாரிகை

இவ்வாறு நான், பிரம்மம் என்னும் இரு பதங்களின் வாச்சியமாகிய புத்தி விசிஷ்ட ஆன்மாவையும் அஞ்ஞான விசிஷ்டபிரம்மத்தையும் அவற்றில் பிரம்மம் முதலான பதங்களின் சத்திக்கிரகணத்தையும் கூறி நான் பிரம்மமாயிருக்கின்றேன் என்னும் வாக்கியத்திற்கு விட்டு விடாத லக்ஷணையால் அகண்டார்த்தத்தின் பிரதிபாதனப்பிரகாரத்தைக் கூறுகின்றார் :—

### சுலோகம்

तच्छब्दवाच्यगतमद्वयभागमेकं
प्रत्यक्त्वमात्रमविरोधमपेक्षमाणः ।
त्वंशब्दवाच्यशबलस्थमुपाददानो
वाक्यादखण्डमथ तत्वमसीति विद्यात् ॥ १६० ॥

### பதவுரை

अविरोधम्—மகாவாக்கியத்தினருத்தத்தில் அவிரோதத்தை
अपेक्षमाणः—அபேக்ஷிக்கின்றவனாகிய அதிகாரி
तत् शब्दवाच्यगतम्—தத்பதத்தின் வாச்சியார்த்தத்திலுள்ள
एकम् अद्वयभागम्—பாரமார்த்திக அத்துவிதபாகத்தையும்
त्वंशब्दवाच्य—துவம் பதத்தின் வாச்சியார்த்தமான

**शबलस्थम्**-விசிஷ்டத்தின் கண்ணுள்ள

**प्रत्यक्त्वमात्रम्**-சருவாந்தர சைதன்னியமாத்திரத்தையும்

**उपादान:**-விட்டுவிடாத லக்ஷணையால் கிரகிக்கின்றவனுய்

**अथ**-அனந்தரம்

**तत्त्वमसि इति वाक्यात्**-தத்துவமசியென்னும் மகாவாக்கியத்தால்

**अखण्डम्**-அகண்டார்த்தத்தை

**विद्यात्**-அறிகின்ருன் (160)

### அவதாரிகை

அற்றேல் தத்பததுவம்பதங்களுக்கு ஏகார்த்தத்தன்மை பொருந்தாது. ஏகார்த்தத்தன்மையை யங்கீகரிக்கின் பரியாயத்தன்மையின் அடைவு உண்டாம் அத்தியந்தம் பின்ஞர்த்தத்தன்மையையங்கீகரிக்கின் சாமாஞதிகரண்யம் பொருந்தாது ஆதலின் தத்துவமசிமகாவாக்கியம் பேதாபேதத்தைப் போதிப்பதா மென்னுஞ்சங்கைக்குக் கூறுகின்ருர் :—

### சுலோகம்

**आदेयांशे नाणुमात्रोऽपि भेदः**
**यद्यप्येवं भिन्नमादाय शब्दौ ।**
**वर्तेते त्वव्ययद्वयात्मप्रकाशे**
**बाह्यं हेतुं जामिता नास्ति तस्मात् ॥ १६१ ॥**

### பதவுரை

**आदेयांशे** - கொள்ளத்தக்க அத்துவிதசைதன்னியானந்த லக்ஷிய பாகத்தில்

**अणुमात्रोऽपि**-அற்பமாயினும்

**भेदः न**-பேதமின்ரும்

இவ்வாறங்கீகரிக்கின் தத்பத துவம்பதங்களுக்கு அபரியாயத் தன்மையெவ்வாறு சித்திக்கும் என்னும் சங்கைக்கு முற்கூறியதை யநுவதித்தலால் அதனையுபபாதனஞ் செய்கின்ருர்.

**यद्यपि एवम्** – இவ்வாருயினும், அதாவது லக்ஷியாம்சத்தைக் கொண்டு தத்பதத்துவம்பதங்களுக்கு அபரியாயத் தன்மையின்ருயினும்

**बाह्यम्**–அகண்ட வாக்கியார்த்தத்தினின்றும் புறம்பானதும்

**हेतुम्**–சத்தப்பிரவிருத்திக்கு நிமித்தமும்

**भिन्नम्**–பரஸ்பரம் வேருனதுமான வாச்சியார்த்தத்தை

**आदाय**–கிரகித்துக்கொண்டு

**शब्दौ**–தத்பத துவம்பதங்கள்

**अद्वयात्मप्रकाशे**–அத்துவித ஆன்மசொப்பிரகாச

**त्वयि**=உனது வடிவத்தில்

**वर्तेते**–லக்ஷணுவிருத்தியால் பிரவிருத்திக்கின்றன

**तस्मात्**–ஆதலால, அதாவது இருபதங்களின் லக்ஷியார்த்தத்திற்கு அபேதமுளதாயினும் வாச்சியார்த்தத்திற்குப்பேத மிருத்தலால்,

**आमिता**–தத்பததுவம் பதங்களுக்குப் பரியாயத்தன்மை

**नास्ति**–இன்ரும்

### விசேஷவுரை

தாத்பரியத்திற்கு விஷயமும் லக்ஷியமும் அபரோக்ஷசைதன்னியமும் அத்துவயமுமான பாகத்தில் அற்பமும் பேதமின்ரும் சைதன்னியத்திற்கும் ஆனந்தத்திற்கும் அத்தியந்தம அபேதமிருத்தலின், அபேதத்தை யங்கீகரியாவிடின் ஆனந்தத்திற்கு விளக்கமின்ருகும் அல்லது சைதன்னியத்தின் சம்பந்தத்தால் விளங்குகிறது எனின் சைதன்யத்தின் கண் ஆனந்தத்திற்குக்கற்பிதத்தன்மைப்பிராப்தியாம் கற்பிதத்தன்மையின் நிச்சம்பந்தம சமபவியாமையின், இவ்வாறு சைதன்னியத்திற்கும் ஆனந்தத்தினின்றும் பேதத்தை யங்கீகரிக்கின் உபேக்ஷிக்கத்தக்கதாந் தன்மைப்பிராப்தியாம் பேதாபேதமும் பரஸ்பரம் விருத்தமாம் ஆதலின் சைதன்னியமும ஆனந்தமும் ஏகரச(ஓர்வடிவ)மாம் பின்னுபின்ன மன்ரும் என்பது பொருள். (161)

*அவதாரிகை*

அற்றேல் சீவப்பிரம்மங்களுக்கு அத்தியந்தம் அபேதமுளதாயின் கடபதகும்பபதங்களுக்குப் போன்று தத்பத துவம்பதங்களுக்குச் சாமானாதிகரண்யம் சித்தியாது. நீலம்உற்பலம் என்பது முதலிய விடங்களில் சிறிது பேதமுளதாகவே சாமானாதிகரண்யம் காணப்படுதலின் என்னுஞ்சங்கைக்குக் கூறுகின்றார் :—

*சுலோகம்*

अद्वैतेऽर्थे प्रत्यगर्थोऽस्ति तद्वत्
प्रत्यक्तत्वे चाद्वयस्यापि भावः ।
यद्यप्येवं नातिरेकावकाशः
पूर्णे तत्वे तत्त्वमर्थोपपत्तेः ॥ १६२ ॥

*பதவுரை*

**अद्वैते अर्थे**—தத்பதார்த்த சுத்த அத்துவயானந்தத்தின் கண்

**प्रत्यगर्थः**—சருவாந்தர கேவல சாக்ஷியானது

**अस्ति**—இருக்கின்றது (அத்வயாபின்னமாமென்பது பொருள்)

**तद्वत्**—அதுபோன்று, அதாவது அத்துவயாபின்ன பிரத்தியக் தத்துவம் போன்று

**प्रत्यक्तत्वे च**—சருவாந்தர கேவல சாக்ஷியின் கண்

**अद्वयस्य पि भावः**—அத்துவித பிரம்மதத்துவத்தின் சொரூபமும்

**(अस्ति)**—இருக்கின்றது பிரத்யகபின்னமாமென்பது பொருள்

**यद्यपि एवम्**—இவ்வாறுகும்போது

**अतिरे कावकाशः**—அற்பபேதத்திற்கும் அவகாசம்

**न**—இன்றும்

அல்லது அத்துவித என்பது முதலிய பூருவார்த்தத்தால் பிரத்தியகான்மாவிற்கும் அத்துவயப் பிரம்மத்திற்கும் அபேதம் தெரிசிப்பிக்கப்பட்டது. இவ்வாறுகும்போது என்னும் உத்தரார்த்தத்தால் சாமானாதிகரண்யத்திற்கு நிமித்தமான பேதத்தை யநுவதித்துத் தூஷிக்கின்றார்.

**एवमपि**—கூறிய வண்ணம் அபேதமுளதாயினும்

**अतिरेकावकाशः यदि**—தத்துவம்பதங்களின் சாமானாதிகரண்யப் பிரயோகத்தால் அற்பபேதத்திற்கு அவகாசமுளதெனின்

**न**—அது சரியன்றாம்

## *விசேஷவுரை*

அதில் ஏதுவைக் கூறுகின்றார் 'பரிபூர்ணப்பிரம்மமென' அதாவது பூர்ணதத்துவத்தின் கண் சாமானாதிகரண்யப்பிரயுக்த அற்பபேதத் திற்கும் அவகாசமின்றாம், அற்பபேதத்தை யங்கீகரிக்கின் பிரம்மம் பிரத்யகான்மாவினின்றும் பிரிவுறும், பிரத்யகான்மாவும் பிரம்மத்தி னின்றும் பிரிவுறும் இவ்வாறாகவே தத்பதார்த்த பிரம்மத்தின் கண் நிரவதிக பிருஹத்தன்மையும் துவம்பதார்த்த பிரத்தியகான்மாவின் கண் சருவாந்தரத்தன்மையும் சித்திக்காது பேதமின்றி தத்துவம் பூர்ணமாயுளதாய வழியே தத்பதார்த்தப் பிரம்மத்தின் கண் பிருஹத் தன்மை (அத்துவிதீயத்தன்மை)யும் துவம்பதார்த்த ஆன்மாவின் கண் பிரத்தியக்தன்மையும் பொருந்துதலின் என்பது பொருள். (162)

## *ஸர்வபதங்களிலும் லக்ஷணையின் உபபாதனம்*

## *அவதாரிகை*

அற்றேல் ஓர் வாக்கியத்தின்கண் பிரயோகிக்கப்பட்ட சகலபதங் களுக்கும் லக்ஷணை பொருந்தாது உலகின் கண் அவ்வாறு காணப்படா மையினாலும் சக்தபதம் (சக்திவிருத்தியினையுடையபதம்) இன்றி வாக்கி யார்த்தத்தின் அநுபவம் அசம்பவமாதலானும் சக்தபதத்திற்கே வாக்கி யார்த்தாநுபவத்தையுண்டு பண்ணுந்தன்மையுண்மையின் எனின் ;

அற்றன்று உலகின் கண் சருவபதங்களுக்கும் லக்ஷணை காணப் படவில்லை யென்பது சரியன்றாம் 'விஷத்தைப்புசி' என்பது முதலிய இடங்களில் சருவபதங்களுக்கும் லக்ஷணைகாணப்படுதலின், அதாவது ஓர் பிதாவானவன் தனது சத்துருவின் கிருஹத்திற் புசிக்கச்செல்கின்ற தனது மைந்தனை நோக்கி சத்துருவின் அன்னம் இஷ்ட சாதனமன்று என்னும் அபிப்பிராயத்தால் 'விஷத்தைபுசி' என்னும் வாக்கியத்தை

பிரயோகித்தான் ஆதலின் அவ்வாக்கியத்தால் சத்துருக்கிருகத்தில் அன்னுதியின் பக்ஷணமும் ஜலாதியின் பானமும் இஷ்டசாதனமன்று எனப் பொருள் பிரதீதியாகின்றது. ஆதலின் சருவபதங்களிலும்[1] லக்ஷணையாம்.

இவ்வாறு "வாயுதேவதை அதிவேகமாகச் செல்லும் தேவதையாம்" என்னும் அருத்தவாத வாக்கியத்தின் கண்ணுள்ள சருவபதங்களிலும் யாகச்சிறப்பின் கண் லக்ஷணை காணப்பட்டுள்ளது (அதாவது வாயுவைத் தேவதையாகவுடைய யாகம் சிறந்தது என்பது பொருள்)

மேலும் தாற்பரியாநுபபத்தியானது லக்ஷணைக்குப் பீஜமாம் அன்வயாநுபபத்தி பீஜமன்றும் "இந்தப்பசு விலைக்கு வாங்க யோக்கியமாம் எதனுலெனின் பாலை மிகுதியாகவுடையதாகலின்" என்னும் அர்த்தவாத வாக்கியத்தின் கண் அன்வயாநுபபத்தியின்மையின் இவ்வாருகவே தாற்பரியத்தையநுசரித்து ஒரு பதத்திலாவது அல்லது சருவபதத்திலாவது லக்ஷணையைச் செய்தல் விருத்தமின்றும்.

இதனுலேயே அவனிவன் என்னும் வாக்கியத்தின் கண்ணும் இருபதங்களிலும் லக்ஷணையைச் செய்தலே நியாயமாம். சத்தத்தில் வாக்கியார்த்தாநுபவத்தின் காரணத்தன்மையில் அன்வயிக்கப்படுகின்ற பதார்த்தத்தின் உபஸ்தாபகத்தன்மையே (தோற்றுவிக்குந்தன்மை) பிரயோஜகமாம். சத்திவிருத்தியால் அதனைத் தோற்றுவிக்குந்தன்மைப் பிரயோஜகமன்றும் கௌரவமாதலால் ஆதலின் உபக்கிரமம் உபசம்மாரம் முதலிய ஷட்விததாற்பரியலிங்கங்களை யநுசரித்து பிரத்தியக் வடிவ அத்துவயப்பிரம்ம மாத்திரத்தில் பரியவசானமாகின்ற தத்துவமசி மகா வாக்கியத்திலுள்ள இருபதங்களிலும் லக்ஷணை விருத்தமாகின்ற தில்லை.

மற்றே அத்தியந்தம் ஆவசியகமாம் இருபதங்களில் லக்ஷணையை யங்கீகரியாவிடின் சுருதியின் தாற்பரியத்தின் நிருவாகமாகின்றதில்லை

---

1. *ஸ்வ (விஷபோஜன) சஜாதீய (சத்துருக்கிருகபோஜன) பிரதியோகிகத்துவ வடிவசம்பந்தம் லக்ஷணையாம் அதுவிஷத்தைப் புசி என்பதாதியில் சத்துருக்கிருக போசனநிவிருத்தியில் அறியத் தக்கது.*

என்றிவ்வாறு நியாயத்தாற் சித்தித்த அர்த்தத்தின் கண் அநுக்கிரகஞ் செய்வதான அவிநிகமனவடிவ (விநிகமனுவிரஹ) தருக்கத்தையும் அதாவது ஓர்பதத்தில் லக்ஷணை செய்ய வேண்டும் மற்றோர்பதத்திலின்றுமென்பதன்கண் யுத்தி விநிகமனம் அதனபாவம் அவிநிகமனமாம் அதனைக்கூறுகின்றார் :—

*சுலோகம்*

**न च विनिगमनायां कारणं किञ्चिदस्ति**
**स्फुटमुभयपदस्था लक्षणा शस्यतेऽतः ।**
**न हि विनिगमनायां हेत्वभावे कदाचित्**
**क्वचिदियमुपलब्धा सोऽयमित्यादिवाक्ये ॥ १६३ ॥**

*பதவுரை*

**विनिगमनायाम्**–ஓர் பதத்தின் கண் லக்ஷணை செய்யவேண்டும் மற்றோர் பதத்தின் கண் இன்றும் என்னும் நிச்சயத்தின் கண்

**किञ्चित् कारणम्**–யாதொரு காரணமும்

**स्फुटम्**–ஸ்பஷ்டமாக

**न च अस्ति**–இன்றும்

**अतः**–ஆதலால்

**उभयपदस्था**–இருபதங்களிலுள்ள

**लक्षणा**–லக்ஷணையே

**शस्यते**–சிறப்பாம்

**विनिगमनायाम्**–விநிகமனத்தின் கண்

**हेत्वभावे**–காரணமில்லாதபோது

**कदाचित्**–ஓர் போதும்

**क्वचित्**–ஓரிடத்தும்

**सोऽयमित्यादि वाक्ये**–அவனிவன் என்பது முதலிய வாக்கியத்தின் கண்

**इयम्**–ஒருபத லக்ஷணையானது

**न हि उपलभ्या**–அறியப்படவில்லை.

### *விசேஷவுரை*

விநிகமனம் = இப்பதத்தின் கண்ணேயே லக்ஷணையாம் வேறுபதத்தின்றும் என்னும் நிச்சயம்.

அற்றேல ஒரு பதலக்ஷணையின் கண் வேறுகாரணத்தைத்தேட வேண்டியதிலலை அதாவது வேறு காரணமின்ருகுக. ஆனல் சுரோதாவின் இச்சையே அதன் கண் நிமித்தமாம் என்ருசங்கித்து அப்படியானல் வாக்கியார்த்தத்தின் வியவஸ்தை சித்திக்காது. எல்லா சுரோதாக்களுக்கும் அல்லது ஒரு சுரோதாவிற்கு நியமமாக ஒரே பிரகாரமான இச்சை சம்பவியாமையின். அதாவது ஒருவன் ஒரு பதத்தில் லக்ஷணையை விரும்புவன். மற்ருெருவன் இருபதத்திலும் லக்ஷணையை யிச்சிப்பவன்; அன்றியும் ஒருவனே ஓர்போது ஒரு பதத்திலும் மற்ருேர் போது இரண்டு பதத்திலும் லக்ஷணையை விரும்புவன்; ஆதலின் வியவஸ்தை சித்திக்காது என்பது அபிப்பிராயமாம். (163)

### *அவதாரிகை*

அற்றேல் எவ்வாக்கியத்தின் கண் எப்பதம் முதலில் கேட்கப்படுகின்றதோ அப்பதம் அசஞ்சாத விரோதியாதலின் பிரபலமாகி தனது அர்த்தத்தைப்போதிப்பதாம் (பூருவமீமாம்ஸையில் '**यो होता सोऽध्वर्युः**' எவன் ஹோதாவோ அவன் அதவர்யு. என்னும் வாக்கியத்தில் ஹோதா பதம் போன்று, பிரகிருதத்தில் தத்துவமசி மகாவாகக்கியத்தில் தத்பதம் முதலில் கேட்கப்படுகின்றதாகலின் அசஞ்சாத விரோதியாம். அதனல் அது பிரபலமாய் சுவார்த்தத்தில் நிஷடையுடையது) அதனின் விரோதார்த்தமுடைய இரண்டாவது பதம் அதனநுகூலமான அர்த்தத்தை லக்ஷணவிருத்தியால் போதிக்கும் (பிரகிருதத்தில் துவம் பதம் தத்பதார்த்தத்தின் விருத்தார்த்த முடையதாகி அதனநுகூலமான கூடஸ்தசேதனத்தை லக்ஷணையால் போதிக்கின்றது) ஆதலின் ஒரு பத லக்ஷணையின் கண் காரணத்தினின்மை அசித்தமாம் என்ரு சங்கித்து ஈண்டும் அதாவது அசஞ்சாத விரோதி நியாயத்தைககொண்ட போதிலும் வாக்கியார்த்தத்தின் வியவஸ்தையின்மை வடிவ தோஷமேயுண்டாம்.

வேதத்தின் சாகை பேதத்தால் பதத்தின் பிரதமத்தன்மை முதலிய வற்றிற்கு வியவஸ்தையின்மையின் அதாவது சாங்தோக்கியத்தில் தத் பதம் முதலில் கேட்கப்படுகின்றது பிருகதாரண்ணியத்தில் பிரம்மபதம் பின்னல் கேட்கப்படுகின்றதாகலின் எனக்கூறுகின்றார் :—

*சுலோகம்*

प्रथमचरमभावो निर्णये कारणं चेत्
अयमपि नियमो न ह्यन्यथाऽप्यस्य दृष्टेः ।
प्रथमपठितमासीत्तत्पदं सामवेदे
चरमपठितमेतद् दृष्टमध्वर्युवेदे ॥ १६४ ॥

*பதவுரை*

**निर्णये**—ஏகபதலக்ஷணையின் நிச்சயத்தில்

**प्रथमचरमभावः**—பதங்களின் முன்பின் தன்மையே

**कारणं चेत्**—காரணமாமெனின்

**अयमपि**—இந்த முன்பின்தன்மையும்

**नहि नियमः**—நியமமாயின்மையின் (காரணமன்றும்)

**अस्य**—இந்த முன்பின்தன்மையினை

**अन्यथा अपि**—வேறுபிரகாரமாகவும்

**दृष्टेः**—காண்டலின்

வேறு பிரகாரமான தரிசனத்தையே கூறுகின்றார்

**सामवेदे**—சாமவேதத்தின் கண்

**तत्पदम्**—தத்பதமானது

**प्रथमपठितम्**—முதலில் படிக்கப்பட்டதாக

**आसीत्**—இருக்கின்றது

**अध्वर्युवेदे**—யஜுர்வேதத்தின் கண்

**एतत्पदम्**—தத்பதபரியாய பிரம்மபதமானது

**चरमपठितम्**—கடைசியில் படிக்கப்பட்டதாக

**दृष्टम्**—காணப்படுகின்றது

## விசேஷவுரை

தத்துவமசி மகாவாக்கியத்தில் அத்வயப்பிரம்ம போதகதத்பதமானது முதலில் படிக்கப்பட்டுள்ளது யஜுர்வேதத்தில் நான் பிரம்மமாயிருக்கின்றேன் என்னும் வாக்கியத்தில் தத்பதார்த்தபோதக பிரம்மபதமானது பின்னால் படிக்கப்பட்டுள்ளது. இவ்வாறாகவே தத்துவமசி வாக்கியத்தால் சகத்காரணத்துவாதி விசிஷ்ட பிரம்மத்திற்கு துவம்பத லக்ஷியசாக்ஷியோடு அபேதம் பிரதிபாதிக்கத்தக்கதாம். அகம் பிரம்மாஸ்மி வாக்கியத்தாலோ அகங்காரகர்த்திருத்துவாதி விசிஷ்ட சீவனுக்கு சுத்தாத்துவயப் பிரம்மத்தோடு அபேதம் பிரதிபாதிக்கத்தக்கதாம் ஆகவே எல்லாவாக்கியங்களாலும் ஒரே வடிவமாகப்பிரம்மம் சித்திக்காது. ஒரேவடிவமாகப் பிரம்மத்தின் அசித்தியானது அயுக்தமாம் (அதாவது பிரம்மத்திற்கு அநேகவடிவத்தன்மை பொருத்தமன்றும்) ஒரே வஸ்துவின் கண் விருத்த இருவடிவத்தன்மை பொருந்தாமையாலும் வஸ்துவின் கண் விகற்பஞ்சம்பவியாமையாலும் என்பது கருத்து. (164)

## அவதாரிகை

அவனிவன் என்பது முதலிய இலௌகிக வாக்கியத்தின் கண்ணும் முன்பின் தன்மையானது ஓர்பதலக்ஷணையின் நிச்சய காரணமாகின்றதில்லையெனக்கூறுகின்றார்:-

## சுலோகம்

सोऽयं पुमानयमसाविति पौरुषेय-
वाक्ये तथा व्यतिहृतेऽत्र विशेषहेतुः ।
पूर्वापरत्वमिति शक्यमिदं न वक्तुं
मुख्यत्वलाक्षणिकते प्रति शब्दवृत्त्योः ॥ १६५ ॥

## பதவுரை

**सोऽयं पुमान् इति**–அவன் இப்புருஷனென்னும்

**पौरुषेयवाक्ये**–இலௌகிக வாக்கியத்தின் கண்ணும்

**तथा**–அவ்வாறே

**अयं असौ इति**–இவன் அவன் என்று

**व्यतिहृते**–மாறியுச்சரிக்கப்பட்ட

**अत्र**–வாக்கியத்தின் கண்ணும்

**शब्दवृत्त्योः**–சத்த விருத்திகளின்

**मुख्यत्वलाक्षणिकते प्रति**–முக்கியத்தன்மை லாக்ஷணிகத்தன்மை களைக்குறித்து

**इदं पूर्वापरत्वम्**–இந்த முன் பின்தன்மையானது

**विशेषहेतुः इति**–விசேஷ காரணமாமென்று

**वक्तुं न शक्यम्**–கூறமுடியாது

### விசேஷவுரை

அவனிவன் என்னும் வாக்கியத்தில் அவன் என்னும் பதம் முன்பும் இவன் என்னும் பதம் பின்பும் பிரயோகிக்கப்பட்டுள்ளது. இவன் அவன் என்னும் வாக்கியத்திலோ மாறாக இவன் என்னும் பதம் முன்பும் அவன் என்னும் பதம் பின்பும் பிரயோகிக்கப்பட்டுள்ளது என்னும் பொருளைக் கூறுங்கருத்தினராய் மாறியுச்சரிக்கப்பட்டஎன்றார் விசேஷ காரணம்= விநிகமனத்தின் காரணம், அதாவது முதலில் பிரயோகிக்கப்பட்ட பதம் முக்கிய விருத்தியாலும் பின்னால் பிரயோகிக்கப்பட்ட பதம் லக்ஷணா விருத்தியாலும் அருத்தத்தைப்போதிப்பது என்பதன்கண் விசேஷ ஏதுஅற்பமுமறியப்படவில்லை. வாக்கியத்தைப் பிரயோகிக்கின்ற புருஷருடைய உச்சாரணத்தின்கண் முன்பின் தன்மை நியமமாகக் காணப்படாமையின் என்பது கருத்து.

## விரோத நீக்கத்தின் பொருட்டும் சர்வபதங்களில் லக்ஷணை

### அவதாரிகை

இவ்வாறு அகண்ட பிரம்மத்தின்கண் தாற்பரியாநுபபத்தியாலும் ஏகபதலக்ஷணையில் விநிகமனமின்மையாலும் இருபதங்களிலும் லக்ஷணையாமெனக்கூறப்பட்டது இப்போது ஏகபதலக்ஷணையில் விநிகமனுபாவத்தால் சககரிக்கப்பட்ட தத்துவம் பதங்களின் முக்கியார்த்

தங்களுக்கு அபேதான்வயத்தின் அநுபபத்தியாலும் லக்ஷணையைச் சொல்லவேண்டுமெனக் கூறுகின்றார்: — (சககரிக்கப்பட்ட அந்வயானுப பத்தியெனக்கூட்டுக.)

### சுலோகம்

न च भवति विरोधस्योत्थितस्यापनीतिः
पदयुगलनिविष्टां लक्षणामन्तरेण ।
नहि भवति कदाचित् सद्वयस्याद्वयत्वं
न च भवति परोक्षः प्रत्यगर्थोऽपि तद्वत् ॥ १६६ ॥

### பதவுரை

**पदयुगलनिविष्टाम्**—தத் துவம் என்னுமிருபதங்களின்

**लक्षणामन्तरेण**—லக்ஷணையின்றி

**उत्थितस्य**—தத்துவம்பதார்த்தங்களின் அபேதத்தில் எழுந்த

**विरोधस्य**—ஸத்துவயத்துவம் அத்வயத்துவம் முதலிய விரோதத்தின்

**अपनीतिः**—நிவர்த்தியானது

**न च भवति**—சம்பவிக்கின்றதில்லை

**सद्वयस्य**—துவிதத்தோடு கூடியதற்கு

**अद्वयत्वम्**—அத்துவிதத்தன்மை

**कदाचित्**—ஓர்போதும்

**न हि भवति**—சம்பவிக்கின்றதில்லை

**तद्वत्**—அதுபோலவே

**परोक्षः अपि**—தத்பதார்த்த பரோக்ஷ வஸ்துவும்

**प्रत्यगर्थः**—சருவாந்தர அபரோக்ஷ ஆன்மவஸ்து

**न च भवति**—ஆகின்றதில்லை

### விசேஷவுரை

எழுந்த = அறியப்பட்ட, விரோதத்தினையே வெளிபடுத்துகின்றார் துவிதத்தோடு என. அதுபோல= துவித (பேத)த்தோடுகூடியதற்கு அத்துவிதத்தோடு அபேதம் பொருந்தாதுபோன்று,

இனிகூறப்படும் ஏதுவால் தத் முதலிய சருவநாமசத்தம் உபஸ்தித வாசகமாதலாலும் சுத்தவஸ்துவானது தாற்பரிய விஷயத்தன்மையால் உபஸ்திதமாயிருத்தலானும் லக்ஷணையின்றியே தத்பதத்தால் சுத்தத்தின் உபஸ்திதி சம்பவிக்கும் என்னுஞ்சங்கை கண்டிக்கப்பட்டது. உபஸ்திதி விசிஷ்டத்திற்கு சுத்தத்தன்மைச்சம்பவியாமையினாலும் தத் முதலிய பதத்தோடுகூடிய மகாவாக்கியத்தை விட்டு அவாந்தர வாக்கியத்திற்கு சுத்தத்தின்கண் தாற்பரியம் சம்பவியாமையாலும் என்க.

மகாவாக்கியத்தினையும் அதன் அர்த்தத்தினையும் அனுசந்தானஞ் செய்தலன்றி வாக்கியத்தின் ஏகதேசபதத்திற்கு சுத்தத்தில் தாற்பரிய நிரூபணம் சம்பவிக்கின்றதில்லை.

மகாவாக்கியத்தினதும் அதனர்த்தத்தினதும் அநுசந்தானமோ தத்பதத்தினதும் அதன் அர்த்தத்தினதும் அனுசந்தானமின்றி சம்பவிக்கின்றதில்லையாதலின் தாற்பரிய நிரூபணத்திற்கு முன்பே தத்பதார்த்தத்தின் நிருணயஞ்செய்யத்தக்கதாம். ஆதலின் எதிலிருந்து இந்தப் பூதங்கள் உண்டாகின்றனவோ என்பது முதலிய சிருஷ்டியாதியைப் பிரதிபாதிக்கின்ற வாக்கியத்தை யநுசரித்து சகத்காரணத்துவாதி விசிஷ்டமே தற்பதார்த்தமாமென நிச்சயஞ்செய்யப்படுகின்றது. ஆதலின் விசிஷ்ட வாசகதத்பதத்திற்கும் சுத்தத்தில் லக்ஷணையை அவசியம் அங்கீகரிக்கவேண்டுமென்பது கருத்து

சங்கை:- எப்படி துவம்பதார்த்தத்திலுள்ள சத்துவிதீயத்தன்மை (துவைதத்தோடுகூடியதன்மை) யம்சம் லக்ஷணையால் பரித்தியாகஞ் செய்யப்படுகின்றதோ அப்படி அபரோக்ஷத்தன்மையம்சத்திற்கும் பரித்தியாகம்சொல்லவேண்டும். அபரோக்ஷத்தன்மையைப் பரித்தியாகஞ் செய்தால்தான் தத்பதார்த்த பரோக்ஷவஸ்துவோடு விரோதத்தின் பரிகாரமுண்டாகும். உத்தேச்யதுவம் பதார்த்தத்தின் விசேஷணத் தன்மையால் அபரோக்ஷத்தன்மையின் பரித்தியாகமும் உசிதமே யாதலின்.

சமாதானம்:- கூறிய சங்கை சரியன்றும் துவம்பதத்தில் லக்ஷணையால் கிரகிக்கத்தக்க பிரத்தியக் வடிவ சைதன்னிய மாத்திரத்திற்கு அபரோக்ஷத்தன்மை சொரூபமாதலினாலும் சொரூபத்தைத் தியாகஞ்

செய்யின் சைதன்னியவடிவ பதார்த்தத்திற்குத் தியாகம் பிராப்தி யாதலினாலும் என்க. "ग्रहं संमार्ष्टि" (கிரக மென்னும் பாத்திரத்தை சுத்திசெய்க). என்னும் வேதவாக்கியத்தின் கண் யஞ்ஞ சம்பந்தி பாத்திரம் அநேகமாதலால் உத்தேச்யமாகிய பாத்திரத்திலுள்ள ஏகத் தன்மையானது விவக்ஷிதமின்றாம் என கூறப்பட்டுள்ளது. இவ்வாறு கிரகத்தன்மையும் (பாத்திரத்தன்மையும்) உத்தேசிய விசேஷண த்தன்மையால் விவக்ஷிதமின்றாம் என்பதில்லை. மற்றோ விவக்ஷிதமாம், கிரகத்தன்மை கிரகத்தின் சொரூபமாயிருத்தலின். தானாகிய ஆன்மா பரோக்ஷமாம் என ஒருவனுக்கும் அநுபவம் சம்பவிக்கின்றதில்லை. ஆதலால் பரோக்ஷத்தன்மை ஸத்வயத்தன்மை முதலிய விரோதபரிகாரத் தின் பொருட்டு இருபதங்களிலும் லக்ஷணை அவசியம் அங்கீகரிக்கத்தக்க தாம் என்பது கருத்து. (166)

### அவதாரிகை

அற்றேல் அபேதஞானத்தின் பொருட்டு யாதோர் பதார்த்தத்தின் கண்ணும் லக்ஷணையே வேண்டியதின்றாம். ஒரே பிரம்மத்திற்கு சீவத்துவ ஈசுவரத்துவ வடிவ இரண்டு விசேஷணங்களோடு கூடிய தாந்தன்மையால் இருபதங்களின் வாச்சியத்தன்மை யுண்மையின் தண்ட முடையவன் குண்டல முடையவன் இப்புருஷன் என்னும் பிரயோகத்தினாற் போன்று அபேதப் பிரதீதி பொருந்துதலின் எனின்.

அற்றன்று இரண்டு விசிஷ்டங்களினின்றும் அவ்விரண்டற்குமாசிரய மான கேவல ஸ்வரூபம் அன்னியமாதலின். லக்ஷணையின்றி விசிஷ்ட வாசக பதங்களால் கேவல சொரூபத்தின் பிரதீதி சம்பவியாமையின். அஃதெப்படியெனின் இப்போது இவன் தண்டி (தண்டமுடையவன்) அன்றாம் என தண்டமுடைய தேவதத்தனினும் கேவல அத்தேவதத்த னிடத்தே பேதம் பிரதீதியாகின்றது. விசிட்டத்தினும் சுத்தம் வேறா மென்பது கருத்து. அபேத நிஷேதத்திற்கு பேதவிஷயகத்தன்மை கடம் படமன்று என்பது முதலிய வேறிடத்தில் நிச்சயிக்கப்பட்டுள்ளது. ஆதலின் விசேஷண மாத்திரத்தின் சம்சர்க்காபாவத்தை விஷயஞ் செய்யுந்தன்மை பொருந்தாமையின், இவன் தண்டியன்று என்னும் நிஷேதவசனத்திற்கு தண்ட சம்சர்க்காபாவத்தையே விஷயமாக அங்கீகரிக்கின் கடம் படமன்று என்னும் பிரதீதிக்கும் கடத்து

வாத்தியந்தாபாவ விஷயகத்தன்மைப் பிராப்தியாதலால் ஓரிடத்தும் பேதம் சித்திக்காது.

முன்பு இவன் தண்டியாகவேயிருந்தான் என்னும் பிரத்திய பிஞ்ஞைஞானத்தால் சுத்தத்திற்கும் விசிஷ்டத்திற்கும் அபேதம் சித்தித்த போது இப்போது இவன் தண்டியன்று என்னும் நிஷேதஞானத்திற்கு தண்டமாகிய விசேஷணத்தின அபாவமே விஷயமாம் என்று சங்கை செய்யற்க இப்போது இவன் தண்டியன்று என விசிஷ்டகேவலங்களின் பேத ஞானத்தை யநுசரித்து இவன் முன்பு தண்டியாகவேயிருந்தான் என்னும் அபேத விஷயகபிரத்தியபிஞ்ஞை ஞானத்திற்கு விசிஷ்டத்தி லுள்ள ஜாதீய (தேவதத்தத்துவஜாதியினையுடைய) விஷயகத்தன்மையால் பொருத்தமிருத்தலின்.

ஈதனைத்துமான்மாவே என்பது முதலிய சுருதியால் எல்லா வற்றிற்கும் அபேதம் சித்தித்தலின் கடம் படமன்று என கடாதிக்கு படாதியோடு அபேத நிஷேதமும் சித்திக்காது. விசிஷ்டத்தின் பேதமோ இரண்டிடத்தும் (தண்டி திருஷ்டாந்தத்திலும் தத்துவமசி மகாவாக்கியத் திலும்) சமானமேயாம். அபேதஞானமும் சொரூபமாத்திரத்தின் அபேத விஷயகமே யாமாதலின் பேத புத்திக்கும் அபேதபுத்திக்கும் விஷயம் வெவ்வேறேயாகும். இவ்வாறுகும் போது தண்டி குண்டலிகளுக்கும் பரஸ்பரம் தமது சமானசத்தையுடைய பேதத்தின் பலத்தால் தண்டி குண்டலி ஸ்தலத்திலும் லக்ஷணையாலேயே தண்டகுண்டலங்களுக்கு ஆசிரயமான கேவல வியக்தியின் அபேதம் சித்திக்கின்றது. இவ்வாறு ஒரே காலத்தில் ஒரே அதிகரணத்தின் கண் விரோதமின்றிய இரண்டு விசேஷணங்களோடு கூடிய தண்டி (தண்டமுடையவன்) குண்டலி (குண்டலமுடையவன்) களுக்கும் பரஸ்பரம் பேதமிருத்தலால் ஏகத்தன்மை பொருந்தாதபோது விரோதமுடைய இரண்டு விசேஷணங் களோடு கூடிய சீவேசுரர்கட்கு ஏகத்தன்மை பொருந்தாது எனக்கூற வேண்டியது என்னையுள எனக்கூறுகின்றார்:-

*சுலோகம்.*

अविरुद्धविशेषणद्वयप्रभवत्वेऽपि विशिष्टयोर्द्वयोः ।
घटते न यदैकता तदा नितरां तद्विपरीतरूपयोः ॥ १६७ ॥

## பதவுரை

**द्वयोः**—தண்டி குண்டலிகளாகிய இரண்டு

**विशिष्टयोः**—விசிட்டங்களுக்கு

**अविरुद्धविशेषणद्वय**—விரோதமின்றிய இரண்டு விசேஷணங்களை

**प्रभवत्वेऽपि**-நிமித்தமாகவுடையதாந்தன்மையிருப்பினும் (விசிட்டத் தன்மை விசேஷணத்தின் அதீனமாமென்பது பொருள்)

**यदा एकता**—எப்போது ஏகத்தன்மை

**न घटते**—லக்ஷணையின்றி பொருந்துகின்றதில்லையோ அதாவது தண்டி குண்டலியாகின்றதில்லை குண்டலி தண்டியாகின்றதில்லை தண்டத்தில் குண்டல சம்பந்தமும் குண்டலத்தில் தண்ட சம்பந்தமுமின்றுதலின்

**तदा**—அப்போது

**तद्विपरीतरूपयोः**-விருத்த வடிவமுள்ள கிஞ்சிஞ்ஞ சருவஞ்ஞர்களான சீவேசுரர்கட்கு

**नितराम्**—அத்தியந்தம்

**(न घटते)**—லக்ஷணையின்றி அபேதம் சம்பவிக்கின்றதில்லை (எனக் கூறவேண்டியதென்னையுள)

## அவதாரிகை

அற்றேல் விருத்தவடிவமுள்ள சீவேசுரர்கட்கும் சத்துவம் முதலியயாதேனும் ஓர் வடிவத்தால் ஏகத்தன்மைச் சம்பவித்தலின் தத்துவமசி முதலிய மகாவாக்கியம் லக்ஷணையின்றி அபேதத்தை ஏன் பிரதிபாதிக்காது எனச்சங்கிக்கின்றுன் :—

## சுலோகம்

अथ केनचिदात्मनैकता वचनेन प्रतिपाद्यते तयोः ।
तदसुन्दरमस्तमेति हि स्फुटमेवं त्रिविधापि लक्षणा ॥

## பதவுரை

**केनचित् आत्मना**–சேதனத்தன்மை முதலிய யாதேனும் ஓர் வடிவத்தால்

**वचनेन**–தத்துவமசி முதலிய மகாவாக்கியத்தால்

**तयोः एकता**–சீவேசுரர்களுக்கு அபேதம்

**अथ प्रतिपाद्यते** - லக்ஷணையின்றியே பிரதிபாதிக்கப்படுகின்றது எனின்

**तद् असुन्दरम्**–அது நல்லதன்று

**एवम्**–இவ்வாறுயின்

**त्रिविधाऽपि लक्षणा**–மூவித லக்ஷணையும்

**स्फुटम्**–பஷ்டமாகவே

**अस्तम् एति**–திரோதானத்தையடையும்

## விசேஷவுரை

பிரம்மான்ம சொரூபமானது யாதேனும் ஓர்பதத்தால் உபஸ்தாப்பியமா (உபஸ்திதி விஷயம்) அன்று உபஸ்தாப்யமென்னும் முதற் பக்ஷத்தில் அதன் வாசக (சக்த) பதமின்மையின் பிரம்மபதத்திற்கும் அகம்பதத்திற்கும் அதன் கண் லக்ஷணை கொள்ளவேண்டிவரும், உபஸ்தாப்யமன்றென்னும் இரண்டாவது பக்ஷத்தில் பதத்தால் அநுபஸ்தித (அறியப்படாத) வஸ்துவிற்கும் வாக்கியத்தால் பிரதிபாத்தியத் தன்மையுடன்படின் கங்கையின் சம்பந்தியும் கங்கைவாசகபதத்தால் அறியப்படாததுமான தீரம் முதலியவற்றிலும் இடைச்சேரிக்கு அன்வயம் பொருந்துதலினுலும் இவ்வாறு செவப்பு வெளியில் நிற்கின்றது என்பது முதலிய இடங்களில் செவப்பு முதலிய பதத்தால் லக்ஷணையின்றியே குதிரை முதலியவற்றிற்கு வெளியில் நிற்றலோடு அன்வயப்பிரதீதி பொருந்துதலினுலும் அப்படியே அவன் இத்தேவதத்தன் என்னுமிடத்தும் லக்ஷணையின்றியே தேசகாலங்களினின்றும் விடுபட்ட சுத்த வியத்திக்கு வாக்கியார்த்தத்தன்மைச் சம்பவித்தலாலும் பிரசித்தமான மூவித லக்ஷணையும் உச்சேதமாகும் ஆதலால் பதங்களாலறியப்பட்ட பதார்த்தங்களுக்கே அன்வயம் சொல்லத்தக்கதாம் ஆகவே அபேதயோக்கிய

சொரூபத்தின் உபஸ்திதி (ஞானம்)யின் பொருட்டு இரு பதங்களிலும் லக்ஷணை அவசியம் சொல்லத்தக்கதாமென்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார் அது நல்லதன்றென. உச்சேதம் = விநாசம் (168)

## விட்டலக்ஷணையாலும் அகண்டார்த்தத் தன்மை

### அவதாரிகை

இவ்வாறு உலகவியவகாரத்தையும் வேதவியவகாரத்தையும் அநுசரித்து விசிஷ்டவாசகங்களான பிரம்மபத அகம்பதங்களுக்கு விட்டுவிடாத லக்ஷணையால் அகண்டார்த்தத்தன்மை கூறப்பட்டது இப்போது பிரம்மசத்தம் அஞ்ஞானமாத்திரவாசகமாகுக "मम योनिर्महद् ब्रह्म" மகத்தான பிரம்மமானது என்னுடைய யோனியாம் என்னும் கீதையின் கண் கேவல அஞ்ஞானத்தின் கண் பிரம்மசத்தத்தைப் பிரயோகித்திருத்தலின் இவ்வாறே அகம்சத்தமும் வியவகாரபலத்தாலும் இலாகவத்தாலும் கேவல அகங்காரவாசகமாகுக. இவ்வாறுகவே பிரம்ம அகம் என்னுமிருபதங்களால் விட்டலக்ஷணையாலேயே. அகண்ட வஸ்துவின் ஞானமுண்டாமென வேறு பக்ஷத்தைக் கூறுகின்றார் :-

### சுலோகம்

साभासाज्ञानवाची यदि भवति पुनर्ब्रह्मशब्दस्तथाहं
शब्दोऽहंकारवाची भवति तु जहती लक्षणा तत्र पक्षे ।
नौरेषा रौति, लोहं दहति, विषधरो रज्जुरग्रे तवासा-
वित्यत्रेवात्मवस्तुन्यपि भवतु जहल्लक्षणा को विरोधः ॥

### பதவுரை

ब्रह्मशब्दः—அகம்பிரம்மம் என்னும் மகாவாக்கியத்திலுள்ள பிரம்ம சத்தமானது

साभासाज्ञानवाची— சேதனப்பிரதிபிம்ப வடிவ ஆபாஸத்தோடு கூடிய அஞ்ஞானத்தின் வாசகமாக

यदि पुनः भवति— ஒருவாறு ஆகின்றது

**तथा अहंशब्दः**—அப்படியே அகம்பதமானது

**अहंकारवाची**—அந்தக்கரணத்தின் வாசகமாம்

**तत्र तु पक्षे**-இந்த பக்ஷத்தின் கண்ணே

**जहती लक्षणा**—விட்ட லக்ஷணையே

**भवति**—ஆகின்றது

விட்ட லக்ஷணை உலகில் மிகவும் பிரசித்தமாயிருத்தலால் பிரகிருதத்தில் அதனைக்கொள்ளுதல் தகுதியாமென்பதற்காக திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

**एषा नौः रौति**—இந்தத்தெப்பம் அழுகின்றது

**लोहम् दहति**—இரும்பு சுடுகின்றது

**तव अग्रे**—உனது எதிரில் கிடக்கின்ற

**असौ विषधरः रज्जुः**-இந்த சர்ப்பம் இரச்சுவாம்

**इत्यत्र इव**—என்னுமிந்த இடங்களில் விட்ட லக்ஷணையிருப்பது போன்று

தெப்பத்திற்கு அழுந் தன்மை பொருந்தாமையால் தெப்ப சத்தத்தால் தெப்பத்திலுள்ள புருஷன் விட்ட லக்ஷணையால் கொள்ளப்படுகின்றான். இவ்வாறு இரும்பு சத்த சர்ப்ப சத்தங்களால் லக்ஷணையால் நெருப்பும் இரஜ்ஜுவும் போதிக்கப்படுகின்றது. தார்ஷ்டாந்தத்தை யுபசம்மாரஞ் செய்கின்றார்.

**आत्मवस्तुनि अपि**—ஆன்ம வஸ்துவின் கண்ணும்

**जहल्लक्षणा**-விட்ட லக்ஷணை

**भवतु**—இருக்குக

**को विरोधः**—விரோதமென்னை

ஈண்டு நிச்சயிக்கப்படாதார்த்தத்தின் வாசகமான ஒருவாறு என்னும் சத்தத்தின் ஸ்வாரஸ்யத்தால் இது (விட்ட லக்ஷணையைச் சொல்லுதல்) கிரந்தகாரரின் பிரௌடி வாதமாம் எனச்சிலர் கூறுகின்றனர்.

அதன் காரணமாவது, பிரம்மசப்தத்திற்கு சகத்காரணப்பிரம்மத்தின் கண் அதிகப்பிரயோகம் காணப்படுதலும், அஞ்ஞானத்தின் கண் பிரம்ம

சப்தத்தின் பிரயோகம் ஏகதேசத்தில் காணப்படுதலுமாம். இவ்வாறே ஆன்மவாசக அகம்பதத்திற்கும் அந்தக்கரண விசிஷ்டத்தின் கண்ணேயே பிரயோகமாம் என்க. சுவாரஸ்யம்=சுபாவம் அழகு, சிறப்பு, (169)

## அவதாரிகை

நிர்க்குணப் பிரம்மத்தின் கண் யாதொரு குணமும் சம்பவியாமையின் குணத்தின் கற்பனை வடிவ பிரௌடி வாதத்தாலேயே மற்றோர் பக்ஷத்தைக் கூறுகின்றார்:—

## சுலோகம்

**प्रत्यक्त्वादिगुणान्वयेन यदि वा गौण्यस्तु वृत्तिस्तयोः**
**ब्रह्माहंपदयोः परेतरदृशोर्मुख्ये विरोधो यतः ।**
**मुख्यार्थानुपपत्तिहेतुकतया गौण्यस्ति वृत्तिर्यतो**
**लोके माणवको विभावसुरसौ सिंहः पुमानित्यपि ॥ १७० ॥**

## பதவுரை

**वा**–அல்லது

**तयोः ब्रह्माहंपदयोः**–அஞ்ஞானமாத்திரத்திலும் அகங்கார மாத்திரத்திலும் வியுற்பன்னமான பிரம்ம சத்த அகம்சத்தங்களுக்கு

**मुख्ये**–முக்கியார்த்தத்தில்

**विरोधः यतः**–விரோதமிருத்தலால்

**परेतरदृशोः**–பிரம்மத்தினிடத்தும் சீவனிடத்தும்

**प्रत्यक्त्वादिगुणान्वयेन**-ஆந்தரத்தன்மை பிருகத்தன்மை (வியாபகத்தன்மை) முதலியகுண சம்பந்தத்தால்

**यदि वृत्तिः**–ஸ்திதி கூடுமாயின்

**गौणी अस्तु**–அப்போது கௌணீ விருத்தி இருக்குக

(அற்றேல் லக்ஷணையின்றி அமுக்கியமாகிய யாதொரு கௌணீ விருத்தியும் உலகில் பிரசித்தமின்றுமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.)

**लोके**–உலகின்கண்

**माणवकः विभावसुः**—மாணுக்கன் அக்கினியாம்

**असौ पुमान् सिंहः**-இப்புருடன் சிங்கமாம்

**इत्यपि**—என்பது முதலிய இடங்களில்

**मुख्यार्थानुपपत्तिहेतुकतया**—முக்கியார்த்தத்தின் அனுபபத்தியைக் காரணமாகக்கொண்டு

**गौणी वृत्तिः**—கௌணீவிருத்தியானது

**अस्ति यतः**—இருக்கின்றது ஆதலின்

## *விசேஷவுரை*

ஆதிபதத்தால் டிருகத்தன்மை கிரகிக்கப்பட்டது பரஇதரதிருசோ: என்பதனை பிரம்மாகம் பதயோ: என்பதற்கு விசேஷணமாகக் கொள்ளினும் அமையும் அஃதாமாறு பரத்தினதும் ஆன்மாவினதும் ஞானம் எவற்றுலோ அவை பரேதரதிருசௌ. அப்படிப்பட்ட பிரம்மாகம் பதங்களுக்கு கௌணீவிருததியாம்.

முக்கியார்த்தத்தின் அன்வயானுபபத்தி வடிவ ஏதுவால் அமுக்கிய சம்பந்த வடிவ சௌணீவிருத்தி அங்கீகரிக்கப்படுகின்றது என்பது பொருள், ஆதலின் என்பதனுல் அதில் திருஷ்டாந்தமே ஏதுவாகக்கூறப் பட்டது.

அக்கினிமாணவகன் சிம்மம் தேவத்தன் என்பது முதலிய இடங்களில் அக்கினி முதலிய சத்தங்களுக்கு தனது அர்த்தத்திலுள்ள தேஜசையுடையதாந்தன்மை முதலிய சமான குணசம்பந்தத்தால் மாணவகன் முதலிய அநேக அருத்தங்களில் பிரயோகம் காணப்படுதலால் உலகின்கண் கௌணீவிருத்தி அத்தியந்தம் பிரசித்தமாமென்பது பொருள். (170)

# லக்ஷணைக்கும் கௌணீ விருத்திக்கும் பேதத்தைப் பிரதிபாதித்தல்

## *அவதாரிகை*

அற்றேல் தனது அர்த்தத்தை விட்டு வேறு அர்த்தத்திலிருப்பது கௌணீவிருத்தி என்று சொல்லப்படுமாயின் அப்போது லக்ஷணு விருத்திக்கும் கௌணீவிருத்திக்கும் பேதம் யாது என்னும் சங்கையை

அநுவதித்து லக்ஷணைக்கும் கௌணீவிருத்திக்கும் அவாந்தரபேத மிருக்கின்ற தெனக்கூறுகின்றார்:-

## சுலோகம்

परशब्दवृत्तिरपरत्र भवे-
दिति यद्यपीदमुभयोः सदृशम् ।
अनयोस्तथापि तु विभागकरं
स्फुटमस्ति लक्षणमवान्तरकम् ॥ १७१ ॥

## பதவுரை

**परशब्दवृत्तिः**–லக்ஷியத்தினின்றுமன்னியமான சுவார்த்த போதக சத்தத்தின் விருத்தியானது

**अपरत्र भवेत्**-சுவார்த்தத்தினும் வேறிடத்தில் இருக்கும்

**इति इदम्**–என்னுமிது

**यद्यपि**–எப்படியும்

**उभयोः**–லக்ஷணையும் கௌணியுமாகிய இரண்டற்கும்

**सदृशम्**–சமானமாம்

**तथपि**–அப்படியாயினும்

**अनयोः विभागकरम्**-இவ்விரண்டிற்கும் வேற்றுமையைச் செய்வதான

**अवान्तरकम्**–அவாந்தர

**लक्षणं स्फुटमस्ति**–லக்ஷணம் பஷ்டமாக இருக்கின்றது (171)

## அவதாரிகை

அவாந்தர பேதத்தினையே தெரிசிப்பிக்கின்றார்:-

## சுலோகம்

गुणतो गुणवृत्तिरिष्यते ह्यपरा लाक्षणिकी तु सङ्गतेः ।
इति भेदकमस्ति लक्षणा गुणवृत्त्योरिति वेदवादिनः ॥ ७२ ॥

## பதவுரை

**गुणतः**-லக்ஷிக்கப்படுகின்ற குணசம்பந்தத்தால்
**गुणवृत्तिः**–(சுவார்த்தத்தினும் வேறு பொருளில்) கௌணீ விருத்தி
**इष्यते**–அங்கீகரிக்கப்படுகின்றது
**अपरा**–அன்னியமான
**लाक्षणिकी तु**-லக்ஷணா விருத்தியோ
**सङ्गतेः**–சக்கியார்த்த சம்பந்தத்தால் அங்கீகரிக்கப்படுகின்றது
**इति**–இவ்வாறு
**लक्षणागुणवृत्त्योः**–லக்ஷணாவிருத்திக்கும் கௌணீ விருத்திக்கும்
**भेदकम् अस्ति**–அவாந்தர பேதத்தைப்போதிக்கும் லக்ஷணமுளது
**इति वेदवादिनः**–என மீமாம்ஸகர் கூறுகின்றனர்

## விசேஷவுரை

லக்ஷணாவிருத்தியானது சுவார்த்த சம்பந்த மாத்திரத்தால் அன்னிய அர்த்தத்தில் இருக்கின்றது குணசம்பந்தத்தாலன்று.

अभिधेयाविनाभूते प्रतीतिर्लक्षणोच्यते ।
लक्ष्यमाणगुणैर्योगाद् वृत्तेरिष्टा तु गौणता ॥

சக்கியார்த்தத்தின் வியாப்பிய அர்த்தத்தில் பிரதீதி லக்ஷணை யெனப்படுகின்றது. லக்ஷிக்கப்படுகிறகுணங்களின் சம்பந்தத்தால் சத்தத்தின் பிரவிருத்தி கௌணீ எனப்படுகின்றது என்று மீமாம்ஸகர் கூறுகின்றனர்.

கங்கையில் இடைச்சேரியிருக்கின்றது என்னுமிடத்து கங்கை என்னும் பதமானது தனது வாச்சியார்த்தமாகிய பிரவாகத்தோடு இடைச்சேரிக்கு அன்வயம் பொருந்தாதபோது பிரவாகத்தைவிட்டு அதன் சம்பந்தியாகிய கரையின்கண் பிரவிருத்திக்கின்றது அதன் குண சம்பந்தத்தையபேக்ஷிக்கின்றதில்லை. கரையில் கங்கையின் சாதிருசியம் பிரதீதியாகாமையின்

அக்கினிமாணவகன் என்பது முதலியவிடங்களில் அக்கினி முதலிய பதமோ தனது வாச்சியார்த்த அசமபந்தியாகிய மாணவகன் முதலியோ ரிடத்து லக்ஷிக்கப்பட்ட சுவர்த்தத்திலுள்ள சுசித்தன்மை முதலியகுண சம்பந்தத்தால் பிரவிருத்திக்கின்றது இதனாலேயே அக்கினிமாணவகன் என்னும் சத்தத்தால் அக்கினிக்கு சமானன் மாணவகன் என்று பிரதீதி யுண்டாகின்றது ஆதலின் லக்ஷணாவிருத்திக்கும் கௌணீவிருத்திக்கும் ஸ்பஷ்டமாக பேதமிருக்கின்றது என்பது பொருள். (172)

## அவதாரிகை

இவ்வாறு விட்டு விடாத லக்ஷணையால், தத்பத துவம் பதங்களால் கிரகிக்கப்பட்ட பிரத்தியகான்மபிரம்மங்களின் அபேதத்தைப் போதிப்பது தத்துவமசி மகாவாக்கியமென்று கூறப்பட்டது. இப்போது அதனை அநுவதிக்கின்றவராய் உபாதேயமும் பிரத்தியக் பிரம்மங்களின் அபாந்தர சுருதி தாத்பரியத்திற்கு விஷயமுமான சொரூபத்தைக் கூறுகின்றார் :—

## சுலோகம்

**नित्यः शुद्धो बुद्धमुक्तस्वभावः**
**सत्यः सूक्ष्मः सन्विभुश्चाद्वितीयः ।**
**आनन्दाब्धिर्यः परः सोऽहमस्मि**
**प्रत्यग्धातुर्नात्र संशीतिरस्ति ॥ १७३ ॥**

## பதவுரை

**नित्यः**—நித்தியனும்
**शुद्धः**—சுத்தனும்
**बुद्धमुक्तस्वभावः**—புத்தனும் முக்த சுபாவனும்
**सत्यः**—சத்தியனும்
**सूक्ष्मः**—சூக்ஷ்மனும்
**सन्**—பாவவடிவனும்
**विभुः च**—விபுவும்
**अद्वितीयः**—அத்துவிதீயனும்

**आनन्दाब्धिः**-சுகசாகரமுமான

**यः परः**-யாதொரு பரமான்மாவுண்டோ

**सः**-அதுவே

**प्रत्यग्धातुः**-பிரத்தியகான்மாவாகிய

**अहम् अस्मि**-நானாகின்றேன்

**अत्र**-இவ்விஷயத்தில்

**संशीतिः**-சமுசயம்

**न अस्ति**-இன்ரும்

## *விசேஷவுரை*

நித்தியன்=வாஸ்தவமாக மூன்று காலத்தாலும் பரிச்சேதமின்றியவன், சுத்தன்=அவித்தை வடிவ கலங்கமின்றியவன், புத்தன்= சுவப்பிரகாச ஞானவடிவினன், ஞானத்திற்கு விஷயமன்ரும், முத்தன்= இராகத்வேஷாதி பந்தமின்றியவன், சத்தியன் மூன்று காலத்திலும் பாதிக்கப்படாதவன், சூக்ஷுமன் = தூலத்தன்மையின்றியவன், அல்லது துர்விஞ்ஞேயன் (அறியத்தகாதவன்) பாவவடிவன்=இருப்புவடிவன், விபு-தேசபரிச்சேதமின்றியவன், அல்லது சுதந்திரன், அத்துவிதீயன்= வேறு வஸ்து இன்றியவன், சுகசாகரம் = அனவச்சின்ன ஆனந்தன், பரமான்மா என்பது விசேஷ்யமாம்,

இவ்வாறு தத்பதத்தின் லக்ஷிய சொரூபத்தைப்பிரதிபாதித்து துவம்பதத்தின் லக்ஷியசொரூபத்தைக்கூறுகின்ருர்.

பிரத்தியக் என்பதனுல், நானென்னும் அநுபவத்தில் விளங்குவதான அகங்காராதிகளின் சாக்ஷி பிரத்தியக்காம், தாது சத்தம் சொரூப வாசகமாம், பிரத்தியகான்மாவும் கூறியலக்ஷணமுடையதேயாம் ஆதலின் அற்பமும் அவ்விரண்டிற்கும் விலக்ஷணத்தன்மையின்ரும் ஆதலின் பிரத்தியகான்மாவும் பிரம்மமும் அத்தியந்தம் அபின்னமேயாம் என்னுமபிப்ராயத்தால் வாக்கியார்த்தத்தைக்கூறுகின்ருர் அதுவே நான் என அறிவாய் என்பது எஞ்சி நின்றது.

(பிரத்தியகான்மா பிரம்ம வடிவமென்னும்) இப்பொருள் முன்பு பிரதிபாதிக்கப்பட்டமையானும் இனிமேலும் பிரதிபாதிக்கப்படுதலினுலும்

சந்தேகத்தைச் செய்யாதே என்னும் அபிப்பிராயத்தால் இவ்விஷயத்தில் சமுசயமின்றும் என்று கூறப்பட்டது. அல்லது ஆகின்றேன் என்பது விவக்ஷிதமன்றும் கூறிய லக்ஷணமுள்ள யாதொரு பரமான்மாவுண்டோ அதுவே அஹம்பதலக்ஷிய பிரத்தியக்சைதன்னியமாம் என்பது பொருள்.

எப்படி சிதேகரசமாயினும் பிரம்மம் வஸ்துசுபாவத்தாலும் சத்தியம் ஞானம் முதலிய அபரியாய அநேக சத்தங்களால் தாற்பரியத்தால் பிரதிபாதிக்கப்படுதலாலும் சத்திய ஞான ஆனந்த வடிவம் என்று சொல்லப் படுகின்றதோ அப்படி **नित्यो नित्यानां**—ஆகாசம் முதலிய நித்திய பதார்த்தங்களுக்குள் நித்தியமாம். **अजः आत्मा महान्** – ஆன்மா ஜன்மமின்றியதும் மஹானும் ஆம். **अत्रायं पुरुषः स्वयंज्योतिर्भवति**—ஈண்டு இப்புருஷன் சுயம் சோதியாகின்றான். **असङ्गोह्ययं पुरुषः**—இவ்வான்மா அசங்கன். **अकामं रूपं शोकान्तरं**—காமமற்றதும் சோகமற்றதுமான வடிவமாம். **विमुक्तश्च विमुच्यते**-முக்தனாயிருந்தே விடுபடுகின்றான். **सत्यं ज्ञानं**-சத்தியமும் ஞானமுமாம். **विभुं सर्वगतं सुसूक्ष्मं**-வியாபகமும் சர்வகதமும் அத்யந்தம் சூட்சுமமும் ஆம். **सदेव सोम्य इदं**-ஹே சௌம்யனே ஈதனைத்தும் சிருஷ்டிக்கு முன்பு சத்தாகவேயிருந்தது. **एकमेव अद्वितीयं**—ஒரே அத்விதீயமாம். **एषो अस्य परम आनन्दः**—இவனுக்கு இதுமேலான ஆனந்தமாம். என்பது முதலிய அவ்வவ் வாக்கியங்களிலுள்ள அபர்யாய நித்யம் முதலிய சப்தங்களால் தாத்பர்யத்தால் பிரதிபாதிக்கப்படுதலின் அந்தப்பிரம்மம் நித்திய சுத்தம் முதலிய சுபாவம் (வடிவம்) எனப்படுகின்றது. (173)

## நித்தியத்துவாதிகட்குப் பிரம்மரூபத்துவம் இன்றுமென்னும் மதபேதம்.

### அவதாரிகை

நித்தியத்துவம் முதலியவை அநித்தியத்துவம் முதலியவற்றின் அபாவ வடிவங்களாம், ஆதலின், அவைகள் பாவவடிவ பிரம்ம சொரூப மன்றும் என்று கருதுகின்றவர்களது மதபேதத்தைக் கூறுகின்றார்:—

### சுலோகம்

**सच्चित्सुखाद्वयवपुः कथयन्ति केचित्**
**सच्चित्सुखात्मकमिति प्रथयन्ति केचित् ।**

अन्येतराणि किल नास्य वपूंषि तेषां
बुद्धौ स्फुरन्त्यपररूपनिवृत्तिभावात् ॥ १७४ ॥

### பதவுரை

**केचित्**–சில வித்வான்கள்

**ब्रह्म**–பிரம்மமானது

**सच्चित्सुख अद्वयवपुः**–சச்சிதானந்த அத்வய சொரூபமாம் என்று

**कथयन्ति**–கூறுகின்றனர்.

அத்துவயத் தன்மையும் துவைதாபாவத்தால் உபலக்ஷிக்கப்பட்ட பாவ வடிவமாம். இதனையும் சகியாதவராய்

**केचित्**–வேறுசில வித்வான்கள்

**सच्चित् सुखात्मकं इति प्रथयन्ति**-(அத்வயத்தன்மையையும் விட்டு) சச்சிதானந்தமாத்திரமே பிரம்மமாம் என்று கூறுகின்றனர்

நித்தியத்தன்மை அத்துவயத்தன்மை முதலியவற்றை பிரம்மத்தின் சொரூபமாக அங்கீகரிப்பதில் அவர்களுக்குண்டாகும் அருசியில் காரணத்தைக்கூறுகின்றார்.

**अस्य इतराणि**-பிரம்மத்திற்கு நித்யத்துவாதிகள்

**वपूंषि**–தேகங்களாக (வடிவங்களாக)

**बुद्धौ न स्फुरन्ति किल**-நமது புத்தியில் விளங்குகின்றதில்லை [எதனாலெனின்]

**तेषाम्**–நித்தியத்தன்மை அத்வயத்தன்மை முதலியவைகட்கு

**अपररूपनिवृत्तिभावात्**–காலபரிச்சின்னத்தன்மை முதலியவற்றின் அபாவத்தன்மையுண்மையால்

### விசேஷவுரை

பிரம்மம் பாவவடிவமாதலால் பாவவடிவமாகிய சத்து ஆனந்தம் முதலியவையே சொரூபமாகயோக்கியமாம் அபாவவடிவ நித்தியத்தன்மை முதலியவை யன்றும் விரோதமாதலின் ஆனுல் அவைகள் பிரம்மத்தினது தருமங்களேயாம் என்பது அவரது கருத்து.

ஈண்டு இவ்விரண்டு பக்ஷத்தின்கண்ணும் சில வித்துவான்கள் என்னும் இரு சத்தங்களால் அருசி சூசிப்பிக்கப்பட்டது அதன்கண் இது நிமித்தமாம் எப்படி சத்து முதலிய சத்தங்களால் லக்ஷணையால் பாவ வடிவப்பிரம்மம் பிரதிபாதிக்கப்படுகின்றதோ அப்படி அவ்வவ் விசிட்டத் தின்கண் (அநித்தியத்துவாதியின் அபாவவிசிட்டத்தில்) சத்தியினை யுடைய நித்தியம் முதலிய சத்தங்களாலும் அதன் அதிஷ்டானப்பிரம்மமே லக்ஷணையால் பிரதிபாதிக்கப்படுகின்றதாதலின் அந்தப்பிரம்மம் நித்தியம் முதலிய வடிவமாமெனை வியவகரிக்கப்படுகின்றது ஆதலின்,

பிரம்மத்திற்கு அபாவவடிவத்தன்மையின் ஆபத்தியின்றும். அபாவத்தைத் தருமமாகவுடையதாந்தன்மையுமின்றும் அத் துவயப்பிரம்மத்தின்கண் தருமதருமித்தன்மை பொருந்தாமையாலும் அநிர்வசனீய அபாவத்திற்கு சுருதிபிரதிபாத்தியத்தன்மைப் பொருந்தா மையாலும் என்க (174)

## அவதாரிகை

இப்போது சத்தியம் ஞானம் முதலிய அவாந்தர வாக்கியத்திற்கு அகண்டார்த்தத் தன்மையைக் கூறுகிறதற்கு "சத்தியம் ஞானமனந்தம் பிரம்ம" என்னும் பிரம்மத்தின் லக்ஷண வாக்கியத்தில் லக்ஷிய லக்ஷணங்களின் வேற்றுமையைக் கூறுகின்றார் :—

## சுலோகம்

ब्रह्मेति शेषि पदमत्र हि लक्ष्यमेकं
शेषाणि लक्षणसमर्पणमस्य कुर्युः ।
लक्ष्यार्पणेन सह लक्षणवाचि सर्वे
संगच्छतेऽरुणपदं क्रयवाचिनेव ॥ १७५ ॥

## பதவுரை

**ब्रह्म इति पदं**—சத்தியாதி வாக்கியத்தின் கண் பிரம்ம என்னும் பதமானது

**शेषि**—பிரதானமாம்

அற்றேல் ஞானம் ஆனந்தம் முதலியனவும் பிரம்மத்தின் வடிவ மாதலால் ஞானம் முதலிய பதமும் அப்படிப்பட்டதாக (பிரதானமாக) ஏன்காது ! என்னுமிடத்துக் கூறுகின்றார்.

**अत्र हि**–இவ்வாக்கியத்தின் கண்ணே

**एकं हि लक्ष्यम्**–லக்ஷியம் ஏகமாதலின்

**इतराणि**–இதர சத்தியாதி பதங்கள்

**अस्य**–பிரம்மத்தின்

**लक्षणसमर्पणम्**–லக்ஷணத்தின் சமர்ப்பணத்தை (போதத்தை)

**कुर्युः**–செய்யும்

ஓர்வாக்கியத்தின் கண் ஒரே பதம் லக்ஷிய வடிவ உத்தேசியத்தைச் சமர்ப்பிக்கின்றது எனக் கூறவேண்டும். சர்வ பதார்த்தங்களையும் உத்தேசியமாக அங்கீகரிக்கின் அவைகளுக்குப் பரஸ்பரம் அன்னுவய மில்லாமையால் வாக்கியம் அனர்த்தகமாம். உத்தேசிய போதகமும் விதேய போதகமுமான பதங்களுக்கே பரஸ்பரம் அந்நுவயம் உண்டாகின்றமையின் விதேயமின்றி சர்வ உத்தேசியமும் வியர்த்த மாதலின். உத்தேசியமும் ஒன்றாய் பிரம்மபதத்தாலேயே உபஸ்திதமாக (அறியப் பட்டதாக) யோக்கியமாம். அறியப்பட்ட அந்த பிரம்மத்திற்கே பிரம்மத்தை யறிந்தவன் பரத்தை அடைகிறான் என்னும் பூருவ வாக்கியத்தின் கண் பரம புருஷார்த்த சாதனத்தன்மை காணப்படுதலின். யாதொன்று புருஷார்த்த சாதனமோ அதுவே அதிகாரியின் ஜிக்ஞாசைக்கு விஷயமாம். அதுவே லக்ஷணத்தாலும் நிரூபிக்கத்தக்கதாம். இவ்வாறு பிரம்மபதத்தின் சாமர்த்தியத்தாலும். எதில் நின்றும் இப்பூதங்கள் உண்டாகின்றனவோ, என்னும் வாக்கியத்தின் கண் பூதங்களின் உற்பத்தி ஸ்திதி முதலியவற்றின் காரணத்தின் கண் பிரம்ம சப்தத்தைப் பிரயோகித்தலாலும் ஜகத்காரண அத்வயப் பிரம்மமே காரிய அனுமானத் தால் சாமான்யவடிவத்தால் அறியப்பட்டதாகி விசேஷ ரூபத்தால் ஜிக்ஞாசைக்கு விஷயமாம். ஆதலின் அதுவே லக்ஷியவடிவ சேஷியாம் ஞானம் முதலிய பதங்கள் இந்த லக்ஷியத்தின் லக்ஷணத்தைப் பிரதி பாதிக்கும் என்பது கருத்து. அதனாற் சித்தித்ததென்னையெனின் அதற்குக்கூறுகின்றார்.

**लक्षणवाचि सर्वम्**–லக்ஷணத்தைப்போதிப்பதான சத்தியம் முதலிய எல்லாப்பதமும்

**लक्ष्यार्पणेन सह**–லக்ஷியத்தைப் போதிக்கும் பிரம்ம பதத்தோடு

**सङ्गच्छते**–அன்வயமாகின்றது.

அதாவது யாதொரு பிரம்மமுண்டோ அது சத்திய ஞானதி வடிவமாமென வாக்கியத்தன்மையால் (விசிஷ்டவாக்கியார்த்தமாக) சங்கத (அன்வித) மாகின்றது ஞானதிவடிவமாக அறியப்படாத பிரம்மத்திற்கே அவ்வாறு லக்ஷணத்தால் பிரதிபாதிக்கப்படுந்தன்மையால் பிரதானத் தன்மையுண்மையின் முக்கிய விசேஷிய பிரம்மபதத்தோடு பிரம்மத்தின் குணமாயுள்ள விசேஷணங்களைப் பொருளாகவுடைய லக்ஷணவாசக பதங்களுக்கு சம்பந்தம் சொல்லத்தக்கதாம் அப்படிக்கின்றேல் அதாவது விசேஷிய வாசக பதத்தோடு விசேஷண வாசக பதங்களுக்கு சம்பந்தத்தை யங்கீகரியாவிடின் பிரதிபாதிக்க இச்சிக்கப்பட்ட அர்த்தம் சித்தியாது என்பது கருத்து. பிரதானத்தோடு இதர விசேஷணங்களுக்கு அன்வயமுண்டாமென்பதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

**अरुणपदम्**–சிவப்பு முதலிய பதமானது

**क्रयवाचिना इव**–கொள்ளுதல் வாசகமான வாங்குக என்னும் பதத்தோடு அந்நுவயமாவது போன்று.

(“**अरुणया एकहायन्या पिङ्गाक्ष्या गवा सोमं क्रीणाति**”) சிவப்பு நிறமுள்ளதும் பிறந்து ஒருவருஷமுடையதும் மஞ்சள் நேத்திர முடையது மான பசுவினால் சோமலதையைக் கிரயணஞ் செய்க” என்னும் வாக்கியத்தில் மூன்றும் வேற்றுமையினை யந்தத்திலுடைய சிவப்பு முதலிய பதங்கள் கிரயசாதன பசுவைப்போதிப்பனவாய் கிரயஞ் செய்க என்னும் பதத்தோடு அன்வயமாகின்றன. செவப்பு முதலியவற்றோடு கூடிய (பசுவின்வாயிலாக) கிரயமே விதிக்கப்படுதலின். இத்திருஷ்டாந் தத்தின் அநுசாரமாக தார்ஷ்டாந்தத்திலும் உத்தேசிய விதேயபாவத்தால் பதங்களுக்கு பரஸ்பரம் அன்வயம் அங்கீகரிக்கத்தக்கதாம். (175)

## அவதாரிகை

அற்றேல் இவ்வாறாயின் திருஷ்டாந்தத்தில் செவப்பு முதலான வற்றிற்கு தனித்தனி கரணத்தைப் போதிக்கும் மூன்றும் வேற்றுமை

கேட்கப்படுதலால் செவப்பு முதலிய ஒவ்வொன்றிற்குமே கிரயத்தோடு எப்படி அன்வயமுண்டாகின்றதோ அப்படி யாதொரு பிரம்மமுண்டோ அது சத்தியம் அது ஞானம் அது அனந்தம் என்றிவ்வாறு சத்தியம் முதலிய பதங்களுக்கு பரஸ்பரம் நிரபேக்ஷமாகவே பிரம்மத்தோடு அன்வயமுண்டாம் சத்தியம் முதலிய பதங்களுக்கு பரஸ்பரம் மேளனமோ (சம்பந்தம்) உண்டாகாது ஆதலின் இந்த அவாந்தர வாக்கியத்தால் சத்தியஞானுதி வடிவமாகப் பிரம்மம் சித்திக்காதுமற்றே சத்தியம் பிரம்மம், ஞானம் பிரம்மம், அனந்தம் பிரம்மம் என்றிவ்வாறு அநேக ரூபமுடையதாக பிரம்மம் சித்திக்குமெனின் அதற்குக்கூறு கின்றார் :—

### சுலோகம்

पृष्ठात्परस्परयुजाप्रतिपत्तिरेषां
एवंविधत्वमुपपादयितुं समर्था ।
लक्ष्यस्य तस्य महतः क्रयवस्तुवत्स्यात्
सर्वस्य कारकपदस्य परस्परेण ॥ १७६ ॥

### பதவுரை

**पृष्ठात्**-விசேஷிய பிரம்மபதத்தோடு சத்தியம் முதலிய பதங்களுக்கு தனித்தனி அன்வய ஞானமுண்டான பின்பு

**एषाम्**-இந்த சத்தியம் முதலிய பதங்களின்

**परस्परयुजा**-அன்னியோன்னிய சம்பந்தத்தின்

**प्रतिपत्तिः**-ஞானம்

**तस्य लक्ष्यस्य**-அந்த லக்ஷிய வடிவ

**महतः**-மகத்தான பிரம்மத்திற்கு

**एवंविधत्वम्**-சத்தியஞானுதி அகண்டைகரசத்தன்மையை

**उपपादयितुं**-பிரதிபாதித்தற்கு

**समर्था**-ஆற்றலுடையது

**स्यात्**-ஆகும்

இந்தப்பொருளினையும் முற்கூறிய திருஷ்டாந்தத்தினலேயே கூறுகின்றார்.

**क्रयवस्तुवत्**–சோமலதையைக் கொள்ளுதல் வடிவ வஸ்துவின் கண் அன்வயத்தையடைந்த

**सर्वस्य कारकपदस्य**–சிவப்பு முதலிய எல்லாக்காரக பதத்திற்கும்

**परस्परेण**–பின்பு அந்நியோன்னியம் அந்நுவயம் உண்டாவது போன்று.

## *விசேஷவுரை*

எப்படிக் கிரயணத்தோடு தனித்தனி அந்வயத்தையடைந்த சிவப்பு முதலிய குணங்களுக்கு சாட்சாத் கிரய சாதனத்தன்மை பொருந்தாமையின் ஒரு வயதுள்ள பசுவடிவ திரவியத்தின் அவச்சேதகத் தன்மையால் அந்நுவயமாகின்ற சிவப்பு முதலிய குணங்கட்கு பரஸ்பரம் அந்நுவயம் பிராப்தமாகின்றதோ, அப்படி எல்லையின்றிய மகத்துவமுடைய லக்ஷியப் பிரம்மத்தோடு தனித்தனி சத்தியாதிகளுக்கு அபேதம் பொருந்தாமை யானும் ஒன்றற்கு அநேக வடிவத்தன்மை பொருந்தாமையானும் பரஸ் பரம் சம்பந்தித்தலால் உத்தேசித்த பிரம்ம சொருபத்தின் சித்தியாம்.

## *அவதாரிகை*

அற்றேல், சத்தியாதி பதங்களின் வாச்சியார்த்தத்தைக் கிரகணஞ் செய்யின் கூறிய பிரம்ம சொருபத்தின் சித்தி உண்டாவதின்றும் அவ்வாச்சியார்த்தங்களுக்கு அவசியம் பரஸ்பரம் பேதமிருத்தலால் சத்யாதி பதங்களுக்கு லக்ஷணையை அங்கீகரிக்கின் பிரம்மத்திற்கு அசத்தியாதி வடிவத்தன்மை பிராப்தியாம் சக்கியார்த்தத்தில் நின்றும் லக்ஷியம் பின்னமாதலின் என்றுசங்கித்துக் கூறுகின்றார் :—

## *சுலோகம்*

**तत्त्वंपदार्थविषयो नय एव योज्यः**
**सत्यादिवस्तुषु न तत्र विशेषकल्पः ।**
**सत्यादिशब्दविषयाः शबलास्तदर्थ-**
**भागेषु लाक्षणिकवृत्तिरपीह तुल्या ॥ १७७ ॥**

## *பதவுரை*

**तत्त्वंपदार्थविषयः**–தத்பதார்த்த துவம் பதார்த்தங்களை விஷயமாக வுடைய

**नयः एव**—யாதொரு நியாய முண்டோ அதுவே

**सत्यादिवस्तुषु**—சத்தியம் முதலான பதங்களினர்த்தங்களில்

**योज्यः**—பொருத்தத்தக்கது.

அற்றேல் சத்தியம் முதலிய பதார்த்தத்திற்கு பிரம்மபதார்த்தத்தோடு அன்வயமாம் அதன் கண்ணும் குண குணித்தன்மையால் நீலோற்பலத்திற்குப் போன்று முக்கியார்த்தத்திற்கே அன்வயம் சம்பவித்தலால் தத்துவம் பதங்களுக்குப்போன்று லக்ஷணையை யங்கீகரித்தல் பயனின்றும் தத்துவம் பதார்த்த விஷயக லக்ஷணை வடிவ நியாயமானது சத்யாதி ஸ்தலத்தில் எதனுல் அதிதேசஞ் செய்யப்படும் என்னுமிடத்துக் கூறுகின்றூர்.

**तत्र**—சத்தியாதிபதார்த்தங்களில்

**न विशेषकल्पः**—தத்துவம் பதார்த்தத்தினும் அன்வயத்தின் கண் விலக்ஷணைத்தன்மையின்றும். (தத்துவம் பதங்களுக்கு எப்படி வாச்யார்த்தம் விசிஷ்டமோ ஏகதேச சுத்தத்தின் கண் எப்படி லக்ஷணையோ அப்படி)

அதாவது சத்தியம் முதலிய பதார்த்தங்களுக்கு முக்கியப் பிரம்மத்தோடு அன்வயம் பொருந்தாமையின் லக்ஷணை அவசியம் சொல்லத்தக்கதாமென்பது கருத்து. பூருவவாதியினுல் சத்தியாதி பதங்களுக்கு லக்ஷணையை யங்கீகரிக்கின் பிரம்மத்திற்கு அசத்தியாதி வடிவம் பிராப்தியாம் என்று யாதொரு சங்கை செய்யப்பட்டதோ அதனையும் தத்துவம் பதார்த்த விஷயக அன்னிய நியாயத்தை அதிதேசஞ்செய்த லாலே பரிகரிக்கின்றூர்,

**सत्यादिशब्दविषयाः**—சத்தியம் முதலிய பதங்களின் விஷயங்கள்

**शबलाः**—விசிஷ்டார்த்தங்களாம்

**तदर्थभागेषु**—சத்தியாதிபதார்த்தங்களின் ஏகதேச சுத்தங்களில்

**लाक्षणिकवृत्तिरपि**—லக்ஷணுவிருத்தியைக்கொள்ளுதலும்

**इह तुल्या**—ஈண்டு சமானமாம்.

அந்த விசிட்டார்த்தங்களை சமீபத்திலேயே சொல்லுவார். சத்தியம் முதலிய பதங்களுக்கும் தத்துவம் பதங்களுக்குப்போன்று விசிட்டத்தின்

கண் சத்தியாம் அதனால் விட்டுவிடாத லக்ஷணையாலும் இனிக்கூறப்படும் நியாயத்தாலும் சத்தியம் முதலிய பதங்களுக்கு அபிமத அகண்டைகரச பிரம்மத்தின் கண் விருத்தியாம் ஆதலின் உன்னால் கூறப்பட்ட தோஷமின்று மென்பது பொருள். (177)

## சத்தியம் முதலியவைகட்கு மூவிதத்தன்மை.

### அவதாரிகை

அற்றேல் சத்தியம் முதலிய பதங்களின் வாச்சியார்த்தமாகிய விசிட்டம் யாது அதன் கண் சத்தியம் முதலிய பதங்களின் சத்திக் கிரகணம் எவ்வாறும் என்னும் ஜிஞ்ஞாசையுண்டாக ஏழு சுலோகங்களால் உத்தரம் கூறுகின்றார்.

### சுலோகம்

आकाशादौ सत्यता तावदेका प्रत्यङ्मात्रे सत्यता काचिदन्या ।
तत्सम्पर्कात्सत्यता तत्र चान्या व्युत्पन्नोऽयं सत्यशब्दस्तु तत्र ॥

### பதவுரை

**आकाशादौ**—வியோமம் முதலியவற்றில்

**तावत् एका**—ஒரு பிரகாரமான

**सत्यता**—வியாவகாரிக சத்தியத்தன்மையிருக்கின்றது

**प्रत्यङ्मात्रे**—சுத்தான்மாவின் கண்

**काचित् अन्या**—ஓர் விலக்ஷணமான

**सत्यता**—பாரமார்த்திக சத்தியத்தன்மையிருக்கின்றது

அதனாலென்னையெனின் ஆண்டுக் கூறுகின்றார்.

**तत्सम्पर्कात्**—அவ்விருவித சத்தியங்களின் பரஸ்பர தாதான்மிய சம்பந்தத்தால் நிஷ்பன்னமான

**तत्र च**—விசிஷ்டார்த்தத்தில்

**अन्या सत्यता**—சமுதாய வடிவமான ஓர் சத்தியத்தன்மையிருக்கின்றது

அதனால் தான் என்னையெனின் ஆண்டுக்கூறுகின்றார்

**तत्र तु**–அதன் கண்ணே (விசிஷ்டசத்தியத்தில்)

**अयं सत्यशब्दः**–இந்த சத்திய சத்தமானது

**व्युत्पन्नः**–வியுற்பன்னமாம் (கிரகிக்கப்பட்ட சத்தியினையுடையதாம்)

## *விசேஷவுரை*

ஆகாசம் கடம் முதலிய வற்றில் வியாவகாரிக சத்தியத் தன்மையாம், பரமார்த்த சத்தியத்தன்மையினும் கற்பிதபேத முடைய தாய் வியாவகாரிக சத்தியம் இருக்கின்றதேயாம். **सत्यं चानृतं च सत्यमभवत्** (வியாவகாரிக சத்தியமும் பிராதிபாசிக சத்தியமும் சத்தியப் பிரம்மமே ஆனது) என்னும் சுருதியினாலும் ஆன்மாவின் காரியமாகிய ஆகாசாதியின் கண் அருத்தக்கிரியையைச் செய்யுந்தன்மை காணப் படுதலினாலும் பரமார்த்த சத்தியத்தன்மையினும் வேறாக ஆகாசாதியின் சத்தியத்தன்மையுளது என்பது பொருள்.

பிரத்தியகான்மாவின் கண் ஆகாசாதியின் சத்தியத்தன்மையின் விலக்ஷணமும் அத்தியந்தாபாத்தியார்த்த வடிவமுமான பாரமார்த்திக சத்தியத்தன்மையிருக்கின்றது, ஆகாசம் முதலியது வியாவகாரிக சத்திய மாம். பிரத்தியகான்மா பரமார்த்த சத்தியமாம் என்பது பொருள். வியாவகாரிகமும் பரமார்த்தமுமான இரண்டு சத்தியங்களின் பரஸ் பரம் தாதாத்மிய சப்பந்தத்தால் சித்தித்த விசிஷ்டத்தின் கண் சத்தியத் தன்மையானது மேற்கூறிய இரண்டு சத்தியத்தன்மையினும் விலக்ஷண மான சமுதாய வடிவ சத்தியத் தன்மையாம். பிரத்தியக்ஷாதிப் பிரமாணத்தால் சித்தித்த விசிஷட பதார்த்தத்தின் கண் சத்திய சப்தத் திற்கு வியவகாரத்தை அநுசரித்து சக்தியின் கிரஹண முண்டாகின்றது என்பது பொருள். இந்தப்பிரகாரம் இனிவரும் சுலோகங்களிலேயும் அறிக. (178)

நிஷ்பன்னம்=சித்தித்த, அல்லது உண்டான.

## *சுலோகம்*

**बुद्धेर्वृत्तौ ज्ञानता तावदेका प्रत्यग्बोधे ज्ञानता काचिदन्या ।**
**तत्संपर्काज्ज्ञानता तत्र चान्या व्युत्पन्नोऽयं ज्ञानशब्दस्तु तत्र ॥**

## பதவுரை

**बुद्धेः वृत्तौ**–நேத்திரம் முதலிய இந்திரியத்தாலுண்டான அந்தக் கரண விருத்தியின் கண்

**ज्ञानता**–சைதன்னியத்தின் அபிவியஞ்சகத்தன்மை வடிவு ஞானத் தன்மை

**तावदेका** – ஒரு பிரகாரமாம்

**प्रत्यग्बोधे**–ஞான வடிவ பிரத்தியகான்மாவின் கண்

**ज्ञानता**-ஸ்வப்பிரகாச ஞானவடிவத்தன்மை யாகிய ஞானத்தன்மை

**काचिदन्या**–மற்றோர் விதமாம்

**तत् संपर्कात्**–அவ்விரண்டு ஞானங்களின் பரஸ்பரம் தாதாத்மிய சம்பந்தத்தாலுண்டான

**तत्र**–விசிஷ்டத்தின் கண்.

**ज्ञानता**-ஞானத்தன்மையானது

**अन्या**-அவ்விரண்டு ஞானத்தன்மையினும் விலக்ஷணமான சமுதாய வடிவமாம்

**तत्र तु**-அந்தக்கரண விருத்தியும் பிரத்தியகான்மாவுமாகியவுபய வடிவ விசிஷ்ட ஞானத்தின் கண்ணோ

**अयं ज्ञान शब्दः**–இந்த ஞான சப்தமானது

**व्युत्पन्नः**-வியுத்பன்னமாம். (கிரஹிக்கப்பட்ட சக்தியையுடையதாம்)

## சுலோகம்

बुद्धेर्वृत्तौ तावदानन्दतैका
प्रत्यङ्मात्रे काचिदानन्दताऽन्या ।
तत्संपर्कात्तत्र चाऽऽनन्दताऽन्या
व्युत्पन्नोऽयं तत्र चानन्दशब्दः ॥ १८० ॥

## பதவுரை

**बुद्धेः वृत्तौ** - இஷ்டபதார்த்தத்தின் தெரிசனம் முதலியவற்று லுண்டாகாநின்ற அந்தக்கரண விருத்தியின் கண்

**आनन्दता**–ஆனந்தத்தன்மையானது

**तावत् एका**–ஓர் விதமாம்

**प्रत्यगात्मे**–ஆனந்தவடிவ பிரத்தியகான்மாவின் கண்

**आनन्दता**–ஆனந்தத்தன்மையானது

**काचित् अन्या**–மற்ருேர் விதமாம்

**तत्सम्पर्कात्**–அவ்விரண்டு ஆனந்தங்களின் பரஸ்பரம் தாதான்மிய சம்பந்தத்தால் நிஷ்பன்னமான

**तत्र च**–உபய வடிவ விசிஷ்டத்தின் கண்

**आनन्दता**–ஆனந்தத்தன்மையானது

**अन्या**–அவ்விரண்டினும் விலக்ஷணமாம்

**तत्र च**–(இரண்டன் சமுதாய வடிவமாமென்பது) அந்தக்கரண விருத்தியும் பிரத்தியகான்மாவுமாகிய இரண்டன்சமுதாய வடிவ) விசிஷ்டத்தின் கண்

**अयमानन्दशब्दः**–இந்த ஆனந்த சத்தமானது

**व्युत्पन्नः**–வியுற்பன்னமாம்

### விசேஷவுரை

ஆனந்த பதவியவகரர யோக்கியத்தன்மை முதலாவது ஆனந்தத் தன்மையாம். பரமப்பிரேமைக்கு விஷயத்துவ யோக்கியத்தன்மை இரண்டாவது ஆனந்தத்தன்மையாம். 180

### சுலோகம்

आकाशादौ नित्यता तावदेका
प्रत्यगात्मे नित्यता काचिदन्या ।
तत्सम्पर्कान्नित्यता तत्रचान्या
व्युत्पन्नोऽयं नित्यशब्दस्तु तत्र ॥ १८१ ॥

### பதவுரை

**आकाशादौ**–ஆகாசம் முதலியவற்றில்

**नित्यता**–நித்தியத்தன்மையானது

**तावत् एका**-ஓர் விதமாம்

**प्रत्यङ्मात्रे**-பிரத்தியகான்மாவின் கண்

**नित्यता**-நித்தியத்தன்மையானது

**काचित् अन्या**-மற்ருேர் விதமாம்

**तत्सम्पर्कात्**-அவ்விரண்டு நித்தியங்களின் பரஸ்பரம் தாதான்மியத்தால் நிஷ்பன்னமான

**तत्र च**-உபயவடிவ விசிஷ்டத்தின் கண்

**नित्यता**-நித்தியத்தன்மையானது

**अन्या**-மற்ருேர் விதயாம் இரண்டன் சமுதாய வடிவமாமென்பது பொருள்

**तत्र तु**-ஆகாசமும் ஆன்மாவுமாகிய அவ்வுபய வடிவ விசிஷ்டத்தின் கண்ணே

**अयं नित्यशब्दः**-இந்த நித்திய சப்தமானது

**व्युत्पन्नः**-வியுற்பன்னமாம்

### *விசேஷவுரை*

கற்பபரியந்தம் நிலைத்திருத்தல் வடிவ நித்தியத்தன்மை முதலாவது நித்தியத்தன்மையாம். மூன்று காலத்தாலும் அபரிச்சேத்தியத்தன்மை வடிவ நித்தியத்தன்மை இரண்டாவது நித்தியத்தன்மையாமென்றுணர்க.

### *சுலோகம்*

**आकाशादौ शुद्धता तावदेका**
**प्रत्यङ्मात्रे शुद्धता काचिदन्या ।**
**तत्सम्पर्काच्छुद्धता तत्र चान्या**
**व्युत्पन्नोऽयं शुद्धशब्दस्तु तत्र ॥ १८२ ॥**

### *பதவுரை*

**आकाशादौ**-ஆகாசம் முதலியவற்றில்

**शुद्धता**-சுத்தத்தன்மையானது

**तावत् एका**-ஓர் பிரகாரமாம்

**प्रत्यगात्मे**–பிரத்தியகான்மாவின் கண்

**शुद्धता**–சுத்தத்தன்மையானது

**काचित् अन्या**–மற்ருேர் பிரகாரமாம்

**तत्सम्पर्कात्**–அவ்விரண்டு சுத்தங்களின் பரஸ்பரம் தாதான்மியத்தால் நிஷ்பன்னமான

**तत्र च**–அவ்வுபய வடிவ விசிஷ்டத்தின் கண்

**शुद्धता**–சுத்தத்தன்மையானது

**अन्या**-மற்ருேர் விதமாம் (அவ்விரண்டு சுத்தத்தன்மையின் சமுதாய வடிவமாம்.)

**तत्र तु**–ஆகாசமும் ஆன்மாவுமாகிய இரண்டு சுத்தங்களின் சமுதாய வடிவ விசிஷ்டத்தின் கண்ணுே

**अयं शुद्ध शब्दः**–இந்த சுத்த சத்தமானது.

**व्युत्पन्नः**–வியுற்பன்னமாம்

## விசேஷவுரை

ஆகாசாதியின் கண்ணுள்ள சுத்தத்தன்மையானது அஸ்பிருச்யத் தன்மையின் பிரயோஜக ரூபரஹிதத்தன்மை வடிவமாம் அல்லது சேறு முதலிய அழுக்கினையுடைய திரவிய சம்பந்தரகிதத் தன்மை வடிவமாம். பிரத்தியகான்மாவின்கண்ணுே அந்த சுத்தத்தன்மையானது சருவப் பிரகார அசுசித்தன்மையின் அபாவத்தாலுபலக்ஷிக்கப்பட்ட தனது சொரூப வடிவமாம். அல்லது அவித்தையின் ரஹிதத்தன்மை வடிவமாம் என்பது பொருள். அஸ்பிருஸ்யத்தன்மை = தொடுதற்கு யோக்கியமாகாத்தன்மை, பிரயோஜகம் = காரணம்.

## சுலோகம்

गोवत्सादौ शुद्धता तावदेका
प्रत्यगात्मे शुद्धता काचिदन्या ।
तत्सम्पर्कान्शुद्धता तत्रचान्या
व्युत्पन्नोऽयं शुद्धशब्दस्तु तत्र ॥ १८३ ॥

### பதவுரை

**गोवत्सादौ**-பசுங்கன்று முதலிய பதார்த்தங்களில்

**मुक्तता**-முக்தத்தன்மையானது

**तावत् एका**-ஓர் விதமாம்

**प्रत्यगात्मे**-பிரத்தியகான்மாவின் கண்

**मुक्तता**-முக்தத்தன்மையானது

**काचित् अन्या**-மற்றோர் விதமாம்

**तत्सम्पर्कात्**-அவ்விரண்டினது பரஸ்பரம் தாதான்மியத்தால் நிஷ்பன்னமான

**तत्र च**-பசுங்கன்றும் பிரத்தியகான்மாவுமாகிய இரண்டு முக்தங்களின் சமுதாய வடிவ விசிஷ்டத்தில்

**मुक्तता**-முக்தத்தன்மையானது

**अन्या** - மற்றோர் விதமாம். (இரண்டு முக்ததன்மைகளின் சமுதாய வடிவமாம்)

**तत्र तु**-அவ்வுபய வடிவ விசிஷ்டத்தின் கண்ணே

**अयं मुक्तशब्दः**-இந்த முக்த சத்தமானது

**व्युत्पन्नः**-வியுற்பன்னமாம்.

### விசேஷவுரை

பசுங்கன்று முதலியவற்றில் முக்த்தன்மை பந்தனரகிதத்தன்மை வடிவமாம். (கயிற்றின் கட்டினின்றும் விடுபட்டிருத்தல்) பிரத்தியகான்மாவின் கண்ணேமுக்தத்தன்மை சமுசாரானர்த்தத்தின் நித்திய நிவிருத்தி வடிவமாம். 183

### சுலோகம்

आकाशादावस्तिता तावदेका
प्रत्यक्त्वे चास्तिता काचिदन्या ।
तत्सम्पर्कादस्तिता तत्र चान्या
व्युत्पन्नोऽयं तत्र चास्तीति शब्दः ॥ १८४ ॥

**आकाशादौ**-ஆகாசம் முதலிய பதார்த்தத்தில்

**अस्तिता**-இருப்புத்தன்மையானது

**तावत् एका**-ஓர் விதமாம்

**प्रत्यक्तत्वे च**-பிரத்தியகான்மாவின் கண்ணே

**अस्तिता**-இருப்புத்தன்மையானது

**काचिदन्या**-மற்றோர் விதமாம்.

**तत्संपर्कात्**-ஆகாசமும் ஆன்மாவுமாகிய இரண்டனது பரஸ்பரம் தாதாத்மிய சம்பந்தத்தால் நிஷ்பன்னமான

**तत्र च**-ஆகாசம் ஆன்மா என்னும் இரண்டன் சமுதாய வடிவ விசிட்டத்தின் கண்

**अस्तिता**-இருப்புத்தன்மை

**अन्या**-மற்றோர் விதமாம்

**तत्र च**-கூறிய அவ்விசிட்டத்தின் கண்

**अस्ति इति अयं शब्दः**-இருக்கின்றது என்னும் இந்த சப்தமானது.

**व्युत्पन्नः**-வியுத்பன்னமாம் (கிரஹிக்கப்பட்ட சக்தியினையுடையதாம்)

### *விசேஷவுரை*

இருப்புத்தன்மையாவது பாவத்தன்மையாம் அது ஆகாசாதி பதார்த்தத்தில் நகாரத்தின் பொருளை விஷயஞ்செய்யாத புத்தியின் விஷயத்தன்மை வடிவமாம். பிரத்தியகான்மாவின் கண்ணே பாவத்தன்மையானது சத்தென்னும் பிரதீதி யோக்கியத்தன்மைவடிவமாம். இந்தப்பிரகாரம் சூட்சுமம் விபு முதலிய பதங்களுக்கும் கேசம் ஆகாசம் முதலிய விசிஷ்டார்த்தத்தில் வியுத்பத்தியை (சக்தி ஞானத்தை) அறிந்து கொள்க. (184)

## *சத்தியம் முதலிய சப்தங்களின் லக்ஷிய நிர்ணயம்*

### *அவதாரிகை*

அற்றேல், இந்தப்பிரகாரம் சத்தியம் முதலிய பதங்களின் வாச்சியத்தின் சொரூபம் ஆகுக. அதன் கண் சத்தியம் முதலிய சப்தத்தின் வியுத்பத்தியும் உளதாகுக. அவ்வாறாயினும சத்தியாதி

பதங்களின் லக்ஷியத்தின் நிர்ணயம் எப்படியுண்டாம்: அவற்றின் வாச்சியத்தின் கண் இரண்டு பாகங்கள் இருத்தலின் தள்ளத்தக்கதும் கொள்ளத்தக்கதுமான பாகத்தின் வேற்றுமை நிச்சயம் சம்பவியாமை யின் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

### சுலோகம்

**यो यः शब्दो यत्कृतेऽर्थे निरूढस्तत्रैवार्थे लक्षणावृत्तिरस्य।**
**वक्तव्या स्यात्पण्डितैरेवमेतत्प्रत्यक्पूर्णं ब्रह्म वेदान्तवेद्यम्॥**

### பதவுரை

**यः यः शब्दः**—யாதொரு யாதொரு சத்தியம் முதலிய சத்தமானது
**यत्कृते अर्थे**-யாதொரு சத்தியாதி வடிவ பிரம்மமாகிய நிமித்தத்தாற் செய்யப்பட்ட ஆகாசம் முதலிய அர்த்தத்தில்
**निरूढः**—வாசகத்தன்மையால் பிரசித்தமாமோ
**तत्र एव अर्थे**—அந்த பரமார்த்த சத்தியாதிவடிவ நிமித்தமாகிய பிரம்மத்தின் கண்ணேயே
**अस्य**—இந்த சத்தியம் முதலிய பதத்திற்கு
**लक्षणावृत्तिः**—லக்ஷணவிருத்தி
**पण्डितैः**—வித்வான்களால்
**वक्तव्या स्यात्**—சொல்லத்தக்கதாகும்
**एवं**-இவ்வாறுகும்போது
**वेदान्तवेद्यम्**—சுருதிவாக்கியங்களால் அறியத்தக்க
**एतत् प्रत्यक् ब्रह्म**- இந்த பிரத்தியகான்மாவாகிய பிரம்மம்
**पूर्णं**—பரிபூர்ணமாம்.

### விசேஷவுரை

(ஈண்டு இது சங்கிரகமாம்:—பதத்தின் பிரவிருத்திக்கு யாது நிமித்தமாமோ அதன் கண்ணே பதத்தின் லக்ஷண விருத்தியாம் அது கட பதத்தின் பிரவிருத்தி நிமித்தம் கடத்துவமாம் ஆதலின் கடம் நித்திய மென்புழி கட பதத்திற்கு கடத்துவத்தின் கண்ணே லக்ஷணை கொள்ளப் படுவது போன்று.)

பிரகிருதத்தில் சத்தியம் முதலிய பதங்களின் வாச்சியம் ஆத்மாவும் அநான்மாவுமாகிய இரண்டினாலும் செய்யப்பட்டதாம்,

ஆதலின் இவ்விரண்டிலுமே சத்தியம் முதலிய பதங்களின் லக்ஷணையை யங்கீகரிக்கவேண்டிவரும அங்ஙனமாயினும் சத்தியம் முதலிய பதங்களின் வாச்சிய ஏகதேசமான ஆகாசம முதலியவற்றிற்கு யாதொரு சத்தியத்துவம் முதலியது கூறப்பட்டதோ அது சத்தியத்துவாதி சொரூபமான பிரம்மவடிவ அதிஷ்டானத்தை யபேக்ஷியாமல் சுதந்திரமாகச் சித்திக்கின்றதில்லை எதனாலெனின் அதிஷ்டான சத்வடிவத்தாலேயே ஆகாசாதியிலுள்ள சத்தியத்தன்மை முதலிய வற்றிற்கு அருத்தக்கிரியையை யுண்டுபண்ணுந்தன்மை முதலிய வடிவமுடைமையின் ஆகாசாதியில் அதிஷ்டான சத்தியத்துவாதிகளை யங்கீகரியாவிடின் நிரான்மாவான (சொரூப சூனியமான) ஆகாசாதிக்கு அருத்தக்கிரியையின் சாதகத்தன்மை முதலியது பொருந்தாமற்போம்.

இவ்வாருகவே ஆன்மா ஆகாசாதி வடிவமாகியே அவ்வாகாசாதி விசிஷ்டமாயிருந்து கொண்டு சத்தியம் முதலிய பதங்களின் வாச்சியத் தன்மையை யடைகின்றது ஆதலின் ஆன்மசத்தை வடிவ நிமித்தத் தாலேயே ஆகாசாதி பதார்த்தம் சத்தியம் முதலிய பதங்களின் வாச்சியத் தன்மைக்கு யோக்கியமாக ஆகின்றது ஆதலால் நிரபேக்ஷமாய் சத்தியாதி சொரூபமாயுள்ள அவ்வான்மாவே லக்ஷணையால் கிரகிக்கப் படுகின்றது ஆதலின் வாச்சியத்தின் ஏகதேசமான ஆன்மாவின்கண் லக்ஷணை விருத்தியை நிர்ணயஞ்செய்யுங் காரணத்திற்கு சூனியத்தன்மை யின்றுமென்பது பொருள். இந்த ரகஸ்யம் 'வித்துவான்களால்' என்னும் பதத்தால் விளக்கப்பட்டது.

இந்தப் பிரகாரம் அத்வயப் பிரம்மத்தின் அபேதப்பிரமையின் பலத்தாலும் சத்தியாதி பதங்களுக்கு லக்ஷிய நியமத்தின் சித்தியாம் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்ருர்: "இவ்வாருகும்போது" என. ஆகாசம் முதலான வாச்சியபாகத்திற்கு பிரம்மத்தோடு அபேதம் பொருந்தாமையாலும் அவ்வாகாசாதியின கண் சத்தியாதி பதங்களுக்கு லக்ஷணையினருமம. அதன கண் லக்ஷணையை யங்கீகரித்தலால் அநாத்தமுடாட பிரம்மம் பூரணமாகச் சித்திக்காதென்பது கருத்து.

ஈண்டு இது தாத்பரியமாம்:—சத்தியத்தன்மை நித்யத்தன்மை முதலிய, தர்மத்தைப் பிரவிருத்தி நிமித்தமாகக்கொண்டு சத்தியத்வாதி விசிஷ்ட ஆகாசாதியின் கண் சத்தியம முதலிய சப்தம் வியுத்பன்னமாத

(கிரஹிக்கப்பட்ட சக்தியினையுடையதாகி) அதனையே பிரதிபாதிக்கின்றது. அங்ஙனமாயினும் அந்த சப்தமானது அதன் கண் பர்யவசான மாகின்ற தில்லை. மற்றோ, எதனை நிமித்தமாகக்கொண்டு விசிட்டத்தின் கண் பிரவர்த்திக்கின்றதோ அந்த நிமித்தத்தின் கண்ணேயே அதற்குப் பரியவசானம் அங்கீகரிக்கவேண்டும். எப்படி கோசப்தமானது கோத்துவ சாமானியத்தைப் பிரவிருத்தி நிமித்தமாகக்கொண்டு, கோத்துவ விசிட்ட வியக்தியை வியவகார திருஷ்டியினால் பிரதிபாதிக்கின்றதாய் அதன் கண்ணே பரியவசானமாகாமல் பிரவிருத்தி நிமித்தமான கோத்துவத்தின் கண்ணே பரியவசானமாகின்றதோ, அப்படி சத்தியம் முதலிய சப்தமும் விசிட்டத்தின் கண்ணே வியுத்பன்னமாகி ஆகாசம் முதலிய பிரபஞ்ச விஷயகத்தன்மையில் வியவகரிக்கப்படுகின்றதாயினும் அதன் கண்ணேயே பரியவசானமாகின்றதில்லை. எதனாலெனின் அவ்வாகா சாதியின் கண் பரமார்த்த திருஷ்டியினால் சத்தியத்தன்மை நித்தியத் தன்மை முதலியவை சம்பவியாமையின். யாதொரு பாரமார்த்திக சத்தியாதிவடிவ சர்வ அநுகத அவ்வியபிசாரி பிரம்மதத்துவத்தால், அநுவித்தமாகி (தொடரப்பட்டதாகி) ஆகாசாதி சத்தியம் முதலிய பதத்தின் விஷயமாகின்றதோ அந்த ஏக பிரம்ம தத்துவமே சத்தியம் முதலிய வடிவமாம். ஆதலின் அதன் கண்ணேயே சத்தியம் முதலிய சப்தம் லக்ஷணையால் பர்யவசானமாகிறது. (185)

## சத்தியஞான ஆனந்தாதிகட்கு அத்தியந்தாபேதம்

### அவதாரிகை

அற்றேல், சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்ம என்னும் வாக்கியத்திற்கு அகண்ட ஏகரசப் பிரம்மமே பொருளாயின் அப்பதங்களுக்கு பரியாயத்தன்மை பிராப்தியாம் என்றுசங்கித்து சத்தியம் முதலிய பதங்களுக்கு அபர்யாயத்தன்மை யிருத்தலாலே அவற்றிற்கு அர்த்த பேதத்தினைச் சாதிக்க இச்சிக்கின்றனையா ? அல்லது சித்தாந்தத்தின் கண் பரியாயத்தன்மைப் பிராப்தியின் பரிகாரத்தினை மாத்திரம் அறிய இச்சிக்கின்றனையா ? என்று விகற்பித்து முதற்பக்ஷத்தின் கண் அத்தியந்த பேதவாதியைக் குறித்துக் கூறுகின்றார்:—

### சுலோகம்

सत्येऽप्यस्ति ज्ञानता ज्ञानतायां
सत्यत्वं च स्पष्टमस्त्येव तद्वत् ।
सत्यप्येवं नातिरेकावकाशः
पूर्णे तत्त्वे ज्ञानसत्योपपत्तेः ॥ १८६ ॥

### பதவுரை

सत्येऽपि—சத்தியபதார்த்தத்தின் கண்ணும்
ज्ञानता अस्ति—ஞானத்தன்மையிருக்கின்றது.

சத்திய பதார்த்தத்தின் கண்ணும் ஞானத்தன்மையிருக்கின்றது என்பதற்கு சத்தியபத லக்ஷியத்தின் கண் ஞானத்திற்கு அபேதமா மென்பது பொருள். அப்படியானல் ரஜத அதிஷ்டான சுத்தியானது தனது அபின்னமான ரஜதத்தில் நின்றும் வேருவதுபோல் சத்தியமும் தனது அபின்னமான ஞானத்தில் நின்று வெருமோவெனின் அற்றன்று எனக்கூறுகின்ருர்.

तद्वत्—இதுபோல
ज्ञानतायाम्—ஞானபதார்த்தத்தின் கண்
सत्यत्वं च—சத்தியத்தன்மையும்
स्पष्टं अस्त्येव—ஸ்பஷ்டமாக இருக்கின்றதேயாம்

எப்படி ஞானமானது சத்தியத்தோடு அபின்னமோ அப்படி சத்தியமும் ஞானத்தோடபின்னமாம். சத்தியத்திற்கும் ஞானத்திற்கும் அத்தியந்தமபேதம் ஸ்பஷ்டமாமென்பது பொருள் அற்றேல் சத்தியத்திற்கும் ஞானத்திற்கும் அபேதமுளதாகுக அப்படியாயினும் அதிரேக வடிவ சொற்பபேதமும் சொல்லுத்தக்கதாம் சொற்பபேதத்தை யங்கீகரியாவிடின் சத்தியம் ஞானம் என்னுமிருபதங்கட்கும் சாமானதிகரண்யம் சம்பவியாது ஆதலின் அவ்விருபதங்களின் லக்ஷியம் அத்தியந்தம் அபின்னமன்ரும் மற்ருே பேதாபேதமாம் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

एवं सत्यपि—இவ்வாருயினும் அதாவது சத்திய ஞானங்களுக்கு அபேதமுளதாயினும்

**अतिरेकावकाशः**–அவைகட்குச் சொற்பபேதத்தின் அவகாசம் உளது என்பது

**न**–சரியன்று

இவ்வாறு சத்தியத்திற்கும் ஞானத்திற்கும் அத்தியந்தமபேத மிருப்பினும் சொற்பபேதம் அங்கீகரிக்கத்தக்கது என்று யாதொன்று கூறப்பட்டதோ அது சரியன்று [எதனாலெனின்].

**तत्त्वे पूर्णे**–சத்திய ஞானுன்மகமான வஸ்து அத்தியந்தம் அபின்ன மாகும்போது தான்

**ज्ञानसत्योपपत्तेः**–ஞானத்தன்மையும் சத்தியத்தன்மையும் பொருந்துதலின்.

## *விசேஷவுரை*

ஞானனந்தான்மகவஸ்து அத்தியந்தமபேதமாகும்போது தான் ஞானத்திற்கு ஞானத்தன்மையும் சத்தியத்திற்கு சத்தியத்தன்மையும் பொருந்துகின்றது என்பது பொருள் அஃதாமாறு சத்தியமானது ஞானத்தினின்றும் வேருகுமாயின் அப்போது அதற்கு திருசியத்தன்மை வருதலால் சத்தியத்தன்மை சித்திக்காது ஏகதேசியாகிய பேதாபேதவாதி மதத்தில் ஞானத்தின் அபேதமுமிருக்கின்றதெனின் ஞானத்தின் பேதமு மிருக்கும்போது முற்கூறப்பட்ட திருசியத்தன்மைப் பிராப்தியால் மித்தியாத்தன்மை வடிவ தோஷத்தைப் பரிகரிக்கமுடியாததாகலின், ஞானத் தினும் வேருன வடிவத்தால் சத்தியத்திற்கு விளக்கம் பொருந்தாமையின்.

இந்தப்பிரகாரம் ஞானமும் சத்தியத்தினின்றும் வேருகுமாயின் அசத்தேயாகும் ஆதலின் ஞானம் சித்திக்காது. ஆதலால் அவ்விரண்டற்கும் அத்தியந்தமபேதமேயாம்.

சத்தியம் ஞானம் முதலிய சத்தங்களுக்கு அபரியாயத்தன்மையும் ஒரு வேற்றுமையின யந்தத்திலுடைய்தாந்தன்மை வடிவ சாமானதி கரண்யமும் லக்ஷிய அகண்ட பிரம்ம வஸ்து அபேதமாயினும் வாச்சியார்த்தத்திற்குப் பேதமிருத்தலால் அத்தியந்தம் பொருத்தமேயாம் இதனுல் இரண்டாவது விகற்பமும் (ப்ரியாயத்தன்மைப் ப்ராப்தியின் பரிகாரத்தின் ஜிஞ்ஞாசைமாத்திரம்) நிராகரிக்கப்பட்டது என்பது கருத்து இவ்வாறு இனிவரும் இரண்டு சுலோகங்களிலுமறிக. (186)

### சுலோகம்

आनन्दत्वे ज्ञानता ज्ञानताया-
मानन्दत्वं विद्यते निर्विशङ्कम् ।
सत्यप्येवं नातिरेकावकाशः
पूर्णे तत्वे ज्ञानसौख्योपपत्तेः ॥ १८७ ॥

### பதவுரை

**आनन्दत्वे**-ஆனந்தத்தின் கண்
**ज्ञानता**-ஞானத்திற்கு அபேதமாம்
**ज्ञानतायाम्**-அதுபோன்று ஞானத்தின் கண்
**आनन्दत्वं विद्यते**-ஆனந்தத்திற்கு அபேதமாம்
**निर्विशङ्कम्**-இதில் அற்பமும் சந்தேகமின்றும்
**एवं सत्यपि**-இவ்வாறாயினும் (ஆனந்தத்திற்கும் ஞானத்திற்கும் அபேதமிருப்பினும்)
**अतिरेकावकाशः**-சாமானாதிகரண்யம் பொருந்தாமையின் சொற்ப பேதமிருக்கின்றது என்பது
**न**-சரியன்று
**तत्वे**-ஞானானந்தான்மகவஸ்து
**पूर्णे**-அத்யந்தம் அபேதமாகும்போது தான்
**ज्ञानसौख्योपपत्तेः**-ஞானத்திற்கு ஞானத்தன்மையும் ஸுகத்திற்கு ஸுகத்தன்மையும் பொருந்துகின்றது ஆதலின்

### விசேஷவுரை

ஞானத்திற்கும் சுகத்திற்கும் பேதத்தை யங்கீகரிக்கின் சுகத்திற்கு திருசியத்துவாதிதோஷம் பிராப்தியாம் ஞானத்திற்கு விவேகி புருஷரால் உபேக்ஷிக்கப்படுந்தன்மைப் பிராப்தியாமென்பது கருத்து. (187)

### சுலோகம்

आनन्दत्वे सत्यता सत्यताया-
मानन्दत्वं निर्विवादं प्रसिद्धम् ।
सत्यप्येवं नातिरेकावकाशः
पूर्णे तत्वे सत्यसौख्योपपत्तेः ॥ १८८ ॥

## பதவுரை

**आनन्दत्वे**-ஆனந்தத்தின் கண்
**सत्यता**-சத்தியத்திற்கு அபேதமாம்
**सत्यतायाम्**-அதுபோன்று சத்தியத்தின் கண்
**आनन्दत्वम्**-ஆனந்தத்திற்கு அபேதமாம்
**निर्विवादं प्रसिद्धम्**-இது விவாதமின்றிப் பிரசித்தமாம்
**एवं सत्यपि**-இவ்வாறு இரண்டற்கும் அபேதமுளதாயினும்
**अतिरेकावकाशः**-(சாமாநாதிகரண்யம் பொருந்தாமையின்) சொற்பபேதமிருக்கின்றது என்பது
**न**-சரியன்று
**तत्त्वे**-சத்தியானந்தான்மகவஸ்து
**पूर्णे**-அத்தியந்தமபேதமாகும் போது
**सत्यसौख्योपपत्तेः**-சத்தியத்திற்கு சத்தியத்தன்மையும் சுகத்திற்கு சுகத்தன்மையும் பொருந்துகின்றது ஆதலின்

## விசேஷவுரை

ஆனந்தத்திற்கு அசத்தியத்தன்மையை யங்கீகரிக்கின் கானற் சலம் போன்று அநுபாதேயத்தன்மைப் பிராப்தியாம் சத்தியத்திற்கும் அனானந்தத்தன்மையை அங்கீகரிக்கின் காஷ்ட லோஷ்டாதி போன்று நிஷ்பிரயோஜனத்தன்மையால் அநுபாதேயத்தன்மைப் பிராப்தியாம் என்பது கருத்து. (188)

## அவதாரிகை

அற்றேல் "சத்தியம் ஞானமனந்தம் பிரம்ம" என்னும் ஓர் வாக்கியத்தின் கண் சமானாதிகரண சத்தியம் முதலிய பதங்களால் சத்தியம் முதலியவைகளைக் கிரகித்தலால் சத்தியம் முதலியவைகட்கு அத்தியந்தம் அபேதமுளதாகுக அவ்வவ் வாக்கியத்தின் கண் தனித்தனியே கிரகிக்கப் பட்ட நித்தியத் தன்மை சுத்தத்தன்மை முதலியவற்றிற்கோ அத்தியந்தா பேதத்தின் கண் கிஞ்சித்தும் பிரமாண மின்றும் என்றாசங்கித்து அவை களுக்கும் பரஸ்பரம் பேதத்தை யங்கீகரிக்கின் பூர்ணப் பிரம்மத்தோடு அபேதம் பொருந்தாமையாலும் அவைகளுக்கு அசுத்தியாதிப் பிராப்தி யாதலினாலும் அத்தியந்தமபேதமே உசிதமாமெனக் கூறுகின்றார்:—

### ச்லோகம்

शेषेऽप्यूह्यं न्यायसाम्यादशेष-
मन्योऽन्यस्मिन्नस्तिता पूर्णता च ।
अन्योऽन्यस्याजामिता शब्दशक्ते-
रेवं सुस्थं सर्वमुक्तोपपत्तेः ॥ १८९ ॥

### பதவுரை

**शेषेऽपि**-எஞ்சிய நித்யம் சுத்தம் முதலியவற்றிலும்

**न्यायसाम्यात्**-கூறிய நியாயம் சமமாயிருத்தலால்

**अशेषम्** - லக்ஷிய ஏகத்தன்மை பரஸ்பராபேதம் முதலிய அனைத்தும்

**ऊह्यम्**-ஊஹிக்கத்தக்கது

அனைத்து மென்று கூறப்பட்டதனையே விஸ்தரிக்கின்றார்.

**अन्योऽन्यस्मिन्**-பரஸ்பரத்தின் கண்

**अन्योऽन्यस्य**-பரஸ்பரத்தின்

**अस्तिता पूर्णता च** - அஸ்தி(இருப்பு)த்தன்மையும் பூர்ணத் தன்மையும் இருக்கின்றது.

**एवम्**-இந்தப்பிரகாரம்

**शब्दशक्तेः**-சத்த சத்தியின் கண்

**अजामिता**-புனருத்தியின்பாவமும் சித்திக்கின்றது; முடிக்கின்றார்.

**एवम्**-இந்தப்பிரகாரம்

**उक्तोपपत्तेः**-கூறிய யுக்தியால்

**सर्वं सुस्थम्**-நித்தியம் முதலிய எல்லாப்பதமும் சுஸ்தமாம் (நன்கு நிலைபெறுகின்றது)

### விசேஷவுரை

சத்திய ஞான ஆனந்தங்களின் அதிரிக்தங்களான (வேறான) நித்தியம் முதலிய பதார்த்தங்களில் சத்தியம் முதலிய பதார்த்தங்களில் கூறப்பட்ட யாதொரு லக்ஷியத்தின் ஏகத்தன்மை முதலியதுண்டோ அவ்வெல்லாவற்றையும் கூறப்பட்ட நியாயத்தின் சமத்தன்மையால் ஊகித்துணர்க. பூர்ணத்தன்மையும் என்பதிலுள்ள உம்மையால் சாம்

ஞதிகாண்யத்தைச் சூசிப்பிக்கின்றுர். பதங்களுக்கு சாமாஞதிகாண்ய மும் சித்திக்கின்றதென்பது பொருள். ஜாமிதா = புனருக்தி, அல்லது காரியாந்தரத்தின் அபாவத்தால் அப்பிரயோஜகத்தன்மை, அதாவது சாப்த ஞானத்தின் அஜனகத்தன்மை, இப்படிப்பட்ட ஜாமித்தன்மை, சத்த சத்திக்கின்றுமென்பது பொருள். (189)

## அவதாரிகை

அற்றேல் பிரம்மம் ஆன்மா என்பது முதலிய பதங்களுக்கு விசிட்டம் வாச்சியமாமென்பது கூறப்பட்டது அது பொருந்தாது மூலக்கிரந்தத்தில் பாஷியம் வார்த்திகம் முதலியவற்றில் அவ்வாறு காணப்படாமையின் இதனுலேயே புத்திக்கு யாதொரு பிரத்தியக் தன்மையும் போதத்தன்மையும் கூறப்பட்டதோ அதுவும் பொருந்தாது என்றுசங்கித்து நைஷ்கர்மிய சித்தியின் கண் சுரேசுவராசாரிய சுவாமி களால் அவ்விரண்டும் (ஆன்மா முதலிய பதங்களுக்கு விசிட்டப் பிரம்மம் வாச்சியமாமென்பதும் புத்திக்கு பிரத்தியக்துவமும் போதத்துவமும்) கூறப்பட்டதெனக் கூறுகின்றுர்:—

## சுலோகம்

बोधात्मत्वे निर्निमित्ते प्रतीचो
बोधात्मत्वे तन्निमित्ते च बुद्धेः ।
बोधात्मत्वे बुद्धिधर्मौ च बुद्धे-
रुक्ते साक्षाद्वेदसिद्धान्तविद्भिः ॥ १९० ॥

## பதவுரை

प्रतीचः—பிரத்தியகான்மாவிற்கு
बोधात्मत्वे—போதத்தன்மையும் ஆன்மத்தன்மையும்
निर्निमित्ते—சுவாபாவிகங்களாம்
बुद्धेः—புத்திக்கு
बोधात्मत्वे—போதத்தன்மையும் ஆன்மத்தன்மையும்
तन्निमित्ते च—சுவாபாவிகமான பிரத்தியக்போத வடிவ ஆன்மாவை நிமித்தமாகவுடையனவாம் (ஆத்மின்)
बुद्धेः—புத்திக்கு

**बोधात्मत्वे**–போதத்தன்மையும் ஆன்மத்தன்மையும்

**बुद्धिधर्मौ च**–புத்தியின் தர்மங்களாம் (என்று)

**साक्षाद्वेदान्तसिद्धान्तविद्भिः**-நேரே வேதாந்தத்தின் சித்தாந்தத்தை யறிந்த பெரியோர்களால்

**उक्ते**–கூறப்பட்டுள்ளன

## விசேஷவுரை

புத்தியின் கண்ணுள்ள போதத்தன்மையும் ஆன்மத்தன்மையும் புத்தியினது தர்மங்களேயாம். ஆன்மாவிற்குப் போன்று சொரூபபூத மன்ரும். சர்வாந்தரமாய் சொப்பிரகாசமாயுள்ள ஆன்மாவிற்குப் பிரத்தியக் தன்மையும் போதத்தன்மையும் சுவாபாவிகமாம். புத்திக்கோ அதன் கண் அத்தியஸ்தமாயிருத்தலால் அவ்வான்மாவினது சுவாபாவிக தர்மங்களின் சம்பந்தமேயாம் ஆதலின் போதத்தன்மையும் ஆன்மத் தன்மையும் சுவாபாவிக மன்ரும். என்பது பொருள். அது நைஷ்கர்ம்ய சித்தியின் கண் சுரேஸ்வராசாரியரால்,

> कूटस्थबोधप्रत्यक्त्वं अनिमित्तं सदात्मनः ।
> बोद्धृताहन्तयोर्हेतुस्ताभ्यां तेन उपलक्ष्यते ॥

என்று கூறப்பட்டுள்ளது.

இதன் பொருள்:—சத்வடிவ ஆன்மாவிற்கு நிர்விகார நித்திய போதத்தன்மையும் சர்வாந்தரத்தன்மையும் சுவாபாவிகமாம். அவையே அதன் கண் அத்தியஸ்தமான புத்தியினது போத்திருத்தன்மைக்கும் ஆன்மத்தன்மைக்கும் ஏதுவாம். அதனுல் புத்தியின் கண்ணுள்ள போதத்தன்மை ஆன்மத்தன்மைகளால் அதன் காரண வடிவ கூடஸ்த போதவடிவபிரத்யகான்மா உபலக்ஷிக்கப்படுகின்றது. என்பது

நைஷ்கர்ம்ய சித்தியின் சுலோகத்தில் புத்தியெனும் பதம் உத்தர சுலோகத்தில் நின்றும் அனுவிருத்தி செய்யப்பட்டது. இந்தப்பிரகாரம் புத்தியின் கண்ணும் போத்திருத்தன்மை அகந்தன்மைகளே அங்ஙிய நிமித்தங்களாகக் கூறினமையானும் ஆன்மாவிற்கு அவற்ருலுபலக்ஷிக்கப் படுந்தன்மை கூறினமையானும் வாஸ்தவமும் அவாஸ்தவமுமான (சுவாபாவிகமும் நைமித்திகமுமான) இரண்டு பிரத்யக் தன்மையோடு கூடிய வஸ்துவிற்கே அஹம் பத வாச்சியத்தன்மை அவரது சம்மதமாம் புத்திக்கும் போதான்மத்தன்மை முதலிய தர்மத்தையுடையதாந்தன்மை

யும் ஆசாரியரது சம்மதமாம். எம்மால் சுயேச்சையால் கற்பிக்கப்பட்ட தன்றும். என்பது கருத்து. இவ்வாறு பிரம்மம் முதலிய பதத்திற்கும் விசிட்டத்தின் கண் சக்தியானது விரோதமின்றும் என அறிக.

ஈண்டு பிரத்தியக் தன்மை, ஆன்மத்தன்மை, அஹந்தன்மை, ஆந்தரத்தன்மை என்பன பரியாயச் சொற்கள். (190)

## சத்தியாதிபதத்தில் வேறு லக்ஷணையையும் வேறு விருத்தியையுங் காண்பித்தல்

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் தத்பத துவம் பதங்களுக்குச் சமானமாக சத்தியம் முதலிய பதங்களிலும் விட்டுவிடாத லக்ஷணை உபபாதனம் செய்யப் பட்டது. இப்போது அவற்றிற் போன்று சத்யாதிபதங்களிலும் அந்நிய லக்ஷணையையும் அந்நிய விருத்தியையும் அதிதேசஞ் செய்கின்றார்:—

### சுலோகம்

**जहतीह च लक्षणा मता गुणवृत्तिश्च तथाऽभ्युपेयते ।**
**न विशेषविनिर्णयक्षमं किमपीहास्ति विशेषकारणम् ॥ १९१ ॥**

### பதவுரை

**तथा**—அப்படியே (தத்துவம் பதங்களில் விட்ட லக்ஷணையும் கௌணீ விருத்தியும் அங்கீகரிக்கப்படுவது போன்று)

**इह च**—சத்தியாதி அவாந்தர வாக்கியத்தின் கண்ணும்

**जहती लक्षणा**-விட்ட லக்ஷணையானது

**मता**-இஷ்டமாம்

**गुणवृत्तिः च**—கௌணீவிருத்தியும்

**अभ्युपेयते**—அங்கீகரிக்கப்படுகின்றது

**विशेषविनिर्णयक्षमं**—(சத்தியாதி அவாந்தர வாக்கியத்தின் கண் விட்டு விடாத லக்ஷணையே அங்கீகரிக்க வேண்டும் வேறு லக்ஷணையையும் வேறு விருத்தியையும் அங்கீகரிக்கலாகாதென) விசேஷ நிச்சயத்தைச் செய்வதில் ஆற்றலுடைய

**विशेषकारणम्**—சிறந்த காரணமான விசேஷப் பிரமாணம்

தத்ர-அவாந்தர வாக்கியத்தின் கண்
கிமபி-நாஸ்தி-யாதொன்றுமின்றும்

### விசேஷவுரை

"ததா ப்ராணா:" (அப்படி பிராணன்கள்) எனும் பிரம்ம சூத்திரத்தின் கண் அப்படி என்னுஞ் சொல்லால் வியவஹித (தூரத்திலுள்ள) வஸ்து பராமரிசிக்கப்படுவது போன்று சுலோகத்தில் அப்படி யென்னுஞ் சொல்லால் வியவஹித தத்துவப் பதார்த்தம் பராமரிசிக்கப்படுகின்றது.

(சத்தியம் முதலிய சத்தமானது ஆகாசம் முதலியவற்றின் வாசகமாம் விசிஷ்டவாசகமன்று மென்று கொள்ளும்போது சம்பூர்ண வாச்சியார்த்தமும் தியாகஞ்செய்யப்படுதலால் விட்ட லக்ஷணையாம், அல்லது "சத்தியத்திற்கும் சத்தியம்" என்னும் சுருதியால் ஆகாசம் ஆன்மா என்னும் இரண்டின் கண்ணும் சத்தியத்தன்மை குணமிருத் தலால் கௌணீவிருத்தியாம்) இவ்வெல்லாமும் கிரந்தகாரரால் பிரௌடி வாதத்தால் கூறப்பட்டது விருத்த புருஷர்களது சத்தியாதிபதங்களின் வியவகாரம் ஆகாசாதி விசிஷ்டத்தின் கண்ணேயே நியமமாகக்காணப் படுதலின்.

ககனம் சத்தியம் என்பது முதலிய பிரயோகத்தால் தான் ககனத்தின் கண் சத்யம் முதலிய சத்தங்களின் சத்திஞானம் சொல்ல வேண்டும் அந்தப்பிரயோகமோ ஆன்மாஞன்மாக்களின் சமுதாய கோசரமாம் ஆன்மாவினும் வேருக சத்திய பதார்த்தம் சம்பவியாமையின் எப்படியும் வியாவகாரிக சத்தியத்தன்மை ககனுதியின் கண்ணுமிருக் கின்றது அப்படியாயினும் அது வியாவகாரிக சத்தியத் தன்மையால் கிரகிக்கப்படுகின்றதாகி தன்னை (ஆகாசாதியை) பாரமார்த்திக சத்தியத் தினின்றும் வேறு பிரிக்கும், சத்தியத்தன்மை முதலிய வடிவத்தால் கிரகிக்கப்படுகின்றதாகி வேறுபாட்டைச் செய்யாது. இனிக்கூறப்படும் ரீதியால் சத்திக்கிரகண காலத்தில் வியாவகாரிக சத்தியத்தன்மையினைப் பாரமார்த்திக சத்தியத் தன்மையினின்றும் பிரித்தறிதற்கு அசக்கிய மாதலானும் விசார தசையின் கண்ணேயே வியாவகாரிக சத்தியத் தன்மை கற்பிக்கப் படுதலானும் என்க. அதனுல், அதிஷ்டான (பாரமார்த்திக சத்தியப் பிரம்ம)த்தில் நின்றும் வியாவிருத்த ரூபத்தால் ககனுதியின் ஸ்புரணமின்மையினுல் கேவல ககனுதி விஷயக

சத்யாதி பதங்களின் சக்திஞானமின்ருட். இவ்வாருயினும் விசிஷ்டத்தில் நின்றும் கேவல விசுத்தம் அன்னியமாம் ஆதலின், கேவலத்தின் கண் சத்தியம் முதலிய பதங்களுக்கு விட்ட லக்ஷணையே பொருத்தமாம் என்று சொல்லற்க. விசிட்ட சொரூபத்தால் விசிட்ட வடிவத்திற்கு கேவல சுத்தத்தில் நின்றும் கற்பிதபேதம் உளதாயினும் வாஸ்தவமாக பேதமின்மையினுல் விசிட்ட வடிவம் சுத்தத்தினும் அபின்னமாம். ஆதலின் அதனைத் தியாகஞ் செய்தல் சம்பவியாமையின் விட்டுவிடாத லக்ஷணையினுலே கேவல சுத்த சொரூபம் கொள்ளத்தக்கதாமாதலின். இவ்விஷயத்தினைப் பின்னர் கிரந்தகாரரே கூறுவார். இவ்வாறு வாக்கியார்த்தத்தின் கண் எந்தக் குணத்தினதும் சம்பந்தம் பிரதீதியாகாமையின் கௌணீ விருத்தியும் சம்பவிப்பதின்ரும் என்க. (191)

### *அவதாரிகை*

அற்றேல், எப்படி சத்தியம் முதலிய வாக்கியத்தின் சாமர்த்தியத்தால் சத்தியம் முதலிய அவ்வப்பதங்களில் ஓர் பாகத்தை விடுதலும் ஓர் பாகத்தைக் கொள்ளுதலும் வடிவினதான பாகத்தியாக லக்ஷணையால் சச்சிதாதி வடிவமாகப் பிரம்மம் உளது என்று அங்கீகரிக்கப்பட்டதோ, அப்படியே சர்வேஸ்வரன் என்னும் சுருதியின் சாமர்த்தியத்தால், ஐஸ்வர்யமும் ஆன்மாவின் சொரூபமாம் என்று விட்டுவிடாத லக்ஷணையால் ஏன் அங்கீகரிப்பதில்லை? அவ்வைஸ்வர்யத்திற்கும் ஞானுதியோடு சமானத்தன்மை யிருத்தலின் என்று சங்கிக்கின்ருர்:—

### *சுலோகம்*

**ऐश्वर्यमप्यनुभवादिवदात्मरूपं**
**तस्माद्भवोऽधिगतमस्य च तानि कस्मात् ।**
**नेष्टानि पूर्ववदिति ब्रुवतो ब्रुवस्य**
**सद्यः पिधानमनुसृत्य विभासि कुर्मः ॥ १९२ ॥**

### *பதவுரை*

**अनुभवादिवत्**—ஞானுதிபோன்று
**ऐश्वर्यम् अपि**—ஐஸ்வர்யமும்
**आत्मरूपम्**—ஆன்மவடிவமாக ஒன்ரும்

**तस्मात्**—ஆன்மவடிவ ஐஸ்வர்யத்தினும்

**अबोधगतम्**—மாயையின் கண்ணுள்ள ஐஸ்வர்யம் அன்னியமாம்

புராணங்களில் சிற்சில விடங்களில் துர்க்காதி வடிவ மாயையின் கண்ணும் ஈஸ்வரீ (ஐஸ்வர்யமுடையவள்) சத்தத்தின் பிரயோகம் காணப்படுதலால்.

**अस्य च**—மாயா விசிஷ்ட ஈஸ்வரனிடத்தில் அவ்விரண்டில் நின்றும் விலக்ஷண மற்றோர் ஐஸ்வர்ய முளது.

**तानि**—இவ்வாறு கூறிய மூன்று ஐஸ்வர்யங்கள்

**पूर्ववत्**—ஞாதுதிக்கு மூவிதத்தன்மையை அங்கீகரித்தது போன்று

**कस्मात् न इष्टानि**—எதனாலங்கீகரிக்கப் படுவதில்லை ! அதன் தூஷணத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்றார்.

**इति ब्रुवतः**—இவ்வாறு கூறுகின்றவனுடைய

**मुखस्य पिधानं**—முகத்திற்கு மறைப்பை

**वचांसि अनुसृत्य**—சுருதி வசனங்களை யனுசரித்து

**सद्यः कुर्मः**—உடனே செய்கின்றோம்.

பிரதிவாதிக்கு நிருத்தரவடிவ உத்தரத்தைக் கொடுக்கின்றோமென்பது பொருள். **(192)**

### அவதாரிகை

அதனையே விவரணஞ் செய்கின்றார்:—

### சுலோகம்

ऐश्वर्यवर्णनमतिस्फुटमेव कृत्वा
नेतीत्यवादि बहुशः श्रुतिभिः प्रयत्नात् ।
सत्यादिवस्तुनि पुनर्न तथाऽस्ति पूर्व-
मुक्त्वा निषेधनमितीह विशेषयुक्तिः ॥ १९३ ॥

### பதவுரை

**अतिस्फुटमेव**—அத்தியந்தம் ஸ்பஷ்டமாகவே

**ऐश्वर्यवर्णनं कृत्वा**—ஐஸ்வர்யத்தின் வர்ணனையைச் செய்து

**बहुशः श्रुतिभिः**—அநேக சுருதிகளால்

**प्रयत्नात्**–பிரயத்தினத்தால்

**नेति इति श्रवादि** –இல்லை இல்லை என்று அவ்வைசுவர்யத்தின் நிஷேதம் பிரதிபாதிக்கப்பட்டுளது

**सत्यादिवस्तुनि**–சத்தியம் முதலிய வஸ்துவின் கண்

**तथा**–அவ்வாறு

**पूर्वमुक्त्वा**– முதலில் ச த் தி ய த் த ன் மை முதலியவற்றைப் பிரதிபாதித்து

**पुनः निषेधनम्**-பின்பு நிஷேதித்தல்

**न अस्ति इति**–இன்றும் (ஆதலின்) இதுவே

**इह**–(ஐஸ்வர்யத்தின் வர்ணனையை யபேக்ஷித்து) சத்தியத்தன்மை முதலியவற்றை வருணித்தலின் கண்

**विशेषयुक्तिः**–விசேஷயுக்தியாம்.

## *விசேஷவுரை*

ஐஸ்வர்யசத்தத்தால் அநுபவ (ஞான)ம் முதலியவற்றிலுள்ள நிரதிசயத்தன்மை முதலிய விசேஷம் கூறப்படுகின்றதா அல்லது சுதந்திரத்தன்மையால் சருவசகத்தின் சிருஷ்டி, பாலனம் முதலிய வியாபாரம் கூறப்படுகின்றதா? முதற்பக்ஷம் எமக்கு இஷ்டமேயாம் ஞானம் முதலிய பதங்களாலேயே நிரதிசய ஞானம் முதலியது லக்ஷிக்கப் பட்டமையினால் ஐஸ்வர்யம் முதலிய பதாந்தரத்தாலும் அது (நிரதிசயஞானதி) பிரதிபாதிக்கத்தக்கதாமாதலின்.

இரண்டாவது பக்ஷம் சரியன்று எதனாலெனின் "சருவத்தையும் வசமாகவுடையவன சருவத்திற்கும் ஈசானன் (நியாமகன்) சருவத்திற்கும் அதிபதி அவர் புண்ணிய கருமத்தால் விருத்தியாகின்றதில்லை பாப கருமத்தால் குறைகின்றதுமில்லை இவர் சருவேசுவரர்" என்பது முதலிய சுருதிவசனத்தால் அப்பரமான்மாவிற்கு நிரங்குச ஐஸ்வர்யத்தைப் பிரதி பாதித்து "அந்த இவ்வான்மா இதுவுமல்லஇதுவுமலல" என சுருதியே ஐஸ்வர்யத்தினை நிஷேதஞ்செய்கினறது.

இவ்வாறு அ ந் த ர் யா மி ப் பிராமணத்தின் கண்ணும் "எவர் பிருதிவியின் கண் நிற்பவராகி" என்பது முதலிய வசனததால் அநேகப் பிரகாரமாக அவருக்கு சருவசகத்தின நியந்திருத்தன்மை வடிவ ஐஸ்வர்யத்தினை வருணித்து அந்தியததில் "இப்பரமான்மாவினுமன்னியு

மான அனைத்தும் மித்தையேயாம் " என்றிந்தப் பிரகாரம் அவ்வியந்திருத் தன்மை வடிவ ஐஸ்வர்யத்தினை நிஷேதிக்கின்றது.

அப்படியே மூர்த்தாமூர்த்தப் பிராமணத்தின் கண்ணும் பஞ்ச மகாபூதங்களின் வாசனை வடிவமான உருவங்களை (ஐஸ்வர்யங்களை)ப் பிரதிபாதித்து "இது உபதேசம். இதுவுமன்று இதுவுமன்று " அதாவது வாஸ்தவமாக மூர்த்தாமூர்த்த வடிவ ஐஸ்வர்யமானது பரமாத்மாவின் கண்ணேயின்றும். என்னும் இச்சுருதியானது தாத்பர்யத்தால் (துவைதப் பிரபஞ்சவடிவ ஐஸ்வர்யத்தினை) நிஷேதிக்கின்றது. இப்பொருள் அநேக சுருதிகள் என்பதனால் உணர்த்தப்பட்டது.

இக்காரணத்தால் சுருதிகளாலேயே ஐஸ்வர்யம் நிராகரிக்கப்பட்ட மையின் அவ்வைஸ்வர்யம் ஞானாதி போன்று ஆன்மவடிவமாக சுருதியால் பிரதிபாதிக்கப்படுவதின்றும். சத்தியாதி வஸ்துவின கண்ணே அவ்வாறு முதலிற் பிரதிபாதனஞ் செய்து பின்னர் நிஷேதனம் செய்யப் படவில்லை. ஆதலின் சத்தியாதிவஸ்துவிற்கும் ஐச்வர்யத்திற்கும் மகத்தான விலக்ஷணம் உளது. ஆதலால் சத்தியம் முதலானவையே ஆன்மவடிவமாம் என்பது கருத்து. (193)

## அவதாரிகை

அற்றேல், விசாரத்தால் சுத்தப் பிரம்மத்தின் உபஸ்திதியின்றி அச்சுத்த பதார்த்தத்தின் கண் லக்ஷணை உண்டாகின்றதில்லை. ஆதலால் சுத்தபதார்த்தத்தின் உபஸ்திதி முன்னர் அவசியம் சொல்ல வேண்டும். இவ்வாறாகவே சுத்தத்தின் கண் சத்தியம் முதலிய பதங் களுக்குச் சக்திவிருத்தியே யுளதாகுக. லக்ஷணை எற்றிற்கு ? எனின் அற்றன்று. சர்வ பதத்திற்கும் சுத்த வஸ்துவின்கண் சக்தியை அங்கீகரிக்கின் ஞானம் முதலிய பதாந்தரங்களுக்கு வியர்த்தத்தன்மை முதலிய தோஷம் பிராப்தியாம் ஆதலின் மற்றும் லக்ஷணாவிருத்தியைப் பரிகரித்தற்பொருட்டு சுத்தத்தின்கண் சக்திவிருத்தியினைக் கற்பிக் கின்றனையா ? அல்லது சுத்தத்தின் பிரதீதியின் பொருட்டா ? முதற்பக்ஷம் சரியன்று. அவ்வாறங்கீகரிக்கின் உலகப்பிரசித்தமான லக்ஷணாவிருத்திக்கு லோபம் பிராப்தியாம், ஆதலின் அந்த லோபமும் அந்நியாயமாம். (யுக்தி, யுக்தமன்றும்) என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

*சுலோகம்*

शब्दस्य लाक्षणिकमुख्यविभागभिन्ना
वृत्तिर्हि लौकिकवचस्युपलब्धपूर्वा ।
यस्मादतो न घटते यदि मुख्यवृत्ति-
राश्रीयतामिह गिरश्चरमाऽपि वृत्तिः ॥ १९४ ॥

*பதவுரை*

**लौकिकवचसि**–லௌகிக வாக்கியத்தின் கண்
**शब्दस्य वृत्तिः**–பதத்தினது விருத்தியானது
**लाक्षणिकमुख्य विभागभिन्ना**–லக்ஷணாவிருத்தி முக்கிய விருத்தி என்னும் வேற்றுமையால் பின்னமாக
**उपलब्धपूर्वा**–முன்பு நிச்சயிக்கப்பட்டுள்ளது.
**यस्मात् अतः**–யாதொரு காரணத்தால் இங்ஙனமாமோ அதனால்
**इह**–சுத்தத்தின் கண்
**मुख्यवृत्तिः**–சக்தி விருத்தியானது
**यदि न घटते**–பொருந்தாதாயின்
**गिरः चरमापि वृत्तिः**–பதத்தின் அந்திம விருத்தி வடிவ லக்ஷணையே
**आश्रीयताम्**–கொள்ளத்தக்கது.

*விசேஷவுரை*

லக்ஷணையைப் பரிகரித்தற்பொருட்டுச் சக்தி விருத்தியையங்கீகரிக்கின் தீரம் முதலியவற்றின் கண்ணும் லக்ஷணை சித்திக்காது. கங்கை முதலிய பதத்தின் சக்தி விருத்தியே பிராப்தியாம். ஆதலால் முக்கியத் தன்மையின் நிருவாகத்தின் பொருட்டு (லக்ஷணையின் நிவிருத்தியின் பொருட்டு) லக்ஷியத்தில் சத்திவிருத்தி கற்பிக்கத்தக்கதன்றும். இரண்டாவது பக்ஷமும் சரியன்று.(சுத்த வஸ்துவின் பிரதீதியின் பொருட்டு சத்திவிருத்தியைக் கற்பித்தலும் சரியன்று) முதலில் நிச்சயிக்கப்பட்ட சத்திவிருத்தியையநுசரித்து முக்கியார்த்தம் சம்பவியாதபோது உலகில் கங்கையில் இடைச்சேரியிருக்கின்றது என்னுந்தலத்திற்போன்று லக்ஷணாவிருத்தியாலே சுத்தவஸ்துவின் பிரதீதி சம்பவித்தலின் என்பது பொருள். (194)

## அவதாரிகை

அற்றேல் எல்லாப்பதங்களுக்கும் ஒரே பிராதிபதிகார்த்தத்தின்கண் லக்ஷணையையுடன்படின் அப்போது ஓர் பதத்தாலேயே சுத்தப்பிராதிபதிகார்த்தத்தின் பிரதீதி சம்பவித்தலால் லக்ஷணையையங்கீகரிக்கும் பக்ஷத்திலும் பதாந்தரம் வீணேயாம் என்னும் சங்கையை நிராகரிக்கின்றவராய் உபசம்மாரஞ் செய்கின்றார் :—

## சுலோகம்

तस्मादखण्डमवबोधयितुं समर्थो
वेदान्तभूमिगतशब्दसमन्वयोऽतः ।
संसर्गलक्षणमपास्य विरोधहेतो-
र्वाक्यार्थमद्वयमखण्डमिहाश्रयस्व ॥ १९५ ॥

## பதவுரை

**तस्मात्**—அதனால் அதாவது சுத்த வஸ்துவில் லக்ஷணாவிருத்தியை யங்கீகரித்தலால்

**वेदान्तभूमिगतशब्दसमन्वयः**—உபநிஷத்துக்களிலுள்ள தத்துவமசி சத்தியம் ஞானமனந்தம் பிரம்ம முதலிய வாக்கியமானது

**अखण्डम्**—அகண்டைகரஸ பிரம்மான்ம தத்துவத்தை

**अवबोधयितुम्**—போதித்தற்கு

**समर्थः**—ஆற்றலுடையதாம்

திரண்ட பொருளைக் கூறுகின்றார் :—

**अतः**—ஆதலால்

**विरोधहेतोः**—சத்தியம் முதலிய பதங்களின் வாச்சியார்த்தங்களுக்கு அபேதத்தில் விரோதமிருத்தலால்

**संसर्गलक्षणम्**—தாதான்மிய சம்பந்த வடிவ வாக்கியார்த்தத்தை

**अपास्य**—பரித்தியாகஞ் செய்து

**इह**—பிரம்ம வாக்கியத்தின்கண்

**अद्वयमखण्डम्**—அத்துவயமும் அகண்டமுமாகவே

**वाक्यार्थम्**—வாக்கியார்த்தத்தினை

**आश्रयस्व**—அங்கீகரிக்கவேண்டும்

## விசேஷவுரை

லக்ஷணையை யங்கீகரித்தலாற்றான் எல்லாப்பதமும் பொருளுடைய தாகின்றது லக்ஷணையை யங்கீகரியாவிடின் பிரம்மத்தின்கண் எந்தப் பதம் பிரயோகிக்கப்படுகின்றதில்லையோ பிரம்மத்திற்கு அப்பதத்தின் அர்த்தாகாரத்தன்மையின் சம்சயம் நிவர்த்தியாகாது. அதாவது சத்தியாதி வாக்கியத்தின்கண் ஞானதிபதத்தைப் பிரயோகிக்காவிடின் பிரம்மத்திற்கு ஞானதியாகாரத் தன்மையின் சம்சயம் உண்டாகும். ஞானதியின் அபேதம் அந்நிய பிரமாணத்தாலறியப்படாமையின். இந்தப் பிரகாரம் கூறிய தசையில் லக்ஷணைக்குப் பீஜமான அன்னுவயானுப பத்தியின் அநுசந்தானமில்லாமையின் லக்ஷணையுஞ் சித்திக்காது. ஏக பதப் பிரயோகத்தின்கண் ஓரிடத்தும் லக்ஷணை உண்டாவதின்றாம். ஆதலின் லக்ஷணை விருத்திக்குச் சக்திவிருத்தியோடு சமத் தன்மை யின்றாம் என்பது கருத்து. (195)

# வேதாந்தங்கட்கு அகண்டார்த்தப் பிரதிபாதகத்துவ சாதனம்.

## அவதாரிகை

வேதாந்த வாக்கியங்களுக்கு அகண்டார்த்தத்தின் பிரதிபாதனக் கிரமத்தைக் கூறுகின்றார் :—

## சுலோகம்

सामानाधिकरण्यमत्र भवति प्राथम्यभागन्वयः
पश्चादेष विशेषणेतरतया पश्चाद्विरोधोद्भवः ।
उत्पन्ने च विरोध एकरसके वस्तुन्यखण्डात्मके
वृत्तिर्लक्षणया भवत्ययमिह ज्ञेयः क्रमः सूरिभिः ॥ १९६ ॥

## பதவுரை

अत्र - இந்தப் பிரம்ம வாக்கியத்தின்கண்
सामानाधिकरण्यम् - சாமானாதிகரண்யமெனப் பெயரிய
अन्वयः — சம்பந்தமானது
प्राथम्यभाक् भवति - முதலில் உண்டாகின்றது

**पश्चात्**—பின்பு

**विशेषणेतरतया**—விசேஷண விசேஷியத்தன்மை வடிவ

**एषः**—இந்த சம்பந்தமுண்டாகின்றது

**पश्चात्**—அதன் பின்பு

**विरोधोद्भवः**—வாக்கியார்த்தத்தில் விரோதத்தின் ஸ்புரணமுண்டாகின்றது

**विरोधे उत्पन्ने च**—விரோதஸ்புரண முண்டானபோது

**अखण्डात्मके एकरसके वस्तुनि**—அகண்டைகரஸ பிரம்ம வஸ்துவின்கண்

**लक्षणया वृत्तिः भवति**—லக்ஷணவிருத்தியுண்டாகின்றது. (அதன் பின்பு அகண்ட வாக்கியார்த்த ஞானம் உண்டாகிறது.)

**अयं क्रमः**—இந்தக் கிரமமானது

**इह**—ஈண்டு

**सूरिभिः ज्ञेयः**—வித்துவான்களாலறியத்தக்கதாம்.

## *விசேஷவுரை*

உத்தர சுலோகத்தின்கண் சாமானுதிகரண்யம் முதலியவற்றின் சம்பந்திகள் ஸ்பஷ்டமாக நிர்த்தேசம் செய்யப்படும். லக்ஷணவிருத்தியுண்டாகின்றதென்பதற்கு லக்ஷிய லக்ஷண பாவ சம்பந்தமுண்டாகின்றதென்பது பொருள். **(196)**

## *அவதாரிகை*

அற்றேல், எதற்கு சாமானுதிகரண்ய சம்பந்த முண்டாகின்றது? எதற்கு விசேஷண விசேஷியத் தன்மை முதலிய சம்பந்த முண்டாகின்றது என்னுமாகாங்க்ஷையுண்டாகக் கூறுகின்றார்:—

## *சுலோகம்*

**सामानाधिकरण्यमत्र पदयोर्ज्ञेयस्तदीयार्थयोः**
**संबन्धस्तु विशेषणेतरतया ताभ्यां सहास्यात्मनः ।**
**संबन्धोऽप्यथ लक्ष्यलक्षणतया विज्ञेय एवं बुधै-**
**रेतान्यर्थपदानि बुद्धिपदवीमारोहणीयानि तु ॥ १९७ ॥**

## *பதவுரை*

**अत्र**–தத்துவமசி முதலிய வாக்கியத்தின்கண்
**पदयोः**–தத்பத துவம்பதங்களுக்கு
**सामानाधिकरण्यम्** –சாமானுதிகரண்ய சம்பந்தம்
**ज्ञेयः**–அறியத்தக்கது
**अथ**–அதன் பின்பு
**तदीयार्थयोः तु**–தத்துவம் பதங்களின் அர்த்தங்களான சீவேசுரர்கட்கோ
**विशेषणेतरतया**–விசேஷண விசேஷியத்தன்மை
**संबन्धः**–சம்பந்தம் அறியத்தக்கது
**ताभ्यां सह**–தத்துவம் பதவாச்சிய சீவேசுவரர்களோடு
**अस्य आत्मनः**–இந்த சுத்தான்மாவிற்கு
**लक्ष्यलक्षणतया**-லக்ஷிய லக்ஷணத்தன்மை
**संबन्धः अपि** –சம்பந்தமும்
**बुधैः विज्ञेयः**–வித்துவான்களால் அறியத்தக்கது

உபசம்மாரஞ் செய்கின்றார்:—

**एवम्** –இந்தப்பிரகாரம்
**अर्थपदानि**–அர்த்தப் பிரதீதியின் சாதனங்களான
**एतानि**–சாமானுதிகரண்யம் முதலிய சம்பந்தங்கள்
**बुद्धिपदवीम्** –புத்தியின்கண்
**आरोहणीयानि तु**–தரிக்கத்தக்கனவேயாம் மறக்கத்தக்கதன்றும்.

## *விசேஷவுரை*

முதலில் பதங்களுக்கு சாமானுதிகரண்ய சம்பந்தத்தினையறிய வேண்டும்**पदयोः** பதங்களுக்கு என்னுமிருமை வசனமானது தத்துவமசி வாக்கியத்தின் கருத்தாலாம். இருமை வசனம் அநேக பதங்களுக்கும் உபலக்ஷணமாம். அபரியாய பதங்களுக்கு ஓர்பொருளின்கணிருக்குந் தன்மை சாமானுதிகரண்யான்வயமாம் ஆதலின் பதங்களுக்கே சாமானுதிகரண்ய சம்பந்தமாமென்பது பொருள். (அன்வயம்= சம்பந்தம்.)

தத்துவம் பதார்த்தங்களுக்கோ விசேஷண விசேஷியத் தன்மைச் சம்பந்தமாம். தத்துவ முதலிய வாக்கியத்தின் சிரவணத்தின் பின்பே

தத்துவம் பதார்த்தங்களின் நான் பிரம்மம் என விசிட்டாபேதம் அறியப் படுகின்றது. அப்படிக்கு இன்றேல் (விசிட்டாபேதத்தை யறியா விடின்) பதங்களுக்கு சாமானுதிகரண்யம் பொருந்தாது ஆகலின். இதுவும் (விசிட்டாபேதத்தைக் கூறுதலும்) "உத்பித்தால் யஜிக்குக" என்பதன்கண் உத்பித் பதத்திற்கும் யாக பதத்திற்கும் சாமானுதி கரண்யம் இருக்கின்றது. அகண்டார்த்தத் தன்மையோவின்றும். ஆதலின், அதனை நீக்கும் பொருட்டு கூறப்பட்டது. அப்படியாயினும் நீலம் உத்பலம் என்பது முதலிய இடங்களில் (சாமானுதிகரண்யமும் விசேஷண விசேஷியத்தன்மைவடிவ விசிட்டாபேதமும் உளதாயினும்) அகண்டார்த்தத்தன்மையின்றும், என்னுமிடத்துக் கூறுகின்றார் தத்துவம் பத வாச்சியங்களோடு என.

ஈண்டு (வாச்சியார்த்தத்தின்கண்) விரோதம் பிரதீதியாகும்போது என்று அறியவேண்டும். விரோதப்பிரதீதியின்றி லக்ஷணை யுண்டாகாமையின். விசேஷண விசேஷியவடிவ தத்துவம் பத வாச்சியார்த்தங்களோடு இந்த ஆன்மாவிற்கு லக்ஷிய லக்ஷண பாவ சம்பந்தமாம் என அறிக. சுத்த ஆன்ம சொரூபம் லக்ஷியமாம் வாச்சியார்த்தம் லக்ஷகமாம். (லக்ஷணவிருத்தியால் போதிப்பது லக்ஷகமாம். பதங்கள் லக்ஷணவிருத்தியால் போதித்தலின் பதங்களும் லக்ஷகமாம். அங்ஙனமாயினும்) ஈண்டு பதார்த்தந்திற்கு லக்ஷணையை யுடன்படும் பக்ஷத்தையங்கீகரித்துக் கூறப்பட்டது.

**சங்கை**:—நீண்ட கையன் (தீர்க்கபாகு) தேவதத்தன் என்னு மிடத்தில் சரீரத்திற்கும் அதன் அவயவ கை முதலியவற்றிற்கும் அம்சாம் சித்தன்மையால் அபேதம் பிரதீதியாவதுபோன்று ஜீவேஸ்வரர்களுக்கு அம்சாம்சித்தன்மையாலாவது, அல்லது மண்குடம் என்னுமிடத்து காரிய காரணத்தன்மையால் அபேதம் பிரதீதி ஆவதுபோன்று காரிய காரணத்தன்மையாலாவது அபேதப் பிரதீதி பொருந்துதலின் விரோதத்தின் உத்பத்தியின்றும். அதனை மூலமாகவுடைய லக்ஷணையு மின்றும். இவ்வாறுகவே அகண்டார்த்தத்தன்மை எப்படியாம்? எனின்

**சமாதானம்**:—அற்றன்று. "இவ்வான்மா பிறக்கிறதில்லை இறக் கிறதில்லை" என்பது முதலிய சுருதியானது இவ்வான்மாவின்கண் சர்வ விகாரத்தையும் நிஷேதஞ் செய்கின்றதால் வாஸ்தவமாக ஜீவன் பரமாத்

மாவின் அம்சமன்ரும். அப்படிக்கின்றேல் ஜீவனுக்கும் கடாதிக்குப் போன்று நாசம் பிராப்தியாம். 'நிஷ்கலம் நிஷ்கிரியம்' என்பது முதலிய சுருதியினுலும் வாஸ்தவமாக ஜீவேஸ்வரர்களுக்கு அம்ச அம்சித்தன்மை யின்ரும். அம்சாம்சித்தன்மையை யங்கீகரிக்கின் அம்சவடிவ ஜீவனது அம்சியாகிய பிரம்மத்திற்கு தேவதத்தனுக்குப் போன்று சாவயவத் தன்மையுண்மையால் அநித்தியத்தன்மை பிராப்தியாம். ஆதலால் பதார்த்தங்களுக்கு அத்தியந்த அபேதமே வாக்கியார்த்தம் ஆம் எனக் கூறுதல்வேண்டும். அங்ஙனங் கூறுங்கால் விரோதத்தின் பிரதீதி யுண்டாகின்றதேயாம். ஆதலின் லக்ஷணை யெவ்வாறின்ருகும். வாக்கியத்திற்கு அகண்டார்த்தத்தன்மைதான் எவ்வாறின்ருகும்?

ஈண்டு இது ஆசாரியரது கருத்து:— பரியாயமின்றியதும், சமான வேற்றுமையினையுடையதும், பரஸ்பர ஆகாங்க்ஷையுடையதுமான தத்துவம் பதங்களுக்கு அந்நியார்த்தம் சம்பவியாமையின் ஏகார்த்த விருத்தித்தன்மையைக் கூறுதல் வேண்டும், என்று முதலில் அதிகாரி யினுல் அனுசந்தானஞ் செய்யத்தக்கது. அதன் பின்பு சாமானுதி கரண்யத்தின் பலத்தால் தத்துவம்புதார்த்தங்களுக்கு அத்தியந்தம் அபேதமேயாம் அபேதத்தையங்கீகரியாவிடின் அவைகட்கு சாமானுதி கரண்யம் பொருந்தாமற்போம் என்று அநுசந்தானஞ் செய்யத்தக்கது அதன் பின்பு தத்துவம்பதார்த்தங்களின் அபேதத்தின்கண் விரோதத் தினையநுசந்தானஞ் செய்யவேண்டும். அதன் பின்பு இந்தத் தத்துவமசி வாக்கியமானது உன்மத்தனது வாக்கியமன்ரும். வேதத்தின் கண்ணுள்ள இதர வாக்கியம்போன்று பிராமாணிகமாதலின், மகா வாக்கியத்தினத்தியயனம் அதிருஷ்டத்தின் பொருட்டாமென்று சொல்லற்க. திருஷ்ட பலன் சம்பவிக்கும்போது அதிருஷ்டத்தைக் கற்பித்தல் பொருத்தமின்மையின் என்றிவ்வாறு விசாரஞ் செய்யும் அதிகாரிபுருஷனுக்கு தத்துவமசி மகாவாக்கியமானது உலகப்பிரஸித்த மான மரியாதையினையுடைய இருபதங்களின் லக்ஷணையால் அகண்டப் பிரம்மத்தையே பிரதிபாதிக்கும். இந்தப் பிரகாரம் சத்தியம் ஞான மனந்தம் பிரம்ம என்பது முதலிய வாக்கியத்தினையும் விசாரஞ்செய்க.

**அவதாரிகை**

அற்றேல் லக்ஷணையால் வாக்கியத்திற்கு அகண்டார்த்தத் தன்மை யுளதாக்க. அப்படியாயினும் விட்டுவிடாத லக்ஷணை சரியன்ரும்.

அனுன்ம விசிஷ்ட சேதனத்தின்கண் சத்திக்கிரகணை முளதாயின் அப்போது விட்டுவிடாத லக்ஷணை சம்பவிக்கும் விசிஷ்டத்தின்கண் சத்தியோ பொருந்தாது. இலாகவத்தால் ஓரம்சத்தின் கண்ணேயே சத்தியைக் கொள்ளுதல் நியாயமாதலின் விசேஷணத்திலாவது விசேஷியத்திலாவது ஒரே அம்சத்தில் சத்தியைக் கொள்ளாமல் விசிட்டத்தின்கண் சத்தியைக் கொள்ளின் கௌரவ தோஷமுண்டாம். ஆதலின், விசிஷ்டத்தினுள் ஆன்மவடிவ அம்சத்தில் சக்தி சம்பவியாது முற்கூறிய தோஷத்தால் (சத்தப் பிரவிருத்திக்கு நிமித்தமான சாதி முதலியவையின்மையினுலும் பதாந்தரத்திற்கு வியர்த்தத்தன்மை வருதலினுலும்) அப்படியாயினும் அனுன்மவடிவ அம்சத்திலோ சத்தியைக் கொள்ளுங்கால் யாதொரு பாதகமுமின்ரும்; என்ருசங்கித்து சத்தியைக் கிரகிக்குங்காலத்தில் லாகவ கௌரவங்களின் உபஸ்திதி உண்டாகின்றதில்லையாகலின் விசிட்டத்தின்கண் சக்தியைக் கிரகிப்பதில் அற்பமும் பாதகமின்ரும். என்று கூறுதற் பொருட்டு உபஸ்திதியினனுசாரத்தால் விசிட்டத்தின்கண் சக்திஞானத்தைக் கூறுகின்ருர் :—

## சுலோகம்

निःसंधिबन्धनमिदं चिदचित्स्वरूपं
संकीर्णमन्तरपरिस्फुरणेन शून्यम् ।
आ चित्तशुद्धिफलतः स्फुरितोपपत्तेः
शब्दार्थसङ्गतिमिहैव तु गृह्णतेऽज्ञाः ॥ १९८ ॥

## பதவுரை

**इदं चिदचित्स्वरूपम्** – ஆன்ம அனுன்மாக்களின் இந்த சமுதாய வடிவம்

**आचित्तशुद्धिफलतः स्फुरितोपपत्तेः** – சித்தசுத்தியின் பல வடிவமான உபபத்திப் பிரதீதி உண்டாகும் வரை

**अन्तरपरिस्फुरणेन शून्यम्**–ஸ்பஷ்டபேத ஞானமற்றதாய்

**निःसंधिबन्धनम्**–தாதான்மிய மற்றதாய்

**संकीर्णम्**–சங்கீர்ணமாய் உளது

அதனுல் சித்தித்தது என்னை என்னுமிடத்துக் கூறுகின்ருர்

**इह एव**–அப்படிப்பட்ட இந்த விசிட்டத்தின் கண்ணேயே

अज्ञाः—அவிவேகிகள்

शब्दार्थसङ्गतिम्—சப்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தவடிவ சக்தியினை

गृह्णते—கிரஹிக்கின்றார்கள்

## விசேஷவுரை

'ஆசித்தசுத்தி' என்பதில் உள்ள ஆகாரம் மரியாதை அர்த்தத்தில் வந்தது. சித்தசுத்தியின் பயனாகிய உபபத்தியின் ஸ்புரணை பர்யந்தம் ஆன்மானான்ம உபயவடிவ விசிஷ்டம் பிரதீதியாகின்றது. பின்னர் விசிஷ்டத்தின் பிரதீதியுண்டாகின்றதில்லை என்று பொருள். அந்த விசிஷ்டம் பேதமாகப் பிரதீதிக்கு அவிஷயமாம் தாதாத்மிய ரகிதமுமாம். தாதாத்மியத்தின் கண்ணே பேதத்தோடு கூடிய சொற்ப அபேதமானது இருக்கின்றது. ஆதலின் சந்திபந்தன பதத்தால் சூசிப்பிக்கப்பட்ட பேதத்தோடு கூடிய சொற்ப அபேதவடிவ தாதான்மியத்தினை ஈண்டு (விசிட்டத்தின்கண்) நிஷேதித்தலின் விசிட்டம் தாதாத்மியரகிதமாமென்பது பொருள். இதனாலே (இவ்வேது வினால்) சங்கீர்ணமாம் அதாவது அத்தியஸ்தமாகிய ஆத்யந்திக அபேதத்தால் பிரதீதியாகின்றது.

அவிவேகிகள் = ஆன்ம அநான்மவடிவ இரு பாகங்களின் விவேக மில்லாதவர்கள். அறியப்பட்ட அர்த்தத்திலேதான் சக்தி ஞான முண்டாகின்றது. ஞானமும் முதலில் விசிட்டத்திலேதானுண்டா கின்றது. சத்தி ஞான காலத்தில் சபலத்தினம்சங்களான சித்தினதும் அசித்தினதும் ஸ்பஷ்டமாக சொற்பமாகவாவது வேற்றுமை வடிவத் தால் கிரகணமின்றாம். ஆதலின் சபல (விசிஷ்ட)த்தின் கண்ணேயே சத்திஞானமுண்டாகின்றது என்பது கருத்து. (198)

## அவதாரிகை

அற்றேல் அகங்காராதிப் பிரபஞ்சம் திருசியமாதலாலும் அதற்குத் தன்னினும் வேறான த்ரஷ்டாவையுடையதாந்தன்மை நியமமாதலாலும் அதனைக்காணுந்திருஷ்டா அதனினும் அந்நியமாம் த்ரஷ்டாவினும் த்ருச்யம் அந்நியமாம் என்று இந்தப்பிரகாரம் (விவேகமுண்டாகும்போது) திருஷ்டாவின் பேதக்கிரகணத்தின் அசம்பவம் எவ்வாறாகும்? இந்தப்

பிரகாரம் அகங்காரத்திற்குக் காமாதியிணுசிரயத் தன்மையிருத்தலாலும் திருக்வடிவ திருஷ்டாவில் நின்றும் அந்நியத்தன்மை சித்திக்கின்றது. அசங்க வடிவ திருஷ்டாவிற்கு காமாதி திருசிய ஆசிரயத்தன்மை பொருந்தாமையின். என்னும் இதனுனும் திருசியத்தினின்றும் திருஷ்டா அந்நியமாமென்னும் விவேகம் சம்பவிக்கின்றது. ஆதலின் திருஷ்டாவின் கண்ணே சக்தி ஞானம் ஏன் உண்டாகாது? எனின் நீ கூறியது வாஸ்தவந்தான். ஆனுல் இந்த விவேக உபாயமானது இவன் நான் என்பது முதலிய சப்தங்களின் அர்த்தத்தின் கண் சக்தியையறிந்தவனும் வேறு சமயத்தில் அந்தக்கரணம் சுத்தியாகும் போது மோக்ஷ இச்சையுடையவனுமான புருஷனுக்கு ஆன்ம விசாரம் பிரவர்த்தமாகும்போதுதான் உண்டாகின்றது. அதற்கு முன்பு உண்டா கின்றதில்லை. அப்படிக்கின்றேல், அதாவது ஆன்ம விசாரத்திற்கு முன்பு உண்டாகுமாயின் வாதிகளுக்கு அகங்காராதியின்கண் ஆன்மத் தன்மைப் பிராந்தி உண்டாகாது. ஆதலால் அந்தக்கரண சுத்தி, ஆன்மவிசாரம் முதலியவற்றிற்குப் பூர்வகாலத்தில் உண்டாகும் சக்தி ஞானம் விசிஷ்ட விஷயகமாகவேயுண்டாகின்றது எனக்கூறுகின்ருர்:—

சுலோகம்

शब्दार्थसंगतिविदामथ सत्त्वशुद्धे-
रुत्पन्नतर्कदृढलोहशलाकया तु ।
दृश्यं दृशं च निपुणं द्वयमन्तरेण
निक्षिप्तया दृगदृशोः क्रियते विभागः ॥ १९९ ॥

பதவுரை

शब्दार्थसंगतिविदाम् —நான் என்பது முதலிய சப்தார்த்தங்களின் சக்தியையறிந்த வித்துவான்களுக்கு

अथ—சக்தி ஞானத்தின் அனந்தரம் வேறு சமயத்தில்

सत्त्वशुद्धेः—அந்தக்கரணத்தின் சுத்தியினுல்

उत्पन्नतर्कदृढलोहशलाकया—உத்பன்னமான தர்க்கவடிவ திட இரும்புச் சலாகை வடிவினதும்

दृश्यं दृशं च द्वयं अन्तरेण—திருசியமும் திருக்குமாகிய இரண்டின் மத்தியில்

**निपुणं निरीक्षया**–நன்ருகப் பிரவேசிக்கப்பட்டதுமான விசாரவடிவ ஆயுதத்தால்

**दृक् अदृशोः**–திருஷ்டாவினதுந் திருசியத்தினதும்

**विभागः क्रियते**–வேற்றுமை செய்யப்படுகின்றது

## *விசேஷவுரை*

அந்தக்கரணசுத்தியாலுண்டான யாதொரு வருணிக்கப்பட்ட தருக்கமுண்டோ அதுவே திடமான இருப்புச்சலாகையாம் எப்படி திடமான இருப்புச்சலாகையானது துவாரமின்றியதும் கெட்டியானதுமான கல் முதலியவற்றை விபாகஞ்செய்கின்றதோ அப்படிப் பிரிக்க முடியாத சி த சி த் வ டி வ அங்காரக்கிரந்தியை பிரித்தலாலும் பாதித்தலாலும் இந்தத் தருக்கமானது திடமான இருப்புச்சலாகை எனப்பட்டது. திருசியமும் திருக்குமாகிய இரண்டின் மத்தியில் பிரவேசிக்கப்பட்டது என்பதற்கு இரண்டின் விபாக விஷயமாகப் பிரயோகிக்கப்பட்டது என்பது பொருள். இ ப் ப டி ப் ப ட் ட தருக்கத்தால் ஆன்மானன்மாக்களின் பேதமறியப்படுகின்றது. ஆனதால் தருக்க அனுசந்தானததிற்கு முன்னரே விசிட்டத்தில் சக்தியைக்கிரகித்தலால் அம்சம்மாத்திரம் (ஆன்மாவாவது அனன்மாவாவது) சக்தி ஞானத்திற்கு விஷயமன்ரும். அன்றேல் (சத்திஞானத்திற்கு விசிஷ்டம் விஷயமன்ருயின்) முதலில் சத்திஞானமின்றி விசாரமுதயமாகாமையின் விவேகக்கிரகமே சம்பவியாது என்பது கருத்து.

இருப்புச்சலாகை = கடப்பாறை, கிரகம் = ஞானம். (199)

## *அவதாரிகை*

அற்றேல் முதலில் விவேகக்கிரகமில்லையாயின் சத்தார்த்தத்திற்கு விசிஷ்டத்தன்மை எப்படி சி த் தி க் கு ம் என்றுசங்கித்து வேறு சமயத்தில் (அந்தக்கரணத்தின் சுத்தி விசாரம் முதலிய சமயத்தில்) அத்தனது (விசிட்டத்தின்) விவேகத்தாலேயே முன்னர் அவிவேகத்தால் செய்யப்பட்ட விசிட்டத்தின் கண்ணேயே சக்தி ஞானமாமெனவும் இதனுல் அதுவே சத்தார்த்தமாம் எனவும் நிச்சயிக்கப்படுகின்றது என்று கூறுகின்றுர் :—

## சுலோகம்

शुद्ध्युत्थतर्कजनितं चिदचिद्विभागं
प्राप्य स्थिताः पुनरिमां गिरमुद्गिरन्ति ।
सत्यादिशब्दगण एष तु तत्र तत्र
व्युत्पत्तिमान् शबलवस्तुनि नो दृशीति ॥ २०० ॥

## பதவுரை

**शुद्ध्युत्थतर्कजनितम्**—அந்தக்கரணத்தின் சுத்தியினுலுண்டான தருக்கத்தால் உற்பன்னமான

**चिदचिद्विभागं**-ஆன்மானன்மாவின் விவேகத்தை

**प्राप्य स्थिताः**—அடைந்திருக்கும் விவேகிகள்

**तत्र तत्र**—உபநிஷத்துக்களில் அவ்வவ்விடங்களில்

**शबलवस्तुनि**-விசிட்ட வஸ்துவின் கண்ணேயே

**एष सत्यादिशब्दगणः**—இந்தச் சத்தியம் முதலிய சத்த சமுகம்

**व्युत्पत्तिमान्**-வியுற்பத்தியினையுடையது (அறியப்பட்ட சத்தியினையுடையது)

**नो दृशि इति**—சுத்த ஆன்மாவில் வியுற்பன்னமன்ரும் என்று

**इमां गिरम्**—இந்த வாக்கியத்தினை

**उद्गिरन्ति**—கூறுகின்ருர்கள்.

சத்தியாதி சப்தம் அகம் முதலிய சத்தத்திற்கும் உப லக்ஷணமாம்.

## அவதாரிகை

இவ்வாருதம்போது லாகவத்தால் கேவலம் ஒன்றன் கண்ணேயே சக்தியாம் விசிட்டத்தின்கண் அன்ரும் கௌரவமாதலால், என்று யாதொன்று கூறப்பட்டதோ அதுவுஞ் சரியன்று. முதலில் கேவலத்தின் உபஸ்திதியின்மையால் லாகவம் முதலியவற்றிற்கு அவகாசமின்மையின், என்று கருதிக்கொண்டு அதனை அநுவாத பூருவகமாகக் கூறுகின்ருர் :—

## சுலோகம்

एकत्र शक्तिग्रहणोपपत्ता-
वनेकक्लृप्तिः क्रियते किमर्थम् ।
इत्येतदेवं सति नास्ति चोद्यं
पुराऽस्य पुंसः परमाविवेकात् ॥ २०१ ॥

## பதவுரை

**एवं सति**-இவ்வாறுகும்போது

**एकत्र**-கேவல ஓர் பாகத்தின் கண்ணேயே

**शक्तिग्रहण उपपत्तौ**-சக்தி ஞானம் பொருந்தும்போது

**अनेकक्लृप्तिः**-அநேகான்மக சபளத்தின்கண் சக்தியைக் கற்பித்தல்

**किमर्थं क्रियते**-எதன்பொருட்டுச் செய்யப்படுகின்றது

**इति एतत् चोद्यम्** -என்னும் இந்த சங்கையும்

**नास्ति**-சரியன்றும்

**पुरा**-விவேக முதயமாதற்கு முன்பு சக்திக்கிரஹண காலத்தில்

**अस्य पुंसः**-இவ்வதிகாரியாய புருஷனுக்கு

**परमाविवेकात्** -(இது கேவலம் இது விசிஷ்டம் என) அத்தியந்தம் விவேகமின்மையின். (201)

## அவதாரிகை

முன்பு **मानान्तराधिगतगोचरगामिनी** (1-152) என்பது முதலிய சுலோகத்தால் வாச்சியார்த்த சம்பந்தித் தன்மையால் பிரமாணாந்தரத்தால் அறியப்பட்டதன் கண்ணேயே லக்ஷணை சொல்லத்தக்கது. ஆன்மாவோ அவ்வாறின்றும். அதாவது வாச்சியார்த்த சம்பந்தியாகப் பிரமாணாந்தரத்தாலறியப்படவில்லை. ஆதலின் அதன்கண் லக்ஷணை சம்பவியாது. என்னும் ஆசங்கையானது லக்ஷணையால் லக்ஷியத்தின் ஞானம் மாத்திரம் அபேக்ஷிக்கப்பட்டது. பிரமாணாந்தரத்தால் லக்ஷியத்தின் ஞானம் அபேக்ஷிக்கப்பட்டதன்றும். ஞானம் மாத்திரம் ஆத்மாவின்

கண்ணும் சம்பவிக்கின்றது என்பதால் நிராகரிக்கப்பட்டது. இப்போது வேறு பிரகாரத்தால் அகண்டவாக்கியார்த்தத்தைத் தூஷித்தற்கு விகல்பஞ்செய்கின்றார். அவ்விகல்பமாவது:—லாக்ஷணிக சப்தஜன்னிய ஞானத்தின்கண் லக்ஷ்யமானது வாக்கியார்த்த சம்பந்தித் தன்மையால் விஷயமாகின்றதா அல்லது கேவல சொரூபத்தால் விஷயமாகின்றதா? என்பது. :—

### சுலோகம்

अत्राऽऽह वाच्यशबलान्वितवस्तुनीयं
तद्वर्त्मना भवति लाक्षणिकी प्रवृत्तिः ।
किं वा तदन्वितविलक्षणवस्तुनि स्या-
च्छब्दस्य नोभयमपि प्रतिभाति युक्तम् ॥ २०२ ॥

### பதவுரை

**अत्र आह**—இவ்விடத்து வாதி கூறுகின்றான்.

**शब्दस्य**—சத்தியம் முதலிய சத்தங்களினது

**इयं लाक्षणिकी प्रवृत्तिः**-இந்த லக்ஷணையாலுண்டான ஞானமானது

**तद्वर्त्मना**—வாச்சியார்த்த வாயிலாக

**वाच्यशबलान्वितवस्तुनि**—வாச்சியமாகிய விசிஷ்டத்தோடு கூடிய பரப்பிரம்மத்தினை

**भवति**—விஷயஞ் செய்கின்றதா?

**किं वा**—அல்லது

**तदन्वितविलक्षणवस्तुनि**—வாச்சியார்த்தத்தோடு கூடியதினின்றும் விலக்ஷணமான வஸ்துவினை

**स्यात्**—விஷயஞ் செய்கின்றதா? இரண்டு பக்ஷத்திலும் தூஷணத்தைச் சம்பாவனை செய்கின்றார்

**उभयमपि**-இரண்டு விகற்பமும்

**युक्तम्**—பொருத்தமுடையதாக

**न प्रतिभाति**—தோற்றவில்லை.

## விசேஷவுரை

வாச்சியார்த்தத்தோடு கூடியதினின்றும் விலக்ஷணமென்பதற்கு வாச்சியார்த்தத்தோடுகூடாத கேவல வஸ்து மாத்திரமென்று பொருள்.

## அவதாரிகை

தூஷணத்தையே கூறுகின்றார். :—

## சுலோகம்

सम्बन्धिरूपं यदि वस्तुलक्ष्य-
मखण्डवाक्यार्थमतिः कुतस्त्या ।
अनन्वितं वस्तु पदार्थलक्ष्यं
न लक्ष्यते कुत्रचिदत्र लोके ॥ २०३ ॥

## பதவுரை

**सम्बन्धिरूपं वस्तु**—வாச்சியார்த்த சம்பந்தித்துவ விசிஷ்டப்பிரம்மம்

**यदि लक्ष्यम्**—மகாவாக்கியத்தின் லக்ஷியமாகுமாயின்

**अखण्डवाक्यार्थमतिः**—அகண்ட வாக்யார்த்த ஞானம்

**कुतस्त्या**—எப்படியுண்டாம்

**अनन्वितं वस्तु**—வாச்சியார்த்தத்தோடு கூடாத வஸ்துவானது

**पदार्थलक्ष्यम्**—பதார்த்தத்தின் லக்ஷியமாகுமாயின்

**अत्र लोके**—இவ்வுலகின்கண்

**कुत्रचित्**—ஓரிடத்தும்

**न लक्ष्यते**—அப்படிப்பட்ட வஸ்து அறியப்படவில்லை.

## விசேஷவுரை

உலகின்கண் கங்கை முதலிய லாக்ஷணிக பதத்தால் கரை முதலியது தனது வாச்சியார்த்தப் பிரவாக சம்பந்தியாகவே லக்ஷிக்கப் படுகின்றது அன்றேல் அதாவது வாச்சியார்த்த சம்பந்தித்தன்மையால் தீராதியின் பிரதீதியை கொள்ளாக்கால் தீராதியின்கண் கங்கை முதலிய

பதத்தால் நியமமாகப் பிரவிருத்தி பொருந்தாமையின் இவ்வாறு ஈண்டும் தத்துவமசி முதலிய வாக்கியத்தாலுண்டாகிய ஞானமானது வாச்சியார்த்த சபிள சம்பந்தித்தன்மையால் பிரம்மத்தை விஷயஞ் செய்யுமாயின் அப்போது அம்மகாவாக்கியத்திற்கு அகண்டார்த்தத்தன்மை எப்படி சித்திக்கும் ?

இரண்டாவது பக்ஷத்திலோ இந்தத்தோஷமின்றும் அங்ஙனமாயினும் வாச்சியார்த்தானன்வித லக்ஷிய வஸ்து சித்திப்பதின்றும் உலகின்கண் அவ்வாறு காணப்படாமையின் அன்றேல் அதாவது வாச்சியார்த் தானன்வித லக்ஷிய வஸ்து பிரதீதியாகுமாயின் கங்கை சத்தத்தால் சமுத்திரதீராதியின் பிரதீதியும் உண்டாதல் வேண்டும் என்பது கருதது.

## *அவதாரிகை*

சித்தாந்தி இரண்டாவது பக்ஷத்தினையங்கீகரித்து சமாதானஞ் செய்கின்றார் :—

## *சுலோகம்*

**पूर्वेक्षणे भवति वाच्यपदार्थभाग-**
**भागित्वसंगतिरिहात्मनि निर्विभागे ।**
**मोहोपदर्शितवपुर्घटते ततोऽस्मिन्**
**शब्दस्य लाक्षणिकवृत्तिरदोषदुष्टा ॥ २०४ ॥**

## *பதவுரை*

**पूर्वेक्षणे**—வாக்கியார்த்தப் பிரதீதியின் பூருவ காலத்தில்

**इह निर्विभागे**—இந்த நிருவிசேஷமான

**आत्मनि**—ஆன்மாவின் கண்

**मोहोपदर्शितवपुः**—அக்ஞானத்தால் தோற்றுவிக்கப்பட்ட சொரூப முடைய

**वाच्यपदार्थभाग भागित्वसंगतिः** } வாச்சியார்த்த சம்பந்தித்தன்மையின் சக்தி ஞானம்

**भवति**—அபேக்ஷிதமாகின்றது

**अतः**—ஆதலால்

**अस्मिन्**—இவ்வான்மாவின் கண்

**शब्दस्य**—தத்துவம் முதலிய சத்தத்தின்

**अदोषदुष्टा**—முற்கூறிய தோஷத்தால் தூஷிக்கப்படாத

**लाक्षणिकवृत्तिः**—லக்ஷணாவிருத்தி ஜன்னிய ஞானமானது

**घटते**—பொருந்துகின்றது

## *விசேஷவுரை*

லக்ஷணைக்கு முன்பே வாச்சியார்த்த சம்பந்தித் தன்மையினால் லக்ஷியத்தின் ஞானம் அபேக்ஷிக்கப்பட்டது அன்றேல் அதாவது லக்ஷணைக்கு முன்பு வாச்சியத்தின் சம்பந்தித் தன்மையால லக்ஷியத்தின் ஞானமில்லையாயின் லக்ஷணையினால் லக்ஷியத்தின் உபஸ்திதி சம்பவியாது ஆதலின். லாக்ஷணிக சப்த ஜன்னிய ஞானத்தின் கண்ணும் லக்ஷியமானது வாச்சிய சம்பந்தித் தன்மையால் அறியப்படுவதின்றாம். பிரமாணமின்மையின். மற்றொரு சொரூபத்தாலேயே சுத்தவஸ்து பிரதீதியாகின்றது. உலகின் கண்ணும் கங்கை முதலிய பதத்தால் கேவல தீராதியின் உபஸ்திதியே உண்டாகின்றது. இவ்வாறு கொள்ளும்போது சமுத்திர தீராதியின் பிரதீதியில் அதிப் பிரசங்கமுமின்றாம். பூர்வ க்ஷணத்தில் உண்டான வாச்சியார்த்த சம்பந்த ஞானத்தினாலேயே நியதமாக தீராதியின் உபஸ்திதி சம்பவித்தலால் சமுத்திர தீராதியின்கண் அது சம்பவியாமையின், சமுத்திர தீராதியானது கங்கா பதத்தின் வாச்சியார்த்த சம்பந்தித் தன்மையால் பூர்வக்ஷணத்தில் உபஸ்திதமன்றாதலின். அதனால் பிரம்மத்தின்கண் லக்ஷணா விருத்தியினால் அகண்டார்த்தப் பிரதீதி பொருத்தமாமென்பது கருத்து. நிர்விசேஷ ஆன்மாவின் கண்ணே வாச்சிய பாகத்தின் அன்விதத் தன்மை யெப்படிக் கூடும்? என்னும் சங்கையை நிராகரித்தற் பொருட்டு—அஞ்ஞானத்தால்—எனப்பட்டது. (204)

## *அவதாரிகை*

கூறிய பொருளையே யுக்தி பூர்வகம் விஸ்தரிக்கின்றார்:—

## *சுலோகம்*

**संबन्धिता भवति लाक्षणिकप्रवृत्तेः**

**सर्वत्र कारणमितीदमसीष्टमेव ।**

संबन्धिताकरणमेव तु लाक्षणिक्या
बुद्धेरनिष्टमिह तद्व्यभिचारदृष्टेः ॥ २०५ ॥

### பதவுரை

**संबन्धिता**–வாச்சியார்த்த சம்பந்தித்தன்மையின் ஞானமானது
**लाक्षणिकप्रवृत्तेः**-லக்ஷணுவிருத்தி ஜன்னிய சாப்தபோதத்தைக் குறித்து
**सर्वत्र**–உலகின் கண்ணும் வேதத்தின் கண்ணும்
**कारणं भवति इति इदम्**–காரணமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது என்னுமிது
**अभीष्टं एव**–எமக்கும் சம்மதமேயாம்
**तु**–ஆனுல்
**लाक्षणिक्या बुद्धेः**–லக்ஷணு விருத்தி ஜன்னியபோதத்தின் கண்
**संबन्धिताकरणमेव**–வாச்சியார்த்த சம்பந்தித்தன்மை யினுகாரத்தன்மையே
**अनिष्टम्**–சம்மதமின்ரும்
எதனுற் சம்மதமின்ரும் என்னுமிடத்துக்கூறுகின்ருர்
**इह**–லக்ஷணுவிருத்தி ஜன்னியபோதத்தின கண்
**तद्व्यभिचारदृष्टेः**–வாச்சியார்த்த சம்பந்தித் தன்மையினுகாரத் தன்மைக்கு வியபிசாரத்தைக் காண்டலின்

### விசேஷவுரை

வாச்சியார்த்த சம்பந்தித் தன்மையினுகாரத் தன்மை யாண்டும் லாக்ஷணிகபத ஜன்னிய ஞானத்தின்கண் இன்மையா லென்பது பொருள். எவ்விடத்து அஃதின்ரும்? எனின் கூறப்பட்டதே யாம். அதாவது கங்கா பதத்தாலுண்டான ஞானத்திற்கு சுத்த தீர விஷயகத் தன்மை யுண்மையின் அந்த ஞானத்தின்கண் கங்கா சம்பந்தித் தன்மை யினுகாரத் தன்மையின்மையின். நியமமாக வாச்சிய விசிஷ்டத்திற்கே லக்ஷியத் தன்மையை யங்கீகரிக்கின் தாத்பரியத்தில் கௌரவப் பிராப்தியாமாதலின் (205)

### அவதாரிகை

வியபிசாரத்தின்கண் வேறு ஸ்தலத்தைகூறுகின்ருர் :—

## சுலோகம்

यत्रैष काक इदमेव तु देवदत्त-
वेश्मेति लाक्षणिकवृत्तिरिहाभ्युपेता ।
काकास्पदत्वमवधीर्य तथाऽपि वेश्म-
मात्राकृतिर्भवति लाक्षणिकी तु बुद्धिः ॥ २०६ ॥

## பதவுரை

**यत्र एष काकः**—எவ்விடத்து காக்கையிருக்கின்றதோ
**इदमेव तु देवदत्तवेश्म**—அவ் இதுவே தேவதத்தனுடைய கிருகமாம்
**इति इह**—என்னுமிவ்வாக்கியத்தின் கண்
**लाक्षणिक वृत्तिः**—லக்ஷணா விருத்திஜன்னிய சாப்தபோதமானது
**अभ्युपेता**—எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டுள்ளது
அதனாற்சித்தித்தது என்னை எனிற் கூறுகின்றார்
**तथाऽपि**—அங்ஙனமாயினும் (அவ்வாக்கியத்தால்)
**काकास्पदत्वं अवधीर्य**—காக்கையின் அதிகரணத்தன்மையைப் பரித்தியாகஞ் செய்து
**वेश्ममात्राकृतिः**—தேவதத்தனுடைய கிருகமாத்திர ஆகாரமாக
**लाक्षणिकी तु बुद्धिः**—லக்ஷணாவிருத்தி ஜன்னிய போதமானது
**भवति**—உண்டாகின்றது

## விசேஷவுரை

தேவதத்தனுடைய கிருகம் யாது? என்று வினவுகின்றவனைக் குறித்து ஒருவன் கூறுகின்றான் காகமுள்ளது தேவதத்தனது கிருகமாம் என. ஈண்டு காக்கையின் அதிகரணத் தன்மை விசிஷ்டம் தேவதத்தனுடைய கிருகமாம் என்பது வாக்கியார்த்தமா அல்லது காக்கையின் ஆதாரத் தன்மையால் உபலக்ஷிதம் தேவதத்தனுடைய கிருகமாம் என்பது வாக்யார்த்தமா? இரண்டாவது பக்ஷத்தில் கூறுகின்றார் லக்ஷணா விருத்தி என. அவ்வாக்கியத்தால் கிருக விசேஷ மாத்திரமே தேவதத்த சம்பந்தித் தன்மையால் பிரதீதியாகின்றது காக்கையின் அதிகரணத் தன்மை வடிவத்தால் பிரதீதியாகின்றதில்லை காக்கை பறந்து சென்ற காலத்தும் தேவதத்த சம்பந்தி கிருக விசேஷத்தின் பிரதீதி காணப் படுதலால். இதனால் முதற்பக்ஷமும் கண்டிக்கப்பட்டது. காக்கையின்

அதிகரணத்துவ விசிஷ்டத்தை தேசத்தினுடைய கிருகமாக அங்கீகரிக்கின் காக்கை நீங்கிய காலத்து கிருகத்தின் ஏகதேசம் (காக்கையின் அதிகரணத் தன்மை) பங்கமாம் என்னும் புத்தியுண்டாதல் வேண்டும். (206)

## அவதாரிகை

விட்ட லக்ஷணையில் லக்ஷியத்தினது ஞானம் வாச்சிய சம்பந்தித் தன்மையாலேயே லாக்ஷணிக பதத்தாலுண்டாகின்றது என்னும் நியமத்தைத் தூஷித்து விட்டுவிடாத லக்ஷணையின்கண் அந்நியமத்தின் அசம்பவத்தைக் கூறுகின்றார் :—

## சுலோகம்

सोऽयमित्यपि पदार्थरूपकं लक्षणं यदुपलक्षणं हि तत् ।
अंशिता यदि पदार्थलक्ष्ययोर्गृह्यते ननु पुनर्विरोधिता ॥

## பதவுரை

**सोऽयमित्यपि**–அவனிவனென்னும் வடிவ அந்த இந்தத்தேச கால விசிஷ்டமாய்

**पदार्थरूपकं**–பதார்த்த சொரூபமாய்

**यत् लक्षणम्**–யாதொரு சுத்ததேகத்தின் லக்ஷணமுண்டோ

**तत् उपलक्षणं हि**–அது உபலக்ஷணமேயாம்

அதனால் சித்தித்தது என்னையெனின் ஆண்டுக்கூறுகின்றார்

**पदार्थलक्ष्ययोः**–வாச்சியார்த்தங்களால் லக்ஷிக்கப்பட்ட வஸ்துக்களில்

**अंशिता**–வாச்சியார்த்தசம்பந்தித்தன்மை

**यदि गृह्यते**-அவனிவனென்னும் பதங்களால் லக்ஷணையால்அறியப்படுமாயின்

**पुनः विरोधिता ननु** மீண்டும் விரோதமே யுண்டாம்

## விசேஷவுரை

எதனால் லக்ஷிக்கப் படுகின்றதோ அது லக்ஷணம். லக்ஷகம் என்பது பொருள். தத்தை (=அதுஎன்னுந் தன்மை) இதந்தை (=இதுவென்னுந் தன்மை) விசிஷ்ட பதார்த்தத் துவயவடிவ சுத்தத்தின் யாதொரு லக்ஷணமுண்டோ அதுவும் உபலக்ஷணமாம். உபலக்ஷணம் தடஸ்த லக்ஷணமேயாம். அதுவும் என்ற உம்மையால் காகமுள்ளது

தேவதத்த கிருகம் என்னும் திருஷ்டாந்தம் சூசிப்பிக்கப் படுகின்றது. இவ்வளவு பேதமாம், காக்கையின் அதிகரணத் தன்மையினின்றும் அந்நியமாகவே கிருகத்தின் சொரூபத்தை காக்கை லக்ஷிப்பிக்கின்றது. அவன் இவனென்னும் இதுவோ தனதந்தர்ப் பூதமான தேவதத்தாதி சொரூபத்தினையே லக்ஷிப்பிக்கின்றது. எப்படி வாச்சியார்த்தங்களான விசிட்டங்களுக்கு அபேதத்தில் விரோதம் முன்பு சொல்லப்பட்டதோ அப்படி வாச்சியார்த்தத்திற்கும் லக்ஷியார்த்தத்திற்கும் விசிட்டத் தன்மை வடிவ சம்பந்தம் லாக்ஷணிக பதத்தால் போதிக்கப் படுமாயின் அப்போது மீண்டும் அந்த விரோதமே யுண்டாகும். லக்ஷிய சொரூபத்தின்கண் தத்தை இதந்தைகளின் வைசிஷ்டியம் நீங்காமையின். என்பது பொருள். ( 207 )

## அவதாரிகை

இந்தப் பிரகாரம் இருபதங்களில் லக்ஷணையினால் மகா வாக்கியத் திற்கும், சமீபத்தில் உச்சரிக்கப்பட்ட சர்வ பதங்களின் லக்ஷணையினால் சத்தியாதி வாக்கியத்திற்கும் அகண்ட பிரம்மத்தின்கண் கூறப்பட்ட விருத்தியை அநுவாதஞ் செய்து லக்ஷணையின்றியும் பரமதத்தின்கண் வாக்கியமானது அகண்டார்த்தத்தைப் போதிப்பதாகும் போது எமது மதத்தில் லக்ஷணையினால் வாக்கியம் அகண்டார்த்தத்தைப் போதிக்கின்றது எனக் கூறவேண்டியது தென்னையுளது? என்னும் ( கைமுதிக நியாயத்தின் ) அபிப்பிராயத்தால் கூறுகின்றார் :—

## சுலோகம்

एवं तावल्लक्षणावृत्तिहेतोरानीतैषाऽखण्डवाक्यार्थबुद्धिः ।
मुक्त्वाऽपीमां लक्षणावृत्तिमेषा वक्तुं शक्येत्युच्यतेऽनन्तरेण ॥

## பதவுரை

एवं तावत्—இந்தப்பிரகாரம் முதலில்
लक्षणावृत्तिहेतोः—லக்ஷணா விருத்தி வடிவஹேதுவினால்
एषा अखण्डवाक्यार्थबुद्धिः—இந்த அகண்டவாக்கியார்த்த ஞானமானது
आनीता—பிரதிபாதிக்கப்பட்டது
इमां लक्षणावृत्तिम्—இனி இந்த லக்ஷணாவிருத்தியை
मुक्त्वा अपि—பரித்தியாகம் செய்தும்

**एषा**-அகண்ட வாக்கியார்த்தஞானம்
**वक्तुं शक्या इति**-கூறுவதற்கு முடியுமென்று
**अनन्तरेण**-இனிமேல் வருங்கிரந்தத்தால்
**उच्यते**-சொல்லப்படுகின்றது.

## விசேஷவுரை

இந்தப்பிரகாரம் என்பது முற்கூறிய உபபத்தியை நினைப்பூட்டுவது. முதலில் என்னும் சப்தமும் இனிக் கூறப்படும் பக்ஷத்தில் நின்றும் இதற்கு (இந்தப் பக்ஷந்திற்கு) பிரதமத் தன்மையைத் தியோதனம் செய்கின்றது. பிரதமத் தன்மை = சிரேஷ்டத் தன்மை. (208)

## அவதாரிகை

அதனையே தெரிசிப்பிக்கின்றார் :—

## சுலோகம்

भिन्नाभिन्नरवौ घटादिवचसा साकं समुच्चारिता-
वन्यूनानधिके घटादिविषये तावत्प्रवृत्तौ तव ।
नोचेद्विश्वसृजोऽपि दुष्परिहरा भेदादिमालाऽऽगता
भेदादेरपि तत्र वाच्यमपरं भेदादिकं स्यादिति ॥ २०९ ॥

## பதவுரை

**घटादिवचसा साकम्**-கடம் முதலிய பதத்தோடுசேர்த்து
**समुच्चारितौ**-உச்சரிக்கப்பட்ட
**भिन्नाभिन्नरवौ**-பின்ன பின்னசப்தங்கள் அதாவது பின்னம் கடம் அபின்னம் கடம் என்பது முதலிய சத்தங்கள்
**अन्यूनानधिके**-குறைவு மிகுதிகளின்றிய
**घटादिविषये**-கேவல கடம் முதலிய விஷயத்தின் கண்
**प्रवृत्तौ**-பிரவிருத்தித்தனவாயுள்ளன என்பது
**तव**-உனக்கு சம்மதமாம்
**नोचेत्**-இப்படி சம்மதமின்றாயின்
**विश्वसृजोऽपि**-பிரம்மாவினாலும்
**दुष्परिहरा**-நிவர்த்திக்க முடியாத
**भेदादिमाला**-பேதாபேத பரம்பரை வடிவ அனவஸ்தை
**आगता**-பிராப்தியாம்

तत्र–பேதமுமபேதமும் சொரூபத்தினும் வேறு என்பவன்மதத்தில்
भेदादेरपि–பேதத்திற்கும் அபேதத்திற்கும்
अपरं भेदादिकम्–வேறு பேதமும் அபேதமும்
वाच्यं स्यात् इति–கூறுதல்வேண்டும் இவ்வாறு அனவஸ்தையாம்

## விசேஷவுரை

பின்னம் கடம் அபின்னம் கடம் என்று கடாதிபதத்தோடு சேர்த்து உச்சரிக்கப்பட்ட பின்னசத்தமும் அபின்னசத்தமும் கடாதி பதத்திற்கு எவ்வளவு விஷயமோ அவ்வளவிலேயே உனது மதத்தில் பிர விருத்தித்துள்ளன கடாதி மாத்திரத்தினையே விஷயஞ் செய்கின்றன என்பது பொருள் பிறமதத்தில் பேதம் வஸ்துவின் சொரூபமேயாம் என்று கூறுதல்வேண்டும் இவ்வாருகவே பின்ன சத்தத்திற்கும் கடசத் தத்திற்கும் பொருள் ஒன்றேயாதலால் லக்ஷணையின்றியே பின்ன சத்த கடசத்தங்கள் ஓர் பிராதிபதிகமாத்திர அருத்தத்தினைப் பிரதிபாதிப் பனவாம் ஆதலின் பின்னம் கடம் என்னும் வாக்கியம் அகண்டார்த்த போதகமாம், இவ்வாறு அபின்னம் கடம் என்னும் வாக்கியமும் அகண் டார்த்த போதகமாம் அற்றேல் பின்னம் என்னும் விசேஷணவாசக பதத்தால் கடாதியின் விசேஷணத்தன்மையால் பிரதீதியாகின்ற பேத மானது கடாதியின் சொரூபமாக எப்படியாம் எனின் வாஸ்தவமாக உனது மதத்தில் இந்த அநுபபத்தியானது இருக்கின்றதுதான், அப்படி யாயினும் சொரூபத்தினும் வேருக பேதமானது உனது மதத்தில் எவ் வாற்ருனும் சித்திக்கிறதில்லை என்னுமபிப்பிராயத்தால் இவ்வாறு கூறப்பட்டது.

அற்றேல் பேதமாவது அபேதமாவது சொரூபத்தினும் வேருகவே யிருக்குக அதாவது பேத விசிஷ்ட அபின்ன கடாதியே வாக்கியத்தின் பொருளாம். ஆதலின் அகண்டார்த்தத்தன்மையெவ்வாறு சித்திக்கும் என்னும் சங்கைக்குக்கூறுகின்ருர்:– சம்மதமின்ருயினென சம்மதமின் ருயின் என்பதற்கு வஸ்துவின் சொரூபமாகப்பேதாதியாகின்றதில்லை. மற்ரே அதனினும் வேறேயாம் எனின் என்பது பொருள் அவன் மதத்தில் பேதாபேத பரம்பரை எவ்வாறுண்டாம்? என்னும் சங்கைக்குக் கூறுகின்ருர்:- பேதத்திற்கும் என. பேதாதி கடசொரூபத் தினும் வேறும் என்பவன் மதத்தில் பேதத்திற்கும தர்மிக்கும் உளதாயு

பேதத்தில் அந்நிய பேதமும் அபேதத்தில் தனது அந்நிய அபேதமும் ஆம் இவ்வாறு அதனதன் கண்ணுமாகும். ஆதலின் பேதாதி பரம்பரை யின் பிராப்தியாம். பேதாதியின் பேதாதி வஸ்துவின் சொரூபமேயாம் ஆதலின் அநவஸ்தை யிரும் என்று சொல்லற்க. அப்படியானுல் முதற் பேதாதியே வஸ்துவின் சொரூபம் ஆருக. வேறு பேதாதியைக் கற்பித்தல் எற்றிற்கு ? கடம் பின்னம் என்பதாதி விசிஷ்டப்பிரதீதியின் வலிமையால் கடாதியினும் வேருகப்பேதாதி சித்தித்த போது பின்னர் கல்பிக்கப்படுகின்ற சொரூப பேதாதிக்கு முன்னர் நிச்சிதமான சொரூப அதிரிக்த பேதாதியைப்பாதிக்குந் தன்மையைக் கற்பித்தல் பொருத்த மன்ரும், என்று சொல்லற்க பேதாதியின்கண் விசேஷணத்தன்மை முதலிய பிரதீதியானது கடாதி சொரூபத்தில் நின்றும் பேதாதியின் பேதக்கிரஹணத்தை யபேக்ஷிக்கின்றது. ஆதலின் முன்னரே கடாதியின் சொரூப பேதாதி நிச்சயிக்கப்பட்டமையின் அதனினும் (சொரூபபேதத்தினும்) விலக்ஷண பேதாதியைக் கற்பித்தல் பொருந்தாமையின் விசேஷண விசேஷியங்களின் பேதக்ஞானமின்றி பரஸ்பரம் விரோதமான விசேஷண விசேஷியத்தன்மைகளின் பிரதீதி உண்டாகின்றதில்லை. உண்டாகுமாயின், பிரதீதிக்கு அந்நியதா சித்தத்தன்மையினுல் அதிரிக்த பேதத்தைச் சாதிக்குந்தன்மை சித்தியாது என்பது கருத்து. (209)

## *அவதாரிகை*

இவ்வாருயின், பின்ன-அபின்ன-கட சப்தங்களுக்குப்பரியாயத் தன்மை பிராப்தியாம் எனின் உனது மதத்தில் பேதாதியின் கண் பின்னுதி சப்தம் பிரவிர்த்திக்கின்றதில்லையா ? பிரவிர்த்திக்கின்றது எனின் ஆண்டு யாதொரு பரிகாரமுண்டோ அதுவே வேறிடத்தும் உனது மதத்தில் உளதாகுக. இந்தப் பிரகாரம் சமாதானமிருந்தபோதினும் வேறு சமாதானத்தைக் கூறுகின்ருர் :-

## *சுலோகம்*

**परस्पराभावमुपाददानो निमित्तमर्थेषु हि भिन्नशब्दः ।**
**प्रवर्ततेऽन्ये तु घटादिशब्दा निजं निजं वाच्यमुपाददानाः ॥**

## *பதவுரை*

**भिन्नशब्दः**—பின்னமென்னும் சத்தமானது

**परस्पराभावम् निमित्तम्** — அன்னியோன்னியாபாவத்தைப் பிர விருத்தி நிமித்தமாக

**उपाददानः**—கிரகித்துக்கொண்டு

**अर्थेषु**—கடாதி விஷயங்களில்

**प्रवर्तते**—பிரவிருத்திக்கின்றது

**अन्ये घटादिशब्दाः तु**—இதரகடாதி சத்தங்களோ

**निजं निजं वाच्यम्**—தத்தம் வாச்சியமாகிய கடத்துவாதியை

**उपाददानाः**—கிரகிக்கின்றவைகளாய்

**प्रवर्तन्ते**—கடாதி விஷயங்களில் பிரவிருத்திக்கின்றன.

## *விசேஷவுரை*

அற்றேல் சொரூப பேதவாதியின் மதத்தில் இப்பரஸ்பராபாவ மென்பது யாது? அன்னியோன்னியாபாவமெனின் அதிற்பிரமாணம் யாது? கடத்தில் நின்றும் படம் பின்னமாம். என்பது முதலிய ஞானம் பிரமாணமாம் எனின் அந்த ஞானமானது சொரூபபேதத்தை விஷயஞ் செய்கின்றமையின் அன்னியோன்னியாபாவத்தின் கண் அந்நியதா சித்தமாம். இதனால் (இனிக் கூறப்படும் ஏதுவினால்) சொரூப பேதவாதியின் மதத்தின் கணணும் அன்னியோன்னியாபாவம் இருக்கின்றதேயாம். ஆனால் முற்கூறிய தோஷத்தால் அது (அந்த அன்னியோன்னியாபாவமானது) பேதவடிவமாகின்றதில்லை. (மற்றோ அநுயோகி முதலிய வடிவமாம) ஆதலின் பேதத்திற்கு அனவஸ்தை யின்றாம். என்னும் இம்மதமுங் கண்டிக்கப்பட்டது. ஸ்வரூப பேதத்தினும் வேறாக அன்னியோன்னியாபாவம் உளது என்பதன்கண் பிரமாணம் இன்மையைக் கூறினமையின். எனின், நீ கூறியது வாஸ்தவந்தான் ஆனால் சொரூப பேதவாதிகள் **भावान्तरं अभावो हि कयाचित्तु व्यपेक्षया** (ஒரு வஸ்துவே ஒன்றை அபேக்ஷித்து அபாவ வடிவமாகின்றது). என்று கூறுகின்றவர்களாய் இவ்வாறு கூறு கின்றனர் கடம் படமாகின்றதில்லையென படாதியின் ஸாபேக்ஷத் தன்மையால் பிரதீதியாகின்ற கடாதியின் சொரூபமானது படாதி களினின்றும் பேதவடிவமாம். இவ்வாறே படாதி சொரூபமும் கடாதி களினும் பேதவடிவமாம். என. இந்தப் பிரகாரம் பரஸ்பரத்தின் அபாவ மானது பரஸ்பரத்தை அபேக்ஷித்த வடிவமாம். அதனைப் பிரவிருத்தி நிமித்தமாகக் கிரஹித்துக்கொண்டு கடபடாதி வஸ்துக்களில் பின்ன சப்தம் பிரவிருத்திக்கின்றது.

கடாதி சப்தங்கள் தத்தம் அந்நியோன்னிய நிரபேக்ஷ கடத்வாதி சொரூபவடிவ வாச்சியத்தைப் போதிக்கின்றனவாய் கடாதி விஷயங்களில் பிரவிருத்திக்கின்றன. சொரூப பேதவாதியின் பக்ஷத்தில் படத்தில் நின்றும் கடம் பின்னமாம் என்னும் பின்ன சப்தமானது படாதியை யபேக்ஷித்துக் கடாதியின் சொரூபத்தைப் போதிக்கின்றது. மற்றும் கடத்தின்கண் படாதியின் சம்பந்தத்தையும் பிரதிபாதிக்கின்றது. கடாதி சப்தமோ கடத்துவாதியினையே நிமித்தமாகக்கொண்டு கடாதியின் கண் பிரவிர்த்திக்கின்றது. ஆதலின் கடசப்த பின்ன சப்தங்களுக்கு பர்யாயத்தன்மையின்றும். விசிஷ்டார்த்தகமும் வாக்கியமாவதின்றும். என்பது கருத்து. (210)

## அவதாரிகை

இந்தப் பிரகாரத்தை அபின்ன சப்தத்திலும் கூறுகின்றுர் :—

## சுலோகம்

परस्पराभावविहीनभावादभिन्नशब्दस्य घटे प्रवृत्तिः ।
घटस्वरूपैकनिबन्धनात्तु घटादिशब्दस्य घटे प्रवृत्तिः ॥

## பதவுரை

**परस्पराभावविहीनभावाद्** — (வஸ்து சொரூபத்தில் பரியவசானமாகின்ற) அன்னியோன்னியாபாவத்தின் சூனியத்தன்மை வடிவ நிமித்தத்தால்

**अभिन्नशब्दस्य**—அபின்ன சத்தத்திற்கு

**घटे प्रवृत्तिः**—கடத்தில் பிரவிருத்தியாம்

**घटादिशब्दस्य तु**—கடாதி சத்தத்திற்கோ

**घटस्वरूपैकनिबन्धनात्** -இதர நிரபேக்ஷ கடாதிசொரூப மாத்திர நிமித்தத்தால்

**घटे प्रवृत्तिः**—கடாதியின்கண் பிரவிருத்தியாம்.

## விசேஷவுரை

பேத சத்தத்தின் பிரவிருத்தி நிமித்தம் இதர ஸாபேக்ஷத் தன்மையாம் அதனபாவம் பரஸ்பராபாவத்தின் சூனியத்தன்மையாம் அதனை (இதர ஸாபேக்ஷத்தன்மையின்பாவத்தினை) யபேக்ஷித்த வஸ்து

சொரூபம் யாதொன்றுண்டோ அதனை நிமித்தமாகக்கொண்டு அபின்ன சப்தம் கடத்தில் பிரவிர்த்திக்கின்றது என்பது பொருள். அதாவது அஃது தடஸ்தமாக இருந்துகொண்டே அபின்ன பதத்தின் பிரவிருத்தி நிமித்தமாம். ஆதலின், கடாதி சொரூபத்தை நிமித்தமாகவுடைய கடாதி பதத்தோடு பர்யாயத்தன்மையின்றும், என்பது கருத்து. (211)

*அவதாரிகை*

இப்போது சித்தாந்தி ஏகபத லக்ஷணையினாலும் அகண்டார்த்தத்தைக் கூறுகின்றார் :-

*சுலோகம்*

अबोधनाशश्चितिरित्यमुष्मिन्पदद्वये त्वेकरसात्मनिष्ठे ।
अगौणमेकं पदमन्यदत्र द्वितीयवृत्तीतरसंगमाय ॥ २१२ ॥

*பதவுரை*

एकरसात्मनिष्ठे-அகண்டைகரஸ ஆன்மாவைப்போதிப்பதான
अबोधनाशः चितिः इति-அஞ்ஞான நாசம் சேதனம் என்னும்
अमुष्मिन् पदद्वये-இவ்விருபதங்களில்
एकं पदम्-ஓர் பதமானது
अगौणम्-முக்கியார்த்தத்தினையுடையது
अन्यत्-மற்றோர் பதமானது
अत्र-இவ்வாக்கியத்தின் கண்
इतरसंगमाय-பதாந்தா அந்நுவயத்தின் பொருட்டு
द्वितीय वृत्ति-இலக்ஷணை விருத்தியையுடையது.

*விசேஷவுரை*

சேதனம்=ஞானம், பதாந்தர அந்நுவயத்தின் பொருட்டு என்பது பதாந்தர அர்த்தத்தின் அந்நுவய யோக்கியதையின் பொருட்டு என்று பொருள். (212)

*அவதாரிகை*

அற்றேல், அஞ்ஞாநநாசம் சேதனம் என்னும் இவ்விரு பதங்களில் எப்பதம் முக்கிய விருத்தியினையுடையது. எப்பதம் லக்ஷணை விருத்தியினையுடையது என்னுமிடத்துக் கூறுகின்றார்:—

கடாதி சப்தங்கள் தத்தம் அந்நியோன்னிய நிரபேக்ஷ கடத்வாதி சொரூபவடிவ வாச்சியத்தைப் போதிக்கின்றனவாய் கடாதி விஷயங்களில் பிரவிருத்திக்கின்றன. சொரூப பேதவாதியின் பக்ஷத்தில் படத்தில் நின்றும் கடம் பின்னமாம் என்னும் பின்ன சப்தமானது படாதியை யபேக்ஷித்துக் கடாதியின் சொரூபத்தைப் போதிக்கின்றது. மற்றும் கடத்தின்கண் படாதியின் சம்பந்தத்தையும் பிரதிபாதிக்கின்றது. கடாதி சப்தமோ கடத்துவாதியினையே நிமித்தமாகக்கொண்டு கடாதியின் கண் பிரவிர்த்திக்கின்றது. ஆதலின் கடசப்த பின்ன சப்தங்களுக்கு பர்யாயத்தன்மையின்றும். விசிஷ்டார்த்தகமும் வாக்கியமாவதின்றும். என்பது கருத்து. (210)

### அவதாரிகை

இந்துப் பிரகாரத்தை அபின்ன சப்தத்திலும் கூறுகின்றார் :—

### சுலோகம்

**परस्पराभावविहीनभावादभिन्नशब्दस्य घटे प्रवृत्तिः ।**
**घटस्वरूपैकनिबन्धनात्तु घटादिशब्दस्य घटे प्रवृत्तिः ॥**

### பதவுரை

**परस्पराभावविहीनभावाद्** — (வஸ்து சொரூபத்தில் பரியவசானமாகின்ற) அன்னியோன்னியாபாவத்தின் சூனியத்தன்மை வடிவ நிமித்தத்தால்

**अभिन्नशब्दस्य**—அபின்ன சத்தத்திற்கு

**घटे प्रवृत्तिः**—கடத்தில் பிரவிருத்தியாம்

**घटादिशब्दस्य तु**—கடாதி சத்தத்திற்கோ

**घटस्वरूपैकनिबन्धनात्**—இதர நிரபேக்ஷ கடாதிசொரூப மாத்திர நிமித்தத்தால்

**घटे प्रवृत्तिः**—கடாதியின்கண் பிரவிருத்தியாம்.

### விசேஷவுரை

பேத சத்தத்தின் பிரவிருத்தி நிமித்தம் இதர ஸாபேக்ஷத் தன்மையாம் அதனபாவம் பரஸ்பராபாவத்தின் சூனியத்தன்மையாம் அதனை (இதர ஸாபேக்ஷத்தன்மையின் பாவத்தினை) யபேக்ஷித்த வஸ்து

சொரூபம் யாதொன்றுண்டோ அதனை நிமித்தமாகக்கொண்டு அபின்ன சப்தம் கடத்தில் பிரவிர்த்திக்கின்றது என்பது பொருள். அதாவது அஃது தடஸ்தமாக இருந்துகொண்டே அபின்ன பதத்தின் பிரவிருத்தி நிமித்தமாம். ஆதலின், கடாதி சொரூபத்தை நிமித்தமாகவுடைய கடாதி பதத்தோடு பர்யாயத்தன்மையின்றும், என்பது கருத்து. (211)

## அவதாரிகை

இப்போது சித்தாந்தி ஏகபத லக்ஷணையினாலும் அகண்டார்த்தத்தைக் கூறுகின்றார் :-

## சுலோகம்

**अबोधनाशश्चितिरित्यमुष्मिन्पदद्वये त्वेकरसात्मनिष्ठे ।**
**अगौणमेकं पदमन्यदत्र द्वितीयवृत्तीतरसंगमाय ॥ २१२ ॥**

## பதவுரை

**एकरसात्मनिष्ठे**–அகண்டைகரஸ ஆன்மாவைப்போதிப்பதான
**अबोधनाशः चितिः इति**–அஞ்ஞானநாசம் சேதனம் என்னும்
**अमुष्मिन् पदद्वये**–இவ்விருபதங்களில்
**एकं पदम्**-ஓர் பதமானது
**अगौणम्**–முக்கியார்த்தத்தினையுடையது
**अन्यत्**–மற்றோர் பதமானது
**अत्र**–இவ்வாக்கியத்தின் கண்
**इतरसंगमाय**–பதாந்தர அந்நுவயத்தின் பொருட்டு
**द्वितीय वृत्ति**-இலக்ஷணா விருத்தியையுடையது.

## விசேஷவுரை

சேதனம்=ஞானம், பதாந்தர அந்நுவயத்தின் பொருட்டு என்பது பதாந்தர அர்த்தத்தின் அந்நுவய யோக்கியதையின் பொருட்டு என்று பொருள். (212)

## அவதாரிகை

அற்றேல், அஞ்ஞானநாசம் சேதனம் என்னும் இவ்விரு பதங்களில் எப்பதம் முக்கிய விருத்தியினையுடையது. எப்பதம் லக்ஷணா விருத்தியினையுடையது என்னுமிடத்துக் கூறுகின்றார்:—

### சுலோகம்

अज्ञाननाशपदमत्र हि मुख्यमिष्टं
विद्यानिबन्धननिवृत्तिसमर्पकत्वात् ।
तेनान्वयाय चितिवाचि पदं स्ववाच्ये
सौत्रं समुज्झति मतेः परिणामरूपम् ॥ २१३ ॥

### பதவுரை

**अत्र**–அஞ்ஞான நாசம் ஞானம் என்னுமிவ் வாக்கியத்தின் கண்

**अज्ञाननाशपदं हि**–அஞ்ஞான நாச பதமே

**मुख्यं इष्टम्**–முக்கிய விருத்தியினையுடையதாக அங்கீகரிக்கப் பட்டுள்ளது.

அதுவே முக்கியார்த்தமாம் என்பது எதனாலெனின் ஆண்டுக் கூறுகின்றார்:—

**विद्या निबन्धननिवृत्ति समर्पकत्वात्** — பிரம்மஞ்ஞானமாகிற நிமித்தத்தினால் உண்டாவதான அவித்தையின் நிவர்த்தி வடிவ அதிஷ்டான பிரம்ம ஸ்வரூபத்தை போதிப்பதாயிருப்பதால்

அவித்தையை நிவர்த்தி செய்யும் சாக்ஷாத்கார வடிவ விருத்தி, ஞான மெனப்படும், அந்த ஞானத்தினாலுபகிதமான யாதொரு அவித்தையின் நிவிருத்தியுண்டோ அதனைப் போதிப்பதாயிருத்தலின் என்பது பொருள்.

**चितिवाचिपदम्**–சேதன வாசக ஞானபதமானது

**तेन अन्वयाय**–அஞ்ஞான நாச பதத்தோடுசாமானாதிகரண்ய ரூப அந்நுவயத்தின் பொருட்டு

**स्ववाच्ये**–தனது வாச்சியார்த்தத்தின் கண்ணுள்ள

**मतेः परिणामरूपम्**–புத்தியின் பரிணாம வடிவ

**सौत्रम्**–சுவசம்பந்தி விருத்தியினை

**समुज्झति**–பரித்தியாகம் செய்கின்றது. ஞானபதம் லக்ஷணா விருத்தியையுடைய தென்பது பொருள்,

## *விசேஷவுரை*

அவித்தியா நிவிருத்தியானது இனி கூறப்படும் நியாயத்தால் அவித்தையின் அதிஷ்டான ஆன்மாவேயாம் அவித்தியா நிவிருத்தி பதமும் அந்த (அதிஷ்டான பிரம்மவடிவ) நிவிருத்தியினையே பிரதிபாதிக்கின்றது. எவ்விதமும் பரிபூர்ண ஆன்மாவின் கண் கூறப்பட்டதும் இனிக் கூறப்படுவதுமான நியாயத்தால் எப்பதத்திற்கும் பிரவிருத்தி சம்பவிக்கின்றதில்லை. அப்படியாயினும் வித்தையினுலுபகிதமான ஆன்ம சொரூப வடிவ அவித்தையின் நிவிருத்தியின் கண் அஞ்ஞான நாச பதம் பிரவிருத்திக்கின்றது பசுத்தன்மையாலுபகிதமான பதார்த்தத்தின் கண் திருதிஹரி சத்தம் போன்று, (எப்படி தோல்துருத்தியை எடுத்துச் செல்கின்ற பிராணியின் கண் திருதிஹரி சத்தம் பிரயோகிக்கப்படுகின்றதோ) ஆனுல் ஆண்டு பசுத்தன்மை தடஸ்தமேயாம் அப்படி ஈண்டு வித்தையும் உபாதியாதலின் தடஸ்தமேயாம். ஆதலால் கேவல ஆன்மாவைப் போதிப்பதாயிருத்தலால் அஞ்ஞான நாசபதம் முக்கியமேயாம்.

அற்றேல், அவித்தையின் நிவர்த்தி யென்பது ஓர் பதமன்ரும். நிவர்த்தி பதமோ கடாதி நிவர்த்தியின் சாதாரண ரூபத்தால் நிவர்த்தியைப் பிரதிபாதிக்கின்றது. ஆதலின் நிவர்த்திபதம் கேவலம் ஆன்மாவில் மாத்திரம் நிஷ்டையையுடையது எனல் பொருந்தாது. எனின் அற்றன்று. நிவர்த்தியின் கண் பாவ வடிவமாகவாவது அபாவ வடிவமாகவாவது சாதாரண தர்மம் சம்பவியாமையால் அவ்வவ்வதிஷ்டான வடிவமே நிவர்த்தி பதத்தால் பிரதிபாதிக்கத்தக்கதாயிருத்தலின் அவித்தையின் நிவர்த்திக்கும் ஆன்மாவே வடிவமாம் ஆதலின் கூறிய தோஷமின்ரும்.

ஆதலால் அவித்தையின் நிவர்த்தி வடிவ அதிஷ்டான பிரம்மத்தோடு சாமானுதிகரண்ய ரூப அந்வயத்தின் பொருட்டு சேதன மென்னும் பதமானது தனது வாச்சியார்த்த அந்தக்கரண விருத்தி விசிஷ்ட சேதனத்தின் கண் அந்தக்கரணத்தின் பரிணுமவடிவ விருத்தியம் சத்தைத் தியாகம் செய்கின்றது. இதுவும் (இந்த விருத்தியம்சத்தின் தியாகமும்) சேதன வடிவ இதரபாகத்தின் கிரஹணத்திற்கு உபலக்ஷணமாம். இந்தப்பிரகாரம் முக்கிய லாக்ஷணிக பதங்களால் அகண்ட வஸ்துவின் சித்தியாமென்பது கருத்து. ஈண்டு தனது சம்பந்தியின்

விருத்தியினைப் பரித்தியாகஞ் செய்கின்றது என்பதனுல் அர்த்தத்தால் சித்தித்ததின் அநுவாதமாம் என்று உணர்க. (213)

## அவதாரிகை

அற்றேல், விதி பதத்திற்கு ஆன்மாவின் கண்ணே லக்ஷணையாம். அவித்தையின் நிவர்த்தி வடிவ அபாவ பதத்திற்கு ஆன்மாவின் கண் சக்தியாம் என்பது மிகவும் ஆச்சரியமாயிருக்கின்றது. அன்றியும் அவித்தையின் நிவர்த்தி ஆன்மாவாக எப்படியாகும்? கடநிவர்த்தி யான்து பூதலவடிவம் ஆகின்றதில்லையே என்ருசங்கித்து சேதனபதத்திற்கு சத்தியம் முதலிய விதிபதத்தோடு சாதாரணத்தன்மையிருத்தலால் ஈண்டுக் கிஞ்சித்தும் ஆச்சரியமின்ரும் என்னும் கருத்தாற் கூறுகின்ருர்.

## சுலோகம்

**विधिपदानि हि भागसमर्पणादपरभागनिराकरणादपि ।**
**अविषयात्ममतिं जनयन्ति नो न तु मृषार्थनिवृत्तिगिरस्तथा ॥ २१४ ॥**

## பதவுரை

**विधिपदानि**–பாவ வடிவ அர்த்த வாசக ‘சத்தியம்’ முதலிய விதிபதங்கள்

**अपरभागनिराकरणादपि** – தமது வாச்சியத்தின் கண்ணுள்ள அதாத்விக பாகத்தைப் பரித்தியாகஞ் செய்து

**भागसमर्पणात्**-வாஸ்தவிக பாகத்தைப் போதித்தலால்

**अविषय आत्ममतिम्** – அவாச்சிய ஆத்ம புத்தியை (அதாவது பிரம்மாகார விருத்தியை)

**नः**–எமது மதத்தில்

**जनयन्ति**–உண்டுபண்ணுகின்றன

அவித்தையின் நிவர்த்தி ஆன்மாவாக எப்படியாகுமென்னும் இரண்டாவது ஆசங்கையைப் பரிகரிக்கின்றவராய்க் கூறுகின்ருர்.

**मृषार्थनिवृत्तिगिरः तु**–மித்யா வடிவ அவித்தையின் நிவர்த்தி வாசகபதங்களோ

**न तथा**— அவ்வாறின்றும். அதாவது பாக லக்ஷணையால் அதாத்விக அம்சத்தின் பரித்தியாக வாயிலாக நிர்விஷய ஆன்மாவின் கண் பிரவிருத்திக்கின்றதில்லை.

## *விசேஷவுரை*

பொய்யாயுள்ள அவித்தை முதலியவற்றின் நிவர்த்தியைப் பிரதிபாதிக்கும் வசனங்களோ விதிபதங்கள் போன்று ஓர் பாகத்தைத் தியாகஞ் செய்தலும் மற்றோர் பாகத்தை சமர்ப்பணஞ்செய்தலுமாகிய வாயிலால் அவாச்சியப் பிரமாகார விருத்தியை யுண்டுபண்ணுகின்றதில்லை யென்பது பொருள். மித்யாவடிவ அவித்தை முதலியவற்றின் நிவர்த்தி யென்பதற்கு அபிப்பிராயமிதுவாம்:— எதன் கண் எது அத்தியஸ்தமோ அது அதனினும் பின்னமாகாமையின் அவ்வதிஷ்டானத்தின் கண் அத்தியஸ்தத்தின் நிவர்த்தி வடிவ அத்தியந்தாபாவம் அதிஷ்டானமேயாம். சுத்தியின் கண் கற்பிக்கப்பட்ட ரஜதாதியின் நிவர்த்தி சுத்தி வடிவமாவது போன்று. பூதலாதியின் கண் கடாதிக்கு அத்தியஸ்தத்தன்மையின்மையால் பூதலாதியினுங் கடாதி வேறும் ஆதலின் கடாதியின் நிவர்த்தி பூதலாதியினும் வேறேயாம். அவித்தையோ ஆன்மாவின் கண் அத்யஸ்தமேயாம். ஆதலின் அதன் நிவர்த்தி ஆன்மவடிவமேயாம். ஆதலால் ஈண்டு கிஞ்சித்தும் அலௌகிக கற்பனையின்றும். அதாவது லௌகிக திருஷ்டாந்தத்தை யநுசரித்தே பிரகிருதத்தில் சித்தாந்தம் செய்யப்பட்டுள்ளது. (214)

## *அவதாரிகை*

முன்பு பின்னம் கடம் அபின்னம் கடம் என்பது முதலிய உதாரணத்தால் முக்கிய விருத்தியினால் அகண்டார்த்தத்தன்மையின் கண் பிரதிவாதியின் சம்மதி சொல்லப்பட்டது. ஆண்டு தர்ம்பேதவாதிக்குச் சம்மத மின்மையைக் கருதி அவனுக்குச் சம்மதமான உதாரணத்தால் அகண்டார்த்தத்தைக் கூறுகின்றார்:—

## *சுலோகம்*

**भेदो भिन्नश्चातिरेकोऽतिरिक्तो-**
**ऽभेदोऽभिन्नः संविदुः स्वप्रकाशाः ।**

इत्येतस्मिन्विद्यते नार्थभेदो
वेदान्तानामप्यखण्डस्तथाऽर्थः ॥ २१५ ॥

## பதவுரை

**भेदः भिन्नः**–பேதம் பின்னமாம்

**अतिरेकः अतिरिक्तः**–அதிரேகம் அதிரிக்தமாம்

**अभेदः अभिन्नः**–அபேதம் அபின்னமாம்

**संविदः स्वप्रकाशाः**–ஞானங்கள் சொப்பிரகாசங்களாம்

**इति एतस्मिन्**–என்னும் இப்படிப்பட்ட இவ்வாக்கியங்களில்

**अर्थभेदः न विद्यते** – பேதம், பின்னம் என்பது முதலிய பதங்களுக்கு பொருட்பேதமின்றும் மற்றோ அகண்டார்த்தமேயாம்.

**तथा**–அப்படியே

**वेदान्तानामपि**–வேதாந்த வாக்கியங்களுக்கும்

**अर्थः**–அகண்டார்த்தமாம்.

## விசேஷவுரை

ஏக தேசியைக் குறித்துக் கூறுகின்றார்:— அதிரேகம் அதிரிக்தமென ஜீவனுக்கும் பிரம்மத்திற்கும் பேதாபேதத்தைச் சம்பாதிப்பதான ஓர் தர்ம விசேஷத்தினை அதிரேக மென்பர். பிராபாகரரைக் குறித்துக் கூறுகின்றார்:— ஞானங்கள் சொப்பிரகாசங்களாமென. எவர்கள் மதத்தில் பேதமானது கடாதியில் நின்றும் பின்னமாகின்றதோ அவர்கள் மதத்திலும் அனவஸ்தை தோஷத்தின் பயத்தால் பேதத்திற்கு பேதத்தில் நின்றும் பேதத்தை யங்கீகரியாமையின் பேதம் பின்னவடிவமேயாம் ஆதலின் முக்கியார்த்தங்களான பேதம், பின்னம் என்பது முதலிய பதங்களுக்கும் ஏகார்த்தத்தன்மையுளது. இந்தப்பிரகாரம் அதிரேகம் அதிரிக்தம் என்பது முதலிய உதாரணத்திலும் ஏகார்த்தத் தன்மையை யறிக. அப்படியே சொப்பிரகாசத் தன்மையும் ஞான வடிவமேயாம். ஞானத்திற்கு சொப்பிரகாசத் தன்மையினும் பேதத்தை யங்கீகரிக்கின் அதனோடாவது அந்நியத்தோடாவது (ஞானத்தோடாவது வேறு பதார்த்தத்தோடாவது) சம்பந்தஞ் சம்பவியாமையின் சொப்பிரகாசத்

தன்மைக்கு அசித்திப் பிராப்தியாம். பிரமாணாந்தர கிராஹியத் தன்மையை யுடன்படினும் சம்வித்திற்கும் (ஞானத்திற்கும்) பிரமாணாந்தர கிராஹியத்தன்மை பிராப்தியாதலால் சொப்பிரகாசத் தன்மை பொருந்தாமற்போம் என்று அபிப்பிராயப்பட்டு தார்ஷ்டாந் தத்தைக் கூறுகின்றார்:— வேதாந்தமெனா. (215)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் நியாய பலத்தினாலும் லோகவாதியின் பிரசித்தி யினாலும் அவன் இவன் என்பது முதலிய திருஷ்டாந்தத்தினாலும் வேதாந்த வாக்கியங்களுக்கு அகண்ட வஸ்துவின்கண் சமன்வயம் தெரிசிப்பிக்கப்பட்டது. அதனை அநுவாதஞ் செய்கின்றவராய் சர்வ சாஸ்திரக்காரரும் எவரை எதார்த்தவாதியென அங்கீகரித்தனரோ அப்படிப்பட்ட பாணினி மஹரிஷியின் வசனத்தினாலும் அகண்டார்த்தத் தன்மை சித்தித்தலின் வேதாந்தங்களில் அவ்வகண்டார்த்தத்தன்மை அவிருத்தமாம் என்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்றார்:—

## சுலோகம்

एवं तावदखण्डवस्तुविषयः शब्दान्वयो दर्शितो
लोके दृष्टनयेन पाणिनिवचोऽप्यस्यैव संसूचकम् ।
येनायं स्मरति प्रकृत्यभिहिते वृक्षादिके केवले
तन्मात्रे प्रथमेतिसूत्रवचसैवाऽऽद्यां विभक्तिं मुनिः ॥

## பதவுரை

**एवं**—இந்தப்பிரகாரம்
**लोके दृष्टनयेन**—உலகின் கண் காணப்பட்டநியாயத்தால்
**अखण्डवस्तुविषयः**—அகண்ட வஸ்துவை விஷயஞ் செய்வதாக
**शब्द अन्वयः**—வேதாந்தங்களுக்கு சமன்வயம்
**दर्शितः**—தரிசிப்பிக்கப்பட்டது.
**पाणिनिवचोऽपि**—பாணினிமஹரிஷியின் வசனமும்
**अस्यैव**—இவ்வகண்டார்த்தத்தினையே
**संसूचकं**—போதிக்கின்றது.

எந்த வசனத்தால் பாணினி மஹரிஷியினுல் அகண்ட வஸ்துவின் கண் சப்தத்தின் சமன்வயம் சூசிப்பிக்கப்பட்டதோ அந்த சூத்திரத்தின் ஏகதேச வடிவ வசனத்தைச் சுருக்கி அதன் அர்த்தத்தைச் சொல்லுதல் வாயிலாக உதாகரிக்கின்ருர் :—

**अयं मुनिः**—இந்த பாணினி மஹரிஷியானவர்
**तन्मात्रे प्रथमा इति**—" பிராதிபதிக அர்த்த மாத்திரத்தில் முதல் வேற்றுமை வருக " என்னும்
**येन सूत्रवचसा एव**—இந்த சூத்திர வசனத்தினுலேயே
**प्रकृति अभिहिते**—பகுதியாற் கூறப்பட்ட
**केवले वृक्षादिके**—கேவல விருக்ஷாதியின் கண்
**आद्यां विभक्ति**—முதல் வேற்றுமையை
**स्मरति**—விதிக்கின்ருர்.

## விசேஷவுரை

இந்த முனியானவர் எந்த சூத்திர வசனத்தினுலே விதிக்கின்ருரோ அந்தப் பாணினி வசனமே அகண்டார்த்தத்தைப் போதிக்கின்றது எனச் சம்பந்தமாம். பகுதியாற் கூறப்பட்டது என்பதற்கு விருக்ஷம் முதலிய பதங்களின் பகுதியம்சத்தாற் கூறப்பட்டது என்று பொருள். இதனுல் பாணினி சூத்திரத்தின் கண்ணுள்ள பிராதிபதிகார்தத என்னும் பதம் வியாக்கியானிக்கப்பட்டது. கேவல என்னும் பதத்தால் சூத்திரத்தின் கண்ணுள்ள மாத்திர பதத்தின் பொருள் கூறப்பட்டது. பிராதிபதிக அர்த்தமாத்திரத்தில் பிரதமையென்றது சூத்திரத்தின் ஏகதேசத்தின் உதாஹரணமாம். பாணினி பகவான் "**प्रातिपदिकार्थलिङ्गपरिमाणवचनमात्रे प्रथमा**" என்னும் சூத்திரத்தின்கண் பிராதிபதிகார்த்த மாததிரததில் முதல் வேற்றுமையைச் ஸ்மரிக்கின்றவராய் அபர்யாயங்களான விருக்ஷம் முதலிய பிராதிபதிகமும் முதல் வேற்றுமையுமான பதஙகளுககு ஏகார்தததை தன்மையைத் தெரிசிப்பிக்கின்ருர். வாக்கியத்தின் இந்த அகண்டார்த்தத்துவமே பாணினி மஹரிஷியின் சம்மதமாம் என்பது கருத்து. (216)

## அவதாரிகை

சுருதியாலும் அதனை மூலமாகவுடைய நியாயத்தாலும் சித்தித்த வஸ்துவைச் சூசிப்பிக்கின்றவரான பகவான் பாதராயண மஹரிஷியினுல்

தத்து சமன்வயாத் ( तत्तु समन्वयात् ) என்னும் சூத்திரத்தால் ( तत् ) தத் என்று வேதாந்த கம்ய(விஷய)த் தன்மையால் பிரதிக்ஞை செய்யப் பட்டதும் நிரதிசயானந்த அத்வயமும் சொப்பிரகாசமுமான பிரம்மத்தின் கண் சமன்வயாத் என்று ஏது கூறப்பட்டது. ஆண்டு வியதிகரண அன்வயமும் உலகின் கண்ணும் வேதத்தின் கண்ணும் காணப்படு கின்றது. அப்படியாயினும் வியதிகரண அந்வயமானது சம்பந்தாதியின் கண் உண்டாகின்றது. ஆதலால் பிரதிக்ஞை செய்யப்பட்ட பிரம்மத் தின்கண் சம்பவியாமையால் யோக்கியத்தன்மையால் சாமானாதிகரண்ய அந்வயமே அவரால் விவக்ஷிக்கப்பட்டது. ஆதலின் சமன்வயாத் என்னும் சூத்திர வசனத்தின் பலத்தால் வேதாந்த வாக்கியங்களுக்கு அகண்ட வஸ்துவின் கண்ணே பரியவசானமாம் எனக்கூறுகின்றார் —

## சுலோகம்

सामानाधिकरण्यमन्वयगिरा हेतुं वदत्यादरात्
तस्यैवाथ विशेषणं समिति च व्यावृत्तये गृह्यते ।
गौणान्मुख्यमयं भिनत्ति भगवान्व्यावर्तकेनामुना
नीलेनोत्पलवस्तुवत्स्फुटतरं द्वैविध्यसद्भावतः ॥ २१७ ॥

## பதவுரை

**अन्वयगिरा**—(பகவான் பாதராயண மஹரிஷியானவர் சமன்வய சூத்திரத்தின் கண்) அந்வய மென்னும் பதத்தால்

**सामानाधिकरण्यं हेतुं**—தத்துவம் பதங்களுக்கும் தனித்தனி சத்தியாதி பதங்களுக்கும் பிரம்மபதத்தோடு சாமானாதிகரண்ய வடிவ ஏதுவை (பிரம்மம் அகண்டைகரச என்பதில்)

**आदरात् वदति**—ஆதரவோடு கூறுகின்றார்.

ஆதரவோடு என்னும் பதத்தால் அதற்கு (சமன்வய சூத்திரத்திற்கு) சுருதி நியாய சூசகத்தன்மையைத் தெரிசிப்பிக்கின்றார்: அப்படியானால் அன்வய பதத்தாற் போதிக்கப்பட்ட சாமானாதிகரண்யம் நீலோத்பலம் போன்று குணகுணி பாவத்தின்கண் நிஷ்டையுடையதாகுக அல்லது மட்குடம்போன்று கார்யகாரண பாவத்தின்கண் நிஷ்டையுடையதாகுக என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார் :—

**तस्यैव**-அந்த ஏதுவின் கண்

**सं इति विशेषणम् च**-சம் என்னும் விசேஷணமும்.

**व्यावृत्तये**-இதரவியாவிருத்தியின் பொருட்டு

**गृह्यते**-வியாசபகவானால் கிரஹிக்கப்படுகின்றது

சுலோகத்தில் 'அத' என்னும் சொல் பாதபூரணத்தின் பொருட்டாம். உருவமுடையது கடம் என்னுமிடத்து கடத்திற்கு உருவமுடையதாந்தன்மை எப்படி விசேஷணமோ அப்படி அந்வயத்திற்குச் 'சம்' என்னும் விசேஷணமாமோ என்னும் சம்சயத்தை நிவர்த்தித்தற் பொருட்டு இதர வியாவிருத்தியின் பொருட்டு எனக்கூறப்பட்டது. விசேஷணமானது பெரும்பாலும் வியாவிருத்தியின் பொருட்டே பிரயோகிக்கப்படுகிறது. வியாவிருத்தி சம்பவிக்கிறபோது குடத்தின் கண் உருவமுடையதாந்தன்மைபோன்று சொரூபமாத்திரபரத்தன்மை ஆகின்றதில்லை என்பது கருத்து. விசேஷணமானது எதில் நின்றும் வியாவிருத்தியைச் செய்கின்றது என்னுஞ் ஜிக்ஞாசையுண்டாக அதனைக் காண்பிக்கின்றவராய் வியாவிருத்தியின் சம்பாவனையையும் தெரிசிப்பிக்கின்றார் :—

**स्फुटतरम्**-ஸ்பஷ்டமாக

**द्विविधसद्भावतः**-கௌணம் முக்கியம் என்னும் இருவித சாமானாதிகரண்யமிருத்தலால்

**अमुना व्यावर्तकेन (सं**-சம்)என்னும் இந்த விசேஷணத்தால்

**अयं भगवान्**-பகவானாகிய பாதராயண மகரிஷியானவர்

**नीलेन उत्पलवस्तुवत्**-நீலவிசேஷணத்தால் உத்பலவஸ்துவை வேறு பிரிப்பது போன்று

**गौणात्** -கௌணசாமானாதிகரண்யத்தில் நின்றும்

**मुख्यम्**-முக்கிய சாமானாதிகரண்யத்தை

**भिनत्ति**-வேறு பிரிக்கின்றார்.

### *விசேஷவுரை*

சூத்திரக்காரரானவர் அன்வயத்திற்கு 'சம்' என்னும் விசேஷணத்தைக் கொடுக்கின்றார். அந்த விசேஷணமும் வியாவிருத்திபரமாம் ஆதலின் கௌணசாமானாதிகரண்யத்தில் நின்றும் இதற்கு வியாவிருத்தி சித்திக்கும்போது முக்கியத்தன்மை சித்திக்கின்றது. ஆதலின் அவ் வாக்கியமானது அகண்டார்த்தத்தின்கண் பரிசமாப்தியை அடைந்து விடுகிறது.

இனிக் கூறப்படும் நியாயத்தால் நிச்சயிக்கப்படுகின்றது. என்பது கருத்து. (217)

### அவதாரிகை

இருவித சாமாநாதிகரண்யத்தின் சத்பாவத்தினையே தரிசிப்பிக்கின்றார் :—

### சுலோகம்

**तद्धि द्विधैकाधिकरण्यमुक्तं गौणं च मुख्यं च विविच्य सद्भिः ।**
**संसर्गरूपार्थनिवेशि गौणं मुख्यं त्वखण्डार्थनिविष्टमाहुः ॥**

### பதவுரை

**सद्भिः**-வித்துவான்களால் சாஸ்திரங்களில்

**तदैकाधिकरण्यम्**-அந்த சாமாநாதிகரண்யமானது

**गौणं च मुख्यं च**-கௌணமெனவும் முக்கியமெனவும்

**विविच्य**-வேறுபிரித்து

**द्विधा उक्तम् हि**-இரண்டு பிரகாரமாக ஆங்காங்கு கூறப்பட்டதேயாம்

கௌண முக்கியங்களின் சொரூபத்தைக் கிரமமாகக் கூறுகின்றார்.

**संसर्गरूपार्थ निवेशि**-குண்குணி முதலியவற்றின் தாதான்மிய சம்பந்தவடிவ அர்த்தத்தின் கண் பரியவசானமாகின்ற சாமாநாதிகரண்யம்

**गौणम्**-கௌணமாம்

**अखण्डार्थनिविष्टम् तु**-அகண்டார்த்தத்தின் கண் பரியவசானமாகின்ற சாமாநாதி கரண்யமோ

**मुख्यमाहुः**-முக்கியமாம் என சாதுக்கள் கூறுகின்றனர். (218)

### அவதாரிகை

இப்போது முக்கிய சாமாநாதிகரண்யத்திற்கு அகண்டார்த்தத்தில் பரியவசானத்தைக் காண்பிக்கின்றவராய் அவ்விருவித சாமாநாதிகரண்யத்தின் சாதாரண வடிவத்தைக் கூறுகின்றார் :—

### சுலோகம்

**आदाय नानाविधकारणानि गिरामथैकत्र तु या प्रवृत्तिः ।**
**तामाहुरैकाधिकरण्यनाम्ना विपश्चितो वेदशिरःसु विप्राः ॥**

## பதவுரை

**नानाविधकारणानि**—ஜாதி முதலிய வெவ்வேறு பிரவிருத்தி நிமித்தங்களை

**आदाय**—கிரஹித்துக்கொண்டு

**एकत्र तु**—ஓர் பொருளின் கண்ணேயே

**गिराम्**—சப்தங்களின்

**या प्रवृत्तिः**—யாதொரு பிரவிருத்தியுண்டோ

**ताम्**—அதனை

**वेदशिरःसु**—வேதாந்தங்களில்

**विपश्चितः विप्राः**—பண்டிதரான பிராம்மணர்கள்

**ऐकाधिकरण्य नाम्ना**—சாமானாதிகரண்ய மென்னும் பெயரால்

**आहुः**—கூறுகின்றனர்.

## விசேஷவுரை

பின்னபின்னப் பிரவிருத்தி நிமித்தங்களையுடைய சப்தங்களுக்கு ஓர் பொருளின்கண் யாதொரு விருத்தி (இருப்பு)யுண்டோ அதனை வேதாந்தங்களில் விவேகிகளான விப்பிரர்கள் சாமானாதிகரண்யமென்னும் நாமத்தால் கூறுகின்றனர் என அந்நுவயஞ் செய்க. இவ்விலக்கணத் தின்கண் கடம் கும்பம் முதலிய பர்யாய பதங்களில் அதிவியாப்தியை நீக்குதற் பொருட்டு பின்னப் பிரவிருத்தி நிமித்தக சப்தம் என்னப் பட்டது. ராஜாவின் புருஷன் என்பது முதலியவிடங்களில் அதி வியாப்தியை நீக்குதற் பொருட்டு ஓர் பொருளின்கண்ணிருப்பது எனக் கூறப்பட்டது. தத்துவமசி முதலிய வாக்கியார்த்தத்தின் நிருபண மானது சாமானாதிகரண்யத்தின் அதீனமாம் ஆதலின் வேதாந்திகளால் அஃது அவசியம் நிரூபிக்கத்தக்கதாம்என விளக்குதற் பொருட்டு வேதாந் தங்களில் பண்டிதர்எனக் கூறப்பட்டது. சுலோகத்தில் அதசப்தம் பாத பூரணத்தின் பொருட்டு. (219)

## அவதாரிகை

இரண்டு சாமானாதி கரண்யங்களுக்கும் கிரமமாக உதாஹரணத் தைக் கூறுகின்றார் :—

## சுலோகம்

नीलं सुगन्धि महदुत्पलमम्बुशायी-
त्येवंप्रकारमिह गौणमुशन्ति सन्तः ।
सोऽयं पुमानुदशरावगतो विवस्वान्
आकाशगो रविरसाविति मुख्यमाहुः ॥ २२० ॥

## பதவுரை

**नीलं सुगन्धि**-நீல நிறமுடையது சுகந்தமுடையது
**महत् अम्बुशायि**-பெரியது சலத்திலிருப்பது
**उत्पलम्**-கமலமாம்
**इति एवं प्रकारम्**-என்னுமிந்தப் பிரகாரமான பிரயோகத்தை
**इह**-ஈண்டு
**सन्तः**-வித்வான்கள்
**गौणम् उशन्ति**-கௌணசாமாநாதிகரண்யமெனக் கருதுகின்றனர்
**सोऽयं पुमान्**-அவனிப்புருடன்
**उदशरावगतः**-ஜலபாத்திரத்திற் பிரதிபிம்பித்த
**विवस्वान्**-சூரியனே
**असौ आकाशगः रविः**-ஆகாசத்திலுள்ள சூரியனும்
**इति**-என்னும் பிரயோகத்தினை
**मुख्यमाहुः**-முக்கிய சாமாநாதிகரண்யமெனக் கூறுகின்றனர்.

## விசேஷவுரை

கமலமென்னும் பதத்தால் விசேஷியம் கூறப்பட்டது, நீலாதிகள் விசேஷணங்களாம், ஜலபாத்திரத்திற் பிரதிபிம்பித்த சூரியனே ஆகாசத்திலுள்ள சூரியனுமென்பது பிம்பப் பிரதிபிம்பங்களுக்கு ஐக்கியமாதலால் என்று பொருள். (220)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் சாமாநாதிகரண்யம் இருவிதமாக இருக்குக இத்துணையானே முக்கிய சாமாநாதிகரண்யத்திற்கு அகண்ட வஸ்துவின்கண் பரியவசானமெவ்வாறுமென்னுமிடத்துக் கூறுகின்றார் :—

### சுலோகம்

एकत्र वृत्तिरिति लक्षणमत्र मुख्यं
संसर्गवस्तुनि पुनर्न हि तद्घटेत ।
नानारसे हि विषये वचसां प्रवृत्ति-
र्नीलं सुगन्धि महदुत्पलमित्यमीषाम् ॥ २२१ ॥

### பதவுரை

**एकत्रवृत्तिः**-ஓர் வஸ்துவின் கண் இருப்பது
**इति लक्षणम्**-என்னும் இந்த லக்ஷணத்தின் அம்சமானது.
**अत्र**-அகண்ட வஸ்துவின் கண்
**मुख्यम्**-அநுபசரிதமாம். (உபசாரமற்றது)
**तत् पुनः**-ஏகநிஷ்டத்துவ வடிவ அந்த அம்சமானது
**संसर्गवस्तुनि**-சம்பந்த (விசிஷ்ட) வஸ்துவின் கண்
**नहि घटेत**-பொருந்துவதின்ரும்
**नीलं सुगंधि**-நீலமுடையது ஸுகந்தமுடையது
**महत् उत्पलम्**-பெரியது கமலம்
**इति अमीषान् वचसाम्**-என்னுமிந்த வசனங்களுக்கு
**नानारसे विषये**-குணகுண்யாதி வடிவ விசிஷ்டார்த்தத்தின் கண்
**प्रवृत्तिर्हि**- பிரவிருத்தியானது பிரசித்தமாம்

### விசேஷவுரை

அகண்ட வஸ்துவின்கண் பரியவசானமுள்ள அபர்யாய பதங்களுக்கு ஓர் பொருளிலிருக்கும் தன்மையே அநுபசரிதத்துவவடிவ முக்கிய சாமாநாதிகரண்யமாம்.

நீலோத்பலாதி விசிஷ்ட வஸ்துவின்கண் ஓர் பொருளிலிருக்கும் தன்மைவடிவ அந்த முக்கிய சாமாநாதிகரண்யம் பொருந்துவதின்ரும். அதன்கண் உலகப் பிரசித்தியினையே ஏதுவாகக் கூறுகின்ருர் :— குணகுண்யாதி என்பதனல் (221)

### அவதாரிகை

இப்போது ஓர் பொருளில் இருப்பது என்னும் பதத்தால் வியாவிருத்தி செய்ய யோக்கியமான வியதிகரண அந்வயத்தின் சொரூபத்தைக் கூறுகின்ருர் :—

### சுலோகம்

नानाविधैर्बहुभिरेव निमित्तभेदै-
र्भिन्नेषु वस्तुषु गिरामथ या प्रवृत्तिः ।
सर्वत्र वैयधिकरण्यमिति प्रसिद्धा
सा शब्दवृत्तिकुशलव्यवहारभूमौ ॥ २२२ ॥

### பதவுரை

**शब्दवृत्तिकुशल व्यवहारभूमौ**-சப்தங்களின் விருத்தியை விவேசனம் செய்வதில் குசல புருஷர்களின் வியவகாரஸ்தலத்தில்

**नानाविधैः**–அநேகப்பிரகாரங்களான

**बहुभिः एव निमित्तभेदैः**–அநேகப்பிரவிருத்தி நிமித்த விசேஷங்களாலேயே

**गिराम्**–தத்தம் பொருளில் பிரவிருத்திக்கின்ற சப்தங்களுக்கு

**भिन्नेषु वस्तुषु**–பின்னவஸ்துக்களில்

**या प्रवृत्तिः**–யாதாரு பிரவிருத்தியுண்டோ

**सा**–அது

**सर्वत्र**–எல்லாவிடங்களிலும்

**वैयधिकरण्यमिति**–வியதிகரண அந்வயமாமென

**प्रसिद्धा**–பிரசித்தமாம்

### விசேஷவுரை

ஈண்டு அநேகத்தன்மை (இரண்டிற்கு மேற்பட்ட எண்ணிக்கை) விவக்ஷிக்கப்பட்டதன்றும். இரண்டின் கண்ணும் பிரவிருத்தி நிமித்தத் தன்மை காணப்படுதலின் பிரவிருத்தி நிமித்தங்களான ஜாதி முதலியவற்றின் பேதத்தால் தத்தம் பொருளிற் பிரவிருத்திக்கின்ற சத்தங்களுக்கு குணமும் பிரதானமுமான அநேக பதார்த்தங்களில் யாதொரு விருத்தியுண்டோ அது வையதிகரண்யமாம் என அந்வயஞ்செய்க. சாமானாதிகரண்யத்தை நீக்குதற் பொருட்டு 'பின்ன' எனப்பட்டது. அத்தியந்தம் பின்னமென்பது பொருள் நாநாவியக்தியின் கண்ணுள்ள பர்யாயசப்தத்தை நீக்குதற் பொருட்டு நிமித்தவிசேஷமெனப்பட்டது. எஞ்சியது சொருபத்தைப்பிரதிபாதித்தலாம். (222)

## அவதாரிகை

இப்போது 219வது சுலோகத்திலுள்ள நாநாவித பிரவிருத்தி நிமித்தங்கள் என்னும் பதத்தால் வேறு பிரிக்கத்தக்க பர்யாயத்தின் சொரூபத்தைக்கூறுகின்றார் :—

## சுலோகம்

**अभिन्नहेतुर्विषये समाने विभिन्नवाचामथ या प्रवृत्तिः ।**
**पर्यायनाम्ना प्रवदन्ति धीराः प्रवृत्तिमेतां वचसां बहूनाम् ॥**

## பதவுரை

**समाने विषये**—ஓர்விஷயத்தின்கண்
**विभिन्नवाचाम्**—வெவ்வேறான சப்தங்களுக்கு
**अभिन्नहेतुः**—ஓர் பிரவிருத்தி நிமித்தத்தையுடையதான
**या प्रवृत्तिः**—யாதொரு பிரவிருத்தியுண்டோ
**बहूनां वचसाम्**—அநேக சப்தங்களின்
**एतां प्रवृत्तिम्**—இந்தப் பிரவிருத்தியினை
**धीराः**—வித்வான்கள்
**पर्यायनाम्ना**—பர்யாய மென்னும் பெயரால்
**प्रवदन्ति**—கூறுகின்றனர்

## விசேஷவுரை

அபின்னமாகப் பிரவிருத்தி நிமித்தத்தையுடைய சப்தங்களுக்கு ஓர் பொருளின் கண் இருக்குந்தன்மை பர்யாயத் தன்மையாம் என்பது பொருள். (223)

## அவதாரிகை

வியதிகரண அந்வயத்திற்கும் பர்யாயத்திற்கும் கிரமமாக உதாஹரணத்தைக் கூறுகின்றார் :—

## சுலோகம்

**कुड्यं गृहस्य सरसोऽम्बुजमस्य वस्त्र-**
**मित्यत्र वैयधिकरण्यमिति प्रसिद्धम् ।**
**एवं मुखं वदनमाननमित्यमीषां**
**पर्यायताऽपि विदितैव पुरोक्तहेतोः ॥ २२४ ॥**

### பதவுரை

**गृहस्य कुड्यं**–வீட்டின் சுவர்
**सरसः अम्बुजं**–குளத்தின் தாமரை
**अस्य वस्त्रम्**–இத்தேவதத்தனுடைய வேஷ்டி
**इति अत्र**–என்பது முதலிய இடங்களில்
**वैयधिकरण्यं इति**–வியதிகரண அந்வயமாம் என்பது
**प्रसिद्धम्**–உலகில் பிரசித்தமாம்
**एवम्**–இந்தப்பிரகாரம்
**मुखं वदनं आननं**–முகம் வதனம் ஆனனம்
**इति अमीषाम्**–என்பது முதலிய சப்தங்களுக்கு
**पूर्वोक्तहेतोः**–முற்கூறிய ஏதுவினால்
**पर्यायता अपि**–பர்யாயத்தன்மையும்
**विदिता एव**–பிரசித்தமேயாம்

### விசேஷவுரை

222வது சுலோகத்தில் கூறப்பட்ட—'நிமித்த பேதங்களால்' என்னும் ஏதுவினால் வையதிகரண்ய அந்வயமும் 223வது சுலோகத்தில் கூறப்பட்ட 'அபின்னஹேது' என்னும் ஏதுவால் பர்யாயத்தன்மையும் உலகில் பிரசித்தமாம். என்பார் 'முற்கூறிய ஏதுவினால்' என்றார். (224)

### அவதாரிகை

இந்தப் பிரகாரம் உலகப்பிரசித்தமான அந்நுவயங்களின் சொரூப விசேஷத்தினைக்கூறி இப்போது தத்துவமசி யென்னும் வாக்கியத்தின் கண் வியதிகரண அந்வயம் முதலானவை சம்பவியாமையால் முக்கிய சாமானாதிகரண்யமே அகண்டார்த்த நிஷ்டமாகச் சித்திக்கின்றது. எனக்கூறுகின்றார் :—

### சுலோகம்

पर्यायता न खलु तत्वमसीति वाक्ये
नापीह संभवति भेदकभेद्यभावः ।
तत्वंपदार्थगतमेकरसैकभागं
तत्वंपदे समुपलक्षयतो विरोधात् ॥ २२५ ॥

## பதவுரை

**इह तत्त्वमसि इति वाक्ये**–ஈண்டு தத்துவமசி மஹாவாக்கியத்தின் கண் (தத்பத துவம்பதங்களுக்குப்பிர விருத்தி நிமித்தம்) பின்னமாயிருத்தலால்
**पर्यायता**–பர்யாயத்தன்மை
**न खलु संभवति**–சம்பவிக்கின்றதில்லை
**भेदकभेद्यभावः अपि**–விசேஷண விசேஷியத்தன்மையும்
**न संभवति**–சம்பவிக்கின்றதில்லை
**विरोधात्**–வாச்சியார்த்தங்களுக்கு விரோதமிருத்தலால்
திரண்ட பொருளைக்கூறுகின்றார்:–
**तत् त्वम् पदे**–தத்பத துவம்பதங்கள்
**तत्त्वंपदार्थगतम्**–தத்பதார்த்த துவம்பதார்த்தங்களிலுள்ள
**एकरस एकभागम्**–சின்மாத்திரவடிவ ஓர் பாகத்தினை
**समुपलक्षयतः**–லக்ஷணாவிருத்தியால் போதிக்கின்றன

## விசேஷவுரை

தத்துவமசி என்பது சத்யஞானாதிவாக்யங்களுக்கு முபலக்ஷணமாம்.

தத்துவம் பதங்களுக்குப் பர்யாயத்தன்மையை உடன்படின் சேர்த்துப் பிரயோகித்தலும் சம்பவியாது. அது முதியோராலுங் கூறப் பட்டுள்ளது. **पर्यायाणां प्रयोगो हि यौगपद्येन नेष्यते** "சேர்ந்தாற் போல் பர்யாய பதங்களின் பிரயோகம் அங்கீகரிக்கப்படுகின்றதில்லை". என.

கிரகத்தின் குட்டியம் நீலமுற்பலம் என்பது முதலிய இடங்களில் பேதகபேத்திய பாவமிருப்பது போன்று தத்துவம் பதார்த்தங்களுக்கு பேதகபேத்திய பாவமும் (விசேஷண விசேஷியத்தன்மையும்) சம்பவிப் பதின்றும். விசேஷண விசேஷியத்தன்மை தத்துவம் பதார்த்தங்களில் பாதிக்கப்படுதலின் முக்கியார்த்தங்களுக்கு விரோதமாதலால் என்பது பொருள். அல்லது அவிரோதமாதலால் எனப்பதச்சேதஞ்செய்க, அதாவது லக்ஷியார்த்தங்களுக்கு விரோதமின்மையினால் அபாதிதமுக்கிய சாமானாதிகரண்யமே தத்துவமசி வாக்கியத்தின்கண் சமன்வயமாகின்றது ஆதலின் அது (மகாவாக்கியம்) அகண்டார்த்தமாம் என்க தத்துவம்

பதார்த்தத்திலுள்ள ஏகரசமாகிய ஏகபாகத்தினை அதாவது சிதேகரசத்தினை பாகலக்ஷணையால் போதிக்கின்றன என்பது பொருள். (225)

## அவதாரிகை

இந்தப் பிரகாரம் மகாவாக்கியத்திற்கு அகண்டார்த்தத்தின்கண் விருத்தியைக் காண்பித்து அதன்கண திருஷ்டாந்தமாக அவன் இவன் என்னும் லௌகிக வாக்கியத்தின் கண்ணும் அதனை ( விருத்தியை ) காண்பித்து, இப்போது பிரம்மத்தின் லக்ஷணத்தைக்கூறும் " சத்தியம், ஞானமனந்தம் பிரம்ம" என்பது முதலிய வாக்கியத்தின் அகண்டார்த்தத்தன்மையில் உதாகரணமான " மிக்கப்பிரகாசமுள்ளவன் சந்திரன் " என்னும் சந்திரனது லக்ஷண வாக்கியத்தின்கண்ணும் அகண்டார்த்தத்தன்மையைத் தெரிசிப்பிக்கின்றவராய் தார்ஷ்டாந்தத்தின்கண்ணும் நியாயத்தால் சித்தித்த அவ்வகண்டார்த்தத்தன்மையினை அநுவாதஞ் செய்கின்றார் :—

## சுலோகம்

प्रकृष्टप्रकाशध्वनी व्यक्तिमेकां
यथा लक्षणावर्त्मनोपक्षिपेताम् ।
शशाङ्कादिशब्दार्थसंकीर्तने स-
च्चिदानन्दशब्दाः परं ब्रह्म तद्वत् ॥ २२६ ॥

## பதவுரை

**शशाङ्कादिशब्दार्थसंकीर्तने**—சந்திரன் முதலிய பதார்த்த மாத்திரத்தைப்பிரதிபாதித்தற்கு உத்தேசித்துப் பிரயோகிக்கப்பட்ட

**प्रकृष्टप्रकाशध्वनी**—பிரகிருஷ்டம் பிரகாசம் என்னும இருசப்தங்கள்

**यथा**—எப்படி

**लक्षणावर्त्मना**—லக்ஷணை வடிவமார்க்கத்தால்

**एकां व्यक्तिम्**—ஒரு சந்திர வியக்தியினை

**उपक्षिपेताम्**—பிரதிபாதிக்கின்றனவோ

**तद्वत्**—அப்படி

**सच्चिदानन्द शब्दाः**—சத்து சித்து ஆனந்தமென்னும் பதங்கள்

**परं ब्रह्म**—பரப்பிரம்மத்தைப் பிரதிபாதிக்கின்றன

## விசேஷவுரை

அற்றேல், பிரகிருஷ்டம் பிரகாசம் என்னும் சப்தங்களுக்குச் சந்திரனிடத்தில் அவிருத்தமான சுவார்த்த சம்சர்க்கத்தைப் பரித்தியாகம் செய்து லக்ஷணையினால் சந்திரனது சொரூபமாத்திரத்தைப் போதிக்குந் தன்மை எற்றிற்கு முக்கியார்த்தம் சம்பவிக்கும்போது லக்ஷணையைக் கொள்ளுதல் நியாயமன்றாதலின் என்னும் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு சந்திரன் முதலிய பதார்த்தமாத்திரத்தை உத்தேசித்து எனக் கூறப்பட்டது.

ஆதிசப்தத்தினால் கோ முதலிய சப்தத்தினைத் தெரிசிப்பிக்கின்றார். சுலோகத்தில் உத்தேசித்து என்பது எஞ்சிநின்றது. இனிக்கூறப்படும் ரீதியினால் சந்திராதி பதார்த்தமாத்திரத்தைப் பிரதிபாதித்தல் பிரகிருஷ்டம் பிரகாசம் என்னுமிந்த வாக்கியத்தினாற் செய்யப்படுகின்றது. பிரகிருஷ்ட பிரகாசாதியின் சம்பந்தம் சந்திரபதார்த்தத்தின் சொரூப மன்றும் ஆதலின் பிரகிருஷ்டப் பிரகாசாதியின் சம்பந்தத்தினைப் பரித்தியாகஞ்செய்து விவக்ஷிக்கப்பட்ட சந்திரவடிவத்தையே, இருபதங்களும் லக்ஷணையால் பிரதிபாதிக்கின்றன என்பது பொருள். அப்படி என்பதற்கு பிரகிருஷ்டாதி சப்தம் போன்று லக்ஷணையால் போதிக்கின்றன என்பது பொருள். (226)

## அவதாரிகை

அற்றேல், பிரகிருஷ்டப் பிரகாசன் சந்திரன் என்பது முதலிய வாக்கியத்திற்கு முக்கியார்த்தத்தில் (சம்சர்க்காதி வடிவ அர்த்தத்தில்) பிரயோகம் சம்பவிக்கிற போது லக்ஷணையால் அகண்டார்த்தத் தன்மையை யங்கீகரிக்கின் நீலோத்பலாதி வாக்கியத்திற்கும் அவ்வகண்டார்த்தத் தன்மை ஏன் அங்கீகரிப்பதில்லை என்னும் சங்கைக்குக் கூறுகின்றார் :—

## சுலோகம்

न नीलोत्पलाद्या गिरो व्यक्तिनिष्ठाः
स्ववाच्यार्थसंसर्गमात्राभिधानात् ।
विरोधे हि वाच्यच्युतिर्नाविरोधे
गिरां लक्षणाऽत्रापि चेदस्तु साम्यम् ॥ २२७ ॥

## பதவுரை

**नीलोत्पलाद्या गिरः**–நீலோத்பலம் முதலிய வாக்கியங்கள்

**व्यक्तिनिष्ठाः न**–வியக்திமாத்திரத்தைப் போதிப்பனவன்றும்

நீலோத்பலாதி வாக்கியம் வியக்தி மாத்திரத்தைப் போதிக்காதது எதனால்? என்னுமிடத்துக் கூறுகின்றார் :—

**स्ववाच्यार्थसंसर्गमात्राभिधानात्** – தமது வாச்சியார்த்தமாகிய குணகுணிமுதலியவற்றின் சம்பந்தமாத்திரத்தைப்பிரதி பாதித்தலால்

ஆண்டு குணகுணி முதலியவற்றின் சம்பந்தமாத்திரமே அப்பதங்களால் பிரதிபாதிக்கப்படுதலின் என்பது பொருள். அற்றேல், சம்பந்த மாத்திரத்தைப் பிரதிபாதித்தல்தான் எங்ஙனங்கூடும் பிரகிருஷ்ட பிரகாச பதங்களுக்குப் போன்று நீலோத்பலபதங்களுக்கும், திரவிய மாத்திரத்தைப் போதிக்குந் தன்மை ஏன் இன்று என்னுமிடத்துக் கூறுகின்றார் :—

**विरोधे हि**–வாச்சியார்த்தங்களுக்கு விரோதம் உளதாயவழியன்றோ

**गिराम्**–பதங்களின்

**वाच्यच्युतिः**–வாச்சியார்த்தங்களின் தியாகமும் லக்ஷணையும் கொள்ளப்படுகின்றது

**अविरोधे**–வாச்சியார்த்தங்களுக்கு விரோதம் இலதாயவழி

**न**–முக்கியார்த்தத்தின் தியாகமும் லக்ஷணையுமின்றும்

முக்கியார்த்தத்தினையுடைய பதங்களுககு தாத்பரியத்திற்கு விஷயமாயுள்ள அர்த்தத்திற்குப் பாதம் உளதாயவழி முக்கியார்த்தத்தின் தியாகமாம். விரோதம் இலதாயவழி தியாகமின்றும். விரோதமிலதாய வழியும் ஆண்டு லக்ஷணையை யங்கீகரிக்கின் அப்போது நீலோத்பலாதி வாக்கியத்திற்கும் பிரகிருஷ்டப் பிரகாசாதி வாக்கியத்தின் சமத்தன்மையிருக்குக. அதனால் நமக்கென்னை கெடுதி என்று கூறுகின்றார் :—

**अत्र अपि**–நீலோத்பலாதி வாக்கியத்தின் கண்ணும்

**लक्षणा चेत्**–லக்ஷணையை யங்கீகரிக்கின்

**साम्यम् अस्तु**—பிரகிருஷ்டப் பிரகாசாதி வாக்யத்திற்குச் சமானமாகுக (அதாவது சொரூபமாத்திரபரமாகுக என்பது கருத்து.) **(227)**

### அவதாரிகை

ஆண்டு சமத்தன்மையினையே உபபாதனம் செய்கின்றார் :—

### சுலோகம்

**न नीलत्वजात्याश्रयव्यक्तितः स्या-**
**द्विभिन्नोत्पलत्वाश्रयव्यक्तिरेषा ।**
**तथैवोत्पलत्वाश्रयव्यक्तितः स्या-**
**न्न नीलत्वजात्याश्रयव्यक्तिरन्या ॥ २२८ ॥**

### பதவுரை

**नीलत्वजात्याश्रयव्यक्तितः**—நீலத்தன்மை ஜாதியின் ஆசிரயமான வியக்தியில் நின்றும்

**एषा उत्पलत्व आश्रय व्यक्तिः**—இந்த உத்பலத்தன்மை ஜாதியினுசிரயமான வியக்தியானது

**विभिन्ना न स्यात्**—பின்னமன்றும்

உத்பலத்தன்மையின் ஆசிரயத்தன்மை எதன் கண்ணுளதோ அத்தகைய உத்பல வியக்தியானது நீல வியக்தியில் நின்றும் பின்னமாவதின்றும். இந்தப்பிரகாரம் திரவியத்திற்கும் குணத்தில் நின்றும் அபேதத்தைக் கூறுகின்றார்.

**तथैव**—அப்படியே

**उत्पलत्वआश्रयव्यक्तितः** - உத்பலத்தன்மை ஜாதியினுசிரயமான வியக்தியினின்றும்

**नीलत्वजात्याश्रयव्यक्तिः**—நீலத்தன்மை ஜாதியினுசிரயமான வியக்தியானது

**अन्या न स्यात्**—அன்னியமன்றும்

குணகுணிகளுக்கு அபேதமாதலால் என்பது பொருள். நீலத்தன்மை உத்பலத்தன்மை ஜாதிவாசக (நீல-உத்பல) சப்தங்களால் லக்ஷிக்கப்பட்ட நீல வியகதி உத்பல வியக்திகளுக்கு அபேதமிருத்தலால்

நீலோத்பல வாக்கியமும் அகண்டார்த்த போதகமாகுக என பிரௌடி வாதத்தால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

ஈண்டு இஃது அபிப்பிராயமாம். சுலோகத்தின் பூர்வபாகத்தால் திரவியத்திற்குக் குணத்தோடு அபேதங்கூறப்பட்டது. உத்தரபாகத்தால் குணத்திற்குத் திரவியத்தோடு அபேதங் கூறப்பட்டது. (228)

### *அவதாரிகை*

இந்தப்பிரகாரம் நீலோத்பல வாக்கியத்தின்கண் லக்ஷணையினையும் அகண்டார்த்தத்தன்மையினையும் அப்பியுபகம வாதத்தால் (பிரௌடி வாதத்தால்) கூறி இப்போது அவ்விரண்டினையும் இரண்டு சுலோகத்தால் பரித்தியாகஞ் செய்கின்றார்:—

### *சுலோகம்*

**न नीलोत्पलादिप्रदेशेषु किंचि-**
**द्गिरां लक्षणाकारणं तेन तत्र ।**
**न नीलोत्पलत्वादिकव्यक्तिनिष्ठा**
**गिरस्ता भवेयुः प्रमाणादृते नः ॥ २२९ ॥**

### *பதவுரை*

**किमपि इदं**—அபிப்பிராயத்திற்கு விஷயமின்றிய இதுவும் அதாவது நீலோத்பலாதி வாக்கியத்திற்கு அகண்டார்த்தத் தன்மையும்

**मया उपेत्य**—என்னால் அப்பியுபகமவாதத்தால்

**उदितम्**—கூறப்பட்டது.

அடுத்த சுலோகத்திலுள்ள '**इदं उपेत्य किमपि उदितम्**'– இது என்னால் அங்கீகரித்துக் கூறப்பட்டது. என்னும் இதனை இச்சுலோகத்தின் ஆதியிற் சேர்க்கப்பட்டுள்ளது. ஆண்டு (பின்பு) அப்யுபகம வாதத்தால் கூறப்பட்ட லக்ஷணையினையும் ஈண்டு பரித்தியாகஞ் செய்தலின்.

**नीलोत्पलादिप्रदेशेषु**—நீலம் உத்பலம் என்பது முதலிய வாக்கியங்களில் அல்லது அவற்றின் அர்த்தங்களில்

**गिराम्** —பதங்களுக்கு

**लक्षणाकारणम्** லக்ஷணையின் பீஜம்

**किंचित् न**—அற்பமுங்காணப்படுகின்றதில்லை

அதாவது ஆண்டு அந்வயானுபபத்தியாகிய நிமித்தமுமின்றும். பதார்த்தங்களுக்கு அந்நுவய மிருத்தலின் தாத்பரிய அநுபபத்தியு மின்றும். குணகுணித் தன்மைகளின் சம்சர்க்கமே ஆண்டு அபிப் பிராயத்திற்கு விஷயமாதலின். அந்வயானுபபத்தி தாத்பரியானுபபத்தி என்னுமிவ்விரண்டினும் வேறாக லக்ஷணையினிமித்தம் யாதொன்றும் பிரசித்தமாக இன்றும். நிமித்தமின்றி லக்ஷணையை அங்கீகரிக்கின் அதிப்பிரசங்கமாம் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்

**तेन**—அக்காரணத்தால்

**तत्र**—ஆண்டு

**नः**—எமது மதத்தில்.

**प्रमाणात् ऋते**—பிரமாணமின்றி

**ताः गिरः**—நீலோத்பலாதி வாக்கியங்கள்

**नीलोत्पलत्वादिक व्यक्तिनिष्ठाः** — நீலத்துவ ஆசிரயமும் உத்பலத்துவ ஆசிரய முமான அபின்ன வியக்தியைப்போதிப்பனவாக

**न भवेयुः**—ஆகமாட்டா. பிரமாணமின்மையின் என்பது பொருள்.

### *அவதாரிகை*

நீலோத்பலாதி வாக்கியத்திற்கு லக்ஷணையை யங்கீகரிக்கினும் அகண்டார்த்தத்தன்மையின்றும். லக்ஷிய நீலமும் உத்பலமுமான வியக்திகளுக்கு ஏகரசத்தன்மை யின்மையின் என்று கூறுகின்றார்:—

### *சுலோகம்*

**इदमुपेत्य किमप्युदितं मया न तु तयोरभिदा परमार्थतः ।**
**गुणगुणित्वकृतोऽतिशयस्तयोर्भवति लक्षणयाऽपि गृहीतयोः ॥ २३० ॥**

### பதவுரை

**तयोः**–நீலமும் உத்பலமுமாகிய வியத்திகட்கு

**परमार्थतः**–வாஸ்தவமாக

**न तु अभिदा**–அபேதமின்ரும்

நீலோற்பல வியத்திகளுக்குள்ள அபேதம் வாஸ்தவமன்ரும் பேதமுமிருத்தலின் பேதரகித அத்தியந்த அபேதத்திற்கே வாஸ்தவத் தன்மையுண்மையின் என்பது பொருள் அத்தியந்தா பேதம் எதனுலின்ரும் என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

**लक्षणया गृहीतयोः अपि**–லக்ஷணுவிருத்தியால் கிரகிக்கப்பட்டவை யாயினும்

**तयोः**–நீலமும் உத்பலமுமாகிய அவைகட்கு

**गुणगुणित्वकृतः**-குணத்தன்மை குணித்தன்மையாற் செய்யப்பட்ட

**अतिशयः भवति**· சொற்பபேதமானது இருக்கின்றது.

அத்தியந்தமபேதமாயின் குண குணித்தன்மை பொருந்தாமற் போம் நீலமும் உற்பலமும் முறையே குணரூபத்தாலும் குணிரூபத்தாலும் பிரசித்தமாம் அத்தியந்தம் பேதமில்லாவிடினும் சொற்பபேதமிருக்கின்ற தாதலின் நீலோற்பலவாக்கியம் அகண்டார்த்த மன்ருமென்பது பொருள். (230)

### அவதாரிகை

அப்படியாஞல் நீலோற்பல வாக்கியம் போன்று பிரகிருஷ்டப் பிரகாசாதி வாக்கியமும் சந்திரனிடத்தில் அபாதித தனது அருத்தத்தின் சம்சர்க்கத்தைப்போதிப்பதாகுக என்னுஞ்சங்கைக்குக்கூறுகின்ருர்:-

### சுலோகம்

**प्रकृष्टप्रकाशत्वजाती हि लोके**
**प्रकृष्टप्रकाशाभिधानाभिधेये ।**
**तयोरन्वये कीर्त्यमाने तु ताभ्यां**
**शशांकाभिधानाभिधेयं न लभ्यम् ॥ २३१ ॥**

## பதவுரை

**लोके**–உலகின் கண்

**प्रकृष्टप्रकाशत्वजाती हि**-பிரகிருஷ்டத்துவமும் பிரகாசத்துவமுமாகிய ஜாதிகளே

**प्रकृष्टप्रकाशअभिधानअभिधेये**-பிரகிருஷ்டம் பிரகாசம் என்னும் இருபதங்களின் வாச்சியார்த்தங் களாம்.

அதனாற்சித்தித்ததென்னையெனின் ஆண்டுக்கூறுகின்றார்

**ताभ्याम्** –அவ்விரு பதங்களால்

**तयोः**–பிரகிருஷ்டத்துவமும் பிரகாசத்துவமுமாகிய இருஜாதிகளுக்கு

**अन्वये**–ஆக்ஷேபிக்கப்பட்ட வியக்தி வாயிலாக அன்வயம்

**कीर्त्यमाने तु**–பிரதிபாதிக்கப்படும்போது

**शशाङ्क अभिधान अभिधेयं**-சந்திரபத வாச்சியார்த்தம்

**न लभ्यम्** -கிடைப்பதின்றும்.

## விசேஷவுரை

அர்த்தாபத்தியாற் கற்பிக்கப்பட்ட வியக்தி வாயிலாக அவ்விரு ஜாதிகளுக்கு அன்வயம் அவ்விரு பதங்களாற் பிரதிபாதிக்கப்படினுே சந்திரபதார்த்தம் சித்திப்பதேயின்றும். இரு ஜாதிகளின் தமது ஆசிரய சந்திரனுேடுள்ள வைசிஷ்டியத்திற்கு சந்திரபத வாச்சியத்தன்மை யின்மையின் என்பது கருத்து. வைசிஷ்டியம்–சம்பந்தம். (231)

## அவதாரிகை

அற்றேல், பிரகிருஷ்டப் பிரகாச விசிட்ட வியக்தியே சந்திரனு தலின், எது பிரகிருஷ்டப் பிரகாசமோ அது சந்திரன் என்னும் வசன வியக்தியினுல் சந்திரபத வாச்சியார்த்தம் எதனுற் சித்திப்பதில்லை, யென்னுமிடத்துக் கூறுகின்றார் :–

## சுலோகம்

शशाङ्काभिधानाभिधेये हि दृष्टे
तदेवोत्तरेणापि निर्णीयमाने ।
प्रकृष्टप्रकाशत्वजात्यन्वयोऽयं
॥ १६८ तदाक्षिप्तवद्व्यक्त्युपक्रमनिष्ठः ॥ २३२ ॥

## பதவுரை.

**अत्र हि**—இவ்வுலகின் கண்ணே

**शशाङ्कअभिधानअभिधेये**—சந்திர சப்தத்தின் பொருள் (யாது என)

**पृष्टे**—ஒருவனால் வினவப்பட்டபோது

**तदेव**—வினவப்பட்ட அவ்வஸ்துவே

**उत्तरेणापि**—பிரகிருஷ்டப்பிரகாசன் சந்திரன் என்னும் பிரதிவசனத்தாலும்

**निर्णयम्**—நிர்ணயிக்கத்தக்கதாம், குணஜாதி வைசிஷ்டியம் பிரதிபாதிக்கத்தக்கதன்றும்,

அற்றேல், கூறிய சமாதான வசனத்தாலும் அதுவே நிர்ணயிக்கப் படுகிறது. பிரகிருஷ்டப் பிரகாச ஆசிரய வஸ்துவின் கண்ணேயே சமாதான வசனத்தாலும் சந்திரத்தன்மை பிரதிபாதிக்கப்படுதலால், சந்திரத்தன்மையின் ஆசிரயமே சந்திரபதத்தின் வாச்சியமாதலின் என்னுமிடத்துக் கூறுகின்றார்:—

**प्रकृष्टप्रकाशत्व जात्यन्वयः अयम्** — பிரகிருஷ்டப்பிரகாசன் சந்திரன் என்னும் வாக்கியத்தால் பிரகிருஷ்டத்துவப்பிரகாசத்துவ ஜாதிகளின் அன்வயமாகிய இது.

**तदाक्षिप्ततद्व्यञ्जक-व्यक्तिनिष्ठः** — ஜாதியாலாக்ஷேபிக்கப்பட்டதும் ஜாதியின் வியஞ்சகமுமான வியக்தியின்கண் இருப்பதாகப் பிரதிபாதிக்கப்படுகிறது.

அப்போது பிரகிருஷ்டம் பிரகாசம் என்னுமிரு பதத்தாலும் முக்கிய விருத்தியால் உபஸ்திதமான (அறியப்பட்ட) பிரகிருஷ்டத்துவப் பிரகாசத்துவ ஜாதிகளுக்கு பரஸ்பரம் அன்வயம் சொல்லத்தக்கதாம் பதார்த்தங்களுக்கு பரஸ்பரான்வயம் நியமமாதலின் ஜாதிகளுக்கு பரஸ்பர அன்வயம் நேரே சம்பவிக்கிறதில்லை. ஆதலின் இந்த ஜாதிகளின் அன்வயம் அவ்விரு ஜாதிகளால் ஆக்ஷேபிக்கப்பட்டதும் அச்சாதிகளின் அபிவியஞ்சகமும் அச்சாதிகளின் ஆசிரயமுமான வியக்தியின்கண் உளது ஆதலின், கேவல சந்திர வியக்தியின் அடைவின்றுமென்பது கருத்து. (232)

## அவதாரிகை

அற்றேல் எது பிரகிருஷ்டப்பிரகாசத்துவமோ அதுவே சந்திரனும் என கூறப்பட்டதெனின் வாஸ்தவந்தான் அது சந்திரனுக்கு அசாதாரண தருமமாம். சந்திரனது வடிவமன்றும் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார் :—

## சுலோகம்

शशाङ्काभिधानाभिधेयो न चेष्टः
शशाङ्कस्य तेजोविशेषत्वहेतोः ।
ततश्चोपपन्ना जहल्लक्षणाऽतः
पुरोक्ता पदाभ्यामखण्डार्थसिद्धिः ॥ २३३ ॥

## பதவுரை

शशाङ्काभिधानाभिधेयः—ஜாதித்துவயான்வயம் சந்திரபதப் பொருளாக

न च इष्टः—சம்மதமின்றும். (ஏதனுலெனின்,)

शशाङ्कस्य—சந்திரனுக்கு

तेजोविशेषत्वहेतोः—பிரகாச விசேஷமே வடிவமாதலின்.
பலிதத்தைக் கூறுகின்றார்

ततश्च—ஆதலினுல்

जहल्लक्षणातः—விட்டலக்ஷணையினுல்

पदाभ्याम्—பிரகிருஷ்டப்பிரகாச பதங்களால் பிரகிருஷ்டத்துவப் பிரகாசத்துவ வடிவவாச்சியார்த்தங்களைப் பரித்தியாகஞ் செய்து

पुरा उक्ता—முற்கூறிய

अखण्डार्थसिद्धिः—அவைகட்கு ஆசிரயமான கேவலசந்திர வியக்தி வடிவ அகண்டார்த்தத்தின் சித்தி

उपपन्ना—பொருத்தமுடையதேயாம்.

## விசேஷவுரை

சம்மதமேயின்றாம் = இஷ்டமே சித்திக்கின்றதில்லை. எதனாலெனின் சந்திரனுக்குத் தேஜோ விசேஷமாத்திரமே சொரூபமாதலின் ஜாதித்துவய விசிஷ்ட வியக்தித் துவயங்களின் தாதாத்மியம் அவனது சொரூப மன்றும். ஆதலால், பிரகிருஷ்டப் பிரகாச சப்தங்களால் சந்திரபத வாச்சியம் சித்திப்பதின்றும் என்பது பொருள். ஈண்டு இஃது விவக்ஷித மாம் (= சொல்வதற்கு விரும்பியது).

உலகின்கண் சந்திரனுடைய சொரூப விஷயகமாக இவன் சந்திரனா அல்லது இவன் சந்திரனா எனச்சம்சயம் உண்டாகின்றது. சம்சயத்தை நிவர்த்தித்தற் பொருட்டு இந்த ஜோதிர் மண்டலத்தின்கண் சந்திர னென்பவன் யாவன் எனச்சங்கையும் உண்டாகின்றது. சம்சயமும் சங்கையுமாகிய அவ்விரண்டும் கேவல சந்திரனுடைய சொரூப மாத்திர விஷயகமாம் சந்திர சொரூபத்தினுமன்னியம் அவைகட்கு விஷயமன்றும் ஆதலின்.

அற்றேல் சந்திரனுடைய அசாதாரண தருமம் யாது என, சங்கை யுளதாகுக எனின்—அற்றன்று சங்கைவாக்யத்தில் அசாதாரண தருமத்தைப் போதிக்கும் பதமின்மையின், லக்ஷணையைச் செய்வதன் கண்ணும் நிமித்தமின்றும். பிரத்தியக்ஷத்தால் நிர்ணயிக்கப்பட்ட பிரகிருஷ்டப் பிரகாசத்தின்கண் சொரூபமாகப் பிரகிருஷ்டப்பிரகாசம் யாது என சம்சயம் சம்பவியாமையாலும் சந்திரனுடைய ஞானமின்றி பிரகிருஷ்டப் பிரகாசத்தின்கண் சந்திரனது தர்மத்தன்மையின் ஞானம் சம்பவியாமையால் பிரகிருஷ்டப் பிரகாசம் சந்திரனுடைய தர்மமா அல்லது அந்நியத்தின் தர்மமா எனச் சங்கை சம்பவியாமையானும் என்க. எப்படியும் சந்திரனையும் பிரத்தியக்ஷத்தால் காண்கின்றான். அப்படியாயினும், சந்திர விஷயக சம்சயத்தினை அநுசரித்து சந்திர ஞானத்திற்கு ஆபாத ஞானத்தன்மை யுண்மையால் சந்திரனது அஞ் ஞானத்தோடு விரோதமின்றும். இந்தப்பிரகாரம் பிரகிருஷ்டப் பிரகாசத் தின்கண் அதன் ஞானம் அநிச்சய வடிவம் அன்றும்.

இதனானேயே சந்திரபத வாச்சியத்தன்மை முதலியது பிரசினத் திற்கு விஷயமாமென்பதுங் கண்டிக்கப்பட்டது. சந்திரனே சந்திரபத வாச்சியமாமென சாமானியரூபத்தால் சந்திரனிடத்தில் சந்திரபத வாச்சியத்

தன்மை முதலியதும் நிர்ணயிக்கப்பட்டமையின். வியக்தி விசேஷத்தின் கண் சந்திரபத வாச்சியத்தன்மையினஞ்ஞானம் பூர்வம்போன்று சந்திரனுடைய சொரூபஞானமின்றிச் சம்பவியாமையின். ஆதலால் சந்தேகமும் சங்கையும் அறியப்படாத சந்திர வடிவ பிராதிபதிக அர்த்த மாத்திரத்தை விஷயஞ்செய்வதாம். இதனுனேயே பிரகிருஷ்டப்பிரகாசம் என்னும் பிரதிவசனமும் சந்திரமாத்திர விஷயகமாம். பிரகாச விசேஷத்தின் சம்பந்தம் முதலியவற்றை விஷயஞ் செய்வதின்றாம். அன்றேல் அதாவது பிரகாச விசேஷத்தின் வைசிஷ்டியாதியை (சம்பந்தத்தை) விஷயஞ் செய்வதாக அங்கீகரிக்கின் மாமரத்தை வினவியபோது கோவிதாரத்தை (மலையத்தியை)க்கூறும் உத்தரவாக்கியம்போன்று பிரசின வாக்கியத்தினும் பின்னவிஷயகப் பிரதிவசன வாக்கியத்திற்கு அனவதேயத்தன்மை (அவிசுவாச விஷயத்தன்மை) பிராப்தியாம்.

**சங்கை:**—சந்திரனென்பவன் யாவன் என்னுமிந்த வினவினுல் வினவப்படாததாயினும் பிரகாசத்தின் வைசிட்டியத்தினை வினவப்பட்ட அர்த்தத்தின் நிச்சயத்திற்கு உபயோகியாயிருத்தலால் பிரகிருஷ்டப் பிரகாசம் என்னும் வாக்கியம் பிரதிபாதிக்கின்றது. அப்படிக்கன்றேல் எவனே ஒருவன் சந்திரனும் என உத்தர வாக்கியத்தின் பொருள் பிராப்தியாதலின் வினவப்பட்ட பொருளின் நிச்சயம் உண்டாகாது. எனின்,

**சமாதானம்:**—லாகவத்தால் பிரதிவசன வாக்கியத்திற்கு வியக்தி மாத்திரத்தின்கண் தாத்பரியம் நிச்சயிக்கப்பட்டபோது பிரகாச குண வைசிட்டியத்திற்கு வாக்கியார்த்தத்தன்மையில்லையாயினும் லக்ஷணையால் நியதவியக்தியினுபஸ்திதியின் பொருட்டு நியத வியக்தி விஷயகத் தன்மையால் வியக்தி மாத்திர விஷயகப் பிரதிவசனத்தாலும் வினவப்பட்ட அர்த்தத்தின் நிச்சயம் பொருந்துதலின். கங்கை பதத்தால் லக்ஷணையால் உண்டான ஞானம் தீரவிசேஷத்தின் நிச்சய வடிவமாயிருக்கின்றது. ஆதலால் சந்திரனிடத்து அபாதிதமாயினும் பிரகிருஷ்டப் பிரகாச வைசிஷ்டியத்திற்குத் தாத்பர்யத்தின் விஷயத்தன்மை யின்மையின் பிரகிருஷ்டப் பிரகாசம் என்னும் பிரதிவசன வாக்கியம் சந்திரப் பிராதிபதிகார்த்த மாத்திர விஷயகமாம். இப்பொருளினை இவ்வது சுலோகத்தில் வினவப்பட்ட வஸ்துவே பிரதிவசனத்தாலும்

நிர்ணயிக்கத்தக்கதாமெனக் கூறினர். அந்தப் பிராதிபதிகார்த்தமாத்திர வஸ்துவும் முக்கியார்த்தபோதக பிரகிருஷ்டப் பிரகாச பதங்களால் நிர்ணயிக்கக் கூடாதாகலின் வினவப்பட்டபொருள் சித்திக்கின்றதில்லை. சந்திரனுக்குத் தேஜோவிசேஷமாத்திரமே வடிவமாதலால் அவிசிட்டத் தன்மை வடிவமாத்திரமுண்மையின் (பிரகிருஷ்டப் பிரகாச விசிட்டத் தன்மையின்மையின்) என்க. (233)

## அவதாரிகை

அற்றேல் லக்ஷணையாலும் பிரகிருஷ்டம் பிரகாசமென்னும் இரு பதங்களால் தடயது வாச்சிய ஆசிரய இரு வியக்தியே லக்ஷிக்கத் தக்கதாம் முக்கியார்த்தத்தின் சம்பந்தமிருத்தலின். சந்திரவியக்தி லக்ஷிக்கத்தக்கதன்றாம் முக்கியார்த்த சம்பந்தமின்மையின். ஆதலால் பிரகிருஷ்டப் பிரகாசமென்னும் பதங்களால் சந்திர வியக்தியினடைவு எவ்வாறாம் என்னும் சங்கைக்குக் கூறுகின்றார்:—

## சுலோகம்

**प्रकर्षः प्रकाशातिरिक्तो न चात्र**
**प्रकाशः प्रकर्षातिरिक्तो न चात्र ।**
**बहिश्चन्द्रमस्ति स्वरूपातिरेक-**
**स्तयोश्चन्द्रमस्येकतैवातिमात्रम् ॥ २३४ ॥**

## பதவுரை

**अत्र**—இச்சந்திரனிடத்தில்
**प्रकाश अतिरिक्तः**—பிரகாசத்தினும் வேறாக
**प्रकर्षः**—பிரகர்ஷமானது
**न च**—இன்றாம்
**अत्र**—இச்சந்திரனிடத்தில்
**प्रकर्ष अतिरिक्तः**—பிரகர்ஷத்தினும் வேறாக
**प्रकाशः**—பிரகாசமானது
**न च**—இன்றாம்
**बहिश्चन्द्रम्**—சந்திரனில் நின்றும் வேறிடத்தில்

**तयोः**—பிரகர்ஷம் பிரகாசமென்னும் அவ்விரண்டற்கும்

**स्वरूपातिरेकः अस्ति**—சொரூபத்தால் பேதமுள்ளது அங்ஙன மாயினும்

**चन्द्रमसि**—சந்திரனிடத்தில்

**अतिमात्रम्**—அத்தியந்தம்

**एकता एव**—பிரகர்ஷம் பிரகாசமென்னுமிரண்டற்கும் அபேதமே யாம்

## விசேஷவுரை

பிரகர்ஷம்=அதிகத்தன்மை. பிரகர்ஷ பிரகாச வியக்திகளுக்குச் சந்திரவியக்தியோடும் பரஸ்பரமும் அபேதமிருத்தலால் கூறிய தோஷ மின்றும் என்பது கருத்து.

அற்றேல், மின்மினிப் பூச்சியின்கண் பிரகாசமுளதாயினும் பிரகர்ஷ மின்றும் அந்தகார முதலியவற்றின்கண் பிரகர்ஷமுளதாயினும் பிரகாச மின்றும். ஆதலின் பிரகர்ஷத்திற்கும் பிரகாசத்திற்கும் பேதம் சொல்லத்தக்கதாம் இவ்வாறாகவே சந்திரனிடத்தும் அவைகட்கும் பேதமேயாம் என்னும் சங்கைக்குக் கூறுகின்றார் :—சந்திரனின் நின்றும் வேறிடத்திலெனை. (234)

## அவதாரிகை

அதன்கண் அநுபவப்பிரமாணத்தைக்கூறுகின்றார் :—

## சுலோகம்

**न चन्द्रप्रकाशप्रकर्षं प्रकाशा-**
**त्तदीयात्पृथक्कश्चिदुत्पश्यतीह ।**
**तथास्य प्रकर्षप्रकाशं प्रकर्षा-**
**त्ततो नानयोरस्ति भेदे प्रमाणम् ॥ २३५ ॥**

## பதவுரை

**इह**—சந்திரனிடத்தில்

**तदीयात् प्रकाशात्**—சந்திரசம்பந்தியான பிரகாசத்தில் நின்றும்

**चन्द्रप्रकाशप्रकर्षम्**—சந்திரப்பிரகாசத்தின் பிரகர்ஷத்தை

**पृथक्**—பின்னமாக

**कश्चित्** —ஒருவனும்

**न उपपश्यति**—ஸ்பஷ்டமாகக்காண்கிறதில்லை

**तथा**—அப்படியே

**अस्य प्रकर्षात्** —சந்திரசம்பந்தி பிரகர்ஷத்தில் நின்றும்

**प्रकर्षप्रकाशम्** —சந்திரப் பிரகர்ஷப் பிரகாசத்தை பின்னமாக ஒருவனுங்காண்கின்றதில்லை

**ततः**—ஆதலால்

**अनयोः भेदे**—பிரகர்ஷம் பிரகாசம் என்னும் இவ்விரண்டின் பேதத்தின்கண்

**प्रमाणं न अस्ति**—பிரமாணமின்ரும்.

### *விசேஷவுரை*

எவ்விதமும் மின்மினிப் பூச்சியின் கண்ணும் அந்தகாரத்தின் கண்ணும் பிரகாசமும் பிரகர்ஷமும் தனித்தனி அநுபவிக்கப்படுகின்றது அப்படியாயினும் சந்திரனிடத்து பிரகர்ஷப்பிரகாசங்களின் பரஸ்பர பேதத்தையும் சந்திரனின்றும் அவைகளின் பேதத்தையும் ஒருவனும் அனுபவிக்கின்றதில்லை.

பிரகர்ஷம் பிரகாசம் முதலிய அபரியாய சத்தங்களால் பிரதி பாத்தியத்தன்மை யிருத்தலின் சந்திரனிடத்தும் பேதமுளது என்று கூறற்க. வாச்சியார்த்தத்திற்குப் பேதமுளதாயினும் லக்ஷிய வியத்தி களுக்குப் பேதமின்மையின் எப்படி கடத்தினிடத்தும் கடஞானத்தி னிடத்தும் தனியே பிரவிருத்தித்த (சத்துகடம்) சத்தியபத (கட ஞானம்) ஞானபதங்களால் லக்ஷிக்கப்பட்ட சத்தியஞான வியத்தி களுக்கு பிரம்மத்தின்கண் அபேதமோ அப்படி பிரகிருஷ்டப் பிரகாச பதங்களால் மின்மினியையும் இருளையும் வியாவிருத்தி செய்து சந்திரனது சொரூபப் பிரகாச விசேஷம் விட்டலக்ஷணையால் பிரதி பாதிக்கப் படுகின்றது ஆதலின் பிரகிருஷ்டப் பிரகாச வாக்கியம் அகண்டார்த்தபோதகமாம் இந்தப்பிரகாரம் (அலைதாடியுடையது பசு என்பதாதி) பசு முதலியவற்றின் லக்ஷண வாக்கியமும் அகண்டார்த்த நிஷ்டமாமெனா அறிக. கவாதி லக்ஷணவாக்கியமும் அவ்வவ்லக்ஷிய

சொரூபத்தின் நிச்சயத்தின் பொருட்டு பிரவிருத்தமாமாதலின், அதனினும் அன்னியார்த்தத்தன்மை பொருந்தாமையின்.

இவ்வாருகவே சத்தியம் ஞானமனந்தம் பிரம்ம என்னும் வாக்கியம் அகண்டார்த்த போதகமாம். லக்ஷணவாக்கியமாதலால், பிரகிருஷ்டப் பிரகாசாதி வாக்கியம் போன்று என்னு மிவ்வனுமானம் சித்தித்தது,

சங்கை :—இவ்வனுமானம் அப்பிரயோஜகமாம் அதாவது ஏது இருக்குக சாத்தியம் இல்லாதொழிக என்னும் வடிவினதாகிய வியபிசார சங்கையை நிவர்த்திக்கும் தர்க்கமின்றியதாம். சந்திரனது சொரூப மாத்திர விஷயகப் பிரசினம் போன்று ஈண்டு பிரம்மத்தின் சொரூப மாத்திரத்தை விஷயஞ் செய்யும் பிரசினம் காணப்படாமையின் பிரகிருஷ்டப் பிரகாசாதி வாக்கியத்திற்குப் போன்று சத்தியஞானுதி வாக்கியத்திற்கு அகண்டார்த்தத்தன்மையின் அபாவத்தின்கண் பாதக மின்மையின் எனின்.

சமாதானம்:—நீ கூறியது சரியன்று. எதனுலெனின் "பிரம்மத்தை யறிந்தவன் பரத்தையடைகின்ருன்" என்னும் சுருதியால் நிரதிசய பிருஹத் (பெரிய) வடிவ பிரம்மவிஷயக ஞானத்திற்கு பரம புருஷார்த்த சாதனத்தன்மை பிரதிபாதிக்கப்பட்டுளது. அந்தப் பிரதிபாதனமும் பிரம்மஜிக்ஞாசையை மூலமாகவுடைய பிரசினத்தின் பொருட்டேயாம். அப்படிக்கின்றேல் சாதனத்தாற்பயன் சித்தித்தலின் அதனைப் (பிரம்மஞானத்தின்கண் பரம புருஷார்த்த சாதனத்தன்மையை) பிரதி பாதித்தல் வீணேயாகும். ஆதலின் எத்துணை மாத்திரத்தின் ஞானத் தாற் பயனைக் கேட்பிக்கின்றதோ அத்துணை மாத்திர வஸ்துவின் நிர்ணயத்தின் பொருட்டுப் பிரவிர்த்தித்த இந்தச் சத்தியாதி வாக்கியமும் அத்துணை மாத்திர வஸ்துவினையே போதிப்பதாம். ஆதலின் அநுமானத்தின்கண் அப்பிரயோஜகத்தன்மை யெவ்வாறும். பிரம்மத்தினும் வேருன வைசிட்டியமானது பிரம்ம பதார்த்தத்தின்கண் சம்பவியாமையானும் என்க.

லக்ஷண வாக்கியத்தன்மை தர்ம தர்மித்தன்மையின்றிப் பொருந்துவதின்ரும். அசாதாரண தர்மமே லக்ஷணமாதலின் ஆதலால் லக்ஷண வாக்கியத்தன்மைக்கும் அகண்டார்த்தத் தன்மைக்கும்

விரோதமாம் என்று கூறற்க. எதனாலெனின் லக்ஷணம் அசாதாரண தர்மமாமென்னும் நியமமின்றாமாதலின், நியாயமதத்தில் அந்திய விசேஷ லக்ஷணத்தின்கண் அசாதாரண தர்மமின்மையின் மற்றோ எதனை விஷயஞ் செய்கின்றதாகி ஞானமானது. சஜாதீயம் முதலியவற்றில் நின்றும் தனது விஷயத்தினை வேறு பிரிக்கின்றதோ அது லக்ஷணமாம். அந்த லக்ஷணமானது பிரமாணத்தையனுசரித்து தர்மியாகுக அல்லது தர்மியாகுக. எல்லா லக்ஷண வாக்கியமுமே அகண்டார்த்தபரமாம். ஆதலின் பிரம்மலக்ஷண சத்தியாதி வாக்கியமும் அகண்டார்த்தபரமா மென்பது கருத்து. (235)

## *அவதாரிகை*

இந்தப்பிரகாரம் தத்துவமசி முதலிய வாக்கியத்தின்கண் வாக்கியத் தன்மை வடிவ ஏதுவால் ஜோதிஷ்டோமாதி வாக்கியம்போன்று விசிஷ்டார்த்தத் தன்மையினனுமானம் பிரகிருஷ்டப்பிரகாசாதி வாக்கியத்தின்கண் வியபிசாரித் தோஷத்தால் தூஷிக்கப்பட்டபோது தத்துவமசி மகாவாக்கியம் அகண்டார்த்தமாம் உபாதியினால் பின்னமான ஜீவேஸ்வரர்களின் அபேத பரவாக்கியமாதலால் பிம்பப் பிரதிபிம்பங் களின் அபேத போதக வாக்கியம் போன்று அல்லது பிரம்மபர வாக்கியமாதலால் ஸத்தியஞானாதி வாக்கியம்போன்று என்னுமபிப் பிராயத்தால் உபசம்மாரம் செய்கின்றார் :—

## *சுலோகம்*

**यथा सच्चिदानन्दशब्दास्तदर्थं**
**तथा तत्त्वमावात्मनो ब्रह्मभावम् ।**
**विरोधान्मिथो लक्षणावर्त्मनेमौ**
**किमर्थं न संभूय वक्तुं समर्थौ ॥ २३६ ॥**

## *பதவுரை*

**यथा**—எப்படி

**सच्चिदानन्दशब्दाः**—சத்து சித்து, ஆனந்தமென்னும் பதங்கள்

**तदर्थम्**—மகாவாக்கியத்தின் கண்ணுள்ள தத்பத லக்ஷியத்தினை லக்ஷணையால் போதிக்கின்றனவோ

**तथा**—அப்படி

**मिथः विरोधात्**—வாச்சியார்த்தங்களுக்கு பரஸ்பர அபேதத்தின் கண் விரோதமிருத்தலால்

**लक्षणावर्त्मना**—லக்ஷணை மார்க்கத்தால் அதாவது லக்ஷணை விருத்தியால்

**इमौ तत्त्वमौ**—இந்த தத்சப்த துவம்சப்தங்கள்

**सम्भूय**—சேர்ந்து

**आत्मनः ब्रह्मभावम्**—பிரத்தியகான்மாவிற்குப் பிரம்மத்துவத்தை அதாவது அகண்டார்த்தத்தை

**वक्तुम्**—பிரதிபாதித்தற்கு

**किमर्थम्**—எதனுல்

**न समर्थौ**—சமர்த்தமின்ரும் மற்ருே சமர்த்தமேயாம். (236)

## அவதாரிகை

எந்தப் பதத்தால் எத்தகைய பொருள் லக்ஷிக்கப்படுகின்றது. யாதினுல் வாச்சியார்த்தங்களின் விரோதம் நிவர்த்தியாம் என்னும் சங்கைக்கு உபசம்மாரத்தின்கண் முற்கூறிய பொருளை நினைப்பூட்டுகின்ருர் :—.

## சுலோகம்

प्रत्यक्त्वं लक्षयेत्त्वंपदार्थ-
स्तच्छब्दार्थो लक्षयेदद्वितीयम् ।
एवं पूर्णं प्रत्यगात्मानमेतौ
शब्दौ ब्रूतो लक्षणावर्त्मनैव ॥ २३७ ॥

## பதவுரை

**त्वं पदार्थः**—துவம்பதத்தின் வாச்சியார்த்தமானது

**प्रत्यक्तत्त्वम्**—பிரத்தியகான்மாவினை

**लक्षयेत्**—லக்ஷணையால் போதிக்கும்

**तत् शब्दार्थः**—தத்பதத்தின் வாச்சியார்த்தமானது

**अद्वितीयम्**—அத்வைதப் பிரம்மத்தை

**लक्षयेत्** -லக்ஷணையால் போதிக்கும்

**एवं**-இந்தப்பிரகாரம்

**एतौ शब्दौ**-இந்த தத்பத துவம்பதங்கள்

**लक्षणावर्त्मना एव**-லக்ஷணை விருத்தியின் வாயிலாகவே

**पूर्णं प्रत्यगात्मानम्** -பரிபூர்ண பிரத்தியகான்மாவை

**ब्रूतः**-பிரதிபாதிக்கின்றன.

## *விசேஷவுரை*

பிரத்தியகான்மா என்பதற்கு அஹங்காராதி சாக்ஷியாய் சர்வாந்தரமாயுள்ள சைதன்யமாத்திரமென்பது பொருள். ஈண்டு வாச்சியார்த்தம் போதிக்குமென்றது பதார்த்தத்திற்கு லக்ஷகத்தன்மையை அங்கீகரித்துக் கூறப்பட்டது. இவ்வாறே பின்னரும் அறிக. சர்வாந்தர சாக்ஷிக்கு சர்வ வியாபியாகிய அத்வயப் பிரம்மத்தோடு அபேதமானது தத்துவம் பதங்களின் சாமானாதிகரண்யத்தால் சித்தித்தபோது நிரதிசய பிருகத்வ சுபாவமுள்ளதாய் பிரம்மம் சித்திக்கின்றது. என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—இந்தப்பிரகாரமென. வாயிலாகவே என்பதன்கண்ணுள்ள தேற்ற ' ஏ 'காரத்தால் சக்தி முதலிய இதர விருத்தியினை வியாவிருத்தி செய்கின்றார் இதனானேயே 170வது சுலோகத்தில் கிரந்தகாரரால் மஹா வாக்கியத்தின்கண் கௌணீ விருத்தியைக் கூறினது பிரௌடி வாதத்தால் என முன் கூறிவந்தோம். **(237)**

## *அவதாரிகை*

அற்றேல் இவ்வாறங்கீகரிக்கினும் பூர்ணவஸ்துவினடைவு எவ்வாறும், பரமான்மாவின்கண்ணே பரோக்ஷத்துவாதியும் ஜீவான்மாவின் கண்ணே துக்கித்துவாதியும் நிவர்த்தியாகாமையின் என்னும் சங்கைக்குக் கூறுகின்றார்:—

## *சுலோகம்*

**पारोक्ष्यं च ब्रह्मणि प्रत्यगर्थे**
**दुःखित्वं च ध्वान्तसंभूतमाहुः ।**
**सम्यग्ज्ञानध्वस्तमोहस्य पुंसः**
**प्रध्वंसेते हेत्वभावेऽफलत्वात् ॥ २३८ ॥**

## பதவுரை

**ब्रह्मणि**—பிரம்மத்தின்கண்

**पारोक्ष्यं च**—பரோக்ஷத்தன்மையும்

**प्रत्यगर्थे**—பிரத்தியகான்மாவில்

**दुःखित्वं च**—துக்கித்தன்மையும்

**ध्वान्तसम्भूतम्**—அஞ்ஞானத்தாலுண்டானதென்று

**आहुः**—அறிஞர் கூறுகின்றனர்

அவைகட்கு அஞ்ஞானத்தாலுண்டானதாந்தன்மை சித்தித்தபோது சித்தித்ததென்னையெனிற் கூறுகின்றார்.

**सम्यग्ज्ञानध्वस्त मोहस्य**—தத்துவஞானத்தால் அஞ்ஞானம் கெடுக்கப் பட்டது எவனுக்கோ அத்தகைய

**पुंसः**—புருஷனுக்கு

**प्रध्वंसेते**—பரோக்ஷத்தன்மை துக்கித்தன்மை முதலியவை நசிக்கின்றன

**हेत्वभावे**—(எதனாலெனின்) காரணமின்றேல்

**अफलत्वात्**—காரியமின்றுமாதலின்

## விசேஷவுரை

பிரம்மத்தின்கண் பரோக்ஷத்தன்மையும் என்றது சகத்தின் காரணத்தன்மை முதலியவற்றை சமுச்சயஞ் செய்கின்றது, துக்கித் தன்மையுமென்றது சுகித்தன்மை முதலியவற்றை சமுச்சயஞ் செய்கின்றது. ஞானத்தால் அஞ்ஞானம் நாசமாகவே அதன் காரிய பரோக்ஷத்துவ துக்கித்துவாதியும் நாசமாகின்றது என்பதன்கண் சாமானிய நியாயத்தைக் கூறுகின்றார் காரணமின்றேல் காரியமின்றுமென. (238)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் வேதாந்தங்களுக்கு சருவபதங்களிலும் லக்ஷணையை யங்கீகரித்து அகண்டாகாரப்பிரம்மத்தின்கண் பரியவசானம் நியாயத்தால் உபபாதனஞ் செய்யப்பட்டது அதன்கண் இச் சங்கையுண்டாகின்றது. சருவபதங்களிலும் லக்ஷணையைக் கொள்ளுதல்

பொருத்தமன்றும் உலகின்கண் லக்ஷிய வஸ்துவிற்கு பதாந்தர வாச்சியத்தன்மை நியமமாகக் காணப்படுதலின் அப்படிக்கின்றேல் (பதாந்தர வாச்சியத்தன்மை நியமத்தை யங்கீகரியாவிடின்) லாக்ஷணிக பதங்களாலேயே லக்ஷிய விஷயகப் பிரசினத்தையும் உத்தரத்தையும் செய்யின் அதன் கண்ணும் (லாக்ஷணிக பதத்தின் கண்ணும்) லக்ஷியப் பிரசினத்தைச் செய்யின் லாக்ஷணிக பதப்பிரயோகத்திற்கு அனவஸ்தைப் பிராப்தியாமெனின்.

சமாதானம்:— கூறிய சங்கை சரியன்று லக்ஷியத்தின்கண் பதாந்தர வாச்சியத்தன்மை யின்றியும், வாச்சிய சம்பந்தி வடிவத்தால் விசாரம் முதலியவற்றால் ஆன்மாவையறிந்த புருஷனுக்கு யோக்கியதை முதலியவற்றின் மஹிமையால் சுவயமே லக்ஷிய ஞானம் சம்பவிக்கின்றது ஆதலின் லக்ஷிய விஷயக் பிரசினோத்தரங்களுக்கு அனவஸ்தை பிராப்தியின்றும் ஆதலின். தீரம் முதலிய பதங்களின் சக்தி ஞானத்திற்கு முன்பு பிரவாகம் முதலியவற்றின் சம்பந்தி வடிவமாக விசாரத்தாலறியப்பட்ட தீரம் முதலியவற்றில் கங்கை முதலிய பதத்தின் லக்ஷணை உண்டாகின்றதில்லை யென்பதில்லை. மற்றோ உண்டாகின்றதேயாம். மேலும் கரும்பு பால் முதலியவற்றின் மதுரவிசேஷம் சர்வ அனுபவ சித்தமாம் அதன்கண் எந்தப் பதத்திற்கும் சக்திக் கிரஹணம் சம்பவியாமையின். மதுரவிசேஷம் முதலியது (மதுரம் என்னும்) சமானிய சப்தத்தால் லக்ஷணையினாலேயே பிரதிபாதிக்கத்தக்கதாம். ஆதலின் பதாந்தர வாச்சியமே லக்ஷியமாம் என்னும் நியமத்தின் உலகின் கண்ணும் கூறமுடியாது.

மேலும், சத்தியஞான ஆனந்தைகரசப் பிரம்மத்தின்கண் கோ முதலியவற்றின்கண் கோமுதலிய சப்தம்போன்று ஜாதியைப் பிரவிருத்தி நிமித்தமாகக் கொண்டு வாசகசப்தம் பிரவிருத்திக்கின்றதா? அல்லது தண்டி முதலிய சப்தம் போன்று சம்பந்தத்தை நிமித்தமாகக்கொண்டு வாசக சப்தம் பிரவிருத்திக்கின்றதா? அல்லது குணவாசக சுக்லம் முதலிய சப்தங்களினின்றும் மதுப் பிரத்தியயத்திற்கு (உடைமைப் பொருள் விகுதிக்கு) லோபம் பாணினி மகரிஷியால் விதிக்கப்பட்டிருத்தலின் சுக்லம் முதலிய சப்தம் படாதியிற்போன்று குணத்தை நிமித்தமாகக் கொண்டு பிரவிருத்திக்கின்றதா? அல்லது யாசகன் பாசகன்

முதலிய சப்தம்போன்று கிரியையை நிமித்தமாகக்கொண்டு பிரவிர்த்திக்கின்றதா? அல்லது உத்பித் (யாகவிசேஷம்) முதலிய சப்தம்போன்று சொருபமாத்திரத்தை நிமித்தமாகக்கொண்டு பிரவிருத்திக்கின்றதா? சர்வப் பிரகாரத்தாலும் யாதொரு பக்ஷமும் சம்பவியாது எனக் கூறுகின்றார்:—

### சுலோகம்

षष्ठीजातिगुणक्रियादिरहिते सर्वस्य विज्ञातरि
प्रत्यक्षे परिवर्जिताखिलजगद्द्वैतप्रपञ्चे दृशौ ।
संत्यक्तव्यवधानके परमके विष्णोः पदे शाश्वते
त्वय्यज्ञानविजृम्भिता नहि गिरो मुख्यप्रवृत्तिक्षमाः ॥

### பதவுரை

**षष्ठीजातिगुणक्रियादिरहिते**—சம்பந்தம் ஜாதி குணம் கிரியை முதலியவை யின்றியதும்

**सर्वस्य विज्ञातरि**—எல்லாவற்றையும் அறிந்து கொண்டிருப்பதும்

**परिवर्जित अखिलजगत् द्वैतप्रपञ्चे**—சர்வஜகத்தில நின்றும் அப்படியே துவைதப் பிரபஞ்சத்தில் நின்றும் விடுபட்டதும்

**प्रत्यक्षे दृशौ**—பிரத்தியக்ஷமும் ஞான வடிவினதும்

**संत्यक्तव्यवधानके**—மறைப்பின்றியதும்

**विष्णोः**—விஷ்ணுவினுடைய

**शाश्वते**—சாஸ்வதமான

**परमके पदे**—பரமபதவடிவமுமாயுள்ள

**त्वयि**—பிரத்தியகான்மாவின்கண்

**अज्ञान विजृम्भिताः गिरः**—அஞ்ஞானத்தால் விலசிதமான சப்தங்கள்

**मुख्यप्रवृत्तिक्षमाः नहि**—சக்தி விருத்தியால் பிரவிருத்திப்பதில் சமர்த்தங்களன்றும்.

### விசேஷவுரை

பிரம்மத்தின்கண் சம்பந்தம் முதலியவைகளுள் யாதொன்றும் சம்பவியாமையின் சப்தம் பிரவிர்த்திப்பதின்றும் என்பது பொருள்.

அசம்பவத்தின்கண் ஏதுவைக் கூறுகின்றார் :-எல்லாவற்றையும் அறிந்து கொண்டிருப்பது மெனா. சர்வ அவபாசகம் என்பது பொருள். அற்றேல், அவ்வான்ம வஸ்து சர்வ அவபாசகமாயின் சர்வத்தினுள்ளடங்கிய தனது அவபாசகமுமாம் அங்ஙனமாகுங்கால் அவ்வான்மாவிற்கு சுவான்மாவின் கண் விருத்தி விரோதமாம் ( தானே பிரகாசகமும் பிரகாசியமுமாகிய கர்மகர்த்திருத்துவ விரோதமாம் ) ஆதலின் சர்வ அவபாசகமாவது யாங்ஙனம். எனின் அற்றன்று. அதற்கு சொப்பிரகாசத்தன்மை யுண்மையில் சுயமாகவே நித்திய அபரோக்ஷத்தன்மை யுண்மையினெனக் கூறுகின்றார் :—பிரத்தியக்ஷமெனா. அதனை உபபாதனம் செய்தற் பொருட்டு ஞானமெனப்பட்டது. அதாவது விளக்கப்படுகின்ற கடாதி பதார்த்தங்கட்கு தம்மை விளக்குகின்ற சூரியாதியின்கண் அபாவ மிருப்பது போன்று அவபாசக பிரம்மத்தின்கண் அவபாசிய சேதனுசேதனுத்மக இருவிதப் பிரபஞ்சத்தின் சூன்யத்தன்மை யுண்மை யின் அதன்கண் சம்பந்தம் முதலியவை சம்பவியா வெனக் கூறு கின்றார் :— 'விடுபட்டது'. என. ஜகத்து என்பதனல் நான்குவித சேதனப் பிரபஞ்சம் கூறப்பட்டது. துவைத சப்தத்தால் சேதனப் பிரபஞ்சத்தினும் வேறான ஜடப்பிரபஞ்சம் கூறப்பட்டது. அல்லது மாறாக விவேகிக்கத்தக்கது. அதாவது ஜகத் சப்தத்தால் ஜடப்பிரபஞ்சமும் துவைத சப்தத்தால் சேதனப்பிரபஞ்சமும் கூறப்பட்டதென அறிக. அற்றேல், அங்கிய புருஷனுடைய சம்வேதனம் ஞானவடிவமாயினும் பிரத்தியக்ஷமாவதின்றும் அது போன்று பிரம்மமும் ஞானவடிவமாயினும் அப்பிரத்தியக்ஷம் ஏனகாது என்னுஞ் சங்கைக்கு அங்கிய புருஷனுடைய ஞானம் வேறுஉபாதியினல் மறைபட்டிருத்தலின் பிரத்தியக்ஷமின்றும். சுத்தப்பிரம்மம் நிருபாதிகமாதலின் அதற்கு மறைப்பின்றும் என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார் :— மறைப்பின்றியதும் என

அற்றேல், சர்வப்பிரபஞ்சத்தின் காரண பிரம்மத்திற்கு துவைதப் பிரபஞ்சத்தின் சூன்யத்தன்மை எதனாற் கூறப்பட்டது எனின். அற்றன்று, மாயாவிசிட்ட வடிவத்தால் பிரம்மத்திற்கு துவைதப் பிரபஞ்சத்தின் காரணத்தன்மை யிருப்பினும் தனது வடிவத்தால் பரிசுத்தத்தன்மை யுண்மையின் என்னும் அபிப்பிராயத்தால் கூறு கின்றார் :— விஷ்ணுவின் பரமபதம் எனா.

சாஸ்வதம் = நிருவிகாரம். இந்த நிருவிகாரத் தன்மையானது பிரம்மத்தின்கண் குணக்கிரியைகளின் அபாவத்தின்கண் அன்யரதுவாகக் கூறப்பட்டது. இத்தகைய நிருவிசேஷப் பிரம்மத்தின்கண் பிரத்திய கான்மாவோடு அபேதபுத்தி சிஷ்யனால் செய்யத்தக்கதா மெனச்சிக்ஷிக்கின்றாராய்க் கூறுகின்றார் பிரத்தியகான்மாவின்கண் என—

மேலும் அஞ்ஞான காரியமான சப்தங்களுக்கு அஞ்ஞானத்தின் காரியவடிவ அத்தகைய பொருளோடு சம்பந்தத்தை அங்கீகரித்தல் பொருத்தமாம். உலகின்கண் சமான சுபாவமுடைய பதார்த்தங்களுக்கே பரஸ்பரம் சம்பந்தங்காணப்படுதலின். "அந்நாம ரூபங்களாலேயே வெளிப்பட்ட உருவமாயிற்று" என்னும் சுருதியினால் சப்தத்திற்கும் சப்தார்த்தத்திற்கும் அவித்தையின் காரியத்தன்மை கேட்கப்படுதலினாலும் என்க. அஞ்ஞான அதன் காரியங்களினின்றும் விருத்தவடிவ திருக்ருபப் பிரத்தியகான்மாவோடு சம்பந்தஞ் சொல்லத் தக்கதன்றாம். என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார் அஞ்ஞானத்தால் விலசிதமான என. இந்தப் பிரகாரம் யாதொரு சப்தமும் சுத்தப்பிரம்மத்தின்கண் பிரவிருத்தித்தற்கு யோக்கியமன்றாம் ஆதலின் சர்வபதங்களுக்கும் லக்ஷணையே உசிதமாம் என்பது கருத்து. (239)

## அவதாரிகை

இந்தப் பிரகாரம் நிரவயவ ஆன்மாவின்கண் ஜாதி முதலிய பிரவிருத்தி நிமித்தம் யாதொன்றும் சம்பவியாமையின் யாதொரு பதத்திற்கும் அதன்கண் சக்தி விருத்தி சம்பவியாது எனக் கூறப் பட்டது. இப்போது நிரவயவ ஆன்மாவின்கண் சக்திக் கிரஹணம் சம்பவியாமையானும் சக்தி விருத்தி சம்பவியாதெனக் கூறுகின்றார்:—

## சுலோகம்

आस्तामत्र वचःप्रवृत्तिविरहः प्रत्यक्त्वहेतोर्दृशि
व्यापाराय मनोऽपि न प्रभवति श्राम्यत्पराग्भूमिषु ।
एवं चेदखिलप्रमाणपदवीः षोढा विभिन्ना भवा-
नुल्लङ्घ्य व्यवतिष्ठते त्वयि गिरः स्यान्मुख्यवृत्तिः कथम् ॥

## பதவுரை

**अत्र दृशि**–இந்த சுயம்பிரகாச ஆன்மாவின்கண்

**वचःप्रवृत्तिविरहः**–சத்தத்திற்கு சத்தி விருத்தியால் பிரவிருத்தியின்மை

**आस्ताम्**–உளதாகுக

**प्रत्यक्त्वहेतोः**– பிரத்தியகான்மாவின்கண் சர்வாந்தாத்தன்மை வடிவ நிமித்தத்தால்

**पराग्भूमिषु**–பாஹிய விஷயங்களில்

**भ्राम्यत् मनः अपि**–சுழலுகின்ற மனதும்

**व्यापाराय**–ஆன்மாவை அறிதற்பொருட்டு

**न प्रभवति**–சமர்த்தமன்றும்

அதனுற் சித்தித்ததென்னையெனின் அதற்குக் கூறுகின்றூர்.

**एवं चेत्**–இந்தப்பிரகாரம் மனது ஆன்மாவைக் கிரஹித்தற்கு அயோக்கியமாயிருத்தலின்

**भवान्**–ஓ சிஷ்யனே நீ

**षोढाविभिन्नाः**–ஆறுபிரகாரமாகப் பிரிவுபட்டுள்ள

**अखिलप्रमाणपद्वी**:–பிரத்தியக்ஷம் முதலிய சர்வப்பிரமாணங்களின் பிரசார மார்க்கங்களான விஷயங்களை

**उल्लङ्घ्य**–கடந்து

**व्यवतिष्ठते**–நிர்விசேஷ சின்மாத்திர ரூபத்தால் நிற்கின்றுய்

அதனுல்தான் சித்தித்ததென்னை யென்னுமிடத்துக்கூறுகின்றூர்

**त्वयि**–இத்தகைய உன்னிடத்தில்

**गिरः मुख्यवृत्तिः**–சப்தத்தின் சக்தி விருத்தி

**कथं स्यात्**-எவ்வாறு பிரவிருத்திக்கும் ?

## விசேஷவுரை

இந்த நிஷ்கல ஆன்மாவின்கண் ஜாதி முதலிய பிரவிருத்தி நிமித்தமின்மையின் சப்தத்திற்கு முக்கியப் பிரவிருத்தியின்மை யுளதாகுக. ஆனுல் இத்துணை யாத்திரம் சப்தப் பிரவிருத்தியின் இன்மையில் ஏதுவன்றும். மற்றூே வேறு எதுவும் உளது என்பது கருத்து. அப்படியானுல் அந்த வேறு நிமித்தம் யாது என்னுமிடத்து அதனைக் கூறுகின்றூர் சருவாந்தரத் தன்மையென திரஷ்டிருத்தன்மை ஏதுவால் என்பது பொருள். மனதும் என்ற உம்மையால் சர்வார்த்

தங்களை விளக்கும் தன்மையாலாவது அல்லது சூட்சும வஸ்துவை நிர்த்தாரணஞ் செய்யுந் தன்மையாலாவது மனதற்கு சட்சுராதி இந்திரியங்களினின்றும் மேன்மை தியோதனம் செய்யப்பட்டது.

மனமானது ஆன்மவிஷயக ஞானத்தையுண்டு பண்ணுமாயின் அப்போது மனவடிவ கரணத்தால் திரஷ்டா அவனேயா அல்லது அன்னியனு அன்னியனெனின் அவனே ஆன்மாவாம் விஷயமன்றும் விஷயத்திற்கு அனுன்மத்தன்மை நியமமாதலின் ஓர் சரீரத்தின்கண் இரண்டு போக்தாக்களிருத்தல் தகுதியன்மையானுமென்க இதனாலேயே (விஷயத்திற்கு அனுன்மத் தன்மை நியமமாதலானேயே) அவனே யாம் என்னும் முதற்பக்ஷமும் பொருத்தமின்றியதாம் கர்த்திரு கரும விரோதமுமாம் ஆதலின் திரஷ்டாவின்கண் மனதின் வியாபாரம் சம்பவியாது என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார் பாகியவிஷயங் களிலென. மனது பாகியவிஷயங்களில் இச்சையின்றியும் மீண்டும் மீண்டும் பிரவிர்த்திக்கின்றது என்பது பொருள்.

பாகிய விஷயமென்பதனால் ஞானவிஷயத்திற்கு ஞாதாவினன்னியத் தன்மைவடிவ பராக்தன்மை தெரிசிப்பிக்கப்பட்டது சுழலுகின்ற என்பதனால் மனதிற்கு பாகியவிஷயத்திற் பிரவிருத்திக்கும் சுபாவம் தெரிசிப்பிக்கப்பட்டது, அப்படியே சுருதியும் கூறுகின்றது "பிரம்மா வானவர் இந்திரியங்களை பகிர்முகமாகச் சிருஷ்டித்தார் ஆதலினால் பாகியத்தையே பார்க்கின்றது அந்தரான்மாவைப் பார்க்கின்றதில்லை" என.

மனமானது ஆன்மாவைக் கிரகித்தற்கு அயோக்கியமாதலின் பிரத்தியக்ஷ முதலிய ஆறு பிரகாரத்தாற் பிரிவுபட்டனவும் மனதின தீனமான வியாபாரத்தையுடையனவும் ஆன சர்வப்பிரமாணங்களின் மார்க்கங்களை (விஷயங்களை) கடந்து நீ நிற்கின்றாய். நேத்திரம் முதலிய பிரமாணங்கள் மனதினதீனமான வியாபாரத்தையுடையனவாம். ஆதலின் மனதிற்கு ஆன்மா அவிஷயமாகலின் ஆன்மாவின்கண் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களும் பிரவிருத்திக்க யோக்கியமன்றும். ஆதலின் நீ பிரமாணத்திற்கு அவிஷயமாம் என்பது பொருள்.

நீ உன்னிடத்தில் என்பது முதலிய சப்தங்கள் அதிகாரியாகிய முமுக்ஷுவினால் நான் இப்படிப்பட்டவன் என அறியத்தக்கது. என்று

சூசிப்பிக்கும் பொருட்டுக் கூறப்பட்டது. இந்தப் பிரகாரம் பின்வரும் சுலோகங்களிலும் அறிந்து கொள்ளுக. பிரமாணாந்தரத்தால் சப்தத்தின் சக்திக்கிரஹணம் கூறுதல் வேண்டும். ஸ்வயம்பிரகாசத்து அவிஷயமான ஆன்மாவின்கண் பிரமாணங்களின் பிரவிருத்தி யின்றும். ஆதலின் அதன் அதீனமான சப்தத்தின் சங்கதிக் கிரஹணம் ஆன்மாவின்கண் சம்பவிக்கின்றதில்லை யென்பது கருத்து. சங்கதி = சக்தி. (240)

## *அவதாரிகை*

அற்றேல், இந்தப்பிரகாரம் லக்ஷணையினாலும் வேதாந்தம் ஆன்மாவை யெவ்வாறு பிரதிபாதிக்கும். அதற்கு விஷயத்தன்மையால் அநான்மத்தன்மை பிராப்தியாதலின் எனின். அற்றன்று பல வியாப்பியத்தன்மைவடிவ விஷயத்தன்மையால் அதற்கு அநான்மத் தன்மையின் பிராப்தியைச் செய்கின்றனையா? அல்லது விருத்தி வியாப்பியத்தன்மைவடிவ விஷயத்தன்மையால் அநான்மத்தன்மையின் ஆபத்தியினைச் செய்கின்றனையா? முதற்பக்ஷத்தில் அஃது அவ்வாறே யாம். அதாவது பலவியாப்பியத்திற்கு அநான்மத்தன்மையை யாமும் அங்கீகரிக்கின்றோம். இதனாலேயே எம்மாலும் ஆன்மா அவ்வாறு வர்ணிக்கப் படுகிறதில்லை. என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார்:—

आत्मानं न तु कर्मतामुपनयञ्छब्दो वदेल्लक्षणा-
मार्गेणापि यतः पराग्विषयवन्नास्येष्यते कर्मता ।
प्रत्यक्ता हि विरुध्यते यदि भवेदस्याऽऽत्मनः कर्मता
यद्यत्कर्म न तस्य तस्य भवति प्रत्यक्स्वभावो यतः ॥

## *பதவுரை*

**शब्दः**—வேதவாக்கியமானது

**लक्षणामार्गेणापि**—லக்ஷணாவிருத்திவாயிலாகவும்

**कर्मताम् उपनयन्**—ஆன்மாவில் பலவியாப்பியத் தன்மையை யடைவிக்கின்றதாய்

**आत्मानम् न तु वदेत्**—ஆன்மாவைப் பிரதிபாதிக்காது

அற்றேல் வேதாந்த வாக்கியங்களுக்கு ஆன்மாவில் அபரோக்ஷ ஞானத்தை யுண்டுபண்ணும் தன்மை யுண்மையின் கடாதியில்

நேத்திராதி இந்திரியத்திற்குப் போன்று ஆன்மாவில் பலத்தை யுண்டு பண்ணுந் தன்மை எதனாலின்றாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்

**पराग्विषयवत्** –பாகிய கடபடாதி விஷயத்திற்குப்போன்று
**अस्य**–இந்தப்பிரத்தியகான்மாவின்கண்
**कर्मता**–பலவியாப்பியத்தன்மை வடிவ விஷயத்தன்மை
**न इष्यते यतः**–அங்கீகரிக்கப்படுகின்றதில்லையாதலின்
**अस्य आत्मनः**–இந்தப் பிரத்தியகான்மாவின்கண்
**यदि कर्मता भवेत्** –பலவியாப்பியத்தன்மை யிருக்குமாயின்
**प्रत्यक्ता हि विरुध्यते** –பிரத்தியக் தன்மை விரோதிக்கப்படும் (பிரத்தியக்தன்மைக்கும் கர்மத்தன்மைக்கும் பரஸ்பரம் விரோதமாம் என்பது பொருள்.)

## *விசேஷவுரை*

கடாதிகள் சடமாதலின் பிரமாணத்தினதீனமான ஸ்புரணத்தின் ஆசிரயத்தன்மையின்றி கடாதிக்கு ஸ்புடத்தன்மை (விளக்கம்) சம்பவியாது ஆன்மாவோ சுயமே ஸ்புரணவடிவமாதலினானும் அதனினும் வேறாக ஸ்புரணம் சம்பவியாமையானும் அதன்கண் பிரமாண ஜன்னிய ஸ்புரணத்தின் ஆசிரயத்தன்மையின்றும் ஆதலின் பலவியாப்பியத் தன்மையின்று மென்பது பொருள்.

இரண்டாவது பக்ஷமும் அதாவது ஆன்மாவில் விருத்தி வியாப்பியத்தன்மை வாயிலாக அனுன்மதத்தன்மையின் ஆபாதனமும் சரியன்றும் " உபநிஷத மொன்றற்கே விஷயமான அவ்வான்மாவை நான் வினவுகின்றேன் " என்னுஞ் சுருதியால் ஆன்மாவின்கண்ணும் விருத்தி வியாப்பியத்தன்மை சித்தித்தலின்.

இந்தப் பிரகாரம் ஆன்மாவை விருத்தி விஷயமாமென அங்கீகரிக்கின் " அவ்வான்மா அறியப்பட்டதினின்றும் வேறு " என்னுஞ் சுருதிக்கு விரோதமா மென்று சொல்லற்க

அச்சுருதியானது பலவியாப்பியத்தன்மை மாத்திரத்தை நிஷேதிப்பதில் தாற்பரியமுடைமையின் இங்ஙனம் கொள்ளாக்கால் அனன்னியதா சித்தமும் (பிறிதோராற்றாற் பெறப்படாததும்) வர்ணிக்கப்பட்டதுமான " உபநிஷதமொன்றற்கே விஷயமான ஆன்மாவை" என்னுஞ் சுருதிக்கு விரோதமுண்டாம் என்னுமபிப்ராயத்தாற் பிரத்தியக்தன்மை எனப்பட்டது.

ஹி நிச்சயார்த்தத்தில் வந்தது. ஆன்மாவில் பலவியாப்பியத் தன்மை யிருக்குமாயின் அப்போது சுவத: சித்தத்தன்மைவடிவ பிரத்தியக்தன்மைக்கு விரோதமுண்டாம் என அன்வயஞ்செய்க இந்தப் பிரகாரம் விருத்தி வியாப்பியத் தன்மையின்கண் யாதொரு தோஷமு மின்றுமென்பது கருத்து. வியாப்தியினைக் கூறுகின்றார் எது எது என எது எது பலவியாப்பியமோ அது அது பிரத்தியக்வடிவமன்றும் என்னும் வியாப்தி கடாதியின்கண் அறியப்பட்டுளதாதலின் பிரத்தியகான்மாவின் கண் பலவியாப்பியத் தன்மையின்றும் என்பது கருத்து. ( 241 )

## அவதாரிகை

இந்தப் பிரகாரம் பிரத்தியக்ஷம் முதலிய சருவப்பிரமாணங்களின் அவிஷயத்தன்மையைக்கூறி அக்கூற்றனேயே நேத்திரம் முதலிய ஞானேந்திரியத்தின் அவிஷயத்தன்மையினையும் சித்தித்ததாகச் செய்து "கரத்தால் கிரகிக்கத்தக்கதன்று" என்பது முதலிய சுருதியை யனுசரித்து நியூனத்தன்மையைப் பரிகரித்தற் பொருட்டு கர்மேந்திரியங் களுக்கும் அவிஷயமாம் எனக்கூறுகின்றார் :—

## சுலோகம்

वागादेः खलु बाह्यवस्तु विषयो नात्मा यतो नात्मनि
व्यापारं करणस्य कस्यचिदपि प्रेक्षामहे न्यायतः ।
यत्किंचित्करणं जगत्त्रयगतं तत्प्रत्यगात्मेक्षितं
बाह्ये वस्तुनि वर्ततेऽनुभवनं तत्र प्रमाणं मतम् ॥ २४२ ॥

## பதவுரை

**वागादेः**-வாக்கு முதலிய கர்மேந்திரியங்களுக்கு

**बाह्यवस्तु विषयः खलु**-வக்தவ்யாதி வடிவசப்தாதிகளே விஷயமாம்

**आत्मा न**-ஆன்மா விஷயமன்றும்.

சப்தாதிகளே விஷயமாமென்பது எதனுலெனின் அதற்குக் கூறு கின்றார்.

**आत्मनि**-ஆன்மாவின் கண்

**कस्यचिदपि करणस्य**-(வாக்கு முதலியவைகளுக்குள்) எக்கரணத் திற்கும்

**व्यापारम्** – வியாபாரத்தினை

**न्यायतः**–யுக்தியால்

**न प्रेक्षामहे यतः**–காண்கிலேன் ஆதலின்

**जगत्त्रयगतम्**–மூன்று உலகின் கண்ணுள்ள

**यत्किंचित्करणम्** – இந்திரியம் முதலிய யாதொரு சிறிது கரண முண்டோ

**तत्**–அவையனைத்தும்

**प्रत्यगात्म ईक्षितम्** – பிரத்யகான்மாவினாலே அதிஷ்டிதமாகி அதாவது சத்தாஸ்பூர்த்தியையுடையதாய்

**बाह्ये वस्तुनि**–புறம்பிலுள்ள பொருள்களில்

**वर्तते**–பிரவிருத்திக்கின்றது

**तत्र**–இவ்விஷயத்தின் கண்

**अनुभवनं प्रमाणम्** – அநுபவமே பிரமாணமாக

**मतम्** – கருதப்பட்டுள்ளது

## *விசேஷவுரை*

முதலிய என்னும் பதத்தால் கரம் முதலியவற்றைக்கவருக. சுலோகத்தில் சப்தாதிகளே என்னும் ஏகாரம் சர்வவாதியின் பிரசித்தியைக் கூறுகின்றது. வாக்காதியானது தமது பிரசித்தமான பிரவசனம் முதலிய வியாபாரத்தால் ஆன்மாவை விஷயஞ் செய்கின்றதா? அல்லது வியாபாராந்தரத்தால் ஆன்மாவை விஷயஞ் செய்கின்றதா? முதற்பக்ஷம் சரியன்று. அஃது (பிரவசனாதி வியாபாரம்) ஆன்மாவின் கண் சம்பவியாமையின் சப்தாதியின் விலக்ஷண ஆன்மாவின் கண் வாக்காதியின் வசனாதானாதியின் கோசரத்தன்மை சம்பவிக்கின்றதில்லை ஆதலின். இரண்டாவது பக்ஷமும் சரியன்று அவ்வன்னிய வியாபாரமின்றி அநுபபத்தியின்மையின் வியாபாராந்தரம் சித்தியாமையின் என்பது பொருள். மேலும் உலகின் கண் எவ்வளவு கரணமுண்டோ அஃதெல்லாவற்றிற்கும் ஆன்மா விஷயமன்றும்: எல்லாக் கரணமுமே பிரத்தியகான்மாவினால் அதிஷ்டிதமாகி பாகிய சப்தாதியினையே விஷயஞ்செய்கின்றது. என்னுமிது எல்லோருடைய அநுபவ சித்தமாம்.

அதிஷ்டிதம்=ஆசிரயிக்கப்பட்டது (242)

### *அவதாரிகை*

ஆன்மா மனோ விபாபாரத்திற்கு விஷய மன்றுதலின் மனதின தீனமான வியாபாரமுடைய சர்வப் பிரமாணத்திற்கும் அவிஷயமாம். இத்தகைய ஆன்மாவின் கண் சக்திஞானம் சம்பவியாமையானும் சப்தப் பிரவிருத்தியின் நிமித்தமான ஜாதி முதலியவை இன்மையானும் முக்கிய விருத்தியால் சப்தத்தின் பிரவிருத்தியின்றும். என்று உபபாதனம் செய்யப்பட்டதனை உபசம்மாரம் செய்கின்றார்.:—

### *சுலோகம்*

प्रत्यग्रूपमतो न शब्दविषयो बुद्धेरवेद्यं यतो
बुद्धिर्यत्र हि विद्यते स विषयः शब्दस्य नात्मन्यसौ ।
तेनात्मानमसौ न गोचरयितुं शब्दः क्षमो मुख्यया
वृत्त्या वेतरयाऽपि तेन न तया तस्यात्मनः कर्मता ॥

### *பதவுரை*

यतः—யாதொருகாரணத்தினால்

प्रत्यग्रूपम्—பிரத்தியகான்மா

बुद्धेः अवेद्यम्—புத்திக்கு விஷயமன்றோ

अतः—அக்காரணத்தால்

शब्दविषयः न—சத்தத்திற்கு விஷய மன்றும்

ஆன்மா புத்திக்கு விஷயமன்றுயினும் சப்தத்திற்கு விஷயம் ஏன் ஆகாது என்னும் சங்கைக்குக் கூறுகின்றார்:—

यत्र हि—எவ்விஷயத்தின் கண்

बुद्धिः विद्यते—புத்திப் பிரவிருத்திக்கின்றதோ

सः शब्दस्य विषयः—அதுவே சத்தத்திற்கு விஷயமாம்

(விஷயப் பிரவேசத்தில்) சப்தத்திற்கு புத்திவிருத்தியானது துவார காரணமாயிருத்தலினால் புத்தி விருத்தியின் விஷயத்தின் கண்ணேயே சப்தத்திற்குப் பிரவிருத்தியாம். என்பது பொருள். அதனால் சித்தித்தது என்னையெனிற் கூறுகின்றார்:—

**आत्मनि**-ஆன்மாவின் கண்

**असौ न**-புத்தி பிரவிர்த்திப்பதின்ரும்

அதனுற்றன் சித்தித்தது என்னையெனுமிடத்துக் கூறுகின்ருர்:—

**तेन**-அதனுல்

**असौ शब्दः**-இந்த சத்தம்

**मुख्यया वृत्या**-முக்கிய விருத்தியினுலாவது

**इतरयाऽपि वा**-அல்லது இதர லக்ஷண விருத்தியினுலாவது

**आत्मानं गोचरयितुं**-ஆன்மாவை விஷயஞ் செய்வதற்கு

**न क्षमः**-சமர்த்தமின்ரும்

புத்தியானது ஆன்மாவின் கண் பிரவிருத்திக்கின்றதில்லை. ஆதலின் கூறிய நியாயத்தால் சக்தி ஞானம் சம்பவியாமையால் வேத சப்தமானது ஆன்மாவை முக்கிய விருத்தியாலாவது லக்ஷண விருத்தியாலாவது விஷயஞ் செய்வதற்குச் சமர்த்தமன்ரும், என்பது பொருள், லக்ஷண விருத்தியினுல் சப்த விஷயத்தன்மையின் நிஷேதமும் ஆன்மாவின் கண் பலவியாப்பியத்தன்மையின் இன்மையினபிப்பிராயத்தாற் செய்யப்பட்டது. இதனையே கூறுகின்ருர்.

**तेन**-அதனுல்

**तस्य आत्मनः**-அவ்ஆன்மாவின் கண்

**तया**-சப்தத்தின் விருத்தியால்

**कर्मता न**-பல வியாப்பியத்தன்மை வடிவ கருமத்தன்மையின்ரும்

ஆன்மா சர்வப் பிரமாணங்களின் பலவடிவம் (சுவப்பிரகாச ஞான வடிவம்) ஆதலின் அதன் கண் பலவியாப்பியத்தன்மையின்ரும், அதனுல் கர்மத்தன்மையின்ரும் என்பது பொருள். (243)

### அவதாரிகை

**சங்கை:**—ஆன்மாவிற்குப் பல வியாப்பியத்தன்மையில்லையாயின் சாஸ்திர ஜன்னிய ஞானவிஷயத்தன்மையுமின்ருகும். ஆகவே பிரம்மம் அஞ்ஞேயமாம். இவ்வாருகும்போது ஆன்மாவின் கண் "உபநிடதம் ஒன்றற்கே விஷயமான அவ்வான்மாவை" என்னும் சுருதியாற் சித்தித்ததும், (**शास्त्रयोनित्वात्**) "சாஸ்திரத்தை மூலமாக வுடைய

தாந் தன்மையால்" என்னும் சூத்திரத்தாற் சித்தித்ததும், ஆன சாஸ்திரப் பிரமாணகத்தன்மைப் பிரதிக்ஞையானது சித்திக்காது. எனக் கூறிய வியவஸ்தையைத் திடஞ்செய்தற்குச் சங்கிக்கின்றன்:—

**சுலோகம்**

**नन्वज्ञेयमिदं भवेद्यदि मम प्रत्यक्स्वरूपं ततः**
**प्रामाण्यं कथमस्य वेदशिरसस्तत्र प्रतिज्ञायते ।**
**यन्मेयं न भवेत्कदाचिदपि तद्वेदान्तवेद्यं भवे-**
**दित्येतद्वचनं पराहतपदं वक्तुं न युक्तं बुधैः ॥ २४४ ॥**

**பதவுரை**

**ननु**—சங்கை

**इदम्**—முன்பு நிச்சயிக்கப்பட்ட சுபாவமுவடய இந்த

**मम प्रत्यक्स्वरूपम्**—என்னுடைய பிரத்தியக்வடிவமானது

**यदि अज्ञेयं भवेत्**—அறியத்தகாததாகுமாயின்

**ततः**—அப்போது

**तत्र**—இப்படிப்பட்ட எனது சொரூபத்தின் கண்

**अस्य वेदशिरसः**—இந்த வேதாந்த வாக்கியத்திற்கு

**प्रामाण्यम्**—பிரமாணத்தன்மை

**कथं प्रतिज्ञायते**—சுருதியாலும் சூத்திரக்காரராலும் எதனுற் பிரதிக்ஞை செய்யப்படுகின்றது

எதனுல் என்னும் சப்தந்தால் சூசிப்பிக்கப்பட்ட தூஷணத்தையே வெளிப்படுத்துகின்றார்:— அல்லது, பிரம்மத்திற்குப் பல வியாப்பியத் தன்மை யில்லையாயினும் விருத்தி வியாப்பியத்தன்மையிருத்தலின் பிரதிக்ஞைக்குப் பாதமின்றும் என்றுசங்கித்துக் கூறுகின்றார்,-

**यत्**—யாதொருவஸ்துவானது

**कदाचिदपि**—ஓர் போதும்

**मेयं न भवेत्**—பிரமேயம் ஆவதின்றே

**तत्**—அந்த வஸ்துவானது

**वेदान्तवेद्यं भवेत्**–வேதாந்தப் பிரமாணத்தால் வேத்தியமாம்

**इति एतत् वचनम्**–என்னும் இந்த வாக்கியமானது

**पराहतपदम्**–வியாகாத தோஷமுடையதாம் ஆதலின் அத்தகைய வாக்கியம்

**बुधैः**-வித்துவான்களால்

**वक्तुं न युक्तम्**–கூறுவதற்கு யோக்கியமன்றும்.

### *விசேஷவுரை*

அப்படியானல் தர்மாதிக்குப் போன்று சாஸ்திர ஜன்னிய விருத்தி யவச்சின்ன சைதன்ய விஷயத்தன்மை பிராப்தியாம். அன்றேல் அத்தகைய சைதன்ய விஷயத்தன்மையை யங்கீகரியாவிடின் சிதசித் சம்வலிதமான (சேதன ஆன்மாவும் ஜடவிருத்தியுமாகிய இரண்டின் சமுதாயவடிவ) பிரமை விஷயத்தன்மையின்மையின் பிரம்மம் பிரமேயம் ஆவதின்றும். அதன் கண் பிராமாண்யத்தின் பிரதிக்ஞை வியாகாதமாக ஏனுவதின்று. மற்றே வியாகாதமேயாம் என்பது கருத்து. பராஹதாநி= பரஸ்பரம் விருத்தங்களான பதங்கள் எதன் கண்ணே அது பராஹத பதமாம். (244)

### *அவதாரிகை*

பிரம்மத்திற்கு சொப்பிரகாசத்தன்மையாலும் சேதனந்தரம் இன்மை யாலும் சைதன்ய விஷயத்தன்மையில்லையாயினும் பிரம்மத்தின் கண் சாஸ்திரத்தின் பிராமாண்யப் பிரதிக்ஞைக்கு விரோதமின்றும் எனப் பரிகரிக்கின்றார்:—

### *சுலோகம்*

**नैतद्वस्तुनि कल्पितस्य जगतो वाक्यप्रसूतप्रमा**
**बुद्धिर्मूलवर्गिष्यते तव निजस्वाकारमात्रग्रहात् ।**
**कर्मत्वं न करोति वाक्यजनिता बुद्धिः स्वरूपे तव**
**स्वाकारग्रहणेन केवलमियं संसारमूलं दहेत् ॥ २४५ ॥**

### *பதவுரை*

**एतत् न**–நீ கூறிய தூஷணம் சரியன்று

**वाक्यप्रसूतप्रमा**–மகாவாக்கியத்தாலுண்டான அகண்டப்பிரம்மா காரப்பிரமை வடிவ

**बुद्धिः**–ஞானமானது

**तव**–துவம்பதார்த்தத்தின்

**निजस्वाकारमात्रग्रहात्**–அசாதாரணசைதன்னிய அத்துவ்யானந்த பிரத்தியக் வடிவமாத்திரத்தினைக்கிர கித்தலால்

**वस्तुनि**–பிரம்மத்தின் கண்

**कल्पितस्य जगतः**–கற்பிக்கப்பட்ட சகத்தின்

**मूलघ्न**–காரணவடிவ அஞ்ஞானத்தினைத்தகிப்பதாக

**इष्यते**–அங்கீகரிக்கப்படுகின்றது

**वाक्यजनिता** மகாவாக்கியத்தாலுண்டான

**बुद्धिः**–ஞானமானது

**तव स्वरूपे**–ஒ சிஷ்யனே உனது சுத்த சொரூபத்தின்கண்

**कर्मत्वम्**–கருமத்தன்மை வடிவ விஷயத்தன்மையை

**न करोति**–செய்கின்றதில்லை

**केवलं स्वाकारग्रहणेन**–கேவலம் பிரத்யகான்மாவை விஷயஞ் செய்தலால்

**इयम्**–இந்த ஞானமானது

**संसारमूलम्**–சம்சாரத்தின் காரணமான அஞ்ஞானத்தை

**दहेत्**–பஸ்மஞ் செய்யும்

### *விசேஷவுரை*

கூறப்பட்ட தூஷணம் எதனாலின்றுமெனின் மகாவாக்கியத்தாலுண்டான ஞானமானது வஸ்துவின்கண் கற்பிக்கப்பட்ட சகத்தின் மூலபூதமான அஞ்ஞானத்தின் நாசஞ்செய்கின்றதாகலின் அஞ்ஞான நிவர்த்தகத்தன்மையால் பிரம்மத்தின் கண் சாஸ்திரப்பிராமாண்யம் பொருந்துமென்பது கருத்து.

அற்றேல், புத்திவிருத்திவடிவமாயினும் பிரமக்கு தன்து கோசர விஷயத்தினது அஞ்ஞானநிவிர்த்திக்குந்தன்மை சுபாவமாதலின் பிரம்மத்திற்கு சாஸ்திரஜன்னிய பிரமையின் விஷயத்தன்மை

யில்லையாயின் அந்த சாஸ்திர ஜன்னியப்பிரமைக்கு பிரம்ம விஷயக அஞ்ஞானத்தை நிவர்த்திக்குந்தன்மை எப்படிக்கூடும் எனின் அற்றன்று, பிரம்மத்திற்கும் கடாதிக்குப்போன்று விருத்திவிஷயத்தன்மை யிருக்கின்ற தேயாம். இச்சையின் விஷயத்தன்மை இச்சையின் சஜாதீயமல்லாத பதார்த்தத்தில இருப்பது போன்றும், ஞானத்தின் விஷயத்தன்மை ஞானத்தின் சஜாதீயமல்லாத தீபாதியின் கண்ணிருப்பது போன்றும் ஜடவிருத்தி, ஞானத்தின் விஷயத்தன்மை விருத்தியின் சஜாதீயமல்லாத சொப்பிரகாசபிரம்மத்தின்கண் இருப்பதில் யாதொரு விரோதமுமின்ரும் ஆதலின் விருத்திஞானத்தின் கண்ணுள்ள சைதன்னியாம்சத்தின் விஷயத்தன்மையோ சொப்பிரகாசப்பிரம்மத்தின் கண் விருத்தமேயாம். சொப்பிரகாசத்தின் கண்ணே விருத்தியவச்சின்ன சைதன்னியத்தின் விஷயத்தன்மையுளது என்பதில் யாதொரு பிரமாணமுமின்ரும். அப்படியாயினும் பிரகிருதத்தில் அதாவது பிரம்மம் விருத்திக்கு விஷயமாமென்பதில் யாதொரு குறைவுமின்ரும். அவித்தையின் விஷயமான பூர்ணசைதன்னியத்திற்கே பிரகாசிக்கின்றதாகி அவித்தையை நிவர்த்திக்குந்தன்மை பொருந்துதலின். அதன் (விஷயத்தின்) ஆகாரசாக்ஷாத்கார விருத்தியினுல் அனபிவியக்திவடிவ ஆவரணத்தின் நிவர்த்தியின்கண் பிரகாசிக்கின்ற சைதன்னியத்திற்கே யாண்டும் (கடாதிஸ்தலத்தில) அவித்தையை நிவர்த்திக்குந்தன்மையுளது ஆதலின் விருத்தியின்கண் அதனுகாரத்தன்மை மாத்திரம் அபேக்ஷிக்கப் பட்டது. அஃது ஈண்டும் உளது எனக்கூறுகின்ருர்:— துவம்பதார்த்தத்தின் என. தனது சொருபவடிவமான சைதன்ய அத்வய ஆனந்தகன யாதொரு ஆன்மாவுண்டோ அதன் ஆகாரத்தை மாத்திரம கிரஹித்த லால் அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்றது. மாத்திரபதத்தினுல் அகங்கா ராதியினை வியாவிருத்தி செய்கின்றது.

அற்றேல், அஞ்ஞானத்திற்கு கடாதிஸ்தலத்தில் தனது விஷய கடாதியினைக் கர்மமாகவுடைய கடாதியின் ஞானத்தால் நிவர்த்தி யுண்டாகின்றது. ஆதலின் ஈண்டும் அஞ்ஞானத்தன்மைவடிவ ஏதுவால் மறைக்கப்பட்ட பிரமமவிஷயக ஞான நிவர்த்தியத்தன்மை அநுமிக்கப் படுகின்றது. அநுமானத்தின் ஆகாரம் இதுவாம் பிரம்மத்தின் அஞ்ஞானம் பிரம்மகர்மக ஞானத்தால் நிவர்த்தியமாம். அஞ்ஞானத் தன்மையால், கடாதியின் அஞ்ஞானம் போன்று. என்று ஆசங்கித்து

இவ்வனுமானத்தின் கண் ஜடவிஷயகத்தன்மை உபாதியாம் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார் கர்மத்தன்மையென, மேலும் பிரம்மாகார விருத்தியினால் அபிவியக்தமான அவித்தையின் விஷயமான பிரம்மத்தினது பிரகாசமாத்திரத்தினால் அவித்தையின் நிவிருத்தி பொருந்துகின்றது ஆதலின் அவித்தையின் நிவிருத்தியில் கருமத்தன்மை பிரயோஜகமன்றும் ஆதலின் அஞ்ஞானத்தன்மைவடிவ ஏதுவிற்கு அப்பிரயோஜகத்தன்மை வடிவதூஷணமுளது என்னும் அபிப்ராயத்தாற் கூறுகின்றார் கேவலமென.

உனது சொரூபத்தில் கருமத்தன்மையினின்மை எவ்வாறுமோ அவ்வாறு இந்தஞானம் உனது சொரூபத்தைக்கிரகித்தலால் சமுசாரமூலத்தைத்தகிக்கும் என ஒட்டுக. இந்தப்பிரகாரம் வேதாந்தாதியினாற் சனித்த பிரம்மாகார விருந்திமாத்திரத்தால் பிரம்மம் விருத்தி வியாப்யமேயாம் கடாதிபோன்று பலவியாப்பியமன்றும் தருமம் போன்று விருத்தியிற் பிரதிபலித்த சைதன்னிய விஷயமுமன்றும் என்பது கருத்து. (245)

## அவதாரிகை

அற்றேல் பிரம்மாகார விருத்தியில் அபிவியக்த சைதன்னிய விஷயத்தன்மையின்றி அவித்தையாதியின் நிவிர்த்திமாத்திரத்தால் வேதாந்தங்களுக்குப் பிராமாண்யம் பரீக்ஷகரான வித்வான்களுக்கு சம்மதமின்றும் என்றாசங்கித்து பூருவமீமாம்ஸகருக்கு இத்தகைய பிராமாண்யம் சம்மதமாமெனக்கூறுகின்றார்:—

## சுலோகம்

संविद्व्युत्पादकं यद्वचनमभिमतं कर्ममीमांसकानाम्
तत्कर्मत्वं न तावत्क्षिपति घटपटाद्यर्थसंवित्स्वरूपे ।
किं त्वज्ञानापनुत्या फलवदभिमतं तत्र शिष्यस्य तद्वत्
सर्वं वेदान्तवाक्यं फलवदिदमपि प्रत्यगात्मस्वरूपे ॥

## பதவுரை

कर्ममीमांसकानाम्-பூருவமீமாம்ஸகருக்கு

संविद्व्युत्पादकम्-ஞானத்தின் சொரூபத்தினைப்போதிக்கின்ற

**यद् वचनम्**-ஞானம் அல்லது ஞாததை சொப்பிரகாசமாம் என்னும் யாதொரு வாக்கியம்

**अभिमतम्**-சம்மதமாமோ

**तत्**-அந்த வாக்கியம்

**घटपटाद्यर्थसंवित्स्वरूपे**-கடம் படம் முதலிய பொருளின் யாதொரு ஞானமுண்டோ அதன் சொருபத்தில்

**कर्मत्वम्**-ஞாதத்தன்மையை அல்லது சம்வித்விஷயக ஞானத்தை

**न क्षिपति**-உண்டு பண்ணுகிறதில்லை

உண்டு பண்ணுகின்றதில்லை என்பதன் கருத்திதுவாம். ஞாதத் தன்மையும் ஞானமும் சுவயம்பிரகாசமாதலால் அவற்றின்கண் வேறு ஞாதத்தன்மைக்காவது அல்லது வேறு ஞானத்திற்காவது சம்பந்தம் சம்பவியாமையின். ஞானத்தின்கண் பரோக்ஷ ஞான விஷயத் தன்மையை யங்கீகரிக்கின் அபரோக்ஷ விஷயத்தன்மைக்கும் சொப் பிரகாசத்தன்மைக்கும் விரோதமுண்டாம் ஆதலின் என்பது பொருள். அப்படியானால் ஞாததையின் கண்ணும் ஞானத்தின் கண்ணும் பிரமாணத்திற்குப் பயன் யாது ? என்னுமிடத்துக் கூறுகின்றார்.

**किंतु**-மற்றோ

**तत्र**-ஆண்டு

**शिष्यस्य**-சிஷ்யனது

**अज्ञानापनुत्या**-அர்த்தாகாரஞானத்தை யுண்டுபண்ணி அஞ் ஞானத்தை நிவர்த்தித்தலால்

**फलवत्**-பிரயோஜனமுடையதாக

**अभिमतम्**-அங்கீகரிக்கப்பட்டுளது

**तद्वत्**-அதுபோன்று

**इदमपि सर्वं वेदान्तवाक्यम्**-இவ்வெல்லா வேதாந்தவாக்கியமும்

**प्रत्यगात्मस्वरूपे**-பிரத்தியகான்மாவின் சொருபத்தில்

**फलवत्**-பயனுடையதாம்

### விசேஷவுரை

ஆண்டு சிஷ்யனுச்கு அதன் ஆகார ஞானத்தையுண்டுபண்ணுதல் வாயிலாக ஞானத்தின்கண் சொப்பிரகாசத் தன்மை முதலிய சம்சயாதியினை நிவர்த்தித்தலால் பயனுடையதாகக் கருதப்பட்டுள்ளது என்க. (246)

### அவதாரிகை

உலகின்கண்ணும் அதனைத் தெரிசிப்பிக்கின்ருர் :—

### சுலோகம்

**अकार्यस्वरूपस्य कार्यत्वमिष्टं यथा कारकैर्मूर्तमुत्सारयद्भिः ।**
**तथैवाप्रमेयस्य मेयत्वमस्य प्रमाणैस्तमस्तज्जमुत्सारयद्भिः ॥**

### பதவுரை

**यथा**—எப்படி

**अकार्यस्वरूपस्य**—அசாத்திய ஸ்வரூப கடாகாசம் முதலியவற்றின் கண்

**मूर्तम्**—அதனைத் திரோதானம் செய்கின்ற மண் கல் முதலியவற்றினை

**उत्सारयद्भिः**—தோண்டியெடுத்து அப்புறப்படுத்துகின்ற

**कारकैः**—ஓட்டன் குத்தாலம் முதலிய கர்த்திருகரணம் முதலிய காரகங்களால்

**कार्यत्वं इष्टम्**—சாத்தியத்தன்மை அங்கீகரிக்கப்பட்டுளதோ

**तथा एव**—அப்படியே

**अस्य अप्रमेयस्य**—அப்பிரமேயவடிவ இந்தப்பிரத்திய கான்மாவின்கண்

**तमः तज्जम्**—அஞ்ஞானத்தினையும் அதன் காரியத்தினையும்

**उत्सारयद्भिः**—நிவர்த்தி செய்கின்ற

**प्रमाणैः**—வேதாந்தம் முதலிய பிரமாணங்களால்

**मेयत्वम्**—பிரமேயத்தன்மை அதாவது பிரமாண ஜன்னிய பிரமாஞானத்தின் விஷயத்தன்மை அங்கீகரிக்கப் பட்டுள்ளது.

## விசேஷவுரை

உலகின்கண் தேவதத்தன் முதலிய கர்த்தாக்களால் குத்தாலம் முதலிய சாதனங்களால் கூபம் செய்யப்படுகின்றது. கூபமும் அவச்சின்ன ஆகாச வடிவமேயாம். அதனினும் வேருக நிரூபிக்க முடியாமையின் அவ்வாகாச வடிவ கூபத்திற்கு சாத்தியத்தன்மை சொரூபத்தாலாவது உபாதி வாயிலாகவாவது சம்பவிக்கின்றதில்லை. கல், மண் முதலிய மூர்த்தத்திரவியங்களை நிவர்த்திப்பதினும் வேருக பிரயத்தின சாத்தியமாக மற்றென்றுஞ் சம்பவியாமையின். இவ்வாருகவே எப்படி அத்தூளன மாத்திரத்தானே கூபாகாசத்திற்குச் சாத்தியத்தன்மையின் உடன்பாடோ அப்படி அப்பிரமேய வடிவ இவ்வான்மாவின்கண்ணும் பிரமாணங்களால் அஞ்ஞான அதன் காரியங்கள் கெடுதலால் பிரமேயத்தன்மை வியவகாரமாம் என்பது கருத்து (247)

## அவதாரிகை

அற்றேல் இந்தப்பிரகாரம் சிக்ஷை முதலிய ஆறு அங்கங்களோடு கூடிய வேதங்களின் அத்தியயனத்திஞலேயே உத்பன்னமான ஆன்ம ஞானத்திஞலும் அவித்தையின் நிவர்த்தி கூடும் என்று ஆசங்கித்து, திருஷ்டமும் அதிருஷ்டமுமான இருவிதப் பிரதிபந்தமின்றிய பிரம்மாகார விருத்தியில் அபிவியக்தமான பூர்ண சைதன்யத்திற்கே அவித்தையை நிவர்த்திக்குந்தன்மையுண்மையின் அத்தியயனத்தாற் சனித்த ஆன்ம ஞானத்திற்கு அவித்தையை நிவர்த்திக்கும் தன்மை இன்றென்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்ருர்:—

## சுலோகம்

वाक्योत्थापितबुद्धिवृत्तिरमला यज्ञादिभिर्निश्चला
वेदान्तश्रवणादिभिः स्फटिकवत्स्वच्छा सती तावकम् ।
रूपं दर्पणवद्बिभर्ति परमं विष्णोः पदं संनिधे-
रेतस्मादिह कारणादथ भवेत्संसारबीजक्षयः ॥ २४८ ॥

## பதவுரை

यज्ञादिभिः–யாகாதிகளால்

अमला–நிருமலமானதும்

**वेदान्तश्रवणादिभिः**-வேதாந்தத்தின் சிரவணம் முதலியவற்ருல்

**निश्चला**-நிச்சலமானதும்

**स्फटिकवत्**-படிகக்கல்போன்று

**स्वच्छा सती**-சொச்சமானதுமான

**वाक्योत्थापित बुद्धिवृत्तिः**-மகாவாக்கியத்தாலுண்டான பிரம்மாகார விருத்தியானது

**दर्पणवत्**-கண்ணுடியானது சமீபத்திலுள்ள முகம் முதலியவற்றைக் கிரகிப்பதுபோல

**सन्निधेः**-அத்தியந்தம் சமீபமாயிருத்தலால்

**विष्णोः परमं पदं**-விஷ்ணுவின் பரமபத வடிவமான

**तावकं रूपं**-உனது பிரத்தியகான்ம சொருபத்தை

**बिभर्ति**-தரிக்கின்றது

**अथ इह**-பின்பு இப்பிரம்மாகார விருத்தியின்கண்ணே

**एतस्मात् कारणात्**-அபிவியக்தமான இந்த ஞானத்தினுலே

**संसारबीजक्षयः भवेत्**-சம்சாரத்தின் காரணமான அஞ்ஞானத்தின் நிவர்த்தியுண்டாம்

## *விசேஷவுரை*

நிருமலம் = பாபமின்யறிது. நிச்சலம் = சம்சயாதியற்றது. இதனுனேயே சொச்சமாம். சமீபமாக இருத்தலினுலேயே விஷ்ணுவினுடைய சொருபத்தை அதாவது அவருடைய பிரதிபிம்பத்தை விருத்தி கிரஹிக்கின்றது. ஆதலின் விருத்தியிற் பிரதிபிம்பித்த இந்த ஞானத்தினுலேயே காரியசகித அஞ்ஞானத்தின் நிவர்த்தியாம் என்பது பொருள். (248)

## *அவதாரிகை*

அர்த்தக்கிரமத்தை அநுசரித்து இரண்டாவது சுலோகத்தினை ஆரம்பிக்கிருர்:— இந்தப்பிரகாரம் பலவியாப்பியமின்றியதும் சைதன்ய விஷயமின்றியதுமான ஆன்மாவின்கண் விதிவடிவ வேதாந்த வாக்கியங்களுக்கு பிரமாணந்தன்மை உபபாதனம் செய்யப்பட்டது, அதனை இப்போது உபசம்மாரம் செய்கின்ருர் ;—

ச்லோகம்

**एवं वेदशिरः प्रमाणमुदितं प्रत्यक्स्वरूपे तव**
**कर्मत्वं विरहय्य तत्र न हि नो बाधः प्रतिज्ञागिरः ।**
**कर्मत्वं न करोति बोधयति च स्पष्टं वचो वैदिकं**
**रूपं तावकमेवमस्य भवति प्रामाण्यमत्राऽऽत्मनि ॥ २४९ ॥**

பதவுரை

**एवं**—இந்தப்பிரகாரம்

**तव प्रत्यक्स्वरूपे**—உனது பிரத்யகான்மாவின் கண்

**कर्मत्वं विरहय्य**— பலவியாப்யத்தன்மைவடிவ கர்மத்தன்மையின்றியே

**वेदशिरः**—வேதாந்த வாக்கியம்

**प्रमाणं उदितम्**-பிரமாணமாமெனக்கூறப்பட்டது.

இந்தப்பிரகாரம் என்பதாதி வசனத்தால் **तन्त्वौपनिषदं पुरुषं पृच्छामि** என்னும் சுருதியின் கண்ணும் '**शास्त्रयोनित्वात्**' என்னும் சூத்திரத்தின்கண்ணும் சாஸ்திரப்பிரமாணகத்தன்மைவடிவப்பிரதிக்ஞையும் விருத்தமின்றும் என்க்கூறுகின்றார் :—

**तत्र**—இவ்விஷயத்தின் கண்

**नः प्रतिज्ञागिरः** – எங்களுடைய சாஸ்திரப்பிரமாணகத்தன்மை வடிவப்பிரதிக்ஞா வாக்கியத்திற்கு

**नहि बाधः**—பாதமின்றும்.

பிரதிக்ஞையின் அவிரோதத்தினையே விஸ்தரிக்கின்றார்:—

**वैदिकं वचः**—வேதவாக்கியமானது

**कर्मत्वं न करोति** – கூறிய ரீதியால் பிரத்தியகான்மாவின் கண் கர்மத்தன்மையை உண்டுபண்ணுகின்றதில்லை

**तावकं रूपम्**—உனது சொரூபத்தை

**स्पष्टं बोधयति च**—நன்றாய்ப்போதிக்கின்றது

**एवम्**—இந்தப்பிரகாரம்

**अत्र आत्मनि**—இந்தப்பிரத்தியகான்மாவின் கண்

**अस्य**—இந்த வேதாந்த வாக்கியத்திற்கு

**प्रामाण्यम् भवति**—பிரமாணத்தன்மையிருக்கின்றது (249)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் விதிமுகத்தால் பிரவிருத்தித்த சர்வவேதாந்த வாக்கியங்கட்கும் ' आत्मा वा इदं एक एव अग्र आसीत् ' ஈதனைத்தும் சிருஷ்டிக்கு முன்பு ஒரே ஆன்மாவாக இருந்தது! என்பது முதலிய சர்வ வேதத்தின் கண்ணுள்ள நிர்விசேஷ ஆன்மாவின் உபக்கிரம உப சம்மாரங்களின் ஏகத்தன்மை முதலியவாகிய லிங்கத்தாலும், " उदरं अन्तरं कुरुते " எவன் இவ்வான்மாவின் கண்ணே அற்பமாவது பேத புத்தியைச் செய்கின்றானோ அவன் பயத்தை யடைகின்றான். " என்பது முதலிய பேதமாத்திரத்தினை நிந்திக்கும் வசனத்தாலும் एकधैव अनुद्रष्टव्यम् ஒரே பிரகாரமாக ஆன்மாவை அறியவேண்டும். " तमेवैकं जानथात्मानं अन्या वाचो विमुञ्चथ " அவ்வான்மா ஒன்றனையே அறியுங்கள் அநான்ம விஷயக வாக்கியங்களை விட்டுவிடுங்கள் என்று ஆன்ம பதத்தின் பிராதிபதிகார்த்தமாத்திரமான அகண்டைகரச ஆன்மாவின் ஞேயத்தன்மையினையும் ஆன்மாவினும் வேறானவற்றின் தியாஜ்யத் தன்மையினையும் கூறும் வசனத்தாலும் இவ்வசனமானது முற்கூறிய நியாயத்தால் உபகரிக்கப்பட்டிருத்தலாலும் அகண்டைகரச பிரம்மத்தின் கண்ணே தாற்பரியம் நிரூபிக்கப்பட்டது. இப்போது இதுவுமல்ல இதுவுமல்ல என்னும் நிஷேதவாக்கியமும் பதார்த்த சோதனைவாயிலாக தத்துவமசி முதலிய மஹாவாக்கியத்திற்கு அனுக்கிரஹத்தைச் செய்வதால் அகண்டைகரச ஆன்மாவின் கண்ணேயே பரியவசானமாம் எனக்கூறுதற்பொருட்டு முதலில் இதுவுமல்ல இதுவுமல்ல அஸ்தூலம் என்பது முதலிய வாக்கியமும் தத்துவமசி முதலிய மஹாவாக்கியத்தோடு சமப்பிரதானமாம் அல்லது அந்நிஷேத வாக்யமே பிரதானமாம் என்னும் பேதத்தால் சிலருடைய மதத்தையெழுப்புகின்றார்:—

## சுலோகம்

पृष्ठेन पूर्णवपुषा क्रियते प्रतीति
नैतीतिवाक्यजनिता जगतो निषेधी ।
प्राधान्यमस्तु विधिना सममेव तस्मा-
त्तस्याश्च वा भवतु तद्वचनं प्रधानम् ॥ २५१ ॥

## பதவுரை

**नेति इति वाक्यजनिता**—அந்த இவ்வான்மா இதுவுமல்ல இதுவுமல்ல என்பது முதலிய வாக்கியத்தாலுண்டானதும்

**जगतः निषेध्री**—துவைதப்பிரபஞ்சத்தை நிஷேதஞ் செய்வதுமான

**प्रतीतिः**—ஞானமானது

**पृष्टेन**—பின்பு அதாவது பூர்ணபிரம்மவடிவமின்றிச் சர்வபேத நிஷேதத்தின் அநுபபத்தியினால்

**पूर्णवपुषा क्रियते**—பரிபூர்ணபிரம்மமே நானாகின்றேன் என்னும் வடிவினதாக ஆகின்றது

**तस्मात्**—அக்காரணத்தால்

**तस्य**—நிஷேதவாக்கியத்திற்கு

**विधिना**—விதிமுகமாகபிரவர்த்தித்த தத்துவமசி முதலிய வாக்யத்தோடு

**समम्**—சமானமாகவே

**प्राधान्यम् अस्तु**—பிரதானத்தன்மையிருக்குக

**अथवा**—அல்லது

**तद्वचनम् एव**—நிஷேதவாக்கியமே

**प्रधानम् भवतु**—விதிவாக்கியத்தை அபேக்ஷித்துப்பிரதானமாகுக

## அவதாரிகை

கூறப்பட்ட இருபொருளினையே விஸ்தரிக்கின்றார்:—

## சுலோகம்

अद्वैतीकरणं निषेधवचनादुत्पन्नबुद्धेरपि
तुल्यं तत्वमसीतिवाक्यजनितप्रत्यक्प्रतीत्या सह ।
आर्थं शाब्दमथापि वा भवतु तत्किं तेन यद्वा विधि-
र्नाक्तुं शबलार्थगोचरतया निर्भेदमर्थं क्षमः ॥ २५१ ॥

### பதவுரை

**तत्वमसीतिवाक्यजनित** – தத்துவமசி என்ற வாக்கியத்தாலுண்டான

**प्रत्यक्प्रतीत्या सह**–பிரத்தியகபின்ன பிரம்ம ஞானத்தோடு

**निषेधवचनात्**–இதுவுமல்ல இதுவுமல்ல என்பது முதலிய நிஷேத் வாக்கியத்தால்

**उत्पन्नबुद्धेः अपि**–உண்டான ஞானத்திற்கும்

**अद्वैतीकरणम्**–பிரத்தியகபின்ன பிரம்பாகாரத்தன்மை

**तुल्यम्**–சமானமாம்

**तत् आर्थम् भवतु**–அத்வயாகாரத்தன்மை அர்த்தாபத்தியாலாகுக

**अथापि वा**–அல்லது

**शाब्दम्**–சப்தத்தாலாகுக

**तेन किं**–இவ்விசேஷத்தால் யாது பயன்

**यद्वा**-அல்லது

**विधिः**–விதிவாக்கியமான்து

**शबलार्थगोचरतया**–விசிஷ்டப்பிரம்மத்தை விஷயஞ் செய்வதால்

**निर्भेदं अर्थम्**–அகண்டார்த்தத்தை

**आकर्तुम्**–போதிப்பதில்

**न क्षमः**–சமர்த்தமின்றும் நிஷேதவாக்கியமே நேரே அகண்டார்த்தத்தைப்போதிப்பதாமாதலின் அதுவே பிரதானமாம் விதி வாக்கியம் பிரதானமன்றும்

### விசேஷவுரை

அத்துவித பரிபூர்ண அதிஷ்டானப் பிரம்மமின்றி சருவப்பிரபஞ்சத்தின் நிஷேதம் பொருந்துகிறதில்லை என்னும் இவ்வர்த்தாபத்தியால் அதனதிஷ்டான் அத்துவயப்பிரம்மமே நானென்றேனென அருத்தத்தாற் பிரதீதியுண்டாம் தத்துவமசி வாக்கியத்தால் அத்துவைதப் பிரதீதியுண்டாவது போன்று என்பது பொருள். அற்றேல் நிஷேத வாக்கிய ஸ்தலத்தில் நிஷேத வாக்கியார்த்தத்தின் அநுபபத்தியால்

அத்துவயான்மாகாரஞானமுண்டாகின்றது. விதிவாக்கிய ஸ்தலத்தில் சத்தத்தாலேயே அத்துவயான்மாகார ஞானமுண்டாகிறது ஆதலின் விதிவாக்கியத்திற்கும் நிஷேதவாக்கியத்திற்கும் சமத்தன்மை எவ்வாறு கூடும் என்றுசங்கித்து இந்தப்பிரகாரம் சத்தத்தால் உண்டாதல் அர்த்தத்தாலுண்டாதல் வடிவவிசேஷமுளதாகுக அங்ஙனமாயினும் அவித்தையின் நிவிருத்தியின்கண் ஞானத்தின் பிரம்மாகாரத்தன்மை மாத்திரமே அபேக்ஷிக்கப்படுகின்றது. அத்தகையஞானம் விதி வாக்கியத்தின் கண்ணும் நிஷேதவாக்கியத்தின் கண்ணும் சமானமேயாம் ஆதலின் சத்தஜன்னியத்தன்மை அருத்தாபத்தி ஜன்னியத்தன்மை வடிவவிசேஷத்தாற்பயன் யாதொன்றுமின்றுமெனக்கூறுகின்றார் அருத்தாபத்தியாலென இரண்டாவது பக்ஷத்தினை உபபாதனஞ் செய்கின்றார் அல்லது என விதிவாக்கியம் அகண்டாகாரஞானத்தையுண்டு பண்ணுவதில் சமர்த்தமின்றும் எதனாலெனின் தத்துவமசி முதலிய வாக்கியத்திற்கு விசிஷ்டப்பிரம்மம் பொருளாதலின் அதனால் அகண்டார்த்தஞானம் சம்பவிக்கின்றதில்லை ஆதலின் அதனால் அவித்தையின் நிவிருத்தி சம்பவிக்கிறதில்லை ஆதலால் கூறிய பிரகாரத்தால் நிஷேதவாக்கியமே அவித்தையின் நிவிருத்தி வடிவபயனுடையதாய் பிரதானமாமென்பது கருத்து. (251)

## அவதாரிகை

அற்றேல் விசிஷ்டார்த்தகமாயினும் தத்துவமசி முதலிய வாக்கியத்திற்கு முற்கூறிய பிரகாரத்தால் லக்ஷணவிருத்தியால் அகண்டார்த்தத் தன்மையுளதேயாம் என்று சங்கித்து அசங்க அத்துவயப் பிரம்மத்தின்கண் வாச்சியார்த்த சம்பந்தம் சம்பவியாமையின் லக்ஷணை சம்பவிக்கிறதில்லை என்னும் அபிமானத்தாற்கூறுகின்றார்:—

## சுலோகம்

संबन्धजातविरहाच्च च लक्षणाऽस्मि-
न्संभाव्यते परिहृताखिलदृश्यराशौ ।
ब्रह्मात्मवस्तुनि ततः प्रतिषेधवाक्य-
शेषत्वमेतु विधिरित्यपि केचिदन्ये ॥ २५२ ॥

*பதவுரை*

**परिहृताखिलदृश्यराशौ**-சர்வதிருசியப்பிரபஞ்சத்தின் சமூகம் அற்ற

**अस्मिन्ब्रह्मात्मवस्तुनि**-இந்த பிரம்மவடிவ பிரத்தியகான்மாவின் கண்

**संबन्धजातविरहात्**-சம்யோகம் முதலிய சம்பந்த சமுதாய மின்மையின்

**लक्षणा**-சக்கிய சம்பந்தவடிவ லக்ஷணையானது

**न च संभाव्यते**-சம்பவிப்பதின்றும்

**ततः**-அக்காரணத்தால்

**विधिः अपि**-விதிவாக்கியமும்

**प्रतिषेधवाक्यशेषत्वम्**-நிஷேதவாக்கியத்தின் அங்கத்தன்மையை

**एतु इति**-அடையட்டும் என்று

**अन्ये केचित्**-வேறு சிலர் கூறுகின்றனர்

*விசேஷவுரை*

பிரத்தியகபின்ன பிரம்மத்தின்கண் சம்யோகம், சமவாயம், தாதாத்மியம், கார்யகாரணத்தன்மை முதலியசர்பந்தம் சம்பவியாமையின் தத்துவமசியாதி வாக்கியத்தின்கண் லக்ஷணைசம்பவியாது சம்பந்தத்தின் அபாவசித்தியின் பொருட்டு சர்வதிருசியப்பிரபஞ்சத்தின் சமூகம் அற்றது என பிரம்மம் விசேஷிக்கப்பட்டது.

அங்கத்தன்மை என்பதற்கு:-விசிஷ்டார்த்தவாசக தத்துவமசி முதலிய வாக்கியத்திற்கும் நிஷேதிக்கத்தக்க பேதத்தைப் போதிக்குந் தன்மையால் நிஷேத வாக்கியத்தின் அங்கத்தன்மை சித்திக்கின்றது என்பது பொருள். உம்மையால் முற்கூறிய பக்ஷத்தின் சமுச்சயத்தினை தியோதனம் செய்கின்றார். வேறுசிலர் என்றதனால் வக்தாக்களின் பேதங்களைக்கூறுதலானது கூறப்பட்ட மதபேதத்தின் அபிப்ராய முடையது. (252)

*அவதாரிகை*

முற்கூறிய மதத்தினைக் கண்டிக்கின்றார் :—சம்பந்த சமுதாயம் இன்மையின் என்று கூறியது அசித்தமாம் அசங்க அத்வயபிரம்மத்தின்

கண்ணும் சர்வத்துவைதப்பிரபஞ்சத்தின் ஆத்தியாசிக சம்பந்தம் அனுபவானுசாரமாய் இருத்தலின், மேலும் முற்கூறிய பிரகாரம் சத்தியம் முதலிய வாக்கியத்தால் சத்திய ஞானதிவடிவினதாகிய பிரம்மம் சித்தியாமையால் " स एषः नेति नेति " அந்த இவ்வான்மா இதுவுமல்ல இதுவுமல்ல" என்பது முதலிய வாக்கியத்தால் பிரம்மத்தைப்பராமரிசித்து துவைதப்பிரபஞ்சத்தின் நிஷேதமும் சித்திக்காது. நிஷேதத்தின் பொருட்டு ' அந்த இவ்வான்மா ' என்பது முதலிய அவாந்தரவாக்கியத்திற்கு பிரம்மத்தின்கண் லக்ஷணையை யங்கீகரிக்கின் தத்துவமசி முதலிய மகா வாக்கியத்தால் யாது அபராதஞ் செய்யப்பட்டது. அதாவது மஹாவாக்கியத்தின் கண்ணும் லக்ஷணையை அங்கீகரிக்கவேண்டும் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

## சுலோகம்

वाक्यं मुक्तिफलां धियं जनयति स्पष्टं विधिव्यापृतं
साक्षादेव तव स्वरूपकथनान्नैवं निषेधात्मकम् ।
अध्यारोपितरूपभेदविलयव्यापारनिष्ठं तव
स्वाकारग्रहणक्षमां न हि धियं कर्तुं समर्थं यतः ॥

## பதவுரை

विधिव्यापृतम्—விதிமுகத்தாற் போதிப்பதான

वाक्यम् एव—தத்துவமசி முதலிய வாக்கியமே

तव स्वरूपकथनात्—பாகத்தியாக லக்ஷணையினால் உன்னுடைய சுத்தசைதன்னிய சொரூபத்தின் அனுவாத பூர்வகம் அத்வைதப்பிரம்மத்தைப் பிரதிபாதித்தலால்

मुक्तिफलां—மோக்ஷத்தைப்பயனாகவுடைய

स्पष्टम् धियम्—அப்ரோக்ஷஞானத்தினை

साक्षात् जनयति—நேரே உண்டுபண்ணுகிறது

निषेधात्मकम्—நிஷேதமுகமாகப்பிரவிருத்திக்கின்ற நேதி நேதி என்பது முதலியவாக்கியம்

**एवं न**–இந்தப்பிரகாரம் விதிவாக்கியம் போன்று நேரே ஞானத்தை யுண்டுபண்ணுகிறதில்லை

**अध्यारोपितरूपभेदविलय**– ஆன்மாவிலாரோபிக்கப்பட்ட ஸப்பிரபஞ்சத்தன்மை வடிவ விசேஷத்தினது நிவர்த்தியில்

**व्यापारनिष्ठं यतः**–வியாபாரமுடையதாகலின்

**तव**–உன்னுடைய

**स्वाकारग्रहणक्षमाम्**-பிரம்மவடிவத்தைக்கிரகிப்பதில் ஆற்றலுள்ள

**धियम्**-ஞானத்தினை

**कर्तुं**–செய்வதற்கு

**नहि समर्थम्**–வலுவுள்ளதன்றும்

## *விசேஷவுரை*

நேரே என்பதனை உன்னுடைய சுத்த சொரூபம் என்பதனோடு அன்வயஞ்செய்யினுமமையும் (பொருத்தமாம்) ஆரோபிக்கப்பட்ட அகங்காரத்தை நிவர்த்தித்தற்பொருட்டு நேரே என்று கூறப்பட்டது. அற்றேல் நிஷேதவாக்கியத்தால் மோக்ஷசாதனஞானத்தின் உற்பத்தி நேரே உண்டாகாவிடினும் அருத்தத்தாலுண்டாம் எனின்.

அற்றன்று அத்தியயன விதியால் கிரகிக்கப்பட்ட உபநிஷத்துக்களாலேயே நேரே உண்டான ஞானத்திற்கு மோக்ஷசாதனத்தன்மை பொருந்தும்போது அருத்தத்தாலுண்டான ஞானத்திற்கு மோக்ஷசாதனத்தன்மை பொருத்தமின்மையினாலும் ஔபநிஷத மென்னுஞ்சுருதியால் பிரம்மத்தின்கண் பிரமாணாந்தரம் நிஷேதிக்கப்பட்டமையாலுமென்க.

மேலும் அருத்தத்தாலும் நான் பிரம்மம் என்னும் மோக்ஷசாதன ஞானம் நிஷேதவசனத்தாலுண்டாகின்றதா அல்லது அத்வயம் பிரம்மம் என உண்டாகின்றதா. முதற்பக்ஷம் சரியன்று இப்பக்ஷத்தில் தத்துவமசி முதலியவாக்கியத்தாலாவது அல்லது நிஷேத வாக்கியத்தாலாவது அந்த ஞானமுண்டாகின்றதாகலின் தத்துவமசி முதலிய வாக்கியத்திற்கும் நிஷேதவாக்கியத்திற்கும் விகற்பத்தால் சாதனத்தன்மை சொல்லத்தக்கதாம் இவ்வாறாகவே நிஷேதவாக்கியத்திற்கு

தத்துவமாதிவாக்கியத்தினபேக்ஷையின்மையின் சீவனையும் பிரபஞ்சம் போன்று அங்கிஷேதவாக்கியம் நிஷேதஞ் செய்யும் துவம்பதத்தின் சேஷ (அங்க)ங்களான சீவசொரூபத்தை சோதனை செய்கின்றவாக்கியங் களும் நிஷேதவாக்கியத்தால் அபேக்ஷிக்கப்படாமையின். அவ்வாக்கியத் தால் நான் பிரம்மம் என்னும் வடிவினதாகிய ஞானமுண்டாகாது மற்றோ நிஷேதமாத்திரத்திற்பரியவசிதமான ஞானமேயுண்டாம் என்னுமபிப் பிராயததாற் கூறுகின்ரூர். ஆன்மாவிலாரோபிக்கப்பட்ட என. பிர பஞ்சத்தினபாவமாத்திரத்தினைப் போதிக்கின்றது என்பது பொருள் அத்தகைய நிஷேதவாக்கியம் நான் பிரம்மம் என்னும் வடிவமுள்ள ஞானத்தினையுண்டு பண்ணுவதில் ஆற்றலுடையதன்ரும். (253)

### *அவதாரிகை*

இரண்டாவது பக்ஷமும் சரியன்றெனக்கூறுகின்ரூர்.

### *சுலோகம்*

अस्थूलादिवचः समुत्थितमतिर्नाऽऽकारमादास्यते
साक्षादद्वयवस्तुनस्तव विभोरज्ञानविच्छेदिनः ।
अज्ञातस्य हि वस्तुनो न हि धिया स्वाकारसंवेदनं
मुक्त्वा तद्विषयस्य विभ्रमकृतो ध्वान्तस्य विध्वंसनम् ॥

### *பதவுரை*

**अस्थूलादिवचः समुत्थितमतिः** — " தூலமற்றது, அணுவற்றது, குறிலற்றது, நெடிலற்றது," என்பது முதலிய சர்வத் துவைதப்பிரபஞ்சத்தின் நிஷேதவசனத்தா லுண்டான ஞானம்

**अज्ञानविच्छेदिनः**—அஞ்ஞானத்தை நாசஞ்செய்யாததும்

**विभोः**—பரிபூர்ணமும்

**अद्वयवस्तुनः**—அத்வைதவஸ்துவுமான

**तव**—உன்னுடைய

**आकारम्**—வடிவத்தினை

**साक्षात्**—நேராகவாவது அல்லது அர்த்தத்தாலாவது

**न आदास्यते हि**—கிரஹிக்கப்படமாட்டாது ஆதலின்

சாக்ஷாத் என்னும் பதம் அர்த்தத்தால் என்பதற்கும் உபலக்ஷணமாம். விருத்தியினுல் அபிவியக்தமான சைதன்னியமே அஞ்ஞானத்தின் நிவர்த்தகமாம். என்னும் அபிப்பிராயத்தால் அஞ்ஞானத்தை நாசஞ் செய்யாதது எனப்பட்டது. நிஷேதவாக்கியஜன்னிய ஞானமானது அத்வய வஸ்துவின் வடிவத்தினைக் கிரஹிக்காதொழிக அதனுல் என்னை? என்னும் சங்கைக்கு அப்படியாயின் இஷ்டசித்தியுண்டாகாது என சாமான்ய நியாயத்தால் கூறுகின்றார்:—

**अज्ञातस्य वस्तुनः**–அறியப்படாத வஸ்துசம்பந்தியான

**धिया**–அந்தக்கரணவிருத்தியினுல்

**स्वाकारसंवेदनम् मुक्त्वा**–மறைக்கப்பட்ட சொரூப விசேஷத்தின் ஸ்புரணமின்றி

**तद्विषयस्य**–வஸ்துவை விஷயமாகவுடையதும்

**विभ्रमकृतः**–பிராந்திக்கு ஏதுவானதுமான

**ध्वान्तस्य**–அஞ்ஞானத்தின்

**विध्वंसनम्**–நிவர்த்தியானது

**न हि**–உண்டாகிறதில்லை

அஞ்ஞானமானது தனது விஷயத்தின் ஸ்புரணத்தினுலேயே நிவர்த்தியாகின்றது. அன்னியத்தின் ஸ்புரணத்தினுலன்று ஸ்புரணமின்றி கேவலம் நிஷேதமாத்திரத்தாலுமன்று அதிப்பிரசங்கம் வருதலின் ஸ்புரணமும் பிரமாண ஜன்னிய விருத்தியினதீனமாம். ஆதலின் மறைக்கப்பட்டவஸ்துவை விஷயஞ்செய்கின்ற பிரமாண ஜன்னிய விருத்தியானது அவசியம் அங்கீகரிக்கத்தக்கதாம் என்பது கருத்து.

## *அவதாரிகை*

அதனுல் என்னையென்றுசங்கித்துக் கூறிய நியாயத்திற்குச் சிறந்த திருஷ்டாந்தத்தைத்தெரிவிக்கின்றவராய் தார்ஷ்டாந்தத்தில் அஃது (வஸ்துகோசர பிரமாணவிருத்தி) இல்லையாயின் துக்க நிவர்த்தியுண்டாகாதெனக்கூறுகின்றார்:—

## *சுலோகம்*

**रज्ज्वज्ञानविजृम्भितस्य फणिनो रज्जुप्रकाशक्षमं**
**विज्ञानं विरहय्य न प्रशमनं दृष्टं निषेधे कृते ।**

तद्वत्प्रत्यगविद्यया विरचितं संसारदुःखं न तत्-
संवित्तिं विरहय्य शाम्यति धिया नेतीति शब्दोत्थया ॥

*பதவுரை*

**रज्ज्वज्ञानविजृम्भितस्य**—ரஜ்ஜுவின் அக்ஞானத்தால் ஆரோபிக்கப் பட்ட

**फणिनः**—சர்ப்பத்திற்கு

**निषेधे कृते**—இது சர்ப்பமல்ல என நிஷேதஞ் செய்யப்பட்ட போதிலும்

**रज्जुप्रकाशक्षमम्**—இது ரஜ்ஜு என்று அதன் அதிஷ்டான ஆவிருத ரஜ்ஜுவிசேஷத்தினை விளக்குவதில் ஆற்றலுள்ள

**विज्ञानं विरहय्य**—ஞானமின்றி

**प्रशमनम्**—சர்ப்பத்திற்கும் அதன் ஏதுவான அஞ்ஞானத்திற்கும் நிவர்த்தியானது

**न दृष्टम्**—உலகின்கண் பார்க்கப்படவில்லை

**तद्वत्**—அதுபோன்று

**प्रत्यगविद्यया**—கூடஸ்தான்மாவின் அஞ்ஞானத்தால்

**विरचितम्**—உண்டுபண்ணப்பட்ட

**संसारदुःखम्**—சம்சார துன்பமானது

**तत्संवित्तिं विरहय्य**—கூடஸ்தான்மாவின் ஞானமின்றி

**नेति इति शब्दोत्थया**—இதுவுமல்ல இதுவுமல்ல என்னும் நிஷேத் வசனத்தாலுண்டான

**धिया**—ஞானத்தால்

**न शाम्यति**—நிவர்த்தியாவதின்றும்

*விசேஷவுரை*

ஜீவனுக்கு நித்திய முக்தமும் அத்வயமுமான பிரம்மத்தின் அபேத அஞ்ஞானத்தினால் சம்சாரமாம் ஆதலின் அவ்வபேதத்தின் பிரகாசமின்றி அதன் அஞ்ஞானமும் அதனை மூலமாகவுடைய சம்சாரமும் நிவர்த்தி ஆகாது. ஆதலின் நிஷேதவாக்கிய ஜன்னிய அத்வயம் பிரம்மம் என்னும்

ஞானம் மோக்ஷசாதனமன்றும். ஆதலால் நிஷேத்வாக்கியத்திற்குத்தத்வ மசியாதி வாக்கியத்தோடு சமத்தன்மையின்றும். இங்ஙனங்கூறியதால் அதுவே (நிஷேதவசனமே) பிரதானமாம் என்னும் பக்ஷமும் கண்டிக்கப் பட்டதாக அறியத்தக்கது. (255)

## அவதாரிகை

அப்படியானல் தூலமல்ல என்பது முதலிய வசனத்திற்குப்பயன் யாது மோக்ஷசாதனஞானம் விதிவாக்கியத்தாலேயே சித்தித்தமையின் என்றுசங்கித்து பதார்த்தசோதனையைச் செய்யுந்தன்மையுண்மையால் நிஷேதவாக்கியதிற்கு தத்துவமசி முதலிய வாக்கியத்தின் அங்கத் தன்மையாமெனக் கூறுகின்றார்:—

## சுலோகம்

अस्थूलादिवचो निषेधकतया भेदस्य संशोधनात्
वाक्यार्थान्वयसिद्धये तु घटते वाच्यार्थलक्ष्यार्थयोः ।
एवं तत्त्वमसीति वाक्यगतयोस्तत्त्वंपदोक्तार्थयोः
संशुद्ध्यैव तु नेति नेति वचनं मोक्षाय साक्षान्न तु ॥

## பதவுரை

**अस्थूलादिवचः**–தூலமல்ல என்பது முதலிய வாக்கியமானது

**भेदस्य**–துவைதப்பிரபஞ்சத்தினை

**निषेधकतया**-நிஷேதித்தலால்

**वाच्यार्थलक्ष्यार्थयोः**–வாச்சியார்த்தங்களினின்றும் பிரத்தியக் வடிவமும் பிரம்மவடிவமுமான லக்ஷியார்த் தங்களை

**संशोधनात्**–நன்கு சோதித்தலால்

**वाक्यार्थान्वयसिद्धये**-அகண்டவாக்கியார்த்த சித்தியின் பொருட்டு

**घटते**-வியாபாரமுடையதாகின்றது (ஏதுவாகின்றது)

**एवम्**–இந்தப்பிரகாரம் அஸ்தூலாதி வாக்கியம் போன்று

**नेति नेति वचनम्**–இதுவுமல்ல இதுவுமல்ல என்னும் வாக்கியமும்

**तत्त्वमसीति वाक्यगतयोः**- தத்துவமசி மகாவாக்கியத்தின் கண்ணுள்ள

**तत्त्वपदोकार्थयोः**–தத்பதத்துவம்பதங்களால் கூறப்பட்ட அருத்தங்களின்

**संशुद्ध्या एव तु**–பரிசுத்தியைச் செய்வதனுலேயே

**मोक्षाय**–முக்தியின் பொருட்டாகின்றது

**न तु साक्षात्**–நேரே மோக்ஷத்தின் பொருட்டன்ரும்

### விசேஷவுரை

நன்கு சோதித்தலாவது சைதன்னியானந்த ஏகரசத்தின் நிச்சயமாம், அல்லது **वाच्यार्थलक्ष्यार्थयोः** = வாச்சியார்த்தமும் லக்ஷியார்த்தமுமாகிய அவைகளின் பரிசோதனையைச் செய்தலால் அதாவது வாச்சியார்த்தத்தில் வாக்கியத்திற்குத் தாற்பரியமின்ரும்மற்ரே லக்ஷியமாத்திரத்தில் தாற்பரியமாம் என்னும் நிச்சயமே அவைகளின் பரிசோதனையாம் இவ்வாருகவே நிஷேத வாக்கியம் விதிவாக்கியத்தின் சேஷமேயாகும், விபரீதமன்ரும் (விதிவாக்கியம நிஷேதவாக்கியத்தின் சேஷமன்ரும்) நிஷேத வாக்கியம் பிரதானமுமன்ரும் என்னும்பிப்பிராயத்தாற் கூறுகின்ருர் இந்தப் பிரகாரமென. (256)

### அவதாரிகை

இந்தப் பிரகாரம் நிஷேத வாக்கியத்திற்கு அஞ்ஞானப் பிரபஞ்சத்தின் நிஷேதத்தைப் பிரதிபாதித்தல் வாயிலாக தத்துவமசி முதலியவற்றில் அந்தர்ப்பாவம் தரிசிப்பிக்கப்பட்டது. வேறு சிலபேர்கள் தத்துவமசி முதலிய வாக்கியார்த்த ஞானத்தின் சாமர்த்தியத்தாற் சித்தித்த துவைத நிஷேதத்தின அனுவாதப பிரகாரத்தால் துவைத நிஷேத வாக்கியமானது மஹா வாக்கியத்திற்கு அனுக்கிரஹம் செய்வதாம. துவைத நிஷேதத்தின் அநுவாதத்தாலும் மஹா வாக்கயத்திற்கு அத்வைதத்தின்கண் தாத்பர்யம் சித்தித்தலின் எனக் கூறுகின்ருர்கள், அதனையும் அநுமோதிக்கின்ருர் :—

### சுலோகம்

**अन्ये पुनर्विधिवचोजनितात्मबुद्धि-**
**सामर्थ्यसिद्धमनुवक्ति निषेधवाक्यम् ।**

द्वैतोपमर्दमिति शासति शिष्यवर्गं
तच्च प्रशस्तमनवद्यमभीष्टमेव ॥ २५७ ॥

### பதவுரை

**अन्ये पुनः**–வேறு சிலரோ

**विधिवचो जनित आत्मबुद्धि**–தத்துவமசி முதலிய விதி வாக்கியத்தாலுண்டான நான் அத்வயப்பிரம்மம் என்னும் ஞானத்தின்

**सामर्थ्यसिद्धम्**–சாமர்த்தியத்தால் சித்தித்த

**द्वैतोपमर्दम्**–துவைதத்தின் நிஷேதத்தினை

**निषेधवाक्यम्**–நேதி நேதி என்பது முதலிய நிஷேதவாக்கியமானது

**अनुवक्ति इति**–அநுவதிக்கின்றது என

**शिष्यवर्गम्**–சீடர் கூட்டத்தினை

**शासति**–ஆளுகிறார்கள்

**तच्च प्रशस्तम्**–அந்த சாசனமும் ( ஆளுகையும் ) சிறந்ததேயாம்

**अनवद्यम्**–தோஷமின்றியதுமாய்

**अभीष्टमेव**–ஆதலின் எமக்கு சம்மதமேயாம்

### விசேஷவுரை

தத்துவமசி முதலிய வாக்கியத்தால் நான் அத்வயானந்தப் பிரம்மம் என்று வாக்கியார்த்த ஞானம் உண்டாகும்போது நான் இப்படிப்பட்டவனுயின் மூன்று காலத்திலும் என்னிடத்துத் துவைதம் இன்ரும் என துவைதாபாவம் நிச்சயிக்கப்படுகின்றது. ஆதலின் அதனை நிஷேத வாக்கியம் அனுவதிக்கின்றது. ஆனுல் அதனைப் பிரதிபாதிக்கின்றதில்லை என்பது பொருள். நிஷேத வாக்கியத்திற்கு இந்தப்பக்ஷத்தில் தனியே தாற்பரியமின்மையின் தாத்பரிய லாகவமுளது. ஆதலின் இந்த சாசனமானது சிறந்ததாம் பாதிக்கப்படாமையால் தோஷமின்றியதுமாம். பிரபஞ்சத்தின் நிஷேதமின்றியும் திருசியத்தன்மை முதலிய ஏதுவால் சித்தித்த பிரபஞ்சத்தின் மித்தியாத் தன்மை மாத்திரத்தால் விதி வாக்கியத்திற்கு அத்வயப்பிரம்மத்தைப் பிரதிபாதிக்குந்தன்மை

பொருந்துதலின் இதனையே அபீஷ்டமேயாம் என்பது பொருள். அபீஷ்டம் = நன்கு விரும்பப்பட்டது. (257)

## அவதாரிகை

விதிவாக்கியத்தின் சாமர்த்தியத்தாற் சித்தித்த நிஷேதத்தின் அநுவாதத்தினை லௌகிக த்ருஷ்டாந்தத்தாலுங் கூறுகின்றார் :—

## சுலோகம்

**दृष्टश्च रज्जुविधिनाऽवगतार्थवस्तु-**
**सामर्थ्यसिद्धभुजगप्रशमानुवादः ।**
**रज्जुस्तवाग्रत इयं न भुजङ्गमोऽय-**
**मित्यत्र तद्वदिह योजयितव्यमेतत् ॥ २५८ ॥**

## பதவுரை

**तव अग्रतः**—உனது எதிரிலே கிடக்கின்ற

**इयं रज्जुः**—இது ரஜ்ஜுவாம்

**अयं न भुजङ्गमः**—இது சர்ப்பமன்றாம்

**इति अत्र**—என்னும் ஆப்த வாக்கியத்தின்கண்

**रज्जुविधिना**—இது ரஜ்ஜு என்னும் விதி வாக்கியத்தால்

**अवगतार्थवस्तु**—அறியப்பட்ட வஸ்து ஸ்வரூபத்தின்

**सामर्थ्यसिद्ध**—சாமர்த்தியத்தாற்சித்தித்த

**भुजगप्रशमानुवादः**—சர்ப்பாபாவத்தின் இது சர்ப்பமன்று என்னும் அநுவாதமானது

**दृष्टः**—காணப்பட்டுள்ளது.

**तद्वत्**—அதுபோன்று

**इह च**—ஈண்டும்

**एतत् योजयितव्यम्**—இந்த நிஷேத வாக்கியமானது அநுவாதமாகப் பொருத்தத்தக்கதாம்

### விசேஷவுரை

ஆப்த வாக்கியத்தின்கண் அநுவாதம் காணப்பட்டுள்ளது என ஒட்டுக. (258)

### அவதாரிகை

இந்தப் பிரகாரம் நிர்விசேஷப் பிரம்மத்தின்கண் மஹாவாக்கியத்தின் தாத்பரியமாம் ஆதலின் அதன் அனுகூலமாக நிஷேதவாக்கியத்திற்கு மஹாவாக்கியத்தின் அங்கத்தன்மையாம். மோக்ஷத்தைப் பயனாகவுடைய ஞானத்தின் உற்பத்தியோ தத்துவமசியாதி வாக்கியத்தினாலேயே உண்டாம் என்று கூறப்பட்டது. இவ்விஷயத்தின் கண்ணேயே வேறு யுக்தியினைக் கூறுகின்றார் :—

### சுலோகம்

अस्यैव तत्त्वविनिवेदनशक्तिभाजः
संसारमूलविनिवृत्तिफलप्रसूतौ ।
सामर्थ्यमस्ति षड्भिः परिबृंहितत्वा-
द्वेदान्तभूमिगतपञ्चविधार्थवादैः ॥ २५९ ॥

### பதவுரை

**तत्त्वनिवेदनशक्तिभाजः**— பரமார்த்த வஸ்து வினைக்கருப்பத்தில் உடைய விசிஷ்டத்தினையறிவிக்குமாற்றலுடைய

**अस्य एव**—இந்தத் தத்துவமசி முதலிய வாக்கியத்திற்கே

**संसारमूलविनिवृत्ति फलप्रसूतौ**— சம்சாரத்தின் காரணமான அஞ்ஞான நிவர்த்தியினைப் பயனாகவுடைய ஞானத்தையுண்டுபண்ணுவதில்

**सामर्थ्यमस्ति**—ஆற்றலிருக்கின்றது

தத்துவம்=பரமார்த்த ஸத்வஸ்து, அதனை கருப்பத்தில் உடையது மாயா விசிஷ்டப்பிரம்மம் அதனையறிவிப்பதில் ஆற்றலுடையது தத்துவமசி மஹாவாக்கியம், ஆற்றலுடையது என்னும் இவ்விசேஷணம் ஏது கருப்ப விசேஷணமாம் இந்த மஹாவாக்கியத்திற்கே சமுசார நிவர்த்தக

ஞானத்தையுண்டுபண்ணுவதில் ஆற்றலுள்ளது என்பதன்கண் யுத்தியினைக் கூறுகின்றார்.

**पटुभिः**—சமர்த்தங்களான

**वेदान्तभूमिगत पञ्च विधार्थवादैः** } வேதாந்த பூமிகளிலறியப்பட்ட ஐந்துவித அருத்தவாதங்களால்

**परिबृंहितत्वात्**—மகாவாக்கியம் உபகரிக்கப்பட்டிருத்தலின்

வேதாந்தங்களிலறியப்பட்ட = உபநிஷத்துக்களில் படிக்கப்பட்ட, சமர்த்தங்களான அருத்த வாதங்களால் உபகரிக்கப்பட்டிருத்தலின் மகாவாக்கியத்திற்கு தத்துவ ஞானத்தையுண்டுபண்ணுமாற்றலிருக்கின்றது என ஒட்டுக.

### விசேஷவுரை

அருத்தவாத வாக்கியங்களுக்கு விதிவாக்கியத்தோடேயே அன்வயமாமென்பது பிரசித்தம் வேதாந்த பாகத்தின்கண்ணும் இனிக்கூறப்படும் ஐந்துவித அருத்தவாதங்களிருக்கின்றன அறியப்படாததையறிவிக்குந்தன்மையால் விதிவாக்கியத்தின் ஸ்தானத்திலுள்ள தத்துவமசி முதலிய வாக்கியத்திற்கே அவ்வர்த்தவாதங்களால் உபோத்பலனம் (ஒத்தாசை) காணப்படுகிறது நிஷேத வாக்கியத்திற்கன்றும் ஆதலின் அருத்தவாதத்தோடுகூடிய தத்துவமசியாதி வாக்கியத்திற்கே பயனுடைப் பிரமிதியையுண்டுபண்ணுந்தன்மையுளது என்பது பொருள். (259)

### அவதாரிகை

அவ்வர்த்தவாதங்களையே காண்பிக்கின்றவராய் தத்துவமசியாதி வாக்கியத்திற்கு அவ்வர்த்தவாதத்தின் அநுக்கிரகமிருத்தலால் புருஷார்த்த சாதன ஞானத்தின் ஏதுத்தன்மை பொருந்துகின்றது நிஷேதவாக்கியத்திற்கன்றுமெனக் கூறுகின்றார்:—

### சுலோகம்

**सृष्टिस्थितिप्रलयसंयमनप्रवेश-**
**व्यापारजातकथनच्छलतः प्रवृत्तैः ।**
**सानुग्रहादवगतिः खलु तत्वमादे-**
**र्वाक्यात्परस्य घटते न ततोऽपरस्मात् ॥ २६० ॥**

### பதவுரை

**सृष्टि**–ஆகாசாதிப் பிரபஞ்சத்தினுற்பத்தியும்

**स्थिति**–அதற்கு அதன் கண்ணேயே திதியும்

**प्रलय**–அதற்கு அதன் கண்ணேயே லயமும்

**संयमन**–நியந்திருத்தன்மையும்

**प्रवेश**–சீவரூபத்தால் பிரதிபலனமுமாகிய

**व्यापारजात**–வியாபார சமுதாயத்தினை

**कथनच्छलत:**–பிரதிபாதிக்கும் வியாஜத்தால்

**प्रवृत्तै:**–பிரவிருத்தித்த அருத்த வாதங்களால்

**सानुग्रहात्** –செய்யப்பட்ட அநுக்கிரகத்தோடுகூடிய

**तत्वमादे: वाक्यात्**–தத்துவமசி முதலிய விதிவாக்கியத்தால்

**परस्य**–பரமாத்மாவின்

**अवगति:**–சாக்ஷாற்காரம்

**घटते**–பொருந்துகின்றது

**तत:**–தத்துவமசி முதலிய விதிவாக்கியத்தினும்

**अपरस्मात्** -வேருன நிஷேத வாக்கியத்தால்

**न**–பொருந்துவதின்றும்

### விசேஷவுரை

ஆகாசாதிப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தல் அதனைப் பாலனஞ் செய்தல அதனைச் சம்மரித்தல் அதனை நியமனஞ்செய்தல் அதில் சீவ ரூபத்தால் பிரவேசித்தல் ஆகிய வியாபாரங்களைப் பிரதிபாதித்தல் வடிவ வியாஜத்தால் பிரவிருத்தித்த அருத்தவாதங்களால் செய்யப்பட்ட யாதொரு அநுக்கிரகமுண்டோ அதனோடு கூடிய தத்துவமசி முதலிய வாக்கியத்தால் என ஓட்டுக. வேதாந்தங்களில் **"यतो वा इमानि भूतानि जायन्ते येन जातानि जीवन्ति यत्प्रयन्त्यभिसंविशन्ति" "एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठत:" "स एष इह प्रविष्ट आनखाग्रेभ्य:"** "எதில் நின்றும் இப்பூதங்கள் உண்டாகின்றனவோ எதனால் உண்டானவை ஜீவிக்கின்றனவோ எதன்கண் அவ்வடிவமாய் லயத்தையடைகின்றனவோ" "ஏ கார்க்கி!

இந்த அக்ஷரப் பிரம்மத்தின ஆணையினுல் சந்திர சூரியர்கள் நியமிக்கப் பட்டவராய் இருக்கின்றனர்." "அந்த இவ்வான்மா இத்தேகத்தின்கண் நகத்தின் நுனிபர்யந்தம் பிரவேசித்துள்ளார்." என்பது முதலிய வாக்கியங்கள் கேட்கப்படுகின்றன. அவ்வாக்கியங்கள் அர்த்த வாதங் களேயாகும். நிர்க்குணப் பிரம்மப் பிரகரணத்தின்கண் இருத்தலாலும் சுயம் பிரயோஜனம் இன்மையினுல் வேதாந்த அர்த்தத்திற்கு அங்கத் தன்மையினுலும் என்க. அவற்றுள் சிருஷ்டி திதி சம்மாரமென்னும் மூன்றைப் பிரதிபாதித்தலால் காரணப் பிரம்மத்திற்குப் பிரபஞ்சத்தின் பேத நிஷேதமானது காரியங்காரணத்தோடு அனன்னியமாமென்னும் நியாயத்தாற் சித்திக்கின்றது. நியமனத்தைப் பிரதிபாதித்தலால் நியந்தாவாகிய காரணத்திற்குச் சேதனத்தன்மை சித்திக்கின்றது. பிரவேசத்தைப் பிரதிபாதித்தலால் பரமாத்மாவிற்குச் சீவ அனன்யத் தன்மை சித்திக்கின்றது. ஆதலின் இவ்வர்த்தவாத வாக்கியங்களால் அத்வய சைதன்யான்மக பிரத்தியக் பிரம்மத்தின் அபேதபரமான தத்துவமசி முதலிய விதி வாக்கியத்தின் பொருளையே திடஞ்செய்தலால் தத்துவமசி முதலிய வாக்கியத்திற்கே அர்த்தவாத வாக்கியங்களாற் செய்யப்பட்ட உபகாரத்தை யுடையதாந்தன்மை உளது. நிஷேத வாக்கியத்திற்கு எவ்வாற்றுனுமின்றும். சிருஷ்டி முதலிய ஐந்தனுள் சிருஷ்டி ஸ்திதிகளைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்களுக்கு ஒருவாறு நிஷேத ஸ்தலத்தில் நிஷேத்தியப் பிரபஞ்சத்தைச் சமர்ப்பிக்குந் தன்மை யினுல் நிஷேத வாக்கியத்திற்கு அனுக்கிரஹத்தைச் செய்யுந் தன்மை இருந்தபோதிலும் பிரளயம் முதலானவற்றைப் பிரதிபாதிக்கும் வாக்கியங் களுக்கு நிஷேத வாக்கியத்திற்கு உபயோகத்தைச் செய்யுந் தன்மை இன்றேயாம். இந்தப்பிரகாரம் சம்யமனம் முதலிய விசேஷத்தைக் கூறும வாக்கியத்திற்கும் உபயோகமேயின்றும். ஆதலின் தத்துவமசி முதலிய வாக்கியத்தினலேயே அதன் பொருளான அத்வயப்பிரமமத்தின் சாக்ஷாத்காரம் பொருந்துகின்றது. நிஷேத வசனத்தால் பொருந்துவ தின்றும் என்பது பொருள். 260

## அவதாரிகை

இந்தப்பிரகாரம சூத்திரக்காரருடைய அபிப்பிராயத்தாலும் விதி வாக்கியத்திற்கே பிரதானத் தன்மை நிச்சயிக்கப்படுகின்றது எனக் கூறுகின்றார்:—

ஸ்லோகம்

सूत्रं तत्तु समन्वयादिति विधिव्यापारनिष्ठं वचो
मोक्षायेति निवेदनाय कृतवान्वेदान्तवेदी मुनिः ।
न्यायेनाऽऽकलयन्नशेषवचनव्यापारमूरीकृत-
स्वातन्त्र्यः सकलेऽपि वेदशिरसि स्वैरं चरन्नीश्वरः ॥ २६१ ॥

பதவுரை

**वेदान्तवेदी**—வேதாந்தத்தின் பொருளை நன்கு உணருஞ்சுபாவமுள்ளவரும்

**न्यायेन**—மேற்சுலோகத்திற் கூறிய நியாயத்தால்

**अशेषवचनव्यापारम्**—சம்பூர்ண வாக்கியார்த்தங்களை

**आकलयन्**—நிச்சயஞ்செய்கின்றவரும்

**ऊरीकृतस्वातन्त्र्यः**—சுயமே ஸ்வாதந்திரியத்தன்மையினைச் சுவீகரித்தவரும்

**सकलेऽपि वेदशिरसि**—எல்லா வேதாந்தங்களிலும்

**स्वैरं चरन्**—சுயமே சஞ்சரிக்கின்றவரும் (அதாவது வேதாந்தார்த்தங்களை சுயமே அறிகின்றவரும்)

**ईश्वरः**—விஷ்ணுவுஷிவின்றும் ஆன

**मुनिः**—வியாச மகரிஷி

**तत्तुसमन्वयात्**—அதுவோ சமன்வயமாதலால் (உபநிஷத்துக்களால் பிரதிபாதிககப்படுவது பிரம்மமேயாம் அதன் கண்ணே அக்ஷரங்கள் நன்கு பொருந்துதலின்)

**इति सूत्रम्**—என்னும் சூத்திரத்தினை

**विधिव्यापारनिष्ठं वचः**—விதிமுகத்தாற் பிரவிருத்தியினையுடைய தத்துவமசி முதலிய வாக்கியம்

**मोक्षाय इति**—மோக்ஷத்தின் பொருட்டாம் என்று

**निवेदनाय**—அறிவித்தற்பொருட்டு

**कृतवान्**—செய்தார்

## விசேஷவுரை

வேதாந்தங்களை நன்கு உணர்பவர் என்னும் விசேஷணத்தால் இவருக்கு வேதாந்த விஷயத்தில் அஞ்ஞானுதியின் ரஹிதத்தன்மை சூசிப்பிக்கப்பட்டது. அவ்வியாசபகவானனவர் தத்து சமன்வயாத் என்னும் சூத்திரத்தின் கண் தத் பதத்தால் நிர்விசேஷ அத்வயமும் சத்திய ஞான ஆனந்த ஆன்மகமும் ஆன பிரம்மம் சாஸ்திரத்தினைப் பிரமாணமாகவுடையது என்று பிரதிக்ஞை செய்து அதன்கண் சமன் வயத்தால் என்னும் ஏதுவினைத்தெரிசிப்பிக்கின்ருர் :– நிஷேதத்தால் எனத்தெரிசிப்பிக்கின்றிலர் நிஷேதவாக்கியத்தின் சமன்வயமாத்திரத்தால் சத்தியஞான அனந்தானந்த வடிவப்பிரம்மம் சித்திக்கின்றதில்லை ஆதலின் விதி வியாபாரமுடையவசனமே பிரம்மத்தின்கண் பிரமாணமா மெனத்தெரிசிப்பித்தார் என்பது பொருள் அற்றேல் அம்முனியானவர் எவ்வலிமையால் இவ்வாறு கூறினார் என்னும் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு நியாயத்தால் சம்பூர்ணவாக்கியார்த்தங்களை நிச்சயஞ் செய் கின்றவரும் எனக்கூறப்பட்டது.

அம்முனிவருக்கு அசேஷவசனங்களின் வியாபாரத்தை நிச்சயஞ் செய்வதில் ஆற்றலைக்கூறுகின்ருர் சுயமே சுவாதந்திரியத்தன்மையினைச் சுவீகரித்தவர் என. இவ்வாற்றலிருத்தலாலேயே அவருக்கு ஈஸ்வரத் தன்மை ஸ்மரிக்கப்படுகின்றது “புண்டரீகாக்ஷனினும் அன்னியன் எவன் மகாபாரதத்தைச்செய்பவனுவன்” என ஈஸ்வரத்தன்மையிருத் தலாலேயே சருவவேதாந்தார்த்தங்களையும் சுயமேயறிகின்றவராவர்.

## அவதாரிகை

இந்தப் பிரகாரம் வேதாந்த வாக்கியங்களின் தாற்பரியத்தினை நிருபணஞ் செய்கின்ற சமன்வய சூத்திரத்தின் பலத்தால் விதிவாக்கியத் திற்குப் பிரதானத்தன்மை கூறப்பட்டது. இப்போது தத்பதார்த்தத் தின் சோதனையின் அவசரத்திலே சூத்திரக்காரரது “प्रकृतैतावत्त्वं हि प्रतिषेधति ततो ब्रवीति च भूयः” (தொடங்கப்பெற்றதும் இவ்வளவு என்னுந்தன்மையால் பரிச்சின்னமுமான மூர்த்தாமூர்த்த வடிவங்களை நேதி நேதி என்னும் சத்தமானது நிஷேதிக்கின்றது பிரதிஷேதத் தினனந்தரம் மறுபடியும் ” अन्यत्परमस्तीति “ அன்னியமாகப் பிரமாத்மா இருக்கின்றது ) எனக் கூறுகின்றது. என்பது முதலிய சூத்திரத்தால்

நிஷேத வாக்கியத்தின் விசாரத்தாலும் நிஷேதவசனம் விதிசேஷமேயாகு மெனக்கூறுகின்றார்:—

**சுலோகம்**

**वाक्यार्थान्वयितत्पदार्थकथने नेतीति वाक्यं पुनः**
**साक्षात्सूचयति स्म सूत्रकृदतस्तत्तत्परं निश्चितम् ।**
**एवं हस्ततलार्पितामलकवत् तात्पर्यसंवेदने**
**सत्यन्याद्युदीरयन्ति यदि तत्क्षन्तु कथं शक्नुमः ॥ २६२ ॥**

**பதவுரை**

**पुनः**—மறுபடியும்

**सूत्रकृत्**—பிரம்மசூத்திரத்தின் கருத்தாவான வியாசபகவான்

**साक्षात्**-நேரே

**नेति इति वाक्यम्**-இதுவுமல்ல இதுவுமல்ல என்னும் நிஷேத வாக்கியத்தினை

**वाक्यार्थान्वयि**—தத்துவமசிவாக்கியார்த்த சம்பந்தி

**तत्पदार्थकथने**— யாதொருதற்பதார்த்தமுண்டோ அதனைப்பிரதி பாதித்தலில் (சுத்திசெய்தற் பொருட்டு)

**सूचयति स्म**-நிஷேதிக்கின்றது என்னும் பதத்தால் சூசிப்பித்தனர்

**अतः**-ஆதலால்

**तत्**—நிஷேதவாக்கியம்

**तत्परम्**—தற்பதார்த்த நிருபணபரமாம் வாக்கியார்த்த நிருபண பர மன்றும் என

**निश्चितम्**-நிச்சயிக்கப்பட்டது

**एवं**-இந்தப்பிரகாரம்

**हस्ततलार्पितामलकवत्** — உள்ளங்கையிலுள்ள நெல்லிக்கனி போன்று

**तात्पर्यसंवेदने सति** — நிஷேதவாக்கியம் தற்பதார்த்த சோதன பரமாம் என்னும் ஞானமுண்டாகும் போது

**[illegible]**–மற்றோ [illegible] பரமாமொறு

**यदि उदीरयन्ति**–கூறுவார்களின்

**तत्**–அக்கூற்றினை [illegible]

**शक्नुम**–பொறுப்பதற்கு

**कथं शक्नुमः**–எப்படி சமர்த்தராவோம்

### விசேஷவுரை

சூத்திரக்காரரான வியாசமுனியானவர் அவதாரிகையில் உதாகரிக்கப்பட்ட சூத்திரத்தினால் "**अथात आदेशो नेति नेति**" (சத்தியசொரூபத்தின் நிர்த்தேசானந்தரம் யாதொரு சத்தியத்தின் சத்தியமுண்டோ அதுவே மிஞ்சுகிறது. ஆதலால் நேதி நேதி என்பது அந்தப்பிரம்மத்தின் உபதேசமாம்) என்னும் வசனமானது மூர்த்தாமூர்த்தவடிவினதாகிய காரணப்பிரம்மத்தின் சொரூபத்தினையே நிஷேதிக்கின்றது. மூர்த்தாமூர்த்தத்தின் ஆசிரயமான அதிஷ்டானப் பிரம்மத்தினை நிஷேதிக்கின்றதில்லை என்று பிரதிபாதிக்கின்றவராய் தற்பதார்த்தத்தினையே சுத்தி செய்தார். ஆதலின் நிஷேத வாக்கியம் பிரதானமென்பது கருத்து அற்றேல் விதிவாக்கியம் பிரதானமாகுக அல்லது நிஷேத வாக்கியம் பிரதானமாகுக அதனாற் கிடைப்பது யாது என்றுசங்கித்து நிஷேதவாக்கியம் பிரதானமாகுமாயின் அபசித்தாந்தமாம் என்னுமபிப்பிராயத்தால் முடிக்கின்றார் இந்தப்பிரகாரமென. (262)

### அவதாரிகை

அற்றேல், தத்பதார்த்த சோதனமானது சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்ம என்பது முதலிய அவாந்தர வாக்கியங்களிலேயே சித்தித்தமையின் அதன் பொருட்டு நிஷேதவாக்கியத்தின் விசாரம் எற்றிற்கு என்றுசங்கித்து அனந்தம் என்னும் பதத்தின் பொருளைத்திடம் செய்தற்பொருட்டு நிஷேதவாக்கியத்தின் விசாரம் அபேக்ஷிக்கப்பட்டதாம் எனக்கூறுகின்றார்.

### சுலோகம்

**सत्यं ज्ञानमनन्तमित्यभिहिते संभावनानीयते**
**नास्थूलादिवचःसमुच्चयधिया द्वैतोपमर्दं विना ।**

**तेनावान्तरवाक्यलक्ष्यविषयां बुद्धिं दृढीकृत्वा**
**सर्वद्वैतनिषेधकेन वचसा वाक्यार्थधीर्जन्यते ॥ २६३ ॥**

## பதவுரை

**अस्थूलादिवचःसमुद्भवधिया**– அஸ்தூலம் என்பது முதலிய வசனத்தாலுண்டான ஞானத்தால்

**द्वैत उपमर्द विना**–துவைதப்பிரபஞ்சத்தின் நிஷேதமின்றி

**सत्यं ज्ञानं अनन्तं इति**–தத்பதார்த்த பிரம்மமானது சத்தியஞான அனந்த வடிவமாம் என

**अभिहिते**–கூறப்பட்டதாயினும் அதன் கண்

**सम्भावना**–சம்பாவனை (திடஞானம்)

**न आनीयते** - அடையப்படுகிறதில்லை. (அனந்தம் ஆகாசம் என்பது போன்று அந்நியதா சித்தி சங்கை சம்பவித்தலால் என்பது பொருள்)

திரண்டபொருளைக்கூறுகின்றார்

**तेन**–அதனால்

யாதொருகாரணத்தால் நிஷேதவாக்கியங்களுக்கு சத்தியம் ஞானம் அனந்தமென்னும் வாக்கியத்தின் கண்ணுள்ள அனந்தபதத்தின் பொருளான அபரிச்சின்னத்தன்மையின் சம்பவஞானத்தின் ஏதுத் தன்மை உண்டோ அக்காரணததால் என்பது பொருள்.

**अवान्तरवाक्यलक्ष्यविषयां**– சத்தியாதி அவாந்தரவாக்கியத்தின் லக்ஷியத்தினை விஷயஞ் செய்கின்ற

**बुद्धिं दृढीकृत्वा**–ஞானத்தினை திடம் செய்கின்றதும்

**सर्वद्वैतनिषेधकेन**–சர்வதுவைதத்தை நிஷேதஞ்செய்வதும் ஆன

**वचसा**–வாக்கியத்தினால்

**वाक्यार्थधीः**–தத்துவமசி முதலிய வாக்கியார்த்தத்தின் ஞானம்

**जन्यते**–பரம்பரையால் உண்டாக்கப்படுகின்றது. (263)

### அவதாரிகை

சங்கை:—இந்தப்பிரகாரம் தத்பதார்த்தம் சுத்தியான போதிலும் அவஸ்தாத்திரயத்தாலும் அதன் தர்மத்தாலும் கலக்கம் செய்யப்பட்ட ஜீவனுடைய சொரூபத்திற்கு அகண்டவாக்கியார்த்தத்தின்கண் பிரவேசம் எப்படியாகும் என்றுசங்கித்து சுத்ததத் பதார்த்தத்தை அநுவாதம் செய்கின்றவராய் த்வம்பதார்த்த ஜீவஸ்வரூபமும் ஜோதிர்பிராம்மணக்கிரந்தத்தின் தாத்பரியத்தால் ஜாக்கிரம் முதலிய அவஸ்தைகள் அவற்றின் தர்மங்களான காமம் கர்த்திருத்தன்மை முதலியவையின்றிய அசங்கஞப்தி மாத்திரமாகச் சித்தித்திருத்தலின் அகண்ட ஆன்மதத்துவத்தை மஹாவாக்கியத்தினால் அறிவாயாக எனக்கூறுகின்றார் :—

### சுலோகம்

अस्थूलादिवचो निरस्तनिखिलद्वैतप्रपञ्चं परं
जाग्रत्स्वप्नसुषुप्तिवर्जितमिदं प्रत्यक्स्वरूपं तथा ।
एकीकृत्य परस्परेण पदयोरर्थद्वयं तत्त्वतः
प्रत्यक् चाद्वयमद्वयं च तदिति प्रेक्षस्व निःसंशयम् ॥

### பதவுரை

**अस्थूलादिवचः**—ஸ்தூலமல்ல என்பது முதலிய நிஷேதவசனங்களால்

**निरस्तनिखिलद्वैतप्रपञ्च**—சர்வத்துவைதப்பிரபஞ்சமும் நிவர்த்தியான

**परम्**—பரமான்மதத்துவமும்

**तथा जाग्रत्स्वप्नसुषुप्तिवर्जितम्**—அப்படியே ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் அவஸ்தைகளற்ற

**इदं प्रत्यक्स्वरूपम्**—அபரோக்ஷ ஆன்மதத்துவமும் (ஆகிய)

**पदयोः अर्थद्वयम्**—தத்துவம் பதங்களின் இரண்டு பொருளினையும்

**निःसंशयम्**—சந்தேகமின்றி

**तत्त्वतः**—வாஸ்தவமாக

**प्रत्यक्च अद्वयम्**—அபரோக்ஷ பிரத்தியகான்மாவே அத்வயப் பிரம்மமாம்

**अद्वयं च तत् इति**–அத்வயப்பிரம்மமே அபரோக்ஷப்ரத்தியகான்மாவாம் என்று

**परस्परेण**–பரஸ்பரம்

**एकीकृत्य**–ஐக்கியத்தினைச்செய்து

**प्रेक्षस्व**–பார்ப்பாயாக (264)

### அவதாரிகை

அற்றேல், பரிசுத்தமான இருபதத்தின் அர்த்தங்களும் வெவ்வேறுயுளதாகுக் அவ்வாறுகும்போது சமுசயமின்றி ஐக்கியத்தைப் பார்த்தல் எங்ஙனமாம் என்ருசங்கித்து இருபதங்களின் லக்ஷ்யார்த்தத்தின்கண் பேதத்தைச் செய்வதான யாதொரு தர்மமுமின்மையின் எவ்வாற்ருனும் பேதம் சம்பவியாது. ஆதலின் சம்சயமின்றி ஐக்கியத்தைப் பார்த்தல் ஏன் பொருந்தாது என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்ருர் :—

### சுலோகம்

अद्वैतं परिशोधितं भगवतो विष्णोः परं यत्पदं
तच्छब्देन समर्पितं परिगृहीतादेयमात्मप्रभम् ।
यच्चोपाधिविवर्जितं तव निजं साक्षात्स्वरूपं तयो
रेकत्वं परिवर्जितव्यवधिकं प्रत्यक्षमीक्षस्व भोः ॥ २६५ ॥

### பதவுரை

**भगवतः**–நித்திய சித்த நிரங்குசஐஸ்வர்யமுடைய

**विष्णोः**–ஸ்ரீமந்நாராயணனுடைய

**यत् परं पदं**–யாதொரு பரமபதமானது

**अद्वैतम्**-துவைதமற்றதும்

**परिशोधितम्**–சத்திய ஞானதிவாக்கியத்தால் சோதிக்கப்பெற்றதும்

**परिगृहीत आदेयम्**–கொள்ளத்தக்க லக்ஷியாம்சத்தினைக் கிரஹித்து

**तत् शब्देन समर्पितम्**–மஹாவாக்கியத்தின் கண்ணுள்ள தத் பதத்தால் லக்ஷிப்பிக்கப்பட்டதுமாக

உள்ளதோ

तव–உன்னுடைய

यच्च निजं स्वरूपं–யாதொரு நிஜவடிவமானது

आत्मप्रभम्–சுயம் பிரகாசமும்

उपाधिविवर्जितम्–அகங்காராதி உபாதியற்றதும்

साक्षात्–அபரோக்ஷமுமாக உளதோ

तयोः–பிரத்தியக் பிரம்மம் என்னும் அவ்விரண்டிற்கும்

परिवर्जितव्यवधिकम् – பரஸ்பரம் பேதத்தைச்செய்யும் உபாதியற்ற

एकत्वं–அபேதசொரூபத்தினை

भोः–ஏ சிஷ்யனே

प्रत्यक्षं ईक्षस्व–அபரோக்ஷமாகப்பார்ப்பாய்

## விசேஷவுரை

சத்தியாதி வாக்கியத்தால் பரிசோதிக்கப்பட்ட வஸ்துவே தத்பதத்தால் பாகத்தியாக லக்ஷணையால் கொள்ளத்தக்கது என்னும் அபிப்பிராயத்தாற்கொள்ளத்தக்க லக்ஷியாம்சத்தினைக் கிரகித்து எனக் கூறப்பட்டது. அகங்காராதியுபாதியற்றமையாலேயே அபரோக்ஷமெனப்பட்டது. பரஸ்பரம் பேதத்தைச் செய்யுமுபாதியற்ற என்னும் விசேஷணமானது அத்தியந்தாபேதத்தில் அபிப்பிராயமுடையது. (265)

## அவதாரிகை

கொள்ளத்தக்க லக்ஷியாம்சத்தினைக் கிரகித்து என்பதனுல் சூசிப்பிக்கப்பட்டதும் சத்தியாதி அவாந்தர வாக்கியத்தால் சித்தித்ததுமான யாதொரு பரமபதமுண்டோ அதன்கண் சத்தியாதி பதங்களுக்கு அநிருதாதியின் வியாவிருத்தியே தனித்தனிப்பிரயோஜனமாமெனத் தெரிசிப்பிக்கின்றவராய் அநிருதாதியின் வியாவிருத்தியினை வயிலாகவுடைய அகண்ட வாக்கியார்த்தத்தின் வியாக்கியானத்தை முடிக்கின்றார்.

## சுலோகம்

अनृतजडविभक्तदुःखतुच्छासहनवपुः परमं पदं मुरारेः ।
परिहृतसकलप्रपञ्चमात्मा तव तदवेहि तमो निरस्य वाक्यात् ॥

## பதவுரை

**अनृतजडविभक्तदुःख तुच्छाऽसहनवपुः** — பொய்யும் ஜடமும் பரிச்சின்னமும் துக்கமும் துச்சமும் ஆகிய இவைகளைச் சகியாத (அதாவது இவைகளினின்றும், விலக்ஷணமான வடிவமுடையதும்)

**परिहृतसकलप्रपञ्चम्** — சர்வ துவைதப் பிரபஞ்சமற்றதும் ஆன

**मुरारेः परमं पदम्** ஸ்ரீமந்நாராயணனுடைய சத்திய ஞான அனந்த ஆனந்த சத்ருப யாதொரு பரமபதமுண்டோ

**तद्** — அதனை

**तमः निरस्य** — பதார்த்தத்தின் அஞ்ஞானத்தை அதன் விவேசனத்தால் நிவர்த்தித்து

**वाक्यात्** — தத்துவமசியாதி மஹாவாக்கியத்தால்

**तव आत्मा इति** — உன்னுடைய ஆன்மாவாமென்று

**अवेहि** — அறிவாய்.

## விசேஷவுரை

அதனை உனது ஆன்மாவாக அறிவாய் என்று ஓட்டுக. பரிச்சின்னம் என்பதனால், அனந்த பத வியாவர்த்தியம் கூறப்பட்டது. துச்சம் என்பதனால் சத்பதவியாவர்த்தியம் கூறப்பட்டது. (265)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் அகண்டவாக்கியார்த்தத்தினை நிரூபணம் செய்து அஃது அதி சூட்சுமமாய் இருத்தலால் மீண்டும் அதன்கண் சந்தேகிக்கும் புருஷனைக்குறித்து, 65-வது சுலோகத்தில் **उपसाद चतुष्टय-साधनः** நான்கு சாதனங்களையுடையவனாய் குருவைச்சரணடைந்தான் என்பதனால் சாதன சம்பத்தியின் மத்தியில் சிரத்தை கூறப்பட்டதாயினும் அதனைப்பிரதானமாக அனுஷ்டிக்கவேண்டும், என்று கருதி அதன் கண் பிரமாணத்தைக்கூறுகின்றார் :—

## சுலோகம்

**अद्धात्व सौम्येति हि श्रास्ति शास्त्रं**
**श्रद्धाधनत्वश्रुतिरस्ति चान्या ।**

श्रद्धा तु यस्येत्यपरं च वाक्य-
मधीयते संशयकृन्तनाय ॥ २६७ ॥

### பதவுரை

**शास्त्रम्**—சாந்தோக்கிய சுருதியானது

**श्रद्धत्स्व सोम्य इति**—சௌமியனே சிரத்தையைச் செய்வாயாக என்று

**शास्ति**—ஆளுகின்றது

**श्रद्धाधनस्यश्रुतिः**—சிரத்தையைத்தனமாகவுடையவனுகி என

**अन्यः च अस्ति**—மற்றோர் பிருகதாரண்ய சுருதியுமுளது

**यस्य तु श्रद्धा इति**—எவனுக்கு சிரத்தை இருக்கின்றதோ என

**अपरं च वाक्यम्**—மற்றோர் வாக்கியத்தினையும்

**संशयकृन्तनाय**—சந்தேக நிவர்த்தியின் பொருட்டு

**अधीयते**—சந்தோகர்கள் படிக்கின்றார்கள்

### விசேஷவுரை

சாந்தோக்கிய சுருதியில் 6—12—2 ல் சூக்ஷ்மம் வஸ்துவிற்கு தூல காரணத்தன்மையைத் திருஷ்டாந்தத்தால் பிரதிபாதிக்கின்றார். "சௌமியனே, யாதொரு இந்த வடபீஜத்தின் அணுத்வத்தைக்காண் கின்றாயில்லையோ இந்த சூக்ஷ்ம ஆலம்விதையின் காரியமாய் தூலமாய் பிரத்தியக்ஷமாய் ஆலமரம் நிற்கின்றது அதுபோல சத்ருப அணுவடிவ ஆன்மாவினின்றும் தூலப்பிரபஞ்சம் உண்டாகியிருக்கின்றது இதன் கண் சிரத்தையைச்செய்வாயாக" என அதிசூக்ஷ்மமாய் சகத் காரண மாயுள்ள பிரம்மம் துர்விஞ்ஞேயமாதலால் அதன் ஞானசாதனமான சிரத்தையை இந்த வாக்கியம் விதிக்கின்றது. அப்படியே பிருக தாரண்ணியத்திலும் "சிரத்தையாகிய தனத்தையுடையவனுகி தன்னுள்ளே தன்னைக்காண்க" எனக்கூறப்பட்டிருக்கின்றது. அவ் விதனைக்கூறுகின்றார் சிரத்தையை என. சாந்தோக்கியத்தில் 3—14—4 இல் "எந்தவித்துவானுக்கு நிச்சயமிருக்கின்றதோ சமுசயமின்றோ" எனச்சமுசய நிவிருத்தியின் பொருட்டு மற்றோர் வாக்கியத்தினையும் சந்தோகர்கள் படிக்கின்றனர் ஆதலால் நீ வருணிக்கப்பட்ட அகண்ட

வாக்கியார்த்தத்தின்கண் சமுசயநிவர்த்தியின் பொருட்டு சிரத்தையைச் செய்வாயாக என்பது பொருள். (267)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் 266-வது சுலோகத்தில் தமமென்னும் அஞ்ஞானத்தைக்கெடுத்து என்பதனுல் அஞ்ஞானத்தின் நிவர்த்தியினையும் 267-வது சுலோகத்தில் சந்தேக நிவர்த்தியின் பொருட்டு என்பதனுல் சந்தேக நிவர்த்தியினையும் சூசிப்பிக்கின்ற கிரந்தகாரரால் அவ்வஞ்ஞான சந்தேகங்களுக்கு அனர்த்த காரணத்தன்மை சூசிப்பிக்கப்பட்டது. சிரத்தையின்கண் அநுஷ்டிக்கத்தக்க தன்மையினை சூசிப்பிக்கின்ற கிரந்தகாரரால் சிரத்தையின் அபாவத்திற்கும் அனர்த்த ஏதுத்தன்மை சூசிப்பிக்கப்பட்டது. அம்மூன்றும் (அஞ்ஞான சமுசய அசிரத்தைகள் அனர்த்த ஏதுவாமென்பது) பகவானுக்கும் சம்மதமாமெனக் கூறுகின்றார்:—

## சுலோகம்

अज्ञो विनश्यति पुमानतिमूढभावा-
दश्रद्धयोपहतबुद्धिरतोऽपि कष्टः ।
कष्टाच्च कष्टतर एव तु संशयात्मा
दुःखी सदेति भगवानपि वासुदेवः ॥ २६८ ॥

## பதவுரை

अज्ञः पुमान्—அஞ்ஞானமுடைய புருஷனானவன்

अतिमूढभावात्- பிரத்தியகான்மாவை அத்தியந்தமறியாமையால்

विनश्यति—பரமபுருஷார்த்தத்தினின்றும் பிரஷ்டனுகின்றான்

அஞ்ஞான என்பதாதிக்கு அவிவேகியானவன் துவம் பதார்த்தத்தை யறியாமையால் பரமபுருஷார்த்தத்தினின்றும் நழுவுகின்றான் என்பது பொருள். அஞ்ஞனயினும் வைதிக கருமத்தில் சிரத்தையுடையவனுயின் அவனுக்கு ஓர் போது புருஷார்த்தமுளதாயினும் சிரத்தையின்றியவனுக்கு புருஷார்த்தமின்றாம் அவனுக்கு நாஸ்திகத்தன்மையின் அடைவால் அனர்த்தம் சம்பவித்தலின் எனக்கூறுகின்றார்

अश्रद्धया- அசிரத்தையினுல்

**उपहतबुद्धिः**—வைதிக புத்தி கெட்டவன்

**अज्ञोऽपि**—அஞ்ஞனைப்பார்க்கிலும்

**कष्टः**—அதிகதுக்கியாவன்

ஒருவன் சிரத்தையையும் சம்பாதித்து விவேகம் முதலிய நான்கு சாதனங்களோடு கூடினவனும் சன்னியாசத்தைச் செய்து அநிச்சய வடிவ ஆபாதஞானத்தால் தன்னைக்கிருதார்த்தனாகக் கருதுகின்றவனுய்ச் சிரவணுதிகளை யநுஷ்டியானுயின் அவன் அந்தியத்தில் சமுசயமுடைய வனுய் இகலோக பரலோக இருவித புருஷார்த்த சாதனமுமில்லாமையால் சருவப்பிரகாரத்தாலும் பிரஷ்டனேயாவன் எனக்கூறுகின்றார்

**संशयात्मा तु**—சந்தேகமுடைய புருஷனே

**कष्टात् च**—அதிக துக்கியான அசிரத்தையினல் புத்திகெட்டவனினும்

**कष्टतर एव**—அத்தியந்தம் துக்கியேயாவன்

**सदा दुःखी इति**—சமுசயமுடையவனுக்கு ஒன்றிலும் நிச்சயமின்மையினல், எப்போதும் துக்கியேயாவன் என அவனை

**भगवानपि वासुदेवः**—வசுதேவன் புத்ரனை ஸ்ரீகிருஷ்ண பகவானும் கூறுகின்றார்

“ அஞ்ஞனும் அசிரத்தையுடையவனும் சமுசயான்மாவும் ஆகிய மூவரும் நசிக்கின்றனர். அவர்களுள் சமுசயமுள்ளவனுக்கு இகலோகமுமில்லை பரலோகமுமில்லை. சுகமுமில்லை ” என ஸ்ரீபகவான் வாசுதேவரும் கூறுகின்றார் என்பது பொருள். (268)

## அவதாரிகை

அற்றேல் அக்னிஹோத்திராதி வாக்கியார்த்த நிச்சயத்தினனந்தரம் கருத்தவ்யமிருப்பதுபோன்று அத்வைதவாக்கியார்த்த சாக்ஷாத்காரத்தினனந்தரமும் ஏதேனும் கருத்தவ்யமுளதா என்று சந்தேகிக்கும் புருஷனைக்குறித்து சாக்ஷாத்காரத்தினனந்தரமே அத்வயமும் நிரதிசயானந்தமுமான பிரம்மத்தையடைந்தவனுக்கு கருத்தா கரணம் முதலிய சாதனங்களின்மையானும் பிரம்மப்பிராப்தியினும் அதிகசிரேயஸ் இன்மையானும் கருத்தவ்யமின்றெனக்கூறுகின்றார்—

ஸ்லோகம் ௨௬௯

रूपं तावकमुज्झितद्वयमभूदद्वैतमेवाञ्जसा
तच्चाद्वैतमपास्य मोहजनितं पारोक्ष्यमात्मा ह्यभूत् ।
एवं वेदशिरःपदान्वयवशादेकत्वमेकान्ततः
सिद्धं प्रत्यगनन्तयोरिति तव श्रेयःसमाप्तिं गतम् ॥ २६९ ॥

**பதவுரை**

**तावकं रूपम्**-உனது சொரூபமானது

**उज्झितद्वयम्**-பேத ஏதுவான உபாதியை நீக்குதலால் துவைத மற்றதாகி

**अंजसा**-சாக்ஷாத்

**अद्वैतमेव**-பரிபூர்ணப்பிரம்மமே

**अभूत्**-ஆயிற்று

**तच्च अद्वैतम्**-அவ்வத்துவிதப்பிரம்மமும்

**मोहजनितम्**-அஞ்ஞானத்தாலுண்டான

**पारोक्ष्यम्**-பரோக்ஷத்தன்மையினை

**अपास्य**-பரித்தியாகஞ்செய்து

**आत्मा अभूत्**-பிரத்தியக் வடிவமாயிற்று

**एवं**-இந்தப்பிரகாரம்

**वेदशिरःपदान्वयवशात्**-வேதாந்த வாக்கியத்தின் கண்ணுள்ள பதங்களுக்கு அகண்டார்த்தத்தினைப் போதிக்கும் சாமர்த்தியமிருத்தலால்

**प्रत्यगनन्तयोः**-பிரத்தியகான்மாவிற்கும் பிரம்மத்திற்கும்

**एकान्ततः**-நியமமாக

**एकत्वम्**-அபேதமானது

**सिद्धं**-சித்தித்தது

**इति**-ஆதலின்

**तव श्रेयः**-இத்தகையானே உனக்கு பரமசிரேயஸ்

**समाप्तिं गतम्**-நிர்வசேஷமாக அடையப்பட்டது

## விசேஷவுரை

உனது சொருபமானது அகங்காரமும் அதன் தருமம் முதலிய துவைதமுமற்றதாகி (எவ்வாருமோ அவ்வாறு) சுபாவமாகவே அத்துவித பூர்ணப்பிரம்மமேயாம் அவ்வத்துவிதப் பிரம்மமும் அஞ்ஞானத்தாலுண்டான பரோக்ஷத்தன்மையினைப்பரித்தியாகஞ்செய்து சுபாவமாகவே பிரத்தியக்வடிவமேயாம் ஹி என்பது வைதிகப்பிரசித்தியில்.

இவ்வாருகும் போது தத்துவமசி முதலிய வாக்கியத்தால் நான் பிரம்மமாகின்றேன் என்று சாக்ஷாற்காரமுளதாயவழி பரிபூர்ண புருஷார்த்தத்தின் அடைவாமெனக்கூறுகின்ருர் இந்தப்பிரகாரமென.

பிரத்தியகான்மாவிற்கு பரமானந்த அத்துவயப்பிரம்மப்பிராப்தியே சிரேயஸின் சமாப்தி வடிவமாதலின் "அதுவே காஷ்டை அதுவே மேலான கதி" என்னுஞ் சுருதியாலும் "ஆன்ம லாபத்தைப்பார்க்கிலும் மேலானதின்ரும் இதனையறிந்து புத்திமானுகின்ருன் பாரத, கிருத்கிருத்தியனுமாம்" என்னும் ஸ்மிருதியினுலும் என்க அக்னிஹோத்திராதியின் ஞானமாத்திரத்தாலோ இப்படிப்பட்ட புருஷார்த்தத்தின் அடைவின்ரும் ஆதலின் ஆண்டு அநுஷ்டானத்தினபேக்ஷையுளது என்பது கருத்து.

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் வேதாந்தங்களுக்கு அகண்டப்பிரம்மத்தின் கண் சமன்வயம் தெரிசிப்பிக்கப்பட்டது வாக்கியத்தின் அகண்டார்த்தத் தன்மையின் கண் உலகப்பிரசித்தியும் வாதிப்பிரசித்தியும் தெரிசிப்பிக்கப்பட்டது இப்போது அந்தத்திலும் அகண்டார்த்தத்தின் திடத்தன்மையின் பொருட்டு வாதிப்பிரசித்தியினைத் தெரிசிப்பிக்கின்ருர் ஆண்டு முதலில் ஏகபதலக்ஷணையினுல் வைசேஷிகமதத்தின் கண் அகண்டார்த்தத்தைக் கூறுகின்ருர் :—

## சுலோகம்

सम्बन्धः समवाय इत्यपि पदे वैशेषिकोच्चारिते
नाखण्डव्यतिरिक्तवस्तु वदितुं शक्तोऽनवस्थाभयात् ।
पञ्चानां समवायितेति वचनव्याघातभीतेरपि
सम्बन्धान्तरमस्य नाभिमनुते वैशेषिकः कातरः ॥ २७० ॥

## பதவுரை

**समवायः सम्बन्धः**—சமவாயமானது சம்பந்தவிசிஷ்டமாம்

**इत्यपि पदे**—என்னும் வாக்கியம்

**वैशेषिकोच्चारिते**—வைசேஷிகனால் கூறப்பட்டபோது

**अनवस्थाभयात्**—அனவஸ்தை தோஷத்தின் பயத்தால் அவ்வாக்கியமானது

**अखण्डव्यतिरिक्तवस्तु**—அகண்டார்த்தத்தினும் வேறான அர்த்தத்தினை

**वदितुं**—பிரதிபாதித்தற்கு

**न शक्तः**—சமர்த்தமின்றாம்

**पञ्चानाम्**—திரவியம் முதலிய ஐந்திற்கும்

**समवायिता इति**—சமவாய சம்பந்தமுடையதாந்தன்மை சாதர்மியமாமென்னும்

**वचनव्याघातभीतेः अपि**—தனது வசனத்தின் வியாகாத பயத்தினாலும்

**कातरः**—தனது சித்தாந்த ஸம்ரக்ஷணையில் வியாகுல சித்தமுள்ள

**वैशेषिकः**—வைசேஷிகன்

**अस्य**—இந்த சமவாயத்திற்கு

**सम्बन्धान्तरम्**—வேறு சம்பந்தத்தினை

**न अभिमनुते**—அங்கீகரிக்கின்றதில்லை

## விசேஷவுரை

சமவாயபதத்தால் வைசேஷிக மதத்தில் பிரசித்தமான நித்திய சம்பந்த வடிவசமவாயம் கூறப்பட்டது. ஏதனால் சமர்த்தமின்றாம் என்னுமிடத்துக் கூறுகின்றார் அனவஸ்தை பயத்தால் என

வைசேஷிகரால் அவ்யவ அவயவி முதலானவற்றிற்குள்ள சம்பந்தம் சமவாயமெனப்படுகின்றது. ஆண்டு சமவாயத்திற்கு சம்பத்தத்தன்மை (சம்பந்த விசிஷ்டத்தன்மை) யின்மையின் அதனாற் செய்யப்பட்ட அவயவாதி விசிஷ்டபுத்தி யுண்டாகாது சமவாயத்திற்கும் சமவாயசம்பந்தமிருத்தலின் அசம்பத்தத்தன்மையின்றாம் என்று

சொல்லற்க தனக்குத்தன்னிடத்தில் அஃது சம்பவியாமையின் வேறு சமவாயத்தை யங்கீகரிக்கவேண்டிவரும் இவ்வாறங்கீகரிக்கவே அதற்கும் வெவ்வேறு சமவாயத்தை யங்கீகரிக்கவேண்டிவரும் ஆகவே அனவஸ்தையுண்டா மென்னும் சங்கையைப்பரிகரித்தற் பொருட்டு சொரூபசம்பந்தாபிப்பிராயத்தால் சமவாயம் சம்பந்தமாமென்று சொல்ல வேண்டும் ஆண்டு சம்பந்த பதமானது சமவாயத்தின் சொரூப மாத்திரத்தில் லக்ஷணையால் பிரவிர்த்திக்கின்றது. சமவாயபதமும் அதன் கண்ணேயே பிரவிருத்திக்கின்றது. ஆதலின் அவரால் அகண் டார்த்தத்தன்மை எதனால் அங்கீகரிக்கத்தக்கதின்றும் என்பது கருத்து.

வேறு சமவாயத்தையங்கீகரிக்கின் கேவலம் அனவஸ்தை மாத்திர மன்றும் மற்றோ அவர்களது சித்தாந்தத்திற்கு விரோதமுண்டாம் எனக் கூறுகின்றார் ஐந்திற்குமென.

அவயவ அவயவியும் குண குணியும் கிரியை கிரியையுடையதும் ஜாதி வியக்தியும் விசேஷித்தியதிரவியமுமாகிய இவ்வைந்து இரட்டை களுக்கே சமவாயமாமென அவர் கூறுகின்றனர். ஆதலின் சமவாயத் திற்கு வேறு சமவாயத்தினையங்கீகரிக்கின் வியாகாத முண்டாம் அதனைப் பரிகரித்தற் பொருட்டு சமவாயத்தில் வேறு சமவாயத்தினை வைசேஷிகன் எப்படி யங்கீகரிப்பன் அங்கீகரியானென்பது பொருள். (270)

## அவதாரிகை

பிராபாகரரது மதத்தின் கண்ணும் அகண்டார்த்தத்தன்மையின் பிரசித்தியினைக் கூறுகின்றார்:—

## சுலோகம்

शब्दो गकार इति लौकिकमस्ति वाक्यं
विस्पष्टमस्ति च पदद्वयमत्र वाक्ये ।
प्राभाकरे च समये न गकारमाला-
दन्यत्पदद्वयनिगद्यमभीष्टमस्मिन् ॥ २७१ ॥

## பதவுரை

शब्दः गकारः—சப்தம் ககாரமாம்

इति लौकिक वाक्यम्—என்னும் இலௌகிக வாக்கியம்

**अस्ति**–இருக்கின்றது

**अत्र वाक्ये**–இவ்வாக்கியத்தின் கண்

**पदद्वयम्**–சத்தம், ககாரம் என்னுமிருபதங்கள்

**विस्पष्टमस्ति**-ஸ்பஷ்டமாக இருக்கின்றன

இப்படிப்பட்ட வாக்கியத்திற்கு உலகப்பிரசித்தியுளதாகுக அவ் வாக்கியத்திற்கும் சம்பந்த விசிஷ்டார்த்தத்தன்மையே ஏனென்னாது என்னு மிடத்துக்கூறுகின்றார்.

**प्राभाकरे च समये**–பிரபாகரரது மதத்தில்

**अस्मिन्**–இருபதவடிவ இவ்வாக்கியத்தின் கண்

**गकारमात्रात्**–ககாரமாத்திரத்தினும்

**अन्यत्**·வேறாக

**पदद्वयनिगद्यम्**–இருபதங்களால் பிரதிபாதிக்கத்தக்க வஸ்து

**न अभीष्टम्**–அங்கீகரிக்கப்படவில்லை

சத்தம் ககாரம் என்னுமிருபத வடிவ இவ்வாக்கியத்தின் கண் பிரயோகிக்கப்பட்ட இரு பதத்தால் பிரபாகரரால் ககார வியக்திமாத்திரமே பிரதிபாத்தியமாமென அங்கீகரிக்கப்பட்டுளது ஆதலின் இவ்வாக்கியம் அகண்டார்த்தமாகவே அங்கீகரிக்கத்தக்கது என்பது கருத்து (271)

## அவதாரிகை

அற்றேல் திரவியம் கடம் என்னும் வாக்கியம் திரவியத்துவ கடத்துவமென்னும் பரமுமபரமுமாகிய ஜாதித்துவய விசிஷ்டத்தின் அபேதத்தினைப்பிரதிபாதிப்பது போன்று சத்தம் ககாரம் என்னும் வாக்கியமும் பராபர ஜாதித்துவய விசிஷ்டத்தின் அபேதத்தினையே பிரதிபாதிக்கும் ஆதலின் அகண்டார்த்தமின்றாம் என்னுமிடத்துக்கூறு கின்றார்:—

## சுலோகம்

शब्दत्वजातिवचनो न हि शब्दशब्दः
श्रोत्रोपलम्भनतया तु निबन्धनेन ।

**वर्णान्ब्रवीति न हि जातिरिहाभ्युपेता**
**साक्षाद्गकारमयमाह गकारशब्दः ॥ २७२ ॥**

## பதவுரை

**शब्दशब्दः**—சத்தமென்னும் சத்தமானது

**शब्दत्वजातिवचनः**—சத்தத்தன்மை வடிவ ஜாதி வாசகம்

**न हि**—அன்றும்

சத்தத்தன்மை ஜாதி கத்வஜாதிக்கும் உபலக்ஷணமாம் சத்த சத்த மென்பது கசத்தத்திற்கும் உபலக்ஷணமாம். சத்த சத்தம் ஜாதிவாசக மன்றுயின் வியத்திகளில் அனந்தத்தன்மையும் வியபிசாரமுமிருத்தலால் சத்தப்பிரவிருத்தியெப்படிக்கூடும் என்னுமிடத்துக்கூறுகின்றார்.

**श्रोत्रोपलम्भनतया**—சுரோத்திரத்தாலறியப்படுந்தன்மை வடிவ

**निबन्धनेन तु**—நிமித்தத்தாலோ

**वर्णान्ब्रवीति**—வருணங்களைப்பிரதிபாதிக்கின்றது

சுரோத்திரத்தாலறியத்தக்கதாந்தன்மை வடிவ தடஸ்த உபாதிவடிவ நிமித்தத்தால் சத்தத்தின் பிரவிருத்தியா மென்பது பொருள் அற்றேல் உபாதியையபேக்ஷித்து ஜாதி அத்தியந்தம் லகுவடிவமாமெனின் வாஸ்தவந்தான் ஆனுல் ஜாதிக்கு ஸம்ஸ்தான (அவயவவிசேஷ) த்தால் வியங்கியத்தன்மை நியமமாதலின் திரவியமல்லாத சத்தத்தின் கண் அஃது அசம்பவமாமெனக்கூறுகின்றார்.

**इह**—ஈண்டு சத்தத்தின் கண்

**जातिः**—ஜாதியானது

**न हि अभ्युपेता**—பிராபாகரரால் அங்கீகரிக்கப்படவில்லை

இதனுலேயே கத்தன்மையும் ஜாதியன்றும் ஆதலின் ககார சத்தமும் நேரே ககாரவியத்தியினையே கூறுகின்றது. அவ்வியத்தியும் ஏகமாகவே சம்பவிக்கின்றது ஆதலின் அனந்தத்தன்மையும் வியபிசார தோஷமுமின்றும் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

**अयं गकारशब्दः**—(அது போன்று) இந்த ககார சத்தமும்

**साक्षात्कारम्**-நேரே ககாரத்தினை

**आह**-கூறுகின்றது ஜாதிவாயிலாக அன்று

### விசேஷவுரை

பிரபாகரரை யநுசரித்தவர்களால் திரவியத்தின் கண்ணுள்ள ஜாதியை (சத்தத்தின் கண்) அங்கீகரியாமையாலும் சத்தப்பிரவிருத்தியின் நிமித்தமான சுரோத்திரக்கிராஹ்யத்தன்மையும் சத்த சத்தத்தால் பிரதீதியாகாமையாலும் ககார சத்தமும் ஒரு ககாரமாத்திரத்தை விஷயஞ் செய்வதாலும் அதிகார்த்தமின்மையால் சத்த சத்தத்திற்கும் ககார சத்தத்திற்கும் அகண்டார்த்தத்தன்மையே சொல்லத்தக்கதா மென்பது கருத்து. (272)

### அவதாரிகை

பிராபாகரரைக்குறித்து அகண்டார்த்தப் பிரசித்தியின் சமர்த்தனத்தை முடிக்கின்றார் :—

### சுலோகம்

तस्मादखण्डविषये वचने विवादं
प्राभाकराः परिहरन्तु न चेदशक्यम् ।
निर्वोढुमेतदिह वाक्यमितोऽन्यथा चे-
दस्यार्थकल्पनमभीप्सितमिष्टहानिः ॥ २७३ ॥

### பதவுரை

**तस्मात्**-(யாதொரு காரணத்தால் கூறிய பிரகாரத்தால் அகண்டார்த்தத்தன்மை அவரால் அங்கீகரிக்கத்தக்கதாமோ) அக்காரணத்தால்

**अखण्डविषये**-அகண்டவஸ்துவை விஷயமாகவுடைய

**वचने**-வாக்கியத்தின் கண்

**विवादम्**-விவாதத்தினை

**प्राभाकराः**-பிரபாகரரை யநுசரித்தவர்கள்

**परिहरन्तु**-பரித்தியாகஞ்செய்வாராக

**न चेत्**-பரித்தியாகஞ்செய்யாராயின்

इह–ஈண்டு சத்தார்த்தவியவகாரத்தின் கண்

एतद् वाक्यम्–சத்தம் ககாரம் என்னும் இந்த வாக்கியத்தினை

निर्वोढुं–உபபாதனஞ் செய்தற்கு

अशक्यम्–முடியாது

अस्य–இந்த வாக்கியத்திற்கு

इतः अन्यथा–கூறிய பிரகாரத்தினின்றும் வேறு பிரகாரமாக

अर्थकल्पनम्–(சம்சர்க்க வடிவ) அர்த்தத்தைக் கற்பித்தல்

अभीप्सितं चेत्–அபீஷ்டமாயின்

इष्टहानिः–அப்போது தனது சித்தாந்தத்திற்குப் பங்கமாம்

## விசேஷவுரை

சத்தம் ககாரம் என்னுமிருபதங்களின் சாமானாதிகரண்யமானது சத்தத்தன்மை வடிவ பரஜாதியினையும் ககாரத்தன்மை வடிவ அபரஜாதியினையும் முன்னிட்டதாமென அவரால் அங்கீகரிக்கப்படுமாயின் அப்போது அவரது சித்தாந்தத்திற்கு க்ஷதியுண்டாகுமென்பது அபிப்பிராயம்.

## அவதாரிகை

அகண்டார்த்தத் தன்மையின் கண் பாணினி மஹரிஷியின் சம்மதி முன்பு உதாகரிக்கப்பட்டதாயினும் அவரது வசனத்திற்கு அன்னியதா சித்தத்தன்மையின் சங்கையை நீக்குதற்பொருட்டு அந்தத்தில் மீண்டும் உதாகரிக்கின்றார் :—

## சுலோகம்

प्रातिपदिकान्यनतिरिक्तविषयाणि
प्राह भगवान्प्रथमशब्दितविभक्त्या ।
पाणिनिरतः सकलतर्कसमयज्ञो
वष्टि वचसोरनतिरिक्तविषयत्वम् ॥ २७४ ॥

## பதவுரை

भगवान् पाणिनिः–பாணினிபகவானானவர்

प्रातिपदिकानि–விபக்தியற்ற விருக்ஷாதி பிராதிபதிக சத்தங்களை

**प्रथमशब्दितविभक्त्या**–பிரதமை என்று சொல்லப்பட்டதும் சு முதலிய வடிவமானதுமான விகுதி யினோடு

**अनतिरिक्तविषयाणि**–ஏகார்த்த விஷயகமாக

**प्राहुः**–கூறுகின்றனர்

**अतः**–அருத்த பேதமின்மையினல்

**सकलतर्कसमयज्ञः**– சருவநியாய சாஸ்திரங்களையுமறிந்தவரான பாணினிமகரிஷி

**यज्ञसोः**– அபரியாய பதங்களுக்கு

**अनतिरिक्तविषयत्वम्**–அகண்டார்த்தத்தன்மையினை

**वष्टि**–விரும்புகின்றார்

## *விசேஷவுரை*

பாணினி மஹரிஷி 'பிராதிபதிகார்த்தமாத்திரத்தில் பிரதமை' என்பதனுல் பிராதிபதிகார்த்தத்தில் முதல் வேற்றுமையினை விதிக்கின்றார் ஆதலின் பகுதிவிகுதி வடிவமான அவ்வாக்கியம் அகண்டார்த்தமேயாம் இவ்வாருயின் விகுதிக்கு அதன் (பகுதியின்) பரியாயத்தன்மையும் அதனுல் சித்தித்ததின் அநுவாதித்தன்மையும் ஆம் ஆகவே பகுதிவிகுதி களில் வாக்கியத்தன்மைச் சித்தியாது என்று சொல்லற்க விகுதியோடு கூடியே பிராதிபதிகத்திற்குப் பிரயோகம் நியமமாதலினுலும் தனது பொருளைப் பிரதிபாதிக்குந் தன்மையுண்மையாலும் பரியாயத் தன்மை யும் அநுவாதித் தன்மையும் இன்மையின். யாதொரு காரணத்தால் பாணினி மஹரிஷி பிராதிபதிகத்திற்கும் முதல் வேற்றுமைக்கும் ஏகார்த்தத் தன்மையினைக் கூறுகின்ருரோ அக்காரணத்தால் சருவ நியாயத்தையுமறிந்தவரான இவர் வேறிடத்தும் அபரியாய இருபதங் கட்கும் அகண்டார்த்தத் தன்மையினை விரும்புகின்ருர் என்பது கருத்து.

## *அவதாரிகை*

மேலும் உலகின்கண் அபரியாயபதமுடைய வாக்கியத்தின் பிரயோகம் ஏகார்த்தத்தின்கண் காணப்படுதலால் ஈண்டு வாதிகளால் விவாதஞ் செய்யத்தக்கதன்றென முடிக்கின்றவராய்க் கூறுகின்ருர்–

### சுலோகம்

इयं घटव्यक्तिरितीदृशेषु च
प्रसिद्धमेवैकरसार्थगोचरम् ।
पदद्वयं लोकवचःसु तेन च
प्रशस्यते नात्र विवादसंग्रहः ॥ २७५ ॥

### பதவுரை

**इयं घटव्यक्तिः**–இது கடவியத்தியாம்
**इति ईदृशेषु**–என்னுமித்தகைய
**लोकवचःसु च**-இலௌகிக வாக்கியங்களிலும்
**पदद्वयम्**-இது, கடவியத்தி என்னுமிருபதமும்
**एकरसार्थगोचरम्**-ஓர் பொருளையே விஷயஞ் செய்தல்
**प्रसिद्धमेव**–உலகில் பிரசித்தமேயாம்
**तेन**–அதனுல்
**अत्र**–இப்பொருளின் கண்
**विवादसंग्रहः**–விவாதத்தைச்செய்தல்
**न प्रशस्यते**–வாதிகளுக்குப்பொருத்தமன்ரும்

### விசேஷவுரை

இது என்னும் பதத்தால் எதிரிலுள்ள வஸ்து மாத்திரத்தினைப் பராமரிசஞ் செய்து அதற்கு விவக்ஷிக்கப்பட்ட கடவியத்தியின் அபேத மாத்திரத்தினை இந்த வாக்கியம் பிரதிபாதிக்கின்றது ஆதலின் அது அகண்டார்த்தமேயாம் என்பது பொருள். (275)

## வேதாந்தங்கட்குப் பிரமாணாந்தர நிரபேக்ஷத் தன்மை

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் வேதாந்தங்களுக்கு அகண்டைகரசப்பிரம்மத்தின் கண் சுருதியாலும் நியாயத்தாலும் தாத்பரியம் நிரூபிக்கப்பட்டது இப்போது **" किंचप्रमान्तर "** என்னும் 101-வது சுலோகத்தால் சித்தித்த

வஸ்துவை விஷயமாகவுடைய வாக்கியத்திற்கு பிரமாணாந்தரத்தின் சம்வாதாதீனமாகப் பொருளுடையதாந்தன்மை நிச்சயிக்கப்படுதலால் வேதாந்தங்களும் சித்தப்பிரம்மபரமாகுமாயின் அப்போது இலௌகிக சித்தார்த்த போதக வாக்கியம் போன்று பிரமாணாந்தரத்தின் அபேக்ஷையுடையனவாகும் என்று யாதொன்று கூறப்பட்டதோ அது சரியன்று அதாவது ஈண்டுவாதியின் அநுமானமிதுவாம் வேதாந்தங்கள் பிரமாணாந்தரத்தின் அபேக்ஷையுடையனவாகும் சித்த வஸ்து விஷயகமாதலின் இலௌகிக வாக்கியம் போன்று என இவ்வநுமானத்தின் கண் பிரமாணாந்தர யோக்கியார்த்தமுடையதாந்தன்மை உபாதியாதலின், அவ்வுபாதியும் வேதாந்த வடிவபக்ஷத்தில் சித்தார்த்த விஷயக ஏதுவால் அநுமிக்கத்தக்கதாமாதலின் உபாதிககு சாதனவியாபகத்தன்மையுளது என்று சொல்லற்க எதனாலெனின் எது பரிநிஷ்டிதமோ (சித்தித்ததோ) அது பிரமாணாந்தர யோக்கியமாம் என்னும் நியமமின்றாமாதலின் எதனால் பரிநிஷ்டிதத்தின் கண் பிரமாணமான வேதாந்தத்தின் கண் பிரமாணாந்தரத்தினபேக்ஷையுண்டாமென்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார் :—

*சுலோகம்*

न च प्रमाणान्तरयोग्यतायां
प्रयोजकं स्यात्परिनिष्ठितत्वम् ।
यतः प्रमाणान्तरयोग्यतायां
प्रयोजकं रूपरसादिमत्त्वम् ॥ २७६ ॥

*பதவுரை*

**प्रमाणान्तरयोग्यतायाम्**—பிரமாணாந்தர விஷயத்தன்மை யோக்கியதையின் கண்

**परिनिष्ठितत्वम्**—சித்தத்தன்மை

**प्रयोजकम्**—சாதகம் (வியாப்பியம்)

**न स्यात्**—அன்றாம்

வியாப்பியமன்றா மென்பதன்கண் ஏதுவைக்கூறுகின்றார்.

**यतः**—எதனாலெனின்

**प्रमाणान्तरयोग्यतायाम्**–பிரமாணாந்தர விஷயத்தன்மை யோக்கியதையின் கண்

**रूपरसादिमत्त्वम्**–உருவம் ரசம் முதலியவற்றையுடையதாந் தன்மையே

**प्रयोजकम्**–சாதகமாம்

## விசேஷவுரை

திரவியத்தின் கண் பிரத்தியக்ஷப்பிரமாணத்தின் பிரவிருத்தியில் உருவாதி விசேஷம் காரணமாம் அநுமானத்தியின் பிரவிருத்தியில் வியாப்தியாதி விசேஷம் காரணமாம் என்பது பொருள். (276)

## அவதாரிகை

திரண்ட பொருளைக்கூறுகின்றார் :—

## சுலோகம்

ततस्तु रूपादिविहीनरूपे
प्रमान्तरागोचरचित्स्वरूपे ।
वचः प्रमाणान्तरनिःस्पृहं सत्
प्रमाणमत्रात्मनि निर्विवादम् ॥ २७७ ॥

## பதவுரை

**ततः**–ஆதலால்

**रूपादिविहीनरूपे**–உருவம் முதலானதற்றதும்

**प्रमान्तरागोचर चित्स्वरूपे**–பிரமாணாந்தரத்திற்கு அவிஷயமும் சித்சொரூபமுமான

**अत्र आत्मनि तु**–இவ்வான்மாவின் கண்ணே

**वचः**–வேதாந்த வாக்கியம்

**प्रमाणान्तरनिःस्पृहं सत्**–பிரமாணாந்தரத்தை யபேக்ஷியாததாய்

**निर्विवादम्**–விவாதமின்றியதாய்

**प्रमाणम्**–பிரமாணமாம்

## விசேஷவுரை

யாதொரு காரணத்தால் உருவாதியையுடையதாந்தன்மையே சத்தத்தினும் வேறானப் பிரமாணத்தின் பிரவிருத்தியில் நிமித்தமோ அக்காரணத்தால் உருவாதியின்றியதும் இதனாலேயே பிரமாணாந்தரா யோக்கியமுமான சைதன்னிய ஆன்மாவின் கண் பிரமாணாந்தர ஸாபேக்ஷத்தன்மையின் அநுமானம் முற்கூறிய உபாதியால் தூஷிக்கப் பட்டமையால் வேதாந்த வாக்கியம் பிரமாணாந்தர நிரபேக்ஷமாய் சந்தேக மின்றியதாய் பிரமாணமாகின்றது என்பது பொருள் (277)

## அவதாரிகை

மேலும் உலகின் கண் பிரமாணாந்தரத்திற்கு அன்னியதாசித்தத் தன்மையுண்மையின் அது சித்தார்த்த போதக சத்தப்பிராமாண்யத்தின் நிமித்தமன்றெனக்கூறுகின்றார்:—

## சுலோகம்

लोकप्रसिद्धपदगोचरतानिमित्त
मन्यप्रमाणविषयत्वमिह प्रसिद्धम् ।
लोकप्रसिद्धपदगोचरता न चास्मिन्
ब्रह्मात्मनीति च तदत्र निवारणीयम् ॥ २७८ ॥

## பதவுரை

लोकप्रसिद्धपद गोचरतानिमित्तम् } இலௌகிகப்பிரமாணத்தால் பிரசித்தமான யாதொரு பதவிஷயத்தன்மையுண்டோ அதன் கண் நிமித்தம் (வியாபகம்)

अन्यप्रमाण विषयत्वम्—அன்னியப்பிரமாண விஷயத்தன்மையாம் என்பது

इह—இவ்வுலகின் கண்

प्रसिद्धम्—பிரசித்தமாம்

அதனாலென்னை யெனின் நிர்ணயித்துக் கூறுகின்றார்.

लोकप्रसिद्धपदगोचरता—இலௌகிகப்பிரமாணப் பிரசித்தமான பதவிஷயத்தன்மை

**अस्मिन्**—இந்த நிருவிசேஷமும் வேதாந்த லக்ஷியமுமான

**ब्रह्मात्मनि**—பிரம்ம வடிவ ஆன்மாவின் கண்

**न**—இன்றும்

திரண்ட பொருளைக் கூறுகின்றார்

**इति**—ஆதலின்

**तत्**—அன்னியப்பிரமாண விஷயத்தன்மை

**अत्र**—இவ்வான்மாவின் கண்

**निवारणीयम्**—நிவர்த்திக்கத்தக்கதாம்

## *விசேஷவுரை*

சருவபதலக்ஷிய பிரம்மத்தின்கண் சத்திஞானத்தின் அபேக்ஷையின் மையின் அதன்நிமித்தம் பிரமாணாந்தரத்தின் அபேக்ஷை ஆண்டு சத்தத் திற்கு இன்று மென்பது கருத்து. (278)

## *அவதாரிகை*

இந்தப் பிரகாரம் தனது பக்ஷத்தில் லக்ஷியப்பிரம்மத்தின் கண் சத்தத்திற்கு பிரமாணாந்தர நிரபேக்ஷமாய்ப் பிராமாண்யத்தையுபபாதனஞ் செய்து எவ்வாதிகளுக்கு காரியமே வேதத்தின் பொருளாகவும் அது லிங் முதலியவற்றின் வாச்சியமாகவும் சம்மதமோ அவர்களுக்கு இந்த ஸாபேக்ஷத்தன்மை வடிவ தூஷணம் நீக்க முடியாதாம் என்னும் அபிப் பிராயத்தால் கூறுகின்றார்:—

## *சுலோகம்*

लोकप्रयुक्तपदगोचरताऽस्ति कार्ये
तेनास्तु कार्यपरवाक्यमशेषतस्ते ।
मानान्तरेषु परतन्त्रतयाऽप्रमाणं
स्वार्थे न दूषणमिदं श्रुतिमस्तकेषु ॥ २७९ ॥

## *பதவுரை*

**ते**—ஆரிய வாதியாகிய உனது மதத்தில்

**कार्ये**—கிரியாரூப வடிவ காரியத்தின் கண்

**लोकप्रयुक्तपदगोचरता**–உலகில் பிரயோகிக்கப்பட்ட பதத்தின் விஷயத்தன்மை

**अस्ति**–இருக்கின்றது

பிரமாணாந்தரத்தால் சித்தித்ததன் கண்ணேயே சத்தியின் கிரகணம் சொல்லத்தக்கதாம் ஆதலின் காரியத்தின் கண் உலகரால் பிரயோகிக்கப்பட்ட பத விஷயத்தன்மை இருக்கின்றது எனக் கூறப்பட்டது.

திரண்ட பொருளைக் கூறுகின்றார்

**तेन**–அதனால்

**कार्यपरवाक्यम्**–காரியபரமான வேதவாக்கியம்

**अशेषतः**–எல்லா

**मानान्तरेषु**–பிரமாணாந்தரங்களிலும்

**परतन्त्रतया**–பிரமாணாந்தரத்தின் அபேக்ஷையிருத்தலால்

**स्वार्थे**–தமதர்த்தத்தில்

**अप्रमाणम्**–அப்பிரமாணம்

**अस्तु**–ஆகும்

உலகில் பிரயோகிக்கப்பட்ட பத விஷயத்தன்மையால் உனக்கு ஸாபேக்ஷத்தன்மைப்பிராப்தியாதலால் சித்த வஸ்துவின் கண் வேதத்திற்கு அப்பிராமாண்யத்தினை யங்கீகரித்து காரியத்தின் கண் அதற்குப் பிராமாண்யத்தினை யங்கீகரிக்கின்ற உனக்கு சருவப்பிரமாணாந்தரங்களிலும் பிரமாணாந்தரத்தின் அபேக்ஷையிருத்தலால் அவ்வேதமானது சுவார்த்தத்தில் அப்பிரமாணமேயாகும். தனது பக்ஷத்தில் கூறிய பிரகாரத்தால் இந்தத்தூஷணமின்றுமெனக்கூறுகின்றார்.

**इदं दूषणम्**–இந்தத் தூஷணமானது

**श्रुतिमस्तकेषु**–வேதாந்தங்களில்

**न**–இன்றும்

பிரமாணாந்தரத்தின் அதீனமாக சுவார்த்தத்தில் பிராமாண்யமாம் என்னுமித்தகைய தூஷணம் வேத சிரசுகளிலின்றும் பிரம்மபதத்திற்கு

லிங்முதலிய பதத்திற்குப் போன்று இலௌகிக பதத்தன்மையின்மையின் என்பது பொருள். (279)

### அவதாரிகை

किंच क्रिया पदमपेक्ष्य என்னும் 108-வது சுலோகத்தில் பதங்கள் கிரியா பதத்தை யபேக்ஷித்தே வாக்கியத்தன்மையாய் நன்றாய் அன்வயத்தையடைகின்றன என்பது முதலியவற்றால் வேதாந்தங்களில் கிரியா பதமின்மையின் அதனை நிமித்தமாகவுடைய பதங்களின் பரஸ்பரசம்பந்தமும் இன்றாம் ஆதலின் அதனால் வாக்கியார்த்தப் பிரமை எவ்வாறுண்டாம் என்று யாதொன்று கூறப்பட்டதோ அதற்கு உத்தரம் கூறுகின்றார்:—

### சுலோகம்

**न च क्रियाकारितसंहतीनि पदानि लोके नियमेन वक्तुम् ।**
**समीहते पक्कमतिः पदानांक्रियां विनाऽप्यन्वयदर्शनेन ॥ २८० ॥**

### பதவுரை

**क्रियाकारितसंहतीनि**–விகுதியோடு கூடிய வினைச்சொல்லால் செய்யப்பட்ட அன்வயத்தையுடைத்தானவையாய்

**पदानि**–பதங்களை

**लोके**–உலகின் கண்

**नियमेन**–நியமமாக

**वक्तुम्**–கூறுவதற்கு

**पक्कमतिः**–இலௌகிக நியாயத்தையறிந்தவன்

**नच समीहते**–இச்சிக்கின்றதில்லை எதனாலெனின்

**क्रियां विनाऽपि**–வினைச்சொலின்றியும்

**पदानाम्**–பதங்களுக்கு

**अन्वयदर्शनेन**–பரஸ்பரம் அன்வயம் காணப்படுதலால்

### விசேஷவுரை

கிரியைதிங்ந்தபதம், அதனை நிமித்தமாகவுடைய சம்ஹதி=சமன்வயம் எப்பதங்கட்கோ அவை கிரியாகாரிதஸம்ஹதீநி எனப்படும்.

## அவதாரிகை

அன்வயதரிசனத்தையேயுதாஹரிக்கின்றார்:—

## சுலோகம்

महीभुजोऽयं पुरुषो मनस्वी वनस्पतेस्तत्फलमित्यपीह ।
क्रियां विनाऽप्यन्वयवन्ति लोके पदानि दृष्टानि बहूनि वक्तुः ॥

## பதவுரை

**मनस्वी अयम्**—நல்ல மனமுடைய இவன்

**महीभुजः पुरुषः**—பூபாலனது புருஷன்

**तत्फलम्**—அக்கனியானது

**वनस्पतेः**—விருக்ஷத்தினுடையது

**इत्यपि**—என்பன முதலிய

**वक्तुः**—வக்தாவினால் பிரயோகிக்கப்பட்ட

**बहूनि**—அநேக

**पदानि**—பதங்கள்

**इह लोके**—இவ்வுலகின் கண்

**क्रियां विनाऽपि**—வினைப்பதமின்றியும்

**अन्वयवन्ति**—அன்வயமுடையனவாய்

**दृष्टानि**—காணப்பட்டன

## விசேஷவுரை

என்பன முதலிய பதங்கள் காணப்பட்டன என் கூட்டுக. எவனுடையவன் இப்புருஷன் எதனுடையது இப்பழம் என அதன் சம்பந்தி விசேஷ மாத்திரத்தின் ஜிஞ்ஞாசையுண்டாக இந்த மனஸ்வீ (விவேகி) புருஷன் அரசனுடையவன் இப்பழம் விருக்ஷத்தினுடையது என்பது முதலியவற்றால் சம்பந்தி விசேஷமாத்திரத்தின் கண் இந்தப் பிரயோகமாமாதலின் வினைப்பதத்தின் அபேக்ஷையின்மையின் வினைப் பதத்தை நிமித்தமாகக்கொண்டு அப்பதங்களின் சமன்வயமன்றும் அவாய்நிலை தகுதி அண்மையாகிய இவற்றையுடையதாந்தன்மையே பதங்களின் பரஸ்பரான்வயத்தில் நிமித்தமாம் வினைப்பதமாவது வினை

விசேஷபதமாவதன்றும் அவாய்நிலை முதலியவற்றோடு கூடிய அவ் வினைப்பதத்திற்கே அன்வயித்தன்மையுண்மையின் இலாகவத்தால் அவாய் நிலை முதலியவற்றிற்கு மாத்திரம் அன்வயப்பிரயோஜகத்தன்மை யுண்மையின் ஆதலால் வேதாந்த பதங்களுக்கு பரஸ்பரான்வயத்தில் யாதொரு பாதகமுமின்றும் என்பது கருத்து. (281)

## அவதாரிகை

இவ்வாறு உண்மையான பரிகாரத்தைக்கூறி இப்போது அதனை யங்கீகரித்தும் கூறுகின்றார்: —

## சுலோகம்

क्रियापदं वेदशिरःस्वपीष्यते विवक्षितार्थानुगुणं तु तन्मतम् ।
विवक्षितार्थप्रतिपत्तिघाति तु क्रियापदं स्वीकृतमप्यनर्थकम् ॥ २८२ ॥

## பதவுரை

क्रियापदम्–வினைப்பதம்

वेदशिरःसु अपि–வேதாந்த வாக்கியங்களிலும்

इष्यते–அங்கீகரிக்கப்படுகிறது

வேதாந்த வாக்கியங்களில் வினைப்பதத்தையங்கீகரிக்கின் வேதாந் தங்களுக்கும் கிரியையைப்போதிக்குந் தன்மைப் பிராப்தியாமெனின் அன்றெனக் கூறுகின்றார்.

तु–ஆனால்

तत्–அந்தக்கிரியாபதமானது

विवक्षितार्थानुगुणं–வேதாந்தத்தால் பிரதிபாதிக்க இச்சிக்கப்பட்ட யாதொரு அகண்டைகரசப்பிரம்மமுண்டோ அதன் கண் அனுகூலமாக

मतम्–அங்கீகரிக்கப்பட்டுளது

அதன்கண் அநுகூலமென்பதற்கு பிரம்மத்தின்கண் வேதாந்தப் பிராமாண்யத்திற்கு அவிரோதி என்று பொருள். அநுகூலபதத்தால் வியாவர்த்தியத்தினைக் கூறுகின்றார். (282)

विवक्षितार्थप्रतिपत्तिघाति– விவக்ஷிக்கப்பட்ட அகண்டைகரச அர்த்தத்தின் விரோதியான

**क्रियापदं तु**–உபாஸிக்குக என்பது முதலிய கிரியாபதமோ

**स्वीकृतमपि**–படிக்கப்பட்டதாயினும்

**अनर्थकम्**–ஆண்டு வியர்த்தமேயாம் (282)

## அவதாரிகை

விவக்ஷிக்கப்பட்ட அகண்டைகரசார்த்தத்தின் அநுகூலமான கிரியாபதம் வேதாந்தத்தின்கண் யாது என்று அபேக்ஷையுண்டாகக் கூறுகின்றார்:—

## சுலோகம்

अस्त्यस्म्यसीति च पदं प्रचुरं क्रियाया
वेदान्तवाक्यगतमादरतः पठन्ति ।
तन्मात्रतः सकलवेदशिरःपदानां
संघातसिद्धिरिति वेदशिरोनिषण्णाः ॥ २८३ ॥

## பதவுரை

**अस्ति**–இருக்கின்றது

**अस्मि**–இருக்கின்றேன்

**असि इति च**–இருக்கின்றாய் என

**वेदान्तवाक्यगतम्**–வேதாந்த வாக்கியத்தின் கண்

**प्रचुरं**–அநேக

**क्रियायाः पदम्**–வினைப்பதத்தை

**आदरतः**–விருப்பத்தால்

**पठन्ति**–படிக்கின்றார்கள்

"பிரம்மம் இருக்கின்றது என்று அறிவையாயின்" "நான் பிரம்மமாயிருக்கின்றேன்" "நீ பிரம்மமாயிருக்கின்றாய்" என்பது முதலியவற்றில் கிரியாபதமிருக்கின்றது, திஙந்தபதமிருக்கின்றது என்பது பொருள். அஃது வேதமல்ல என்னும் சங்கையை நிவர்த்தித் தற்பொருட்டு விருப்பத்தாலென்று கூறப்பட்டது. பிரண்டாம் பொருளைக் கூறுகின்றார்

விசேஷபதமாவதன்றும் அவாய்நிலை முதலியவற்றோடு கூடிய அவ் வினைப்பதத்திற்கே அன்வயித்தன்மையுண்மையின் இலாகவத்தால் அவாய் நிலை முதலியவற்றிற்கு மாத்திரம் அன்வயப்பிரயோஜகத்தன்மை யுண்மையின் ஆதலால் வேதாந்த பதங்களுக்கு பரஸ்பரான்வயத்தில் யாதொரு பாதகமுமின்றும் என்பது கருத்து. (281)

### அவதாரிகை

இவ்வாறு உண்மையான பரிகாரத்தைக்கூறி இப்போது அதனை யங்கீகரித்தும் கூறுகின்றார்: —

### சுலோகம்

**क्रियापदं वेदशिरःस्वपीष्यते विवक्षितार्थानुगुणं तु तन्मतम् ।**
**विवक्षितार्थप्रतिपत्तिघाति तु क्रियापदं स्वीकृतमप्यनर्थकम् ॥ २८२ ॥**

### பதவுரை

**क्रियापदम्**—வினைப்பதம்

**वेदशिरःसु अपि**—வேதாந்த வாக்கியங்களிலும்

**इष्यते**—அங்கீகரிக்கப்படுகிறது

வேதாந்த வாக்கியங்களில் வினைப்பத்தையங்கீகரிக்கின் வேதாந் தங்களுக்கும் கிரியையைப்போதிக்குந் தன்மைப் பிராப்தியாமெனின் அன்றெனக் கூறுகின்றார்.

**तु**—ஆனல்

**तत्**—அந்தக்கிரியாபதமானது

**विवक्षितार्थानुगुणं**—வேதாந்தத்தால் பிரதிபாதிக்க இச்சிக்கப்பட்ட யாதொரு அகண்டைகரசப்பிரம்மமுண்டோ அதன் கண் அனுகூலமாக

**मतम्**—அங்கீகரிக்கப்பட்டுளது

அதன்கண் அநுகூலமென்பதற்கு பிரம்மத்தின்கண் வேதாந்தப் பிராமாண்யத்திற்கு அவிரோதி என்று பொருள். அநுகூலபதத்தால் வியாவர்த்தியத்தினைக் கூறுகின்றார். (282)

**विवक्षितार्थप्रतिपत्तिघाति**— விவக்ஷிக்கப்பட்ட அகண்டைகரச அர்த்தத்தின் விரோதியான

**क्रियापदं तु**–உபாஸிக்குக என்பது முதலிய கிரியாபதமோ

**स्वीकृतमपि**–படிக்கப்பட்டதாயினும்

**अनर्थकम्**–ஆண்டு வியர்த்தமேயாம் (282)

## அவதாரிகை

விவக்ஷிக்கப்பட்ட அகண்டைகரசார்த்தத்தின் அநுகூலமான கிரியாபதம் வேதாந்தத்தின்கண் யாது என்று அபேக்ஷையுண்டாகக் கூறுகின்றார்:—

## சுலோகம்

अस्त्यस्म्यसीति च पदं प्रचुरं क्रियाया
वेदान्तवाक्यगतमादरतः पठन्ति ।
तन्मात्रतः सकलवेदशिरःपदानां
संघातसिद्धिरिति वेदशिरोनिषण्णाः ॥ २८३ ॥

## பதவுரை

**अस्ति**–இருக்கின்றது

**अस्मि**–இருக்கின்றேன்

**असि इति च**–இருக்கின்றாய் என

**वेदान्तवाक्यगतम्**–வேதாந்த வாக்கியத்தின் கண்

**प्रचुरं**–அநேக

**क्रियायाः पदम्**–வினைப்பதத்தை

**आदरतः**–விருப்பத்தால்

**पठन्ति**–படிக்கின்றார்கள்

"பிரம்மம் இருக்கின்றது என்று அறிவையாயின்" "நான் பிரம்மமாயிருக்கின்றேன்" "நீ பிரம்மமாயிருக்கின்றாய்" என்பது முதலியவற்றில் கிரியாபதமிருக்கின்றது, திங்ந்தபதமிருக்கின்றது என்பது பொருள். அஃது வேதமல்ல என்னும் சங்கையை நிவர்த்தித் தற்பொருட்டு விருப்பத்தாலென்று கூறப்பட்டது. திரண்டபொருளைக் கூறுகின்றார்.

**तन्मात्रतः**—அம்மாத்திரத்தினுல் (அப்படிப்பட்ட கிரியா சம்பந்தா மாத்திரத்தினுல்)

**सकलवेदशिरः पदानाम्**-சருவவேதாந்த பதங்களுக்கும்

**संघातसिद्धिः इति**—வாக்கியத்தன்மை சித்தியாமென

**वेदशिरोनिषण्णाः**-வேதாந்தத்தில் தற்பரரான வியாசர் முதலானவர்கள் கருதுகின்றனர்

வஸ்துவின் சொரூபசத்தையை மாத்திரம் பிரதிபாதிக்கும் பதங்களால் வாக்கியத்தன்மைச் சித்திக்கும் என்று சமன்வய சூத்திரத்தைச் செய்த பாதராயணர் பகவத்பாதர் முதலானவர்கள் கருதுகின்றுர்கள்.

## *அவதாரிகை*

அற்றேல் வேதாந்தங்களுக்கு இருக்கின்றதென்னும் பகுதியின் பொருளைப் பிரதிபாதிக்குந்தன்மையுண்மையின் படியபடி பிரமாணாந்தரத்தின் ஸாபேக்ஷத்தன்மையேயுண்டாம் இருக்கின்ற தென்பதன் பொருள் சத்தையாம் அந்த சத்தையும் பிரமாணாந்தரத்தின் விஷயத்தன்மையேயாம் அதனினும் வேருன சத்தா ஜாதி முதலியவையன்றும் சத்தை முதலியவற்றிற்கு அசதத்துவம் பிராப்தியாதலின் ஆதலால் சத்வடிவபிரம்மத்திற்கு பிரமாணாந்தர விஷயத்தன்மை ஆவசியகமாம் என பிராபாகரர் கூறுகின்றனர் அதனை அநுவதிக்கின்றுர்:—

## *சுலோகம்*

यत्तु प्रमाणमनुभूतिरिति प्रमाण-
सामान्यलक्षणमनूद्य पुनर्वदन्ति ।
सत्ता प्रमाणघटनां प्रति योग्यताऽतो
नास्त्यर्थनिष्ठवचनेष्वनपेक्षतेति ॥ २८४ ॥

## *பதவுரை*

அவர் கூறிய பிரகாரத்தால் அவர் மதம் பொருத்தமன்றுமென தூஷித்தற்காக அவர் கூறிய பிரகாரத்தினைக்கூறுகின்றுர்

**अनुभूतिः प्रमाणम्**—அநுபவம் பிரமாணமாம்

**इति**—என்று

**प्रमाणसामान्यलक्षणम्**-பிரமாண சாமானியத்தின் லக்ஷணத்தை

**अनूद्य**—கூறி

**पुनः**—மறுபடி

**प्रमाणघटनां प्रति**—பிரமாண விஷயத்தன்மையைக் குறித்து

**योग्यता**—யோக்கியதை

**सत्ता**—சத்தையாம்

அநுபவம் பிரமாணம் என பிரமாண சாமான்ய லக்ஷணத்தைக் கூறி பின்பு பிரமாண விஷயத்துவயோக்கியதை சத்தை என யாதொன்றைக் கூறுகின்றனரோ அது துர்க்கடமாம் (நிரூபிக்க முடியாதாம்) என வருஞ்சுலோகத்தில் அன்வயஞ் செய்க அவரது அபிப்பிராயத்தினைக்கூறுகின்றார்

**अतः**—ஆதலால்

**वस्त्वर्थनिष्ठवचनेषु**—சத்தை வடிவ அர்த்தத்தைப்பிரதிபாதிக்கும் வாக்கியங்களில்

**अनपेक्षता**—நிரபேக்ஷத்தன்மை

**न इति**—இன்றுமென

**यद्**—யாதொன்றை

**वदन्ति**—கூறுகின்றனரோ

**तद्दुर्घटम्**—அது துர்க்கடமாம் என வருஞ்சுலோகத்தோடு அன்வயஞ்செய்க (284)

### அவதாரிகை

துர்க்கடத் தன்மையினையே கூறுகின்றார்:—

### சுலோகம்

तद्दुर्घटं न खलु संविदियं स्वयोग्या
न ह्यात्मनि स्थितिमुपैष्यति योग्यताऽस्याः ।
वस्त्वन्तरोपनिहितस्वपदत्वहेतो-
र्नैवात्मरूपदहने दहनस्य शक्तिः ॥ २८५ ॥

## பதவுரை

**इयं संविद्**–இந்த ஞானமானது

**स्वयोग्या**–தனது கிராஹ்யமாக

**न खलु**–ஆகின்றதில்லை

ஞானவிஷயத் தன்மை சத்துவமா அல்லது ஞானவிஷயத்துவ யோக்கியதை சத்துவமா முதற்பக்ஷம் சரியன்றாம் ஞானத்திற்குப் பூருவம் விஷயத்திற்கு அசத்வம் பிராப்தியாதலின், இரண்டாவது பக்ஷத்திலும் ஞானத்தின்கண் அஃது (ஞானவிஷயத்துவ யோக்கியதை) இருக்கின்றதா இல்லையா முதற்பக்ஷத்தில் தனது விஷயத்துவ யோக்கியதையா அல்லது வேறு ஞானத்தின் விஷயத்துவ யோக்யதையா இரண்டாவது பக்ஷத்தில் ஞானத்திற்கு சொப்பிரகாசத் தன்மையின் அபாவம் பிராப்தியாம் என்று கருதி முதற்பக்ஷத்தின் அபாவத்தில் ஏதுவைக் கூறுகின்றார்.

**अस्याः**–ஞானத்தின்

**योग्यता**-விஷயத்தன்மை

**आत्मनि**–கிராஹக வடிவ தன்னிடத்தில்

**स्थितिम्**-நிஷ்டையினை

**न हि उपैष्यति**–அடைவதின்றாம்

ஞானத்தால் நிருபிக்கப்பட்ட விஷயத்துவ யோக்கியதை ஞானமாகிற தன்னிடத்தில் பொருந்துவதின்றாமென்பது பொருள். எதனால் பொருந்துவதில்லை என்னுமிடத்துக் கூறுகின்றார்.

**वस्त्वन्तरोपनिहि तस्वपरत्वहेतोः** } வேறு வஸ்துவில் செய்யப்பட்ட தனது விஷயத்தன்மை வடிவ ஏதுவால்

தன்னினும் வேறான கடாதியின் கண்ணேயே உண்டுபண்ணப் பட்ட யாதொரு தனது விஷயத்தன்மையுண்டோ அவ்வேதுவால் என்பது பொருள். சம்வித்விஷயத்தன்மைக்கு அதனினும் அன்னிய விருத்தித்தன்மை நியமமாதலின் அதன் கண் அஃது சம்பவியாது என்பது பொருள் சம்வித்திற்கு தனது விஷயத்தன்மையின் அபாவத்தில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.

**आत्मरूपदहने**-தனது சொரூபத்தை பஸ்மஞ்செய்வதில்

**दहनस्य** - அக்கினிக்கு

**न हि शक्तिः**-ஆற்றலின்றுமாதலின்

சம்வித் ஞானம் என்பன ஒரு பொருட்சொற்கள் (285)

*அவதாரிகை*

சம்வித்தின் கண் அவ்யோக்யதை இன்றென்னும் இரண்டாவது பக்ஷத்தினை யநுவாதஞ் செய்து நிஷேதிக்கின்றுர்:—

*சுலோகம்*

**संवित्प्रमाणघटनां प्रति योग्यतां चे-**
**न्नेयं बिभर्ति न सती भवितुं समर्था ।**
**तद्योग्यतैव यदि मातृघटादिसत्ता**
**तस्याप्यसत्त्वमिति शून्यमुपाजिहीथाः ॥ २८६ ॥**

*பதவுரை*

**इयं संवित्**-இந்த ஞானமானது

**प्रमाणघटनां प्रति**-பிரமாண சம்பந்தத்தைக்குறித்து

**योग्यतां न बिभर्ति चेत्**-யோக்கியதையைத்தரிக்காதாயின்

**सती भवितुं**-(அப்போது) சத்தியமாவதற்கு

**न समर्था**-ஆற்றலுடையதன்றாகும்

**तद्योग्यता एव**-பிரமாண விஷயத்வ யோக்கியதையே

**यदि मातृघटादिसत्ता**-பிரமாதா கடம் முதலியவற்றின் சத்தையாகுமாயின்

**तस्यापि**-அவற்றிற்கும்

**असत्त्वमिति**-அசத்துவம் பிராப்தியாம் ஆதலின்

**शून्यमुपाजिहीथाः**-நீ சூனியத்தை அங்கீகரித்தவனுவாய்

*விசேஷவுரை*

கடனை=சம்பந்தம், விஷயத்துவமென்பது பொருள், சம்வித்தின் கண் பிரமாண விஷயத்துவ யோக்கியதையின்றேல் சம்வித்து சத்திய

மாகாது. பிரமாண விஷயத்துவ யோக்கியதையே உனது மதததில் வஸ்துவின் சத்தியத்தன்மையாதலால் என்பது பொருள். அப்படி யானுல் அச்சம்வித்து அசத்தாகட்டுமே யெனின் அற்றன்று அதன் அனனுபவம் பிராப்தியாதலின் மேலும் சம்வித்தினதீனசத்துவமுள்ள அனைத்துமே அசத்தாகும் எனக்கூறுகின்ருர்- பிரமாண விஷயத்துவ யோக்கியதையேஎன. நீயும் சூனியவாதியாவாய் என்பது பொருள் (286)

## அவதாரிகை

யாதொரு காரணத்தால் பிரமாண விஷயத்துவ யோக்கியதை ஸத்துவமன்ருே அக்காரணத்தால் என உபஸம்மாரஞ் செய்கின்ருர் :—

## சுலோகம்

वस्तुस्वभाव इति सत्वमतो गृहाण
तच्च द्विधेति वितथाऽवितथत्वभेदात् ।
सत्वं द्विरूपमितरेतरसंकरेण
सच्छब्दवाच्यमिति च व्यवहारकाले ॥ २८७ ॥

## பதவுரை

**अत:**—பிரமாண விஷயத்துவ யோக்கியதை சத்துவமின்மையின்

**वस्तुस्वभाव:**—வஸ்துவின் சொருபமே

**सत्वमिति**—சத்துவமாமென்று

**(गृहाण)**—அங்கீகரிப்பாயாக

வஸ்துவின் சொருபமென்பதற்கு பாதாயோக்கிய வஸ்து சொருப மென்று பொருள்

அற்றேல் ஆன்மவஸ்துவின் சொருபமா அல்லது பிரபஞ்சத்தின் சொருபமா அல்லது இரண்டின் சொருபமா, முதற்பக்ஷமும் இரண்டாவது பக்ஷமும் சரியன்று பிரபஞ்சத்திற்கும் ஆன்மாவிற்கும் அதன் அபாவம் பிராப்தியாதலின், மூன்ருவது பக்ஷத்திலோ துவைதத்தின் பிராப்தியாம் என்று சங்கித்து **आकाशादावस्तिता** ஆகாசம் முதலியவற்றில் இருப்புத் தன்மை என்பது முதலிய இடங்களில் கூறிய பொருளை நினைப்பூட்டு கின்றவராய்க்கூறுகின்ருர்

**वितथावितथत्वभेदात्**–வியாவகாரிக சத்தியமும் பாரமார்த்திக சத்தியமும் என்னும் பேதத்தால்

**तच्च**–அந்த சத்துவம்

**द्विधा इति**–இருவிதமாமென்று

**(गृहाण)**–அங்கீகரிப்பாயாக

விததம்=வாஸ்தவமாக அசத்தியம், வியவகார காலத்தில் சத்தியம். அவிததம்=பரமார்த்த சத்தியம், இவ்வாறுயின் அஸ்திசத்தத்திற்கு அநேகார்த்தத்தன்மைப்பிராப்தியாம் என்றுசங்கித்துக்கூறுகின்றார்.

**इतरेतरसंकरेण**–பரஸ்பர சேர்க்கையால்

**द्विरूपं सत्वं**–உபயவடிவ சத்துவம்

**व्यवहारकाले**–வியவகார காலத்தில்

**सच्छब्दवाच्यमिति च**–சத்திய சத்தத்தின் வாச்சியமாமென்றும் கிரகிப்பாயாக

மூன்றும் வேற்றுமை பிரகாரார்த்தத்தில் வந்தது. விசிஷ்டவடிவத்தால் அஃது சத் சத்தவாச்சியமாம் என்று கிரகிப்பாயாக. ஆதலால் கூறிய தோஷமின்றுமென்பது பொருள் (287)

## *அவதாரிகை*

அப்படியானுல் அஸ்திசத்தத்தின் பொருளான ஆன்மா இருவடிவமாகும் என்றுசங்கித்து முற்கூறிய பொருளையே நினைப்பூட்டுகின்றார்:—

## *சுலோகம்*

उत्सृज्य तत्र वितथांशमथेतरस्मिन्
संवित्स्वरूपपरमार्थसति स्वरूपे ।
बुद्धिं कुरु प्रणिदधत्प्रणयेन भूम्नि
ब्रह्माहमस्मि परमार्थसदित्यजस्रम् ॥ २८८ ॥

## *பதவுரை*

**तत्र**–வாச்சியார்த்தத்தில்

**वितथांशम्**–கற்பிதபாகத்தை

उत्सृज्य-பரித்தியாகஞ்செய்து

अथ इतरस्मिन्-கற்பிதத்தினும் விலக்ஷணமானதும்

संवित्स्वरूपपरमार्थ- सति स्वरूपे- } ஞானவடிவமும் பரமார்த்த சத் வடிவமும்

भूम्नि-வியாபகவடிவமுமான ஆன்மாவின் கண்

प्रणयेन-சிரத்தையினுல்

प्रणिदधत्-மனதை ஏகாக்கிரமாகச்செய்து

परमार्थसत्-பரமார்த்த சத்வடிவ

ब्रह्माहमस्मि-பிரம்மம் நானுகின்றேன்

इति अजस्रम्-என்று நிரந்தரம்

बुद्धिं कुरु-புத்தியைச் செய்வாயாக

## விசேஷவுரை

விலக்ஷண வடிவத்தைக் கூறுகின்ருர். ஞானவடிவமுமென இது பரமார்த்தத்தன்மையில் ஏதுவாகக் கூறப்பட்டது. இப்படிப்பட்ட வியாபக ஆன்மாவில் சிரத்தையினுல் சித்தத்தை பிரத்தியக் பிரவணமாகச் செய்கின்றவனுய் பரமார்த்த சத்பிரம்மம் நானுயிருக்கின்றேன் என்று நிரந்தரம் புத்தியைச் செய்வாய், இவ்வாருகவே கூறிய தூஷணமின்ருமென்பது கருத்து. பிரவணம்=அபிமுகம், தற்பரதனமை. (288)

## அவதாரிகை

111-வது சுலோகத்தில் मानान्तरं यदि न चेच्छसि ஆன்மாவில் பிரமாணுந்தரத்தை விரும்பாயின் அதன் கண் சத்தத்தின் சத்திக் கிரகணம் எவ்வாறு பிரதிபாதிக்கத்தக்கதாகும் மற்ருே ஒருவாற்ருனுமாகாது என்று யாதொன்று கூறப்பட்டதோ அதற்கு உத்தரங்கூறுகின்ருர் :—

## சுலோகம்

ब्रह्म स्वयंप्रभमतः शबलेषु तस्य
मानान्तरानधिगतेष्वपि शब्दशक्तिः ।
रूपेषु वृद्धजनसंव्यवहारहेतोः
शक्या गृहीतुमुदितेन पथानभिज्ञैः ॥ २८९ ॥

### பதவுரை

**ब्रह्म स्वयंप्रभम्**–பிரம்மம் சொயம்பிரகாசமாம்

அதனால் என்னையென்னுமிடத்துக் கூறுகின்றார்.

**अतः**–ஆதலால்

**तस्य**–பிரம்மத்தினது

**मानान्तरानधिगतेषु**–பிரமாணாந்தரத்தாலறியப்படாத

**शबलेषु रूपेषु अपि**–உபாதி விசிட்ட வடிவங்களிலும்

**वृद्धजनसंव्यवहारहेतोः** – பெரியோர்களுடைய வியவகாரத்தால்

**उदितेन पथा**–198-வது சுலோகத்தில் கூறிய மார்க்கத்தால்

**अनभिज्ञैः**–அவிவேகிகளால்

**शब्दशक्तिः**–ஆன்மா முதலிய சத்தங்களின் சத்தி

**ग्रहीतुं शक्या**–கிரகிக்க யோக்கியமாம்.

### விசேஷவுரை

இதுவும் (அநாதிகதத்தன்மையும்) அகம் முதலிய சத்தங்களின் வாச்சிய வடிவ சாக்ஷிபாஸ்ய அகங்காரமும் அதன் விருத்தியுமாகிய சபளாபிப்பிராயத்தாலாம், சத்து முதலிய சத்தவாச்சிய கடாதிவிசிட்டமோ சக்ஷு முதலியவற்றால் கிரகிக்கத்தக்கதாம், பிரம்மபத வாச்சியமும் காரியலிங்கமெனப் பெயரிய தருக்கத்தாலும் பிரம்மபதத்தின் அவயவ வியுற்பத்தியினாலும் உபஸ்திதமேயாம் (அறியப்பட்டதேயாம்) அதன் அபிப்பிராயத்தால் விசிஷ்டவடிவங்களிலும் என்னும் உம்மையாம். எப்படியும் வாக்கியத்தின் தாற்பரிய கம்மியமான (விஷயமான) பிரம்மத்தின்கண் யாதொரு பிரமாணமும் பிரவிருத்திப்பதின்றாம் அப்படியாயினும் அதனது சபளவடிவங்களில் பிரமாணாநுசாரமாகவும் அநுபவாநுசாரமாகவும் சத்தி கிரகிக்கத்தகும். ஆதலின் அதன் பொருட்டு அபேக்ஷிக்கப்பட்டப் பிரமாணத்தால் வேதாந்தங்களுக்கு அநுவாதத்தன்மையின்றாம் சத்தி ஞானத்தின் விரகமும் இன்றாமென்பது கருத்து. விரகம்=இன்மை.

### அவதாரிகை

பிரம்மம் முதலிய பதங்களின் வியுற்பத்தியின்கண் உபாயாந்தரத்தை திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார்: —

## சுலோகம்

**लोकप्रसिद्धार्थपदान्तराणां समीपसङ्कीर्तनतोऽपि शक्तिः ।**
**ब्रह्मादिशब्दस्य सुखावसेया यथा हि यूपादिगिरस्तथैव ॥**

## பதவுரை

**लोकप्रसिद्धार्थपदान्तराणाम्**-உலகப்பிரசித்தமான அருத்தத்தினை யுடைய பதாந்தரங்களின்

**समीपसङ्कीर्तनतोऽपि**-சமீபத்தில் படித்தலாலும்

**ब्रह्मादिशब्दस्य**-பிரம்மம் முதலான சத்தத்திற்கு

**शक्तिः**-சத்தி

**सुखावसेया**-எளிதாக அறியத்தக்கது

**यथाहि**-எப்படி

**यूपादिगिरः**-யூபம் முதலான சத்தத்திற்கு சத்தி பிரசித்தார்த்த பதாந்தரங்களின் சமபிவியாகாரத்தாலறியப்படு கின்றதோ

**तथैव**-அப்படியேயாமென்க

## விசேஷவுரை

"எதினின்றும் இந்தப் பூதங்களுண்டாகின்றனவோ என்பது முதலாக அதனையறிய இச்சிக்குக அது பிரம்மமாம்" என்பது பரியந்த மான வாக்கியத்தின்கண் பிரம்மபதத்தினும் வேறான எதினின்றும் என்பது முதலிய பதங்கள் உலகப்பிரசித்தமான அருத்தங்களையுடையன வாதலின் அப்பதங்களின் சமீபத்தில் சங்கீர்த்தனத்தினாலும், தருக்க ரீதியினால் உபஸ்திதமானதும் சகத்காரண வடிவமும் அத்துவயமுமான அருத்தத்தில் பிரம்மம் முதலான சத்தத்திற்கு சத்தியானது இலேசாக நிச்சயிக்கத்தக்கதாக ஆகின்றது. "யூபத்தைச் செதுக்குக" "யூபத்தை எட்டு மூலையுள்ளதாகச் செய்க" என்பது முதலிய பிரசித்தார்த்ததக்ஷணம் (செதுக்குதல்) முதலியவற்றின் வாசக பதங் களின் சமீப உச்சாரண சாமர்த்தியத்தால் தக்ஷணாதி சம்ஸ்காரவிசிஷ்டம் எப்படி யூபசத்தத்தின் பொருளாக நிச்சயிக்கப்படுகின்றதோ அப்படியே "ஆஹவனீயத்தை ஆதானஞ் செய்க" என்பதாதி வாக்கியத்தின்கண்

ஆ தா ன ஸம்ஸ்காரத்தோடுகூடிய அக்னி ஆஹவநீய சத்தத்தின் பொருளாக நிச்சயிக்கப்படுகிறதோ அப்படியே என்பது பொருள். ஆதானம்—கடைந்தெடுத்தல். (290)

## அவதாரிகை

இப்போது பிரம்மம் முதலான பதங்களுக்கு சத்திக்கிரஹணமில்லா விடினும் நிகிலப்பிரபஞ்சத்தையும் நிவாரணஞ்செய்கின்ற நிஷேத வாக்கியத்தின் சாமர்த்தியத்தால் நிஷ்பிரபஞ்சப்பிரம்மம் சித்திக்கின்றது எனத்தனக்கு சம்மதமில்லாத பக்ஷத்தினையும் கூறுகின்றார் :—

## சுலோகம்

**विनापि शक्तिग्रहणं पदानां परात्मनोर्वाचकभावभाजाम् ।**
**भवेत्परब्रह्मणि वेदवाक्यात् प्रतीतिरन्यप्रतिषेधनेन ॥ २९१ ॥**

## பதவுரை

**परात्मनोः**—பரமான்மாவினதும் பிரத்தியகான்மாவினதும்

**वाचकभावभाजाम्**—வாசகத்தன்மையையடைந்துள்ள

**पदानाम्**—பிரம்மம் ஆன்மா என்பன முதலிய பதங்களின்

**शक्तिग्रहणं**—சத்திஞானம்

**विनापि**—இன்றியும்

**अन्यप्रतिषेधनेन**—பிரம்மத்தினும் வேறான பிரபஞ்சத்தை நிஷேதித்தலால்

**वेदवाक्यात्**—ஈண்டு நாநாவான்வை சிறிதுமில்லை என்பன முதலிய சுருதி வாக்கியத்தால

**परब्रह्मणि**—பரமான்மவிஷயக

**प्रतीतिः**—ஞானம்

**भवेत्**—உண்டாகும் (291)

## அவதாரிகை

அற்றேல் பி ர ம் ம த் தி ன் கண் பிரமாணுந்தரத்தால் நிஷேதம் சம்பவியாது சத்தமோ சத்தி ஞானத்தை யபேக்ஷிக்கின்றது. ஆதலின சத்திஞானமின்றியும என்று கூறியது எப்படிப்பொருந்தும் எனரு

சங்கித்து 'நஞ்' முதலிய பதங்கள் உலகப்பிரசித்தமான அர்த்தங்களை யுடையவையாயிருத்தலின் பிரம்மத்தின் கண் பதத்தின் சத்திஞான மின்றியும் அஃது பொருந்துமெனக்கூறுகின்றார் :—

*சுலோகம்*

नञः प्रपञ्चप्रतिपादकस्य च
प्रतीत्य शक्ति व्यवहारतः स्थितः ।
पदस्य शक्नोति परं समीक्षितुं
श्रुतेः प्रपञ्चप्रतिषेधमार्गतः ॥ २९२ ॥

*பதவுரை*

**स्थितः**–வியவகார பூமியில் நிற்கும் புருடனுனவன்

**नञः**–நஞ்பதத்திற்கும்

**प्रपञ्चप्रतिपादकस्य पदस्य च**–நிஷேத்தியப்பிரபஞ்சத்தை பிரதிபாதிக்கும் நாநாவானவை சிறிது என்பன முதலிய பதத்திற்கும்

**व्यवहारतः**–விருத்த புருஷருடைய வியவகாரத்தால்

**शक्तिं प्रतीत्य**–சத்தியினையறிந்து

**परम्**–பரமான்மதத்துவத்தினை

**श्रुतेः**–வேதாந்த வாக்கியத்தால்

**प्रपञ्चप्रतिषेधमार्गतः**–பிரபஞ்சத்தை நிஷேதிக்கும் வாயிலாக

**समीक्षितुं**–அறிதற்கு

**शक्नोति**–சமர்த்தனுகின்றான்

*விசேஷவுரை*

வியவகார பூமியில் என்பது பொருளால் வரவழைக்கப்பட்டது. ஈண்டு இஃது விசாரிக்கத்தக்கது பரமாத்மாவின்கண் சத்தி ஞானம் அபேக்ஷிக்கப்படாதாயின் அப்போது ஈண்டு இவன் என்பன முதலிய பதங்களால் பரமான்மாவை அநுவாதஞ் செய்து அதன்கண் பிரபஞ்சம் எப்படி நிஷேதிக்கப்படும் அதிஷ்டானமின்றி நிஷேதம் பரியவசான மாகின்றதில்லையல்லவா அதனால்தான் (நிஷேதத்தினால்) ஆன்மா எப்படி

சித்திக்கும், அற்றேல் ஆன்மா சொப்பிரகாசமாமெனின் அப்படியானல் பிரபஞ்சத்தின் நிஷேதத்தால்தான் யாது பயன்? ஆன்மாவிற்கு நிஷ்பிரபஞ்சத்தன்மை சித்தித்தற்பொருட்டு பிரபஞ்சத்தின் நிஷேதமாமெனின் அற்றன்று ஆன்மாவையநுவாதஞ் செய்து நிஷேதஞ்செய்யாவிடின் ஆன்மாவிற்கு நிஷ்பிரபஞ்சத்தன்மைதான் எப்படி சித்திக்கும் ஈண்டு என்பது முதலிய பதத்திற்கு ஆன்மாவின்கண் சத்திஞானத்தை யங்கீகரிக்கின் பிரம்மம் ஆன்மா என்பன முதலிய பதங்களால் யாது அபராதஞ் செய்யப்பட்டது. சத்தியாதிபதங்களுக்கு லக்ஷணையின்றி வருணிக்கப்பட்ட பிரம்ம சொரூபம் சித்திக்காமையானும் ஆதலால் இம்மதம் கிரந்தகருத்தாவிற்கு சம்மதமின்று மென்றுணர்க (292)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் ஆன்மசொரூபத்திற்கே சத்துத்தன்மையிருத்தலானும் அதற்குக்கூறிய பிரகாரத்தால் மாணாந்தர யோக்கியத்தன்மையின்மையானும் அதன் சபலத்தின் கண் பிரம்மம் முதலான பதங்களின் சத்திக்கிரகணம் சுலபமாதலானும் பிரத்தியக் வடிவப்பிரம்மத்தின் கண் வேதாந்தப்பிராமாண்யம் அபாதிதமேயாமாதலின் அவைகட்கு (பிரம்மத்திற்கும் வேதாந்தத்திற்கும்) பிரமாணப்பிரமேயத்தன்மை சித்தியாமெனக்கூறுகின்றார்: —

## சுலோகம்

ब्रह्मास्मीति वचोनिविष्टपदयोर्मानं भवेदन्वयः
साक्षादद्वयवस्तु तस्य च भवेन्मेयं सतस्तद्गतेः।
यद्यत्र प्रमितिं करोति भवति प्रामाण्यमत्रास्य च
स्पष्टं दृष्टमिदं हि युक्तिघटितं रूपे यथा चक्षुषः॥

## பதவுரை

**ब्रह्मास्मि इति**—பிரம்மமாயிருக்கின்றேனென்னும்

**वचोनिविष्टपदयोः**—வாக்கியத்தின் கண் பிரவேசித்துள்ள இரு பதங்களின்

**अन्वयः**—சாமாநாதிகரண்யவடிவ சம்பந்தமானது

**मानं भवेत्**—பிரமிதி ஜனனயோக்கியமாம்

**तस्य**–பிரம்மமாயிருக்கின்றேனென்னும் வாக்கியத்திற்கு

**साक्षात्**–அபரோக்ஷ பிரத்தியகபின்ன

**अद्वयवस्तु**–அத்துவிதப்பிரம்மம்

**मेयं भवेत् च**–விஷயமேயாம்

சகாரம் நிச்சயார்த்தத்தில் வந்தது மேயம் என்பது விஷயத்வ யோக்கியமாம் இரு பதங்களின் சம்பந்தமென்பதற்கு சம்பந்த விசிஷ்ட வாக்கியமென்று பொருள் வாக்கியம் பிரமாணமாமென்பதன் கண்ணும் அத்துவிதப்பிரம்மம் விஷயமாமென்பதன் கண்ணும் பிரமாணத்தைக் கூறுகின்றார்

**ततः**–அவ்வாக்கியத்தினுல்

**तद्गतेः**–அத்வயவஸ்து அறியப்படுதலின்

அயோக்கிய பதார்த்தத்தினுல் பயன் நிஷ்பலமாமையின் சுருதியும் பிரம்மமுமாகிய அவ்விரண்டும் பிரமாணத்துவ விஷயத்துவ யோக்கியமாம். எது எதனுல் அறியப்படுகின்றதோ அதன் கண் அது பிரமாணமாம் என்னும் நியமத்திற்கு அப்பிரமாணத்தின் கண் வியபிசாரத்தை யாசங்கித்து பிரமாண சாமானிய லக்ஷணத்தைக் கூறுகின்றவராய் அவ்வியபிசார தோஷத்தினைப்பரிகரிக்கின்றார்.

**यत्**–யாதொரு கரணமானது

**यत्र**–எவ்விஷயத்தில்

**प्रमितिं करोति**–பிரமிதியைச்செய்கின்றதோ

**अत्र**–அவ்விஷயத்தில்

**अस्य**–அதற்கு

**प्रामाण्यम्**–பிரமாணத்தன்மை

**भवति च**–அவசியமிருக்கின்றது

**इदं हि स्पष्टं दृष्टम्**–இவ்விஷயம் உலகில் ஸ்பஷ்டமாகக்காணப் பட்டுள்ளது

**युक्तिघटितं**–யுக்தியோடு கூடியதுமாம்

எக்கரணம் எப்பொருளில் அபாதிதாஞ்ஞாதார்த்தஞானத்தைச்செய் கின்றதோ அப்பொருளில் அக்கரணத்திற்கு பிரமிதி ஜனன யோக்கியத்

தன்மை அவசியமிருக்கின்றது இது ஸ்பஷ்டமாகக்காணப்பட்டுளது யுக்தி யுக்தமுமாம். இதனையே உதாரண விசேஷத்தில் தெரிசிப்பிக்கின்றார்.

**चक्षुषः**–நேத்திரத்திற்கு

**रूपे यथा**–உருவத்திற்போல

அநதிகதமும் அபாதிதமுமான எப்பொருள் எதனால் நிச்சயிக்கப் படுகின்றதோ அதன் கண் அஃது பிரமாணமாமென்பது பிரமாண சாமான்ய லக்ஷணமாம் அநதிகத அபாதித உருவாதியின் கண் நேத்தி ராதிபோன்று, இவ்வாறு அப்பிரமாணமன்று என்பது கருத்து. (293)

## அவதாரிகை

பிரமாணசாமான்ய லக்ஷணத்தைப்பிரகிருதத்தில் தெரிசிப்பிக்கின்ற வராய்ப்பயனைக்கூறுகின்றார் :—

## சுலோகம்

**मानान्तरानधिगतं परिनिष्ठितं यद्**
**वेदः समर्पयति चेतसि तत्परः सन् ।**
**तत्तथ्यमेव भवतीति समाश्रयस्व**
**श्रेयस्करो विधिगिरोऽवगतो यथैव ॥ २९४ ॥**

## பதவுரை

**मानान्तरानधिगतं**-பிரமாணாந்தரத்தாலறியப்படாததும்

**परिनिष्ठितं**–சுபாவ சித்தமுமான

**यद्**–யாதொரு வஸ்துவினை

**वेदः**–வேதமானது

**तत्परः सन्**–அதன்கண் தாற்பரியமுடையதாயிருந்து கொண்டு

**चेतसि**-சித்தத்தின்கண்

**समर्पयति**-போதிக்கின்றதோ

**तत्**–அவ்வஸ்து

**तथ्यमेव**–அபாத்தியமே

**भवति इति**–ஆகின்றது என

**समाश्रयस्व**-அங்கீகரிப்பாயாக

**विधिगिरः**–விதிவாக்கியத்தால்

**श्रेयस्कर:**-சிரேயஸ் சாதனமாக

**अवगत:**-அறியப்பட்ட தருமமானது

**यथैव**-எப்படி அபாத்தியமோ அது போன்று

## விசேஷவுரை

ஈண்டு உபாசிக்கத்தகுந்த குண சம்பந்தத்தை வியாவிருத்தி செய்தற் பொருட்டு அதன்கண் தாற்பரிய முடையதாய் எனப்பட்டது. வேதத்தின் தாற்பரிய கோசரத்தினும் விபரீதத்தைக் கிரகிப்பதற்கே அப்பிரமாணத்தன்மையுண்மையின், அதன் பொருள் அபாதிதமே யாமாதலின் வேதம் அதன்கண் பிரமாணமேயாமென்பது கருத்து யாதொரு வஸ்து என்பது பிரம்மமாவது அன்னியமாவது ஆகுக (294)

## அவதாரிகை

அற்றேல் காரியத்தின்கண் காரியவாக்கியம் பிரமாணமாவது போன்று பிரம்மவாக்கியம் பிரம்மத்தின் கண் எப்படிப் பிரமாணமாகும் காரியத்தன்மைக்கு சத்தத்தின் பிரமேயத்தன்மையின் கண்ணும் அதன் (காரியத்தன்மையின்) வசனத்தன்மைக்கு சத்தப் பிரமாணத் தன்மையின் கண்ணும் பிரயோஜகத்தன்மையுண்மையின். அகாரியத்துவமே வேதார்த்தத்தன்மையின்கண் பிரயோஜகமாகுக இவ்வாறு வேதத்தின் பிரமாணத்தன்மையின் கண்ணும் அதன் அகாரியத்துவ வசனத்துவமே பிரயோஜகமாகுக காரியத்துவாதியன்றும் என்று சொல்லற்க பிரயோஜகத்திற்கு கௌரவதோஷம் வருதலின் எனின் அற்றன்று உனது மதத்தின் கண்ணும் மகாஜனங்களால் ஆசிரயிக்கப்பட்ட வேதாந்தப் பிராமாண்யத்திற்கும் அதன் அர்த்தத் திற்கும் பாதம் பிராப்தியாதலின் இரண்டுமே பிரயோஜகமன்றும் மற்றே வேறேயாம் என்று கருதி கூறுகின்றார் :—

## சுலோகம்

**निष्पन्नमेव यदि वा पुरुषप्रयत्न-**
**निष्पाद्यमस्तु तदनङ्गमिह प्रमेये ।**
**एवं विधिर्भवतु शब्दसमन्वयो वा**
**प्रामाण्यकारणमिदं न वदन्ति सन्तः ॥ २९५ ॥**

## பதவுரை

**यदि निष्पन्नमेव**—யாதொன்று சுபாவசித்தம்

**अस्तु**—ஆகுமோ

**वा**—அல்லது யாதொன்று

**पुरुषप्रयत्ननिष्पाद्यम्**-புருஷப்பிரயத்தினத்தினால் சாத்தியமாகுமோ

**तद्**—அவ்விரண்டும்

**इह**—ஈண்டு

**प्रमेये**—வேதத்தின் பிரமேயத்தின்கண்

**अनङ्गम्**—அப்பிரயோஜகமாம்

**एवम्**—இந்தப்பிரகாரம்

**विधिः भवतु**—விதிவாக்கியமாகுக

**शब्दसमन्वयो वा**—அல்லது சித்த வாக்கியமாகுக

**इदम्**—இவ்விரண்டினையும்

**प्रामाण्यकारणम्**—பிரமாணத்தன்மையின் காரணமாமென

**सन्तः**—பெரியோர்கள்

**न वदन्ति**—கூறமாட்டார்கள்

## விசேஷவுரை

**यदि** யதி சத்தம் **यद्** யத் சத்தத்தின் அர்த்தத்தில் வந்தது. **वा** வா சத்தம் சகாரத்தின் அர்த்தத்தில் வந்தது அபாதிதமும் அநதிகதமும் (அறியப்படாததும்) ஆன பொருளை நிச்சயிக்கின்ற சத்தத்தன்மைக்கே அதன் (பிராமாண்யத்தின்) பிரயோஜகத்தன்மையுண்மையின் என்பது கருத்து.

அல்லது இச்சுலோகத்திற்கு மற்றோர் அவதாரிகை சோதனை சூத்திரத்தின் வலுவால் காரியமே வேதத்தின் பொருளாம் விதாயக வாக்கியமே பிரமாணமாமென சித்தித்தது ஆதலின் சித்தார்த்தபோதக வாக்கியமும் எப்படிப் பிரமாணமாம் அதன் பொருளும் எப்படி வேதார்த்தமாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார். நிஷ்பன்னமென்பதற்கு நிஷ்பன்னத்துவமென்பது பொருள்.

நிபாதங்களுக்கு அநேகார்த்தங்களுண்மையின் யதி—வா என்னும் இரு சொல்லும் போல என்னும் பொருளில் வந்தது எப்படி நிஷ்பன்னத்துவம் (சித்தத்துவம்) வேதப்பிரமேயத்தன்மையின்கண் பிரயோஜகமன்றே அப்படி புருஷப்பிரயத்தின நிஷ்பாத்தியத்துவமுமாமென அன்வயஞ் செய்க. வா என்னும் சத்தமும் திருஷ்டாந்தத்தில் வந்தது. சித்தார்த்தபோதக வாக்கியத்தன்மையினை வேதப்பிராமாண்ய காரணமென எப்படிக்கூறமாட்டார்களோ அப்படி நின்றல் கூறப்பட்ட விதி வாக்கியத்துவமும் காரணமாகாதொழிக என்பது பொருள் அல்லது சோதனை சூத்திரத்தின் பலத்தால் காரியத்தன்மை முதலியவையே வேதப்பிரமேயத்தன்மை முதலியவற்றின்கண் பிரயோஜகமன்றும் மற்றே இனி சொல்லப்போகிற அபாத்தியத்தன்மை முதலியவற்றோடு கூடிய பிரமேயமே பிரயோஜகமாம, பிரமாணமும் அத்தகைய அபாத்திய தன்மை முதலிய அர்த்தத்தை நிச்சயிப்பதுவேயாம் அந்தப்பிரமேயமும் சித்தமாவது காரியமாவது ஆகுக. சித்தத்துவாதி மாத்திரம் பிரமேயத்துவ நிமித்த(ப்பிரயோஜக)முமன்றும் என்பது கருத்து.

இந்தப்பிரகாரம் என்பதன் அனந்தரம் அப்படிப்பட்ட அர்த்தத்தை நிச்சயஞ்செய்வது என்பது எஞ்சிநின்றது. ஆதலால் அபாதிதமும் அநதிகதமும் (அறியப்படாததும்) சுரோதாவின் சமீஹிதமுமே (விருப்பத்திற்கு விஷயமுமே) வேதத்தின் தாற்பரிய கம்மியமாம் (விஷயமாம்) அத்தகைய பொருளை நிச்சயிக்குந்தன்மை யாலேயே வேதமும் பிரமாணமாம் அப்படிக்கின்றேல் போஜனுதி காரியத்தோடாவது விஷபக்ஷணுதியோடாவது சமானமான உபயாபிமதமான காரியத்திற்கும் அதன் (போஜனுதிகாரியத்தின்) வாக்கியத்தின் சமானமான சோதனை (விதாயக) வாக்கியதத்திற்கும் பிரமேயத்துவாதி நிருவாகம் கூடாதாதலின் இந்தப்பிரகாரம் இலாகவத்தால் கூறப்பட்டதுவே வேதப்பிரமேயத்துவாதியின்கண் பிரயோஜகமாம் சோதனை சூத்திரத்தின் அபிப்பிராயமோ இனிமேல் காணத்தக்கது. (295)

## அவதாரிகை

எப்படியும் வேதமானது சித்த வஸ்துவினையும் காரியத்தினையும் போதிக்கின்றது அங்ஙனமாயினும் சித்தத்துவாதி வேத போத்தியத்துவத்தின்கண் பிரயோஜகமன்றும் சித்தத்துவ காரியத்துவ அன்னியதர

போதகத்துவமும் வேதத்தின் பிராமாண்யத்தின்கண் பிரயோஜகமன்றும் என்று நியாயத்தால் கூறப்பட்ட அருத்தத்தை திருஷ்டாந்தத்தாலும் கூறுகின்றார் :—

*சுலோகம்*

**नीलैकगोचरतया नियतं न चक्षु-**
**र्नाप्यस्य पीतविषये नियमोऽस्ति शक्तेः ।**
**तद्वत्न वेदवचसामपि शक्तियोगः**
**कार्यादिवस्तुषु कथञ्चन पक्षपाती ॥ २९६ ॥**

*பதவுரை*

**नीलैकगोचरतया**-நீலநிறத்தை மாத்திரம் விஷயஞ் செய்வதாக
**चक्षुः**-நேத்திரமானது
**नियतं न**-நியமிக்கப்பட்டதன்றும்
**अस्य शक्तेः**-இந்த நேத்திரத்தின் சத்திக்கு
**पीतविषयेऽपि**-மஞ்சள் நிறத்தின் கண்ணும்
**नियमो नास्ति**-நியமமின்றும்
**तद्वत**-அதுபோல
**वेदवचसामपि**-வேதவாக்கியத்திற்கும்
**शक्तियोगः**-சத்தியின் சம்பந்தம்
**कार्यादिवस्तुषु**-காரியாதி வஸ்துக்களில்
**कथञ्चन**-எவ்வாற்றானும்
**न पक्षपाती**-பக்ஷபாதமின்றும்

*விசேஷவுரை*

வேதவாக்கியமும் காரியமாத்திரத்தை விஷயஞ் செய்வதாகவாவது சித்தமாத்திரத்தை விஷயஞ்செய்வதாகவாவது நியமமாக இன்றும். (296)

*அவதாரிகை*

கூறிய பொருளை ஜைமினியின் நியாயபலத்தாலும் திடஞ் செய்கின்றார் :—

## சுலோகம்

यद्बादरायणमतं परिगृह्य पूर्वं
श्रेयस्करेऽनधिगते खलु चोदनायाः ।
प्रामाण्यमुक्तमिदमस्य समन्वयस्य
वस्तुस्वरूपकथनेऽप्यविशिष्टमस्ति ॥ २९७ ॥

## பதவுரை

**पूर्वं**–பூருவகாண்டத்தின்கண் ஜைமினி மகரிஷியினுல்
**बादरायणमतम्**–பாதராயண மகரிஷியின் மதத்தினே
**परिगृह्य**–ஆசிரயித்து
**अनधिगते**–அறியப்படாததும்
**श्रेयस्करे**–சிரேயஸ் சாதனமானதுமான தருமத்தின்கண்
**चोदनायाः**–விதி வாக்கியத்திற்கு
**यत् प्रामाण्यम्**–யாதொரு பிரமாணத்தன்மை
**उक्तम्**–கூறப்பட்டதோ
**इदम्**–இந்தப்பிராமாண்யம்
**अस्य समन्वयस्य**–பிரஸ்துத வேதாந்த வாக்கியத்திற்கு
**वस्तुस्वरूपकथनेऽपि**–சுபாவசித்த வஸ்துவின் சொரூபத்தைப் பிரதிபாதித்தலிலும்
**अविशिष्टम्**–சமானமாக
**अस्ति खलु**–இருக்கின்றதல்லவா

## விசேஷவுரை

கருமகாண்டத்தின்கண் ஜைமினி மஹரிஷியினுல் " **अनुपलब्धेऽर्थे तत्प्रमाणं बादरायणस्यानपेक्षत्वात्** " (வியாசருடைய மதத்தில் அறியப்படாத பொருளில் அது பிரமாணமாம் அபேக்ஷிக்கப்படாமையின்) என்னும் சூத்திரபாகத்தினுல் அபேக்ஷையின்மையாலேயே வேதப் பிராமாண்யம் வியாஸருக்கு சம்மதமாமென்றங்கீகரித்து தருமத்தின் கண்ணும் உபதேசத்திற்த (விதி வாக்கியத்திற்கு) அவ்வாறே பிரமாணத்

தன்மை வியவஸ்தாபிக்கப்பட்டது அஃது (அநபேக்ஷத்தன்மை) ஈண்டு அலௌகிகார்த்த அபௌருஷேய வேதாந்தங்களிலும் இருக்கின்றதாதலின் பிரம்மத்தின்கண் பிரமாணம் எனின்றும், சோதநாசூத்திரமோதனக்கு விசாரிக்கத்தக்கதாந்தன்மையினுல் பிரதிக்ஞை செய்யப்பட்ட கருமவாக்கியத்தின் அபிப்பிராயத்தினுலாம் ஆதலின் வேதாந்தங்களுக்கு பிரம்மத்தின்கண் பிரமாணத்தன்மை ஜைமினிக்கும் சம்மதமாம் அப்படிக்கின்றேல் தருமத்தின் கண்ணும் பிராமாண்யம் நிருவாகமாகாது என்பது கருத்து. (297)

## *அவதாரிகை*

ஆதலால் சருவப்பிரமாணப் பிரமேயங்களின் சாதாரண வடிவமே வேதத்திலும் அதனருத்தத்திலும் அங்கீகரிக்கத்தக்கதாம். அஃது ஈண்டும் இருக்கின்றதேயாமென்னுமபிப்பிராயத்தால் சருவப்பிரமாணப் பிரமேயங்களின் கூறப்பட்ட சாதாரண வடிவம் பட்டாச்சாரியர் முதலானோர்க்கும் சம்மதமாமெனக் கூறுகின்றூர் :—

## *சுலோகம்*

मानान्तरानधिगतं त्ववगम्यमानं
मेयं भवेदिति हि मेयविदो वदन्ति ।
मानान्तरानधिगते विषयेऽवबोधं
कुर्वत्प्रमाणमिति मानविदां प्रसिद्धिः ॥ २९८ ॥

## *பதவுரை*

**मानान्तरानधिगतं**—பிரமாணாந்தரத்தாலறியப்படாததாயும்

**अवगम्यमानम् तु**—அறியத்தக்கதாயுமுள்ள விஷயமே

**मेयं भवेत् इति**—பிரமேயமாமென

**मेयविदः**—பிரமேயத்தையறிந்தவர்கள்

**वदन्ति**—கூறுகின்றூர்கள்

**मानान्तरानधिगते**—பிரமாணாந்தரத்தாலறியப்படாத

**विषये**—விஷயத்தின்கண்

**अवबोधं कुर्वत्**—ஞானத்தைச்செய்வது

**प्रमाणमिति**–பிரமாணமாமென

**मानविदां**–பிரமாணத்தையறிந்தவர்களின்

**प्रसिद्धिः**–நிச்சயமாம் (298)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் வேதாந்தத்தின்கண்ணும் பிரம்மத்தின்கண்ணும் பிரமாணத்தன்மை பிரமேயத்தன்மைகளின் பிரயோஜக வடிவங்களிருந்தும் வேதாந்தம் பிரம்மத்தின்கண் பிரமாணமில்லையாயின் பிரம்மமும் பிரமேயமில்லையாயின் அப்போது விதிவாக்கியத்தின்கண்ணும் தருமத்தின்கண்ணும் பிரமாணத்தன்மையும் பிரமேயத்தன்மையும் சித்திக்காது என பிரம்மத்தின்கண் வேதாந்தப் பிராமாண்யத்தினை பாதகமுகத்தால் உபஸம்மாரஞ் செய்கின்றார் :—

## சுலோகம்

**एवं सतीह यदि वेदशिरो न मानं**
**श्रेयस्करे विधिगिरोऽपि न मानता स्यात् ।**
**श्रेयस्करे विधिगिरो यदि मानता स्यात्**
**वस्तुस्वरूपकथनेऽपि समन्वयस्य ॥ २९९ ॥**

## பதவுரை

**एवं सति**–பிராமாண்யப்பிரயோஜக வடிவமிருக்கும்போது

**इह**–பிரம்மத்தின் கண்

**वेदशिरः**–வேதாந்தம்

**यदि न मानम्**–பிரமாணமன்றாயின்

**श्रेयस्करे**–தருமத்தின்கண்

**विधिगिरोऽपि**–விதிவாக்கியத்திற்கும்

**मानता न स्यात्**–பிரமாணத்தன்மையின்றாகும். அதைப்பார்க்கிலும் பிரயோஜக வடிவம் வேறின்மையின்

**श्रेयस्करे**–தருமத்தின்கண்

**विधिगिरः**–விதிவாக்கியத்திற்கு

**यदि मानता स्यात्**–பிரமாணத்தன்மையிருக்குமாயின்

**समन्वयस्य**–வேதாந்த வாக்கியத்திற்கு

**वस्तुस्वरूपकथनेऽपि** –சித்தப்பிரம்மவஸ்துவைப் பிரதிபாதித்தலின் கண்ணும் (அவ்வடிவத்தாலேயே பிரமாணத் தன்மை சித்திக்கும் என்பது எஞ்சிநின்றது)

### விசேஷவுரை

பிரமாணத்தன்மையின் பிரயோஜக வடிவம் அஞ்ஞாத ஞாபகத் தன்மை. பிரமேயத்தன்மையின் பிரயோஜக வடிவம் அநதிகதா பாதிதார்த்தத்தன்மை, இவ்விரண்டும் பூருவகாண்டத்தின் கண்ணும் உத்தரகாண்டத்தின் கண்ணும் தருமத்தின் கண்ணும் பிரம்மத்தின் கண்ணும் சமானமாமென்பது கருத்து. (299)

### அவதாரிகை

இந்தப் பிரகாரம் சுபாவசித்த பிரம்ம பரத்துவமிருப்பினும் வேதாந்தங்களுக்கு ஸாபேக்ஷத்தன்மையின் பிராப்தியின்ரும் என்று கூறப் பட்டது. இவ்வாருயினும் சித்தவஸ்துவின் ஞானத்தால் பிரயோஜனம் சம்பவியாமையின் அத்யயன விதியால் கிரகிக்கப்பட்ட வேதாந்தங் களுக்கு அந்த ஞானத்தின்கண் பரியவசானம் எப்படியாகும் என்று சங்கிக்கின்ருன் :—

### சுலோகம்

**वस्तुस्वरूपकथने ननु नास्ति पुंसः**
**किञ्चित्फलं विधिवचःसु पुनः प्रवृत्तिः ।**
**सम्भाव्यते फलमतः किल वस्तुनिष्ठ-**
**वाक्यं विधिस्तुतिपरं त्विति जैमिनीयाः ॥ ३०० ॥**

### பதவுரை

**ननु**–சங்கை

**वस्तुस्वरूपकथने**–வேதாந்தம் சித்தவஸ்துவின் சொரூபத்தைப் பிரதிபாதிக்குமாயின்

**पुंसः**–வேதாந்தத்தை யத்தியயனஞ் செய்யும் புருஷனுக்கு

**किञ्चित्फलम्**–சொற்ப பிரயோஜனமும்

**नास्ति**-இன்றும்

வேதாந்த வாக்கியத்தையத்தியயனஞ் செய்யும் புருஷனுக்குப் பயனில்லையாயின் பயனின்கண் பரியவசானந்தான் எவ்வாறு என்று சங்கித்து விதிவாக்கியத்தின் ஏகவாக்கியத்தன்மையால் அஃது சித்திக்கின்றது என்னுமபிப்பிராயத்தால் விதிவாக்கியங்களுக்கு சுவதஃ (தன்னுற்) பயனை சம்பாவனை செய்கின்றார்.

**विधिवचःसु पुनः**–விதிவாக்கியங்களிலோ

**फलम्**–சத்தபாவனையின் பாவ்பமும்

**प्रवृत्तिः**- அர்த்த பாவனையுமான புருஷப்பிரவிருத்தி

**सम्भाव्यते**–சம்பாவிக்கப்படுகிறது

பிரவிருத்தியானது புருஷார்த்த பாவ்யத்தின்கண் நிஷ்டையுடையதாகலின் விதிவாக்கியங்களுக்குப் பயனுடையதாந்தன்மை சித்திக்கின்றதென்பது பொருள். அப்படியானுல் வேதாந்தங்களுக்கு விதிவாக்கியத்தோடு ஏகவாக்கியத்தன்மை எப்படி சித்திக்கும்? சித்தப்பிரம்மத்தின்கண் விதிசம்பவியாமையால் விதிவாக்கியத்திற்கு பாவார்த்தமாத்திரத்தை விஷயஞ் செய்யுந்தன்மை நியமமாதலால் என்றுசங்கித்து கருமவிதி வாக்கியத்தோடு அர்த்தவாத வாக்கியங்களுக்குப்போன்று கருத்தா முதலானவற்றைத் துதிக்குந்தன்மையால் விதிவாக்கியத்தோடு ஏக வாக்கியத்தன்மையுளதெனக் கூறுகின்றார்.

**अतः किल**–இதனுலேயே

**वस्तुनिष्ठवाक्यम्**–சித்த வஸ்துவைப் பிரதிபாதிக்கும் வேதாந்த வாக்கியம்

**विधिस्तुतिपरं तु इति**–விதிவாக்கியத்தின் துதிபரமேயாமென

**जैमिनीयाः**–ஜைமினி மதத்தை யநுசரித்தவர்கள் கூறுகின்றார்கள்

யாதொரு காரணத்தால் வேதாந்தங்கள் சுவதஃ (சொரூபத்தால்) நிஷ்பலங்களோ விதிவாக்கியம் பயனுடையதோ அக்காரணத்தால் என்பது பொருள் ஆதலால் சுவதஃ சித்தப்பிரம்மத்தின்கண் பிரமாணமின்மையினுல் அஃது சித்திக்கின்றதில்லையென்பது பொருள். (300)

### அவதாரிகை

வாதி கூறியது சரியன்று வேதாந்தங்களுக்கு சுதந்திரமாகவே சருவதுக்கமுமற்ற நிரதிசயானந்தவடிவப் பிரம்மப்பிராப்தியாகிய பய னிருத்தலால் எனப்பரிகரிக்கின்றார் :—

### சுலோகம்

**स्यादेतदेवमनवद्यपुमर्थसिद्धि-**
**वेदान्तवेद्यविषयावगतौ न चेत्स्यात् ।**
**स्वाराज्यमत्र कवलीकृतभोगभूमि-**
**संपूर्णमस्य विदुषो भवतीति दृष्टम् ॥ ३०१ ॥**

### பதவுரை

**वेदान्तवेद्यविषयावगतौ** – உபநிஷத்துக்களால் அறியத்தக்க பிரம்மத்தின் சாக்ஷாத்காரம் உண்டாகும் போது

**अनवद्यपुमर्थसिद्धिः**–குற்றமற்ற புருஷார்த்தத்தின் சித்தியானது

**न स्यात् चेत्**–உண்டாகாதாயின்

**एतत् एवं स्यात्**–இஃது இங்ஙனமாம் நீ கூறியது உண்மையா மென்பது பொருள்

பிரம்ம சாக்ஷாற்காரமுண்டாகும்போது புருஷார்த்தத்தின் சித்தி சாக்ஷாத் உண்டாகாதாயின் நீ கூறிய பிரகாரத்தால் வேதாந்தம் கரும சேஷமாகும் மற்றொரு அங்ஙனமன்றும். புருஷார்த்தமுண்டாகின்ற தென்பது பொருள். அற்றேல் சித்தவஸ்துவின் ஞானத்தால் பிரவிருத்தி யாதி சமபவியாமையால் யாதொரு பயனுமே சம்பவிக்கின்றதில்லை. இவ்வாறாக குற்றமற்ற புருஷார்த்தத்தினடைவு எவ்வாறும் என்னுமிடத் துக் கூறுகின்றார்.

**अत्र** - பிரம்மசாக்ஷாத்காரமுண்டாகும் போது

**कवलीकृतभोगभूमि**–பிரமன் முதலோர்களுடைய போகங்களை விழுங்கினதும்

**संपूर्णम्**—அனவச்சின்னமுமான
**स्वाराज्यम्**—சொரூபசுகமானது
**अस्य विदुषः**—இந்த வித்வானுக்கு
**भवति इति**—உண்டாகின்றது என
**दृष्टम्**-சுருதியில் காணப்பட்டுள்ளது

## விசேஷவுரை

பிரம்மாதிகளுடைய போகங்களை விழுங்கினது என்றதால் சொருபசுகத்திற்கு நிரதிசயத்தன்மை கூறப்பட்டது. பிரம்மா முதலானோருடைய போகபூமிகள் (போகங்கள்) எந்தச்சொருப சுகத்தால் தன்னுள் அடக்கப்பட்டனவோ அஃது அவ்வாறு கூறப்பட்டது. பிரம்மாதிகளின் சுகத்தை விழுங்கியிருத்தலானேயே அச்சுகம் அனவச்சின்னமாம்-காணப்பட்டது. 'பிரம்மததினுடைய அவ்வானந்தம் ஏகமாம்' என்பது முதலிய சுருதியில் என்பது எஞ்சி நின்றது அல்லது பிரம்ம வித்துக்களால் அநுபவிக்கப்பட்டுளது. இந்தப்பிரகாரம் வேதாந்தங்களுக்கு பலப்பிராப்தியின் பொருட்டு பிரவிருத்தியாதியின் அபேக்ஷையின்றும் ஆதலின் விதிவாக்கியத்தோடு ஏகவாக்கியத்தன்மையின்றும் அத்துவிதப்பிரம்மத்திற்கு பிரமாணசூனியத்தன்மையுமின்றும் என்பது கருத்து. 301

## அவதாரிகை

அற்றேல் நெய்யைப்பார்த்தல் முதலியவை போன்று ஆன்ம ஞானமும் ஞானமாதலால் அன்னியத்திற்கு அங்கமேயாம் என்று சொல்லத்தக்கது ஆதலின் ஞானத்தன்மை மாத்திரத்திஞல் புருஷார்த்தத்தின் அடைவு எப்படிச்சித்திக்கும் என்னுமிடத்துக்கூறுகின்றூர்:—

## சுலோகம்

यस्यापि विप्लुषि कृतार्थतया निषण्णाः
शक्रादयो जलचरा इव सागरस्य ।
प्रत्यक्स्वभावकमपास्तसमस्तदुःखं
तद्ब्रह्मार्णवं सुखमवाप्नुवतः किमन्यत् ॥ ३०२ ॥

### பதவுரை

**सागरस्य**—சமுத்திரத்தின்

**विप्लुषि**—துளிமாத்திரத்தினாலே

**जलचराः इव**—ஜலத்தில் சஞ்சரிக்கின்ற ஜந்துக்கள் பரமப்பிரீதியை யடைவது போல

**यस्यापि विप्लुषि**—எந்தப்பிரமம சுகத்தினுடைய லேசமாத்திரத் திலும

**शक्रादयः**—இந்திரன் முதலானவர்கள்

**कृतार्थतया**—கிருதார்த்தத்தன்மையால்

**निषण्णाः**—நிலைத்திருக்கின்றனரோ

**प्रत्यक्स्वभावकम्**—அபரோக்ஷ ஆன்மவடிவமும்

**अपास्तसमस्तदुःखम्**—சருவதுக்கமுமற்றதும்

**वैष्णवम्**—வியாபகவடிவமுமான

**तत्सुखम्**—அந்த ஆனந்தத்தை

**अवाप्तवतः**—அடைந்த வித்துவானுக்கு

**अन्यत्**—வேறே செய்யத்தக்கது

**किं**—யாதுளது

### விசேஷவுரை

மூவுலகிற்கும் ஈசனான இந்திரன் முதலானோர் எந்தப்பிரம்மத்தின் சொரூபானந்தத்தின் ஓர் லேசமாயுள்ளதும் மூவுலகையாளுதல் முதலானவற்றால் உண்டாவதுமான சுகத்தையடைந்து நாங்கள் கிருதார்த்தர்கள் என்று கருதுகின்றவர்களாய் அன்னியத்தை யபேக்ஷிக்கின்றார்களில்லையோ அந்தப்பிரத்தியக் சுவபாவத்துவாதி விசிஷ்டமும் விஷ்ணுவின் பரமபதமுமான சுகத்தை யடைந்த அறிஞனுக்கு அனனியமாக செய்யத்தக்கது யாதொன்றுமின்றும் "आत्मानं चेद् विजानीयादयमस्मीति पूरुषः । किमिच्छन्कस्य कामाय शरीरमनुसंज्वरेत् ॥" (இப்புருடன் நானாகின்றேன் என்று ஆன்மாவை யறிவானாயின் எதனை யிச்சிக்கின்றவனாய் எதனது போகத்தின்பொருட்டு சரீரத்தைப்பற்றி தாபப்படுவன்) என்னுஞ் சுருதியினாலும், மெய்யின

தெரிசனமோ யாகப்பிரகரணத்தில் விதிக்கப்பட்டதாகலின் பராங்கமாம் இவ்வாறு ஆன்மஞானம் அதன் பிரகரணத்தில் விதிக்கப்பட்டதன்றும் ஆதலின் சுவதந்திரமாம். இஃது பட்டபாதருக்கும் சம்மதமாம் "सर्वत्रैव हि विज्ञानं संस्कारत्वेन गम्यते। पराङ्गं चात्मविज्ञाना-दन्यत्रेत्यवधारितम्" (ஆன்மஞானத்தினின்றும் வேறான எல்லா இடங்களிலும் விஞ்ஞானம் ஸம்ஸ்கார ஏதுவாக அறியப்படுகின்றது பராங்கமாகவும் நிச்சயிக்கப்பட்டுளது) என அவர் கூறியிருத்தலின் என்பது கருத்து. இந்திரன் முதலானோருக்கு பிரம்மசுகத்தின் லேசப் பிராப்திமாத்திரத்தினாலே கிருதார்த்தத்தன்மையில் சமுத்திரத்தில் என்பதாதி திருஷ்டாந்தமாம். சமுத்திரத்தின் பிந்துவில் கிருதார்த்தத் தன்மையால் மூழ்கியிருக்கின்ற ஜல ஜந்துக்கள்போல என்பது பொருள்.

### அவதாரிகை

ஆன்மா இந்தப்பிரகாரம் சுகரூபமாயின் ஏன் நம்மால் அவ்வாறு அநுபவிக்கப்படுகின்றதில்லை என்று ஆசங்கித்து அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டிருத்தலின் நம்மால் அனுபவிக்கப்படுகின்றதில்லை வித்தையின் உற்பத்தி மாத்திரத்தால் அஞ்ஞானம் நீங்கிவிடுதலின் பூர்ண சுகாநுபவம் பொருந்துகின்றது என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார் :—

### சுலோகம்

अज्ञानमात्मविषयं भवहेतुभूतं
प्रच्छादकं च परमात्मसुखस्य तूर्णम् ।
अत्यन्तवाक्यजनितात्ममतिर्विपाक-
मासाद्य हन्ति यदि तत्र किमर्थनीयम् ॥ ३०३ ॥

### பதவுரை

आत्मविषयम्—சாக்ஷிசித்தமும்

भवहेतुभूतम्—சம்சாரத்திற்குக்காரணமாயுள்ளதும்

परमात्मसुखस्य—பிரம்மவடிவானந்தத்தை

प्रच्छादकं च—மறைப்பதுமான

अज्ञानम्—அவித்தையை

**वेदान्तवाक्यजनित**–வேதாந்த வாக்கியத்தால் உண்டான

**आत्ममतिः**–ஆன்மசாக்ஷாற்காரம்

**विपाकम्**–பரிபக்குவத்தை

**आसाद्य**–அடைந்து

**तूर्णम्**–சீக்கிரமாக

**यदि हन्ति**–நாசஞ்செய்யுமாயின்

**तत्र**–ஆண்டு (அப்போது)

**अर्थनीयम्**–வாஞ்சிக்கத்தக்கதாக

**किम्**–வேறே யாதிருக்கின்றது அதாவது ஞானமாத்திரத்தினால் கிருதகிருத்தியத்தன்மையென்பது கருத்து

## *விசேஷவுரை*

சாக்ஷிசித்தமென்பதனால் அஞ்ஞானத்தில் பிரமாணம் கூறப்பட்டது. சம்சாரத்திற்குக்காரணம் என்றதனால் அதன்கண் அனர்த்த ஏதுத்தன்மை கூறப்பட்டது. மறைப்பதுமென்பதனால் புருஷார்த்தத்தின் பிரதிபந்தகத்தன்மை கூறப்பட்டது. பரிபக்குவத்தை அடைந்து என்பதனால் போலிஞானத்தினின்றும் வேறு பிரிக்கப்பட்டது. பரிபக்குவமென்பதற்கு சிரவணாதியை நிமித்தமாகக்கொண்டதும் தனது விஷயத்தின்கண் ஸ்திரமுள்ளதும் என்பது பொருள். (303)

## *அவதாரிகை*

அற்றேல் யாண்டும் சாத்தியத்திற்கே புருஷார்த்தத்துவம் காணப்பட்டுளது முன்னமே சித்திக்கற்கு புருஷார்த்தத்துவம் காணப்படவில்லை. பிரமசுகமும் நித்திய சித்தமாம் ஆதலின் அஃது விவேகியின் விருப்பத்திற்கு எப்படிவிஷயமாகும் என்று ஆசங்கித்து உலகின்கண் முன்னமே சித்தித்ததாயினும் அஞ்ஞாத வஸ்துவிற்கு பிரேக்ஷா (ஞான) விஷயத்தன்மை காணப்படுகின்றது ஞானத்தால் அதன் அஞ்ஞானம் நீங்கும்போது இஷ்டம் அடையப்பட்டது என அநுபவமும் காணப்படுகின்றது இந்தப்பிரகாரம் அடையப்பட்டதாயினும் அஞ்ஞாத பிரம்ம சுகத்தின்கண் விவேகிகளுக்கு விருப்பமும் அஞ்ஞான நிவிருத்தி காலத்தில் கிருதார்த்தத்தன்மையும் பொருந்துகின்றது என இரண்டு சுலோகங்களால் கூறுகின்றார் :—

சுலோகம்

करमुष्टिनिविष्टमुत्तमं कनकं प्रस्मरणादलब्धवत् ।
प्रतिभाति तदाप्तवाक्यतः प्रतिपत्त्या लभते यथा जनः ॥ ३०४ ॥

பதவுரை

करमुष्टिनिविष्टम्-கைமுஷ்டியில் வைக்கப்பட்ட
उत्तमं कनकम्-மேலான சுவர்ணம்
प्रस्मरणात्-மறதியினுல்
अलब्धवत्- அடையப்படாததுபோல
प्रतिभाति-விளங்குகிறது
आप्तवाक्यतः-கைப்பிடியைத்திறந்து பார் என்னுமாப்த புருஷனது வசனத்தால்
प्रतिपत्त्या-அதன் பிரதீதியினுல்
जनः-மனிதனுனவன்
यथा-எப்படி
तत्-அந்த சுவர்ணத்தை
लभते-அடைகின்றுனே (304)

சுலோகம்

परमात्मपदं पराकृतद्वितयं प्राप्तमपि स्वभावतः ।
अनवाप्तवदेव लिप्सते लभते चैवमयं प्रमाणतः ॥ ३०५ ॥

பதவுரை

एवम्-இந்தப்பிரகாரம்
स्वभावतः-சுவசொருபத்தால்
प्राप्तमपि-அடையப்பட்டதாயினும்
पराकृतद्वितयम्-துவைதமற்ற
परमात्मपदम्-பிரம்ம பதத்தை
अनवाप्तवदेव-அடையப்படாத கனகவஸ்திரம் முதலியவை போன்றே

**अयम्** -இவன்

**लिप्सते**- அடைய இச்சிக்கின்றான்

**प्रमाणतः**-பிரம்ம சாக்ஷாத்காரத்தினால்

**लभते च**-அடையவுஞ் செய்கின்றான்

### *விசேஷவுரை*

பரமான்ம என்பது தார்ஷ்டாந்திகமாம். சுகத்தின்கண் கிருதி சாத்தியத்தன்மை புருஷார்த்தத்தன்மைக்குப் பிரயோஜகமன்றும் கௌரவமாதலானும் அஃது துக்காதி சாதாரணமாதலானும், மற்றோ தனக்கு பிரகாசமான சுகத்தன்மை புருஷார்த்தத்துவப்பிரயோஜகமாம் அஃது நித்தியசித்த ஆன்மசுகத்தின் கண்ணும் இருக்கின்றது. ஞானத்திற்கு வியர்த்தத்தன்மையுமின்றும் அதனாவரண நிவர்த்தியின் பொருட்டு அஃது அபேக்ஷிக்கப்படுதலின் என்பது கருத்து (305)

### *அவதாரிகை*

இந்தப்பிரகாரம் பாதிக்கப்படாததும் அறியப்படாததுமான பிரம்மத்தைப் பிரதிபாதிப்பனவும் நிரதிசயானந்தப் பிரம்மப் பிராப்தியின் கண் பரியவசானமாவனவுமான வேதாந்தங்களுக்கு தருமத்தின்கண் விதிவாக்கியத்திற்குப்போன்று பிரம்மத்தின்கண் பிரமாணத்தன்மை நிரபவாதமாமென உபபாதனஞ் செய்யப்பட்டது.

சங்கை: இப்படிப்பட்ட பிரம்மமானது வேதாந்தங்களால் அறியப் படுகின்றது என்பது வாஸ்தவந்தான் ஆனால் காரியபரமான வேதாந்தங் களால்தான் அறியப்படுகின்றது கேவல சித்தபரமான அவைகளால் அன்று. உலகின்கண் சத்தங்களுக்கு சித்தவஸ்துவின்கண் சத்தி ஞானம் சம்பவியாமையால் வேதத்திற்கும் சித்த வஸ்துவில் சத்தி ஞானம் பொருந்தாமையின், காரியத்தின்கண் சத்தி ஞானம் கூறப் பட்டமையானும் என்க.

" ஆன்மா என்றே உபாஸனை செய்க " என ஆன்மோபாஸனை விதிக்கப்படுகிறது ஆண்டு இராத்திரி சத்திர (ஓர் யாக விசேஷம்) நியாயத்தால் ' பிரம்மத்தையறிந்தவன் பிரம்மமேயாகின்றான் " என்பது முதலிய அருத்தவாதத்தால் அறியப்பட்ட பிரம்மபவனகாமன் (பிரம்ம

மாவதற்கு இச்சிப்பவன்) நியோஜ்ஜியனுக கற்பிக்கப்படுகின்ருன். பிரம்ம பவனகாமனுக்கு கருத்தவ்யத்தன்மையால் அறியப்பட்ட உபாஸனையை விஷயமாகவுடைய நியோகம் தன்னிடத்தில் (நியோகத்தில்) நேரே கருத்தவ்யத்தன்மை பொருந்தாமையால் தனது (நியோக) சித்தியின் பொருட்டு தனது விஷயமாகிய உபாஸனையின் அனுஷ்டானத்தை யாக்ஷேபஞ் செய்கின்றது அவ்வுபாஸனையும் அறியப்படாததாகி அநுஷ்டிப்பதற்கு யோக்கியமன்ரும் ஆதலின் அதன் ஞானத்தின் பொருட்டு விஷயத்தன்மையால் அதனை நிரூபணஞ்செய்கின்ற அத்துவித ஆன்மாவையும் உபாஸனு நியோகம் அபேக்ஷிக்கின்றது அதனுல் இவ்வான்மா என்பது யாது என்று அதன் ஆகாங்க்ஷையுண்டாகுங்கால் சத்தியாதி வாக்கியம் உபாஸனையின் நியோகத்தின் கண்ணேயே பரியவசானமுடையதாய் விதிபரமான மந்திரங்கள் தேவதை விக்கிரகத்தைப் போதிப்பதுபோன்று ஆன்மாவை போதிக்கின்றது ஆதலின் அவ்வான்மா காரியபரமான வேதாந்தத்தால் சித்திக்கின்றது எனின்

அப்படியன்று சித்தவஸ்துவிலும் சத்தங்களுக்கு சம்பந்த (சக்தி) ஞானத்தை இனி சொல்லப்போவதாலும் மோக்ஷகாமனைக் குறித்து உபாஸனைவிதி சம்பவியாமையாலும் என்க. அஃதெப்படியெனின் உபாஸனை பிரதான கருமமாக விதிக்கப்படுகின்றதா அல்லது குண கருமமாக விதிக்கப்படுகின்றதா. முதற்பக்ஷத்தில் உபாஸனையால் உண்டான அபூர்வத்திற்கு எங்கே உபயோகமெனை விசாரிக்கத்தக்கது. பிரம்மத்தின் ஏகத்தன்மையில் அதற்கு உபயோகமன்ரும் நித்திய சித்தமான அதற்கு அதனுல் சாத்தியத்தன்மையின்மையின் அவித்தை யின் நிவர்த்தியின் கண்ணும் உபயோகமன்ரும். அதற்கும் ஞான மாத்திர பலத்தன்மையுண்மையின், ஆன்மசாக்ஷாத்காரத்தின் கண்ணு மன்ரும் அதற்கு சிரவணுதி விதியின் பலத்தன்மையுண்மையால் அதன் பலத்தன்மையின்மையின், அன்வயவியதிரேகங்களால் அதன் சாதனத் தன்மை சித்தித்தலால் அதன்கண் பிரவிருத்தி சம்பவித்தலாலும் விதி வியர்த்தமாதலாலும், என்க. நெல்லைக் குத்துக என்பது முதலிய இடங்களில் நியமாபூருவமிருத்தலின் எப்படி விதிவாக்கியத்திற்கு வியர்த்தத்தன்மையின்ரே அப்படி பிரகிருதத்திலுமிருக்கட்டுமேயெனின் அப்போது உபாஸனைக்கும் அபூருவவாயிலாக மோக்ஷபலத்தன்மை

சித்திக்காது. ஆதலின் பிரதான கருமத்தன்மையின்றும். மற்றோ சித்தாந்தத்தில் நிதித்தியாசனத்திற்குப்போன்று ஆன்ம ஞானார்த்தத் தன்மையால ஆன்மசேஷத்தன்மையேயாகும்.

இதனாலேயே குணகருமமாகவும் உபாஸனை விதியன்றும். மேலும் குணகருமத்தின பயன் பிராப்தியாவது உற்பத்தியாவது ஸம்ஸ்கார மாவது விகாரமாவது ஆகும் இவைகளுள் ஓர் பயனாவது பிரம்மத்தின் கண் உபாஸனையால சமபவிக்கிறதில்லை என வியதிரேக திருஷ்டாந்தத் தோடுகூட தெரிசிப்பிக்கின்றார் :—

### சுலோகம்

न स्वाध्यायवदाप्यता न च पुनस्त्रेताग्निवज्जन्यता
न व्रीह्यादिवदस्य संस्कृतियुजा नो सोमवद्विक्रिया ।
पाठाधानजलोक्षणाभिषवणैः कूटस्थरूपं हि तत्
ब्रह्मापास्तविकारजन्ममरणं निश्रेयसं साधनैः ॥ ३०६ ॥

### பதவுரை

पाठाधानजलोक्षण- अभिषवणैः — வேதாத்தியயனம் அக்கினியினாதானம் ஜலத்தைப் புரோக்ஷித்தல் சோமலதையை யிடித்தல் ஆகிய

साधनैः—சாதனங்களால் முறையே

स्वाध्यायवत् —தனது வேதம் பிராப்தியாவதுபோன்று

अस्य—பிரம்மத்திற்கு

आप्यता—அத்தியயனத்தால் பிராப்யத்தன்மை

न—இன்றும்

त्रेताग्निवत् —ஆதானத்தால் அக்கினித்திரயம் ஜன்னியமாவது போன்று

न च पुनः अन्यता—ஜன்னியத்தன்மையுமின்றும்

व्रीह्यादिवत् —விதிக்கப்பட்ட புரோக்ஷணத்தால் நெல் சுத்தியாவது போன்று

न संस्कृतियुजा—ஸம்ஸ்கார சம்பந்தமுமின்றும்

**सोमवत्**—இடித்தலால் சோமலதை விகாரப்படுவதுபோன்று

**वो विक्रिया**—விகாரமுமின்ரும்

பிராப்தியாதியின் அபாவத்தில் ஏதுவினைக் கூறுகின்ரூர்.

**तद्ब्रह्म**—அந்தப் பிரம்மமானது

**अपास्तविकारजन्ममरणम्**—உற்பத்திநாச விகாரங்களற்றதாய்

**निश्रेयसम्**—மோக்ஷவடிவமாய்

**कूटस्थरूपं हि**—கூடஸ்தருபமாயிருத்தலின்

## *விசேஷவுரை*

" **स्वाध्यायोऽध्येतव्यः** " " தனது வேதம் அத்தியயனஞ் செய்யத் தக்கது" என்பதனுல் விதிக்கப்பட்ட தனது சாகையின் அத்தியயனத்தால் தனது சாகையின் பிராப்திபோன்று பிரம்மத்தின் பிராப்தி சம்பவிக்கின்றதில்லை. தன்து சாகையின்கண் பிராப்தியானது அத்தியயனஞ் செய்பவனது அதீனமான உச்சாரண க்ஷமத்துவம் (யோக்கியத்துவம்) ஆம், " **वसन्ते ब्राह्मणः अग्नीनादधीत** " வசந்தகாலத்தில் பிராமணன் அக்கினியை யாதானஞ்செய்க" என்பதனுல் விதிக்கப்பட்ட ஆதானத்தால் , கார்ஹபத்யம் ஆஹவனீயம் தக்ஷிணுக்கினி வடிவங்களான அக்கினித்திரயத்திற்குப்போன்று உற்பத்தியும் சம்பவிப்பதின்ரும் " **व्रीहीन् प्रोक्षति** " " நெற்களைப் புரோக்ஷணஞ் செய்க" என்பதாதியால் விதிக்கப்பட்ட புரோக்ஷணத்தால் நெல், உரல் முதலானவற்றிற்குப் போன்று ஸம்ஸ்காரத்தோடு சம்பந்தமுமின்ரும். சம்ஸ்காரம் = புரோக்ஷணத்தால் செய்யப்பட்ட அதீந்திரிய அதிசய விசேஷம், " **सोमम् अभिषुणोति** " " சோமலதையைப் பிழிக" என்பதனுல் விதிக்கப்பட்ட குட்டன (இடித்தல்) வடிவ அபிஷவணத்தால் சோமலதைக்குப்போன்று அன்னியதாபாவவடிவ விகாரமுமின்ரும். பாடம் = அத்தியயனம், உக்ஷணம் = புரோக்ஷணம், பாடம் முதலிய நான்கிற்கும் கிரமப்படி தனது சாகை முதலியவற்றின் ஆப்யத்தன்மை முதலியவற்ருேடு சம்பந்தமாம் ஈண்டு சாதனங்களால் என்னும் பன்மை பூருவபக்ஷத்தில் மனேமயாதிப் பிரம்மத்தின் உபாஸனுதி அபிப்பிராயத்தாலாம்.

பிரம்மத்தின்கண் பிராப்தி முதலியவை ஏதனுற் சம்பவிப்பதில்லை என்னுமிடத்துக் கூறுகின்ரூர் கூடஸ்தமென ஒரு ஏதுவில் வந்தது.

யாதொரு காரணத்தால் பிரம்மம் கூட ஸ்தாதி வடிவமோ அக்காரணத்தால் இதற்கு பிராப்தியாதியின்றுமென கூட்டுக. கூடஸ்தபதத்தால் சூசிப்பிக்கப்பட்ட நிருவிகாரத்தன்மையும் அஜன்னியத்தன்மையும் அபாஸ்த (அற்ற) என்பதனுல் தெரிசிப்பிக்கப்பட்டது. அன்னிய பாவ விகாரங்களும் நிராகரிக்கப்பட்டன என்பதை சூசிப்பித்தற்கு மரண (நாச) க் கிரகணமாம். பிரம்மபதத்தால் அதற்கு சருவான்மத் தன்மையைத் தெரிசிப்பிக்கின்ற ஆசிரியரால் ஆப்யத்தன்மை நீக்கப் பட்டது. நிஸ்ரேயஸம் என்பதனுல் பரமப்பிரயோஜன ரூபத்தன்மை யால் உபயுக்த உபயோக்ஷ்யமாணத்தன்மையின் சம்ஸ்கார்யத்தன்மை நிராகரிக்கப்பட்டது எனக் காண்க. (306)

## அவதாரிகை

அற்றேல் "பிரம்மமாகவேயிருந்து பிரம்மத்தை அடைகின்றான்" என அதற்கு பிராப்யத்தன்மை கேட்கப்படுகின்றது, பிரம்மமாகவே இருந்து என்பதனுல் அதற்கு முன்னமும் சத்துவமிருத்தலால் பிராப்திக் கிரியையின் சாத்தியத் தன்மையின்றும் என்று சொல்லற்க கிரியா பதத்தை அநுசரித்து பிரம்மமாகவே என்பதற்கு பாவிபரத்துவ (எதிர் காலத்திலாந்தன்மை) த்தைக் கற்பித்தலின். இவ்வாறாயினும் பிரம்மம் சருவகதமாதலின் அதற்கு கடத்தோடு ஆகாசத்திற்குப் போன்று கிரியையால் பிராப்யத்தன்மையின்றும் என்று சொல்லற்க. "சுவர்க்கத்தி னின்றும் மேலாக யாதொரு ஜோதி விளங்குகிறதோ" என்னும் சுருதியால் சித்தித்த அவிகிருத பிரம்மப் பிரதேசத்திற்குப் பிராப்யத் தன்மைப் பொருந்துதலின் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்:—

## சுலோகம்

ब्रह्मैव सन्निति वचः प्रथमश्रुतत्वा-
दप्येतिशब्दमुपसंहरणस्थमुच्चैः ।
प्रत्यावयत्स्वविषयादुचितादबलीयो
ब्रह्मात्मनोरनतिरेकमसाध्यमाह ॥ ३०७ ॥

## பதவுரை

ब्रह्म एव सन् —பிரம்மமாகவேயிருந்து

इति वचः—என்னும் தேற்ற ஏகாரத்தோடுகூடிய வாக்கியமானது

**प्रथमश्रुतत्वाद्** –முதலில் கேட்கப்படுதலால்

**बलीयः**–பலமுடையதாகி

**उपसंहरणस्थम्** –பிரம்மமாகவேயிருந்து என்னுமிந்த வாக்கியத்தின் அந்தியத்திலுள்ள

**अप्येतिशब्दम्** –அடைகின்றான் என்னும் சத்தத்தை

**उचिताद्** –முக்கியார்த்தமான

**स्वविषयात्** –தனது விஷயத்தினின்றும்

**उच्चैः**–ஸ்பஷ்டமாக

**प्रच्यावयत्** –நிவர்த்தி செய்கின்றதாய்

**ब्रह्मात्मनोः**–பிரம்மான்மாக்களின்

**असाध्यम्** –சாதிக்கத்தகாத (நித்தியசித்த)

**अनतिरेकम्** –அத்தியந்தாபேதத்தை

**आह**–கூறுகின்றது

## *விசேஷவுரை*

பிரம்மமாகவேயிருந்து என்னும் அவதாரண (நிச்சய)த்தோடுகூடிய இந்த வாக்கியமானது முன்னர் கேட்கப்படுதலால் அவ்வாறே ஞானத்தை யுண்டுபண்ணுகிறதாய் அசஞ்சாத விரோதித்தன்மையால் (விரோதி யுண்டாகாதபடியால்) பலமுடையதாகி அந்தியத்தில் கேட்கப்படுகிற அடைகின்றான் என்னும் சத்தத்தை முக்கியார்த்தத்தினின்றும் நீக்குகின்றது. ஓர் வாக்கியத்தின்கண் உபக்கிரமத்தை யநுசரித்து உபசம்மாரத்தைக்கொண்டு செலுத்தவேண்டியதாகலின், எங்ஙனம் "**त्रयो वेदा अजायन्त**" "மூன்று வேதங்கள் உண்டாயின" என்னுமர்த்தவாதத்தின் உபக்கிரமத்திலுள்ள வேத சத்தத்தையநுசரித்து "**उच्चैः ऋचा क्रियते**" உரக்க ரிக்கினால் செய்யப்படுகிறது" என அந்தியத்தில் படிக்கப்பட்டதாய் விதிவாக்கியத்திலுள்ளதாயினும் மந்திர வாசகரிக்கு முதலிய பதமானது வேதபரமாகக்கொண்டு செலுத்தப்பட்டது. ஆதலால் பிரம்மத்திற்கும் ஆன்மாவிற்கும் அத்தியந்தம் அபேதமேயாம். ஆதலின் இந்த சுருதியினால் அதன் பிராப்யத்துவ சித்தியின்றும் ஆதலின் அவித்தையின் நிவிருத்தியினால் அப்பிராப்தத்தன்மையின் பிராந்தித்துவம்ஸமே அவ்வாறு உபசரிக்கப்படுகின்றது. அவிகிருதப்

பிரம்மமும் எவ்விடத்தும் எப்போதும் இருக்கின்றதேயாம். அசங்கத் தன்மையால் அதற்கு சருவவிகார சூனியத்தன்மையுண்மையின், இதனாலேயே சுருதியும் "ஈண்டு பிரம்மத்தையநுபவிக்கின்றான்" எனக் கூறுகின்றது. பிரம்மத்திற்கு ஊர்த்துவ தேசத்திலிருக்குந்தன்மைச் சிரவணமோ உபாஸனையின் பொருட்டாம் என்க. (307)

## அவதாரிகை

அற்றேல் நாமபதம் (பெயர்ச்சொல்) ஆக்கியாத (வினைச்சொல்லின் விகுதி)த்தினையந்தத்திலுடைய வினைப்பெயரைக்குறித்து குணபூதமாம், பூதார்த்தம் பவ்யசேஷமாதலின் அவற்றின் (பூதபவ்யங்களின்) பதங் களுக்கும் அவ்வாருந்தன்மை கூறத்தக்கதாகலின், "இந்தப் பிரகாரம் குணத்தின் கண்ணே அநியாய கற்பனையுசிதமாம்" என்பதனால் பிரம்மமாகவேயிருந்து என்னும் நாமபதத்தின் கண்ணேயே லக்ஷணை யுசிதமாம் ஆக்கியாதத்தையந்தத்திலுடைய அடைகின்றான் என்னும் பதத்தின்கண் லக்ஷணையுசிதமன்றாம் என்றுசங்கித்து நாமபதமும் விதேய சமர்ப்பகமாய் கிரியாபதத்தின் காரியத்தைச் செய்கின்றதாய் கிரியாபதமேயாம். ஆதலின் நாமத்தன்மை குணத்தன்மையின் நிமித்த மன்றாம். இந்தப்பிரகாரம் விதேயார்த்தமாகாத கிரியாபதமும் அருத்தத் தால் நாமமேயாம். ஆதலின் பிரதானத்தன்மையின் நிமித்தமன்றாம் என்னுமபிப்பிராயத்தால் திருஷ்டாந்தத்தை ஒன்றரைச் சுலோகத்தால் கூறுகின்றார்:—

## சுலோகம்

आग्नेय इत्याद्यपि तद्धितान्त-
मष्टाकपालादिसमन्वितं सत् ।
आख्यातशब्दस्य धुरं बिभर्ति
भव्यार्थसंवित्तिनिबन्धनत्वात् ॥ ३०८ ॥

## பதவுரை

**आग्नेय इत्यादि अपि**-ஆக்கினேயம் என்பது முதலிய நாமபதமும்

**तद्धितान्तम्**-தத்திதத்தை யந்தத்திலுடையதாய்

**अष्टाकपालादि समन्वितम्**-புரோடாசவாசக அஷ்டாகபால பதத்தோடு சம்பந்தமுடையதாய்

**सन्** —இருந்துகொண்டு

**आख्यात शब्दस्य**—வினைப்பெயரின்

**धुरम्** —காரியத்தை

**बिभर्ति**—செய்கின்றது

எதனாலென்னுமிடத்துக்கூறுகின்றார்

**भव्यार्थसंविति निबन्धनत्वात्**—சாத்தியார்த்தத்தின் ஞானத்தை யுண்டுபண்ணுந்தன்மையால்

## *விசேஷவுரை*

**आग्नेयोऽष्टाकपालो भवति** (ஆக்னேயோ அஷ்டாகபாலோபவதி) "அக்னீஷோமீயம் ஏகாதசகபாலம்" என்பது முதலிய வாக்கியத்தின்கண் "அக்கினி தேவதை இதற்கு" என்பது முதலிய வியுற்பத்தியினால் அக்கினி தேவதையின் சம்பந்தியான திரவியத்தைக் கூறுகின்ற ஆக்னேய என்பது முதலிய தத்திதாந்தபதம் எட்டு கபாலங்களில் வேக வைக்கப்பட்டது புரோடாசம் என்பது முதலிய வியுற்பத்தியினால் அஷ்டாகபாலாதி சம்யுக்த புரோடாசவாசகமும் அவிஸ் விசேஷத்தைப் போதிப்பதுமான பதத்தோடு கூடினதாயிருந்துகொண்டு விதேயபோதக ஆக்கியாதசத்தத்தின் காரியத்தைச் செய்கின்றது. ஆக்கினேயாதி பதமானது தேவதையைப் போதிக்கின்ற தத்திதத்தையந்தத்தி லுடையதாய் திரவியத்திற்கும் தேவதைக்கும் சம்பந்தத்தைக் கூறு கின்றது. அந்தச் சம்பந்தமும் யாகத்தால் சம்பாத்தியமாமாதலின் யாகமும் அதனால் பிரதீதியாகின்றது. ஆதலின் அதுவே ஆக்கியாதத் தால் விதிக்கப்படுகின்றது ஆதலால் அது பிரதானமாமென்பது பொருள். ஈண்டு இஃது அபிப்பிராயமாம் பூதார்த்த போதகபதம் நாமமாம் பவ்யார்த்த போதகபதம் ஆக்கியாதமாம் என்பது அவைகளின் லக்ஷணங்களாம். சுபந்தத்தன்மையும் திஙந்தத்தன்மையுமன்றாம் என்பது, ஈண்டு ஆக்கினேயபதம் பவ்யார்த்தபோதகமாதலின் ஆக்கியாதமாம் என்பது கருத்து ஆக்னேயபதம் அஷ்டாகபால பதத்தோடு கூடினதாயிருந்துகொண்டு ஆக்கியாதத்தின் காரியத்தைச் செய்கின்றது எனக்கூட்டுக. (308)

### சுலோகம்

आख्यातमेव सदिदं भवतीति नाम
भव्येतरार्थमपि जन्मनिबन्धनत्वात् ।
अप्येतिशब्दमपि तद्वदिमं प्रतीमो
भव्येतरार्थगतबुद्धिनिबन्धनत्वात् ॥ ३०९ ॥

### பதவுரை

**भवति इति इदम्** – இருக்கின்றது என்னுமிந்தப்பதமும்

**आख्यातमेव सद्** – கிரியாபதமாகவேயிருந்துகொண்டு

**नाम** – அர்த்தத்தால் பெயர்ப்பதமேயாம்

**भव्येतरार्थमपि जन्मनिबन्धनत्वात्** – சாத்தியார்த்தத்தினும் வேறான சத்தையின் ஞானத்திற்குக் காரணமாவதால்

தார்ஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்.

**तद्वत्** – அதுபோன்று

**इमम् अप्येति शब्दमपि** – இந்த அடைகின்றான் என்னும் சத்தத்தினையும்

**प्रतीमः** – அறிகின்றோம்

**भव्येतरार्थगत बुद्धिनिबन्धनत्वात्** – சாத்தியார்த்தத்தினும் வேறான பிரம்ம சம்பந்தி ஞானத்தையுண்டுபண்ணுவதால்

### விசேஷவுரை

இவ்வாறு அவ்வாக்கினைய வாக்கியத்தின் கண்ணேயே பவதி என்னுமிந்தப்பதம் வினைப்பதமாகவேயிருந்துகொண்டு அருத்தத்தால் நாமமேயாம். அதன்கண் ஏது சாத்தியார்த்த என்பது? பவதி (இருக்கின்றது) சத்தத்தின் அருத்தமாகிய சத்தைக்கு விதேயத்தன்மையின்மையின் அவ்வினைப்பதமானது பெயர்ப்பதத்தின் சமானமேயாமாதலின் பிரதானமன்றென்பது கருத்து. அப்யேதி (அடைகின்றான் என்னும்) சத்தமும் பவ்யார்த்தமாக சம்பவிக்கின்றதில்லை. பிரம்ம பாவத்திற்கு சீவனிடத்தில் சாந்தியத்தன்மையையங்கீகரிக்கின் அநித்தியத்தன்மையின் அடைவால் அமிருதத்தன்மை பொருந்தாமை

யினாலும் பிரம்மத்தினும் வேருக அமிருதபாவம் சம்பவியாமையானும் பிரம்மத்திற்கு அநாதியநந்தத்தன்மையுண்மையானும் என்க. ஆதலால் பிரதானமன்றாம். பிரம்மமோ சருவத்திற்கும் சேஷியாம் ஆதலின் அதன் பதமே பிரதானமாம் பூதவஸ்து பவ்யநதின் பொருட்டாம் என்னும் நியாயமும் பிரகிருதத்தில் பிரவேசிக்கின்றதில்லை. கூறிய நியாயத்தால் பிரகிருதத்தில் பவ்யம் சம்பவியாமையின் என்பது கருத்து. (309)

## அவதாரிகை

அப்யேதி (அடைகின்றான்) சத்தத்திற்கு பவ்யார்த்தத்தன்மையி னின்மையுளதாயவழி சித்தித்ததனைக்கூறுகின்றார்:—

## சுலோகம்

ब्रह्मैव सन्निति गिरं प्रति शेषितायै
नाप्येतिगीरियमलं कथितोपपत्तेः ।
आख्यातमेव खलु नामपदस्य शेषि
नाख्यातमेतदनृतत्वनिवेदकत्वात् ॥ ३१० ॥

## பதவுரை

**कथितोपपत्तेः** - பவ்யார்த்தத்தன்மை சம்பவியாமையாலென்று கூறப்பட்ட உபபத்தியினால்

**इयम् अप्येतिगीः** -இந்த அடைகின்றானென்னும் சத்தமானது

**ब्रह्म एव सन्**—பிரம்மமாகவேயிருந்துகொண்டு

**इति गिरं प्रति**—என்னும் சத்தத்தினைக்குறித்து

**शेषितायै**—அங்கித்தன்மையின் பொருட்டு

**न अलम्**-சமர்த்தமன்றாம்

சேஷித்தன்மை—பிரதானத்தன்மை, வாதியினால் கூறப்பட்ட சேஷித்தன்மையின் பிரயோஜநத்தை யநுவதிக்கின்றவராய் ஈண்டு அஃது (பிரயோஜநம்) இல்லை எனக்கூறுகின்றார்.

**आख्यातमेव**—வினைப்பதமே

**नामपदस्य**—பெயர்ப்பதத்தின்

**शेषि खलु**–அங்கியாமென்பது நிச்சயந்தான் ஆனால்
**एतद्**–அடைகின்றானென்னும் பதமானது
**न आख्यातम्**–வினைப்பதமன்றும்
**अनृतत्वनिवेदकत्वात्**–அநிருதத்தன்மையையறிவித்தலின் (310)

## *அவதாரிகை*

பிரகிருதத்தையுபசம்மாரஞ்செய்கின்றார்:—

## *சுலோகம்*

ब्रह्मैव सन्निति ततः प्रथमश्रुतं स-
दप्येतिशब्दमपसारयति स्ववाच्यात् ।
अस्याङ्गभावविरहादमुना सहातो
ब्रह्मात्मनोरनतिरेकमुशन्ति धीराः ॥ ३११ ॥

## *பதவுரை*

**ततः**–ஆதலால்
**ब्रह्म एव सन् इति**–பிரம்மமாகவேயிருந்து என்னுமிந்தப்பதம்
**प्रथम श्रुतं सत्**–முதலில் கேட்கப்பட்டதாயிருந்துகொண்டு
**अप्येतिशब्दम्**–அடைகின்றானென்னும் சத்தத்தினை
**स्ववाच्यात्**–அதன் வாச்சியார்த்தத்தினின்றும்
**अपसारयति**–நிவர்த்தி செய்கின்றது
**अस्य**–பிரம்மம் என்னும் சத்தத்திற்கு
**अमुना सह**–அடைகின்றான் என்னும் சத்தத்தோடு
**अङ्गभावविरहात्**–சேஷத்தன்மையின்மையின்
[திரண்ட பொருளைக்கூறுகின்றார்]
**अतः**–ஆதலால்
**ब्रह्मात्मनोः**–பிரம்மத்திற்கும் ஆன்மாவிற்கும்
**अनतिरेकम्**–அபேதத்தினை
**धीराः**–விவேகிகள்
**उशन्ति**–இச்சிக்கின்றனர்

## விசேஷவுரை

விவேகிகள் – பேதவாதிகளால் அநேகப்பிரகாரமாக அபிபவம் பண்ணப்பட்டவராயினும் சுருதிப் பிராமாண்யத்தில் மிகவுந்திடத் தன்மையினால் பிரம்மத்தின்கண் மிகவும் நிஷ்டையினையுடையவர்கள்.

## அவதாரிகை

அடைகின்றான் என்னும் சத்தத்திற்கு சாத்தியார்த்தத்தன்மைச் சம்பவியாமையால் ஈண்டு "பூதம் பவ்யத்தின் பொருட்டு உபதேசிக்கப் படுகின்றது" என்னும் நியாயத்தின் பிரவேசமின்றுமென்று கூறப் பட்டது. மேலும் இந்த நியாயமானது கருமத்தின் சமீபத்தில் உச்சரிக்கப்பட்ட பூதவஸ்து விஷயகமாம் சுபாவசித்த பிரம்மவிஷயக மன்றும் மாறாக விபரீதமாம் அதாவது பவ்யம் பூதத்தின்பொருட்டு உபதேசிக்கப்படுகின்றது. விவிதிஷை வாக்கியத்தின் அநுசாரத்தாலும் "சருவகருமங்களும் பிரம்மவித்தையிலபேக்ஷிக்கப்படுகின்றது. யஞ்ஞாதி சுருதியினால்" என்னும் சூத்திர நியாயத்தாலும் கருமத்திற்கே பிரம்மத்தின் சேஷத்தன்மையறியப்படுதலால் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

## சுலோகம்

भव्याय भूतमिति किंच विधिप्रधाने
काण्डे नयोऽयमिह तद्विपरीतमाहुः ।
भूताय भव्यमिति भूतपरं हि सर्वं
वेदावसानमिति सूत्रकृदाचचक्षे ॥ ३१२ ॥

## பதவுரை

**किंच** – மேலும்

**विधिप्रधाने** – விதியைப் பிரதானமாகவுடைய

**काण्डे** – கருமகாண்டத்தின்கண்

**भूतम्** – தயிர் முதலிய சித்தவஸ்து

**भव्याय इति**-ஓமம் முதலிய சாத்தியக்கிரியையின் பொருட்டாமென

**अयं नयः** – இந்த நியாயமுளது

**इह** – ஈண்டு பிரம்மகாண்டத்தின்கண்

**तद्विपरीतम्** – அந்த நியாயத்தினும் விபரீதமாக

**भव्यं भूताय इति**–சாத்தியவஸ்து பூதவஸ்துவின் பொருட்டாமென

**आहुः**–கூறுகிறார்கள்.

**हि** –ஏனென்றால்

**सर्वं वेदावसानम्** – எல்லாவேதாந்தமும்

**भूतपरं इति**– சித்தவஸ்து பரமாமென

**सूत्रकृत्** – பிரம்மசூத்திரத்தின் கருத்தாவான வியாசாச்சாரியர்

**आचचक्षे** – கூறியுள்ளார்

### *விசேஷவுரை*

விதியானது பிரதானமாகப் பிரதிபாதிக்க இச்சிக்கப்பட்டது எதன் கண் அத்தகைய கருமகாண்டத்தின்கண் என்பது பொருள் யாதொரு காரணத்தால் சத்தியசித்தப்பிரம்மபரமாக வேதாந்தத்தைச் சூத்திரக்காரர் சமன்வய சூத்திரம் முதலான சூத்திரங்களால் கூறினரோ அக்காரணத் தால் பாஷியக்காரர் முதலானோரும் இவ்வாறு கூறுகின்றனர் என்பது பொருள். (312)

### *அவதாரிகை*

சாத்தியவஸ்து சித்த வஸ்துவின் சேஷமாகும்போது சித்தித்ததனைக் கூறுகின்றார்:—

### *சுலோகம்*

ब्रह्मैव सन्निति ततोऽपि बलिष्ठमेत-
    दध्येतिशब्दमवसानगतं ह्यपेक्ष्य ।
तस्मादमुष्य परिपीडकमेतदेव
    ब्रह्मैव सन्निति पदं गुणकल्पनायै ॥ ३१३ ॥

### *பதவுரை*

**ततोऽपि**–பூதவஸ்துவின் பொருட்டு பவ்யம் உபதேசிக்கப்படு கின்றது என்று கூறப்பட்ட நியாயத்தாலும்

**ब्रह्म एव सन्निति**–பிரம்மமாகவேயிருந்து என்னும்

### விசேஷவுரை

விவேகிகள் – பேதவாதிகளால் அநேகப்பிரகாரமாக அபிபவம் பண்ணைப்பட்டவராயினும் சுருதிப் பிராமாண்யத்தில் மிகவுந்திடத் தன்மையினுல் பிரம்மத்தின்கண் மிகவும் நிஷ்டையினையுடையவர்கள்.

### அவதாரிகை

அடைகின்ருன் என்னும் சத்தத்திற்கு சாத்தியார்த்தத்தன்மைச் சம்பவியாமையால் ஈண்டு "பூதம் பவ்யத்தின் பொருட்டு உபதேசிக்கப் படுகின்றது" என்னும் நியாயத்தின் பிரவேசமின்ருமென்று கூறப் பட்டது. மேலும் இந்த நியாயமான்து கருமத்தின் சமீபத்தில் உச்சரிக்கப்பட்ட பூதவஸ்து விஷயகமாம் சுபாவசித்த பிரம்மவிஷயக மன்ரும் மாருக விபரீதமாம் அதாவது பவ்யம் பூதத்தின்பொருட்டு உபதேசிக்கப்படுகின்றது. விவிதிஷை வாக்கியத்தின் அநுசாரத்தாலும் "ச ரு வ க ரு ம ங் க ளு ம் பிரம்மவித்தையிலபேக்ஷிக்கப்படுகின்றது. யஞ்ஞாதி சுருதியினுல்" என்னும் சூத்திர நியாயத்தாலும் கருமத்திற்கே பிரம்மத்தின் சேஷத்தன்மையறியப்படுதலால் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்ருர்:—

### சுலோகம்

भव्याय भूतमिति किंच विधिप्रधाने
काण्डे नयोऽयमिह तद्विपरीतमाहुः ।
भूताय भव्यमिति भूतपरं हि सर्वं
वेदावसानमिति सूत्रकृदाचचक्षे ॥ ३१२ ॥

### பதவுரை

किंच – மேலும்

विधिप्रधाने – விதியைப் பிரதானமாகவுடைய

काण्डे – கருமகாண்டத்தின்கண்

भूतम् – தயிர் முதலிய சித்தவஸ்து

भव्याय इति-ஓமம் முதலிய சாத்தியக்கிரியையின் பொருட்டாமென

अयं नयः – இந்த நியாயமுளது

इह – ஈண்டு பிரம்மகாண்டத்தின்கண்

तद्विपरीतम् – அந்த நியாயத்தினும் விபரீதமாக

भव्यं भूताय इति–சாத்தியவஸ்து பூதவஸ்துவின் பொருட்டாமென

आहुः–கூறுகிறார்கள்.

हि –ஏனென்றால்

सर्वं वेदावसानम् – எல்லாவேதாந்தமும்

भूतपरं इति– சித்தவஸ்து பரமாமென

सूत्रकृत् – பிரம்மசூத்திரத்தின் கருத்தாவான வியாசாச்சாரியர்

आचचक्षे – கூறியுள்ளார்

## விசேஷவுரை

விதியானது பிரதானமாகப் பிரதிபாதிக்க இச்சிக்கப்பட்டது எதன் கண் அத்தகைய கருமகாண்டத்தின்கண் என்பது பொருள் யாதொரு காரணத்தால் சத்தியசித்தப்பிரம்மபரமாக வேதாந்தத்தைச் சூத்திரக்காரர் சமன்வய சூத்திரம் முதலான சூத்திரங்களால் கூறினரோ அக்காரணத் தால் பாஷியக்காரர் முதலானோரும் இவ்வாறு கூறுகின்றனர் என்பது பொருள். (312)

## அவதாரிகை

சாத்தியவஸ்து சித்த வஸ்துவின் சேஷமாகும்போது சித்தித்ததனைக் கூறுகின்றார்:—

## சுலோகம்

ब्रह्मैव सन्निति ततोऽपि बलिष्ठमेव-
दस्येतिशब्दमवसानगतं ह्यपेक्ष्य ।
तस्मादमुष्य परिपीडकमेतदेव
ब्रह्मैव सन्निति पदं गुणकल्पनायै ॥ ३१२ ॥

## பதவுரை

ततोऽपि–பூதவஸ்துவின் பொருட்டு பவ்யம் உபதேசிக்கப்படுகின்றது என்று கூறப்பட்ட நியாயத்தாலும்

ब्रह्म एव सन्निति–பிரம்மமாகவேயிருந்து என்னும்

**एतद्**–இந்தப்பதமானது

**अवसानगतम्**–அந்தியத்திலுள்ள

**अप्येति शब्दम्**–அடைகின்றான் என்னும் சத்தத்தை

**व्यपेक्ष्य**–அபேக்ஷித்து

**बलिष्ठम्**–அதிக பலமுடையதேயாம்

[ அதனால் சித்தித்ததென்னையென்னுமிடத்துக் கூறுகின்றார்:]

**तस्मात्**–அதனால்

**अमुष्य**–அடைகின்றான் என்னும் சத்தத்திற்கு

**गुणकल्पनायै**–கௌணத்தன்மையைக்கற்பித்தற் பொருட்டு

**ब्रह्मैव सन्निति**–பிரம்மமாகவேயிருந்து என்னும்

**एतदेव पदम्**–இந்தப்பதமே

**परिपीडकम्**–முக்கியார்த்தத்தின் நாசத்தைச் செய்வதாம் (313)

## அவதாரிகை

ஆதலால் பிரம்மபாவத்திற்கு சாத்தியத்தன்மையின்மையின் உபாஸனை முதலிய கிரியையால் சாத்தியத்தன்மை சம்பவிக்கின்றதில்லையாதலின் வாதியின் சம்மதமான சமுச்சயத்திற்கும் அதன்கண் அவகாசமின்றாம் என்று கூறுகின்றார்:—

## சுலோகம்

निःश्रेयसं न खलु साध्यमितः क्रियाभि-
र्ज्ञानेन वा द्वयसमुच्चयवर्त्मना वा ।
उत्पत्तिराप्तिविकृती न च संस्कृतिश्च
यस्मान्न सम्भवति वर्णितवर्त्मनेह ॥ ३१४ ॥

## பதவுரை

**अतः**–கூறிய யுக்திகளால்

**क्रियाभिः**–கேவல உபாஸனை முதலிய கிரியைகளால்

**निःश्रेयसम्**–மோக்ஷமானது

**न खलु साध्यम्**-சம்பாதிக்கத்தக்கதேயன்றும்

நித்திய சித்தமாதலால் மோக்ஷத்தின் கண் ஞான சாத்தியத் தன்மையும் சம்பவியாதபோது கிரியாசாத்தியத்தன்மை சம்பவியாது என சொல்லவாவேண்டும் என்னுமபிப்ராயத்தால் கூறுகின்றார்

**ज्ञानेन वा**—ஞானத்தாலுமன்றும்

**द्वयसमुच्चय वर्त्मना वा**-ஞானம் கிரியையாகிய இரண்டின் சமுச்சய வடிவ உபாயத்தாலுமன்றும்

அதன் கண் முன் சூசிப்பிக்கப்பட்ட யுக்தியின் அசம்பவத்தையே தெரிசிப்பிக்கின்றார்

**यस्मात्**—யாதொரு காரணத்தினால் (எதனாலெனின்)

**इह**—எமது அபிமதமான மோக்ஷத்தின் கண்

**वर्णितवर्त्मना**—306வது சுலோகத்தில் கூறப்பட்ட மார்க்கத்தால்

**उत्पत्तिः**—உற்பத்தி

**न संभवति**—சம்பவிக்கிறதில்லை

**आप्तिविकृती नच**—பிராப்தி விகாரங்களும் சம்பவிப்பன வன்றும்

**संस्कृतिश्च न**—சம்ஸ்காரமும் சம்பவிப்பதன்றும்

உற்பத்தியாதி சம்பவிக்கிறதில்லை என்பதுவும் "**न स्व व्यायवशा-दयता**" என்னும் சுலோகத்தில் தெரிசிப்பிக்கப்பட்டதென்னும அபிப்பிராயத்தால் கூறப்பட்ட மார்க்கத்தாலெனப்பட்டது. (314)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் 112—வது சுலோகத்தில் "**किंच प्रवृत्ति निवृत्ति-विहीनवस्तुतत्वप्रतीति जननात्**" என்பது முதலியவற்றால் சித்த வஸ்துவின் ஞானத்தால் பிரவிருத்தியாதி சம்பவியாமையால் அதனைப் பிரதிபாதிக்கும் வேதாந்தங்களுக்கு பலத்தின்கண் பிரியவசானமின் றெனக்கூறப்பட்டது ஆண்டு பிரவிருத்தியாதியின்றேனும் நிரதிசய புருஷார்த்தத்தில் பரியவசானம் அவைகட்கு (வேதாந்தங்கட்கு) உபபாதனஞ் செய்யப்பட்டது இப்போது பிரவிருத்தியாதிரகித

மாத்திரத்திற்கு நிர்த்தோஷத்தன்மையை யுபஸம்ஹாரஞ் செய்கின்றவராய் கேவலம் நிவிருத்தியின் அபாவத்திற்கு நிர்த்தோஷத்தன்மை மாத்திரமன்றும் மற்றோ அநுஷ்டான ஜன்னிய ஆயாசமின்மையின் அஃது குணமே எனக் கூறுகின்றார்:—

## சுலோகம்

तस्मात्प्रवृत्तिविनिवृत्तिविवर्जितत्वं
प्रत्यात्मवस्तुविषयावगतेर्न दोषः ।
सर्वप्रवर्तकनिवर्तकमूलदाहात्
स्वाराज्यहेतुरिति भूषणमेव तन्नः ॥ ३१५ ॥

## பதவுரை

तस्मात्—ஆதலால்

प्रत्यात्मवस्तु विषयावगतेः—பிரத்தியக பின்ன பிரம்மசாக்ஷாற்காரத்தினால்

प्रवृत्तिविनिवृत्तिविवर्जितत्वम्—பிரவிருத்தியும் நிவிருத்தியுமில்லாத் தன்மை

न दोषः—தோஷமன்றும்

सर्वप्रवर्तकनिवर्तकमूलदाहात्—பிரவர்த்தகங்களான எல்லா ராகாதிகளினதும் நிவர்த்தகங்களான எல்லா துவேஷாதிகளினதும் மூலமான அஞ்ஞானமும் அதனுசிரித வாசனையாதியும் நசித்தலால்

स्वाराज्यहेतुः—மோக்ஷத்திற்குக் காரணமாம்

इति—ஆதலின்

तत्—பிரவிருத்தியாதியற்றதன்மை

नः—கிருத கிருத்தியரான எங்களுக்கு

भूषणमेव—அலங்காரமேயாம் (315)

## அவதாரிகை

அற்றேல் எதன் பலத்தால் சித்தவஸ்துவின் கண்ணும் வேதாந்தங்கட்குப்பிராமாண்ணியம் சம்பவிக்குமோ அத்தகைய அஞ்ஞாத ஞாபகத்

தன்மையே அவைகட்குச்சம்பவியாது சுவப்பிரகாசப் பிரம்மத்தின் கண் அஞ்ஞாதத்தன்மையே சம்பவியாமையாலென்று ஆசங்கித்துக்கூறுகின்றார்:—

### சுலோகம்

अज्ञातताऽपि घटतेऽत्र दृशोऽनुभूते-
र्जानामि नाहमिति दृश्यपि दृश्यते हि ।
अज्ञातताऽनुभवनं न च वास्तवं तत्
अज्ञाततोद्वहति कल्पिततां हि तस्याः ॥ ३१६ ॥

### பதவுரை

**अत्र**-எமது மதத்தில்

**दृशः**-திருக்கு வடிவான்மாவின் கண்

**अज्ञातताऽपि**-அஞ்ஞாதத்தன்மையும்

**घटते**-பொருந்துகின்றது

ஆன்ம விஷயக அஞ்ஞானத்தின் கண் வேதாந்த வேத்திய ஆன்மாவை யறியேன் என்னும் அநுபவத்தைப்பிரமாணமாகக்கூறுகின்றார்

**अनुभूतेः**-அநுபவம் காணப்படுதலின்

அஞ்ஞானத்தின்கண் பிரமாணவியாபாரமின்மையின் அதனநுபவம் அசித்தியாமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

**अहं न जानामि इति**-நான் அறியேனென்று

**दृशि अपि**-திருக்கு ரூபமாயினும் ஆன்மாவின் கண்

**अज्ञातताऽनुभवनम्**-அஞ்ஞாதத்தன்மையின் அநுபவம்

**दृश्यते हि**-காணப்படுகின்றதல்லவா

ஆன்மா திருக்கு ரூபமாயினும் அதன்கண் நானறியேனென அஞ்ஞாதத்தன்மையினநுபவம் காணப்படுகின்றது என அன்வயஞ்செய்க நான் இதையறியேன் ஆன்மாவையறியேன் என அஞ்ஞானத்தின் அபரோக்ஷாநுபவம் எல்லோருக்குமிருக்கின்றது. அவ்வநுபவம் பிரமாண ஜன்னியமன்றும் லிங்கம் முதலானவற்றால் அபரோக்ஷஞானம் சம்பவி

யாமையாலும் நேத்திரம் முதலானவற்றால் ஆந்தர ஞானம் சம்பவியாமை யாலும் மன்திற்கு பிரமாதிருத்தன்மையுண்மையால் பிரமாணத்தன்மை யின்மையினாலும் என்க. மனோவியாபாரமில்லாத காலத்தும் அதனநுபவ மிருத்தலானும் அஞ்ஞானம் சாக்ஷிமாத்திர பாஸ்யம் என்பது பொருள் சாக்ஷி பாஸ்யத்தன்மையைச் சாதித்தலின் பயனைக்கூறுகின்றார். அல்லது இதனாலும் அஃது சாக்ஷிபாஸ்யமேயாம் எனக்கூறுகிறார்.

**तत्**-அஞ்ஞாதத்தன்மையின் அநுபவம்

**न च वास्तवम्**-வாஸ்தவமன்றும்

பிரமாணமன்றென்பது பொருள் இதனால் சுத்திரஜதாதியநுபவம் போன்று அஞ்ஞானத்தினநுபவமும் சாக்ஷிரூபமென்பது பொருள்.

அற்றேல் விஷயத்தின் பாதமின்றி அநுபவத்திற்கு அப்பிரமாணத் தன்மையெப்படிக் கூடுமென்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

**तस्याः**-திருக்குருப ஆன்மாவின்

**अज्ञातता**-அஞ்ஞாதத்தன்மை

**कल्पितताम्**-தன்னிடத்து கற்பிதத்தன்மையை

**उद्वहति**-அடைவிக்கின்றது

அஞ்ஞானத்திற்கும் சுத்திரஜதாதிக்குப்போன்று திருசியத்தன்மை யுண்மையானும் சுவப்பிரகாசான்மாவின்கண் வாஸ்தவமாகச்சம்பந்த மின்மையானும் அஃது கற்பிதமேயாமென்பது பொருள். **(316)**

## அஞ்ஞானத்திற்குப் பாவ வடிவத்தன்மை

### அவதாரிகை

அற்றேல் உமது சித்தாந்தத்தில் ஆன்மாவையறியேனென்னும் அநுபவம் பொருந்தாது அதற்கு ஞானாபாவம் விஷயமாம். ஆன்மாவின் கண் சுவப்பிரகாசத்தன்மையால் தனது சத்தையின் நிச்சயமுண்டாகும் போது ஞானாபாவமும் சம்பவிக்கின்றதில்லை. ஆன்மாவிற்கு நித்தியத் தன்மையுண்மையின். அதனை விஷயமாகவுடைய விருத்தியின் அபாவ முளது என்று சொல்லற்க. அப்படியாயினும் அதன் ஞானாபாவம் சம்பவியாமையின், விருத்தியானது ஞானமன்றும் ஆன்மாவும் விருத்தியின் அதீனப்பிரகாசமுடையதன்றும். எதனால் விருத்தியில்லாமை

யால் ஆன்மாவிற்கு அஸ்புரணைவடிவ அஞ்ஞானம் சம்பவிக்கும் அப்படிக் கின்றேல் (விருத்தியை ஞானமென்றங்கீகரித்தால்) விருத்தியின்றியும் எப்போதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிற சாக்ஷியின் கண்ணும் சுத்திரஜ தாதியின் கண்ணும் அறியேனென்னும் அநுபவமுண்டாதல வேண்டும்.

ஆதலால் உமது சித்தாந்தத்தில் ஆன்மாவின்கண் அறியே னென்னும் அநுபவம் சம்பவிக்கின்றதில்லையாதலின் அதன் பலத்தால் அஞ்ஞானத்தின் சித்தியின்றுமெனின் வாஸ்தவந்தான் ஆயினும் ஆன்மாவின் கண்ணும் அநுபவம் சருவஜனப்பிரசித்தமாயுளது அவ் வநுபவம் நீ கூறிய பிரகாரத்தால் அபாவவிஷயகமாயாகின்றதில்லை ஆதலின் சுவப்பிரகாசான்மாவின் ஆவரணவடிவமாய் அதனை விஷயஞ் செய்வதாயுள்ள அஞ்ஞானம் அநுபவபலத்தால் அங்கீகரிக்கத்தக்கதாம். அன்றேல் சுழுத்தியாதியின் கண் ஆன்மாவின் அஸ்புரணம் இல்லாமற் போம்.

மேலும் ஆகாசாதியின் சமான சுபாவமுடையதாய் அதன் பிரகிருதி வடிவகாரணம் ஒன்று அங்கீகரிக்கத்தக்கதாம் அந்தப்பிரகிருதியும் சாங்கியர் முதலானோரால் அங்கீகரிக்கப்பட்ட பிரதானம் முதலியதன்றும் அத்துவிதான்மபரமான உபநிஷத்துக்களுக்கு விரோதம் வருதலின் ஆதலால் ஆன்மாவின்கண் அதத்தியஸ்தமாகவே சொல்லத்தக்கதாம் அதுவே ஆன்மப்பிரகாசத்தின் ஆவரணமாம், அதனினும் வேறனதன் கண் கௌரவமாதலாலும் பிரமாணமின்மையாலும் என்க. அஞ்ஞானமும் ஆவரண சுபாவமாம் ஆதலின் அதுவே பிரகிருதியாகவும் அஞ்ஞான மாகவும் சித்திக்கின்றது என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

## சுலோகம்

अज्ञानमित्यजडबोधतिरस्क्रियात्मा
जाड्यं च मौढ्यमिति च प्रकृतिः प्रसिद्धा ।
सा चातिदुःस्थितवपुर्दशमद्वितीया-
मालिङ्गतिस्म घृतपिण्ड इवाग्निमिद्धम् ॥ ३१७ ॥

## பதவுரை

अजडबोधतिरस्क्रियात्मा–சுவப்பிரகாசான்மாவின் ஆவரணவடிவ மான

**प्रकृतिः**–யாதொரு பிரகிருதியுண்டோ அதுவே

**अज्ञानमिति**–ஞானபர்யுதாசத்தால் அஞ்ஞானமெனவும்

**जाड्यं च**–ஞான விரோதித்தன்மையால் சாட்டியமெனவும்

**मौढ्यमिति च**–சுவச்சத்தன்மையின்மையால் மௌட்டிய மெனவும்

**प्रसिद्धा**–சுருதி ஸ்மிருதிபுராணங்களில் பிரசித்தமாம்

**सा च**–அது

**अतिदुःस्थितवपुः**–நிரூபிக்கத்தகாத வடிவமுடையதாயிருந்து கொண்டு

**अद्वितीयम्**–அத்துவித

**धाम**–திருக்குவடிவான்மாவை

**घृतपिण्डः**–திரண்டுள்ள நெய்யானது

**ज्वलम्**–ஜொலிக்கின்ற

**अग्निमिव**–அக்னியை சம்பந்திப்பதுபோல

**आलिङ्गितिस्म**–ஆசிரயித்து மறைத்தது

## விசேஷவுரை

ஆன்மாவின் ஆவரண வடிவப்பிரகிருதியே அஞ்ஞானமெனப் பிரசித்தமாமென்று கூறவே ஆன்மாவின்கண் அறியேனென்னு மநுபவத்தின்கண் அநுபபத்தியின்றெனச் சித்தித்தது. அற்றேல் நகாரத்தின் பொருளாக அநுபவிக்கப்படுகிற அஞ்ஞானம் பாவவடிவமாத எப்படியாம் எனின் அற்றன்று ஆன்மாவின்கண் கூறிய பிரகாரத்தால் அபாவம் சம்பவியாமையால் ஞானவிரோதி பாவவடிவமே அஞ்ஞானமா மென அங்கீகரிக்கத்தக்கதாதலின் பாவம் அதருமமென்றங்கீகரிக்கப் படுவதுபோன்று.

அற்றேல் ஆண்டு பாபசத்தத்தால் பெரியோர்களுடைய வியவ காரத்தால் அதற்கு பாவத்தன்மை நிச்சயிக்கப்பட்டுளது எனின் அப் படியானுல் ஈண்டும் பாவார்த்தத்தன்மையால் சருவப்பிரசித்த சாட்டிய மௌட்டிய வியவகாரங்களால் பாவத்தன்மை நிச்சயிக்கத்தக்கதா மென்னுமபிப்பிராயத்தால் சாட்டியமெனவும் மௌட்டியமெனவுங் கூறப்பட்டது. ஜாட்டியமென்பதற்கு பிரகாசவிரோதி சொரூப விசேஷ

மென்பது பொருள் ஞானன்னியத்துவம் அல்லது ஞாதாவினுமன்னி யத்துவம் சாட்டியமாம் ஆதலின் அஃது பாவவடிவமன்றும் என்று சொல்லற்க—அன்னியத்தன்மையானது அநுகதமாய் ஏகமாய் சம்பவி யாமையால் 322-வது சுலோகத்தில் கூறப்படுவதான ஜடாநுகதபுத்தி பொருந்தாமையின். அஞ்ஞானம் சடமேயாம் அப்படியாயினும் சடப் பிரபஞ்சத்தின் அநுகதத்தன்மையால் சாட்டியமென அதன்வியவகாரம் பொருந்துகின்றது. மௌட்டியம் என்பதனுலும் புருஷனிடத்துள்ள மோகவடிவ அஞ்ஞானமே வியவகரிக்கப்படுகின்றது ஆதலின் அஃது பாவவடிவமே என்பது கருத்து. அற்றேல் சுவப்பிரகாச ஆன்மாவின் ஆவரணமென்று கூறியது பொருந்தாது பிரகாசவடிவமாய் அத்வய மாயுள்ள ஆன்மாவிற்கு இரண்டாவது பதார்த்தத்தால் அப்பிரகாசத் தன்மைச் சம்பவிக்கின்றதில்லையாகலின் எனின் வாஸ்தவமான இரண்டாவது பதார்த்தத்தால் வாஸ்தவ அப்பிரகாசமான தன்மைச் சம்பவிக்கிறதில்லை என்று கூறுகின்றனையா அல்லது அநிர்வசனீய பதார்த்தத்தால் அநிர்வசனீய அப்பிரகாசம் சம்பவிக்கின்றதில்லையென்று கூறுகின்றனையா முதற் பக்ஷத்தில் எமது இஷ்ட சித்தியாம். இரண்டாவது பக்ஷத்தில் அநுபவவிரோதமாம். அநுபவசித்தமாயினும் பொருத்தமன்றுமெனின் இதனுலேயே (பொருத்தமன்மையினுலேயே) அநிர்வசனீயமாம. பொருத்தமாயின் அநிர்வசனீயத்தன்மை பொருந்தா மையின் என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்ருர் அது என அநிர்வசனீய மென்பது பொருள் அத்துவிதீய ஆன்மாவையாசிரயித்து மறைத்தது என்பது அவ்விரண்டன் கண்ணும் (அஞ்ஞானத்திலும் அப்பிரகாசத் திலும்) தூர்க்கடத்தன்மையைத்தோற்றுவிக்கின்றது அத்வைதத்தின் கண் துவைதமாவது பிரகாசத்தின்கண் அப்பிரகாசமாவது வாஸ்தவமாகச் சம்பவிக்கின்றதில்லையாகலின் என்பது கருத்து தனது விரோதியை யாசிரயித்தல் அத்தியந்தங்கூடாதாம என்பதன்கண் திரண்டுள்ள நெய் என்பதாதியால் திருஷ்டாந்தங் கூறப்பட்டது. (317)

## அவதாரிகை

சங்கை: அஞ்ஞானத்திற்கு ஆன்மா ஆசிரயமாகுமாயின் அதன் விஷயம் ஆன்மாவினும் அன்னியமே சொல்லத்தக்கதாம் ஆதலின் அஃது ஆன்மாவின் ஆவரணமாகாது கடாதி ஞானதியின்கண் ஆசிரய

விஷயங்களுக்கு பேதம் காணப்படுதலின் அஞ்ஞானத்தின் கண்ணும் ஆசிரய விஷயபேதம் சொல்லத்தக்கதாதலின் அன்றேல் (விஷயமாயின்) ஆன்மா அதன் ஆசிரயமாகாது என்றுசங்கித்து அஞ்ஞானம். ஆன்மா ஒன்றினையே ஆசிரய விஷயமாகவுடையது. தமமாதலின், வெளித் தமம்போன்று. அதற்கு தமத்தன்மையும் சுருதி புராணாதிகளில் தமசத் தத்தாலும் அதன் பரியாய சத்தங்களாலும் வியவகரித்தலால் சித்திக் கின்றது என்னும அபிப்பிராயத்தால் கூறுகின்றார்.:—

### சுலோகம்

चिद्वस्तुनश्चिति भवेत्तिमिरं तमिस्रं
तामिस्रमन्धतमसं जडिमा तमिस्रा ।
माया जगत्प्रकृतिरच्युतशक्तिरान्ध्यं
निद्रा सुषुप्तिरनृतं प्रलयो गुणैक्यम् ॥ ३१८ ॥

### பதவுரை

चिद्वस्तुनः-சித்வடிவபரமார்த்த சத்வஸ்துவின்
चिति-சொரூபமாயுள்ள சேதனத்தின்கண்
तिमिरम्-திமிரமெனவும்
तमिस्रम्-தமிஸ்ரமெனவும்
तामिस्रम्-தாமிஸ்ரமெனவும்
अन्धतमसम्-அந்ததமஸ் எனவும்
जडिमा-ஜடிமையெனவும்
तमिस्रा-தமிஸ்ரா எனவும்
माया-மாயையெனவும்
जगत्प्रकृतिः-ஜகத்காரணமெனவும்
अच्युतशक्तिः-விஷ்ணுவின் சத்தியெனவும்
आन्ध्यम्-அந்தகாரமெனவும்
निद्रा-நித்திரையெனவும்
सुषुप्तिः-சுழுப்தியெனவும்

**अनृतम्**–அநிருதமெனவும்

**प्रलय:**-பிரலயமெனவும்

**गुणैक्यम्**–குணங்களின் சாமியாவஸ்தை யெனவும் பரியாய நாமங்களையுடைய அஞ்ஞானமானது

**भवेत्**–இருக்கும்

### விசேஷவுரை

சேதனத்தின்கண் திமிரம் இருக்கும்என அன்வயஞ்செய்க. ஏழாம் வேற்றுமை விஷய சத்தமியாம். சேதன விஷயகமென்பது பொருள். இலௌகிக ஆன்ம ஞானுதியின்கண் ஆசிரயமும் விஷயமும் அபேதமா யிருத்தலால் பேதத்தால் சவிஷயத்தன்மைக்கு வியபிசாரமிருத்தலால் அஞ்ஞானமானது ஒன்றினையே யாசிரயமாகவும் விஷயமாகவும் உடைய தென்பது கருத்து. அற்றேல் மாயையானது ஆன்மாசிரயமாகவும் ஆன்ம விஷயமாகவும் சுருதியாதிகளில் பிரசித்தமாம் அது இவ்வஞ் ஞானத்தினும் அன்னியமாமோ என்னுமிடத்து அன்றெனக் கூறுகின்ருர் மாயையென. இந்தப்பிரகாரம் அஞ்ஞானமே பிரகிருதியாகவும் விஷ்ணு சத்தியாகவும் சுருதியிற் கூறப்பட்டுளது எனக்கூறுகின்ருர் சகத்காரண மென. பிரகாசத்தை மறைக்குந்தன்மையால் அஞ்ஞானம் ஆந்தியம் (அந்தத்தன்மை=அந்தகாரம்) எனப்படுகின்றது, நித்திரை=நாநாவிதப் பிரபஞ்ச ஏது அஞ்ஞானம், மிகுதியாக சருவ காரியங்களும் எதன்கண் லயத்தையடைகின்றனவோ அது பிரளயம். குண ஐக்கியம்=சத்துவ ரஜதமோ குணங்களின் சமுதாய வடிவம், அதுவும் அவ்வஞ்ஞானமேயா மென்பது பொருள். (318)

### அவதாரிகை

அற்றேல் நான் அஞ்ஞன் என சீவாசிரயமாக அவ்வஞ்ஞான மநுபவிக்கப்படுகின்றது இந்த பிரகாரம் அதற்கு விஷயமும் நான் பிரம்மத்தையறியேன் என்னுமநுபவத்தால் பிரம்மமேயாம் இவ்வாறிருக்க பிரத்தியகான்மாவை விஷயஞ்செய்வதென எவ்வாறு கூறப்பட்டது என்னுமிடத்துக் கூறுகின்ருர் :—

### சுலோகம்

आश्रयत्व विषयत्व भागिनीनिर्विभागचितिरेव केवला ।
पूर्वसिद्धतमसो हि पश्चिमो नाश्रयो भवति नापि गोचरः ॥

## பதவுரை

**केवला**—அத்துவிதீயமும் இதனாலேயே

**निर्विभागचितिः एव**—சீவேஸ்வர வேறுபாடற்றதுமான சுத்த சேதனமே

**आश्रयत्व विषयत्व भागिनी**—அஞ்ஞானத்தின் ஆசிரயத்தன்மையினையும் விஷயத்தன்மையினையுமடைகின்றது.

இவ்வாறாயின் (பிரம்மமே அஞ்ஞானத்திற்காசிரயமாயின்) நான் அஞ்ஞன் என்னும் அநுபவத்திற்கு விரோதமாம் என்று சொல்லற்க அதற்கு அன்னியதாசித்தத்தன்மையுண்மையின் அன்றேல் அன்னியோன்னியாசிரய தோஷமுண்டாம் என்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்றார்.

**पूर्वसिद्धतमसः**—முன்னமே சித்தித்துள்ள அஞ்ஞானத்திற்கு

**पश्चिमः**—அஞ்ஞானத்தினதீனமாயுள்ள சீவனாவது ஈசுவரனாவது

**आश्रयः**—ஆதாரம்

**न भवति**—ஆகின்றதில்லை

**नापि गोचरः**—விஷயமுமாகின்றதில்லை

## விசேஷவுரை

தனது (சீவேசுவரரது) சத்தையின்பிரயோஜகமான அஞ்ஞானத்திற்கு என்பது பொருள். யாதொருகாரணத்தால் சீவேசுவரவிபாகத்தின் சத்துவத்திற்குப் பிரயோஜகம் அஞ்ஞானமோ அக்காரணத்தால் அஞ்ஞானப்பிரயோஜ்ஜியனும் பிரம்ம விபக்தனுமான சீவனும் சீவ விபக்தப்பிரம்மமும் கிரமப்படி ஆசிரயமுமாகிறதில்லை விஷயமுமாகிறதில்லை. விபக்தம்=வேறுபட்டது, சீவேஸ்வரவிபாகாதி அநாதியாம் அங்ஙனமாயினும் அஃது வாஸ்தவமன்றாம் மற்றோ மாயா கற்பிதமாய் அத்துவயப்பிரம்மத்தின் அனவபாச (விளக்கமில்லாத) தசையின் கண்ணேயே இருக்கின்றது ஆதலின் அது அஞ்ஞானத்தின் அதீன சத்தையையுடையதேயாம். அஞ்ஞானமோ தனது சத்தையின்கண் விபாகாதிசத்தையினை யபேக்ஷிக்கின்றதில்லை யாதலின் அதன் பிரயோஜ்ஜியமன்றாம் இவ்வாறாகவே அநாதியாயினும் சீவப்பிரம்மவிபாகம் அஞ்ஞானத்தின் விகாரமேயாம். இவ்வபிப்பிராயத்தால் முன்னமே

சித்தித்த எனப்பட்டது. ஆதலால் சுத்த ஆன்மாவின்கண் அஞ்ஞானத் திற்கிருப்பாம் அன்றேல் அஞ்ஞானத்திற்கு விபக்த சீவசைதன்னியத்தி னபேக்ஷையும் சீவனுக்கு அஞ்ஞானத்தினபேக்ஷையுமாதலின் அன்னி யோன்னியாசிரய தூஷணமுண்டாம்.

நான் அஞ்ஞன் என்பது முதலிய பிரதீதியோ அஞ்ஞானு சிரய பூர்ண சைதன்னியத்திற்கே அகங்காராதியுபகிதத்தன்மையுண்மையால் அதன் கண்ணும் அது சம்பவித்தலால் பொருத்தமாகின்றது.

இதனுலேயே நான் அஞ்ஞன் பிரம்மத்தையறியேன் என்னும் இவ்வநுபவத்தால் அகங்கார ஆசிரயமாகவும் பிரம்மவிஷயகமாகவும் அஞ்ஞானமுளது என்பதும் கண்டிக்கப்பட்டது. அஞ்ஞானத்திற்கு கேவலசடவிருத்தித் தன்மைப் பொருந்தாமையாலும் என்க. இந்தப் பிரகாரம் விஷயமும் பூர்ணப் பிரம்மமேயாம் என இனி சொல்லப்படும் ஆதலின் 318-வது சுலோகத்தில் சித்வஸ்துவின் சேதனத்தில் என்றது பொருத்தமேயாமென்பது கருத்து. விபாகம் = வேற்றுமை. (319)

### அவதாரிகை

இந்தப் பிரகாரம் சுயம்ஸ்புரணவடிவ ஆன்மாவின்கண் ஞானுபாவம் சம்பவியாமையால் அதனுவரணசுபாவ அஞ்ஞானம் ஞானுபாவவடிவமாக சம்பவிக்கின்றதில்லையென்று கூறப்பட்டது. இப்போது உலகின் கண்ணும் அநுபவிக்கப்படுகின்ற அஞ்ஞானம் ஞானுபாவமாக சம்பவிக் கின்றதில்லை. விருத்தியினதீனப் பிரகாசமுடைய கடாதிக்கு விருத்தி யினபாவத்தால் அஸ்புரணம் சம்பவிக்கின்றது அங்ஙனமாயினும் விருத்தி யினபாவத்திற்கு ஆவரணத்தன்மையின்மையால் ஆவரணத்தை விஷயஞ்செய்யும் நானறியேனென்னுமநுபவத்திற்கு விருத்தியின் அபாவம் விஷயமாதற்கு யோக்கியமன்ரும் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்ருர் :—

### சுலோகம்

नाभावताऽस्य घटते वरणात्मकत्वा-
न्नाभावमावरणमाहुरभावशौण्डाः ।
अज्ञानमावरणमाह च वासुदेव-
स्तद्भावरूपमिति तेन वयं प्रतीमः ॥ ३२० ॥

## பதவுரை

**अस्य**–அஞ்ஞானத்திற்கு

**वरणात्मकत्वात्** –மறைக்குந்தன்மையுண்மையின்

**अभावता**–அபாவத்தன்மை

**न घटते**–பொருந்துவதின்ரும்

அற்றேல் அபாவத்திற்தும் ஆவரணத்தன்மை ஏன் கூடாது என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

**अभावशौण्डाः**–அபாவ பதார்த்தத்தை நீரூபிப்பதில் சமர்த்தரான வைசேஷிகர் முதலியோர்

**अभावम्** –அபாவத்தை

**आवरणम्** –ஆவரணமென

**न आहुः**–கூறுகின்றிலர்

அவருங்கூட அபாவத்தை யாவரணவடிவமாகக்கூறுகின்றிலர் ஆவரணத்தன்மைக்கு பாவபதார்த்தத்தின் தருமத்தன்மை நியமமாதலின் பாஞ (ஞாஞ) பாவத்திற்கு விசேஷமாக (அத்தியந்தம்) ஆவரண வடிவமின்ரும்.

யாதொரு காரணத்தால் ஆவரணத்திற்கு ஞாஞ பாவம் பிரயோஜகமன்ருே அக்காரணத்தால் அதன் (ஆவரணத்தின்) பிரயோஜகம் வேறு ஆவரணமே சொல்லத்தக்கதாம் என்பது பொருள்.

அற்றேல் அஞ்ஞானம் ஆவரணமாகாதொழிக எனின் அது சரியன்று அறியேன் என்னுமநுபவத்திற்கு விரோதம் வருதலின் மேலும் "அஞ்ஞானத்தால் ஞானம் மறைக்கப்பட்டுளது" என்பது முதலிய பகவானுடைய வாக்கியத்திற்கும் விரோதம் வரும் என்க் கூறுகின்ருர்.

**वासुदेवः च**–ஸ்ரீ கிருஷ்ணபகவானும்

**अज्ञानम्** –அஞ்ஞானத்தினை

**आवरणम्** –ஆவரண வடிவமாக

**आह**–கூறுகின்றனர்

பகவானது வசனத்தால் அஞ்ஞானத்திற்கு ஆவரணத்தன்மை யுண்மையின் இப்போதுள்ள ஆவரணம் போன்று அஞ்ஞானம் பாவ வடிவமேயாம் என்பது பிரசித்தமே யென முடிக்கின்றார்.

**तेन**–அதனால்

**वयम्**–யாங்கள்

**तत्**–அவ்வஞ்ஞானத்தினை

**भावरूपमिति**–பாவவடிவமென்று

**प्रतीमः**–அறிகின்றோம் (320)

## அவதாரிகை

வியாசபகவானுடைய வசனத்தாலும் அஞ்ஞானத்திற்கு மறைக்குந் தன்மையுளதெனக்கூறுகின்றார்.

## சுலோகம்

**एकः शत्रुर्न द्वितीयोऽस्ति शत्रुरज्ञानतुल्यः पुरुषस्य राजन् ।**
**येनावृतः कुरुते संप्रमत्तो घोराणि कर्माणि सुदारुणानि ॥**

## பதவுரை

**राजन्**–ஓ அரசனே!

**पुरुषस्य**–புருடனுக்கு

**एकः शत्रुः**–அஞ்ஞானமொன்றே சத்துருவாம்

**अज्ञानतुल्यः**–அஞ்ஞானத்திற்குச்சமானமாக

**द्वितीयः शत्रुः**–இரண்டாவது சத்துரு

**न अस्ति**–இன்றும்

**येन**–யாதொரு அஞ்ஞானத்தால்

**आवृतः**–மறைக்கப்பட்டவனாய்

**संप्रमत्तः**–அதனால் மிக்கப்பிரமாதமுடையவனாய் புருடனானவன்

**घोराणि**–பயங்கரமானவையும்

**सुदारुणानि**–மிக்கக்கொடியனவுமாகிய

**कर्माणि**–கருமங்களை

**कुरुते**–செய்கின்றான்

### *விசேஷவுரை*

எவ்வஞ்ஞானத்தால் ஆவிருதனாகி கருமங்களைச் செய்கின்றானோ அவ்வஞ்ஞானமொன்றே சத்துருவாம் எனக்கூட்டுக. ஈண்டு அஞ்ஞானத்தால் ஆவிருதன் என்னும் பதம் உபஜீவ்யமாம் (ஆசிரயமாம்) பயங்கரங்கள்=அத்தியந்தம் நிந்திக்கப்பட்ட பாபம் முதலியவை, மிக்கக் கொடியவை=தீனதரித்திராது தனத்தையபகரித்தல் முதலியவை. (321)

### *அவதாரிகை*

இந்தப் பிரகாரம் சுவப்பிரகாசான்மாவிற்கு ஆவரணத்தைச் செய்யுந்தன்மை அபாவத்திற்கு சம்பவிக்கிறதில்லையாதலின் பாவவடிவ அஞ்ஞானத்திற்கே அஃதாமென்று உபபாதனஞ்செய்யப்பட்டது. இப்போது 317-வது சுலோகத்தில் "**जाड्यं च मौढ्यमिति च**" என்று சொல்லப்பட்ட சடத்தன்மையினையும் மூடத்தன்மையினையும் அஞ்ஞானத்திற்கு உபபாதனஞ் செய்கின்றார்:—

### *சுலோகம்*

**जाड्यं जगत्यनुगतं खलु भावरूपं**
**मौढ्यं च पुङ्गतमिति प्रतिभाति तादृक् ।**
**जाड्यं च मौढ्यमिति चानुभवप्रसिद्ध-**
**मज्ञानमाहुरपवर्गपिधानदक्षम् ॥ ३२२ ॥**

### *பதவுரை*

**जगति**-கடபடாதி சடப்பிரபஞ்சத்தின்கண்

**अनुगतम्** –அநுஸ்யூதமாய்

**जाड्यम्** – யாதொரு சடத்தன்மையுண்டோ அது

**भावरूपं खलु**–பாவவடிவமாகவே

**प्रतिभाति**–தோற்றுகிறது

**पुङ्गतम्** –சீவர்களிடத்துள்ள

**मौढ्यं च**–மூடத்தன்மையும்

**तादृगिति**–அப்படியே பாவவடிவமாமென

**प्रतिभाति**–தோற்றுகிறது

அதனாற் சித்தித்தது என்னையெனிற் கூறுகின்றார்.

**जाड्यं च**–சடத்தன்மையினையும்

**मौढ्यम् च**–மூடத்தன்மையினையும்

**अनुभवप्रसिद्धम्** -நான் அஞ்ஞன் என்னும் அநுபவத்தாற் சித்தித்ததும்

**अपवर्गपिधानदक्षम्** –பரமானந்தவடிவப் பிரம்மத்தை மறைத்தலில் சமர்த்தமுமான

**अज्ञानमिति**–அஞ்ஞானமாமென

**आहुः**–கூறுகின்றனர்

### *விசேஷவுரை*

சடத்தன்மையினையும் மூடத்தன்மையினையும் அஞ்ஞானமெனக் கூறுகின்றனர் என ஒட்டுக. அல்லது சடத்தன்மை மூடத்தன்மை யனுபவத்தாற் சித்தித்த அஞ்ஞானமே பரமானந்த வடிவ ஆன்மாவை மறைத்தலில் சமர்த்தமாமெனக் கூறுகின்றனர். கடம் முதலிய சடப் பிரபஞ்சத்தின்கண் இது சடம் இது சடம் என்னும் அநுகதவியவகாரத் திற்கு ஆஸ்பதமாய் யாதொரு சடத்தன்மையுண்டோ அது பாவ வடிவமேயாம. (அபாவவடிவ) சேதனத்தினன்னியத்தன்மை முதலான வற்றிற்கு பாவாபாவ சருவசடத்தின்கண்ணுமநுகதத்தன்மைச் சம்பவியாமையின். இந்தப்பிரகாரம் மூடத்தன்மையும் சீவநிகாய (சமூக)த் திலநுகதபாவவடிவமேயாம்.

காரணத்தன்மையால் சகத்திலநுகதமான அஞ்ஞானத்தினும் வேறான அநுகதசாட்டியத்தைக்கற்பிப்பதன் கண்ணும் சீவத்து வாதியின் உபாதித்தன்மையால் நிகில (சருவ) சீவ சம்பந்தியஞ்ஞானத் தினும் அன்னிய மௌட்டியத்தைக்கற்பிப்பதன் கண்ணும் பிரமாண மின்மையால் அநுபவத்தாற் சித்தித்த அஞ்ஞானமே அவ்விரண்டுமா மாதலின் அவ்வடிவ அஞ்ஞானமும் பாவ வடிவமாமென்பது பொருள்.

## அவதாரிகை

இப்போது அஞ்ஞானத்திற்கு பிருகிருதி சத்தத்தால் முன் சொல்லப்பட்ட சகத்தின காரணத்துவத்தை யுபபாதனஞ் செய்தற் பொருட்டு ஆரம்பிக்கிருர். அதன் கண இச்சங்கை நிகழ்கின்றது. அற்றேல் சூத்திரக்காரரால் "प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात्" (பிரம்மமே சகத்தின் உபாதான காரணமுமாம் ஏக விஞ்ஞானத்தால் சருவவிஞ்ஞானப்பிரதிஞ்ஞையும் மண் முதலிய திருஷ்டாந்தமுமநுசாரமாயிருத்தலின்) என்னும் சூத்திரத்தால் பிரம்மமே சகத்தின் பிரகிருதியென்பது வேதாந்த சாஸ்திரத்தின் பொருளாம் என நிரூபிக்கப்பட்டுளது இவ்வாறிருக்க அஞ்ஞானம் பிரகிருதியாக எப்படியாகும் என்னுமிடத்துக் கூறுகின்ருர்:—

## சுலோகம்

साभासमेतदुपजीव्य चिदद्वितीया
संसारकारणमिति प्रवदन्ति धीराः ।
साभासमेतदिति संसृतिकारणत्वे
द्वारं परं भवति कारणता दृशस्तु ॥ ३२३ ॥

## பதவுரை

अद्वितीया-கூடஸ்தாத்வயானந்த ரூபமான

चित्-சேதனவடிவப்பிரம்மமே

साभासम्-சைதன்னியத்தின் சாயையோடு கூடிய

एतद्-அஞ்ஞானத்தை

उपजीव्य-ஆசிரயித்து

संसारकारणमिति- ஆகாசாதிப்பிரபஞ்சத்தின் காரணமாமென

धीराः-கூடஸ்தப்பிரம்ம நிஷ்டர்கள்

प्रवदन्ति-கூறுகின்ருர்கள்

एतद्-அஞ்ஞானமானது

साभासम् इति-சுவப்பிரகாசப்பிரம்மத்தோடு கூடியிருத்தலின்

संसृतिकारणत्वे-பிரம்மத்திற்கு பிரபஞ்சகாரணத்தன்மையில்

**परम्**–கேவலம்

**द्वारं भवति**–துவாரகாரணமாகின்றது

**कारणता तु**-சுருதிசித்தகாரணத்தன்மையோ

**इह:**–சேதனப்பிரம்மத்திற்கேயாம்

## *விசேஷவுரை*

ஆசிரயித்து=கடகத்தன்மையால் அதாவது துவாரகாரணமாக அங்கீகரித்து, பிரம்மம் தனது நிஷ்பிரபஞ்சத்தன்மை வடிவ சுத்தியைப் பரித்தியாகஞ் செய்யாமலே சமுசாரத்தின் காரணமாமெனக் கூறுதல் வேண்டும் "கூடஸ்தம் அசலம் துருவம்" "நிஷ்கலம் நிஷ்கிரியம்" என்பது முதலிய சுருதியினுல், அப்படிப்பட்ட காரணத்தன்மையும் பிரபஞ்சப் பிராந்தியின் அதிஷ்டானத்தன்மையாலேயே நிருவாக மாகின்றது. சர்ப்பாதிஷ்டான இரஜ்ஜுவாதிக்கு அப்போதும் சொரூப ஸ்திதி காணப்படுதலின். பிராந்தியின் அதிஷ்டானத்தன்மையும் பரிணமிக்கின்ற அஞ்ஞானத்தை யாசிரயிக்காமல் சித்திக்கிறதில்லை தனக்கே அப்படிப்பட்ட பரிணமத்தையங்கீகரிக்கின் பூருவவடிவத்திற்கு நாசம் பிராப்தியாம் ஆதலின் பிரம்மத்தில் காரணத்தன்மை சித்தியின் பொருட்டு அஞ்ஞானமும் சகத்தின் பிரகிருதியாமென அங்கீகரிக்கத் தக்கது என்பது கருத்து சங்கை: அஞ்ஞானம் சகத்திற்குக் காரணமாகு மாயின் அப்போது அதுவே சகத்தின் உபாதானமாகட்டுமே பிரம்மத்தின் கண் காரணத்தன்மையைக்கூறும் சுருதியோ அதற்கு நிமித்தத்தன்மை யாலும் பொருந்துகின்றது என்று ஆசங்கித்து சுதந்திர அஞ்ஞானம் பிரபஞ்சத்தின் காரணமா அல்லது ஆன்மாவில் அத்தியஸ்த அஞ்ஞானம் காரணமா? முதற்பக்ஷம் சரியன்று சடத்திற்கு சுதந்திரத்தன்மைப் பொருந்தாமையினுலும் அஞ்ஞான அதன் காரியங்களில் இருப்பு விளக்கத்தினபாவம் பிராப்தியாதலினுலும் என்று கருதி இரண்டாவது பக்ஷத்தில் கூறுகின்றூர். பிரம்மத்தோடு கூடியதாயிருத்தலினென.

ஆ=எங்கும், பாசம்=விளங்குவது ஆபாசமாம் அது சுவப்பிரகாச அனவச்சின்னப்பிரம்மமாம் அதனேடு கூடியது= அதன் தாதான்மியத்தை யடைவுற்றது, அஃது ஸாபாஸ அஞ்ஞானமென்பது பொருள். அத்தியஸ்தத்திற்கு அதிஷ்டானமே வடிவமாம் ஆதலின் அஞ்ஞானம் அதிஷ்டானத்தினின்றும் பிரிவுபட்டதாய்க் காரணமாவதற்கு யோக்கியு

மன்றும் மற்றோ திருக்குவடிவப்பிரம்மத்திற்த சமுசாரத்தின் விவர்த் தாதிஷ்டானத்தன்மையில் கேவலம் துவாரமாம் கூறிய விதத்தால் கடக மாகின்றது. சுருதியினுற்சித்தித்த காரணத்தன்மையோ பிரம்மத்திற்கே என்பது கருத்து. (323)

## அவதாரிகை

அற்றேல் சாங்கியர் முதலியோரால் (காரிய காரணங்களுக்கு) சமான தருமத்தன்மையுண்மையால் சடப்பிரதானமே சகத்தின் காரணமாமெனை அநுமானத்தால் அங்கீகரிக்கப்பட்டுளது அது போல உன்னுலும் அங்கீகரித்தல் உசிதமாமென்று சங்கித்து "அப்பரமான்மா அநேக வடிவங்களாவேன் என ஈக்ஷித்தது" என ஈக்ஷணை கருத்தா விற்கே உபாதானத்துவத்தைப்பிரதிபாதிக்கும் சுருதியை யாசிரயித்து பாதராயண மகரிஷியால் சாங்கிய வைசேஷிகாதியரின் பக்ஷத்தைக் கண்டித்தமையின் அங்ஙனமன்றெனக்கூறுகின்றார்: —

## சுலோகம்

यावद्दृशोऽन्यदिह संसृतिकारणं तद्-
वेदान्तवादिसमये न मतं जडत्वात् ।
यद्यज्जडं भवति संसृतिकारणं तत्
नेति स्फुटं वदति सूत्रकृदत्र यस्मात् ॥ ३२४ ॥

## பதவுரை

वेदान्तवादिसमये-வேதாந்தவாதியின் மதத்தில்

इह-இச்சகத்தின் கண்

दृशः अन्यत् यावत्-திருக்கினும் அந்நியமான அசேதன மனைத்தும்

जडत्वात्-சடமாதலின்

संसृतिकारणम्-சமுசாரத்தின் காரணமாக

मतं न-சம்மதமின்றும்

यद्यद्-யாது யாது

जडं भवति-அசேதனமாகின்றதோ

तत्-அது அது

**संसृति कारणं**-சமுசாரத்தின் காரணம்

**न इति**-அன்றுமென

**अत्र**-வேதாந்தசாஸ்திரத்தின் கண்

**सूत्रकृत्**-வியாசபகவான்

**स्फुटम्**-ஸ்பஷ்டமாக

**वदति**-"**ईक्षतेर्नाशब्दम्**" என்பது முதலிய சூத்திரங்களினால் கூறுகின்றனர்

**यस्मात्**-ஆதலின்

*விசேஷவுரை*

வேதாந்தியின் மதத்தில் சடம்சமுசார காரணமன்றும் சடமாதலின் ரஜ்ஜு சர்ப்பம்போல, அப்பிரயோஜகமும் (ஏது இருக்குக சாத்தியமில்லாதொழிக என்று வியபிசாரசங்கையுண்டாகுங்கால் அதனைக் கண்டிக்குமநுகூலதருக்கமின்மையும்) இன்றும் சுருதியையும் நியாயத்தையுமறிந்த சூத்திரக்காரரால் கூறப்பட்டமையின் என்னுமபிப்பிராயத்தால் அவதாரிகையில் கூறப்பட்ட சுருதிக்கு அநுக்கிரகத்தைச் செய்கின்ற நியாயத்தை மூலமாகவுடைய வியாப்தியினைக் கூறுகின்றார் யாது யாது என. (324)

*அவதாரிகை*

மேலும் '**रचनानुपपत्तेश्च नानुमानम्**' (ரசனை பொருந்தாமையால் பிரதானம் காரணமன்றும்) என்பது முதலிய சூத்திரத்தால் சூத்திரக் காரரால் பிரதான(முக்கிய)மாக சடகாரணத்தன்மை நிராகரிக்கப்பட்டமை யானும் சேதனப்பிரம்மமே உபாதானமாக அங்கீகரிக்கத்தக்கதாமெனக் கூறுகின்றார் :—

*சுலோகம்*

**अजडकारणभावनिबन्धनं सकलमेव जडं न तु कारणम् ।**
**इति हि वेदशिरस्सु विचक्षणाः कपिलपक्षनिराकरणे जगुः ॥**

*பதவுரை*

**सकलमेव**-எல்லாக் காரியமுமே

**अजडकारणभावनिबन्धनम्**-சேதனவடிவ காரணத்தின் சத்தையினால் உண்டுபண்ணப்படுகிறது,

**जडन्तु**–சடவடிவ அவித்தை முதலியது

**न कारणम्**–காரணமன்றும்

**सकलमेव जडम्**–அல்லது அவித்தை முதலிய எல்லாச்சட பதார்த்தமுமே

**अजडकारणभावनिबन्धनम्**–சிதான்மாவின் காரணத்துவ வியவகார யோக்கியத்தன்மையில் துவாரமாம்

**न तु कारणम्**–சுயம் காரணமன்றும்

**इति हि**–என்று

**वेदशिरस्सु**–வேதாந்தங்களில்

**विचक्षणाः**–நிபுணர்களான வியாசர் முதலியோர்

**कपिलपक्षनिराकरणे**–கபிலர் முதலியோரின் மதத்தைக் கண்டிக்குந்தருவாயில்

**जगुः**–கூறினர். (325)

*அவதாரிகை*

இந்தப் பிரகாரம் சுத்த அத்துவயப் பிரம்மமே அவித்தையினதும் அதன் விவர்த்தத்தினதும் அதிஷ்டானத்தன்மையால் சகத்தின் காரணமா மென்பது சுருதிசம்மதமாம். அவித்தையோ அதன் கடகத்தன்மையால் (அதனோடு சேர்ந்து) சகத்தின் காரணமாமென வேதாந்தத்தினதும் அதன்சண் குசல புருஷாதுமான மதத்தைக்கூறி அன்னிய மதத்தினை யநுவாதஞ் செய்கின்றார்.

*சுலோகம்*

**शबलमात्मपदेन निगद्यते सकलमात्मजमित्यपि च श्रुतिः ।**
**शबलमात्मपदं जगतस्ततः प्रकृतिरित्यपरे तु जना जगुः ॥**

*பதவுரை*

**आत्मपदेन**–'ஆன்மாவினின்றும் ஆகாசமுண்டாயிற்று' என்பது முதலிய வாக்கியத்திலுள்ள ஆன்ம பதத்தால்

**शबलम्**–அஞ்ஞான விசிஷ்ட ஆன்ம வஸ்து

**निगद्यते**–சொல்லப்படுகிறது (அதனாலென்னையெனிற் கூறுகின்றார்)

**सकलम्**—ஆகாசம் முதலிய அனைத்தும்

**आत्मजम् इत्यपि**—ஆன்மாவினின்று உண்டானது எனவும்

**श्रुतिः**—சுருதி தெரிசிப்பிக்கின்றது

(அதனாற்றான் சித்தித்ததென்னையென்னுமிடத்துக் கூறுகின்றார்)

**ततः**—யாதொரு காரணத்தால் சுருதியானது சகலமும் ஆன்மபத வாச்சிய விசிட்டத்தினின்றும் உண்டானதெனத் தெரிசிப்பிக்கின்றதோ அதனால்

**शबलम् आत्मपदम्**—விசிஷ்டான்ம சொரூபம்

**जगतः**—சகத்திற்கு

**प्रकृतिः इति**—காரணமாமென

**अपरे तु जनाः**—வேறு சில ஜனங்கள்

**जगुः**—கூறுகின்றனர்

மூலத்தில் தெரிசிப்பிக்கின்றது என்பது எஞ்சி நின்றது. (326)

## *அவதாரிகை*

இந்தப் பிரகாரம் விசிட்டப்பிரம்மத்திற்கு சகத்தின் காரணத்துவத்தைக் கூறி அவரது மதத்திலேயே அதன் கருத்தாவிற்கு அதினின்றும் விசேஷததைத் திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார் :—

## *சுலோகம்*

**सुकृतदुष्कृतकर्मणि कर्तृतां मतिगतात्मचितिप्रतिबिंबकम् ।**
**व्रजति तद्वददः परमात्मनो जगति याति तमः प्रतिबिंबकम् ॥**

## *பதவுரை*

**मतिगतात्मचिति प्रतिबिम्बकम्**—அந்தக்கரணத்தின்கண் ஆன்ம சேதனத்தின் பிரதிபிம்பமான சீவன்.

**सुकृतदुष्कृतकर्मणि**—விதிக்கப்பட்ட புண்ணிய கருமத்திலும் நிஷேதிக்கப்பட்ட பாப கருமத்திலும்

**कर्तृताम्**—கருத்திருத்தன்மையை

**व्रजति**—அடைகின்றான்

**तद्वत्**–அதுபோன்று

**जगति**–உலகையுண்டுபண்ணுவதில்

**परमात्मनः**–பிரம்மத்தினது

**तमःप्रतिबिंबकम्**–அஞ்ஞானத்தில் பிரதிபிம்பித்த

**अदः**–அது (பிரதிபிம்ப சேதனமே)

**याति**–கருத்திருத்தன்மையை யடைகின்றது.

## விசேஷவுரை

பிரதிபிம்பம் = சீவத்தன்மையை யடைந்துள்ள சேதனம், எப்படிப் புண்ணிய பாபங்களில் சீவ பாவத்தை யடைந்துள்ள அந்தக்கரணப் பிரதிபிம்ப சேதனமே கருத்தாவோ "**कर्ता शास्त्रार्थवत्वात्**" (சீவன் கருத்தா சாஸ்திரத்திற்குப் பயனுடையதாந்தன்மையுண்மையின்) என்பது முதலிய நியாயத்தால் அது (கருத்தா) சபளமன்றும் என்று அவரது மதமோ அப்படியே சகத்திற்கும் அஞ்ஞானத்தில் பிரதிபிம்பித்ததாய் ஈஸ்வரனெனப் பெயரியதாயுள்ள சேதனமே கருத்தாவாகின்றது அஞ்ஞானவிசிஷ்டம் அன்றுமென்பது பொருள். (327)

## அவதாரிகை

கூறிய திருஷ்டாந்தத்தாலேயே சபளத்திற்கு உபாதானத் தன்மையையும் திடஞ்செய்கினுர் :—

## சுலோகம்

**सुकृतदुष्कृतयोः शबला यथा भवति कारणमात्मचितिस्तथा ।**
**गगनवायुपुरःसरकारणं परमचेतनता शबलाकृतिः ॥ ३२८ ॥**

## பதவுரை

**शबला**–அந்தக்கரண விசிஷ்ட

**आत्मचितिः**–ஆன்மசேதனமானது

**सुकृतदुष्कृतयोः**–புண்ணிய பாபங்களில்

**यथा**–எப்படி

**कारणं भवति**–உபாதான காரணமாகின்றதோ

**तथा**–அப்படி

**शबलाकृतिः**–மாயாவிசிஷ்ட வடிவ

**परमचेतनता**–பரமான்மாவே

**गगनवायुपुरःसरकारणम्**– ஆகாசம் வாயு முதலியவற்றின் உபா தான காரணமாகின்றது. (328)

## அவதாரிகை

சிருஷ்டியாதிவாக்கியத்தின்கண்ணுள்ள ஆன்மா முதலிய பதத்தால் உசிதத்தன்மையால் சபளமே (அஞ்ஞான விசிட்டமே) சொல்லப்படுகின்றது. அப்படியாயினும் லக்ஷணையால் சுத்த பரமான்மாவே காரணமாமென்று சொல்லத்தக்கதாம் ஆதலின் அதனால் விசிட்டத்திற்குக்காரணத்தன்மை சித்திக்கின்றதில்லை என்று சமாதானஞ் செய்கின்றார் :—

## சுலோகம்

**शबलताकवलीकृततावशात् परमचेतनतैव निगद्यते ।**
**शबलमात्मपदेन न कथ्यते शबलमात्मनि वृत्तिनिबन्धनम् ॥**

## பதவுரை

**शबलताकवलीकृततावशात्**–சபள சொரூபத்தால் வளைபட்டிருக்குந் தன்மைச் சாமர்த்தியத்தால்

**परमचेतनता एव**–சுத்தசேதனமே

**आत्मपदेन**–ஆன்ம பதத்தால்

**निगद्यते**–லக்ஷணையால் போதிக்கப்படுகிறது

**शबलम्**–விசிட்டம்

**न कथ्यते**–ஆன்ம பதத்தால் தாற்பரியத்தால் சொல்லப்படுகிறதில்லை

அப்படியானுல் சபளத்தைக் கூறுதற்கு யாது பிரயோஜனம் என்னுஞ் சங்கைக்கு லக்ஷணையின் சித்தியே பிரயோஜனமெனக் கூறுகின்றார்.

**शबलम्**–(மற்றோ) விசிஷ்டம்

**आत्मनि**–சுத்தான்மாவில்

**वृत्तिनिबन्धनम्** -லக்ஷணையால் ஆன்மா முதலிய சத்தத்தின் பிரவிருத்திக்குக் காரணமாம்

### விசேஷவுரை

சபளசம்பந்த செத்தால் சருவோபாதியற்ற சைதன்னியமே ஆண்டு அறிதற்கு விரும்பப்படுதலின் லக்ஷணையால் போதிக்கப்படுகிறது ஆன்மபதத்தால் சபளம் போதிக்கப்படுகிறதில்லை தாற்பரியத்தால் என்பது எஞ்சி நின்றது சபளம் வாஸ்தவமாக அஞன்மாவாதலின் என்பது பொருள். (329)

### அவதாரிகை

யாதொரு காரணத்தினுல் 'ஆன்மாவினின்று மாகாசமுண்டாயிற்று' என்னுமிவ்வாக்கியத்தின்கண் ஆன்மா முதலிய பதங்களால் ஆன்மாவில் லக்ஷணை செய்தற்பொருட்டு சபளம் போதிக்கப்படுகிறதோ அக்காரணத் தால் சபளமே அதன் பொருளாமெனை அவர்களுக்குப் பிராந்தியுண்டா கின்றது. அஃது வஸ்து தத்துவமன்ரும் என்று கூறப்பட்டது அதன் அநுவாத பூருவகம் கூறுகின்ருர் :—

### சுலோகம்

**शबलतापरिधानसमन्वयात् परमचेतनतात्मगिरः पदम् ।**
**भवति तेन जनस्य तु विभ्रमः शबलमात्मगिरः पदमित्ययम् ॥**

### பதவுரை

**शबलतापरिधान समन्वयात्** -சபளத்தன்மை வடிவ மறைப்பின் சம்பந்தத்தால் (விசிஷ்ட வாயிலாக)

**परमचेतनता**-நிருபாதிக சுத்தசேதனமே

**आत्मगिरः**-ஆன்ம பதத்தின்

**पदम्** -வியுற்பத்திஸ்தானம்

**भवति**-ஆகின்றது

**तेन**-அவ்வேதுவால்

**जनस्य**-ஜனங்களுக்கு

**शबलम्** -விசிஷ்டமே

**आत्मगिरः**–ஆன்ம பதத்தின்

**पदमिति**–பொருளாமென்று

**अयं विभ्रमः**–இந்தப் பிராந்தியானது உண்டாகின்றது.

## *விசேஷவுரை*

இஃது கூறப்பட்டதாகின்றது ' சத்தியம் ஞானமனந்தம் பிரம்ம ' என்னும் லக்ஷண வாக்கியத்தின்கண் பிரம்மத்திற்கு அனந்தத் தன்மைப் பிரதிஞ்ஞை செய்யப்பட்டுளது. " எவன் குகையிலுள்ள வஸ்துவை யறிகின்றானோ " என்னும் உத்தரவாக்கியத்தின்கண் குகையின் பிரவேசத்தால் அநற்கு பிரத்தியக் பாவத்தை தெரிசிப்பிக்கின்ற சுருதி யினுல் அனந்தத்தன்மையை யுபபாதனஞ் செய்தற்பொருட்டு ஆன்மா விற்கு நாநாத்தன்மை நிராகரிக்கப்பட்டது. அதற்கு விஜாதீய சுகஜாதியின் பேதத்தை நிராகரிக்கும் இச்சையினுல் அதினின்றும் சிருஷ்டி சொல்லப்படுகின்றது. அப்போதுதான் காரிய காரணங் களுக்கு அனன்னியத்தன்மை நியாயத்தால் காரியத்திற்கு வாஸ்தவமாக காரணமாத்திரத் தன்மைச் சித்திக்கின்றது. ஆதலின் அதன் அநந்தத் தன்மை பொருத்தமாம். இந்தப்பிரகாரம் எதினின்றுமாகாசாதியுண்டா யிற்றோ அது " அந்த இந்த ஆன்மாவினின்றும் " என்பதனுல் பிரத்தியக பின்ன அனன்னியமாமென தெரிசிப்பிக்கின்றதாய்ச் சுருதியானது அத்வைத ஆன்மாவையேயபிப்பிராயஞ் செய்கின்றது ஆதலின் அதனுல் சபள காரணத்தன்மைச் சித்திக்கின்றதில்லை என்க. **(330)**

## *அவதாரிகை*

இவ்வாறுயின் பிரத்தியக்ஷாதியால் [1]காணப்பட்ட மண் பொன் முதலியவற்றிற்குக் குடம் குண்டலம் முதலியவற்றின் காரணத் தன்மையும் உனது பக்ஷத்தில் சித்திக்காது எனின் வாஸ்தவந்தரன் யாண்டும் மண் முதலியவற்றின் அதிஷ்டானமாய் சருவகாரியத்தில் அநுகதமாயுள்ள சத்வஸ்துவே மண் முதலிய சபளவாயிலாக கடாதியின் காரணமாம். கேவல மண் முதலியவையன்றும். அதற்கு அதிஷ்டானமே வடிவமாதலால் அதினின்றும் வேறுகி காரணத்தன்மை பொருந்தாமையின் என்னுமபிப் பிராயத்தாற் கூறுகின்றார்:—

---

1. *காணப்பட்ட காரணத்தன்மை என ஒட்டுக,*

### சுலோகம்

**बहु निगद्य किमत्र वदाम्यहं शृणुत संग्रहमद्वयशासने ।
सकलवाङ्मनसातिगता चितिः सकलवाङ्मनसव्यवहारभाक् ॥**

### பதவுரை

**अत्र**–இப்பொருளின்கண்

**बहु निगद्य**–அதிகமாகக் கூறுதலினால்

**किम्**–பயனென்னை (ஒன்றுமின்றாம்)

**अद्वयशासने**–வேதாந்த சாஸ்திரத்தின்கண்

**संग्रहम्**–சித்தாந்தத்தின் சுருக்கத்தை

**अहम् वदामि**–நான் கூறுகின்றேன்

**शृणुत**–அதனைக் கேளுங்கள்

[அச்சுருக்கத்தையே நிர்க்குண சகுண பேதத்தால் கூறுகின்றார்.]

**सकलवाङ्मनसाति- गता चितिः**– சருவவாக்கியத்திற்கும் மனதிற்கும் அப்பாற்பட்ட நிருவிசேஷ சேதனமே

**सकलवाङ्मनस व्यवहारभाक्** (அவ்வவ்வர்த்தத்தின் விசிஷ்டத்தன்மையால்) சருவவாக்கினதும் மனதினதும் வியவகாரத்திற்கு விஷயமாகின்றது (331)

### அவதாரிகை

அற்றேல் மாயா விசிஷ்ட சேதனத்திற்குக் காரணத்தன்மையைச் சுருதி பிரதிபாதிக்காதாயின் அப்போது மாயைக்குக் காரணத்துவசித்தியெவ்வாறும் என்னுமிடத்துக் கூறுகின்றார் :—

### சுலோகம்

**चित्रायागः पशुफल इति श्रूयमाणेऽपि चित्रा-
ऽपूर्वं द्वारं पशुफलतयाऽऽक्षिप्यते तत्र तद्वत् ।
चैतन्यात्मा जगदुदयकृच्छ्रूयतेऽत्रापि पश्चा-
न्मायादीनां भवति जगति द्वारभावः फलेऽस्मिन् ॥**

## பதவுரை

**चित्रायाग:**–சித்திரா எனப் பெயரிய யாகமானது

**पशुफलः इति**–பசுவைப் பயனாகவுடையது என்று

**श्रूयमाणेऽपि**–"பசுவை விரும்பும் புருடன் சித்திரா யாகத்தால் யஜிக்கக்கடவன்" என்று கேட்கப்பட்டிருந்த போதிலும்

**चित्राऽपूर्वम्** –(க்ஷணிக யாகத்திற்குக் காலாந்தரத்திலுண்டாகும் பசு சாதனத்தன்மை பொருந்தாமையால்) சித்திரா யாக ஜன்னிய அபூருவம்

**पशुफलतया**–பசுவடிவ பயனின் சாதனத்தன்மையால்

**द्वारम्** –மத்தியில்

**तत्र**–கருமகாண்டத்தின் கண்

**आक्षिप्यते**–கற்பிக்கப்படுகின்றது

**तद्वत्** –அதுபோன்று

**अत्रापि**–பிரம்மகாண்டத்தின் கண்ணும்

**चैतन्यात्मा**–கூடஸ்த சித்ரூப ஆன்மா

**जगदुदयकृत्** –சகத்தின் உற்பத்தியைச் செய்வது என்று

**श्रूयते**-கேட்கப்படுகின்றது (கேட்கப்பட்டிருந்தபோதிலும் நிருவிகார சேதனத்திற்கு சகத்தின் காரணத்தன்மை பொருந்தாமை யால்)

**पश्चात्** –பின்பு

**अस्मिन् फले**–இந்தக் காரியவடிவ

**जगति**–பிரபஞ்சத்தில்

**मायादीनाम्** –மாயை முதலியவற்றிற்கு

**द्वारभावः**–துவார காரணத்தன்மை

**भवति**–சம்பவிக்குமென்று கற்பிக்கப்படுகின்றது.

## விசேஷவுரை

கூடஸ்தப் பிரம்மத்திற்கு "ஆன்மாவினின்றும் ஆகாசமுண்டாயிற்று" என்னும் சுருதியால் தெரிசிப்பிக்கப்பட்ட காரணத்துவாதியை சம்ரக்ஷிக்கும் பொருட்டு சடப்பிரபஞ்சத்தின் உபாதானத்தன்மையால் அநுமிக்கப்பட்ட அஞ்ஞானமானது அதன் கடகத்தன்மையால் (சம்பந்தித்தன்மையால்) ஆசிரயிக்கப்பட்டுளதாதலின் அதன் அசித்தியின்றுமென்பது கருத்து. (332)

## அவதாரிகை

விசிஷ்டத்திற்குக் காரணத்தன்மை சுருதிசம்மதமன்றும் என்பதன்கண் பிரம்ம வேத்தாக்களின் அங்கீகாரவடிவ லிங்கத்தைக் கூறுகின்றார்.

## சுலோகம்

**कारणत्वमुपलक्षणं चितेर्ब्रह्मणो न खलु तद्विशेषणम् ।**
**इत्यपीदमुपपद्यते तदा चेतना भवति कारणं यदा ॥ ३३३ ॥**

## பதவுரை

**चितेः ब्रह्मणः**–சித்துரூபப் பிரம்மத்திற்கு

**कारणत्वम्** –சகத்தின் காரணத்தன்மையானது

**उपलक्षणम्** –கிருகத்திற்குக் காக சம்பந்தம்போன்று தடஸ்த லக்ஷணமாம்

**तत्** –அக்காரணத்துவம்

**न खलु विशेषणम्** –விசேஷணமன்றும்

**इति इदमपि**–என்று பிரம்மவித்துக்களால் அங்கீகரிக்கப்பட்ட இதுவும்

**यदा**–எப்போது

**चेतना**-சேதனமானது

**कारणं भवति**–காரணமாகுமோ

**तदा**–அப்போது

**उपपद्यते**–பொருத்தமாகின்றது. (333

## *அவதாரிகை*

அற்றேல் சபளத்திலுள்ள (விசிட்ட சேதனத்திலுள்ள) காரணத் தன்மையும் அதன் (சுத்த சேதனத்தின்) உபலக்ஷணமாக ஏனுகாது என்னுஞ் சங்கைக்கு அலக்ஷியத்திலுள்ள தருமத்திற்கு அஃது (உப லக்ஷணத்தன்மை) பொருந்தாமையின என்று கூறுகின்ருர் :—

## *சுலோகம்*

**अन्यदेव यदि कारणं भवेत् कारणत्वमुपलक्षणं कथम् ।**
**चेतनस्य घटतेऽन्यगामिना वस्तु नान्यदुपलक्ष्यते यतः ॥**

## *பதவுரை*

**अन्यदेव**—சுத்தப் பிரம்மத்தினும் வேருன சபளமே

**कारणम्**—சகத்தின் காரணமாக

**यदि भवेत्**—ஆகுமாயின்

**चेतनस्य**—சுத்தப் பிரம்மத்திற்கு

**कारणत्वम्**—சபளத்திலுள்ள காரணத்தன்மையானது

**उपलक्षणम्**—உபலக்ஷணமாக

**कथं घटते**—எப்படிப் பொருந்தும்
பொருந்தாமையிலேதுவைக் கூறுகின்ருர்

**अन्यगामिना**—அன்னிய வஸ்துவிலுள்ள தருமத்தினுல்

**अन्यत् वस्तु**—மற்ருேர் வஸ்து

**न उपलक्ष्यते**—லக்ஷிக்கப்படுகின்றதில்லை

**यतः**—ஆதலின்

## *விசேஷவுரை*

உலகின்கண் அலக்ஷியத்திலுள்ள தருமத்திற்கு லக்ஷகத்தன்மை காணப்படாமையின், சுத்தப்பிரம்மம் சபளத்திலுள்ள தருமத்தால் லக்ஷிப்பித்தற்கு யோக்கியமன்ரும். ஆதலின் சுத்தப்பிரம்மமே சுருதி சம்மதமான உபாதான காரணமாம். மாயைக்கோ அருத்தத்தால் சித்தித்த உபாதானத்தன்மையுளது அது சுருதியால் அநுவதிக்கப் படுகின்றது. ஆதலால் மாயை பாவவடிவமேயாம் என்பது கருத்து.

## அவதாரிகை

இந்தப் பிரகாரம் பிரசங்கத்தால் மாயையில் பிருகிருதித்துவ விசாரத்தை சமாப்தி செய்து [1]தொடர்புற்ற அறியப்படாத பொருளை விஷயமாகவுடையதாந்தன்மையால் சுவதசித்தப்பிரம்மததின் கண்ணும் வேதாந்தப் பிராமாண்யத்தின் சமர்த்தனத்தை முடிக்கின்றார் :—

## சுலோகம்

**अनवबुद्धमतः श्रुतिमस्तकैर्विषयतामुपपादयितुं क्षमम् ।**
**अनुभवात्मपदं तमसा यतः पिहितमेतदिह प्रतिभासते ॥ ३३५ ॥**

## பதவுரை

**यतः**—யாதொரு காரணத்தால்

**अनुभवात्मपदम्**—நித்தியாநுபவவடிவ ஆன்ம சொரூபமானது

**तमसा**—கூறிய பிரகாரமான அஞ்ஞானத்தால்

**पिहितम्**—மறைக்கப்பட்டதாய்

**इह**—இச்சம்சார தசையின்கண்

**प्रतिभासते**—விளங்குகின்றதோ (அல்லது சாக்ஷியின்கண் நான் அறியேனென்று பிரத்தியக்ஷத்தால் விளங்குகின்றதோ)

**अतः**—அக்காரணத்தால்

**अनवबुद्धमेतद्**—அறியப்படாததாயுள்ள இவ்வான்ம தத்துவம்

**श्रुतिमस्तकैः**—வேதாந்தங்களால்

**विषयताम्**—விஷயத்தன்மையை

**उपपादयितुम्**—உபபாதனஞ் செய்தற்கு

**क्षमम्**—யோக்கியமாம் (335)

## அவதாரிகை

118-வது சுலோகத்தில் "அஞ்ஞான கற்பித மநிர்வசநீயம்" என்பது முதலியவற்றால் அநிர்வசநீயமாய் வஸ்து ஒன்றுளது என்று

---

1. தொடர்புற்ற பிராமாண்யத்தின் சமர்த்தனத்தை என கூட்டுக.

யாதொன்று சொல்லப்பட்டதோ அதன்கண் சங்கையைச் செய்து நிராகரிக்கின்றார். அற்றேல சுவப்பிரகாசப் பிரம்மத்திற்கு அறியப்படாத் தன்மை எப்படிப் பொருந்தும்? விரோதமாதலின். அஞ்ஞாதத்தன்மை கற்பிதமாய் அநிர்வசநீயமாயிருத்தலின் அதற்கு சுவப்பிரகாசத்தோடு விரோதமின்றும் என்று சொல்லற்க அநிர்வசநீய வஸ்துவே ஆகாச குசுமம்போன்று சித்தியாமையின் என்று ஆசங்கித்து உலகின்கண் சருவாநுபவசித்தமாயிருத்தலின் அங்ஙனமன்றெனக் கூறுகின்றார் :—

## அநிர்வசநீய வஸ்துவைச் சாதித்தல்

### சுலோகம்

**अज्ञानकल्पितमनिर्वचनीयमस्मिन्नाबालवृद्धमविवादपदं प्रसिद्धम् ।**
**स्वप्ने तथा च भगवानपि वक्ष्यतीदं सन्ध्येऽस्ति सृष्टिरिति**
**पक्षनिराससिद्ध्यै ॥ ३३६ ॥**

### பதவுரை

**अस्मिन्**–இவ்வுலகின் கண்

**अज्ञानकल्पितम्**–யாதொன்று அஞ்ஞான கற்பிதமோ அது

**अनिर्वचनीयम्**–அநிர்வசநீயமாமென

**आबालवृद्धम्**–பாலர் முதல் விருத்தர் பரியந்தமான எல்லோருக்கும்

**अविवादपदम्**–விவாதத்திற்கு விஷயமின்றியதாய்

**प्रसिद्धम्**–பிரசித்தமாம்

**सन्ध्ये**-சொப்பனத்தில்

**सृष्टिः**–குதிரை முதலியவை சிருஷ்டிக்கப்பட்டனவாய்

**अस्ति इति**–வாஸ்தவமாகவுளது என்னும்

**पक्षनिराससिद्ध्यै**–பூருவபக்ஷத்தை நிராகரித்தற்பொருட்டு

**भगवानपि**–வியாசபகவானும்

**तथा च**–உலகில் எப்படிப்பிரசித்தமோ அப்படியே (சுத்திரஜதம் போலவே)

**स्वप्ने**-சொப்பனுவஸ்தையில்

**इदम्**–தோற்றுகின்றதற்கு அநிர்வசநீயத்தன்மையினை

**वक्ष्यति**–கூறுகின்றார்

## விசேஷவுரை

சுத்தி முதலியவற்றின்கண் ரஜதம் முதலியவை உலகின்கண் எல்லோராலும் அநுபவிக்கப்படுகின்றது. அஃது இரண்டு ஞான மன்றும் ஞானத்துவயத்தால் ரஜதார்த்திக்குப் பிரவிருத்தி பொருந்தாமை யின் ஞானத்திற்கு தனது விஷயத்தின் கண்ணேயே பிரவர்த்தகத் தன்மையுண்மையின் இவ்வாறு பிராந்தி சித்திக்கும் போது இனிக்கூறப் படும் பிரகாரத்தால் அது அநிர்வசநீய விஷயமாமென்பது கருத்து மேலும் சூத்திரக்காரரும் சொப்பனத்தில் தோற்றுகின்ற ரதம் முதலிய வற்றிற்கு சத்தியத்தன்மையை நிராகரித்தற் பொருட்டு அநிர்வசநீயத் தன்மையைக்கூறுவாராதலின் அநிர்வசநீயத்துவசித்தியாமென்னுமபிப் பிராயத்தால் கூறுகின்றார். சொப்பனத்திலென பதார்த்த பாதத்தில் என்பது எஞ்சி நிற்கின்றது "**स्वप्नेऽस्ति सृष्टिः**" (சொப்பனத்தில் சிருஷ்டிக்கப்பட்ட வஸ்து உளது) என்பதனால் "**सन्ध्ये सृष्टिराह हि**" எனனும் வியாச சூத்திரத்தை போதிக்கின்றார். சொப்பனத்தில் சிருஷ்டிக்கப்படுகிற ரதம் முதலியது வாஸ்தவமாம் எதனாலெனின் "ரதங்களையும் குதிரைகளையும்" என்னும் சுருதியானது சிருஷ்டியைக் கூறுகின்றது என்னும் சூத்திரத்தால் செய்யப்பட்ட பூருவபக்ஷத்தை நிராகரித்தற் பொருட்டு "மாயாமாத்திரம்" என்பது முதலிய சூத்திரத் தால் அது அநிர்வசநீயமாமெனக்கூறியுள்ளார் என்பது பொருள். **(336)**

## அவதாரிகை

அற்றேல் குரு வேதாந்தம் முதலியவற்றிற்காவது இதரப்பிரபஞ்சத் திற்காவது மித்தியாத்தன்மையுளதாயின் அதனால் அத்வைத நிச்சயம் எவ்வாறுண்டாகும் இதர விசித்திரக்காரியந்தான் எப்படி சம்பவிக்கும் எனின் அற்றன்று சொப்பனத்தில் அப்படிப்பட்ட பதார்த்தத்தினாலும் சத்தியமும் விசித்திரமுமான காரியம் காணப்படுதலின் இந்தப்பிரகாரம் சாக்கிரத்திலும் அது பிரசித்தமாமெனக்கூறுகின்றார்:—

## சுலோகம்

**मिथ्याशुचिः सवितृमण्डलमध्यवर्ती**

**प्रत्यक्षदृष्टिपथमापतितोऽचिरेण ।**

द्रष्टुः शरीरकरणप्रविभागरूपं
मृत्युं निवेदयति सत्यमिति प्रसिद्धम् ॥ ३३७ ॥

### பதவுரை

**सवितृमण्डलमध्यवर्त्ती**-சூரியமண்டலத்தின் மத்தியிலிருப்பதான

**मिथ्याशुषिः**-பொய்த்துளையானது

**प्रत्यक्षदृष्टिपथम्**-பிரத்தியக்ஷஞானத்தின் வழியை (விஷயத்துவத்தை)

**आपतितः**-அடைந்ததாய்

**द्रष्टुः**-பார்க்கும் புருடனுக்கு

**अचिरेण**-சீக்கிரமாக

**शरीरकरणप्रविभागरूपम्** - தூலசரீரத்தினின்றும் சூக்ஷ்ம சரீரத்தின் விபாக வடிவ

**सत्यम्**-வாஸ்தவ

**मृत्युम्**-மரணத்தை

**निवेदयति**-அறிவிக்கின்றது

**इति प्रसिद्धम्**-என்பது பிரசித்தமாம்

### விசேஷவுரை

சூரியனிடத்தில் சக்கரத்தின் துளைபோல் கற்பிக்கப்பட்ட துளையானது பிரத்தியக்ஷ ஞானத்திற்கு விஷயமாய் பார்ப்பவனுக்கு சீக்கிரமான மரணத்தைத் தெரிவிக்கின்றது. மரணமாவது தூல சரீரத்தினின்றும் கரண சமுதாயவடிவ லிங்கசரீரத்தின் உத்கிரமண வடிவமாம் (மேற்கிளம்புதல்) சுழி (துளை) மித்தையாயின் மரணமும் மித்தையேயாகுமென்னுஞ் சங்கைக்கு வியாவகாரிகமெனக் கூறுகின்றார் வாஸ்தவமென.

இதுவும் ஐதரேயகப்பிராமணத்தின் கண் " ஆதித்தியன் சித்திரமுள்ளவன் போல் காணப்படுவானாயின் நீண்டகாலம் ஜீவிக்கமாட்டானென்றறிக " என்னும் சுருதிப்பிரசித்தமும் அநுபவசித்தமுமாம் இதன்கண் விவாதமின்றாமென்பதுகருத்து.

வஸ்துவில் காரணத்தன்மையிலும் காரியத்தன்மையிலும் சருவ சம்மத அசத்விலக்ஷண சொரூப விசேஷமே அபேக்ஷிக்கப்பட்டது அத்துணையானேயே அனன்னியதாசித்தத்தன்மை முதலிய வடிவ காரணத்தன்மையின் சரீரம் பொருந்துதலின், அபாத்தியத்தன்மையும் அபேக்ஷிதமாமென்று சொல்லற்க அஃதின்றி அநுபபத்தியின்மை யானும் எமக்குப்பிரபஞ்சத்தின்கண் அஃது சம்மதமின்மையானும் என்க.

ஆன்மாவோ நிருவிகாரமாம் வாஸ்தவமாக ஒன்றற்கும் காரண மன்றும் "பூருவமும் (காரணமும்) அபரமும் (காரியமும்) அன்று" என்னுஞ்சுருதியால். பொய்யான காரணத்தன்மையோ பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையின்றி சித்திக்கிறதில்லையாதலின் காரணத்திற்கு ஓரிடத்தும் சத்துவம் நிச்சயிக்கப்படவில்லை யாதலின் சூரியனது சுழி முதலிய மித்தியா வஸ்துவிற்கும் மரணுதியையறிவிக்குந்தன்மை பொருந்துகின்றது.

அற்றேல் அந்தத்துளியின் ஞானமே அதனையறிவிப்பதாம் துளி யன்றுமெனின் அப்படியானல் யாண்டும் ஞானமே காரணமாம் அதுவும் சீவனுடையதாவது ஈசுவரனுடையதாவதாகுக வஸ்து அன்றென்று வரும். ஞானமாத்திரத்திற்கு அதிவியாப்தி வருதலால் காரணத்தன்மை பொருந்தாமையால் விஷயவிசிஷ்ட ஞானத்திற்கே காரணத்தன்மை யுண்மையினலும் விஷயமும் காரணமாகுமென்பது கருத்து. (337)

## அவதாரிகை

மற்றும் சூத்திரக்கர்த்தாவான வியாச பகவானும் கூறிய நியாயத்தையும் (அசத்விலக்ஷணத்துவம் சாதகத்துவப் பிரயோஜகம்) "காமியகருமஞ் செய்யுங்காலத்தில் ஸ்திரீயை சொப்பனத்தில் பார்ப்பானுயின் அக்கருமத்தில் மேன்மையையறிக" என்பது முதலிய சுருதியினையும் பார்க்கின்றவராய் ஸ்திரீ தெரிசனம் குஞ்சராரோகணம் சுராபானம் முதலியவற்றின் தெரிசனவடிவ சொப்னம் மித்தையாயிருந்த போதிலும் சுபாசுப பயன்களின் பிராப்தியைத் தெரிவிப்பதாகும் என "सूचकश्च हि श्रुतेः" (3–2–4) என்பது முதலிய சூத்திரத்தால் கூறு கின்றனராதலின் அவருக்கும் இது சம்மதமேயாமெனக்கூறுகின்றார்:—

## சுலோகம்

स्वप्नः शुभाशुभफलागमसूचकः स्यात्
मिथ्याऽपि सन्निति च सूत्रकृदाह यत्नात् ।
गुर्वादिसर्वमिदमद्वयबुद्धिहेतु-
र्मायानिबन्धनमिति प्रतिपादनाय ॥ ३३८ ॥

## பதவுரை

**स्वप्नः**-சொப்பனபதார்த்தமானது

**मिथ्या सन् अपि**-பொய்யாயிருந்தபோதிலும்

**शुभाशुभफलागमसूचकः स्यात्**-நனவில் நல்லதும் பொல்லாததுமான பயன்களினடைவைத் தெரிவிப்பதாகும்

**इति**-என்று

**सूत्रकृत्**-பிரம்மசூத்திரத்தைச் செய்தவியாசபகவான்

**यत्नात्**-பிரயத்தினத்தினல்

**आह**-கூறினுர்

ஈண்டு பிரயத்தினமென்பது கூறிய நியாயம் முதலானவற்றின் அநுசந்தானமாம். அற்றேல் பிரம்மவிசாரத்தின் மத்தியில் சூத்திரக்காரர் எதற்காக சொப்பன பயனை நிருபணஞ்செய்கின்ருர் என்னுஞ் சங்கைக்கு அவரது அபிப்பிராயத்தைக்கூறுகின்ருர்.

**मायानिबन्धनम्**-மாயையாற்கற்பிதமாயினும்

**गुर्वादि**-குரு சாஸ்திரம் முதலிய

**इदं सर्वम्**-இவ்வனைத்தும்

**अद्वयबुद्धिहेतुः इति**-அகண்ட பிரம்மஞானத்திற்குக்காரணமாம் என்று

**प्रतिपादनाय**-பிரதிபாதித்தற் பொருட்டு (கூறினுர்) (338)

## அவதாரிகை

அற்றேல் சொப்பனம் முதலிய விஷயத்திற்கு மித்தியாத்துவம் சம்மதமின்ருமெனின் அற்றன்று சுத்தி முதலியவற்றில் வெள்ளி

முதலியவற்றை விரும்பும் புருடனுக்கு பிரவிருத்தி முதலியவற்றின் பலத்தால் பிராந்தியுளதென்று கூறப்பட்டது. ஆண்டு பிராந்தியென்பது ரஜதாதி வடிவ அவித்தையின் விருத்தியாம் அதனுலவச்சின்னமான சாக்ஷிசைதன்னியம் பிராந்திப்பிரதீதியாம். அஃது விஷயத்தோடு கூடியதா விஷயமின்றியதா முதற்பக்ஷத்தில் அதன் விஷயம் சத்தா அல்லது அசத்தா அல்லது உபயவடிவமா முதற்பக்ஷத்திலும் (சத்தென்னும் பக்ஷத்திலும்) அவ்விடத்திலேயே இருக்கின்றதா அல்லது வேறிடத்திலா வேறிடத்திலுளது என்பது சரியன்று வேறிடத்தி லிருக்கின்ற வஸ்துவிற்கு ஈண்டு அபரோக்ஷப்பிரதீதி சம்பவியாமையால், அதன் ஏதுவான இந்திரிய சந்நிகர்ஷ வடிவசம்யோகம் முதலியவை சம்பவியாமையின் என்க அவ்விடத்திலேயே (எதிரிலேயே)யுளது என்னும் முதற்பக்ஷமும் சம்பவியாது இது ரஜதமன்று என்பது முதலிய வடிவத்தால் பாதம் பொருந்தாமையின் அசத்துமன்று அசத்திற்கு அபரோக்ஷப்பிரதீதி பொருந்தாமையின் மூன்ருவது பக்ஷமும் சரியன்ரும் விரோதமாதலின் ஒன்றற்கு சதசதான்மகத்தன்மைச் சம்பவியாமையின் என்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்ருர்:—

## சுலோகம்

भ्रान्तिप्रतीतिविषयो न च सन्न चास-
न्नाकाशतत्कुसुमयोर्न हि सास्ति नापि ।
तस्या भवेत्सदसदात्मकगोचरत्वं
न ह्यस्ति तत्किमपि यत्सदसत्स्वरूपम् ॥ ३२९ ॥

## பதவுரை

சத்து அசத்துக்களுள் ஒவ்வொன்றை விஷயஞ்செய்யின் அது பிராந்தியே ஆகாது எனக்கூறுகின்ருர்.

**आकाशतत्कुसुमयोः**—ஆகாசத்தின் கண்ணும் அதன் புஷ்பத்தின் கண்ணும்

**सा**—பிராந்திப்பிரதீதி

**न हि अस्ति**—யாதொரு காரணத்தால் இன்ரே அதனுல்

**भ्रान्तिप्रतीति विषयः**—பிராந்திஞானத்திற்கு விஷயம்

**न च सन्**—சத்துமன்றும்

**न च असन्**—அசத்துமன்றும்

பரரீதியால் (அன்னியமதப்படி) ஆகாசமெனப்பட்டது, சத்து வடிவ ஆகாசத்தின்கண் ஆகாசமென்னும் ஞானமும் அத்தியந்த அசத்துவடிவ அதன் புஷ்பத்தின்கண் அசத்து என்னும் ஞானமும் பிராந்தியாகின்றதில்லையாதலின் என்று பொருள். மூன்றுவது பக்ஷத்தின் கண்ணும் ஓர் ஞானத்திற்கு சதசத்விஷயகத்தன்மை யின்மையின் பிராந்தித்தன்மையின் அநுபபத்தி சமானமேயாமெனக் கருதிக் கூறுகின்றூர்.

**तस्याः**—பிராந்திப்பிரதீதிக்கு

**सदसदात्मकगोचरत्वम् अपि**— சத்தும் அசத்துமென்னும் உபயான்மக விஷயகத்தன்மையும்

**न भवेत्**—சம்பவியாது

பிராந்தி ஞானத்திற்கு சதசதான்மக விஷயகத்தன்மையின பாவத்தில் விஷயத்தின் அசம்பவத்தையும் ஏதுவாகக் கூறுகின்றூர்.

**यत्**—யாதொரு வஸ்துவானது

**सदसत्स्वरूपम्**—சத்து அசத்து என்னுமுபய வடிவமோ

**तत्**—அப்படிப்பட்ட வஸ்து

**किमपि**—யாதொன்றும்

**न हि अस्ति**—இன்ருமாதலின்

விருத்த பதார்த்தத்தின் சமுச்சயம் ஓரிடத்தும் காணப்படாமையின் என்பது கருத்து. (339)

### *அவதாரிகை*

இப்போது பிராந்திஞானம் விஷயமின்றியது என்னும் பக்ஷத்தை நிஷேதிக்கின்றூர்:—

### *சுலோகம்*

**आलम्बनं च विरहय्य न विभ्रमस्य**
**ज्ञानात्मनो भवति जन्म कदाचिदत्र ।**

सिद्धं ततः सदसती व्यतिरिच्य किंचि-
दालम्बनं भ्रमधियः सकलप्रवादे ॥ ३४० ॥

## பதவுரை

**आलम्बनं च**-விஷயத்தை

**विरहय्य**-விட்டு

**ज्ञानात्मनः**-ஞானவடிவ

**विभ्रमस्य**-பிராந்தியின்

**जन्म**-உற்பத்தி

**अत्र**-இவ்வுலகின்கண்

**कदाचित्**-ஓர்போதும்

**न भवति**-உண்டாகிறதில்லை

பிராந்திக்கு நிர்விஷயத்தன்மையின் அபாவத்தில் ஏதுவாக ஞான வடிவமென விசேஷங்கூறப்பட்டது. அதாவது ஞானத்திற்கு சவிஷயத்தன்மை நியமமாதலின் பிராந்திஞானத்திற்கும் நிர்விஷயத் தன்மை பொருந்தாது என்பது கருத்து அதனால் பரிசேஷத்தால் பிராந்தியின் விஷயம் அநிர்வசநீயமேயென எல்லோராலும் அங்கீகரிக்கத் தக்கது என முடிக்கின்றவராய்க் கூறுகின்றார்.

**ततः**-அதனால்

**सदसती**-சத்தையும் அசத்தையும்

**व्यतिरिच्य**-பரித்தியாகித்து

**किंचित्**-சதசத்விலக்ஷண அநிர்வசநீய விஷயம்

**भ्रमधियः**-பிராந்தி ஞானத்திற்கு

**आलम्बनम्**-பற்றுக்கோடாக

**सकलप्रवादे**-சருவமதத்தின்கண்ணும்

**सिद्धम्**-சித்தித்தது

## விசேஷவுரை

விஷயத்தின் அநிர்வசநீயத்தன்மையால் விஷயி (ஞான) க்கும் அநிர்வசநீயத்தன்மை அர்த்தத்தால் சித்தித்தது அன்றேல் அதன் விஷயகத்தன்மை பொருந்தாமற்போம் என்பது கருத்து

சத்து அசத்துக்களின் சமுச்சயம் விருத்தமாவது போன்று அவற்றின் விலக்ஷணங்களின் சமுச்சயவடிவ அநிர்வசநீயத்தன்மையும் விருத்தமாம் என்று சொல்லற்க அநிர்வசநீயத்தன்மைக்கும் அநிர்வசநீயத் தன்மையுண்மையின் விரோதம் அலங்காரமாமாதலின் என்பது கருத்து.

ஈண்டிஃது அபிப்பிராயம் சத்து அசத்துக்களின் சமுச்சயம் உலகில் ஓரிடத்தும் காணப்படவில்லை ஆதலின் விரோதமாம் அவற்றின் விலக்ஷணங்களின் சமுச்சயமோ சுத்திரஜதம் முதலியவற்றில் காணப்படுகின்றது ஆதலின விரோதமின்றும் இப்பொருள் வேதாந்தக் கிரந்தங்களில பிரசித்தமாம் ஆதலின் இதனை விடுத்து தனது புத்தியின் வலிமையைத் தெரிவித்தற்காக மதுசூதன சரஸ்வதிசுவாமிகள் விரோதம் அலங்காரமாமென்று வேறு சமாதானங்கூறினர். (340)

## வேதாந்தங்கட்கு காரியபரத்தன்மையை நிராகரித்தல்.

### அவதாரிகை

122-வது சுலோகத்தில் "வாக்கியத்தாலுண்டான ஞானம் இந்திரியஜன்னியஞானம் போன்று அர்த்தத்தின் அபிவியத்தியைச் செய்வதில் சாமர்த்தியமுடையதன்றும்" என்பது முதலியவற்றால் வேதாந்த வாக்கியத்திற்குப்பிரமமத்தின்கண் அபரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணுந்தன்மை பொருந்தாமையானும் அபரோக்ஷப்பிரம்மத்தின் கண் பரோக்ஷஞானத்திற்கு பிரமைத்தன்மைப்பொருந்தாமையானும் அதன்கண் அதற்குப்பிரமாணத்தன்மையின்றும் என்று யாதொன்று கூறப்பட்டதோ அதனைத்தூஷிக்கின்றார்:—

### சுலோகம்

ब्रह्मात्मवस्तु निरवद्यचिदेकरूपं
वह्न्युष्णतावदपरोक्षवपुः स्वभावात् ।
निर्दोषवेदशिरसो वचनादतोऽस्मिन्
ब्रह्मात्मवस्तुनि भवेदपरोक्षबुद्धिः ॥ ३४१ ॥

## பதவுரை

**ब्रह्मात्मवस्तु**-பிரம்மாபின்ன ஆன்ம வஸ்துவானது

**निरवद्यचिदेकरूपम्**-சுத்தசைதன்னிய வடிவமாம் அதனுல்

**वन्ह्युष्णतावत्** - நெருப்பிற்குச்சுடுந்தன்மை இயற்கையாவது போன்று

**स्वभावात्**-இயற்கையாகவே

**अपरोक्षवपुः**-அபரோக்ஷவடிவமாம்

அதனுற் சித்தித்ததென்னையெனிற் கூறுகின்ருர்

**अतः**-அதனுல்

**अस्मिन् ब्रह्मात्मवस्तुनि**-இந்தப்பிரம்மான்ம வஸ்துவின்கண்

**निर्दोषवेदशिरसः**-தோஷமின்றியவே தாந்தத்தின்

**वचनात्**-வாக்கியத்தால்

**अपरोक्षबुद्धिः**-அபரோக்ஷஞானம்

**भवेत्**-உண்டாகும்

## விசேஷவுரை

அவத்திய =அதன் அபரோக்ஷத்தன்மையில் பிரதிபந்தகமான வாஸ்தவமலம், அஃதின்றியது நிரவத்தியமாமென்பது பொருள்

சித்துரூபமாயினும் திரவியாம்சத்தோடு கூடியதாயின் ஓர்போது பரோக்ஷமாயினுமாகும் என்னும் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு, சுத்தமென்னும் விசேஷணமாம். சின்மாத்திரவடிவமாம் என்பது பொருள் எப்படி அக்கினி சுபாவமாகவே உஷ்ணவடிவமோ அப்படி சுபாவமாகவே அபரோக்ஷவடிவமாம் என்பது பொருள்.

தோஷமின்றிய என்னும் விசேஷணத்தால் இஃது தெரிசிப்பிக்கப் பட்டது வேதாந்தங்களினுல் பிராந்தி சம்பவியாமையால் அவற்ருலுண்டாகும் ஞானத்திற்கு பிராந்தித்தன்மை இஷ்டமாமென்று கருதத் தக்கதன்று ஏன அபௌருஷேய வேதாந்தத்தின்கண் பிராந்தியாதிக்குக் காரணத்தன்மையின்மையின் நிர்த்தோஷத்தன்மையும் சருவசம்மத மேயாம்.

யாதொரு காரணத்தால் நிரவத்திய சிதேகரூப பிரம்மான்மவஸ்து சுபாவமாகவே அபரோக்ஷவடிவமாமோ அக்காரணத்தால் பிரம்மான்ம வஸ்துவின்கண் வேதாந்த வசனத்தால் அபரோக்ஷஞானமுண்டாகு மெனக்கூட்டுக.

ஞானத்தின் அபரோக்ஷத்தன்மை அபரோக்ஷவிஷயத்தன்மை யாலேயாம் இந்திரிய ஜன்னியத்தன்மையாலன்றும் சுகாதியின் ஞானம் நித்தியசாக்ஷிரூபமாய் அபரோக்ஷமாயிருப்பினும் அதற்கு இந்திரிய ஜன்னியத்தன்மையின்மையால் அபரோக்ஷவிஷயத்தன்மையே ஆண்டு அதற்குப் பிரயோஜகமாதலின் பிரத்தியகபின்ன பிரம்மமும் அபரோக்ஷ சின்மாத்திரத்தன்மையாலும் " யத் சாக்ஷாத் அபரோக்ஷம் " என்னும் சுருதியினுலும் நித்தியாபரோக்ஷமேயாம் ஆதலின் ஆண்டு வேதாந்தத் தால் உண்டான ஞானம் சத்த ஜன்னியமாயினும் விஷயத்தின் மகிமையால் அபரோக்ஷமாகவேயுண்டாம் ஆதலின் கூறிய தூஷண மின்று மென்பது கருத்து. (341)

## *அவதாரிகை*

126-வது சுலோகத்தில் "नैतत्प्रमाणमपनेतृसतो न तावत्" என்பது முதலியவற்றுல் சுவப்பிரகாசப்பிரம்மத்தின்கண் பாவவடிவமாய் பிரமாண ஜன்னியமாய் ஸ்புரணம் எப்படிச் சம்பவிப்பதின்றே அப்படிச் சத்து முதலிய வடிவினதாகிய அவித்தையின் நிவிருத்தியும் சம்பவிக் கின்றதில்லையாதலின் அதன்கண் வேதாந்தப்பிராமாண்யம் வீணேயாம் என்று யாதொன்று கூறப்பட்டதோ அதுவும் இவ்வாருகும்போது அநவ காசமாமென அதனைத்தூஷிக்கின்றுர்:—

## *சுலோகம்*

सा चोपनेयरहिते विषयिण्यनन्ते-
ऽनिर्वाच्यमग्रहणमात्रमपाकरोति ।
स्वोत्पत्तिलब्धनिजवस्तुबलेन तत्र
तापत्रयं समुपशाम्यति निर्निमित्तम् ॥ ३४२ ॥

## *பதவுரை*

**सा च**—வாக்கிய ஜன்னிய அபரோக்ஷஞானம்

**स्वोत्पत्तिलब्धनिजवस्तुबलेन**-தனது உற்பத்தியினால் அபிவியக்தமான சுவரூபசைதன்னியத்தின் பலத்தால்

**उपनेयरहिते**-பிரமாண ஜன்னியஸ்புரணமின்றியதும்

**विषयिणि**-சைதன்னியமும்

**अनन्ते**-அபரிச்சின்னமுமான பிரம்மத்தின்கண்

**अनिर्वाच्यम्**-அநிர்வசனீயமும்

**अग्रहणमात्रम्**-ஞானவிரோதியுமான அஞ்ஞானமாத்திரத்தினை

**अपाकरोति**-நிவர்த்திசெய்கின்றது

**तत्र**-அவித்தை நிவர்த்தியாகும் போது

**तापत्रयम्**-ஆத்தியான்மிகம் முதலிய மூவிததுக்கமும்

**निर्निमित्तम्**-நிமித்தமின்றியதாய்

**समुपशाम्यति**-அத்தியந்தம் சாந்தியாய் விடுகின்றது

## *விசேஷவுரை*

பிரம்மத்தின்கண் பிரமாண ஜன்னியஸ்புரணமின்றுமென்பதில் சைதன்னியமும் அபரிச்சின்னமும் ஏதுக்களாம் அஞ்ஞானமும் அதன் காரியப்பிரபஞ்சமும் முற்கூறிய நியாயத்தால் அநிர்வசநீயமாதலினாலும் அதற்கு உலகின்கண் ஞானத்தால் நிவர்த்தி காணப்படுதலினாலும் வேதாந்த ஜன்னியபிரம்மசாக்ஷாற்காரத்தால் நிவிருத்தி பொருந்துமென்பது கருத்து அஞ்ஞானமாத்திரம் ஞானநிவர்த்தியமாம் பிரபஞ்சமோ அதன் நாசத்தாலேயே நசிக்கின்றது என்னும் மதத்தால் மாத்திரமெனப்பட்டது. அற்றேல் வேதாந்த ஜன்னிய ஜடவிருத்திக்கு அஞ்ஞானத்தை நிவர்த்திக்குந் தன்மையெப்படிப் பொருந்தும் என்னும் சங்கையை நிவர்த்தித்தற் பொருட்டு தனது உற்பத்தியினாலபிவியக்தமான சுவரூபசைதன்னியத்தின் பலத்தால் எனப்பட்டது.

## *அவதாரிகை*

அற்றேல் அவித்தையின் நிவிருத்தி புருஷனால் விரும்பப்படுகின்றதில்லை சுழுத்தி முதலியவற்றில் அநர்த்தமின்றியிருக்கின்ற அவித்தைக்கு நேரேயாவது பரம்பரையாகவாவது அநர்த்தத்தன்மையின்மையின்

என்றுசங்கித்து சுழுத்தி முதலியவற்றில் அதனால் அநர்த்தமில்லா விடினும் வேறு சமயத்தில் அது சம்பவித்தலால் அதன் நிவிருத்தியும் ஆத்தியந்திக அநர்த்த நிவிருத்தியை விரும்பும் புருஷரால் விரும்பத் தக்கதேயாம் என்க. அது நிவிருத்தியாகும்போது ஆன்மாவின்கண் ஆத்தியான்மிகம் முதலிய மூவித துக்கத்திற்கு புருஷவியாபார வடிவ நிமித்தமாவது அல்லது வேறு நிமித்தமாவதின்றியே உபசாந்தியுண்டா கின்றது. ஆதலின் ஆன்மாவின்கண் வேதாந்தத்தின் வியாபாரம் பயனுடையதேயாம் என்பது பொருள். (342)

உலகின் கண் (விருத்தவியவகாரத்தில்) சத்தங்களுக்கு சத்தியைக் கிரகித்தலாலும் கிரகணமும் பிரவர்த்தக வாக்கியத்தின் அதீதனமாத லாலும் பிரவர்த்தக காரியான்விதத்தின் கண்ணேயே கோ முதலிய பதத்தின் சத்திஞானமாம் ஆதலின் வேதாந்தமும் காரியபரமேயாம் சுவத சித்த பிரம்மபரமன்றும் என்று 130-வது சுலோகந்தொடங்கி யாதொன்று கூறப்பட்டதோ அதனைத்தூஷித்தற்கு அநுவதிக்கின்றார்:—

*சுலோகம்*

वाक्यात्प्रवर्त्तकनिवर्त्तकरूपभाजः
पुंसः प्रवृत्तिमुपलभ्य धियोऽनुमानात् ।
कार्यान्विते शिशुरवैति पदस्य शक्ति-
मित्युच्यते यदि तु तत्र वयं वदामः ॥ ३४३ ॥

*பதவுரை*

**प्रवर्तकनिवर्तकरूपभाजः**—பிரவர்த்தக நிவர்த்தகவடிவ காரியத்தினை விஷயஞ் செய்கின்ற

**वाक्यात्**—பசுவைக்கொண்டுவா சர்ப்பத்தை நிவர்த்தி செய்வாய் என்பது முதலிய பிரயோஜகவிருத்தனது வாக்கியத்தால்

**पुंसः**—பிரயோஜ்ஜிய விருத்தனது

**प्रवृत्तिम्**—பிரவிருத்தியையும் நிவிருத்தியையும்

**उपलभ्य**—அறிந்து பின்பு

**धियः**—காரிய ஞானத்தின்

**अनुमानात्**-அநுமானத்தால்

**कार्यान्विते तु**-காரியான்வித வியத்தியின் கண்ணேயே

**पदस्य**-கோ முதலியபதத்தின்

**शक्तिम्**-சத்தியினை

**शिशुः**-வியுத்பித்ஸுவாகிய பாலகன்

**अवैति**-அறிகின்ருன்

**इति यदि उच्यते**-என்று சொல்லப்படுமாயின்

சித்தாந்தி அதன் தூஷணத்தைப்பிரதிஞ்ஞை செய்கின்ருர்

**तत्र**-அதன்கண்

**वयम्**-நாங்கள்

**वदामः**-தூஷணத்தைக்கூறுகின்ரேம்

வியுத்பித்ஸு=சத்தியையறிய விரும்புபவன் (343)

### அவதாரிகை

காரியான்விதத்தில் சத்தியையங்கீகரிக்கும் வாதியினுல் யோக்கிய இதரத்தன்மையும் அதன் விசேஷணமாக அங்கீகரிக்கத்தக்கதா அன்ரு அன்றெனின் அன்வயமே சம்பவிக்கிறதில்லை சம்பவியாதபோது காரியான்வயம் எப்படிச் சித்திக்கும் என்று கருதி அங்கீகரிக்கத்தக்கது என்னும் முதற்பக்ஷத்தில் அவசியம் அபேக்ஷிக்கப்பட்ட யோக்கியே தரான்விதத்தின் கண்ணேயே சத்தத்திற்கு விருத்தரது பிரயோகத்தில் சத்தி கிரகிக்கத்தக்கதாம் காரியத்தன்மைவடிவ விசேஷணத்தாற் பயனென்றுமில்லை யென்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்ருர்:—

### சுலோகம்

**योग्येतरान्वितपदार्थनिवेदने तु**
**शब्दस्य शक्तिरिह वृद्धजनप्रयोगे ।**
**विज्ञायते न खलु कार्यसमन्वितेऽर्थे**
**कार्याभिधायिषु पदेष्वपि तत्प्रसङ्गात् ॥ ३४४ ॥**

## பதவுரை

**योग्येतरान्वित**–அன்வய யோக்கியமாகியயாதொரு இதரபதார்த்த முண்டோ அதனோடு கூடின

**पदार्थनिवेदने तु**–பதார்த்தத்தை யறிவிப்பதன் கண்ணேயே

**शब्दस्य शक्तिः**–சத்தத்தின் சத்தியானது

**इह**–உலகின்கண்

**वृद्धजनप्रयोगे**–விருத்த புருஷரது வியவகாரத்தினுல்

**विज्ञायते**–அறியப்படுகின்றது

**कार्यसमन्वितेऽर्थे**–காரிய விசிஷ்ட அர்த்தத்தின்கண்

**न खलु**–சத்தத்தின் சத்தி அறியப்படுகின்றதின்றும்

அற்றேல், வியபிசாரமின்மையால் காரியான்வயியே சத்தத்தின் பொருளாம் என்னுஞ் சங்கைக்கு ஏது அசித்தமாமென்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்றார்.

**कार्याभिधायिषु**–காரிய வாசகங்களான

**पदेषु अपि**–லிங் லோட் முதலிய பதங்களிலும்

**तत्प्रसङ्गात्**–காரியான்விதத்தின்கண் சத்திப்பிராப்தியாதலின்

## விசேஷவுரை

பெயர்ப்பதங்கட்கு காரியான்விதத்தில் பொருந்துமாயினும் வினைப்பதங்கட்கு வினையோடு கூடியதாக வேறுவினையின்மையின் காரியான்விதத்தில் சத்தி பொருந்தாதென்பது கருத்து.

யோக்கியதையாவது பசு முதலிய சித்த வஸ்துவிற்குக் கொணர்தல் முதலிய காரியத்தோடும் கொணர்தல் முதலிய காரியத்திற்கு பசு முதலிய சித்தவஸ்துவோடுமாம் து. நிச்சயார்த்தத்தில். (344)

## அவதாரிகை

அற்றேல் மேற்கூறிய ஆபத்தியானது எமக்கு இஷ்டப்பிரபஞ்சனமாம் என்னுஞ்சங்கைக்கு ஸப்பிரசஞ்சக (இஷ்டப்பிராப்தியைச்செய்வதான ப்பிரசங்கத்தை) யநுவாதஞ்செய்கின்றவராய் இதற்கு அநிஷ்ட பரியவசானத்தைக் கூறுகின்றார்:—

சுலோகம்

कार्यान्वितार्थविषया यदि शब्दशक्तिः
कार्यार्थवाचिषु लिङादिषु कार्यमन्यत् ।
वक्तव्यमापतति तत्र च तत्र चान्यद्
वक्तव्यमेव भवतीत्यनवस्थितिः स्यात् ॥ ३४५ ॥

பதவுரை

**शब्दशक्तिः**—பதங்களின் சத்தியானது

**यदि कार्यान्वितार्थविषया**—கொண்டு வருதல் முதலிய காரிய விசிஷ்டபசு முதலிய அர்த்தத்தை விஷயஞ்செய்யுமாயின்

**कार्यार्थवाचिषु**—ஆனயனம் முதலிய காரியவாசகங்களான

**लिङादिषु**—லிங்லோட் முதலிய வியங்கோள் விகுதிகளில்

**अन्यत्कार्यम्**—வேறே யாதேனும் ஓர் காரியம்

**वक्तव्यम् आपतति**—சொல்லவேண்டிவரும்

வியங்கோள் விகுதிகளிலும் வேறு காரியமிருக்கட்டுமேயெனின் அதற்குக் கூறுகின்றார்.

**तत्र च तत्र च**—அதன தன் கண்ணும்

**अन्यत्**—வேறே காரியம்

**वक्तव्यमेव**—சொல்லத்தக்கதாகவே

**भवति**—ஆகின்றது

**इति**—இந்தப்பிரகாரம்

**अनवस्थितिः**—அனவஸ்தாதோஷம்

**स्यात्**—உண்டாகும்

விசேஷவுரை

எந்தக்காரியத்தோடுகூடிய காரியத்தின்கண் லிங் முதலிய பதத்திற்கு சத்தியுளதோ அந்தக் காரியத்திற்கும் வேறு லிங் முதலியவற்றின் வாச்சியத்தன்மையையுடன்படின் ஆண்டும் வேறு காரியத்தோடுகூடிய

தன் கண்ணேயே அதற்கு சக்தி சொல்லத்தக்கதாம். ஆதலின் லிங் முதலிய பதத்திற்தும் அதன் அபிதேய காரியத்திற்கும் அநந்தத் தன்மை பிராப்தியாம், ஓர் வாக்கியத்தின்கண் அநேக லிங் முதலியவையும் சம்பவிக்கின்றதில்லை பிரகிருத (தொடர்புற்ற) லிங் முதலிய வற்றாலேயே வேறு காரியத்தையும் பிரதிபாதிக்கின் அந்தக் காரியத்தைப் பிரதிபாதிக்கும் பொருட்டு வேறு காரியம் சொல்லத்தக்கதாகும். இவ்வாறு அவற்றிற்கு அநந்தத் தன்மையுண்டாம் ஒரு பதத்திற்கு அநேகார்த்தத் தன்மை பொருந்தாமையானுமென்க.

சத்தத்தின் அவாச்சிய காரியத்தோடுகூடிய காரியத்தின்கண் லிங் முதலியவற்றிற்கு சத்தியாம் ஆதலின் கூறிபதோஷமின்றும் என்று சொல்லற்க அவாச்சிய காரியத்திற்கு இவ்வளவென்று அளவின்மையின் அளவில்லாத காரியான்விதத்தைக் கூறவேண்டிவரும்.

பகுதிப்பொருள்வடிவ காரியத்தோடு கூடியதுதான் லிங் முதலிய வற்றின் வாச்சிய காரியமாம். ஆதலின் யாதொரு தோஷமுமின்றும் என்று சொல்லற்க அவரது மதத்தில் பகுதிப்பொருள் வடிவ காரியத் திற்கு விகுதிப்பொருள்வடிவ காரியஞானத்தின் அதீனமாயறியப்படுந் தன்மையுண்மையால் அன்னியோன்னியாசிரயம் வருதலின் ஆதலால் லிங் முதலியவற்றிற்கு காரியான்விதத்தின்கண் சத்தியைச் சொல்லுதல் பொருத்தமின்றியதாமென்பது கருத்து. (345)

## *அவதாரிகை*

இவ்வாறு சருவபதங்களுக்கும் காரியான்விதத்தின்கண் சத்தியா மென்னும் பக்ஷம் தூஷிக்கப்பட்டதாயின் ஆகுக லிங் முதலியவற்றின் வேறான பதங்கட்குக் காரியான்விதத்தின்கண் சத்தியையங்கீகரிக்கின் தோஷமின்றுமென்னுஞ் சங்கைக்கு அப்படியானால் லிங் முதலிய காரிய பதத்திற்கு அநன்வித காரியத்தின்கண் சத்தியையங்கீகரிக்கின்றனையா அல்லது சித்த வஸ்துவோடு அன்விதத்தின்கண் சத்தியையங்கீகரிக் கின்றனையா, முதற்பக்ஷத்தில் அன்வித காரியத்தின் பிரதீதி ஆகஸ்மிக மாகும் (நிஷ்காரணமாகும்) என்று கருதி இரண்டாவது பக்ஷத்தை யநுவாதஞ்செய்து கண்டிக்கின்றார்:—

***சங். 75***

### சுலோகம்

सिद्धान्वितं यदि लिङादिपदानि कार्यं
ब्रूयुर्विनश्यति तदा नियमस्त्वदीयः ।
यो वर्णितः सकलमेव पदं स्वमर्थं
कार्यान्वितं वदति नान्यदिति स्वशास्त्रे ॥ ३४६ ॥

### பதவுரை

**लिङादिपदानि**–லிங் முதலிய பதங்கள்

**सिद्धान्वितं कार्यम्**–சித்தவஸ்துவோடு கூடியகாரியத்தினை

**यदि ब्रूयुः**–பிரதிபாதிக்குமாயின்

**तदा**–அப்போது

**त्वदीयः**–உனது

**नियमः**–நியமம்

**विनश्यति**–நாசத்தையடையும் (அந்த நியமத்தினையே காண்பிக்கின்றார்)

**सकलमेव पदम्**–எல்லாப்பதமுமே

**कार्यान्वितम्**–காரியத்தோடு கூடிய

**स्वम् अर्थम्**-தனது பொருளை

**वदति**–கூறுகின்றது

**अन्यत्**-சித்த வஸ்துவோடு கூடியபொருளை

**न इति**–கூறுகின்றதில்லையென

**स्वशास्त्रे**–தனது சாஸ்திரத்தின்கண்

**यः**–யாதொரு நியமமானது

**वर्णितः**–வருணிக்கப்பட்டுளதோ (அது நசிக்கும் எனமேலொட்டுக)

### விசேஷவுரை

பிராபாகரரோ தமது சாஸ்திரத்தின்கண் "சருவபதமுமே காரியான்வித சுவார்த்தத்தையே கூறுகின்றது சித்தான்விதத்தையன்றும்" என

வருணிக்கின்றனர். அஃது லிங் முதலியவற்றிற்கு சித்தான்விதத்தில் சத்தியையங்கீகரிக்கின் பாதிக்கப்பட்டதாகும். மேலும் இந்தப்பிரகாரம் அன்னியபதங்களுக்கும் சித்தான்விதத்தில் சத்தியைக்கொள்ளவேண்டி வரும் ஆதலின் யோக்கியேதரான்விதத்தில் பதத்தின் சத்தியாம் என்று எம்மால் கூறப்பட்டதுவே பொருத்தமாம் அன்றேல் சத்தத்தின் சத்திக்குப் பிரயோஜகம் இருவிதம் கொள்ளவேண்டிவரும், பெயர்ப்பதங்கட்கு காரியான்விதத்திலும் வினைப்பதங்கட்கு சித்தான்விதத்திலுமென.

## *அவதாரிகை*

யோக்கியமாகிய இதரத்தோடு கூடியதன்கண் பதத்தின் சத்தியாம் என்னுமிப்பக்ஷமே நலமுடையதாம். யோக்கியமாகிய இதர காரியத்தோடு கூடியதன்கண் சத்தியாமென்னுமிப்பக்ஷம் நலமுடையதன்றும் ஆண்டு காரியத்துவ விசேஷணம் கௌரவம் முதலிய தூஷணத்தால் தூஷிக்கப்பட்டமையின் என்று முன்பு சொல்லப்பட்டது. இப்போது காரியபதத்திற்கு உபயோக மின்மையினாலும் யோக்கியேதரான் விதத்தின் கண்ணேயே சத்தியா மெனக்கூறுகின்றார்:—

## *சுலோகம்*

योग्येतरान्वितनिमित्तकशब्दशक्ति-
व्युत्पत्तिरेव यदि संभवभागिनी स्यात् ।
आश्रीयते किमिति कार्यसमन्वितेऽर्थे
शब्दस्य शक्तिरसदर्थविशेषणेन ॥ ३४७ ॥

## *பதவுரை*

**योग्येतरान्वित निमित्तकशब्द शक्तिव्युत्पत्तिः एव** — யோக்கிய இதரத்தோடு அன்விதத்தன்மையினையேபிரயோஜகமாகக்கொண்ட யாதொரு சத்த சத்தியுண்டோ அதன் வியுற்பத்தியே

**संभवभागिनी**-பொருத்தமுடையதாக அதாவது அபாதிதமாக

**यदि स्यात्**-ஆகுமாயின்

**असदर्थविशेषणेन**-பிரயோஜனமின்றிய விசேஷணத்தைக் கொண்டுள்ள வாதியினுல்

**कार्यसमन्विते**-காரிய விசிஷ்ட

**अर्थे**-அருத்தத்தின்கண்

**शब्दस्य शक्तिः**-பதத்தின் சத்தி

**किमिति**-ஏன்

**आश्रीयते**-அங்கீகரிக்கப்படுகின்றது ?

## *விசேஷவுரை*

யோக்கியேதரான்விதமென்பது பாவபரமான நிர்த்தேசமாம் யோக்கியேதரான்விதத்துவம் என்று பொருள். அது நிமித்தம் பிரயோஜகம் அதாவது நிருபகம் எந்த சத்த சத்திக்கோ அதன் வியுற்பத்தியென்று பொருள் யோக்கியேதரான்விதத்தின் கண் சத்திஞானமாம் என்பது பொருள்.

அபாதித என்பதனுல் காரியான்விதத்திற்கு வியர்த்தத்தன்மை தோற்றுவிக்கப்பட்டது அதனையே கூறுகின்றுர். பிரயோஜனமின்றிய என்பதாதியினுல் ‘ சம்பவத்திலும் வியபிசாரத்திலும் விசேஷணம் பொருளுடையதாம் ’ என்னும் நியாயத்தால் எல்லா விசேஷணத்திற்கும் வியாவிருத்திப் பிரயோஜனமுண்மையின் அஃதின்றிய விசேஷணம் பொருத்தமன்று என்பது கருத்து. (347)

## *அவதாரிகை*

யாண்டும் விசேஷணத்தைக்கொள்ளுதலில் நிமித்தத்தைத் தெரிசிப்பிக்கின்றவராய் காரியான்வயித்துவத்திற்கு பயனின்றிய விசேஷணத்துவத்தை யுபபாதனஞ்செய்கின்றுர்.

## *சுலோகம்*

**यत्राविशेषितनिमित्तकताविरोधे**
**किंचिन्निवारकमुदीक्षितमस्तु तत्र ।**
**किंचिद्विशेषणविशिष्टमभीष्टशक्तेः**
**वस्तुप्रयोजकमिदं पुनरत्र नास्ति ॥ ३४८ ॥**

## பதவுரை

**यत्र**–எந்த வாக்கியாதிகளில்

**अविशेषितनिमित्त- कताविरोधे** விசேஷிக்கப்படாத நிமித்தத்தை யுடையந்தாந் தன்மையால் அதிவியாப்தி முதலிய பாத முண்டாகுங்கால்

**किंचिन्निवारकम्**–அதனை நிவர்த்தி செய்வதாக ஏதேனும் விசேஷணம்

**उदीक्षितम्**–பார்க்கப்பட்டதாமோ

**तत्र**–அந்த வாக்கியாதிகளில்

**किंचिद्विशेषण विशिष्टम्**–ஓர் விசேஷண விசிஷ்டமாக

**वस्तु अस्तु** வஸ்து நிமித்தமாகுக

அதனுற் சித்தித்ததென்னையெனிற் ஈண்டு கூறுகின்றுர்.

**अत्र पुनः**– ஈண்டு சத்தத்தின் கண்ணே

**अभीष्टशक्तेः** – யோக்கியேதரான்விதத்தை விஷயஞ்செய்யுஞ் சத்திக்கு

**इदं प्रयोजकम्**– காரியான்விதத்துவ விசேஷணத்தைக் கொள்ளாதபோது பாதக வடிவ நிமித்தம்

**नास्ति**–கிஞ்சித்துமின்றும்.

## விசேஷவுரை

யாண்டு அவிசேஷிதம்=விசேஷிக்கப்படாதது, நிமித்தம் எதற்கோ அது அவிசேஷித நிமித்தகமாம் அதன் தன்மை அவிசேஷித நிமித்தகத் தன்மை, அதற்கு விரோதம்–அதிப்பிரசக்தி முதலிய வடிவ பாதம், அது உண்டாகும்போது, அதனை நிவர்த்திசெய்யும் விசேஷணம் சம்பவிக்குமாயின், இத்துணையால் "சம்பவத்திலும் வியபிசாரத்திலும் விசேஷணம் பொருளுடையதாம்" என்று கூறப்பட்ட விசேஷணத்தின் கிரகணத்தின் கண் பிரயோஜகம் தெரிசிப்பிக்கப்பட்டது. ஆண்டு சொற்பவிசேஷண விசிஷ்டவஸ்து நிமித்தமாகுக. அதாவது யாண்டு பிரவிருத்தி முதலியவற்றில் கேவல இஷ்ட சாதனத்தன்மையின் ஞானுதிக்கு நிமித்தத்தன்மையையுடன்படின் பிரவிருத்தியின் அதிப்

பிரசங்க வடிவ பாதகமுண்டாகின்றதோ ஆண்டு அதனைப் பரிகரித்தற் பொருட்டு கிருதிசாத்தியத்துவ விசிஷ்ட இஷ்ட சாதனத்தன்மையின் ஞானம் முதலியவை பிரவிருத்தியின் காரணமாமாதலின் அப்படிப்பட்ட இடத்தில் விசேஷணம் கிரகிக்கப்படுகின்றது என்பது பொருள்.

சத்தத்தின் சத்திக்கு யோக்கியேதரான்வயியை (யோக்கியமாகிய இதரத்தோடு கூடியதை) விஷயஞ்செய்யுந்தன்மையையுடன்படின் பாதகமின்மையின் காரியான்வயித்துவமும் சத்தி விஷயத்தின் விசேஷணமாகக் கற்பிக்கத்தக்கதன்ரும் என்பது பொருள். (348)

## *அவதாரிகை*

130-வது சுலோகத்தில் "காரியான்வயத்தின் சம்பந்தியாகிய வஸ்துவின்கண் சப்தத்தின் சத்தியாம்" ஆதலின் அனேக காரியத்தின் ஆபத்தியின்ரும் என்று யாதொன்று கூறப்பட்டதோ அதன்கண்ணும் இந்தக் கௌரவ தூஷணமுளதேயாமெனக்கூறுகின்ருர்.

## *சுலோகம்*

कार्यान्वयान्वयिनिवस्तुनिशब्दशक्ति-
रित्युच्यते यदि तदापि समानमेतत् ।
अन्वीयमानवचनत्वमतोपपत्तौ
कार्यान्वयान्वयिविशेषणगीर्वृथेति ॥ ३४९ ॥

## *பதவுரை*

कार्यान्वयान्वयिनि - காரியசம்பந்தத்தின் சம்பந்தியாகிய

वस्तुनि - வஸ்துவின்கண்

शब्दशक्तिः - சத்தத்தின் சத்தியாம்

इति यदि उच्यते - என்று சொல்லப்படுமாயின்

तदापि - அப்போதும்

एतत् - இந்த கௌரவ தூஷணம்

समानम् -சமானமேயாம்

**अन्वीयमानवचन-त्वमतौपपत्तौ** அதனையே காட்டுகின்றார் சத்தத்திற்கு யோக்கிய இதரான்விதத்தில் சத்தியைக் கூறும் மதம் பொருத்தமாகும் போது

**कार्यान्वयान्वयि विशेषणगीः**—காரிய சம்பந்த சம்பந்தியின் கண் காரியம் முதலிய விசேஷண பதமானது

**वृथा इति**—வீணாதலின்

## *விசேஷவுரை*

யாதொரு காரணத்தினால் காரியான்வயி விசேஷண பதம் வீணோ அக்காரணத்தினால் கௌரவ தூஷணம் சமானமாம் என ஒட்டுக. **(349)**

## *அவதாரிகை*

அற்றேல் பசுவைக்கொண்டுவா என்பது முதலிய வாக்கியத்தால் நியமமாக காரிய விசிஷ்டமாகப் பசு முதலிய பதார்த்தம் பிரதீதியாகலின், காரிய விசிஷ்டமே சத்தத்தின் அருத்தமாம் எனின் அப்படியானால் இலௌகிக வாக்கியம் வக்தாவின் ஞானவிவக்ஷைகளை விஷயஞ்செய்யுந் தன்மையால் அநுமானத்தாற் சித்தித்த அருத்தத்தின் அநுவாதகமாம் என்று கூறுகின்ற உனக்கு வாக்கிய சிரவணத்தின் அனந்தரம் ஞான விவக்ஷைகட்கும் நியமமாகப் பிரதீதியைக் கூறவேண்டியிருத்தலின் வக்தாவின் ஞானமும் விவக்ஷிதமுமான காரியான்வயிக்கே சத்தார்த்தத் தன்மையின் அடைவாம். கௌரவ தோஷம் வருதலின் அங்ஙன மன்றெனின் அத்தோஷத்தாலேயே காரியான்வயித்துவமும் சத்தார்த்த மன்றுமென்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார்.

## *சுலோகம்*

वक्तृज्ञानविवक्षयोरपि भवेच्छब्दार्थताावके
पक्षे शब्दमनुप्रतीतिरुभयोरस्त्येव यस्मात्तयोः ।
यद्यच्छब्दमनुप्रतीतिपदवीमारोहदुत्प्रेक्ष्यते
तत्तद्वाच्यमिति स्थितौ न हि तयोः शब्दार्थतावर्जनम् ॥

## *பதவுரை*

**वक्तृज्ञानविवक्षयोः अपि**—உலகின் கண் சத்தத்தைப் பிரயோகிக்கின்ற வக்தாவின் ஞான விவக்ஷைகட்கும்

**तावके पक्षे**-உனது மதத்தில் (சத்தத்தால் பிரதீதியாதுந்தன்மை யுண்மையின்)

**शब्दार्थता**-வாக்கியார்த்தத்தன்மை

**भवेत्**-பிராப்தியாம் (ஏது வினையநுபவத்தால் காட்டுகின்றார்)

**यस्मात्** -யாதொரு காரணத்தினால்

**तयोः उभयोः** -வக்தாவின் ஞானவிவக்ஷைகளென்னு மிரண்டினது

**प्रतीतिः** -ஞானமானது

**शब्दम् अनु**-வாக்கியத்தை நிமித்தமாகக்கொண்டு

**अस्ति एव**-உண்டாகின்றதேயாமோ அதனால்

சத்தத்தினால் வக்தாவின் ஞான விவக்ஷைகளின் பிரதீதியை கொள்ளாக்கால் அவற்றினை விஷயஞ்செய்யுந் தன்மையால் வாக்கியார்த்தத்தின் ஞானமின்மையின் வாக்கியத்திற்கு அநுவாதகத் தன்மை பொருந்தாமற்போமென்பது பொருள்.

அற்றேல் இத்துணையால் அவைகட்கு எமது மதத்தில் சத்தார்த்தத் தன்மை எப்படிச் சித்தித்தது என்னுமிடத்து உனது மனத்தில் அவை கட்கு சத்தார்த்தத் தன்மையின் தியாகந்தான் எப்படியாகுமெனக் கூறுகின்றார்.

**यद्**-யாதொரு வஸ்துவானது

**यत् शब्दमनु**-எந்த சத்தத்தின் பிரதீதியினனந்தரம்

**प्रतीति पदवीम्** -ஞான விஷயத்துவத்தை

**आरोहत्** -அடைகின்றதாய்

**उत्प्रेक्ष्यते**-காணப்படுகின்றதோ

**तत्** -அந்த வஸ்துவானது

**तद्वाच्यमिति**-அந்த சத்தத்தின் வாச்சியமா மென்னும்

**स्थितौ**-உமது மதத்தில்

**तयोः** -ஞானவிவக்ஷைகளில்

**शब्दार्थतावर्जनम्** -சத்தார்த்தத்தன்மையின் பரித்தியாகம்

**न हि**-சம்பவிப்பதின்றாமாதலின்

எது எச்சத்தத்தினனந்தரம் அறியப்படுகின்றதோ அது அச்சத்தத்தின் பொருள்.

பிரபாகரரை யநுசரித்தவர்கள் பசுவைக் கொண்டுவா என்பது முதலிய இலௌகிக வாக்கியம் முதலில் சுரோதாவிற்குத் தாற்பரிய ஞானமின்மையால் பசுவின் கொண்டுவருதலாதியின் சம்பந்தத்தைப் பிரதிபாதிக்கின்றதில்லை. மற்றுரே-தாற்பரிய ஞானத்தால் இவன் இவ்வாறு அறிகின்றான் இவ்வாறு விவக்ஷிக்கின்றான் என்று வக்தாவின் ஞானமும் விவக்ஷையும் பிரதீதியாகும்போது அதன் விஷயத் தன்மையால் அருத்தமும் அறியப்பட்டபோது வாக்கியம் பின்பு அதனை யநுவாதஞ் செய்கின்றது எனக் கூறுகின்றனர். ஆண்டு கூறிய பிரகாரத்தால் அவைகட்கும் சத்தார்த்தத்தன்மை யெப்படி இன்றாகும். பிரயோகத்தின் அநுபபத்திவடிவ பிரமாணாந்தரத்தால் வக்தாவினது ஞானதியின் பிரதீதியாம் இவ்வாறு அன்னியத்தால் அடையப்படுவதான ஞான விவக்ஷைகட்கு சத்தார்த்தத் தன்மையின்றாம் என்று சொல்லற்க காரியத்திற்கும் அதன் அன்வயத்திற்கும் லிங் லோட் முதலியவற்றின் பலததால் பிரதீதியாகுந்தன்மையுண்மையின் பசு முதலிய பதத்தின் அர்த்தத் தன்மையின்றதும் ஆதலின் (தோஷம்) சமானமேயாமென்பது கருத்து. (350)

## அவதாரிகை

சங்கை வக்தாவின் ஞான விவக்ஷைகட்கும் சத்தார்த்தத்தன்மை யிருக்கட்டுமேயெனின் அப்படியானுல் வேதப்ராமாண்யத்திற்கு ஆனி யுண்டாம் அபௌருஷேயமாதலால் வேதத்திற்கு வக்தா இன்றும் அதனுல் ஞாதமும் விவக்ஷிதமுமான காரியவடிவ அர்த்தம் சம்பவி யாமையால் என்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்றார்.

## சுலோகம்

वेदे वक्तुरभावतस्तदुभयं नास्तीह यस्मादतः
शब्दो वाचकशक्तिमुज्झति निजां तत्र स्ववाच्यं विना ।
वाच्ये वाचकशक्तिमिच्छति भवान्नान्यत्र तत्र श्रुते-
रप्रामाण्यमिति स्फुटं तव भवेद्बुद्धेरनुत्पत्तितः ॥ ३५१ ॥

## பதவுரை

इह-இந்த மதத்தில்

वेदे-வேதத்தின்கண்

वक्तुः अभावतः-வாக்கியத்தைப் பிரயோகிக்கும் கருந்தா இல்லாமையால்

तदुभयम् -வக்தாவின் ஞானமும் விவேக்ஷையும்

यस्मात् -எதனுல்

नास्ति-இன்ருமோ

अतः -அதனுல்

शब्दः -வேத வடிவ சத்தமானது

तत्र-வேதத்தின் கண்

स्ववाच्यं विना-வக்தாவின் ஞான விவக்ஷை வடிவ தனது வாச்சியார்த்தமின்மையால்

वाचकशक्तिम् -வாசக சக்தியினை

उज्झति-பரித்தியாகஞ் செய்கின்றது

அற்றேல் உலகின்கண் லிங் முதலியவற்றின் அருத்தமாகக் கிரகிக்கப்பட்ட காரியமில்லாவிடினும் வைதிக லிங் முதலியவற்றிற்கு எப்படி பிரயாணத் தன்மையுளதோ அப்படி வக்தாவின் ஞானுதியில்லாவிடினும் வேதத்திற்குப் பிரமாணத் தன்மை ஏன் சித்தியாது என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

भवान् -தாங்கள்

वाच्ये-உலகப்பிரசித்தமான வாச்சியத்தின் கண்

वाचक शक्तिम् -வைதிக சத்திற்கும் வாசக சத்தியினை

इच्छति-விரும்புகின்றீர்

अन्यत्र-உலகத்தில் அப்பிரசித்தமான பதார்த்தத்தில்

न-வாசக சததியினை விரும்புகின்றீரில்லை

तत्र-உலகின் கண்ணும் வேதத்தின் கண்ணும் சத்தார்த்தம் ஓர் வடிவமாகும்போது

**तव**–உனது மதத்தில்

**श्रुतेः**–சுருதிக்கு

**इति स्फुटम्**–இந்தப்பிரகாரம் ஸ்பஷ்டமாகவே

**अप्रामाण्यम्**–அப்பிரமாணத்தன்மை

**भवेत्**–பிராப்தியாகும்

(அதிலேதுவைக் கூறுகின்றார்)

**बुद्धेः**–வக்தாவினால் ஞாதமும் விவக்ஷிதமுமான காரியான்வித புத்திக்கு

**अनुत्पत्तितः**–உற்பத்தி சம்பவியாமையின்

## *விசேஷவுரை*

பிரபாகரரும் வேதத்தின்கண் சத்தார்த்தங்கள் இலௌகிகமேயாம் எனக் கருதுகின்றனர். லிங் முதலியவற்றிற்கும் உலகிலறியப்பட்ட காரிய சத்தியை யநுசரித்து வேதத்தில் பகுதிப்பொருளிற்கு காரியத் தன்மை பொருந்தாமையின் அதனினும் வேறான காரியத்தின் கண்ணேயே சக்தியைக் கற்பிக்கின்றார். அன்னியார்த்தத்தின்கண் அன்றும் ஆதலின் ஒரே வடிவ அர்த்தத்திலேயே இலௌகிக வைதிக விதிக்குப் பிரமாணத் தன்மையைக் கூறுகின்றார்.

வக்தாவின் ஞானமும் விவக்ஷையும் சருவப்பிரகாரத்தாலும் வேதத்திற் சம்பவியாமையால் வேதத்திற்கு அபோதகத் தன்மை வடிவ அப்பிரமாணத் தன்மையே பிராப்தியாமெனக் கூறப்பட்டது உலகின் கண் என்பதாதியால். (351)

## *அவதாரிகை*

மேலும் காரியான்வித வஸ்துவே சத்தத்தின் பொருளாம் என்னும் மதத்தில் சோமாதி விசிஷ்டயாக விதிக்கு லோபம் பிராப்தியாம் "சோமத்தால் யஜிக்குக" என்னுமிடத்து சோம விசிஷ்ட யாகம் விதிக்கப்படுகின்றது என்பது உனது அபிமதமாம் அது உனக்கு சம்பவியாது உனது மதத்தில் சோம சத்தத்திற்கும் யாக சத்தத்திற்கும் பரஸ்பரம் சம்பந்தமின்மையால் சோம விசிஷ்ட யாகத்தின் பிரதீதி யுண்டாகாமையின். பிரதீதியாகாததற்கு விதி சம்பவிக்கின்றதில்லை யென்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

### சுலோகம்

**न च सोमयागपदयोरुभयो रपरस्परेण घटतेऽत्र युजा ।**
**पदजातमेतदखिलं हि निजं विषयं समर्पयति कार्ययुतम् ॥ ३५२ ॥**

### பதவுரை

**अत्र**–உனது மதத்தில்

**सोमयागपदयोः उभयोः** – சோமம் யாகம் என்னும் பதங்களிரண்டிற்கும்

**अपरस्परेण**–பரஸ்பரம்

**युजा**–சம்பந்தம்

**नच घटते**–பொருந்துவதின்றும்

அவ்விருபதங்கட்கும் சம்பந்தம் எதனுலின்றும் என்னுமிடத்துக் கூறுகின்றார்.

**एतद् अखिलं पदजातम्** –இந்த சம்பூர்ணபதமும்

**निजं विषयम् हि**–தனது அபிதேயத்தினையே

**कार्ययुतम्** –லிங் விருதிப்பொருளான காரிய விசிஷ்டமாக

**समर्पयति**–போதிக்கின்றது

சோமம் முதலிய சருவ பதங்கட்கும் லிங் விகுதியின் பொருளான காரியான்வித சுவார்த்தபோதகத் தன்மையுண்மையின் அன்னியோன்னியம் சம்பந்தம் சம்பவிக்கின்றதில்லை, என்பது பொருள்.

சத்தத்தாற் கூறப்பட்ட காரியமே யாக சோமங்களுக்கு கிரியா காரகத்தன்மையால் சம்பந்தத்தைச் செய்யுமென்று சொல்லற்க விஷய விசிஷ்டமாகவே காரியம் லிங் முதலிய விகுதியால் பிரதிபாதிக்கப் படுதலின் விசிஷ்ட விஷயக ஞானமின்றி பிரதீதியான காரியத்திற்கு வைசிஷ்டிய (சம்பந்த) த்தை யாக்ஷேபிக்குந்தன்மை பொருந்தாமையின்.

இந்தப்பிரகாரம் வேறேயும் பின்ன பதார்த்த விசிஷ்டவிதி சம்பவிக்கின்றதில்லை என்பது கருத்து. (352)

## அவதாரிகை

காரிய சம்பந்தத்தின் சம்பந்தியே சத்தத்தின் பொருளாமென்னும் மதத்தின் கண்ணும் கூறிய தூஷணத்தை அதிதேசஞ் செய்கின்றார்.

## சுலோகம்

**कार्यान्वयान्वयिनि शक्तिरिति स्थितौ च**
**कार्यान्वयान्वितमतिर्न परस्परेण ।**
**संबन्धितामतिरतश्च न सिद्धिमेति**
**सर्वो विशिष्टविधिरित्यपि दूषणं वः ॥ ३५३ ॥**

## பதவுரை

**वः** –உங்களுடைய

**कार्यान्वयान्वयिनि**–காரிய சம்பந்தமுடைய சம்பந்தியின் கண்

**शक्तिः इति**–சத்தியாமென்னும்

**स्थितौ च**–பக்ஷத்திலும்

**कार्यान्वयान्वितमतिः अपि**–பதத்தால் காரியான்வயான்வித ஞானமேயுண்டாகும்

**परस्परेण**–பரஸ்பரம்

**संबन्धितामतिः**–சம்பந்தித்தன்மை ஞானம்

**न**–பதார்த்த விஷயகமாக உண்டாகாது

**अतः** –ஆதலால்

**सर्वः विशिष्टविधिः**–"சோமத்தால் யஜிக்குக பசுவால் யஜிக்குக" என்பது முதலிய விசிஷ்ட விதியும்

**सिद्धिम्** –சொரூபஸ்திதியை

**न एति**–அடைகின்றதில்லை

**इति दूषणम्** –என்னும் தூஷணமாம்

## விசேஷவுரை

ஈண்டு சருவ சத்தம் தனியே கிரகிக்கப்பட்ட விசேஷண விசேஷியத்தின் அபிப்பிராயமுடையதெனக்காண்க. முற்கூறப்பட்ட

தினின்றும் இது மதாந்தரபாமென்னுமித்துணையானேயே ஆண்டுக்கூறிய தூஷணத்தின் அதிதேசமாம். அதன் அப்பிராப்தி சங்கையின பீஜத்தை நிராகரித்தற் பொருட்டன்றும் எனக்காண்க. **(353)**

### *அவதாரிகை*

தனது மதத்தில் இத்தோஷமின்றுமெனக் கூறுகின்றார்.

### *சுலோகம்*

**योग्येतरान्वितपदार्थगतैवशब्द-**
**शक्तिः स्थिता यदि पुनर्घटते तदाऽयम् ।**
**सर्वो विशिष्टविधिरस्तु तथैव तस्मात्**
**युक्तं तदेतरदितीदमपीह भाष्यम् ॥ ३५४ ॥**

### *பதவுரை*

**योग्यतरान्वित**—யோக்கியமாகிய இதரத்தோடு கூடிய

**पदार्थगता एव**—யாதொரு பதார்த்த முண்டோ அதனைவிஷயஞ் செய்வதாகவே

**शब्दशक्तिः**—சத்தத்தின் சத்தியானது

**यदि स्थिता**—அங்கீகரிக்கப்படுமாயின்

**तदा**—அப்போது

**अयं सर्वो विशिष्टविधिः**—இவ்வெல்லா விசிஷ்டவிதியும்

**पुनः घटते**—பொருத்தமாகின்றது

(கூறிய தோஷமில்லாதபோது திரண்ட பொருளைக்கூறுகின்றார்)

**तस्मात्**—பொருத்தமாவதால்

**तथैव**—அப்படியே (யோக்கியேதரான்வித சத்தியே)

**अस्तु**—இருக்கட்டும்

இந்தப்பக்ஷத்தில் கேவலம் விசிஷ்ட விதிமாத்திரம் பொருத்த மன்றும் மற்றோ **"यदेकस्मादपूर्वं तदेतरत्तदर्थम्"** (ஒன்றினால் அபூருவம் உண்டாகுமபோது மற்றொன்று அதன் பொருட்டாம்) என்னும் சாபரபாஷியமும் பொருத்தமாகின்றது எனக்கூறுகின்றார்.

इह–இந்தப்பக்ஷத்தில்

तदा–யாகத்தினுல் அபூருவமுண்டாகும்போது

इतरद् –திரவிய தயிர் முதலியது (யாகப் பொருட்டாம்)

इति इदमपि भाष्यम् –என்னுமிந்தச்சாபர பாஷியமும்

युक्तम् –பொருத்தமாம்

## அவதாரிகை

அற்றேல் விதி சுருதிக்கு பிரவர்த்தகத்தன்மை வடிவமே பிராமாண்யமாம் விசிஷ்டவிதிக்கோ விசேஷமாகப் பிரவர்த்தகத்தன்மை வடிவமே பிரமாண்யமாம். போதகத்தன்மை வடிவப் பிரமாணத்தன்மை யின்ருும் அதனை நீ கூறிய பிரகாரத்தால் விசிஷ்ட விதியிற் பிரதிபாதித்தற் சம்பவியாமையின் ஆதலால் விசிஷ்ட விதிக்கு அப்பிரமாணத்தன்மையின்ருும் என்று சங்கிக்கின்ருன்.

## சுலோகம்

शब्द प्रवृत्तिजनको न तु बोधकश्चेन्नैतत्प्रवर्तकधियो जनकत्वहेतोः ।
इष्टाभ्युपायमतिजन्मनिमित्तभूतः शब्दः प्रवर्तयति नैव पुनः पुमांसम् ॥

## பதவுரை

शब्दः –லிங் முதலிய சத்தமானது

प्रवृत्तिजनकः –புருஷப்பிரவிருத்தியைச் செய்வதாம்

ஞான வாயிலாகப் பிரவிருத்தியை யுண்டுபண்ணுகிறதா எனின் அன்றெனக் கூறுகின்ருர்.

न तु बोधकः चेत् -ஞான ஜனகமன்ருும் எனின்

தூஷிக்கின்ருர்.

एतत् न–நீ கூறியது சரியன்று

எபபடிப் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களுக்கு போதகத் தன்மை யால் பிரமாணத் தன்மையுளதோ எப்படி சத்தாந்தரத்திற்கு (விதி யின்றிய சத்தத்திற்கு) போதகத் தன்மையால் பிரமாணத் தன்மை யுளதோ அப்படியே விதி சத்தத்திற்கும் பொருத்தமாம் பிரவர்த்தக

ஞானத்தின் ஜனகத்தன்மை மாத்திரத்தால் பிரவர்த்தனை (பிரவர்த்தகத் தன்மை) லக்ஷணம் பிராமாண்யமாம் என்னும் வியவகாரத்திற்கும் பாதமின்மையின் என்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்றார்.

**प्रवर्तकधियः**—பிரவர்த்தக ஞானத்தின்

**जनकत्वहेतोः**—ஜனகத்தன்மை வடிவ ஏதுவால்

அப்படியானுல் விசிஷ்ட விதிக்கு போதகத் தன்மையால் பிராமாண்யம் எவ்வாறு பொருந்தும் என்னுஞ் சங்கைக்கு காரியமே லிங் விகுதியின் பொருளாம் என்னும் பக்ஷத்திலும யோக்கியேதரான்வித என்னும் சுலோகத்தில் கூறிய பிரகாரத்தால் அதன் (பிராமாண்யத்தின்) அநுபபந்தியாமென்னு மபிப்பிராயத்தால் சருவ விதியின் சாதாரணப் பிரகாரத்தைக் கூறுகின்றார்.

**एषः शब्दः**—லிங் முதலிய சத்தமானது

**इष्टाभ्युपायमति**—இஷ்டசாதன ஞானத்தின்

**जन्मनिमित्तभूतः**—உற்பத்தியில் காரணமாக உள்ளது

இஷ்ட சாதனத் தன்மை ஞானத்தினுற்பத்தியில் நிமித்தமாவதால் நேரே சத்தம் பிரவர்த்தகமன்றும் என்று முடிக்கின்றார்.

**पुमांसम्**—புருஷனை

**न पुनः प्रवर्तयति**—பிரவிர்த்திப்பிக்கின்றதில்லை (355)

## அவதாரிகை

கௌரவமாதலானும் விசிஷ்ட விதிக்கு லோபம் பிராப்தியாதலானும் காரியான்விதம் முதலியது சத்தார்த்தமாம் என்னும் மதம் அசங்கதமாமென பிரகிருதத்தை முடிக்கின்றார்.

## சுலோகம்

तस्मादसंगतमिदं यदुशन्ति केचित्
कार्यान्वितार्थविषयैव तु शब्दशक्तिः ।
तत्र प्रयोगमभिवीक्ष्य तथा प्रतीतिः
कल्प्येति वर्णितनिजेष्ट विघातहेतोः ॥ ३५६ ॥

## பதவுரை

**केचित्** –சிலர் (பிராபாகரர்)

**तत्र**–காரியத்தின் கண்

**प्रयोगम्** –உத்தம விருத்தனது சத்தப் பிரயோகத்தினை

**अभिवीक्ष्य**–பார்த்து

**कार्यान्वितार्थ विषया एव**–காரியான்விதார்த்தத்தினை விஷயஞ் செய்வதாகவே

**शब्द शक्तिः** –சப்தத்தின் சத்தி

**कल्प्या**–கற்பிக்கத்தக்கது

**तथा प्रतीतिः** –அப்படியே காரியான்விதத்தின் கண்ணேயே சத்தியாம் என்னும் அநுபவமுமுண்டாம்

**इति यद्** –என்று யாதொன்றை

**उशन्ति**–விரும்புகின்றனரோ

**इदम् असंगतम्** –அந்த இது அசங்கதமாம்

பிராபாகரரால் கூறப்பட்ட சத்த சத்தியின் கற்பனைப் பிரகாரம் காரியத்தின் கண் என்பதாதியால் கூறப்பட்டது. அசங்கதம் என்பதன் கண் உனக்கு இஷ்டமான விசிஷ்ட விதியின் லோபப்பிராப்தியால் என்று முன் கூறப்பட்டதனையே ஏதுவாகக் கூறுகின்றார்.

**तस्मात् वर्णित निजेष्ट विघातहेतोः** } முன்பு கூறப்பட்ட உனதபிமதமான விசிஷ்ட விதியின் லோபப்பிராப்தி வடிவ ஏதுவால்

## அவதாரிகை

மேலும் வேதத்தின் கண் இலௌகிக வாக்கியத்திற்குப்போன்று பகுதிப்பொருளான காரியான்விதம் சத்தத்தின் பொருளன்றும் உன்னால் அது அங்கீகரிக்கப்படாமையின் அதனினும் வேறான காரியமோ அபூருவ மாதலால் சத்தப்பிரமாண மொன்றற்கே விஷயமாமென்பது உனது சம்மதமாம் ஆதலால் அறியப்படாத அதன் கண் வைதிக லிங் முதலிய வற்றிற்கு சத்திக்கிரகணம் சம்பவியாது என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்.:—

சங். 77

## சுலோகம்

वेदैकगम्यमिति कार्यमभीष्टमस्मिन्
शक्तिग्रहोऽपि न यदस्य समञ्जसोऽयम् ।
शक्तिग्रहं च परिहृत्य न बोधकत्वं
शब्दस्य शक्यमिह वक्तुमशङ्कितेन ॥ ३५७ ॥

## பதவுரை

**कार्यम्**-அபூருவவடிவ காரியம்

**वेदैकगम्यमिति**-வேதமொன்றற்கே விஷயமா மென்பது

**अभीष्टम्**-பிரபாகரரது கொள்கை

அற்றேல் பகுதிப்பொருளான அக்னிஹோத்திராதியினும் வேறானதும் காலாந்தரத்திலிருப்பதும் சொர்க்கத்திற்கு அநுகூலமானதும் சொர்க்ககாமி புருஷனது காரியமுமான அபூருவமில்லையாயின் அப்போது சுவர்க்ககாம பதத்தின் சமீப உச்சாரணம் பொருந்தாமற்போம் என்னும் அதன் சமீப உச்சாரணத்தினநுபபத்தியால் அறியப்பட்ட அபூருவத்தின் கண் சத்திஞானமுண்டாகட்டுமே யெனின் அற்றன்று எனக் கூறுகின்றார்:—

**अस्मिन् अपि**-இந்த நியோகத்தின் கண்ணும்

**पदस्य**-வைதிகலிங் முதலிய சத்தத்திற்கு

**अयं शक्तिग्रहः**-இந்த சத்திக்கிரகணம்

**समञ्जसः न**-பொருத்தமன்றும்

சத்திஞானத்தின் அசம்பவத்தைப் பிரதிபாதித்தலின் பயனைக் கூறுகின்றார்.

**शक्तिग्रहं च**-சத்திஞானத்தை

**परिहृत्य**-பரித்தியாகஞ்செய்து

**इह**-வேதத்தின் கண்

**शब्दस्य**-லிங் முதலிய பதத்திற்கு

**बोधकत्वम्**-அர்த்தத்தை யறிவிக்குந்தன்மையை

**अशङ्कितेन**-சமர்த்த புருஷனாலும்

**बक्तुम्**-பிரதி பாதித்தற்கு

**न शक्यम्**-முடியாது

சத்தி ஞானத்தின் உபாயம் கூறப்பட்டதாயினும் அது சரியன்று என்பது பொருள். விதி வாக்கியத்தின் அர்த்தஞான த்திற்கு முன்பு உலகின்கண்ணும் சுகவிசேஷத்திலும் அதன் சாதனத்திலும் சுவர்க்க பதத்தைப்பிரயோகித்தலால் சுவர்க்க பதத்திற்கு ஆமுஷ்மிக (பரலோக) அர்த்தம் நிச்சயிக்கப்படவில்லை அதனால் அதன் சமபிவியாஹார (சமீப உச்சாரண) மாத்திரத்தால் அலௌகிக காரியத்தின் உபஸ்திதி பொருந்தாமையாலும் ஆண்டும் பகுதிப்பொருளிற்குக் காரியத்தன்மை சித்தித்தபோது அதனையனுகூலமாகவுடைய சுவர்க்கம் அதனர்த்த வாதத்தாலும் கூறத்தக்கதாதலினாலும் கூறிய அருத்தாபத்தியாலறியப் படுமாயின் அதற்கு அபூருவத்தன்மை வியாகாதமாதலினாலும் கூறிய உபாயத்தால் சத்திஞானமின்று மென்பது கருத்து. (357)

### *அவதாரிகை*

அற்றேல் உமதுமதத்தில் சருவப்பிரமாணங்களுக்கு அயோக்கிய மாயினும் பிரம்மம் எப்படி சாஸ்திரத்தால் பிரதிபாத்தியமோ அப்படி எமது மதத்தில் காரிய (அபூருவ)மும் சாஸ்திரார்த்தமாகட்டுமே யென்னுஞ் சங்கைக்கு விஷமத்தன்மையுளதெனக்கூறுகின்றார்:—

### *சுலோகம்*

**शश्वत्स्वयंप्रभमलुप्तचिदात्मभूतं विष्णोःपरं पदममुत्र तु शब्दशक्तिः ।**
**शक्या ग्रहीतुमतिबुद्धिमनस्यपीति शास्त्रप्रमाणकमदः प्रवदन्ति सन्तः ॥**

### *பதவுரை*

**शश्वत्**-எப்போதும்

**स्वयं प्रभम्**-சுயம் பிரகாசமானதும்

**अलुप्तचिदात्मभूतं**-நாசமின்றிய சிஞ்ஞான ஸ்வரூபமானதும்

**विष्णोः परंपदम्** - வியாபகபிரம்மத்தின் சொரூபமானதுமான யாதொரு வஸ்து உண்டோ

**अतिबुद्धिमनसि**-அதிபுத்திமானசமான (புத்திக்கும் மனதிற்கும் எட்டாததான)

**अमुत्र अपि**-அந்த வஸ்துவின் கண்ணும்

**शब्दशक्तिः**-பிரம்மம் முதலியபதத்தின் சத்தியானது

**ग्रहीतुम्**-கிரகித்தற்கு

**अर्हया**-யோக்கியமாம்

விசிட்டத்தின்கண் சத்திஞான சம்பவத்தின் பயனைக்கூறுகின்றார்

**इति**-ஆதலின்

**अदः**-பிரம்மவஸ்துவினை

**शास्त्रप्रमाणकम्**-சாஸ்திரப்பிரமாணத்தையுடையதென

**सन्तः**-வாதராயணர் முதலிய பெரியோர்

**प्रवदन्ति**-"சாஸ்திரயோநித்துவத்தால்" என்பது முதலிய சூத்திரத்தாற் கூறுகின்றனர்

## *விசேஷவுரை*

புத்தி-நிச்சயான்மகவிருத்தியினையுடைய அந்தக்கரணம், மனது= சங்கல்பவிகல்ப வடிவ விருத்தியினையுடைய அந்தக்கரணம். அவ்விரண்டையும் கடந்திருக்கும் வஸ்து அதிபுத்திமானசமாம்

சுவப்பிரகாசப்பிரம்மம் வாக்கிற்கும் மனதிற்கும் அகோசரமாயினும் அகங்காராதி விசிஷ்டசேதனத்தின் பிரதீதிசாக்ஷியாலும் சத்தியத்துவாதி விசிஷ்டபிரம்மத்தின் பிரதீதி பிரத்தியக்ஷாதியினாலும் சம்பவித்தலால் அதன்கண் கிரகிக்கப்பட்ட சத்தியினையுடைய வேதாந்தங்களால் லக்ஷணை விருத்தியால் பூர்ணப்பிரம்மத்தைப் பிரதிபாதித்தலால் அதற்கு சாஸ்திரப் பிரமாணகத்தன்மை பொருத்தமாம் அவ்வாறு உனது சம்மதமான காரியத்திற்குப் பொருத்தமின்றாம் அதுவும் லிங் முதலிய பதத்தின் லக்ஷியமாகட்டுமே என்று சொல்லற்க அவ்வாறு உன்னாலங்கீகரிக்கப் படாமையின், வாச்சியார்த்த சம்பந்தித்தன்மையால் பிரமாணாந்தரத்தால் அறியப்படாததும் சடமாதலின் சுயமே விளங்காததுமான அபூருவத்திற்கு உனது மதத்தில் லக்ஷியத்தன்மை பொருந்தாமையானும் என்க

எமது மதத்தில் லக்ஷியப்பிரம்மம் பிரமாணாந்தரத்தால் அறியப் படாததாயினும் சுவப்பிரகாசத்தன்மையால் சுயமே விளங்குதலின்

லக்ஷியத்தன்மை பொருத்தமா மென்பது கருத்து, பிரம்மம் முதலிய பதத்தின் அர்த்தமாகிய சபலத்திற்கு பரோக்ஷத்தன்மை யுண்மையால் அமுத்திர = அந்தவஸ்து எனப்பட்டது. (358)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் பிரவர்த்தக வாக்கியத்தின் அதீனமாகவே முதலில் சத்தி ஞானத்தை அங்கீகரித்து இலாகவத்தால் யோக்கியேதரான்விதமே சத்தார்த்தம்ாம் அப்படிப்பட்ட காரியான்விதம் அன்ரும் என்று கூறப்பட்டது இப்போது சித்தித்த அர்த்தத்தைப் போதிக்கும் வாக்கியத் திலும் முதலில் சத்தி ஞானம் சம்பவித்தலால் பிரவர்த்தகவாக்கியத்தின தீனமாக சத்திஞானமாமென்னும் நியமமின்ரும். ஆண்டு (சித்த ஸ்தலத்தில்) காரியத்தின் உபஸ்திதியின்மையின் காரியான்விதமே சருவசத்தத்திற்கும் பொருளாமென்பது சரியன்ரும் என்னுமபிப் பிராயத்தால் கூறுகின்ருர்:—

## சுலோகம்

जातः सुतः सकलवंश विवर्धनस्ते विप्रेति वाक्यसमनन्तरमस्य बुद्धिः ।
श्रोतुर्मुखाकृतिवशेन तु पुत्रजन्म वस्तुन्यवश्यमनुमीयत एव बालैः ॥

## பதவுரை

**विप्र**- ஓபிராமணனே

**ते**—உனக்கு

**सकलवंशविवर्द्धनः**— சம்பூர்ணவம்சத்தையும் விருத்தி செய்பவனை

**सुतः जातः**—பிள்ளை பிறந்துளான்

**इति वाक्यसमनन्तरम्**-என்னும் தூதனுடைய வாக்கியத்தைக் கேட்டதன் பின்னர்

**अस्य श्रोतुः**—கேட்பவனை இந்தப்பிராமணனுடைய

**मुखाकृतिवशेन तु**-முகத்தின் விகாசம் முதலிய வடிவ லிங்கத் தாலேயே

**पुत्र जन्मवस्तुनि**-புத்திரனது உற்பத்திவடிவு வஸ்து விஷயக

**बुद्धिः**-ஞானமானது

**बालैः**-சத்திஞானமின்றிய சிறுவர்களால்

**अनुमीयते एव**-அநுமதிக்கப்படுகின்றதேயாம்

## விசேஷவுரை

உனக்குப்புத்திரன் பிறந்தனன் என்னும் வாக்கிய சிரவணத்தினந்தரம் பிதாவின் முகவிகாசத்தைக்கண்டு புத்திராதி பதார்த்தத்தையறிந்தவனை தடஸ்தபுருஷன் இவன். இப்போது இஷ்டஞானமுடையவன் பிரசன்ன முகமுடையவனாதலின் சம்மதம் (என்) போன்று என அவனுடைய இஷ்டவிஷயக ஞானத்தை யநுமிச்கின்றான். அந்த இஷ்டவஸ்துவும் புத்திரனது ஜன்மமேயாமாதலின் புத்திர வஸ்து விஷயக எனப்பட்டது.

இவ்வாருகவே சித்தார்த்தபோதக வாக்கியத்தால் அன்னியனிடத்தில் ஞானத்தினுற்பத்தியநுமானம் சம்பவிக்கிறதில்லை. லிங்கமின்மையால் என்பது சரியன்று என்பது கருத்து (359)

## அவதாரிகை

இவ்வாருயினும் புத்திர ஜன்மாதியின் ஞானத்தின் சித்தியெவ்வாறு பொருந்தும் மனைவியின் சுகப்பிரசவத்தாலும் முகவிகாசம் பொருந்துதலின் என்னுமிடத்துக்கூறுகின்றார்:—

## சுலோகம்

भूतार्थनिष्ठवचनादपि शब्दशक्तिः
 शक्या ग्रहीतुमुदितेन यथाऽनभिज्ञैः ।
तत्र प्रवर्तक निवर्तक वाक्यमूल-
 शक्तिग्रहैकनियमस्य न हेतुरस्ति ॥ ३६० ॥

## பதவுரை

**भूतार्थनिष्ठवचनादपि**-உனக்குப்புத்திரன் பிறந்திருக்கின்றானென்னும் சித்தித்த அர்த்தத்தைப் போதிக்கும் வாக்கியத்தாலும்

**उदितेन पथा**–முன் கூறப்பட்ட முகவிகாசம் முதலிய உபாயத்தால்

**अनभिज्ञैः**–சத்தியையறியாத பாலகர்களால்

**शब्दशक्तिः**–சத்தத்தின் சத்தி

**ग्रहीतुं शक्या**–கிரகிக்கத்தகும்

**तत्र**–உலகில் இவ்வாறுகும் போது

**प्रवर्तक निवर्तक**–பிரவிருத்தியைச் செய்வதும் நிவர்த்தியைச் செய்வதுமான விதிநிஷேத

**वाक्यमूल**–வாக்கியத்தினை மூலமாகக்கொண்டே

**शक्तिग्रह**–சத்தியின் கிரகணமாம்

**एक नियमस्य**-என்னும் கேவலநியமத்திற்கு

**हेतुः न अस्ति**–யாதொரு காரணமுமின்றாம்

## *விசேஷவுரை*

முற்கூறிய முகவிகாசாதி லிங்கத்தால் இஷ்டஞானத்தின் அநுமானத்தினனந்தரம் அவ்விஷ்டம் யாது என்று அறிய விரும்புகின்ற வனாய் "புத்திரன் உனக்குப்பிறந்துளான்" என்று கூறுபவனால் காண்பிக்கப்பட்டதும் புத்திரனது பாதத்தில் தடவிய குங்குமாதியால் சின்னம் பண்ணப்பட்டதுமான வஸ்திரத்தினால் தருக்கத்தினால் பிதாவின் சுகநிமித்தமாக அறியப்பட்டது புத்திரனது ஜன்மமேயாம் மனைவியின் சுகப்பிரசவம் முதலியதின்றாம் என்று நிச்சயித்து இந்த புத்திர ஜன்ம ஞானம் இவனுக்கு எதனாலுண்டாயிற்று என்று அதன் காரணத்தை விசாரிக்கின்றவனாய் பிரகிருத வாக்கிய சிரவணத்தின னந்தரமே அதன் உற்பத்தி காணப்படுதலால் அந்த வாக்கியமே புத்திரனது ஜன்ம ஞானத்தில் நிமித்தமாமென நிச்சயித்து சித்தார்த்த போதகவாக்கியத்தாலும் சத்தத்தின் சக்திக் கிரகிக்க யோக்கியமாம் என்க. (360)

## *அவதாரிகை*

சங்கை இந்தப்பிரகாரம் புத்திரன் முதலிய அநேக பதார்த்தத்தின் சம்சர்க்க வடிவ வாக்கியார்த்தத்தின் ஞானம புத்திராதிபத சமுதாய வடிவ வாக்கிய ஜன்னியமாம் என்னும் நிச்சயம் உளதாயினும் இந்தப் பதத்

திற்கு இந்தப்பொருளில் சத்தியாமென பிரவிருத்தியின்றி யெவ்வாறு நிச்சயிக்கமுடியும என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.:—

சுலோகம்

सामान्यतः प्रथममेष पदार्थपिण्डो
वाच्योऽस्य वाचकमिदं पदपिण्डरूपम् ।
इत्याकलय्य पुनरेष विशेषतोऽपि
शब्दार्थसंगतिमवैति जनस्तटस्थः ॥ ३६१ ॥

பதவுரை

सामान्यतः –சம்முக்த (சாமானிய) வடிவத்தால்

प्रथमम् -முதலில்

एष पदार्थपिण्डः –இந்தப்பதார்த்தத்தின் சமூகம்

अस्य–பிரகிருத வாக்கியத்தின்

वाच्यः –வாச்சியமாம்

इदं पदपिण्डरूपम् -இந்தப்பதங்களின் சமுதாய வடிவம்

वाचकम् –இந்த வாக்கியார்த்தத்திற்கு வாசகமாம்

इति आकलय्य–என்று அறிந்து

पुनः –மறுபடி-சாமானியமாக வாக்கியத்திற்கும் அதனர்த்தஞானத்திற்கும் காரண காரியத்துவ ஞானத்தினநந்தரம்

एषः तटस्थः जनः –சத்திஞானத்தை விருப்புமிந்த உதாசீன புருஷன்

विशेषतोऽपि–விசேஷ வடிவத்தாலும்

शब्दार्थ संगतिम् –புத்திராதி பதத்திற்கு அவ்வவ் அர்த்த விசேஷத்தில் சத்தியினை

अवैति–அறிகின்ருன்.

விசேஷவுரை

பதார்த்த சமூகம்—பதார்த்தத்தின் சம்சர்க்கம், சாமானியமாக அருத்த சமூகத்தில் பதசமூகத்திற்கு சத்தியினைக்கிரகித்த

பாலனானவன் தன்னிடத்தில் புத்திரனது பீடை அநிஷ்ட சாதனமா மென்று அறிந்தவனாய் தேவதத்தனுடைய புத்திரனது பீடையையறிந்த வனாய் "தேவதத்த உனது புத்திரன் பீடையுற்றிருக்கின்றான்" என்னும் வாக்கிய சிரவணத்தினனந்தரம் பிதாவினிடத்தில் அத்தியந்தம் மலின மான முகம் முதலியவற்றை பார்த்து முன்போல அநிஷ்ட ஞானத்தை யநுமித்து அதன்கண் வாக்கிய ஜன்னியத்தன்மையையும் நிச்சயித்து புத்திரன் முதலிய அர்த்த விசேஷத்தில் புத்திராதி பதத்திற்கு யோக்கியே தரான்விதத்தில் தனித்தனி சத்தியையறிகின்றான் ஆதலால் முதலிற் சத்தி ஞானம் பிரவர்த்தக வாக்கியத்தினாலேயே நியமமாகவுண்டாம் என்னும் வாதியின் கூற்று பிராந்தி மூலமேயாம் என்பது கருத்து.

இந்தப்பிரகாரம் பிரசித்த பதத்தின் சமபிவியாகாரத்தாலும் அப்பிரசித்த பதத்திற்கு காரியான்வயப் பிரதீதியின்றியே யோக்கியே தரான்விதத்தில் சத்தி கவரப்படுதலாலும் சத்தார்த்தத்திற்குக் காரியான் வயித்துவ நியமமின்றாம். ஆண்டும் பதாந்தரத்திற்குக் காரியான் விதத்தில் முதலில அறியப்பட்ட சத்தியை யநுசரித்து காரியபதத்தின் அத்தியாகாரம் இருக்கட்டுமே என்று சொல்லற்க யோக்கியேதரான் விதத்திலேயே முதலில் சத்திக்கிரகணத்தை யுபபாதனஞ் செய்திருத்தலால் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார். :—

### சுலோகம்

**काष्ठैःस्थाल्यां पचति विविधैरोदनं पूर्णिकेति**
**श्रुत्वा बालः सपदिमनुते काष्ठशब्दस्य शक्तिम् ।**
**दृष्ट्वा तस्मिन्पचनकरणं प्रज्वलत्काष्ठजातं**
**न्यायोपायादितरवचसां शक्तिषु प्राक्प्रवीणः ॥ ३६२ ॥**

### பதவுரை

**इतरवचसाम्** –காஷ்ட பதத்தினும் வேறான பதங்களுக்கு

**शक्तिषु**-அமத்திரம் (பாத்திரம்) முதலியவற்றை விஷயமாகவுடைய சத்திகளை

**प्राक्प्रवीणः** – இந்தப்பிரயோகத்திற்கு முன்பு அறிந்த நிபுண - வித்துவானானவ

बालः —பாலனுனவன்

चूर्णिका—தாசியானவள்

विविधैः —அநேகப்பிரகாரமான

काष्ठैः -காஷ்டங்(விறகு)களால்

स्थाल्याम् —சமையற் பாத்திரத்தில்

ओदनम् —அன்னத்தை

पचति—சமைக்கின்ருள்

इति श्रुत्वा—என்னும் வாக்கியத்தைக்கேட்டு

पचनकरणम् --சமைத்தலுக்குக் கருவியான

प्रज्वलकाष्ठजातं च—எரிகின்ற காஷ்ட சமூகத்தையுங்கண்டு

तस्मिन् —அக்காஷ்டத்தின் கண்

न्यायोपायात् —நியாய பலத்தினுல்

काष्ठशब्दस्य—காஷ்ட சத்தத்தின்

शक्तिम् —சத்தியினை

सपदि—சீக்கிரம்

मनुते—அறிகின்ருன்

## *விசேஷவுரை*

நியாய பலத்தாலறிதலாவது அமத்திரம் முதலிய அவ்வவ்வர்த்த விசேஷத்தில் ஸ்தாலீ முதலிய பதங்களுக்கு சத்தியினை முன்னரே நிச்சயித்திருத்தலால் பாரிசேஷம் முதலிய நியாயத்தால் காஷ்ட சத்தத்தின் சத்தியினை யறிதலாம். **(362)**

## *அவதாரிகை*

இப்போது முதலிலுண்டாகும் சத்திஞானம் பிரவர்த்தக வாக்கியத்தினதீனமாம் என்னும் நியமத்தை யங்கீகரித்த போதிலும் காரியான்விதத்தின்கண் சத்தியின்ரும் கிரியையினும் வேருன காரியமே உலகிற் பிரசித்தமின்மையின் எனக்கூறுகின்ருர் :—

### சுலோகம்

**न च किमपि नः कार्यं नामप्रमाणपथानुगं
यदिह तु पुनर्लिङ्लोडादेरुपैष्यति वाच्यताम् ।
न खलु तदितो धात्वर्थादेः पृथग्व्यवसीयते
व्रजतु तदिह श्रेयोहेतुर्लिङादिपदार्थताम् ॥ ३६३ ॥**

### பதவுரை

**इह**—உலகிலாவது வேதத்திலாவது

**किमपि कार्यं नाम**—யாதொரு காரியமும்

**नः**—எங்களுக்கு

**प्रमाणपथानुगम्**—பிரமாணமார்க்கத்திற்கு விஷயம்

**न**—இன்றும்

உலகின் கண் பகுதிப்பொருளினும் வேறுகக்காரியமென்பதின்ரும் பகுதிப்பொருளே காரியமாமென்பதுவும் சரியன்று அது பகுதியினுலேயே கூறப்பட்டமையின் லிங் முதலிய விகுதிகளாலும் கூறப்படுதல் பொருத்தமின்மையின் அன்னியத்தாலடையப்படாததுவே சத்தார்த்த மாதலின் காரியத்துவ வடிவத்தால் பகுதிப்பொருளே லிங் விகுதியின் பொருளாமென்று சொல்லற்க காரியத்தன்மை கிருதிசாத்தியத்தன்மை வடிவமாயின் அதற்கு அதிப்பிரசக்தத்தன்மை வருதலினுல் பிரவர்த்தகத் தன்மையின்மையின் பிரவர்த்தகத்தைப்பிரதிபாதிக்கும் லிங் விகுதியின் பொருட்டன்மைப்பொருந்தாமையின் ஆதலால் காரியம் நிரூபிக்கத் தகாது என்பது பொருள். அற்றேல் பதப்பொருளை நிரூபிக்கும் அவசரத்தில் காரியத்தைக் கண்டித்தல் எற்றிற்கு என்னுமிடத்துக் கூறிகின்ருர்.

**यत् तु**—எது

**लिङ्लोडादेः**—லிங் லோட் முதலிய விகுதிகளின்

**वाच्यताम्**—வாச்சியத்தன்மையினை

**उपैष्यति**—அடையும்

து நிச்சயத்தில், காரியத்திற்கு லிங்விகுதியின் வாச்சியத்தன்மை சம்பவிக்கின்றதில்லையென்று கூறுதற்கு அதனைக்கண்டித்தலாமாதலின் அசங்கதமின்றென்பது பொருள். புனசந்தம் அலங்காரத்தின் பொருட்டாம். அற்றேல் என்னுல் இது செய்யத்தக்கது என காரியமே அநுபவிக்கப்படுகின்றது ஆதலின் அது அப்பிரமாணகம் எங்ஙனமாம் என்ருசங்கித்து கிருதியின் சாத்தியத்தன்மையால் பகுதிப்பொருளாவது அல்லது அதனுகாரமும் சிகீர்ஷையெனப் பெயரியதுமான அதனிச்சை யாவது அவ்வாறு அநுபவிக்கப்படுகின்றது அதனினும் வேருக யாதொன்றுமின்ருமெனக்கூறுகின்ருர்

**इतः**—பிரசித்தமான இந்த

**धात्वर्थादेः**—பகுதிப்பொருள் முதலியவற்றினின்றும்

**पृथक्**—வேருக

**तत्**—காரியமானது

**न खलु व्यवसीयते**-நிச்சயிக்கப்படுகின்றதில்லை ஆதலால்

பகுதிப்பொருள்=கிரியை, ஆதிசத்தத்தால் காரகம் முதலிய வற்றினைக்கவர்க, கடம் (பாய்) கர்த்தவ்யமாம், திருப்தி காரியமாம் என காரகத்திலும் பயனிலும் கருத்தவ்யத்தன்மைப்பிரதீதியாதலின், அப்படியானுல் பிரவர்த்தகமென்பது யாது லிங் முதலியவற்றுல் எது சொல்லப்படுகின்றது சத்த பாவனை முதலியது பாலர் முதலியோரின் வியவகாரத்திற்குக் காரணமாகாமையின் மத்தியம விருத்தனது பிர விருத்தியால் அநுமிக்கப்படாத அதற்கு லிங் விகுதியின் வாச்சியத் தன்மைக்கற்பனைப் பொருந்தாமையின் என்ருசங்கித்து வாஸ்தவந்தான் இஷ்டசாதனத்தன்மையே அறியப்படுகின்றதாகி பாலர் முதலியோரின் பிரவிருத்தியில் காரணமாக நிச்சயிக்கப்பட்டுளது அதுவே பிரகிருதத்தில் லிங் முதலியவற்றின் வாச்சியமாகக் கற்பிக்கத்தக்கது எனக்கூறுகின்ருர்.

**इह**—விதிவாக்கியங்களில்

**तत्**—கிரியை முதலிய வஸ்துவே

**श्रेयोहेतुः**-இஷ்டசாதனமாய்

**लिङ्गादिपदार्थताम्**- லிங்முதலிய பதங்களின் வாச்சியத் தன்மையினை

**व्रजतु**—அடையட்டும்

சிரேயோஹேது—இஷ்டசாதனத்தன்மை, பாவப்பிரதான நிர்த்தேசமாம். (363)

## அவதாரிகை

அற்றேல் சமித்தைக்கொண்டுவா என்னும் ஆசாரியரது வசனத்தால் மாணவகன் பிரவிருத்திக்கின்றான் அதனால் அவனுக்கு அற்பமும் இஷ்டம் அடையப்படுவதின்றாம் மாறாய் மகத்தான துக்கமே உண்டாகின்றது ஆதலால் இஷ்டசாதனத்தன்மை பிரவர்த்தகமாக எவ்வாறாதும் அது லிங்வாச்சியமாக எதனாலாம் என்னுமிடத்துக்கூறுகின்றார்:—

## சுலோகம்

**न खलु जगति श्रेयोहेतु प्रतीत्युदयादृते**
**पुरुषवचनात् क्वापि प्राज्ञः प्रवर्तितुमर्हति ।**
**पुरुषवचनाच्छ्रेयो हेतुप्रतीत्युदयात्पुनः**
**तदनुवशगोरागोत्पत्तौ ततः सहिचेष्टते ॥ ३६४ ॥**

## பதவுரை

**जगति**—உலகின்கண்

**पुरुषवचनात्**—ஆசாரியர் முதலியோர் வாக்கியத்தால்

**श्रेयोहेतुप्रतीत्युदयादृते**—இஷ்டசாதனத்தன்மை ஞானத்தினுற்பத்தியினாலன்றி

**क्वापि**—ஓரிடத்தும்

**प्राज्ञः**—விசார சீல புருஷன்

**प्रवर्तितुम्**-பிரவிர்த்தித்தற்கு

**न खलु अर्हति**-தகுதியுடையவனல்லன்

மாணவகனுக்கும் பலமுடைய சிரேயஸைச்செய்வது ஆசாரியரது ஆஞ்ஞையின் பரிபாலனமாம் அல்லது அத்தகைய அதிருஷ்டம சிரேயஸாகவுள்ளதேயாம் ஆதலின் அதன் சாதனத்தன்மையே ஆண்டும்

பிரவர்த்தகமாம் மாணவகன் அவ்விரண்டையும் விரும்பானுயின் அப்போது பிரவிருத்திக்கவே மாட்டான் அப்படிப்பட்ட துஷ்ட சிஷ்யர்கள் காணப்படுகின்ருர்களாதலின் என்பது கருத்து அப்படியானுல் மறைப் பின்றியிருத்தலால் இராகமே பிரவர்த்தகமாகட்டுமே என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

**पुरुषवचनात्**–பெரியோரது வாக்கியத்தால்

**श्रेयोहेतुप्रतीत्युदयात्**–இஷ்டசாதனத்துவ ஞானத்தினுதயத்தால்

**पुनः**–பின்பு

**रागोत्पत्तौ**–இச்சை யுற்பத்தியாகும்போது

**ततः**–அதனுல்

**तदनुवशगः**–இச்சையினதீனனுயிருந்துகொண்டு

**स हि**–அந்த மாணவகன்

**चेष्टते**–பிரவிர்த்திக்கின்ருன்

## *விசேஷவுரை*

சிகீர்ஷை (செய்தற்கிச்சை) வடிவ பகுதிப்பொருளின் இராகம் பிரவிருத்தியின் மறைப்பின்றிய முற்காலத்திலிருக்கின்றது என்பது வாஸ்தவந்தான் ஆனுல் ஆசாரியர் முதலியோரது வசனத்தால் இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தினுற்பத்தியாம் அதன் பின்பு இராகத்தினுற் பத்தியாம் அதன் பின்பு அதன் வசமாயிருந்துகொண்டு மாணவகன் முதலியோர் பிரவிருத்திக்கின்றனர் என்பது பொருள் அதாவது சிகீர்ஷைக்கு நிமித்தமான யாதொரு இஷ்ட சாதனத்தன்மை ஞான முண்டோ அதுவே வெளிப்பிரவிர்த்தியிலும் காரணமாம் என்பது பொருள் அற்றேல் இஷ்ட சாதனத்தன்மை சென்றது முதலியவற்றிற் பொதுவாக இருத்தலின் அஃது எங்ஙனம் பிரவர்த்தகமாம் எனின் அற்றன்று கிருதி யோக்கிய இஷ்டசாதனத்தன்மையே பிரவர்த்தகமாதலின் அதிப்பிரசங்க மின்ருமென்று கூறப்பட்டிருத்தலின் என்க. **(364)**

## *அவதாரிகை*

இந்தப்பிரகாரம் இருமதத்தும் சம்மதித்துள்ள இஷ்ட சாதனத் தன்மை ஞானத்திற்கு பிரவிருத்தி காரணத்தன்மையையுபபாதனஞ்

செய்து அதன் கண் லிங்முதலியவற்றின் சத்திஞானத்தைக்கூறுதற்கு முதலில் பிரவிருத்தியைக்குறித்து மறைப்பின்றிய முற்காலத்திலுள்ள சிகீர்ஷையின் அநுமானத்தையும் அதன் ஏதுவான இஷ்டசாதனத் தன்மை ஞானத்தின் அநுமானத்தையும் சத்திஞானத்தை விரும்பும் பாலனுக்குக்கூறுகின்றார்: —

*சுலோகம்*

नयनिपुणधीर्बालश्चेष्टां समीक्ष्य समीहितुः
कृततदुचित व्याप्तिज्ञानः पुरा निज आत्मनि ।
परतनुगतं श्रेयोहेतु प्रतीत्युदयोत्थितं
चरितविषये रागं तस्य प्रवर्तकमिङ्गति ॥ ३६५ ॥

*பதவுரை*

**नयनिपुणधीः**–அனுமானத்தில் குசலபுத்தியுள்ளவனும்

**निजे आत्मनि**–தனதான்மாவின்கண்

**पुरा**–முன்னரே

**कृततदुचित व्याप्तिज्ञानः**–அநுமானத்திற்கு உசிதமான வியாப்தி ஞானத்தையறிந்தவனுமான

**बालः**–பாலகன்

**समीहितुः**–பிரவிருத்திக்கின்ற மத்திம விருத்தனது

**चेष्टाम्**–பிரவிருத்தியை

**समीक्ष्य**–கண்டு

**परतनुगतम्**–அன்னியனிடத்துள்ளதும்

**श्रेयोहेतुप्रतीत्युदयोत्थितम्**–கிருதிசாத்திய இஷ்டசாதனத்தன்மை ஞானத்தாலுற்பன்னமானதும்

**चरितविषये**–கிருதிசாத்திய இஷ்டசாதனமாக அறியப்பட்ட பகுதி பொருளில்

**प्रवर्तकम्**–பிரவர்த்தகமுமான

**तस्य रागम्**–பிரவிருத்திக்கின்றவனது ராகத்தினை

**इङ्गति**–அநுமிக்கின்றான்

### விசேஷவுரை

பசுவைக்கொண்டுவா என்பது முதலிய லிங் முதலியவற்ருேடு சேர்த்து உச்சரிக்கப்பட்ட வாக்கியத்தினைக்கேட்டு பிரவிருத்திக்கின்ற மத்திம விருத்த புருஷனது பசுவைக்கொண்டு வருதலாதி சேஷ்டையைக் கண்டு முன்பு தன்னிடத்தில் பிரவிருத்தியானது சிகீர்ஷையால் ஜன்னியமாம் என்னும் வியாப்தி நிச்சயமுடைய பாலன். பிரவிருத்தி சிகீர்ஷையால் ஜன்னியமாம், விசாரமுள்ளவனது பிரவிருத்தியாதலால், எனது போஜனுதிப்பிரவிருத்திபோன்று, என்று மத்திமவிருத்தனிடத்தில் சிகீரிஷையை யநுமானித்து அந்தச்சிகீரிஷையும், வருணிக்கப்பட்ட இஷ்டசாதனத்தன்மை ஞானத்தால் ஜன்னியமாம், சிகீரிஷையாதலால், எனது போஜனுதிசிகீரிஷை போன்று, என்று கிருதி சாத்தியஇஷ்ட சாதனத்தன்மை ஞானத்தையும் அநுமிக்கின்ருன் என்பது பொருள்.

### அவதாரிகை

அதனுற் சித்தித்தது என்னை யென்னுமிடத்துக்கூறுகின்ருர் :—

### சுலோகம்

**प्रवर्तकोत्थाननिबन्धने ततः समीहितोपायविशेषवस्तुनि ।**
**गिरोऽनुमाय प्रतिपत्ति हेतुतां विशेषसिद्धौ तु समीहते पुनः ॥**

### பதவுரை

**ततः**-பிறனிடத்துள்ள ராகத்தின் அனுமானனந்தரம்

**प्रवर्तकोत्थाननिबन्धने**—பிரவர்த்தக ராகோற்பத்தியில் ஏதுவான

**समीहितोपाय विशेषवस्तुनि**—கிருதிசாத்தியத்துவ விசிஷ்ட இஷ்டசாதனத்தின்கண்

**गिरः**—லிங்யாதியோடு கூடிய வாக்கியத்திற்கு

**प्रतिपत्तिहेतुताम्**—ஞானகாரணத்துவத்தை

**अनुमाय**—அநுமானஞ்செய்து

**विशेषसिद्धौ तु**—லிங் முதலிய பதவிசேஷத்திற்கு அர்த்த விசேஷத்தின்கண் சத்தி சித்தியின் பொருட்டு

**पुनः**—மறுபடியும்

**समीहते**-இனிக்கூறப்படும் பிரகாரமாக யத்தினமுள்ளவனுகிருன் வேறுமொரு பிரகாரமாக பதவுரை

**प्रवर्तक**-பிரவிர்த்திக்கத்தக்கது என்னும் ராகத்தின்

**उत्थान**-உற்பத்தி எந்த ஞானத்தாலோ அந்த (உற்பத்திக் கேதுவான) இஷ்டசாதனத்துவ விசேஷஞானத்தின்

**निबन्धने**-விஷயமான இஷ்டசாதனத்தில் என ஒட்டுக மற்றது முன்போலவே

முதலுரையில் ராகத்திற்கேது இஷ்டசாதனமாம் இரண்டாவது உரையில் ராகத்திற்கேது இஷ்டசாதன ஞானமாம் என்பது பொருள்.

## *அவதாரிகை*

இவ்வாருயினும் ஆக்கியாத (விகுதி) மாத்திரத்திற்கு அதன்கண் சத்தியா அல்லது ஆக்கியாதத்தின் விசேஷமாகிய லிங்லோட் (வியங் கோள்) முதலியவற்றிற்கே அதன்கண் சத்தியா என்பது எவ்வாறு விவேகிக்கத்தக்கது என்றாசங்கித்து அந்த யத்தின விசேஷத்தையே தெரிசிப்பித்தற்கு முதலில பசு முதலிய பதத்தின் சாதாரணமான அதன் விவேக உபாயத்தைக் கூறுகின்றூர் :—

## *சுலோகம்*

**पदान्तरस्यागमनादिहान्यतस्तथा पदस्योद्धरणादितो गिरः ।**
**विशेषसिद्धिं लभते प्रयत्नवान् पदार्थसंबन्धगतां विचक्षणः ॥**

## *பதவுரை*

**इह**-குதிரையைக் கொண்டுவா என்னும் வாக்கியத்தின் கண்

**पदान्तरस्य**-முன்பு கேட்கப்பட்ட பசுவைக் கொண்டுவா என்னும் வாக்கியத்திலுள்ள பசு பதத்தினும் வேருன குதிரைப் பதத்தை

**अन्यतः**-வேறு வாக்கியத்தினின்றும்

**आगमनात्**-கொண்டுவருதலாலும்

**तथा**-அப்படியே

**इतः गिरः**-பசுவைக் கொண்டுவா என்னுமிந்த வாக்கியத்தினின்றும்

**पदस्य**–கேட்கப்பட்ட பசுபதத்தை

**उद्धरणात्** –தியாகஞ் செய்தலாலும்

**विचक्षणः**–மேதாவியும்

**प्रयत्नवान्** –கொள்ளுதல் தள்ளுதலில் பிரயத்தினமுள்ளவனுமான புருஷன்

**पदार्थसंबन्धगताम्** –பதத்திற்கும் அர்த்தத்திற்குமுள்ள சம்பந்த வடிவ சக்தியினை விஷயஞ் செய்கின்ற

**विशेषसिद्धिम्** –விசேஷ ஞானத்தை

**लभते**–அடைகின்றான்.

## விசேஷவுரை

பிரயத்தினமுள்ளவன்=பிரயோகிக்கப்பட்ட பதவிசேஷத்தை நீக்குங்கால் எவ்வர்த்த விசேஷத்தின் ஞானமுண்டாகின்றதில்லையோ பிற வாக்கியத்தினின்றும் கொண்டுவரப்பட்ட பதவிசேஷத்தின் ஞானத்தால் எவ்வர்த்த விசேஷத்தின் ஞானமுண்டாகிறதோ அப்பத விசேஷங்களுக்கு அவைகளே பொருளாம். அவற்றின் ஞானம் அவைகளின் அன்வயாதியையநுசரித்திருத்தலின்என நியாயாநுசந்தானமுடையவனென்பது பொருள். இதனாலேயே மேதாவியெனப்படுவன். (367)

## அவதாரிகை

கூறப்பட்ட சாமானிய நியாயத்தால் லிஙாதி விசேஷத்திற்கு இஷ்ட சாதனத்தன்மைவடிவ அர்த்தத்தில் சம்பந்தத்தைச் சாதிக்கின்றார்.

## சுலோகம்

**लडादिशब्देऽपगते लिङादौ प्रत्यागतेऽभीप्सितसाधनत्वम् ।**
**प्रतीयते तेन लिङादिशब्दस्तदर्थवाचीति स वेत्ति बालः ॥**

## பதவுரை

**लडादिशब्दे**–பசுவைக் கொண்டுவருகிறான் என்பது முதலிய வாக்கியத்திலுள்ள லட் (நிகழ் காலத்தைக் காட்டும் விகுதி) முதலிய சத்தத்தை

**अपगते**–தள்ளி

**लिङादौ** -லிங் (விதிவிகுதி) முதலிய சத்தத்தை

**प्रयोगते**--சேர்க்கும்போது

**अभीप्सितसाधनत्वम्** -இஷ்ட சாதனத்தன்மை

**प्रतीयते**- அறியப்படுகின்றது

**तेन**-அதனுல்

**लिङादिशब्दः**:-லிங் முதலிய சத்தமானது

**तदर्थवाचि इति**-இஷ்ட சாதனத்தன்மையின் வாசகமாமென

**स बालः**:-அந்தப் பாலகனுனவன்

**वेत्ति**-அறிகின்முன்

## *விசேஷவுரை*

பசுவைக் கொண்டுவருகிருன் என்று பிரயோகிக்கப்பட்ட வாக்கியத்திலுல் பசுவைக் கொண்டுவருதலின்கண் இஷ்ட சாதனத்தன்மை பிரதீதியாகின்றதில்லை எப்போது மறுபடியும் கொண்டுவருகிருன் என்பது முதலிய வர்த்தமானுதி விகுதிகளைத்தள்ளி அவ்வாக்கியத்திலேயே கொண்டு வா என்பது முதலிய விதிபதம் பிரயோகிக்கப்படுகிறதோ அப்போது அது பிரதீதியாகின்றது. அதனுல் பாலன் லிஙாதி சத்தம் அதன் வாசகமாமென அறிகின்முன். இவ்வாறு லிஙாதியானது லடாதி சாதாரண ஆக்கியாதத்தன்மை வடிவத்தால் இஷ்ட சாதனத்தன்மை வாசகமன்ரும். மற்ருே லிங்தன்மை முதலிய வடிவத்தானேயேயாம் என்பது கருத்து. (368)

## *அவதாரிகை*

இவ்வாறு யோக்கியேதரான்விதத்தின்கண் பசு முதலிய பதங்களுக்குச் சத்தியாம். கிருதி யோக்கிய இஷ்ட சாதனத்தன்மை ஞானம் பிரவர்த்தகமாம். அதன் கண்ணேயே லிங்முதலியவற்றிற்கு சத்தியாம். காரியத்தின்கண் அன்ரும். அன்றியும் பசு முதலிய பதத்திற்கு யோக்கியேதர காரியான்வயத்தின்கண் அன்ரும். கௌரவதோஷம் வருதலின் என்று கூறப்பட்டது. இவ்வாருயின் அத்தியந்தம் லாகவமாயிருத்தவால் அன்விதத்தின்கண்ணேயே சத்தியிருக்கட்டுமே யோக்கியேதரான்விதத்தின்கண் வேண்டாமே என்னுஞ் சங்கைக்கு சித்தார்த்தவாதிகளான எங்களுக்கு அஃது இஷ்டமேயாமெனக் கூறுகின்ருர் :—

சுலோகம்

**योग्येतरान्वितत्तया न च वाच्यताऽस्य**
**कार्यान्वितत्ववपुषा सुतरां न चेष्टा ।**
**किं त्वन्वितत्ववपुषो न विशेषणस्य**
**किंचित्प्रयोजकमिहास्ति निरूपणायाम् ॥ ३६९ ॥**

பதவுரை

**अस्य**–பசு முதலியவற்றிற்கு

**योग्येतरान्वितत्तया**-யோக்கியேதரான்விதத் தன்மையால்

**वाच्यता**–பசு முதலிய பதத்தின் வர்ச்சியத்தன்மை

**न च इष्टा**–சம்மதமின்றாம்

யோக்கியேதரான்விதத்தின்கண் சத்தியில்லையாயின் காரியான்விதத்தின்கண் சத்தி இஷ்டமா எனின் அது மிகக்கௌரவ தோஷத்தால் தூஷிக்கப்பட்டமையின் அன்றெனக் கூறுகின்றார்.

**कार्यान्वितत्ववपुषा**–காரியான்விதத்தன்மை வடிவத்தாலோ

**सुतराम्**– அத்தியந்தம்

**न च इष्टा**–இஷ்டமின்றாம்

அப்படியானால் சுத்த பதார்த்தத்தின்கண் சத்தியாஎனின் அதுவுமன்று அன்வயப்பிரதீதிக்கு அகாரணத்தன்மைப் பிராப்தியாதலால் என்னுமபிப்பிராயத்தால் ஆகாங்க்ஷை வாயிலாகக் கூறுகின்றார்.

**किं तु**–மற்றோ

**अन्वितत्ववपुषः**–அன்விதத்தன்மை வடிவத்திற்கே பதவாச்சியத் தன்மையாம்

அற்றேல் யோக்கியமும் இதரமும் அல்லாததோடு அன்வயம் சம்பவிக்கிறதில்லை. ஆதலின் யோக்கியேதரமும் அதன்கண் விசேஷணமாமெனின் வாஸ்தவந்தான் அஃதின்றி அன்வயப் பிரதீதியுண்டாகின்றதில்லை. அப்படியானாலும் சத்தார்த்தத் தன்மையின்கண் அஃது பிரயோஜகமன்றாம். அஃதின்றியும் அன்வய மாத்திரத்திற்கு சத்தார்த்தத் தன்மையைக் கொள்ளும்போது அதன் விசேஷணத்தினைப்

பிரயோஜக (காரண)த் தன்மையால் நிருபிக்க முடியாமையின் என்னு மபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

**निरूपणायाम्** –விசாரிக்குங்காலத்தில்

**इह**–பதவாச்சியத்தின் கண்

**विशेषणस्य**–காரியத்தன்மை அல்லது யோக்கியேதரத்தன்மை முதலிய விசேஷணத்திற்கு

**प्रयोजकम्** –சாதகம்=அதாவது அஃதில்லாவிடின் பாதகம

**किंचित् न अस्ति**-அற்பமுமின்றும்

## *விசேஷவுரை*

அற்றேல் ஏதேனுமொன்றோடுகூடின பசு முதலியவற்றில் பசு முதலிய பதத்திற்கு சத்தியா அல்லது கொண்டு வா என்பது முதலிய பதத்தாற் சொல்லப்பட்ட கொணர்தல் முதலியவற்றோடுகூடிய பசு முதலியவற்றிற் சத்தியா? முதற்பக்ஷம் சரியன்று வாக்கியார்த்தத்திற்கு அநியமம் பிராப்தியாதலின் ஓர்போது பசுவைக் கொண்டுவா என்னும் வாக்கியத்தால் குதிரையைக் கொண்டுவா பசுவை நிவர்த்தி செய்வாய் என்னுமநுபவமுண்டாதல் வேண்டும். இரண்டாவது பக்ஷமும் சரியன்று அன்னியோன்னியாசிரயம் வருதலின் ஆநயநபதத்தால் கோபதாபிஹித (பசு என்னும் பதத்தாற் கூறப்பட்ட) அன்விதத்தைக்கூறின் ஆநயந பதார்த்தான்வித கோவை கோபதம் பிரதிபாதிக்கும் இவ்வாறு ஆநயந பதமுமாம் அதாவது கோபதத்தால் ஆநயனபதாபிஹித அன்விதத்தைக் கூறின் கோபதார்த்தான்வித ஆநயநத்தை ஆநயனபதம் பிரதிபாதிக்கும் இவ்வாறு அன்னியோன்னியாசிரயமாமெனின் அற்றன்று.

கோ முதலிய பதத்தால் தத்தம் பொருளின் ஸ்மிருதியாவது அல்லது அதன் ஸம்ஸ்காரத்தின் உற்போதமாவது உண்டுபண்ணப் படுகிறது என்று கூறவேண்டும். அன்றேல் சம்ஸ்காரங்கெட்ட புருடருக்கும் வாக்கியார்த்தத்தின் அநுபவமுண்டாதல் வேண்டும் ஆதலின் ஸம்ஸ்காரத்தினுற்போதமே பதஜன்னியமாம் என்பது ரகசியம் அன்றேல் பதார்த்தத்தின் ஸ்மிருதியும் ஸம்ஸ்காரத்தினுற்போதமும் பதஜன்னியங்களாமெனவரும் அது கௌரவமாம். ஸ்மிருதி சீக்கிரம் விநாசமுடையதாதலின் அவ்வப்பத ஜன்னிய பதார்த்த ஸ்மிருதியினும்

வேருக சகல பதார்த்த விஷயக வேறு ஸ்மிருதியைக் கொள்ளவேண்டி யிருத்தலினுலும் வாக்கியார்த்தாநுபவ சாமக்கிரியினுல் அது தடுக்கப் படுதலானும் என்க.

ஸம்ஸ்காரத்தினுற்போதமோ காரிய முண்டாகும் பரியந்தமுமிருப்ப தாதலின் வேறு உற்போதத்தின் பிராப்தியின்ரும். எவ்விஷய ஸம்ஸ்காரம் பதத்தால் உற்போதஞ் செய்யப்படுகின்றதோ அவ்விஷயம் ஆஸன்னம் (சமீபித்தது) எனப்படுகின்றது. இவ்வாறு ஆகாங்க்ஷித மும் யோக்கியமும் ஸந்நிஹிதமுமான வஸ்துவோடு கூடினதை பதங்கள் பிரதிபாதிக்கின்றன. ஆதலின் அன்னியோன்னியாசிரயமின்ரும்.

வாக்கியத்தாலுண்டான அநுபவத்திற்கே இப்படிப்பட்ட பதார்த் தான்வயத்தை விஷயஞ் செய்யுந்தன்மை நியமமாதலின் அவ்வப் பதத்தாலுற் போதஞ்செய்யப்பட்ட ஸம்ஸ்கார கோசர அர்த்த விசேஷத் தால் நிருபிக்கப்பட்ட அன்வயத்தை சாமானிய அன்வயத்தில் சக்தியினை யுடைய பதங்களாலும் பிரதிபாதித்தலால் வாக்கியார்த்த விசேஷத்தின் சித்தியாமென்பது கருத்து, கோ=பசு, ஆநயனம்=கொண்டுவருதல், அன்விதம்—கூடியது, அபிஹிதம்—சொல்லப்பட்டது. (369)

## அவதாரிகை

அபிகிதான்வயவாதிகளின் மதத்தை இப்போது தூஷித்தற்காக அநுவாதஞ் செய்கின்ருர் :—

## சுலோகம்

**यत्केचिदाहुरभिधाय निजान्पदार्था नेतावतोपरतवन्ति पदानि तेभ्यः ।**
**पश्चाद्विशेषणविशेष्यतया तु तेषां संसर्गबुद्धिरपराऽवतरिष्यतीति ॥**

## பதவுரை

**केचित्** -சில ஆசிரியர்

**पदानि**—பசு முதலிய பதங்கள்

**निजान् पदार्थान्** —தமது அனன்வித பதார்த்தங்களை

**अभिधाय**—கூறி

**एतावता**—இத்துணை மாத்திரத்தால்

**उपरतवन्ति**-பரியவசானமுடையவையாகின்றன,

கோ முதலிய பதங்கள் அனன்வித பதார்த்த மாத்திரத்தைப் பிரதிபாதித்தலால் உபரதிலையயடைகின்றன வாக்கியார்த்தாநுபவத்தை யுண்டுபண்ணுகிறதில்லையென்பது பொருள் அப்படியானல் வாக்கியார்த்தபோதம் எவ்வாறுண்டாகும் அஃதின்றி சுரோதாவிற்குப் பிரவிருத்தி முதலியவைதான் எப்படியுண்டாகும் என்னுமிடத்துக் கூறுகின்றார்.

**पश्चात्** –பதவியாபாரத்தின் உபரமானந்தரம்

**तेभ्यः तु**–பதாபிகித பதார்த்தங்களினுலேயே

**तेषाम्** –பதார்த்தங்களின்

**विशेषण विशेष्यतया**-விசேஷண விசேஷியத் தன்மையால்

**संसर्गबुद्धिः**–சம்பந்த ஞானம்

**अपरा**–பதஜன்னியப் பிரதீதியினின்றும அன்னியமாக

**अवतरिष्यति**–உற்பத்தியாகும்

**इति यद् आहुः**–என்று யாதொன்றைக் கூறுகின்றனரோ அது பொருத்தமற்றது என வரும சுலோகத்தோடு அன்வயஞ்செய்க

### *விசேஷவுரை*

பதங்களுக்கு பதார்த்த ஞானத்திலேயே பரியவசானமாம். அன்றேல் அதாவது வாக்கியார்த்த போதத்திலேதுவாகுமாயின் விரம்ய வியாபாரம் பிராப்தியாதலின், பதங்களாற் கூறப்பட்ட பதார்த்தங்களே விசேஷண விசேஷியத்தன்மையால் பரஸ்பரம் சம்பந்தமுடைய தத்தம் சொரூபத்தைப் போதிக்கின்றன. ஆதலின் வாக்கியார்த்தாநுபவத்தின் அநுபபத்தியின்றும் சுரோதாவின் பிரவிருத்திக்கும் அநுபபத்தியின்றும் வர்த்தமான காலத்திலிராத அதீதம் முதலிய அர்த்தங்கட்கு அநுபவத்தை யுண்டுபண்ணுந்தன்மையெப்படிக்கூடும் என்று சொல்லற்க. பரமதத்தில அப்படிப்பட்ட பதம் முதலியவற்றிற்குப்போன்று ஞானத்திற்கு விஷயமாந்தன்மையால் அதீதம் முதலிய அர்த்தங்கட்கும் ஞான காரணத்தன்மை பொருந்துதலின், அன்றேல் பதங்களிலும் அநுபவ காரணத்தன்மையின் அநுபபத்தியை நிவர்த்திக்க முடியாதாகலின், அதாவது அத்தியந்தம் லாகவமாயிருத்தலால் சுத்த அர்த்தத்திலேயே பதங்களுக்கு சத்தியாம் என்பது கருத்து. (370)

## அவதாரிகை

அனன்விதார்த்தத்தில் சத்தியையொப்பிடின் அத்தியந்தம் லாகவ மென்பது வாஸ்தவந்தான் அங்ஙனமாயினும் சத்தத்தால் விசிஷ்டாநுபவம் அநுபவிக்கப்படுதலால் இந்த உனது கற்பனை அப்பிராமாணிகமாம் எனக்கூறுகின்றார் :—

## சுலோகம்

तद्दुर्घटं न खलु किंचिदपि प्रमाण-
मस्याः प्रसाधकमुदीरितकल्पनायाः ।
येनोपलब्धि विषयत्वमुपागतानि
संसृष्टमेव तु पदानि पदार्थमाहुः ॥ ३७१ ॥

## பதவுரை

**तद्** –நீ கூறினது

**दुर्घटम्** -பொருந்தாது

எதனற்பொருந்தாது என்னுமிடத்துக் கூறுகின்றார்.

**अस्याः उदीरित कल्पनायाः**– பதார்த்தஞான வியவதானத்தால் பின்பு சம்சர்க்க ஞானமுண்டாகின்றது என்று கூறப்பட்ட கற்பனையில்

**प्रसाधकम्** -சாதகமான

**प्रमाणम्** –பிரமாணமானது

**किंचिदपि न खलु**–அற்பமுமின்றும் ஆதலின்

எதனற் பிரமாணமின்றுமெனின் யாதொரு காரணத்தினுல் பதங்களுக்கே சம்சர்க்க விசிஷ்டார்த்தத்தைப் போதிக்குந்தன்மை அநுபவ சித்தமாமோ அதனுல் நீ கூறினது பிரமாணமற்றதெனக் கூறுகின்றார்.

**येन**–எதனுல்

**उपलब्धि विषयत्वम्** –சுரோத்திரேந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயத்தன்மையை

**उपागतानि**–அடைவுற்ற

**पदानि**–பதங்கள்

**संसृष्टमेव**-பரஸ்பரம் சம்பந்தமுடைய
**पदार्थम्** -பதார்த்தத்தையே
**आहुः**-கூறுகின்றனர்வா அதனல்

### விசேஷவுரை

பசு முதலிய பதங்கள் பெரியோர்களால் விசிஷ்டார்த்த ஞானத்தை யுத்தேசித்தே பிரயோகிகப்படுகின்றன. அந்த ஞானமே சுரோதாவிற்கு புருஷார்த்தத்தையுண்டுபண்ணுதலின். அதனை யுத்தேசித்தே புத்திமான்கள் சத்தத்தைப் பிரயோகித்தலின் கேட்பவரும் அச்சத்தத்தால் விசிஷ்டார்த்தத்தினையேயறிய விரும்புகின்றனர். பதார்த்த மாத்திரத்தையறிய விரும்புகின்றிலர். ஆதலின் பதங்களுக்கு பதார்த்த மாத்திரத்தில் டரியசொனம் பொருத்தமன்று. ஆதலால் சொற்ப கௌரவமுளதாயினும் அக்கௌரவம் பிராமாணிகமாதலின் அன்விதத்தின்கண் பதங்களுக்குச் சத்தியாமென்று கூறிய யுக்தியினலும் அநுபவ காரிய பலத்தாலும் கற்பிக்கத்தக்கது. ஆதலின் உன்னுற் கூறப்பட்ட கற்பனை பிராமாணிகமனறென்பது கருத்து. (371)

### அவதாரிகை

அற்றேல் சத்தத்தால் பரம்பரையாக விசிஷ்டபோதம் சம்பவிக்கும் போது அன்விதத்தில் சத்தி கற்பிக்கத்தக்கதன்ரும். அத்துணையானேயே பெரியோரது பிரயோகம் முதலியவையும் பொருந்துதலின் என்ரு சங்கித்து சுத்த பதார்த்த போதத்திற்கும் பதத்திற்கும் அன்வய வியதிரேக மறியப்படாமையால் ஏது ஏதுமத்துவம (காரண காரியத் தன்மை) சித்திப்பதின்ரும். பசுவைக் கொண்டுவா என்னும் வாக்கியத்தைப் பிரயோகஞ் செய்யும்போது பதார்த்த ஸ்மிருதி தனியாக அநுபவிக்கப்படுகின்றதில்லையல்லவா. எதனல் பதத்திற்கு அதன் ஏதுத்தன்மை சித்திக்கும் வாக்கியார்த்தாநுபவமோ அதனல் (பெரியாரது பிரயோகத்தால்) அநுபவிக்கப்படுகின்றது. ஆதலின் அன்விதத்தின் கண்ணேயே சத்தியைக் கற்பித்தல் பொருத்தமாமெனக் கூறுகின்ருர்.

### சுலோகம்

नासंसृष्टपदार्थबुद्धिपदयोः पूर्वापरत्वप्रमां
मुक्त्वा कारणकार्यतावगतये कश्चित्समर्थस्तयोः ।

पौर्वापर्यमुदीक्ष्य हेतुफलतां सर्वत्र संगृह्णते
नो चेत्सर्वमसंगतं भवति वः सर्वव्यवस्थाहतेः ॥ ३७२ ॥

*பதவுரை*

**असंसृष्टपदार्थबुद्धिपदयोः**-அனன்வித (சம்பந்தமின்றிய) பதார்த்த ஞானத்திற்கும் பதத்திற்கும

**पूर्वापरत्वप्रमां मुक्त्वा**-முன்பின் றன்மை ஞானமின்றி

**तयोः**-அவைகட்கு

**कारणकार्यतावगतये**-காரணத்தன்மையினையும் காரியத்தன்மையினையும் அறிதற்பொருட்டு

**कश्चित्** -ஒருவனும்

**न समर्थः**-சமர்த்தனன்ரும

நியதமாக முன்னிருக்குந்தன்மை காரணத்தன்மையாம், நியதமாகப் பிற்காலத்திருக்குந்தன்மை காரியத்தன்மையாம். இவ்விரண்டும் பதத்திற்கும் பதார்த்த ஞானத்திற்கும் பூருவாபரத்துவ ஞானமின்றிச் சம்பவிக்கிறதில்லை என்பது பொருள். கூறிய பொருளினையே சாமானியமாக அன்வய முகத்தாலும் கூறுகின்றூர்,

**पौर्वापर्यम्** -காரணகாரியங்களுக்கு முன்பின் றன்மையை

**उदीक्ष्य**-பார்த்து

**सर्वत्र**-தண்டம் கடம் முதலிய எவ்விடத்தும்

**हेतुफलताम्** -காரணகாரியத்தன்மையினை

**संगृह्णते**-அறிஞர் கிரகிக்கின்றூர்கள்

விபக்ஷத்தில் பாதகத்தினைக் கூறுகின்றூர்.

**नोचेत्** -பூருவாபரத்துவ ஞானமின்றியும் காரணகாரியத்தன்மை ஞானமுண்டாகுமாயின்

**वः**-உங்களுக்கு

**सर्वम् असङ्गतम्** -எல்லாமும் அசங்கதம்

**भवति**-ஆகும்

அசங்கதத்தன்மையில் ஏதுவைக் கூறுகின்றூர்.

**सर्वव्यवस्थाहतेः**—தண்டாதி காரணம் கடாதி காரியம் என்னும் காரண காரியத்தன்மையின் வியவஸ்தைக்கு லோபம் பிராப்தியாதலின் (372)

## அவதாரிகை

உத்தரார்த்தத்தை விஸ்தரிக்கின்றவராய் காரியகாரண வியவஸ்தையினபாவத்தில் அநிஷ்டத்தின் பிராப்தியைக் கூறுகின்றார்: —

## சுலோகம்

पूर्वापरान्वयबलेन हि कारणत्व-
कार्यत्वसंगतिमिह प्रतियन्ति लोके ।
नोचेद्भवेदनियमो न च तत्र कर्तुं
कार्याणि कारणविशेषमुपाददीरन् ॥ ३७३ ॥

## பதவுரை

**इह लोके**—இவ்வுலகின்கண்

**पूर्वापरान्वयबलेन हि**—முற்கால பிற்கால சம்பந்த ஞானத்தின் பலத்தால்

**कारणत्व कार्यत्वसंगतिम्**—காரணத்தன்மை காரியத்தன்மைகளின் சம்பந்தத்தை

**प्रतियन्ति**—அறிஞர் அறிகின்றனர்

**नोचेत्**—காரண காரியபாவத்தையங்கீகரியாவிடின்

**अनियमः भवेत्**—இது இதனது காரியம் இது இதனது காரணம் என்னும் நியமம் இல்லாமற்போம்.

**तत्र**—நியமமில்லாமற்போகவே

**कार्याणि**—கடம் முதலிய காரியங்களை

**कर्तुम्**—செய்தற்கு

**कारणविशेषम्**—தண்டம் முதலிய காரணத்தை

**न उपाददीरन्**—குலாலன் முதலியோர் கிரகிக்கமாட்டார்கள்.

## விசேஷவுரை

ஆதலால் வாக்கியார்த்த ஞானத்தின் பொருட்டு பிரயோகிக்கப்பட்ட பதத்தினதும் பதார்த்த ஸ்மிருதியினதும் பூருவாபரத்துவ ஞானம்

சம்பவியாமையால் காரியகாரணத்தன்மை ஞானம் அசம்பவமாகும். ஆதலின் பதங்களுக்கு பதார்த்த மாத்திர ஞானத்தின்கண் பரிய வசானத்தைக் கற்பித்தல் பொருந்துமன்று என்பது கருத்து. (373)

## அவதாரிகை

அற்றேல் பதங்களுக்கு வாக்கியார்த்த ஞானமின்றி பரியவசானம் ஆகவேண்டாம். இத்துணை மாத்திரத்தால் சம்சர்க்கத்தின்கண் சத்தி சித்திக்கின்றதில்லை கௌரவமாதலின், இலாகவத்தால் பதார்த்த மாத்திரத்தில் நிச்சயிக்கப்பட்ட சத்தியினையுடைய பதங்களால் தமது அர்த்தத்தின் ஸ்மிருதி வாயிலாக ஆகாங்க்ஷை முதலிய சஹகாரியின் பலத்தால் சம்சர்க்க ஞானம் சம்பவித்தலின், இவ்வாறாகவே சத்தியின் பலத்தால் பதார்த்த ஸ்மிருதியும் விசிஷ்ட ஞானமின்றி பதங்களின் அபரியவசானமும் சம்சர்க்கத்தின்கண் பதசத்தியினபாவமும் ஆக இந்த மூன்றும் சித்தித்தது எனின் ஆண்டுக் கூறுகின்றார் :–

## சுலோகம்

**पदजातबुद्धिजनिता भवति व्यतिषक्तबुद्धिरिति तावदिह ।**
**न विगानमस्ति भवतामपि चेत् व्यवधानकल्पनमकारणकम् ॥**

## பதவுரை

**इह**–ஈண்டு விருத்தவிபவஹாரஸ்தலத்தில்

**व्यतिषक्तबुद्धिः**–விசிஷ்டார்த்த ஞானம்

**पदजातबुद्धिजनिता भवति इति**– பதசமுதாய ஞானத்தாற் செனித்ததாமென்பதன்கண்

**भवतामपि**–உங்களுக்கும்

**विगानम्** –விவாதம்

**न अस्ति चेत्** –இல்லையாயின் அப்போது

**व्यवधानकल्पनम्** –பதார்த்த ஸ்மிருதியாகிய வியவதானத்தைக் கற்பித்தல்

**अकारणकम्** –அப்பிரமாணமாம்

## விசேஷவுரை

கருத்திதுவாம், சம்சர்க்க ஞானம் பதஜன்னியமாகுமாயின் அப்போது காரியத்தையநுசரித்து பதங்களுக்கு அதன்கண் சத்தி ஆவசியகமாம். சத்தியானது காரியத்தால் ஊகிக்கத்தக்கதாயிருத்தலின் காரியம் எப்படியோ அப்படி சத்தி கற்பிக்கத்தக்கதாதலின். சத்தியைக் கற்பிக்காவிடின் படத்தையுண்டுபண்ணுவதில் அசமர்த்தமான தண்டத்தினல் படம் உண்டாகாததுபோன்று பதத்தால் சம்சர்க்க ஞானம் உண்டாகாது, அற்றேல் காரணத்தன்மை வடிவமாய் காரியத்தை நிருவாகஞ் செய்வதாய் விலக்ஷண சக்தி தண்டாதியின் கண்ணுளது. சத்தத்தின் கண்ணே அபிதை வடிவ விலக்ஷண சத்தியுளது. அதுவும் சம்சர்க்கத்தை விஷயஞ்செய்வதின்றும் எனின் அற்றன்று தண்டாதியிலுள்ள சத்தியோடு சமானமாகவே சத்தத்தின்கண் சத்தியிருக்கின்றது அதற்கு தனது வாச்சிய சம்பந்தத்தையபேக்ஷியாத சத்தத்தின்கண் இருக்குந்தன்மையால் அபிதாத்தன்மை சம்பவிக்கும்போது அதன் பேதத்தில் பிரமாணமின்மையின் லாக்ஷணிக சத்தத்திலுள்ள காரணத்தன்மையோ இங்ஙனமன்று. அன்வய வியதிரேக நியமாதியின் அநுபபத்தியினற் கற்பிக்கப்படுந்தன்மை சமானமாதலால் அதன் அபேதமேயுசிதமாம், இவ்வாறுயினும் பதார்த்த சத்தியினலேயே பரம்பரையாக சம்சர்க்க ஞானம் (உண்டாதலின் பதங்கள்) அன்னியதாசித்தமாம் என்று சொல்லற்க. அவ்வாறுயின் வாக்கியார்த்தத்தில் உனது மதத்திலும் லக்ஷணையே பிராப்தியாகும் சத்தியினல் பரம்பரா சம்பந்தமே லக்ஷணையாதலின். அப்படிக்கன்றேல் தீரம் முதலியவற்றிற்கும் அவ்வாறே கங்கை முதலிய பதத்தால் ஞானமுளதாகுமாதலின் லக்ஷணையே லோபமாகும். ஆதலால சம்சர்க்கத்தின்கண் லக்ஷணையை யங்கீகரியாதவனுக்கு அதன்கண் சத்திஅவசியம் சொல்லத்தக்கதாம் என்க. (374)

## அவதாரிகை

இவ்வாறுயினும் 'வியவதானத்தைக் கற்பித்தல் அப்பிரமாணமாம்' என்றது உசிதமன்றும். வாக்கியார்த்த ஞானம் பதார்த்த விசிஷ்ட புத்திவடிவமாதலின் பதார்த்த ஞானத்தால் ஜன்னியமாம். ஆதலின் பதார்த்த ஞானமும் பதத்தாற் கூறப்பட்ட ஸ்மிருதி வடிவமாம் அதனினு

மன்னியம் சம்பவியாமையின், மேலும் வாக்கியார்த்த ஞானத்தில் பதமே கரணமாம். ஆதலின் அதன் வியாபார வடிவமாக அது (ஸ்மிருதி) அவசியம் சொல்லத்தக்கதாம். எனின் ஆண்டுக்கூறுகின்றார் :—

### சுலோகம்

**व्यतिषक्तबुद्धिजनकं सकलं पदजातमित्यनुमतं यदि वः ।**
**व्यवधानकल्पनविडम्बनया किमिहाञ्जसैव जनकं भवतु ॥**

### பதவுரை

**पदजातं सकलम्**—பதசமுதாயமனைத்தும்
**व्यतिषक्तबुद्धि जनकमिति**—விசிஷ்ட புத்தியையுண்டுபண்ணுவதென
**वः**—உங்களுக்கு
**अनुमतं यदि**—சம்மதமாயின்
**इह**—வாக்கியார்த்த ஞானத்தில்
**व्यवधानकल्पनविडम्बनया**—வியவதானத்தைக் கற்பித்தலாகிய நடனத்தால்
**किम्**—என்னை பயன்
**अञ्जसा एव**—நேரே சத்தியினாலேயே
**जनकं भवतु**—கரணமாகட்டுமே

### விசேஷவுரை

பதசமுதாயத்தால் சத்திவிருத்தியினாலேயே வாக்கியார்த்த ஞானமுண்டாகட்டும். இடையில் ஸ்மிருதியைக் கற்பிக்கவேண்டியதில் லை கௌரவமாதலின் வேறிடத்திலும் (சத்தாதிரிக்த பிரத்தியக்ஷாதி ஸ்தலத்திலும்) விசிஷ்ட ஞானத்திற்கு விசேஷண ஞான ஜன்னியத்தன்மையின்மையால் பிரகிருதத்தில் அதன் (விசேஷண ஞானத்தின்) அபேக்ஷயின்மையின், இவ்வாறுயின் சத்தி ஞானமில்லாதவனுக்கும் வாக்கியார்த்த ஞானமுண்டாதல் வேண்டும் என்று சொல்லற்க. பத ஞானத்தால் உற்புத்தமும் சத்தி ஞான ஜன்னியமுமான சம்ஸ்காரத்திற்கு அன்வயவியதிரேகத்தால் ஏதுத்தன்மையை நிச்சயித்தலால் அதிப்பிரசங்கமின்மையின். கரணவியாபாரமும் அவசியம் வேண்டுமெனின் சம்ஸ்காரத்தின் உற்போதமே கரணவியாபாரமாகுக.

இவ்வாறு சம்ஸ்கார ஜன்னியத்தன்மையால் வாக்கியார்த்த ஞானத்திற்கு ஸ்மிருதித்தன்மை பிராப்தியாம் என்று சொல்லற்க. சமான விஷயக சம்ஸ்கார ஜன்னிய ஞானத்திற்கே ஸ்மிருதித்தன்மையாம். வாக்கியார்த்த ஞானத்தில் அத்தகைய ஜன்னியத்தன்மையின்மையின். ஸம்ஸ்காரத்தைக்கரணமாகவுடைய ஞானம் ஸ்மிருதியாம். கரணத்தன்மையும் காரணத்தன்மைபோன்று சத்தி விசேஷமாம். வாக்கியார்த்த ஞானத்தின்கண் வாக்கியமே கரணமாம் ஸம்ஸ்காரமன்றும். ஆதலின் வியவதானத்தைக் கற்பித்தல் அப்பிரமாணமாம் என்பது கருத்து.

## அவதாரிகை

சங்கை; இவ்வாறுயினும் (பதார்த்த ஸ்மிருதிவடிவ) வியவதானத்தைக் கற்பித்தல் அப்பிரமாணமன்றும். விஸகலித (தனித்தனி) பதப்பிரயோகத்தின்கண் பதத்தால் பதார்த்த ஸ்மிருதி அநுபவிக்கப் படுகின்றது. ஆதலின் பதத்திற்கு ஸ்மாரகத்தன்மை (ஸ்மிருதியேதுத் தன்மை) நிச்சயிக்கப்பட்டுளது. இதனுல் சேர்ந்துள்ள பதங்களின் பிரயோகத்தின் கண்ணும் பதத்தால் பதார்த்த ஸ்மிருதி ஆவசியகமாம். இவ்வாறுகவே அதன் கண்ணேயே பதத்தின் வியாபாரமாம, வாக்கியார்த்த ஞானத்திலோ ஆகாங்க்ஷாதிகளையுடைய பதார்த்தங்களுக்கே ஏதுத்தன்மையாம்.

சித்தாந்தியின் சங்கை: வாக்கியார்த்த போதத்திற்கு பதார்த்தங்களையே ஏதுவாக ஒப்பிடின் அசாப்தத்தன்மையின் அடைவு உண்டாம். பதார்த்தமெனப் பெயரிய பிரமாணுந்தரமும் பிராப்தியாம் என்று சொல்லற்க. பரம்பரையாக சத்த ஜன்னியத்தின்கண்ணும் சத்தத்திற்கு தாற்பரியமுண்மையின் அதற்கு சாப்தத்தன்மை பொருந்துதலின். இதனுலேயே அதனையுத்தேசித்து விருத்த புநஷாரது சத்தப்பிரயோகமும் விருத்தமாகின்றதில்லை. பதார்த்தத்திற்குப் பிரமாணத் தன்மையும் இனிக்கூறப்படும் திருஷ்டாந்தத்தில பிரசித்தமாம். ஆதலின் ஈண்டு அலௌகிக கற்பனை அற்பமுமின்றும் எனின் அற்றன்றெனக் கூறுகின்ருர்:—

## சுலோகம்

पारम्पर्यं ह्यगतिकगति कारणादाश्रयन्ते
नोत्सर्गेण स्फुरति विदुषां यत्र तत्र प्रनाडी ।

श्रुत्या सोमक्रयमनुगतः साधनत्वेन हित्वा
साक्षाद्भावं ह्यरुणिमगुणः प्रापदेनामशक्तेः ॥ ३७६ ॥

*பதவுரை*

**यत्र**-யாண்டு வித்துவான்கள்

**अगतिकगतिम्** -முக்கிய கதியற்றவைகட்குக்கதிசமானமாக

**पारम्पर्यम्** -பரம்பரா சம்பந்தத்தை

**आश्रयन्ते**-ஆசிரயிக்கின்றார்களோ

**तत्र**-அவ்விடத்து

**विदुषाम्** -அறிஞருக்கு

**कारणात्** -பலமுடைய அநுபபத்தியினுல்

**प्रणाडी**-அந்த பரம்பரா மார்க்கம்

**स्फुरति**-தோற்றுகின்றது

**न उत्सर्गेण**-சுபாவத்தால் தோற்றுவதின்றும்

**अरुणिमगुणः**-செவப்பு நிறமானது

**श्रुत्या**-'அருணயா' என்பதாதி வடிவினதாகிய வாக்கியத்திலுள்ள செவப்பால் என்னும் மூன்றாம் வேற்றுமைச் சுருதியால

**सोमक्रयम्** -சோமக்கிரயத்தினைச் (குறித்து)

**साधनत्वेन**-சாதனத்தன்மையால்

**अनुगतः**-சம்பந்தித்ததாய்

**अशक्तेः**-(தான் அமூர்த்தமாதலின் நேரே கிரயசாதனத்தன்மையில்) சாமர்த்தியமின்மையின்

**साक्षाद्भावम्** -சாக்ஷாத்சாதனத்தன்மையை

**हित्वा**-பரித்தியாகஞ்செய்து

**एनाम्** -திரவியாவச்சேதக வாயிலாக பரம்பராசாதனத்துவத்தை

**प्रापत्** -அடைந்தது

*விசேஷவுரை*

எதன்கண் எதற்குக்காரணத்தன்மையறியப்பட்டுள்ளதோ மற்றும் நேரே பொருந்துவதின்றுமோ யாகத்திற்கு சுவர்க்க காரணத்தன்மை

போன்று அவ்விடத்து அனுபபத்தியின் பலத்தால் பிரகாராந்தரத்தின் அபாவத்தை நிமித்தமாகக்கொண்டு பரம்பரா காரணத்துவத்தை பண்டிதர்கள் ஆசிரயிககின்றார்கள். மத்தியில் அபூருவத்தைக் கற்பித்து யாகத்திற்கு பரம்பரா காரணத்துவத்தை அங்கீகரிப்பதுபோன்று. அவ்வாறு ஈண்டு சம்பந்த விசிஷ்ட ஞானத்தின்கண் ஸ்மிருதியின்றி சாக்ஷாத்காரணத்தன்மையில் சத்தத்திற்கு யாதொரு அனுபபத்தியு மின்றும். விசிஷ்ட ஞானத்தன்மை முதலியவற்றால் ஏற்பட்ட அனுப பத்தியினைப் பரிகரித்தமையின். அந்தத்தில சமூஹாலம்பன ஓர் ஸ்மிருதி விஷயத்தன்மையைப்போன்று பதங்களால் மத்தியில் ஸ்மிருதி யநுபவிக்கப்படுகின்றதில்லை என்று கூறிவந்தோம். இவ்வாறு பதங் களுக்கே தமது தாற்பரிய கோசர விசிஷ்ட ஞானத்தையுண்டுபண்ணும் தன்மை சம்பவிக்கும்போது பதார்த்தமெனப் பெயரிய பிரமாணாந்தரமும் கற்பிக்கத்தக்கதன்றும். இனிக்கூறப்படும் திருஷ்டாந்தத்தின் கண்ணும் பிரமாணாந்தரம் சம்மதமின்றும என்று கூறுவர் என்பது கருத்து.

சாக்ஷாத்பிரமையின் காரணத்தன்மைச் சம்பவியாதபோது அன்னிய வாயிலாக அஃது உபபாதனஞ் செய்யத்தக்கது என்பதன்கண் தானே திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் சிவப்பு நிறமானதுஎன. சிவப்பு நிறம சுருதியால் சோமக்கிரயத்தினைக் குறித்து சாதனமாகப் போதிக்கப் பட்டுளது. நிறத்தில் கரணத்தன்மை பொருந்தாமையினால் சிவப்பு நிற முள்ள பசுவை வரைந்து கொள்ளும் வாயிலாக பரம்பரையாகக் கரணமாம்என அங்கீகரிக்கப்பட்டுளது என்பது கருத்து. (376)

## அவதாரிகை

பதார்த்த வடிவப்பிரமாணம் உலகப்பிரசித்தமாமென யாதொரு பூருவபக்ஷியின் அபிப்பிராயத்தினைக் கூறினோமோ அதனை இப்போது சங்கிக்கின்றான் :—

## சுலோகம்

श्वितिमानमभिपश्यतः पुरः शृण्वतस्तदनु हेषितध्वनिम् ।
तद्वदत्र खुरमुद्गरस्वनं श्वेतरूपतुरगोऽटतीति धीः ॥

## பதவுரை

अत्र—இவ்வுலகின்கண்

पुरः—எதிரில் தூரத்தில்

**श्वितिमानम्**–வெண்மை நிறத்தை
**अभिपश्यतः**–பார்க்கின்றவனும்
**तदनु**–அதன் பின்பு
**हेषितध्वनिम्**–குதிரையின் கனைத்தல் சத்தத்தையும்
**तद्वत्**–அதுபோன்று
**खुरमुद्गरस्वनम्**–குளம்பினது தீக்ஷ்ண சத்தத்தையும்
**शृण्वतः**–கேட்பவனுமான புருடனுக்கு
**श्वेतरूपतुरगः**–வெள்ளைக் குதிரை
**अटति इति**–ஓடுகின்றது என்னும்
**धीः**–ஞானமுண்டாகின்றது.

### விசேஷவுரை

கனைத்தல் என்றதனால் அசுவத்தன்மையின் உபஸ்திதி சொல்லப்பட்டது. குளம்பின் தீக்ஷ்ண சத்தமென்றதனால் அதனது ஓட்டம் சூசிப்பிக்கப்பட்டது. உலகில் எதிரில் தூரத்தில் நேத்திரத்தால் வெண்மையுருவத்தைக் காண்கின்றவனும் கனைத்தலையும் குளம்பின் தொனியையும் காதினால் கேட்டு தனித்தனி அசுவத்தன்மையாதியை அறிகின்றவனுமான புருடனுக்கு வெள்ளைக் குதிரை செல்கின்றது என்னும் ஞானமுண்டாகின்றது. இந்த ஞானம் பிரத்தியக்ஷப் பிரமாணத்தாலுண்டானதன்று தூராதி தோஷத்தால் அதற்கு அதன் கண் சாமர்த்தியமின்மையின். அநுமானத்தாலுமன்று விசிஷ்டார்த்தத்தால் வியாப்தமான லிங்கமின்மையின். வெள்ளைக்குதிரை ஓடுகின்றது என்னும் சப்தப்பிரமாணமும் ஆண்டின்றும். ஆதலால் நிச்சயிக்கப்பட்ட பிரமாணாந்தரங்கள் யாதொன்றும் சம்பவியாமையின் நேத்திராதியாலறியப்பட்ட வெண்மை முதலிய பதார்த்தங்களினாலேயே வெள்ளைக் குதிரை ஓடுகின்றது என்னும் ஞானமுண்டாகின்றது என்பது பொருள்.

### அவதாரிகை

தார்ஷ்டாந்திகத்தினைக் கூறுகின்றார் :—

### சுலோகம்

तद्वदत्र पदजातबुद्धिभिर्बोधिताखिल पदार्थहेतुकः ।
सर्वशब्द विषयार्थसंगतेः प्रत्ययो भवति योग्यतादिभिः ॥

### பதவுரை

**तद्वत्**–அதுபோன்று

**अत्र**–ஈண்டு வாக்கியத்தின்கண்

**पदजातबुद्धिभिः**–ஒவ்வொரு பதத்தாலும் கிரமமாக உற்பன்னமான ஞானங்களால்

**बोधित अखिलपदार्थहेतुकः**–போதிக்கப்பட்ட சருவபதார்த்தங்களையும் ஏதுவாகக்கொண்டு

**सर्वशब्दविषयार्थसंगतेः**–கோ முதலிய சருவசத்தங்களின் பிரதிபாத்தியமான எப்பொருள்களுண்டோ அவைகளின் பரஸ்பர சம்பந்தத்தின்

**योग्यतादिभिः**–ஆகாங்க்ஷை யோக்கியதை சன்னிதிவடிவ சஹகாரிகளால்

**प्रत्ययः**–ஞானம்

**भवति**–உண்டாகின்றது.

### *விசேஷவுரை*

ஞானங்களால் போதிக்கப்பட்ட சருவபதார்த்தங்களையும் ஏதுவாகக் கொண்டு பரஸ்பர சம்பந்தத்தின் ஞானமுண்டாகின்றது எனக்கூட்டுக. இதனால் உலகப்பிரசித்தமான பதார்த்தப் பிரமாணத்தன்மையே ஈண்டு அங்கீகரிக்கப்பட்டுளது. ஆதலின் அலௌகிகமன்றென்பது கருத்து.

### *அவதாரிகை*

சித்தாந்தியானவர் பிரத்தியக்ஷாதிப் பிரமாணத்தாலேயே இந்த ஞானம் பொருந்துதலின் அந்த ஞானம் சித்தித்தற்பொருட்டு பிரமாணாந்தரம் கற்பிக்கத்தக்கதன்றெனத் தூஷிக்கின்றார் :—

### *சுலோகம்*

**नैतत् क्लृप्तनिमित्ततोऽपि घटते संसर्गधीरीदृशी**
**श्वेतोऽश्वस्त्वरितोऽभिधावतितरामित्यादिका योत्थिता ।**
**कार्यं क्लृप्तनिबन्धनं यदि भवेन्नास्यापरं कारणं**
**कल्प्यं तेन पदार्थजातजनिता नैषा मतिर्लिङ्गजा ॥**

### *பதவுரை*

**एतत् न**–சம்சர்க்க ஞானம் பதார்த்தப் பிரமாணகமென்பது சரியன்று

ஏதனாற் சரியன்று என்னுமிடத்துக் கூறுகின்றார்.

**श्वेतोऽश्वः**–வெள்ளைக்குதிரையானது

**त्वरितोऽभिधावतितराम्** –மிக வேகமாய் ஓடுகின்றது

**इत्यादिका**—என்பதாதி வடிவினதாகிய

**या उत्थिता**—யாதொரு ஞானமுண்டாயிற்றோ

**ईदृशी**—இப்படிப்பட்ட

**संसर्गधी**—சம்சர்க்க ஞானமானது

**क्लृप्तनिमित्ततोऽपि**-இனிச் கூறப்படும் நிச்சயிக்கப்பட்ட பிரமாணத்தாலும்

**घटते**—பொருந்துகின்றது

அற்றேல் எட்படியநுமானுதியாலறியப்பட்டதனை பிரத்தியக்ஷத் தாலும் அறிகின்றனரோ அப்படி நிச்சயிக்கப்பட்ட பிரமாணத்தாலறியப் பட்டதனையும் பதார்த்தப்பிரமாணத்தால் அறியலாமேயெனின் அதற்குக் கூறுகின்ருர்.

**कार्यम्** –யாதானும் ஓர் காரியமானது

**क्लृप्तनिबन्धनम्** –நிச்சயிக்கப்பட்ட நிமித்தத்தானேயே

**यदि भवेत्** –சம்பவிக்குமாயின்

**अस्य**—அக்காரியத்திற்கு

**अपरं कारणम्** –வேறு காரணம்

**न कल्प्यम्** –கற்பிக்கத்தக்கதன்ரும்

யாண்டு இரண்டு காரணமும் நிச்சயிக்கப்பட்டுளதோ ஆண்டு ஒரு பிரமாணத்தாலறியப்பட்ட வஸ்து மற்ருேர் பிரமாணத்தாலும் அறியத் தக்கதாகுக. யாண்டு இங்ஙனமன்ருே மற்ருே நிச்சயிக்கப்பட்ட காரணத்தாலேயே காரியம் நிருவாகமாகின்றதோ அக்காரியத்திற்கு வேறு காரணம் கற்பிக்கத்தக்கதன்ரும். அதனுலேயே காரியத்திற்கு ஆகாங்க்ஷை நிவர்த்தியாதலின். அதனுற் சித்தித்து என்னையெனிற் கூறுகின்ருர்.

**तेन**- அதனுல்

**एषा मतिः**—வெள்ளைக்குதிரை ஓடுகின்றது என்னும் ஞானம்

**पदार्थजातजनिता न**—பதார்த்த சமுதாயத்தாலுண்டானதன்று

அப்படியானுல் இந்த் ஞானம் எப்பிரமாணத்தாலுண்டாயது என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

**लिङ्गजा**—மற்றெ அநுமானத்தாலுண்டானதாம்.

அநுமானம பிரத்தியக்ஷத்திற்கும் உபலக்ஷணமாம். (379)

### அவதாரிகை

"பதார்த்த சமுதாயத்தாலுண்டானதன்று" என்பதாதியை விஸ்தரிக்கின்றவராய், அப்படியானால் பிரத்தியக்ஷாதிகளின் சமுதாயத்தால் கூறப்பட்ட ஞானமுண்டாகட்டுமே என்னும் சங்கையினையும் நீக்குகின்றார் :—

### சுலோகம்

पादार्थे न पृथक् प्रमाणमपरं नानाप्रमाणोद्भवं
नाप्येतत्फलमत्र पक्षयुगले कल्प्यं निमित्तान्तरम् ।
क्लृप्तं लिङ्गमतोऽपि निर्वहति चेत्संसर्गधीरीदृशी
पादार्थी न पृथक् प्रमा न च फलं नानाप्रमाणोद्भवम् ॥

### பதவுரை

**पादार्थम्** –பதார்த்தங்களின் சமுதாயம்
**पृथक्**–பிரத்தியக்ஷாதியின் வேறான
**न प्रमाणम्** –பிரமாணமன்றும்
**नाना प्रमाणोद्भवम्** –பிரத்தியக்ஷ லிங்க சமுதாய ஜன்னியமாக
**एतत् फलम् अपि**–வெள்ளைக்குதிரை ஓடுகின்றது என்னும் பிரமை வடிவ சம்சர்க்க ஞானமும்
**अपरम् न**–தனித்தனிப் பிரத்தியக்ஷாதி ஞானத்தினும் அன்னியமின்றும்
இரண்டிடத்தும் தூஷணத்தைக்கூறுகின்றார்
**अत्र पक्षयुगले**-இவ்விரண்டு பக்ஷத்திலும்
**निमित्तान्तरम्** –பிரமாணாந்தரம்
**कल्प्यम्** –கற்பிக்கவேண்டிவரும்

பதார்த்த சமுதாயத்தின் கண்ணும் பிரமாண சமுதாயத்தின் கண்ணும் முன்பு பிரமாணத்தன்மை நிச்சயிக்கப்படாமையின் அவ்விரண்டு பிரமாணமும் ஈண்டே கற்பிக்கத்தக்கதாகுமென்பது பொருள். அல்லது பிருதக் (தனிப்) பிரமாணத்துவ பக்ஷத்திலும் நானாப்பிரமாண பல (பிரமை)த்துவபக்ஷத்திலும் நிமித்தாந்தரம் கற்பிக்கவேண்டி வருமாதலின் என்பது பொருள். அப்படியானால் பிறிதோராற்றாற் பெறப்படாமை வடிவகாரிய பலத்தால் அவ்விரண்டனுள் ஒன்றன்கண் பிரமாணத்தன்மை கற்பிக்கத்தக்கது என்னுஞ்சங்கைக்கு ஏது அசித்தமாம் எனக்கூறுகின்றார்.

**लिङ्गम्** –அநுமானம்

**कलशम्**- ஈண்டு பிரசித்தமாம்

**अतः अपि**–பிரசித்தமான இவ்வநுமானத்தாலேயே

**ईदृशी संसर्गधीः**–இப்படிப்பட்ட சம்சர்க்கஞானம்

**निषेत्स्यति चेत्**–சித்திக்குமாதலின்

சம்சர்க்க ஞானத்தின் பொருட்டு நீ கூறிய கற்பனை சரியன்று என்னும் அபிப்பிராயத்தால் முடிக்கின்றார்.

**पादार्थी**–பதார்த்த சமுதாயத்தைக்கரணமாகவுடையதாய்

**प्रमा**–பிரமை

**पृथक् न**–வேறின்றும்

**फलं च**-சம்சர்க்க ஞானமும்

**नानाप्रमाणोद्भवम्** – அநேகப்பிரமாணங்களின் சமுதாய ஜன்னியமாய்

**न**–இன்றும்

## விசேஷவுரை

அநுமானம் பிரமாணாந்தரத்திற்கும் உபலக்ஷணமாம் ஈண்டிஃது அபிப்பிராயமாம் சுவேதத்திரவியத்தோடு இந்திரியசம்பந்தமிருக்கின்றதேயாம் இன்றேல் சுவேதம் என்னும் ஞானம் சம்பவியாமையின். அஸ்வத்துவாதியம்சஞானத்தின்கண் நேத்திரத்திற்குத் தூரத்துவ தோஷம் பிரதிபந்தகமாயிருப்பினும் ஹேஷா (கனைத்தல்) ஆதியால் அதனநுமானமுண்டாகுங்கால் அவ்வநுமான விசிஷ்ட இந்திரியத்தால் பிரத்தியபிஞ்ஞை போன்று பரோக்ஷாபரோக்ஷவடிவினதாய் வெள்ளைக் குதிரை ஓடுகின்றது என்னும் ஞானம் உண்டாதற்கு யோக்கியமாம். அநுமானமிதுவாம் விவாத விஷயமான வெண்மைத்திரவியம் குதிரையாம் கனைத்தலைச்செய்தலினுல் சம்மதம்போன்று (சமீபத்திற்காணப்பட்ட குதிரையினைப்போன்று) என்பதனுல் வெள்ளைக்குதிரை என விசிஷ்ட ஞானமுண்டானபின் வெள்ளைக்குதிரை ஓடுகின்றது. மறைப்பின்றி நாநாதேசங்களில் காணப்படுதலின், அத்தகைய தேவதத்தன் போன்று. இந்தப்பிரகாரம் சுவேதவடிவத்தின்கண் கனைத்தல் குளம்பின் தீக்ஷ்ணசத்தம் முதலியவற்றின் சாமானுதிகரண்யாநுபபத்தியாலும் இத்தகைய ஞானம் உண்டாதற்கு யோக்கியமாமென்க.

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் யோக்கியேதர காரியான்விதத்தின் கண்ணுவது

அல்லது யோக்கியேதரான்விதத்தின் கண்ணுவது பதங்களுக்கு சத்தியின்றும். மிகவும் கௌரவமாதலின். கேவல பதார்த்தத்தின் கண்ணும் சத்தியின்றும் வாக்கியார்த்தப்பிரதீதிக்கு ஆகஸ்மிகத்தன்மை (காரணமின்றி ஜன்னியத்தன்மை) ப்பிராப்தியாதலின். கேவலார்த்தத்தின்கண் சத்தியினையுடையவையும ஆகாங்க்ஷையாதியால் சஹகரிக்கப்பட்டவையுமான பதங்களினல் சம்சர்க்கஞானம உண்டாகின்றதென்பதும் சரியல்ல. சத்தியற்றதினின்றும் காரியஞ்சம்பவியாமையின் காரியத்தையநுசரித்து சந்தத்தின் சத்தியினையும் அதன்கண் (சம்சர்க்கத்தின்கண்) அவசியம் கொள்ளவேண்டியதாதலின். காரணத்தன்மை சத்திக்கே சுவவாச்சியசமபந்ததை யபேக்ஷியாத சப்தவிருத்தித்தன்மையால் அபிதை சத்தித்தன்மையுண்மையின் பதங்களால் நினைப்பூட்டப்பட்ட பதார்த்தங்களுக்கே ஆகாங்க்ஷாதியின் வசத்தால் பரஸ்பரம் சுவசம்பத்த விஷயஞானத்தின் காரணத்தன்மையாம் என்பதும் சரியன்று. சப்தங்களால் நேரே வாக்கியார்த்தப்பிரமை சம்பவிக்கும்போது மததியில ஸ்மிருதியைக்கற்பித்தல் பொருந்தாமையின் வாக்கியார்த்தஞானத்திற்கு சப்தஜன்னியத்தன்மையையங்கீகரியாவிடின் அசாப்தத்தன்மையும் பிராப்தியாம். பரம்பரையாக சப்தம் மூலமாயிருத்தலால் சாப்தத்தன்மையாமென்னற்க. சாக்ஷுஷ உருவாதி வடிவலிங்கத்தாலுண்டான அநுமிதிக்கும் சாக்ஷுஷத்தன்மைப்பிராப்தியாதலின். பதார்த்தமெனப்பெயரிய பிரமாணாந்தர கற்பனைப்பிராப்தியாதலானும் இந்தப்பக்ஷங்கள் நலமுடையதன்று என்று கூறப்பட்டது

இப்போது லாகவத்தால் ஆகிருதிமாத்திர வாசக சத்தத்தால் வியத்திபோன்று பதார்த்தத்தில் சத்தியினையுடைய பதங்களால் வாக்கியார்த்தம் லக்ஷிக்கப்படட்டுமே இவ்வாறுகவே முற்கூறியதோஷம் யாதொன்றும் இப்பக்ஷத்தில் பிராப்தியாகாது என்னுஞ்சங்கைக்கு ஈண்டும் பிரதிபாதிக்கும் இச்சை முதலியவற்றையநுசரித்து கேவல பதார்த்த சத்திக்கு அயுக்தத்தன்மை சித்தித்தபோது அன்வயஞானத்திற்கு சத்தத்தால் அடையப்படுந்தன்மையுண்மையின் எங்களுக்கு அதிக அநிஷ்டமின்றும் என்னுமபிப்பிராயத்தை இம்மதத்தை நிராகரியாமையால் வெளிப்படுத்துகின்றவராய் முடிக்கின்றார் :—

**சுலோகம்**

**नासंसृष्टमतो वदन्ति न च तान्याहुः क्रियासंगतं**
**योग्येनान्वितमेव केवलममून्याहुः स्वमर्थं यतः ।**

एवं सत्यपवर्जितक्रियमलं निष्पन्नरूपं सदा
संसर्गादिविवर्जितं च वदितुं वस्तुस्वरूपं श्रुतिः ॥

பதவுரை

अतः—ஆதலால்

असंसृष्टम्—அனன்விதார்த்தந்தை

न वदन्ति—பதங்கள் பிரதிபாதிக்கின்றதில்லை

क्रियासङ्गतं च—கிரியான்விதார்த்தந்தையும

तानि न आहुः—பதங்கள் பிரதிபாதிககின்றதில்லை

केवलं योग्येनान्वितम्—கேவல யோக்கியான்வித

स्वम् अर्थमेव—தமது அர்த்தத்தினையே

अमूनि आहुः—பதங்கள் பிரதிபாதிக்கின்றன

यतः—ஆதலின்

காரியான்விதத்தில் சப்தசத்தியினை நிராகரித்து சித்தான்விதத்தில் அதனைச்சமர்த்தனஞ்செய்தலின் பயனைக்கூறுகின்றார்.

एवं सति—சித்தான்விதத்திற்கும் சத்தார்த்தத்தன்மை சம்பவிக்கும்போது

अपवर्जितक्रियम्—கிரியையற்றதும்

सदा निष्पन्नरूपम्—எப்போதும் சித்தவடிவமும்

संसर्गादिविवर्जितं च—சம்பந்தம் முதலியவையற்றதுமான

वस्तुस्वरूपम्—வஸ்துவின் சொரூபத்தை

श्रुतिः—சுருதியானது

वदितुम्—பிரதிபாதித்தற்கு

अलम्—சமர்த்தமாம் (381)

அவதாரிகை

இந்தப்பிரகாரம் அபிகிதான்வயம் முதலியவற்றை நிராகரித்து அன்விதமாத்திரம் சத்தார்த்தமாமெனப்பட்டது. அற்றேல் உனக்கு இவ்வபிநிவேசம் எற்றிற்கு அபிகிதான்வய பக்ஷத்திலும் லக்ஷணையால் அகண்டப்பிரம்மத்தின் சித்தி சம்பவித்தலின். அவ்வளவுமாத்திரமே உனது மதத்தில் பிரதிபாதிக்கத்தக்கதாதலின். என்னுஞ்சங்கைக்கு நீ கூறியவாறு இருந்தாலும் இருக்கட்டுமென்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்றார் :—

## சுலோகம்

**अभिहितघटनाऽथवाऽन्वितानामभिहितिरस्त्वथवा न पक्षपातः ।
क्वचिदपि समयेऽस्ति नः कदाचिद्बहुघटनात्मकवस्तुनिष्ठवाक्ये ॥**

## பதவுரை

**अथवा**– அல்லது
**बहुघटनात्मकवस्तुनिष्ठवाक्ये** – அநேகார்த்தங்களின் சம்சர்க்க வடிவவஸ்துவினைப்பிரதிபாதிக்கும் வாக்கியத்தின்கண்
**अभिहितघटना**–அபிகிதார்த்தங்களின் அன்வயம்
**अस्तु**–இருக்குக
**अथवा**–அல்லது
**अन्वितानाम्**–அன்விதார்த்தங்களின்
**अभिहितिः**–பிரதிபாதனம்
**अस्तु**–இருக்குக
**क्वचिदपि समये**–ஓர்மதத்தின் கண்ணும்
**कदाचित्**–ஓர்போதும்
**नः**–எங்களுக்கு
**पक्षपातः न**–பக்ஷபாதம் இன்றும்

## விசேஷவுரை

முற்கூறப்பட்ட நியமபக்ஷத்தினின்றும இதற்கு பக்ஷாந்தரத் தன்மைத்தோற்றுவித்தற் பொருட்டு முதலாவது அல்லது என்னும் சத்தமாம். அற்றேல் அகண்டப்பிரம்மத்தின்கண் கூறிய இரணடு பக்ஷமும் சம்பவிக்கின்றதில்லையாதலின் அதனையங்கீகரித்தல் எங்ஙனமா மென்னுஞ்சங்கைக்கு வேறிடத்திலேயே அதன் அங்கீகாரமாம் எனக் கூறுகின்றார். அநேகார்த்தங்களின் சம்சர்க்கவடிவ என அதாவது பசுவைக்கொண்டுவா என்பது முதலிய இலௌகிகவாக்கியத்தின் கண்ணும் "ஜ்யோதிஷ்டோமத்தால் யஜிக்குக" என்பது முதலிய வைதிக வாக்கியத்தின்கண்ணும் அபிகிதான்வயம் அல்லது அன்விதாபி தானமிருக்குக என்பது பொருள் (382)

## அவதாரிகை

அநேகார்த்தங்களின் சம்சர்க்க வடிவ என்னும விசேஷணத்தால் விலக்கத்தக்கதனைக்கூறுகின்றார் :—

### சுலோகம்

अभिहितघटना न चोपपन्ना परदृशि नाभिहितिस्तथान्वितानाम् ।
अनधिक विकलार्थगोचरत्वान्न तदुभयं श्रुतिमस्तके पदानाम् ॥

### பதவுரை

**परदृशि**—அசங்க சுவப்பிரகாசசிதான்மாவின்கண்
**अभिहितघटना**—சொல்லப்பட்ட அர்த்தங்களின் (அபிகித) அன்வயம்
**न च उपपन्ना**—பொருந்துவதின்றும்
**तथा**—அப்படியே
**अन्वितानाम्**—அன்விதார்த்தங்களின்
**अभिहितिः**—அபிதானமும்
**न**—பொருத்தமின்றும்
எதனாற்பொருந்துவதின்றென்னுமிடத்துக் கூறுகின்றார்.
**अनधिक विकलार्थगोचरत्वात्**—அதிகமும் குறைவுமின்றிய சுத்த சித்துவடிவார்த்தத்தை விஷயஞ் செய்யுந்தன்மையால்—முடிக்கின்றார்
**तत्**—ஆதலால்
**श्रुतिमस्तके**—உபநிஷத்துக்களில்
**पदानाम्**—தத் துவம் முதலியபதங்களுக்கு
**उभयम्**—அபிகிதான்வயமும் அன்விதாபிதானமும்
**न**—சம்பவிப்பதின்றும்

### விசேஷவுரை

பரதிருக்கு என்பதனுல் அசங்க சுவப்பிரகாச சிதான்மாவை நிர்த்தேசஞ்செய்தலால் அதற்கு அன்விதத்தன்மையாலாவது அனன்விதத்தன்மையாலாவது அபிதானத்தின் அயோக்கியதை தொனிக்கப்பட்டது. அல்லது அதிகமென்பதனுல் அன்விதத்தன்மையும் குறைவு என்பதனுல் கேவலத்தன்மையும் (அனன்விதத்தன்மை) கொள்க. ஆன்மவஸ்து கேவலமாயினும் அன்வயப்பிரதியோகித்தன்மையாலாவது சொரூபத்தாலாவது அபிதானயோக்கியமன்றும் சுவப்பிரகாசமாதலின் என்று குறைவு என்னும் கூற்றின் அபிப்பிராயமறியத்தக்கது. (383)

### அவதாரிகை

அற்றேல் அபிகிதாபிதானம் அன்விதாபிதானம் என்னுமிரண்டு

பக்ஷத்திலும் மகாவாக்கியத்திற்கு அகண்டார்த்தத்தைப்பிரதிபாதித்தலின் கண் ஏதேனும் விசேஷமுளதா என்னுமாகாங்க்ஷையுண்டாக விசேஷமுள தெனக்கூறுகின்றார்.:—

### சுலோகம்

**अभिहितघटना यदा तदानीं स्मृतिसमबुद्धियुगं पदे विधत्तः ।**
**परदृशि पुनरन्विताभिधाने पदयुगलात्स्मृतियुग्ममेव पूर्वम् ॥**

### பதவுரை

**यदा**–எப்போது
**अभिहितघटना**–அபிகிதான்வயம் (அங்கீகரிக்கப்படுமோ)
**तदानीम्**–அப்போது
**पदे**–தத்துவம் பதங்கள்
**परदृशि**–அசங்கசிதான்மாவின்கண்
**स्मृतिसमबुद्धियुगम्** – ஸ்மிருதிக்குச்சமானமாகவே இரண்டு ஞானத்தை
**विधत्तः**–உண்டுபண்ணுகின்றன
**पुनः अन्विताभिधाने**–அன்விதாபிதான பக்ஷத்திலோ
**पूर्वम्**–பதார்த்தப்பிரதீதி சமயத்தில்
**पदयुगलात्**–அது நீ என்னுமிருபதங்களால்
**स्मृतियुग्ममेव**–இரண்டு ஸ்மிருதியே உண்டாகிறது.

### விசேஷவுரை

பட்டருடைய பக்ஷத்திலோ பதங்களுக்கு பதார்த்தமாத்திர ஞானத்தின்கண் பரியவசானமுண்மையின் அந்தஞானம் பதசத்தியி னாலேயே அடையப்படுகின்றது ஆதலின் ஸ்மிருதியன்று சத்த மாத்திரத்தைக்காரணமாகவுடையதற்கு ஸ்மிருதித்தன்மை பொருந்தாமை யின் ஆனால் (வாக்கியார்த்தவடிவ) சம்பந்தத்தையறியுங்காலத்தில் அறி யப்பட்ட அர்த்தத்தை விஷயஞ்செய்யுந்தன்மையுண்மையால் அநுவாதத் தன்மையுளதாதலின் ஸ்மிருதியின் சமானமாம் என்க. அதாவது அபிகிதாபிதான பக்ஷத்தில் தத்துவம்பதங்கள். ஸ்மிருதிக்கு சமான மாகவே இரண்டு ஞானத்தை யுண்டுபண்ணுகின்றன.

அன்விதாபிதான பக்ஷத்திலோ பதங்களுக்கு சத்தியினாலேயே அன்வயத்தைப்பிரதிபாதித்தலின்கண்ணேயே வியாபாரமிருத்தலின் பதார்த்தஞானம் சம்பந்திவிதத்தாலேயே பத ஜன்னியமாம் ஆதலின்

அது பதத்தினைக்காரணமாகவுடையதன்று மற்றோ பிரசித்தஸ்மிருதியினைப்போன்று ஸம்ஸ்காரத்தைக் காரணமாகவுடையதேயாம் ஆதலின் ஸ்மிருதியேயாம் ஆதலால் தத்துவம்பதங்களால வாக்கியார்த்தபிரதீதிக்கு முன்பு இரண்டு ஸ்மிருதிகளே யுண்டாகின்றன என்பது விசேஷமாம். இதுவும் பரமதத்திலங்கீகாரத்தால் கூறப்பட்டதென வுணர்க. ஆதலால் இருமதத்தினநுசாரத்தால் தத்துவம்பதார்த்தவிஷயகஞானம் ஸ்மிருதி சமமாகவாவது அல்லது ஸ்மிருதியேயாவது எவ்வாறுவதாகுக இத்துணையாலும் வாக்கியத்தின் அகண்டார்த்த நிஷ்டத்தன்மைக்குக் குறைவின்றாம் என்பது கருத்து. (384)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் தத்துவம்பத ஜன்னிய பதார்த்தபோதத்தின்கண் இரண்டு பக்ஷத்திலும் விசேஷத்தைக்கூறி அகண்டவாக்கியார்த்த போதத்தினுற்பத்தியில் விசேஷத்தைக்கூறுகின்றார்:—

## சுலோகம்

**स्मृतिसमपदजन्यबुद्धियुग्मात् परदृशि मोहनिवर्त्तनं परेषाम् ।**
**परदृशि पदजस्मृतिद्वये स्यात् पदयुगलात्प्रमितेः समुद्भवो नः ॥**

## பதவுரை

**परेषाम्**–அபிகிதான்வயவாதிகளுக்கு
**स्मृतिसम**–ஸ்மிருதிக்கு சமானமானதும்
**पदजन्य**–தத்துவம் பதங்களால் ஜன்னியமுமான
**बुद्धियुग्मात्**–ஞானமிரண்டினுல்
**परदृशि**–பிரம்மவடிவப்பிரத்தியகான்மாவின் கண்
**मोहनिवर्त्तनम्**–(அஞ்ஞானதிபந்தநிவாத்தக) சாக்ஷாத்காரமுண்டாம்
**नः**–அன்விதாபிதானவாதிகளான எங்களுக்கு
**परदृशि**–பிரத்தியகவடிவப்பிரம்மத்தின்கண்
**पदजस्मृतिद्वये**–பதஜன்னிய ஸ்மிருதித்துவய முளதாயவழி
**पदयुगलात्**–தத்துவம் பதமிரண்டினுல்
**प्रमितेः**–வாக்கியார்த்தப்பிரமையின்
**समुद्भवः स्यात्**–உற்பத்தியுண்டாம்

ஸ்மிருதிக்கு சமமான லக்ஷியபதார்த்தத்துவய ஞானத்தாலேயே அபிகிதான்வயவாதிகளுக்கு ஆன்மசாக்ஷாத்காரமுண்டாகும் சத்தத்தாலன்று அன்விதாபிதான பக்ஷத்திலோ பதஜன்னியஸ்மிருதித்துவய

முண்டாகும்போது தத்துவம்பதங்களாலேயே வாக்கியார்த்தப்பிரமிதி யினுற் புத்தியாமாதலின் மகத்தானவிசேஷமாம். இவ்வாருகவே எங்களுக்கு என்று கூறுகின்ற இந்நூலாசிரியரால் சாக்ஷாற்காரத்திற்கு உபநிஷத்தால் ஜன்னியத்தன்மையுண்மையின் பிரம்மத்திற்கு தனது மதத்தில ஔபநிஷதத்தன்மை சித்தித்தலின் இதுவே சிறந்ததாமெனத் தெரிசிப்பிக்கப்பட்டது. (385)

## அவதாரிகை

இவ்வாறு உலகின்கண் சத்தங்களுக்குக்காரியான்விதத்தில் வியுற்பத்திபலத்தால் வேதாந்தங்களுக்கு சித்தப்பிரம்மத்தின்கண் அப்பிராமாண்யமாமென்னும் மதத்தை நிராகரித்து அதன்கண் அவை கட்குப்பிரமாணத்தன்மை ஸ்தாபிக்கப்பட்டது. இப்போது பாவனையே வாக்கியத்தின் பொருளாமென்று கூறும் வாதியானவன் (பட்டரை யநுசரித்தவன்) சம்பூர்ணவேதமும் திரியம்ஸபாவனைவடிவ புருஷப் பிரவிருத்திபரமேயாம் என்னுமபிப்பிராயத்தால் முதலில் சத்தபாவனைக்கு லிங் (விதிவிகுதி) வாச்சியததன்மையுளதெனச்சங்கிச்சின்ருன்:—

## சுலோகம்

**औदासीन्य प्रच्युति प्रापकेऽर्थे लिङ्लोडादेर्लोकतो ज्ञातशक्तेः ।**
**पुंसो वेदे प्रेरकत्वेन कल्प्या लिङ्लोडादेर्भावनैवानृतन्त्रे ॥ ३८६ ॥**

## பதவுரை

**लोकतः**-உலகில்
**पुंसः**–புருஷனது
**औदासीन्य**-பிரவிருத்திப்பிராகபாவத்தின்
**प्रच्युति**-அபாவவடிவப்பிரவிருத்தியின்
**प्रापकेऽर्थे**-நிமித்தமானப்பிரேரணையின்கண்
**लिङ्लोडादेः**-லிங்லோட் முதலியவற்றிற்கு
**ज्ञातशक्तेः**-சத்தியறியப்பட்டிருத்தலின்
**अनृतन्त्रे**-அபௌருஷேய
**वेदे**–வேதத்தின்கண்ணும்
**लिङ्लोडादेः**–லிங்லோட் முதலியவிகுதிகட்கு
**प्रेरकत्वेन**–புருஷனைப்பிரேரிக்குந்தன்மையுண்மையால்
**भावना एव**–லிங்லோட்முதலியவற்றின் வியாபாரவடிவ பாவனையே

**கல்ப்யா**—பொருளாகக்கற்பிக்கத்தக்கது

### *விசேஷவுரை*

பிரேரகனது வியாபாரம் பிரேரணையாம் வேதத்தின் கண்ணும் லிங்லோட் முதலியவற்றிற்கே புருஷனைப்பிரேரிக்குந்தன்மையுண்மையின் அதன் வியாபாரமே பாவனையாம் அது லிங்சத்தத்தின் பொருளாமென்பது பொருள். அற்றேல் உலகில் சேதனங்கட்கே பிரேரகத்தன்மை காணப்பட்டுளதாதலின் அசேதனலிஙாதிகட்கு அஃது எப்படிக் கூடுமென்னும் சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு அபௌருஷேயம் எனப்பட்டது. என்னை இவன் பிரேரிக்கின்றான் என எவனது வியாபாரத்தையறிந்து சேதனன் பிரவிருத்திக்கின்றானோ வியாபாரமுடைய அவன் பிரவர்த்தகனும் (பிரேரகன்) அவனது வியாபாரம் பிரேரணையாம். அபௌருஷேய வேதத்தின் கண் யஜிக்குக ஹவனஞ் செய்க என்பது முதலிய லிங் முதலியவையே பிரேரகங்களாம் அவற்றின் வியாபாரத்தைக்கேட்டதனனந்தரமே புருஷனுக்குப் பிரவிருத்தியுண்டாதலின் என்பது கருத்து.

ஈண்டு இது கூறப்பட்டதாகின்றது மாணவகனே பசுவைக் கொண்டுவா என்னும் ஆசாரியரது வாக்கியத்தைக்கேட்டதனனந்தரம் பிரவிருத்திக்கின்ற மாணவகனைக்கண்டு வியுத்பித்சு (சத்தியையறிய விரும்பும்) பாலகன் இவ்வாறு அநுமிக்கின்றான். மாணவகனது பிரவிருத்தி பிரேரணையின் ஞான பூருவகமாம். அன்னிய புருஷனது அதீனமானப்பிரவிருத்தியாதலால். ஸ்தன்னியபானத்தை விரும்புகின்ற எனது அழுகையினால் பிரேரிக்கப்பட்ட மாதாவின் ஸ்தனத்தைத்தருதலிற் பிரவிருத்திபோன்று என. தனது போஜனாதிப் பிரவிருத்தியில் அதிவியாப்தியை நீக்குதற்பொருட்டு அன்னியபுருஷனது எனப்பட்டது பிரேரணையின்கண் அன்வயவியதிரேகத்தால் லிங்முதலியவற்றிற்கு சத்தியினைக்கற்பிக்கின்றான் ஆதலின் அதன்கண் வியுற்பன்ன லிங்முதலியவற்றிற்கு வேதத்தின்கண் அதன் வியாபாரமான பாவனையே அதன் பொருள் எனச்சித்திக்கின்றது என்க. (386)

### *அவதாரிகை*

அற்றேல் உலகின்கண்ணும் லிஙாதியின் வியாபாரமே பிரேரணையாமோவெனின் அன்றெனக்கூறுகின்றார்:—

### சுலோகம்

आज्ञाद्यर्थः प्रेरकः पौरुषेये लिङ्लोडादेर्भावना वेदवाक्ये ।
पुंसोऽभावात्तद्वदाज्ञाद्यभावात् पुंसंबन्धात्प्रेरकास्ते हि वाक्ये ॥

### பதவுரை

**पौरुषेये**– புருஷராலியற்றப்பெற்ற இலௌகிகவாக்கியத்தின்கண்
**आज्ञाद्यर्थः**–ஆஞ்ஞை முதலிய வடிவப்பொருளே
**प्रेरकः**–பிரவர்த்தகமாம்
**वेदवाक्ये** –அபௌருஷேய வேதவாக்கியத்தின்கண்
**लिङ्लोडादेः**–லிங்லோட் முதலியவற்றின் பொருளான
**भावना**–பாவனைவடிவ வியாபாரமே பிரேரகமாம்

அற்றேல் கூறிய வியவஸ்தையின்கண் நியாமகம் யாது என்று ஆசங்கித்து அவற்றின் சம்பவமும் அசம்பவமுமே வியவஸ்தாபகமா மென்னுங்கருத்தாற் கூறுகின்றார்.

**पुंसः अभावात्**–வேதத்தில் புருஷன் கருத்தாவாக வின்மையால்
**तद्वदाज्ञाद्यभावात्**–வேதசம்பந்தமாய் ஆஞ்ஞை முதலியவை யின்மையின்
**वाक्ये**–வாக்கியத்தின்கண்
**पुंसंबन्धात् हि**–புருஷசம்பந்தத்தினுல்தான்
**ते प्रेरकाः**–ஆஞ்ஞை முதலியவை பிரேரகங்களாம்

### விசேஷவுரை

ஆதிபதத்தால் பிரார்த்தனை முதலியவற்றைக்கொள்க, பிரேரிக்கப் படுகின்றது எதனுல் அது பிரேரகம்=பிரேரணை, இலௌகிகவாக்கியத் திற்கு பௌருஷேயத்தன்மையால் ஆசாரியர் முதலிய புருஷ சம்பந்த முண்மையின் அதன்கண் அவரே பிரேரகராம் அவரது வியாபார வடிவ ஆஞ்ஞைமுதலியவையே பிரேரணையாம். புருஷப்பிரவிருத்தி ஆஞ்ஞையாலேயே சம்பவித்தலின் லிஙாதிக்கு ஆண்டுபிரேரகத் தன்மை பொருந்தாமையின் என்பது பொருள். இவ்வாருகவே லிஙாதிக்கு இருவிதத்தன்மை சித்திக்கிறது என்னுமபிப்பிராயத்தாற் புருஷனின்மையால் என கூறப்பட்டது. அதாவது வேதத்தின்கண் லிஙாதிக்கு பிரேரணை (ஆஞ்ஞை) யின்ருமென்பது கருத்து, இவ்வாருகவே பிரேரணைவடிவத்தில் லிஙாதியின் சத்திக்கு உலகின் கண்ணும் வேதத்தின்கண்ணும் சமத்தன்மையுண்மையின்

காரியவாதிக்குப்போன்று பாவநாவாதிக்கு வையதிகரண்யம் முதலிய வைஷம்யமின்றுமென்பது கருத்து. (387)

## அவதாரிகை

அற்றேல் பாவனையானது சேதனபுருஷனது வியாபாரமாய் பிரசித்தமாயிருத்திலின் லிங்லோட் முதலியவற்றின் வியாபாரமாக பாவனை எப்படியாகும் என்னுஞ்சங்கைக்கு சத்தியந்தான். அர்த்த பாவனை அவ்வாறுதான். சத்தபாவனையோ அதனின்றும் விலக்ஷணமாம் ஆதலால் அதன்கண் பாவகாதியின் விலக்ஷணத்தன்மை பொருந்தும் என்னுமபிப்பிராயத்தால் அதன்பாவ்யத்தை(சாத்தியத்தை)க்கூறுகின்றார்

## சுலோகம்

लिङ्लोडादिर्भावकस्तत्र भाव्यानुष्ठेयेऽर्थे पुंप्रवृत्तिः प्रसिद्धा ।
लिङ्लोडादेः पुंप्रवृत्त्यंशनिष्ठो व्यापारो यस्तं विदुर्भावनेति ॥

## பதவுரை

**लिङ्लोडादिः**–லிங்லோட் முதலியது

**भावकः**–பாவனையினுசிரயமாம் அதன்கர்த்தா என்பது பொருள்

**तत्र**–அந்த சத்தபாவனையின் கண்

**भाव्या**–சாத்தியமானது

**अनुष्ठेये**–கிருதிசாத்திய

**अर्थे**–பகுதிப்பொருள் வடிவயாகாதியில்

**पुंप्रवृत्तिः**–அர்த்தபாவனை வடிவ புருஷப்பிரயத்தினம்

**प्रसिद्धा**–பிரசித்தமாம்

யாகாதியில் என்பது விஷயசத்தமியாம். பகுதிப்பொருள் வடிவ யாகாதியானது அர்த்த பாவனைவடிவபுருஷ ப்பிரவிருத்திக்குச்சாத்திய மன்றும் மற்று கரணமேயாம். அப்படியாயினும் அது (யாகாதி) அதனல் (புருஷப்பிரவிருத்தியினல்) சாத்தியமேயாம். பாவ்ய (சுவர்க்க) அவச்சின்ன வியாபாரவடிவ அதன்கண் (புருஷப்பிரவிருத்தியின்கண்) காணவடிவத்தால் அன்வயமாகின்றது ஆதலின் அதற்கு (யாகாதிக்கு) புருஷப்பிரவிருத்தியினல் சாத்தியத்தன்மையிருத்தலின் யாகாதியில் புருஷப்பிரயத்தினமெனப்பட்டது. பிரசித்தம்–பகுதிப்பொருளின் நிஷபத்தி பலத்தால் சித்தித்தது. அதாவது பகுதிப்பொருளினும் வேருக அர்த்த பாவனையில்லை யென்னுஞ் சங்கை செய்யத்தக்கதன்றென்பது பொருள். அற்றேல் கிலேச வடிவப் பிரவிருத்தியின் கண் பாவ்யத்

தன்மை பொருந்தாமையின் சுவர்க்காதியே பாவ்யமாக சொல்லத் தக்கதாம் அதுவும் அர்த்தபாவனையினதே பாவ்யமாம் சத்த பாவனையின் பாவ்யமன்றும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்.

**पुंप्रवृत्यंशनिष्ठः** – புருஷப்பிரவிருத்தி வடிவசாத்தியாம்ஸத்தினை விஷயஞ்செய்வதும்

**लिङ्लोडादेः**–லிஙாதி சம்பந்தியுமான

**यः व्यापारः**–யாதொரு வியாபாரமுண்டோ

**तम्**–அதனை

**भावना इति**–சத்தபாவனையென்று

**विदुः**–அறிகின்றார்கள்

லிஙாதியின் பிரேரணை வடிவ வியாபாரத்திற்கு பிரேரிக்கத்தக்க புருஷனது பிரவிருத்தியே பாவ்யத்துவ யோக்கியமாம் ஆதலின் சத்த பாவனை அதனையே விஷயஞ்செய்வதாமென பாவனுவாதிகள் கருது கின்றனர் என்பது பொருள். (388)

***அவதாரிகை***

அற்றேல் சத்த பாவனையும் பாவனையாதலால் அதற்கும் திரியம் ஸத்துவம் (சாத்தியம் கரணம் இதிகர்த்தவ்யம்) சொல்லுதல் வேண்டும். அவற்றுள் பிரவிருத்தி வடிவ முதலம்ஸம் சாத்தியமாக சித்தித்துளது அங்ஙனமாயினும் அதன் கரணமும் இதிகர்த்தவ்யமும் சித்திக்கவில்லை அதன்கண் சத்தம் கரணமன்றும அது அதன் கருத்தாவாதலின். அதனின் வேறுகவும் யாதொரு கரணமுமின்றும். தரிசபூர்ணமாச யாகத்திற்குப் பிரயாஜாதி போன்று அதன் இதிகருத்தவ்யத் தன்மையும் யாதொன்றும் அநுபவிக்கப்படவில்லை என்னுஞ் சங்கைக்கு அவ்விரண்டனையும் கூறுகின்றார்:—

***சுலோகம்***

**करणमिह लिङादेर्ज्ञानमेवाङ्गभागः**
**पुनरभिरुचिहेतुर्दृश्यते च प्रशंसा ।**
**विधिरयमिह तन्त्रे जैमिनीये न कार्यं**
**न च भवति विधिर्नः श्रेयसो हेतुरर्थः ॥ ३८९ ॥**

***பதவுரை***

**इह**–ஈண்டு சத்த பாவனையின்கண்

**लिङ्गादेः**—அதன்கண் கிரகிக்கப்பட்ட சத்தியினையுடைய லிங் முதலியவற்றின்

**ज्ञानमेव**—ஞானமே

**करणम्**—கரணமாம்

**अभिरुचिहेतुः**—பகுதிப் பொருளின் அநுஷ்டானத்தினிச்சையி லேதுவான

**प्रशंसा**—துதியின் ஞானம்

**अङ्गभावः**—இதிகர்த்தவ்யத்துவமாக

**दृश्यते**—காணப்படுகின்றது

அற்றேல் இவ்வாறு சத்த பாவனைக்கு திரியம்சத் தன்மை யுளதாகுக. பாவனையின் ஞானம் எதனுல் உண்டாம் எனின் லிஙாதி யினுலேயே யுண்டாமெனக் கூறுகின்ருர்.

அற்றேல் அலௌகிக ஜாதியினையுடைய காரியமாவது (கிருதி சாத்தியம்) இஷ்ட சாதனத் தன்மையாவது லிஙாதியின் பொருளாக ஆகட்டுமே என்னுஞ் சங்கைக்கு (அதற்கும் பிரேரணை வடிவ சத்த பாவனைக்கும்) பிரவர்த்தகனது வியாபாரத் தன்மையால் உலகப்பிரசித்த ஜாதியினையுடையதாந்தன்மை யுண்மையினுனும் பரமதத்தில் விஷ பக்ஷண ப்சந்திரமண்டலோதயம் முதலியவற்றின்கண் அதிவியாப்தி வருதலானும் அன்றெனக்கூறுகின்ருர் காரியமென. காரியம்=கிருதி சாத்தியம், இஷ்டசாதனத்துவ விசிஷ்டயாகாதியும் லிஙர்த்தமன்ரும் என்பது பொருள். இதிகர்த்தவ்யம்=செய்யவேண்டிய கிரியையின் பிரகாரம். (389)

**इह**—ஈண்டு

**जैमिनीये**—ஜைமினிசம்பந்தமான

**तन्त्रे**—சாஸ்திரத்தின்கண்

**अयम्**—பாவனை வடிவ சத்த வியாபாரம்

**विधिः**—பிரவர்த்தக லிஙாதியின் பொருளாம்

**नः**—ஜைமினியின் சம்பந்திகளான எங்களுக்கு

**कार्यम् न**—அபூருவ வடிவகாரியமானது லிஙாதியின் பொருளன்ரும்

**श्रेयसः हेतुः**—இஷ்டசாதனத்துவ வடிவ

**अर्थः**—அருத்தமும்

**विधिः**—லிஙாதியின் பொருளாக

**न च भवति**—ஆகின்றதில்லை

சத்த பாவனையின் வாசகம் லிஙாதியாம் என்னும் ஞானத்தின் அநந்தரமே அதனைக் கேட்கின்றவர்களுக்கு பிரவிருத்தி காணப்படுதலால் அதனேதுவாகக் கற்பிக்கப்படுகிற சத்த பாவனையும் அப்போதேயிருத்தலால் அதன் (லிஙாதியின்) ஞானம் அதன் கரணமாம் இவ்வாறு அர்த்தவாதத்தால் அர்ப்பிக்கப்பட்ட பகுதிப்பொருளின் பிராஸஸ்திய (துதியின்) ஞானம் அதன்கண் ருசியையுண்டுபண்ணுதல் வாயிலாக சத்த பாவனையின் சாத்தியப்பிரவிருததியின் கண் உபகாரத்தைச் செய்கின்றதாதலின் அதன்கண் இதிகருத்தவ்யத்தன்மையாம். இவ்வாறு சத்தபாவனை மூன்று அம்ஸமுடையதாக சித்தித்தது என்பது பொருள். (389)

### அவதாரிகை

அற்றேல் இந்த பாவனைக்கு விகுதிப்பொருளாந் தன்மையுண்மையின் பிரதானத் தன்மை சொல்லவேண்டும். இந்தப்பிரகாரம் அர்த்த பாவனைக்கும் அதன் பாவ்யத்தன்மையுண்மையால் பிரதானத் தன்மையுளது. ஆகவே இரண்டு பிரதானம் ஓர் வாக்கியத்தின் பொருளாக எப்படியாகுமெனின் அதற்குக் கூறுகின்றார் :—

### சுலோகம்

विधिरिह गुणभूतः प्रत्ययार्थोऽपि नित्यं
भवति च पुरुषोत्था भावनाऽस्य प्रधानम् ।
भवति दशलकारप्रत्ययैः साऽभिधेया
विधिविहितलकारैर्भावना शब्दहेतुः ॥ ३९० ॥

### பதவுரை

इह – இந்தச் சாஸ்திரத்தின்கண்
विधिः – சத்தபாவனை
प्रत्ययार्थोऽपि – லிங் முதலிய விகுதிகளின் பொருளாயினும்
नित्यम् – எப்போதும்
गुणभूतः – குணபூதமேயாம் பிரதானமன்று
पुरुषोत्था – புருஷ ஜன்னியமும் அவனது வியாபார வடிவமுமான
भावना च – அர்த்தபாவனையே
अस्य – அபிதா வடிவவிதிக்கு
प्रधानम् भवति – பிரதானமாம்

**दशलकारप्रत्ययैः** – லட் லிட் லுட் லிருட் லேட் லோட் லங் லிங் லுங் லிருங் என்னும் பத்து லகார ஸ்தானத்தில விதிக்கப்பட்ட திப் முதலியப் பிரத்தியயங்களால்

**सा** – அர்த்த பாவனை

**अभिधेया भवति** – பிரதிபாத்தியமாகின்றது

**विधिविहितलकारैः** – விதியர்த்தத்தில் விதிக்கப்பட்ட லிங் லேட் லோட் என்னும் லகாரங்களால்

**शब्दहेतुः** – சத்தத்தைக் கருத்தாவாகவுடைய

**भावना** – சத்தபாவனை

**(अभिधेया)** – பிரதிபாத்தியமாகின்றது

### *விசேஷவுரை*

எப்போதும் = சத்தத்தால் பிரதீதி காலத்திலும் அர்த்தபாவனையின் நிஷ்பாதன காலத்திலும், ச. நிச்சயார்த்தத்தில், சத்தபாவனை பிரத்தியய வாச்சியமாயினும் பிரத்தியயவாச்சியத்தன்மையால் பிரதானமாயினும் பிரத்தியயார்த்தத்தன்மையாலும் புருஷார்த்த வடிவ பாவ்யத்தை யுடையதாந்தன்மையாலும் பிரதானமாயுள்ள அர்த்த பாவனையைக் குறித்து சத்தபாவனை ஜனகத்தன்மையாலும் அபுருஷார்த்த வடிவ பாவ்யத்தையுடையதாந்தன்மையாலும் குணபூதமேயாம். அதனுல் பிரதானத்துவயப் பிரயுக்ததோஷமின்ரும்.

அற்றேல் பிரத்தியயத்திற்கு சத்தபாவனை பொருளாதலின் அர்த்த பாவனையும் பொருளாவது யாங்ஙனம். நிமித்தமின்றி யநேகார்த்தத்தைக் கொள்ளுதல் அநியாயமாதலின் என்னுஞ்சங்கைக்குக் கூறுகின்ருர். பத்து லகார ஸ்தானத்திலென. அன்னத்தைச் சமைக்கின்ருன் என்பது முதலிய லட் முதலியவற்றைப் பிரயோகிக்கும்போது அன்னத்தின் பாகத்தைச் செய்கின்ருன் என்றிவ்வாறு கிருதி (யத்தினம்) பிரதீதி யாதலினுலும், கேவலம் பகுதியைப் பிரயோகிக்கும்போது அது ப்ரதீதி யாகாமையினுலும் அன்வய வியதிரேகங்களால் லட் முதலிய பத்து லகாரங்களுக்கும் ஆக்கியாதத்தன்மை சாமானியத்தால் பிரயத்தினத்தில் சக்தி நிச்சயிக்கப்படுகின்றது "लः कर्मणि च" (லகார ஸ்தானத்தி லுள்ள திப் முதலிய பிரத்தியயங்கள் கருமணிப்பிரயோகத்திலும் வரும்) என்னுஞ் சூத்திரத்தின் சாமர்த்தியத்தாலும் அது நிச்சயிக்கப்படுகின்றது.

லிங் முதலியவை திப் தன்மை சாமானியத்தால் பிரயத்தின வாசகங்களாயினும் "விதிநிமந்திரண" என்பதாதி சூத்திரத்தால் விதியர்த்தத்தில் மீண்டும் விதிக்கப்படுதலின் லிங் தன்மை முதலிய வடிவத்தால் அவைகட்கு சத்தபாவனையின் வாசகத்தன்மை அவிருத்தமாம். தீபமொன்றற்கே தேஜஸ் தன்மை தகனத்தன்மை வடிவபேதத்தால் இருளை நிவர்த்திக்குந்தன்மையும் பாகத்தைச் செய்யுந்தன்மையும் காணப்படுகின்றதல்லவா. அதுபோல லிங் முதலியவற்றிற்கும் (சத்தபாவனை அர்த்த பாவனை என்னும்) இரண்டன் வாசகத்தன்மை பொருத்தமாமென்பது கருத்து. (390)

## அவதாரிகை

இப்போது அர்த்தபாவனைக்கு புருஷார்த்த வடிவ பாவ்யத்தையுடையதாந்தன்மையினைக் கூறுகின்றார்:—

## சுலோகம்

**भवति च पुरुषार्थकर्मिकेयं पुरुषनिमित्तकभावना न तद्वत् ।**
**भवति तु विधिशब्दकर्तृकाऽन्या नहि निरवद्यपुमर्थता प्रवृत्तेः ॥**

## பதவுரை

**पुरुषनिमित्तक भावना इयम्** } புருஷனைக் கருத்தாவாகவுடைய இந்த அர்த்த பாவனை

**पुरुषार्थकर्मिका च**—புருஷனால் விரும்பப்படுகிற சுவர்க்காதியை பாவ்யமாகவுடையதாகவும்

**भवति**—ஆகின்றது

சத்தபாவனையோ புருஷார்த்தத்தைப் பாவ்யமாகவுடையதன்றென முடிக்கின்றவராய்க் கூறுகின்றார்.

**विधिशब्दकर्तृका**-லிங் முதலிய சத்தத்தின் வியாபார வடிவ

**अन्या तु**—சத்தபாவனையோ

**तद्वत्**— அர்த்த பாவனைபோன்று

**न भवति**—ஆகின்றதில்லை

அற்றேல் சத்தபாவனைக்கும் பரம்பரையாக புருஷார்த்தத்தில் பரியவசானத்தன்மை இருக்கின்றது என்னுஞ் சங்கைக்கு பிரேரணை வடிவ அதற்கு பிரேரகத்தக்கதன் வியாபார மாத்திரத்தில் பரியவசானமாதலின் என்று முன்கூறப்பட்ட பொருளை நினைப்பூட்டுகின்றார்.

**प्रवृत्तेः**-சத்த பாவனையின்பாவ்ய புருஷப் பிரவிருத்திக்கு
**निरवद्यपुमर्थता**-நிர்த்தோஷ புருஷார்த்தத் தன்மை
**न हि**-இன்மையின்

உடையதாகவும் என்ற உம்மையால் பிரஸங்கத்தால் அர்த்த பாவனையின்கண் யாகம் முதலிய பகுதிப்பொருள் காரணமாம் ப்ரயாஜம் முதலிய அங்கயாகங்கள் இதிகருத்தவ்யமாம் என தெரிசிப்பிக்கப் பட்டது. பாவனைக்கு சமான பதத்தால் கிரகிக்கப்பட்டதாயினும் யாகம் முதலிய பகுதிப்பொருள் சொரூபமாக புருஷார்த்த மன்றாதலின் அதனைப் பரித்தியாகஞ்செய்து பின்னபதத்தால் கிரகிக்கப்பட்டதாயினும் சொரூபமாக புருஷனால் விரும்பப்படுகின்ற தாதலின் சுவர்க்காதியே அர்த்தபாவனையின் பாவ்யமாகக் கற்பிக்கப்படுகின்றது. அங்ஙன மின்றேல் விதிக்குப் பிரேரகத்தன்மை பொருந்தாமற்போம். ஆதலின் அர்த்தபாவனை புருஷார்த்த வடிவ பாவ்யத்தின்கண் பரியவசானமாம். இந்தப் பிரகாரம் சமான பதத்தால் கிரகிக்கப்பட்ட யாகாதிகள் வியாபார வடிவ அதன்கண் யோக்கியமா யிருத்தலால் காரணமாக அன்வயமா கின்றது. பிரகரணத்திற் படிக்கப்பட்டிருத்தலால் பிரயாஜாதி இதி கருத்தவ்யத் தன்மையால் அன்வயமாகின்றது இவ்வாறு அந்தப் பாவனை மூன்றம்ஸமுடையதென்பது கருத்து.

### அவதாரிகை

சத்த பாவனை அர்த்த பாவனையென்னுமிரண்டின் கூறப்பட்ட பாவ்யத்தின் விலக்ஷணத் தன்மையினையே ஸ்பஷ்டப்படுத்துகின்றார் —

### சுலோகம்

**अभिमतपशुपुत्रवृष्टिनाक प्रभृतिक भाव्यगता हि भावनेयम् ।**
**अनभिमतसुदुष्करातिदुःखां नयति तु भाव्यपदं प्रवृत्तिमन्या ॥**

### பதவுரை

**इयं भावना**-புருஷப்பிரவிருத்தி வடிவ இந்த அர்த்தபாவனை
**अभिमतपशुपुत्र**-விரும்பப்படுகின்ற பசு புத்திரன்
**वृष्टिनाकप्रभृतिक**-மழை சுவர்க்கம் முதலிய
**भाव्यगता हि**-சாத்தியத்தினை விஷயமாகவுடையது
**अन्या तु**-பிரேரணை வடிவ சத்த பாவனையோ
**अनभिमत**-சொரூபமாக விரும்பப்படாததும்

**सुदुष्करा**–அநேகப் பிரதிபந்தத்தோடு கூடியதும்
**अति दुःखाम्** –அத்தியந்தம் துக்கத்தோடு கூடியதுமான
**प्रवृत्तिम्** –புருஷப்பிரவிருத்தியை
**भाव्यपदम्** –பாவ்ய (சாத்திய) ஸ்தானமாக
**नयति**–புருஷனுக்கு அடைவிக்கின்றது

முதலிய என்னும் பதத்தால் கிராமம் முதலியவற்றைக் கொள்க. அர்த்த பாவனை அபிமத பசு முதலிய பாவ்யத்தில் நிஷ்டையுடையது. சத்த பாவனையோ அனபிமதத்துவாதி விசிஷ்டப்பிரவிருத்தியை தனது பாவ்யமாகக் கற்பிக்கின்றது என்பது பொருள். அபிமதம்=விரும்பப் படுவது. அனபிமதம்=விரும்பப்படாதது. (392)

## அவதாரிகை

அற்றேல் அபிகிதான்வய வாதத்தின்கண் யாகத்திற்கும் பாவனைக்கும் அல்லது இரு பாவனைகட்கும் எப்படிக் கூறிய அன்வய போதமுண்டாகும். யாகமும் பாவனைகளும் தனித்தனிக் கூறப்பட வில்லையல்லவா. எதனால் ஆகாங்க்ஷாதியை யநுசரித்து பின்பு அன்வயபோதமுண்டாகும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்:—

## சுலோகம்

**प्रत्ययप्रकृतिशब्दतो बहिर्विद्यतेऽभिहितसङ्गतिश्च नः ।**
**प्रत्ययप्रकृतिशब्दयोः पुनर्नित्यमन्वितधियो निमित्तता ॥ ३९३ ॥**

## பதவுரை

**प्रत्यय प्रकृतिशब्दतः**–லிங்லோட் முதலிய விகுதியும் யஜ் முதலிய பகுதியுமாகிய சத்தத்தினின்றும்
**बहिश्च**–வேறிடத்திலேயே
**नः**–பட்டராகிய எமது மதத்தில்
**अभिहितसङ्गतिः**–அபிகித சம்பந்தமாம்
**पुनः**–எதனாலெனின்
**प्रत्ययप्रकृति शब्दयोः**–பகுதி விகுதி சத்தங்கட்கு
**अन्वितधियः**–விசிஷ்ட ஞானத்தின்
**निमित्तता**–ஜனகத்தன்மை
**नित्यम्** –எப்போதும் (அநுபவசித்தமாமென்பது எஞ்சி நின்றது)

## *விசேஷவுரை*

பட்டர் மதத்தில் பகுதி விகுதிகளினும் வேருன யஜிக்குக சுவர்க்க காமன் என்னும் பதங்கட்கும் கோ முதலிய ஆநயனம் முதலிய பதங்கட்கும் பரஸ்பரம் நிரபேக்ஷத் தன்மையால் உபஸ்திதத்தன்மை யுண்மையின் அவ்வாறே (பரஸ்பரம் நிரபேக்ஷத் தன்மையாலேயே) தத்தம் அர்த்தத்தைப் பிரதிபாதிக்குந் தன்மை சம்பவித்தலின் அபிகித (சொல்லப்பட்ட) அர்த்தங்கட்கு அன்வயபோதம் ஆகாங்க்ஷாதியை அநுசரித்து உண்டாகும்.

பகுதி விகுதிகட்கோ தனித்தனிப் பிரயோகமின்மையின் நியமமாக சேர்த்துப் பிரயோகஞ் செய்தலின் சேர்ந்துள்ள (அவற்றின்) அர்த்தங் களேயே பிரதிபாதித்தலுளதாதலின் ஆண்டு அன்விதாபிதானமேயாம். அன்றேல் ஆண்டும் ஆகாங்க்ஷாதியின் சகாயத்தை யபேக்ஷிக்கவேண்டி வரும். அவ்வபேக்ஷையோ இன்ரும் ஆதலின் கூறிய தோஷமின்ரும் என்னுமிப்பொருளைக் கூறுகின்ருர் பகுதி விகுதி என. (393)

## *அவதாரிகை*

வியுற்பாதனஞ் செய்யப்பட்ட இரண்டு பாவனையையும் முடிக் கின்ருர்:—

## *சுலோகம்*

**भावनाद्वयमतोऽवबोध्यते धातुवाच्यघटितं लिङादिभिः ।**
**प्रत्ययार्थगुणवस्तुवाचिनो धातवः प्रकृतयो हि धातवः ॥ ३९४ ॥**

## *பதவுரை*

**अतः**-முற்கூறிய நியாயத்தால்

**लिङादिभिः**-லிங் முதலியவற்ருல்

**धातु वाच्यघटितम्**-பகுதிப் பொருளான யாகாதியைக் கரணமாக வுடைய

**भावनाद्वयम्**-இரண்டு பாவனையும்

**अवबोध्यते**-போதிக்கப்படுகின்றது

ஓர் பாவனையே யாகாதியைக் கரணமாகவுடையது அங்ஙன மாயினும் "பிராண பிருத்துக்கள் உபதானஞ் செய்கின்றனர்" என்பது போன்று இரண்டு பாவனையும் அதனையுடையதாகக் கூறப்பட்டது. பகுதிப்பொருளையுடையதாந்தன்மையை யுபபாதனஞ்செய்கின்ருர்.

**धातवः**—பகுதிகள்

**प्रत्ययार्थगुणवस्तु वाचिनः** } விகுதிப்பொருளில் விசேஷணமாயுள்ள அர்த்தத்தைப் பிரதிபாதிப்பனவாம்

"பிரகிருதிப் பிரத்தியயங்கள் சேர்ந்து அர்த்தத்தைப் பிரதிபாதிக்கின்றன அவைகளுக்குள் பிரத்யயார்த்தத்திற்கே பிரதானத் தன்மையாம்" என்னும் பெரியோரது வசனத்தால் பிரத்தியயார்த்தத்தைக் குறித்து குணபூதமாயுள்ள அர்த்தத்தின் வாசகங்கள் தாதுக்களாம் ஆதலின் பகுதியர்த்தத்தோடு கூடியதே பாவனையாம் என்பது பொருள்.

அற்றேல் பகுதிப்பொருள் விகுதிப்பொருளைக் குறித்து விசேஷணமாயின தாதுவின் அர்த்தத்தில் சித்தித்ததென்னை யென்னுஞ்சங்கைகக்கு தாதுவும் பகுதியேயாம் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

**धातवः हि**—தாதுக்களே

**प्रकृतयः**—பகுதிகளாம்

### *விசேஷவுரை*

எதனினின்றும் பரத்தில் பிரத்தியயம் விதிக்கப்படுகிறதோ அது பகுதியாம் தாதுவினின்றும் பிரத்தியயம் விதிககப்படுதலின் தாதுக்கள் பகுதிகள் என்பது பொருள.

இனி இச்சுலோகத்திற்கு மற்றோர் அவதாரிகையும் மற்றோர் பொருளும் வருமாறு.

அற்றேல் யாகத்தால் சொர்க்கத்தைப் பாவனை செய்க (சம்பாதிக்குக) எனப் பகுதிப் பொருளைக் கரணமாகவுடைய ஓர் பாவனையே பிரதீதியாகின்றது மற்றோர் பாவனையன்று ஆதலின் இரண்டு பாவனையைக் கூறுதல் வாக்கியப் பிரமாணத்திற்கு விருத்தமாமென்னுமிடத்துக் கூறுகின்றார். முற்கூறிய நியாயத்தால் என்பதாதியால் பகுதிப் பொருளைக் கரணமாகவுடைய பாவனையின் பிரதீதீ பலத்தாலேயே அதனை (யாகத்தை) விஷயமாகவுடைய வேறு பாவனையின் பிரதீதியை அவசியம் கூறுதல் வேண்டும். அதனது பாவ்யத் தன்மையின் பிரதீதியின்றி பகுதிப் பொருளாய யாகத்திற்கு அதன் கரணத் தன்மையால் அன்வயம் பொருந்தாமையின் சமீபத்திலுச்சரிக்கப் பட்ட அர்த்த வாதத்தால அர்ப்பிக்கபபட்ட பிராஸஸ்தியம் (ஸ்துதி) முதலியவற்றிற்கு வாக்கியார்த்தத்தில் அன்வயமாதற்பொருட்டு

பாவனாந்தரத்தின் பிரதீதி அவசியம் சொல்லத்தக்கது என்பது கருத்து மற்றது முன்போல. (394)

### அவதாரிகை

இவ்வாறு விதி வாக்கியத்தின் பிரதிபாத்தியமான இரு பாவனையையும் உபபாதனஞ் செய்து அதன்கண்ணேயே சருவ வேதத்திற்கும் பரியவசானமாமென்பதை சபர சுவாமி வசனத்தால் தெரிசிப்பிக்கின்றவராய் முடிக்கின்றார் :—

### சுலோகம்

भव्याय भूतमुपदिश्यत इत्यवोचन्
पूज्यास्ततः सकलमेव तु वेदशास्त्रम् ।
कार्यप्रधानमिति निश्चिनुमोऽस्मदीये
तन्त्रे च कार्यमुदितः पुरुषप्रयत्नः ॥ ३९५ ॥

### பதவுரை

**पूज्याः**—பூசிக்கத்தக்க சபர சுவாமிகள்
**भूतम्**—சித்தித்துள்ள பால் தயிர் முதலியவை
**भव्याय**—சாத்தியமாகிய யாகாதியின்பொருட்டு
**उपदिश्यते**—உபதேசிக்கப்படுகின்றது
**इति अवोचन्**—என்று சொன்னார்கள்
**ततः**—அக்காரணத்தால்
**सकलमेव तु वेदशास्त्रम्**—எல்லா வேத சாஸ்திரமும்
**कार्यप्रधानम्**—அநுஷ்டிக்கத் தக்கப் பாவனையைப் பிரதானமாக வுடையது
**इति निश्चिनुमः**—என்று நிச்சயிக்கின்றோம்

அற்றேல் காரியமானது கிருதிசாத்தியமும் பிரபாகரரின் அபிமதமுமான நியோகம் ஏன் ஆகாது என்னுமிடத்துக் கூறுகின்றார்.

**अस्मदीये तन्त्रे च**—எமது சாஸ்திரத்தின்கண்
**पुरुषप्रयत्नः**—புருஷப்பிரயத்தினவடிவ அர்த்தபாவனையே
**कार्यम् उदितः**—காரியமாகக் கூறப்பட்டுளது.

### விசேஷவுரை

முன்பு பூதம் பவ்யத்தின் பொருட்டு என்னும் இந்த வசனத்தை யுதாகரித்துப் பிரம்மத்தின்கண் வேதாந்தப் பிராமாண்யத்தின் அவிரோத

மாகக்கொண்டு செலுத்தப்பட்டது. அப்படியாயினும் பாவனையைக் கூறும் ஜாதியால் இப்போது அது உபன்யஸிக்கப்பட்டதாதலின் தோஷமின்றும் என்பது கருத்து. வேதமாகிய சாஸ்திரம் வேதசாஸ்திரமாம்.

பிரபாகரரது அபிமதமான நியோக வடிவகாரியம் அப்பிராமாணிகமாதலின் ஜைமினி மஹரிஷியின் சாஸ்திரத்தில் புருஷப்பிரயத்தினமே காரியமெனக் கூறப்பட்டுளது என்பது பொருள். (395)

## அவதாரிகை

உலகத்திலும் வேதத்திலும் லிங் முதலியவற்றிற்கு விலக்ஷண அர்த்தத்தைக் கற்பித்தல் பொருத்தமன்றும். வைதிக லிங் முதலியவற்றிற்கு தன்னை (லிஙாதியை) கருத்தாவாகவுடைய வியாபாரத்தைப் பிரதிபாதிக்குந்தன்மை அத்தியந்தம் பொருத்தமன்றும். அந்த வியாபாரத்தை நிரூபிக்க முடியாமையானும் இந்த மதம் அயுக்தமானென இப்போது தூஷிக்கின்றார் :—

## சுலோகம்

**अभिदधाति करोति च लिङ्पदं श्रुतिवचःसु निजामपि भावनाम् ।**
**न च करोति न वक्ति च तां पुनः नरवचःस्विति दुःशकमुच्यते ॥**

## பதவுரை

**श्रुतिवचःसु**—வேத வாக்கியங்களில்
**लिङ्पदम्**—லிங் சத்தமானது
**निजाम्** தனது வியாபார வடிவ
**भावनामपि**—சத்த பாவனையையும்
**अभिदधाति**—கூறுகின்றது
**करोति च**—அர்த்த பாவனையையும் சம்பாதனஞ் செய்கின்றது
**नरवचःसु**—புருஷரது வாக்கியங்களிலுள்ள லிங் பதம
**ताम् पुनः**—தனது வியாபார வடிவ பாவனையை
**न च वक्ति**—கூறுகின்றதுமில்லை
**न च करोति**—செய்கின்றதுமில்லை
**इति**—என விபாகத்தைக் கூறுதல்
**दुःशकम्**—அயுக்தமென்று
**उच्यते**—சொல்லப்படுகின்றது.

பாவனாந்தரத்தின் பிரதீதி அவசியம் சொல்லத்தக்கது என்பது கருத்து மற்றது முன்போல. (394)

### அவதாரிகை

இவ்வாறு விதி வாக்கியத்தின் பிரதிபாத்தியமான இரு பாவனை யையும் உபபாதனஞ் செய்து அதன்கண்ணேயே சருவ வேதத்திற்கும் பரியவசானமாமென்பதை சபர சுவாமி வசனத்தால் தெரிசிப்பிக்கின்ற வராய் முடிக்கின்றார் :—

### சுலோகம்

भव्याय भूतमुपदिश्यत इत्यवोचन्
पूज्यास्ततः सकलमेव तु वेदशास्त्रम् ।
कार्यप्रधानमिति निश्चिनुमोऽस्मदीये
तन्त्रे च कार्यमुदितः पुरुषप्रयत्नः ॥ ३९५ ॥

### பதவுரை

**पूज्याः**–பூசிக்கத்தக்க சபர சுவாமிகள்
**भूतम्**–சித்தித்துள்ள பால் தயிர் முதலியவை
**भव्याय**–சாத்தியமாகிய யாகாதியின்பொருட்டு
**उपदिश्यते**–உபதேசிக்கப்படுகின்றது
**इति अवोचन्**–என்று சொன்னார்கள்
**ततः**–அக்காரணத்தால்
**सकलमेव तु वेदशास्त्रम्**–எல்லா வேத சாஸ்திரமும்
**कार्यप्रधानम्**–அநுஷ்டிக்கத் தக்கப் பாவனையைப் பிரதானமாக வுடையது
**इति निश्चिनुमः**–என்று நிச்சயிக்கின்றோம்

அற்றேல் காரியமானது கிருதிசாத்தியமும் பிரபாகரரின் அபிமதமு மான நியோகம் ஏன் ஆகாது என்னுமிடத்துக் கூறுகின்றார்.

**अस्मदीये तन्त्रे च**–எமது சாஸ்திரத்தின்கண்
**पुरुषप्रयत्नः**–புருஷப்பிரயத்தினவடிவ அர்த்தபாவனையே
**कार्यम् उदितः**–காரியமாகக் கூறப்பட்டுளது.

### விசேஷவுரை

முன்பு பூதம் பவ்யத்தின் பொருட்டு என்னும் இந்த வசனத்தை யுதாகரித்துப் பிரம்மத்தின்கண் வேதாந்தப் பிராமாண்யத்தின் அவிரோத

மாகக்கொண்டு செலுத்தப்பட்டது. அப்படியாயினும் பாவனையைக் கூறும் ஜாதியால் இப்போது அது உபன்யஸிக்கப்பட்டதாதலின் தோஷ மின்றும் என்பது கருத்து. வேதமாகிய சாஸ்திரம் வேதசாஸ்திரமாம்.

பிரபாகரரது அபிமதமான நியோக வடிவ காரியம் அப்பிராமாணிக மாதலின் ஜைமினி மஹரிஷியின் சாஸ்திரத்தில் புருஷப்பிரயத்தினமே காரியமெனக் கூறப்பட்டுளது என்பது பொருள். (395)

## அவதாரிகை

உலகத்திலும் வேதத்திலும் லிங் முதலியவற்றிற்கு விலக்ஷண அர்த்தத்தைக் கற்பித்தல் பொருத்தமன்றும். வைதிக லிங் முதலிய வற்றிற்கு தன்னை (லிஙாதியை) கருத்தாவாகவுடைய வியாபாரத்தைப் பிரதிபாதிக்குந்தன்மை அத்தியந்தம் பொருத்தமன்றும். அந்த வியாபாரத்தை நிரூபிக்க முடியாமையாலும் இந்த மதம் அயுக்தமானதென இப்போது தூஷிக்கின்றார் :—

## சுலோகம்

**अभिदधाति करोति च लिङ्पदं श्रुतिवचःसु निजामपि भावनाम् ।**
**न च करोति न वक्ति च तां पुनः नरवचःस्विति दुःशकमुच्यते ॥**

## பதவுரை

**श्रुतिवचःसु**—வேத வாக்கியங்களில்
**लिङ्पदम्**—லிங் சத்தமானது
**निजाम्** தனது வியாபார வடிவ
**भावनामपि**—சத்த பாவனையையும்
**अभिदधाति**—கூறுகின்றது
**करोति च**—அர்த்த பாவனையையும் சம்பாதனஞ் செய்கின்றது
**नरवचःसु**—புருஷரது வாக்கியங்களிலுள்ள லிங் பதம்
**ताम् पुनः**—தனது வியாபார வடிவ பாவனையை
**न च वक्ति**—கூறுகின்றதுமில்லை
**न च करोति**—செய்கின்றதுமில்லை
**इति**—என விபாகத்தைக் கூறுதல்
**दुःशकम्** —அயுக்தமென்று
**उच्यते**—சொல்லப்படுகின்றது.

### விசேஷவுரை

சத்த பாவனையையும் என்ற உம்மையால் தனது விசிஷ்ட வியாபாரத்தின்கண் தானிருக்கின் தன்னிடத்தும் இருத்தல் பிராப்தியாதலால் விரோதத்தை வெளிப்படுத்துகின்றது இலௌகிகவாக்கியத்தில் ஆஞ்ஞை முதலியவையே லிங்பதத்தின் பொருளாதலின் ஆண்டு சத்தபாவனையின்மையின் இலௌகிகலிங் முதலிய பதம் அதனைச்செய்கின்றதுமில்லைக் கூறுகின்றதுமில்லை என வேற்றுமையைக்கூறுதல் உபபாதனஞ்செய்தற்கு அசக்கியமாம் அயுக்த மென்பது பொருள்.

### அவதாரிகை

அற்றேல் மேற்கூறிய வேற்றுமையானது உபபாதனஞ்செய்யப் படுவதால அதன் உபபாதனம் அசக்கியமென்பது எப்படிப்பொருந்தும் என்னுஞ்சங்கைக்குக் கூறுகின்றார்:—

### சுலோகம்

वक्तृत्वमेव घटते यदि लिङ्पदस्य सर्वत्र नार्द्धजरतीयमिदं प्रशस्तम् ।
सामर्थ्यमेकरसमेव यदोपपन्नं नानारसं न खलु तत्परिकल्पनीयम् ॥

### பதவுரை

**लिङ्पदस्य**—லிங்பதத்திற்கு

**सर्वत्र**—உலகின்கண்ணும் வேதத்தின் கண்ணும் யாண்டும்

**वक्तृत्वमेव**—அபிதாயகத்தன்மையே

**यदि घटते** பொருத்தமாகுமாயின்

**अर्द्धजरतीयम्**—அர்த்தஜரதீயம்போன்ற

**इदम्**—இஃது (உலகிலும் வேதத்திலும் லிங்பதத்திற்குப்பேதத்தை கூறுதல்)

**न प्रशस्तम्**—சிரேஷ்டமன்றும்

**सामर्थ्यम्**—ஆற்றல்

**एकरसमेव**— பிரத்தியக்ஷாதிப்பிரமாணத்தோடு சமவடிவமாகவே

**यदा उपपन्नम्**—பொருத்தமாகும்போது

**नानारसम्**—பிரத்தியக்ஷாதிவிலக்ஷண நாநாவடிவ

**तत्**—ஆற்றல்

**न खलु परिकल्पनीयम्** —கற்பிக்கத்தக்கதன்றும்

## விசேஷவுரை

அபிதாயகத்தன்மையை போதகத்தன்மை பிரத்தியக்ஷாதிப்பிரமாணத்தின்கண்ணும் லிங்காதியின்கண்ணும் உலகில் நிச்சயிக்கப்பட்ட சுவார்த்த போதனத்தாலேயே வைதிக லிங்காதிகட்கும் பிராமாண்யம் பொருத்தமாகும் போது ஒரு யௌவனஸ்திரீயின் பர்த்தாவானவன் பிரயோஜனத்தையநுசரித்து பாதிசரீரத்தால் கிழவித்தன்மையினையும் விரும்புகின்றானெனின் அப்பிராமாணிகமான அது சித்திப்பதின்றாம் அதுபோல இந்தப்பிரவர்த்தனமும் சிறப்பின்றாம் வேறிடத்தில் பிரமாணங்களில் அஃது காணப்படாமையின் வைதிகலிங்காதிகளிலும் அஃது பொருத்தமன்றுமென்பது பொருள். அற்றேல் வேதத்தில் லிங்முதலியவைகட்குப்பிரேரகத்தன்மையையுடன்படாவிடின் புருஷனுக்குப்பிரவிருத்தி எப்படி சித்திக்கும் ஆண்டு வேறுபிரேரகமின்மையின் என்றுசங்கித்து அநுமானாதிகட்கும் இலௌகிக லிங்முதலியவைகட்கும் போல தனது பிரவர்த்தகஞானமுண்டாகும்போது புருஷன் தனது இச்சையினால் பிரவிருத்தியைச்செய்கின்றான் இதனை "இப்புருடன் காமமயனேயாவன் அவன் எவ்விதகாமமுடையவனாகின்றானோ அவ்விதசங்கற்பமுடையவனாகின்றான். எவ்வித சங்கற்பமுடையவனாகின்றானோ அவ்வித கருமத்தைச்செய்கின்றான்" என்பது முதலிய சுருதியும் "எதை எதை பிராணிசெய்கின்றதோ அது அது காமத்தின்சேஷ்டையாம்" என்னும் ஸ்மிருதியும் கூறுகின்றது அதாவது பிரமாணம் யாதொன்றையும் பிரவிருத்திப்பதின்றாம் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார் ஆற்றல் என. பிரத்தியக்ஷாதிப்பிரமாணத்திற்கும் லிங்காதிக்கும் சமவழிவமாவது தனது பிரமேயஞானத்தின் அநுகூலமேயாம் இத்தகைய ஏகரசத்துவமானது பிரேரணையின் அநுகூலத்தன்மையை வியாவிருத்திசெய்கின்றது நாநாரசமென்பது பிரத்தியக்ஷாதி விலக்ஷணமாய் போதம் பிரவிருத்திகளென்னுமிரண்டன் அநுகூலத்தன்மையாம். (397)

## அவதாரிகை

அபிதாயகத்தன்மையே பொருந்துகின்றது சாமர்த்தியம் ஏகரசமாம் எனக்கூறப்பட்டது அதனை தனது மதத்தின்படி வைதிகலிங்காதியின் கண் உபபாதனஞ்செய்கின்றார்:—

## சுலோகம்

**श्रेयोहेतुत्ववाची यदि भवति तदा संभवत्येकरूपा**
**शक्तिस्तस्याभिधाने न तु भवति तदा कारकोऽयं प्रवृत्तेः ।**
**श्रेयोहेतुश्च वाच्यः श्रुतिवचसि तदा पौरुषेये च तुल्यः**
**क्लृप्तश्चासौ न कल्प्यः श्रुतिवचसि यथा भावना लिङ्निबद्धा ॥**

## பதவுரை

**श्रेयोहेतुत्ववाची**–(வைதிக லிங் முதலியவை) இஷ்டசாதனத் தன்மை வாசகம்

**यदि भवति**–ஆகுமாயின்

**तदा**–அப்போது

**तस्य**–லிங் முதலியவற்றிற்கு

**अभिधाने**–தமது அர்த்தத்தைப் போதிப்பதின்கண்

**एकरूपा**–ஓர் வடிவமான

**शक्तिः**–சத்தி

**संभवति**–சம்பவிக்கின்றது

ஓர் வடிவமான சத்தி சம்பவிக்கும்போது பிரமாண வடிவ வேதத்திற்குக் காரகத்தன்மை வடிவ தோஷமும் பரிகரிக்கப்பட்டதாமெனக் கூறுகின்றார்:

**अयम्** –லிங் முதலியவை

**तदा**–இஷ்ட சாதனத்தன்மை வாசகமாகும்போது

**प्रवृत्तेः कारकः**–பிரவிருத்தியைச் செய்வதாக

**न तु भवति**–ஆவதின்றும்

லிங் முதலியவை பிரவிருத்தியைச் செய்வதின்றும். பிரவிருத்தியானது இஷ்டசாதனத்தன்மை ஞானமாகிய அன்னியத்தாலேயே சித்தித்திருத்தலின் என்பது பொருள்.

[அற்றேல் சிரேயஸின் ஏதுத்தன்மையின் ஞானம் (இஷ்டசாதனத் தன்மையின் ஞானம்) லிங்கின் வியாபாரமாகக் கற்பிக்கத்தக்கதாகுக அல்லது பிரவர்த்தனை (பிரவிர்த்தி ஏதுத்துவம்) லிங்கின் வியாபாரமாகக் கற்பிக்குக இவ்விரண்டில் விசேஷம் யாது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்].

**तदा**–அப்போது (அதாவது லிங் முதலியவை இஷ்டசாதனத் தன்மை வாசகமாகும்போது

**श्रुतिवचसि**–வைதிக வசனத்தின் கண்ணும்

**पौरुषेये च**–இலௌகிக வசனத்தின் கண்ணும்

**श्रेयोहेतुत्व**–இஷ்டசாதனத்தன்மை வடிவ

**वाच्यः**–வாச்சியார்த்தமானது

**तुल्यः**–சமமாகின்றது.

எப்போது லிஙாதிக்கு சிரேயசின் ஹேதுத்தன்மை வாச்சியமாகின்றதோ அப்போது அது சுருதிவசனத்திலும் புருஷவசனத்திலும் சமத்துவமாகின்றது. அதாவது லிஙாதிக்கு இஷ்டசாதனத் தன்மையைப் போதித்தல் அபூருவம் (புதிது) அன்றும். ஆதலின் அதற்கு பிரேரணையின் சமத்துவமன்றுமென்பது பொருள். மேலும் எமது மதத்தில் பசுவைக்கொண்டுவா என்பது முதலிய வாக்கியத்தின்கண் லிஙாதிக்கு சிரேயஸின் ஏதுத்துவ போதகத்தன்மை பிரசித்தமாம். சத்தபாவனைப் போதகத்துவம் பிரசித்தமன்றும. வேறிடத்தில் அல்லது பகுதிப்பொருளில் உமது மதத்தில் இஷ்ட சாதனத்தன்மையைப் போன்று சத்தபாவனை ஓரிடத்தும் பிரசித்தமன்றும். ஆதலின் பாவனை வடிவ பிரமேய சொரூபமும் பிரமாணத்திற்கு அதனைப்போதிக்குந் தன்மையும் அலௌகிகமாகவே கற்பிக்கத்தக்கதாகும் அது பொருத்தமன்றும். உலகப்பிரசித்தத்தாலேயே பொருத்தமாகும்போது அலௌகிக கற்பனைப் பொருத்தமன்றும் என்று கூறுகின்றார்.

**असौ**–இஷ்ட சாதனத்தன்மையும் பிரமாணத்திற்கு அதனை போதிக்கும் வியாபாரமும்

**क्लृप्तः**–உலகின்கண் பிரசித்தமாம்

**श्रुतिवचसि**–வேதவசனத்தின் கண்

**लिङ्निवहा**–லிஙின் வியாபார ரூபமான

**भावना**–பாவனையானது

**यथा**–எப்படிக் (கற்பிக்கத்தக்கதாமோ) அப்படி

**न कल्प्यः**–கற்பிக்கத்தக்கதன்றும்.

***விசேஷவுரை***

ஈண்டு இஃதபிப்பிராயமாம் புத்திமான்களுக்கும் போசனுதியின் கண் பிரவிருத்தியுண்டாகின்றது அது சத்தத்தாலாவது புருஷனுலாவது

**சுலோகம்**

श्रेयोहेतुत्ववाची यदि भवति तदा संभवत्येकरूपा
शक्तिस्तस्याभिधाने न तु भवति तदा कारकोऽयं प्रवृत्तेः ।
श्रेयोहेतुश्च वाच्यः श्रुतिवचसि तदा पौरुषेये च तुल्यः
क्लृप्तश्चासौ न कल्प्यः श्रुतिवचसि यथा भावना लिङ्निबद्धा ॥

**பதவுரை**

**श्रेयोहेतुत्ववाची**–(வைதிக லிங் முதலியவை) இஷ்டசாதனத் தன்மை வாசகம்

**यदि भवति**–ஆகுமாயின்

**तदा**–அப்போது

**तस्य**–லிங் முதலியவற்றிற்கு

**अभिधाने**–தமது அர்த்தத்தைப் போதிப்பதின்கண்

**एकरूपा**–ஓர் வடிவமான

**शक्तिः**–சத்தி

**संभवति**–சம்பவிக்கின்றது

ஓர் வடிவமான சத்தி சம்பவிக்கும்போது பிரமாண வடிவ வேதத்திற்குக் காரகத்தன்மை வடிவ தோஷமும் பரிகரிக்கப்பட்டதாமெனக் கூறுகின்றார்:

**अयम्** –லிங் முதலியவை

**तदा**–இஷ்ட சாதனத்தன்மை வாசகமாகும்போது

**प्रवृत्तेः कारकः**–பிரவிருத்தியைச் செய்வதாக

**न तु भवति**–ஆவதின்றும்

லிங் முதலியவை பிரவிருத்தியைச் செய்வதின்றும். பிரவிருத்தியானது இஷ்டசாதனத்தன்மை ஞானமாகிய அன்னியத்தாலேயே சித்தித்திருத்தலின் என்பது பொருள்.

[அற்றேல் சிரேயஸின் ஏதுத்தன்மையின் ஞானம் (இஷ்டசாதனத் தன்மையின் ஞானம்) லிங்கின் வியாபாரமாகக் கற்பிக்கத்தக்கதாகுக அல்லது பிரவர்த்தனை (பிரவிர்த்தி ஏதுத்துவம்) லிங்கின் வியாபாரமாகக் கற்பிக்குக இவ்விரண்டில் விசேஷம் யாது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார்].

**तदा**-அப்போது (அதாவது லிங் முதலியவை இஷ்டசாதனத் தன்மை வாசகமாகும்போது

**श्रुतिवचसि**-வைதிக வசனத்தின் கண்ணும்

**पौरुषेये च**-இலௌகிக வசனத்தின் கண்ணும்

**श्रेयोहेतुत्व**-இஷ்டசாதனத்தன்மை வடிவ

**वाच्य:**-வாச்சியார்த்தமானது

**तुल्य:**-சமமாகின்றது.

எப்போது லிஙாதிக்கு சிரேயசின் ஹேதுத்தன்மை வாச்சிய மாகின்றதோ அப்போது அது சுருதிவசனத்திலும் புருஷவசனத்திலும் சமத்துவமாகின்றது. அதாவது லிஙாதிக்கு இஷ்டசாதனத் தன்மையைப் போதித்தல் அபூருவம் (புதிது) அன்றும். ஆதலின் அதற்கு பிரேரணையின் சமத்துவமன்றுமென்பது பொருள். மேலும் எமது மதத்தில் பசுவைக்கொண்டுவா என்பது முதலிய வாக்கியத்தின்கண் லிஙாதிக்கு சிரேயஸின் ஏதுத்துவ போதகத்தன்மை பிரசித்தமாம். சத்தபாவனைப் போதகத்துவம் பிரசித்தமன்றும. வேறிடத்தில் அல்லது பகுதிப்பொருளில் உமது மதத்தில் இஷ்ட சாதனத்தன்மையைப் போன்று சத்தபாவனை ஓரிடத்தும் பிரசித்தமன்றும். ஆதலின் பாவனை வடிவ பிரமேய சொரூபமும் பிரமாணத்திற்கு அதனைப்போதிக்குந் தன்மையும் அலௌகிகமாகவே கற்பிக்கத்தக்கதாகும் அது பொருத்த மன்றும். உலகப்பிரசித்தத்தாலேயே பொருத்தமாகும்போது அலௌகிக கற்பனைப் பொருத்தமன்றும் என்று கூறுகின்றார்.

**असौ**-இஷ்ட சாதனத்தன்மையும் பிரமாணத்திற்கு அதனை போதிக்கும் வியாபாரமும்

**लोक:**-உலகின்கண் பிரசித்தமாம்

**श्रुतिवचसि**-வேதவசனத்தின் கண்

**लिङ्निष्ठा**-லிஙின் வியாபார ரூபமான

**भावना**-பாவனையானது

**यथा**-எப்படிக் (கற்பிக்கத்தக்கதாமோ) அப்படி

**न कल्प्य:**-கற்பிக்கத்தக்கதன்றும்.

## விசேஷவுரை

ஈண்டு இஃதபிப்பிராயமாம் புத்திமான்களுக்கும் போசுருதியின் கண் பிரவிருத்தியுண்டாகின்றது அது சத்தத்தாலாவது புருஷனாலாவது

ஒன்றினால் பிரேரிக்கப்பட்டு உண்டாவதின்றும் மற்றே இஷ்டசாதனத் தன்மை ஞானத்தாலாம் என்பது உமக்கும் சம்மதமாம் குழந்தைக்குப் பால் கொடுத்தலின்கண் மாதாவின் பிரவிருத்தியும் தனது இஷ்டமும ஆவசியகமுமாகிய குழந்தையின் சீவனுதியையுத்தேசித்தேயாம் குழந்தையின் பிரேரணையாலன்றும். போஜனுதியின்கண் நிச்சயிக்கப் பட்ட ஏதுவினையே மாதாவின் பிரவிருத்தியிலும் கற்பித்தற்றகுதியாத லானும் என்க. ஆதலால் பிரவர்த்தனைக்கு அதாவது பிரேரணைக்கு ஓரிடத்தும் பிரவிருத்திஹேதுத்தன்மை நிச்சயிக்கப்படாமையால் மாணவகனது பிரவிருத்தியால் அதன் அநுமானமின்றும் ஆதலின் லிங்காதிக்கு பிரவர்த்தனை சாமானியத்தின்கண்ணும் உலகத்தில் சத்தி சித்திக்கிறதில்லை மற்றே சிரேயஸின் ஏதுத்தன்மையிலேயேயாம் ஆதலின் வைதிகலிங் முதலியவை பிரவர்த்தனையை யெப்படிப்பிரதி பாதிக்கும்? பிரவர்த்தனையில்லாதபோது லிங்காதிக்கு அதன்கண் வியாபாரத்தைக்கற்பித்தல் எப்படித்தகும். நிரவயவவியாபக சத்தத் தின்கண் வியாபாரமும் சலனவடிவமாக சம்பவிக்கிறதில்லை வேறுவித மாகவும் வியாபாரம் நிரூபிக்கத்தகாதாம். இவ்வாறு சத்தபாவனுத்துவ விசேஷமும் லிங்காதியால் சித்தியாது அதற்கு அதாவது லிங்காதிக்கு பிரவர்த்தனை சாமானியத்தின்கண் நிஷ்டையுண்மையானும் வாச்சியார்த்த சம்பந்தியாக பிறிதோர் வஸ்து அறியப்படாதபோது அதன்கண் லக்ஷணை பொருந்தாமையாலும் என்க. ஆதலால் இந்தப்பிரவர்த்தனை யின் கற்பனை அப்பிராமாணிகமாம் ஆதலின் இஷ்டசாதனத்தன்மையே யாண்டும் லிங்காதியின் பொருளாமென்பது கருத்து. சிரேயஸின் ஏதுத் தன்மை இஷ்டசாதனத்தன்மையென்பன ஒரு பொருட் சொற்கள்.

### அவதாரிகை

இவ்வாறு லிங்தன்மை முதலிய வடிவத்தால் சத்தபாவனை லிங்காதியின் பொருளாமென்னும் பாட்டமதத்தைக்கண்டித்து லகாரத் தன்மை வடிவத்தால் ஆக்கியாதத்தின் பொருள் அர்த்தபாவனையாம் என்னும் அவரது மதத்தை அர்த்தபாவனைக்கு அப்பிராமாணிகத் தன்மையுண்மையால் தூஷிக்கின்றார்:—

### சுலோகம்

धात्वर्थतोऽन्या न च भावनाऽस्ति
यां भावनां वक्तुमलं लकारः ।

धात्वर्थमुद्रिच्य न पुंप्रयत्नः
लोके यतो भाति निरूपणायाम् ॥ ३९९ ॥

## பதவுரை

**यां भावनाम्**—யாதொரு கருத்திருவியாபாரரூபமான அர்த்த பாவனையை
**वक्तुं**—பிரதிபாதித்தற்கு
**लकारः**—லட் முதலிய பிரத்தியயமானது
**अलम्**—சமர்த்தமாமென்று உன்னால் சொல்லப்பட்டதோ
**भावना**—அந்தப்பாவனை
**धात्वर्थतः**—பகுதிப்பொருளினும்
**अन्या**—அன்னியமாக
**न च अस्ति**—இன்றும்

அற்றேல் சேஷ்டைக்கு பிரயத்தினமுடைய ஆன்மாவின் சம்யோகம் அசமவாயிகாரணமாதலால் சேஷ்டையால் பிரயத்தினம் அநுமிக்கப்படுகின்றது எனின் அதற்குக் கூறுகின்றார்.

**लोके**—உலகின்கண்
**निरूपणायाम्**—விசாரித்துப்பார்க்கின்
**पुंप्रयत्नः**—புருஷப்பிரயத்தினமானது
**धात्वर्थम्**—பகுதிப்பொருளை
**उद्रिच्य**—கடந்து
**यतः न भाति**—விளங்குவதின்றாமாதலின்

## விசேஷவுரை

பிரயத்தின வடிவ அர்த்தபாவனையின்கண் பிரத்தியக்ஷம் பிரமாண மாவதின்றும் சுகதுக்காதி போன்று பிரயத்தின வடிவம் ஒருவராலும் அநுபவிக்கப்படாமையின். இதனாலேயே செய்கின்றேன் என அஃது பிரத்தியக்ஷிதமாம் என்பதும் கண்டிக்கப்பட்டது. கை முதலிய வற்றின வியாபாரகாலத்திலேயே நியமமாக உண்டாகின்ற இவ்வநு பவத்திற்கு அதை (கைமுதலியவற்றின் வியாபார) மாத்திரத்தை விஷயஞ்செய்யுந்தன்மையுண்மையின். இதனாலேயே தேர் செல் கின்றது என்பது முதலிய அநுபவமும் பொருந்துகின்றது. சங்கை: வெளியில் வியாபாரமில்லாவிடினும் உள்ளே முயற்சிவடிவ பொருள் அநு

பவிக்கப்படுகின்றதெனின் அற்றன்று அவ்வநுபவத்திற்கும் சரீரத்தின் உட் பிரதேசத்தின் சேஷ்டையை விஷயஞ்செய்யுந்தன்மையுண்மையின் ஆதலால் பிரத்தியக்ஷம் அதன்கண் பிரமாணமின்ருமென்பது பொருள்.

சிகீரிஷையினனந்தரமே சேஷ்டை காணப்படுதலால் அநுசிரய சம்யோகமாவது மனதின் சையோக விசேஷமாவது அதன் அசமவாயி காரணமாகும். ஆதலின் பகுதிப்பொருளின் காரணததன்மையாலும் உலகின்கண் வெருணிககப்பட்டப் பிரகாரத்தால விசாரஞ்செய்யின் பிரயத் தினமென்பது ஒன்று எதனுல் விளங்குவதின்ரே அதனுல் பாவனை யில்லை எனக்கூட்டுக. சங்கை, அன்னியத்தின உற்பத்திக்கநுகூல மான கருத்தாவின் வியாபாரம் பாவனையாம். அஃது பகுதிப்பொருளினு மன்னியமாம். அன்றேல ஆக்கியாதத்திற்கு அகர்த்தத்தன்மைப் பிராப்தியாம். பாகம் யாகம் முதலிய பகுதிப்பொருள் பசி. யஜி, முதலிய பகுதிகளாலேயே கூறப்பட்டமையின், அஃது (கருத்திரு வியாபாரம்) தேர் செல்கின்றது என்பது முதலியவிடங்களிலுமிருக்கின்றதேயாம். இவ்வாறு பரஸ்பரம் வியாவிருத்தமான பகுதிப்பொருளினின்றும் சகல பகுதிப்பொருளினும் அநுகதமாயிருத்தலால் அது (கருத்திரு வியாபாரம்) அதினின்றும் (பகுதிப்பொருளினின்றும்) அன்னியமாம். சமைக் கின்ருன் யஜிக்கின்ருன் என்பது முதலிய பிரயோகங்களில் யாண்டும் செய்கின்ருனென்னும பொருள் பிரதீதியாகின்றது. அந்தக் கிருதியே எமது மதததில் பிரயததினமாம். சமாதானம்: விகுதிக்குப் பயன் சித்தித்தற்பொருட்டு பகுதிபபொருளினுமன்னியமாக வியாபாரம் அங்கீகரிக்கத்தக்கதன்ரும் லிங் முதலிய வடிவ ஆக்கியாதத்திற்கு ஆவசியகமான இஷ்ட சாதனத்தன்மையைப் பிரதிபாதிக்குந்தன்மை யுண்மையால் கிருதிப்பொருளன்மையின். லட் முதலியவற்றிற்கும் பகுதிப்பொருளின்கண் சாத்தியத்தன்மையைப் பிரதிபாதிக்குந்தன்மை யுணமையின். இதனுலேயே யஜிககுக என்பது முதலியவற்ருல் யாகாதியின்கண் சாத்தியத்துவ விசிஷ்ட இஷ்ட சாதனத்தன்மை பிரதீதியாகினறது. அன்றேல் அதனுல் பிரவிருத்தி பொருந்தாமற்போம் ஆதலின், கட்டைகளால் சமைக்கின்ருன் என்னுமிடத்துக் கட்டைகளில் சமைத்தற்காரணத்தன்மைபோன்று. அநுகதத் தன்மையால் அதற்கு (கிருதிக்கு) பகுதிப்பொருளினும் வேருக வியாபாரத்தன்மையுமின்ரும்.

ஆக்கியாதத்தின் வாச்சியத்திற்கு தருமமாத்திரத்தன்மையாலும் அநுகதத்தன்மை பொருந்துதலின். ஆதலால் பாவனையின்றென்பது கருத்து. (399)

## அவதாரிகை

இவ்வாறு வேதாந்தங்களுக்கு சித்தபிரம்ம பரத்தன்மையை நிராகரித்தற்பொருட்டு நியோகவடிவகாரியத்திலாவது பாவனை வடிவ காரியத்திலாவது வேதம் பரியவசன்னமாம் என்னும் எதிர்ப்பானது கருமகாண்டத்திற்கும் அஃது (நியோகமாவது பாவனையாவது) பொருளன்றும் அதன்கண்ணுள்ள லிங் முதலியவற்றிற்கு இஷ்டசாதனத் தன்மை பொருளாதலின் வேதம் அதனோடு (இஷ்டசாதனத்தன்மை யோடு) கூடிய (சாத்திய) அர்த்தபரமாதலின் என்று உபபாதனஞ் செய்தலால் கண்டிக்கப்பட்டது. "சாத்தியத்தின் பொருட்டு சித்த வஸ்து உபதேசிக்கப்படுகின்றது" என்னும் பாஷியத்தின் கருத்தும் முன்னமே சொல்லப்பட்டது ஆதலின் அதன் பலத்தாலும் வேதம் காரிய பரமன்றுமெனக்கருதி முடிக்கின்றார்:—

## சுலோகம்

**न कर्मकाण्डेऽपि ततो नियोगो न भावनाऽप्युक्तनयेन तस्मिन् ।**
**न तद् द्वयं वेदशिरस्सु तस्मात्ततो न कार्यार्थपराणि तानि ॥ ४०० ॥**

## பதவுரை

**ततः**—முன் வருணிக்கப்பட்ட நியாயத்தால்

**कर्मकाण्डेऽपि**—கருமகாண்டத்தின் கண்ணும்

**न नियोगः**—அதிருஷ்டவடிவ நியோகமின்றும்

**तस्मिन्**—கருமகாண்டத்தின் கண்

**उक्तनयेन**—கூறிய நியாயத்தால்

**भावनाऽपि न**—(இருவித) பாவனையுமின்றும்

[எப்போது கருமகாண்டத்தின் கண்ணும் நியோகம் பாவனை யென்னுமிரண்டற்கும் இத்தகைய கதியாமோ அப்போது அகண்ட பிரம்மபரவேதாந்தத்தின் கண் அவ்விரண்டுமில்லையென சொல்ல வேண்டுவதென்னையென்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்]

**तस्मात्**—ஆதலால்

**वेदशिरःसु**—வேதாந்தங்களில்

**तद्द्वयम्**-நியோகம் பாவனையாகிய இரண்டும்

**न**-இன்றும்

[அப்படியானால் காணத்தக்கது காண்க என்பது முதலிய ஞானத்தை விதிக்கும் வாக்கியங்களுக்குக்கதியாது என்னுஞ்சங்கைக்குக் கூறுகின்றார் ]

**अतः**-அவ்விரண்டு மின்மையால்

**तानि**-வேதாந்த வாக்கியங்கள்

**कार्यार्थपराणि**-நியோகபரமாவது பாவனுபரமாவது

**न**-அன்றும்

ஞானவிதி இனிபேல் கண்டிக்கப்படுவதால் வேதாந்தம் அதன் விதிபரமன்றும் மற்றோ அகண்ட பிரம்மபரமாமென்பது கருத்து. (400)

## நிஷேதவாக்கியங்களுக்கு காரியபரத் தன்மையை நிராகரித்தல்

### அவதாரிகை

இவ்வாறு வேதாந்த வாக்கியங்களுக்கு காரியபரத்தன்மையை நிராகரித்து பிரம்மபரத்தன்மை ஸ்தாபிக்கப்பட்டது. இப்போது வேதாந்தவாக்கியம் காரியபரமாம். வேதவாக்கியமாதலால் அக்னி ஹோத்திராதி வாக்யம் போன்று என்னும் அனுமானத்தினை பிராமணனை கொல்லற்க மதுவைக்குடியற்க என்பது முதலிய நிஷேதவாக்கியத்தின் கண் வியபிசாரதோஷத்தினால் தூஷிக்கின்றார்:—

### சுலோகம்

अपि च प्रतिषेधचोदनाविषयः स्यात्प्रतिषिद्धकर्मणः ।
फलगर्धिनिवृत्तिरेव सा न नियोगो न च तस्य गोचरः ॥ ४०१ ॥

### பதவுரை

**अपि च**-மேலும்

**प्रतिषिद्धकर्मणः**-நிஷேதிக்கப்பட்ட ஹனனம் முதலிய கருமத்தின்

**फलगर्द्धिनिवृत्तिः एव**-பலாகாங்க்ஷையினுதாசீனத்தன்மை வடிவ உபாதியே

**प्रतिषेधचोदना विषयः स्यात्**-நிஷேதவாக்கியத்தின் விஷயமாம்

[அதனாற் சித்தித்தது யாதெனிற் கூறுகின்றார்]

**सा**- அந்த நிவிருத்தியானது

**न नियोगः** - காரியமாகின்றதில்லை. (பிராகபாவத்தன்மையால் அதற்கு சித்த சொரூபத்தன்மையுண்மையின்.)

[ அப்படியானால் நியோகத்தின் விஷயமாகிய பகுதிப்பொருள் விதிக்கத்தக்கதாகுமே இவ்வாறாகவே நிஷேத வாக்கியங்களுக்கு விதி நிஷ்டத்தன்மையாமென்னுஞ் சங்கைக்கு அன்றெனக்கூறுகின்றார்.]

**तस्य**-நியோகத்தின்

**गोचरः**-விஷயமாகிய பகுதிப்பொருள் வடிவமும் (நிவிருத்தி)

**न च**-அன்றும் அஃது அநுஷ்டிக்கத்தகாததாதலின்

## விசேஷவுரை

நியோகக்கிரஹணம் பாவனைக்கும் உபலக்ஷணமாம் பாவனையாவது பாவனையின் விஷயமாவது அவ்வாறின்றும் ஔதாசீன்யவடிவமன்று மென்பது பொருள். நிஷேதவாக்கியத்திற்கு நிஷேதிக்கப்படுகின்ற ஹனனம் முதலியவற்றிலுள்ள சிரேயஸஸாதனத்தன்மையின் அபாவமே பொருளாம் அஃது நியோகமுமன்று நியோகத்தின் விஷயமுமன்றும். விதிவாக்யத்திற்கு பாவார்த்த கோசரத்தன்மை நியமமாதலின் ஆதலால் அவ்வாக்கியம் காரியபரமன்றும் ஆதலின் அதன்கண் வேதவாக்கியத்தன்மை வடிவ ஏது வியபிசாரத்தையடைகின்றது என்பது பொருள். (401)

## அவதாரிகை

அற்றேல் நிவிருத்தியே நகாரத்தின் பொருளாமென்பது யாங்ஙனம் எதனாலெனின் "உதயமாகின்ற சூரியனைப் பார்க்கலாகாது" என்னுமிடத்து பார்த்தலின் விருத்தமான மானசக்கிரியையின் விதி எப்படி அங்கீகரிக்கப்படுகிறதோ அப்படி ஹனனதியின் விருத்தக் கிரியை பிரகிருதத்திலும் விதிக்கப்படட்டுமே என்னுஞ்சங்கையை திருஷ்டாந்தத்தின் விஷமத்தன்மையால் பரிகரிக்கின்றார்:—

## சுலோகம்

**नञः स्वसम्बन्धिपदार्थवस्तुनो**
**निवृत्तिरर्थः सहजः प्रसिद्धितः ।**
**अनीक्षणादौ व्रतशब्दसङ्गतेः**
**परप्रयुक्ता खलु मानसी क्रिया ॥ ४०२ ॥**

பதவுரை

**नञः**-நகாரத்திற்கு

**स्वसम्बन्धिपदार्थवस्तुनः**-தனது சம்பந்தியாகிய யாதொரு பத முண்டோ அதனது அர்த்தமாகிய வஸ்துவின்

**निवृत्तिः**-அபாவமே

**सहजः अर्थः**-முக்கியார்த்தமாம்

**प्रसिद्धितः**-ஏதனுலெனின் விருத்த புருஷரது வியவகாரத்தில் அவ்வாறே பிரசித்தியாதலின்

அதன் (அபாவத்தின்) விருத்தத்துவாதி யன்றும் நாநா அர்த்தத் தன்மைப் பிராப்தியாதலின். அஃது (நாநா அர்த்தத்தன்மை) ஓர் சத்தத்திற்கு வேறு வழியுளதாயவழி பொருத்தமன்றும்.

இது கூறப்பட்டதாகின்றது கொல்லத்தக்கதன்று என்று கூறு மிடத்து ஸ்வரசத்தால் (நேர்மையாக) தனது சம்பந்தியினது நிவர்த்தி யின் ஸ்புரணமே முன்னர் காணப்படுதலின் அதுவே பொருளாம் பரியு தாஸம் பொருளன்றும் முக்கியார்த்தம் சம்பவிக்கும்போது அர்த்தாந்தரம் கற்பிக்கத்தக்கதன்றும் என்பது பொருள் [அப்படியானுல்

नेक्षेतोद्यन्तमादित्यं नास्तं यान्तं कदाचन ।
नोपरक्तं न वारिस्थं न मध्यं नभसो गतम् ॥

(உதயமாகுஞ் சூரியனையும் அஸ்தமனமாகுஞ் சூரியனையும் ஓர்போதும் பார்க்கலாகாது கிரகண முற்ற சூரியனையும் ஜலத்தில் பிரதிபிம்பித்த சூரியனையும் ஆகாசத்தின் மத்தியிலுள்ள சூரியனையும் பார்க்கலாகாது) என்பது முதலிய விடங்களில் பரியுதாஸத்தை யாசிரயித்தல் எற்றிற்கு எனின் பலமுடைய பாதக வசத்தாலெனக் கூறுகின்றார்]

**अनीक्षणादौ**-பார்க்கலாகாது என்பது முதலிய விடங்களில்

**मानसी क्रिया**-ஈக்ஷண விருத்தமான மானஸக்கிரியை

**परप्रयुक्ता खलु**-வலுவுள்ள பாதகத்தினதீனமாம்

**व्रतशब्दसङ्गतेः**-உபக்கிரமத்தில் பிரஜாபதி விரதம் என விரத சத்தம் கேட்கப்படுதலின்

விசேஷவுரை

பார்க்கலாகாது என்பது முதலிய இடங்களில்பார்த்தலின் விருத்தமான மானஸக்கிரியையானது முக்கியார்த்தக்கிரஹணத்தில் பலமுடைய

யாதொருபாதகமுண்டோ அதனை நிமித்தமாகவுடையதாம். பலமுடைய அப்பாதகம் யாதெனின் விரத சத்த சம்பந்தமாம. அந்த வாக்கியத்தின் உபக்கிரமத்தில் "अथातः प्रजापतिव्रतम्" (இனிமேல் பிரஜாபதியின் விரதமாம்) என விரதசத்தம் கேட்கப்படுதலாலும் விரதத்திற்கு அநுஷ்டேயத்தன்மையுண்மையானும் அந்தப் பிரகரணம் அநுஷ்டேய பரமாம் ஆதலின் நகாரத்தின் முக்கியார்த்தமாகிய அபாவத்திற்கு அநுஷ்டேயத்தன்மையின்மையின் நகாரத்தால் அநுஷ்டான யோக்கியமான மானசக்கிரியை ஆண்டு லக்ஷிக்கப்படுகின்றது ஆதலின் அவ்வாக்கியம் விதிபரமாம். அவ்வாறு ஈண்டு முக்கியார்த்தான்வயத்தில் யாதொரு பாதகமுமின்றும் ஆதலின் இது (நிஷேத வாக்கியம்) விதிபர மன்றும் என்பது பொருள்.

பரியுதாசம் = அன்மைப்பொருள், அல்லது மறுதலை. அனுஷ்டேயம்—அநுஷ்டிக்கத்தக்கது. (402)

### அவதாரிகை

மேலும் நிஷேத வாக்கியத்திற்கும் நிவிருத்திக்கிரியையின் விதி பரத்தன்மையையங்கீகரிக்கின் எல்லா வாக்கியமும் விதிபரமேயாகும் ஆகவே விதி நிஷேத வேற்றுமை சித்தியாது அவ்வேற்றுமையோ இருக்கின்றது.

" फलबुद्धिप्रमेयाधिकारि बोधकभेदतः ।
पञ्चधाऽत्यन्तभिन्नत्वाद्भेदो विधिनिषेधयोः " ॥

(பயன், ஞானம், விஷயம், அதிகாரி, போதக வாக்கியம், இவைகளின் பேதத்தால் விதிநிஷேதங்களுக்கு ஐந்து பிரகாரத்தால் அத்தியந்தம் பின்னத்தன்மையுண்மையின் பேதமுளது) என சகல மஹாஜனங் களாலும் ஆதரிக்கப்பட்டமையின் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

### சுலோகம்

**अपि च प्रतिषेधचोदना न तु भिद्येत भवन्मते विधेः ।**
**विधिरेव तु चोदनाऽखिला न हि वेदे वचनं निवर्तकम् ॥ ४०३ ॥**

### பதவுரை

**अपि च**—மேலும்
**भवन्मते**—உமது மதத்தில்
**प्रतिषेधचोदना**-நிஷேதவாக்கியமானது

**विधेः**–விதிவாக்கியத்தினும்

**न तु भिद्येत**–பின்னமாகாது

[அதிலேதுவைக்கூறுகின்றார்]

**अखिला चोदना**–எல்லா வாக்கியமும்

**विधिः एव**–(உமது மதத்தில்) விதியேயாம்

அற்றேல பிரவிருத்தியைச்செய்வது விதியாம் நிஷேதவாக்கியமோ நிவிருத்தியைச்செய்வதாம் ஆதலின் அதற்கு விதித்தன்மை யெங்ஙனம் பொருந்தும் என்னுமிடத்துக்கூறுகின்றார்.

**वेदे**–வேதத்தில்

**निवर्तकम्**–நிவர்த்தியைச்செய்யும்

**वचनम्**–வாக்கியமானது

**न हि**–(உமது மதத்தில்) இன்றாதலின்

நிஷேத வாக்கியத்தின் கண்ணும் விதிக்கப்படுகிற கிரியைக்கு பிரவிருத்தி விசேஷத்தன்மையுண்மையின் உமது மதத்தில் அவ் வாக்கியம் நிஷேத பரமன்றுமெனபது கருத்து. (403)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் சுருக்கமாக நிஷேத வாக்கியத்திற்கு சித்தவஸ்துவின் கண் திதியைப்பிரதிபாதித்து அதுபோன்றே ஸமஸ்த வேதாந்த வாக்கியமும் விதிசூனியமேயாகி பலத்தின் பரியவசானமுடையதாய்ப் பிரமாணமாருக என்று முடிக்கின்றார்:—

## சுலோகம்

प्रतिषेधवाक्यवदतः सकलं विधिशून्यमेव फलवद्भवतु ।
वचनं त्रयीशिरसि तत्त्वमसिप्रभृति प्रतीचि तमसोऽपहतेः ॥ ४०४ ॥

## பதவுரை

**अतः**–கூறிய நியாயத்தால் (எதனால் சகலவேதமும் விதிநிஷ்டமன்றோ) அதனால்

**प्रतिषेधवाक्यवत्**– [1]அவிதிப்பிரதான நிஷேதவாக்கியம் போன்று

---

1. நிஷேதவாக்கியமிருவிதமாம் ஒன்று விதிப்பிரதான நிஷேத வாக்கியம் அஃது உதயமாகுஞ்சூரியனைப்பார்க்கலாகாது என்பதாதி மற்றொன்று அவிதிப்பிரதான நிஷேதவாக்கியம் அஃது பிராமணனை கொல்லற்க என்பதாதி.

**त्रयीशिरसि**–வேதாந்தத்திலுள்ள
**तत्त्वमसिप्रभृति**–தத்துவமசி முதலிய
**सकलं वचनम्**–எல்லா வாக்கியமும்
**विधिशून्यम् एव**–விதியின்றியதேயாம்
**फलवत् भवतु**–(அங்ஙனமாயினும்) பயனுடையதாம்
[பயனையே கூறுகின்றார்]
**प्रतीचि**–பிரத்தியகான்மாவின்கண்
**तमसः**-அநாதியான அஞ்ஞானத்தை
**अपहृतेः**-பாதித்தலின் (404)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் நகாரத்திற்கு முக்கிய விருத்தியால் பிரசஜ்யப்பிரதிஷேதார்த்தம் (இன்மைப்பொருள்) உண்மையானும் அவ்வர்த்தத்திற்குக் காரியவிஷயத்தன்மைச் சம்பவியாமையாலும் அநீக்ஷணுதியின்கண் அதாவது உதயமாகுஞ் சூரியனைக் காணற்க என்பது முதலியவிடங்களில் அனுஷ்டேயார்த்தத்தைப்போதிக்கும் விரதசத்தத்தின் ஸமபிவியாஹார பலத்தால் நகாரத்திற்கு பரியுதாசத்தில் லக்ஷணையால் ஈக்ஷண விருத்தமான ஸக்கிரியார்த்தத்தன்மையுண்மையினாலும் நிஷேத வாக்கியத்தின்கண் அத்தகைய முக்கியார்த்தத் தியாகத்தின் நிமித்தம் ஓர்போதுமின்மையாலும் நிஷேத வாக்கியம் நிஷேதநிஷ்டமேயாம் காரியநிஷ்டமன்றும் அதுபோன்றே வேதாந்த வாக்கியமனைத்துமே பிரம்மநிஷ்டமாமென்று சொல்லப்பட்டது. இப்போது நகாரத்தினர்த்தத்தில் பட்டரது அபிப்பிராய விசேஷத்தைத் தூஷித்தற்கு அநுவதிக்கின்றார் :—

## சுலோகம்

नामधातुसहितो नञिष्यते पर्युदासविषयो मनीषिभिः ।
न प्रसक्तविनिवृत्तिवाचकोऽब्राह्मणादिषु तथोपलम्भनात् ॥ ४०५ ॥

## பதவுரை

**नाम धातु सहितः**-சுபந்தமாகிய பெயர்ச்சொல்லோடும் பகுதியாகிய வினைச்சொல்லோடுங்கூடிய
**नञ्**–நகாரம்
**पर्युदासविषयः**–பரியுதாஸத்தை விஷயஞ் செய்வதாக

**मनीषिभिः**-வித்துவான்களால்

**इष्यते**-அங்கீகரிக்கப்படுகிறது

**प्रसक्तविनिवृत्तिवाचकः**-(நாமதாதுக்களோடுகூடிய நகாரம்) பிராப்தமானதின் * நிவிருத்தி மாத்திர வாசகமாக

**न**-அங்கீகரிக்கப்படுவதின்றும் எதனாலெனின்

**अब्राह्मणादिषु**-எதிரில் அப்பிராம்மணன் நிற்கின்றான், இந்த மிலேச்சன் அதருமி என்பதாதியின்கண்

**तथा उपलम्भनात्**-பிராம்மணனினன்னியனிடத்தும் தருமவிரோதி யான பாபியினிடத்தும் நகாரத்தால், பிரதீதி காணப்படுதலின்.

*விசேஷவுரை*

கேவலம் பிரஸக்தத்தின் (பிராப்தமானதின்) அபாவமே நகாரத்தின் முக்கியார்த்தமன்றும மற்றோ அதனின் அன்னியமும் அதனின் விரோதியுமாகிய இவைகளும் நகாரத்தின் முக்கியார்த்தங்களாம். பரியு தாஸமாவது நகார சம்பந்தி பதார்த்தத்தின் பரிவர்ச்சனமாம்.

" नामधात्वर्थयोगी तु नैव नञ् प्रतिषेधकः ।
वदत्यब्राह्मणाधर्मावन्यमात्रविरोधिनौ " ॥

(நாமதாதுவோடு கூடிய நகாரம் நிஷேத வாசகமன்றும். அப் பிராம்மணன் அதருமம் என அன்னியமாத்திரத்தையும் விரோதியையும் நாமதாதுஸகித நகாரம் கூறுகின்றது) என பாட்டவார்த்திகத்திலும் கூறப்பட்டுளது :— (405)

*அவதாரிகை*

கூறிய திருஷ்டாந்தத்தினையே வெளிப்படுத்துகின்றவராய் நாம தாதுக்களோடு கூடிய நகாரத்திற்கும் அதனினன்னிய அர்த்தத்தை யுடையதாந்தன்மையிலும், விருத்தார்த்தத்தை யுடையதாந்தன்மையிலும் கிரமமாக உதாகரணத்தைக் கூறுகின்றார் :—

*சுலோகம்*

**अब्राह्मणाधर्मगिरोर्नञेषः नामान्वयादाश्रितपर्युदासः ।**
**अन्यं विरुद्धं च सदाभिधत्ते नोद्यन्तमित्यादिषु धातुयोगात् ॥ ४०६ ॥**

---

* நிவிருத்தி அபாவம்

### பதவுரை

**अब्राह्मणाधर्मगिरोः**—அப்பிராம்மணன் அதருமம் என்னும் பதங்களின் சம்பந்தியாகிய

**एषः नञ्**—இந்த நகாரமானது (அகாரமென்பது பொருள்)

**नामान्वयात्** –பெயர்ச்சொல்லை சம்பந்தித்திருத்தலால்

**आश्रितपर्युदासः**—தனது பொருளாக பரியுதாஸத்தையங்கீகரித்ததாகி

**अन्यं विरुद्धम् च**—அப்பிராம்மணன் என்னுமிடத்து பிராமணனின்னிய க்ஷத்திரியராதியையும், அதருமம் என்னுமிடத்து தரும விருத்தமான அதருமத்தையும்

**सदा**—எப்போதும்

**अभिधत्ते**—கூறுகின்றது

**नोद्यन्तमित्यादिषु**—உதயமாகும் சூரியனை காணற்க என்பது முதலிய விடங்களில் (இந்த நகாரமானது)

**धातुयोगात्** –காண்டலாகிய பகுதியின் சம்பந்தத்தால், பரியுதாஸ விருத்தியினால் விருத்தார்த்தத்தை அதாவது காண்டலின் விரோதியான அன்னிய சங்கல்பத்தையெப்போதும் கூறுகின்றது என ஒட்டுக. (406)

### அவதாரிகை

அற்றேல் ஈண்டு வாக்கியத்தின்கண் எத்தகைய பரியுதாஸம் நகாரத்தால் அடையப்படுகிறதென்னுமிடத்து அதனைக் கூறுகின்றார்:—

### சுலோகம்

**नोद्यन्तमित्यत्र नञेक्षणार्थसमीपकार्यान्तरमुच्यते हि ।**
**ततश्च नेक्षिष्य इतीदृशी स्यात् संकल्पना संनिहितत्वहेतोः ॥**

### பதவுரை

**नोद्यन्तम्** –உதயமாகுஞ் சூரியனைக் காணற்க

**इत्यत्र**—என்னும் வாக்கியத்தின்கண்

**ईक्षणार्थ**—காண்டல்வடிவ பகுதிப்பொருளின்

**समीप**—சம்பந்தியும்

**कार्यान्तरम्**—லக்ஷண காரியத்தினும் அன்னியமுமாகிய லக்ஷண விரோதி

**नञा**—நகாரத்தால்

**उच्यते**—சொல்லப்படுகின்றது

[அதனையே பிரித்துக்காண்பிக்கின்றார்]

**ततश्च**—அதனால்

**नेक्षिष्य इति**—காணேன் என்னும்

**ईदृशी संकल्पना**—இத்தகைய சங்கல்பம்

**स्यात्**—(பரியுதாஸ விருத்தியினால் நகாரத்தின் அபிதேயம்) ஆகும்

**सन्निहितत्वहेतोः**—சமீபித்திருக்குந்தன்மைவடிவ ஏதுவினால்

### விசேஷவுரை

தாதுசம்பந்தி நகாரத்தால் தாதுவினர்த்தத்தின் விருத்தமாகிய அன்னிய வஸ்துவே சொல்லப்படுகிறது வேறன்று. ஆதலின் சம்பந்தி எனப்பட்டது. லக்ஷண விரோதி சங்கல்பத்திற்கு லக்ஷண விரோதித் தன்மையால் அதன் சம்பந்தித்தன்மையுண்மையின் சமீபித்திருக்குந் தன்மைவடிவ ஏதுவினால் எனப்பட்டது. (407)

### அவதாரிகை

அப்படியானால் எவ்விடத்துப் [1] பிரஸஜ்ஜ்யப் பிரதிஷேதத்திற்கு அவகாசம் என்னுமிடத்து அதனைக் கூறுகின்றார்:—

### சுலோகம்

द्विजं न हन्यान्न कलञ्जमद्या-
दित्यादिवाक्ये विधिनाऽस्य योगात् ।
प्रसज्यमानार्थनिवृत्तिमात्रं
नञोऽर्थ इत्याश्रितमादरेण ॥ ४०८ ॥

### பதவுரை

**द्विजं न हन्यात्**—பிராமணனைக் கொல்லற்க

**कलञ्जम्**—மான் மாமிசத்தை

**न अद्यात्**—புஜியற்க

**इत्यादि वाक्ये**—என்பதாதி வாக்கியத்தின்கண்

**विधिना**—லிங் முதலிய விதி பதத்தோடு

1. பிரஸஜ்ஜியப்பிரதிஷேதம்—இன்மைப்பொருள்.

**अस्य नञः**—இந்த நகாரத்திற்கு
**योगात्** —சம்பந்தமிருத்தலால்
**प्रतीयमानार्थ-निवृत्तिमात्रम्** } பிராந்தியால் பிராப்தியான ஹனனுதியின்கண் இஷ்டசாதனத்தன்மை வடிவ அர்த்தத்தின் அபாவ மாத்திரமே
**अर्थः इति**—நகாரத்தின் பொருளாமென
**आदरेण**—ஆதரபூருவமாக
**आश्रितम्** —அங்கீகரிக்கப்பட்டுளது

*விசேஷவுரை*

ஆதிபதத்தால் மதுவைக் குடியற்க என்பதாதி கிரகிக்கப்படுகின்றது. பிராப்தியான இஷ்ட சாதனத் தன்மை என ஒட்டுக. பிராமணனைக் கொல்லற்க என்பதாதி வாக்கியத்தின்கண் நகாரத்திற்கு லிங் முதலிய விகுதியோடுள்ள சம்பந்த வசத்தால் விதுதியினர்த்தமான சிரேயஸ்ஸாதனத்தன்மையின் அபாவ மாத்திரமே பொருளாமென அன்னியரால் அங்கீகரிக்கப்பட்டுளது என்பது பொருள். (408)

*அவதாரிகை*

ஈண்டும் பிராபாகரரது அபிப்பிராய பேதத்தைக் கூறுகின்றார் :—

*சுலோகம்*

नाद्यां न हन्यां न पिबेयमित्यपि
वाक्येषु नञ्वत्सु वदन्ति मानसीम् ।
संकल्परूपां विधिबन्धिनीं क्रियां
नोद्यन्तमित्यादिवचःस्विवापरे ॥ ४०९ ॥

*பதவுரை*

**अपरे**—பிரபாகரரையநுசரித்தவர்கள்
**नञ्वत्सु**—நகாரத்தையுடைய
**वाक्येषु**(கொல்லற்க என்பது முதலிய) வாக்கியங்களில்
**नोद्यन्तमित्यादिवचःसु इव**—உதிக்குமினனைக் காணற்க என்பது முதலிய வாக்கியங்களிற்போன்று
**न अद्याम्** —புசியேன்
**न हन्याम्** —கொல்லேன்
**न पिबेयम्** —குடியேன்

**इत्यपि**–என்னுமாகாரமான

**संकल्परूपाम्** –சங்கல்ப வடிவமானதும்

**विधिबन्धनीम्** –விதியோக்கியமுமான

**मानसीं क्रियाम्** –மானஸக்கிரியையினை

**वदन्ति**–கூறுகின்றனர்

### விசேஷவுரை

உதிக்குமினன் என்பதாதி வாக்கியம் திருஷ்டாந்தமாம். கொல்லற்க என்பதாதி வாக்கியத்தின்கண்ணும் கொல்லுதல் குடித்தல் முதலியவற்றைச் செய்யேன் என சொல்லுதலாதிக்கிரியையின் விரோதி ஸங்கல்பக்கிரியையின் விதியே பொருளாமெனப் பிராபாகரர் கூறுகின்றனர் என்பது பொருள். (409)

### அவதாரிகை

அற்றேல் கொல்லற்க என்பதாதியின்கண் பிரஸஜ்ஜியப்பிரதிஷேதார்த்தம் சம்பவிக்கும்போது பரியுதாஸத்தையாசிரயித்தல் எற்றிற்கு என்னுஞ் சங்கைக்கு அதன் சம்பவம் அசித்தமாமெனக் கூறுகின்றார்.

### சுலோகம்

**वाक्येषु नञ्वत्सु निवृत्तिमात्रं प्रमेयमित्यभ्युपगम्यमाने ।**
**प्रत्यक्षमानेन विरुध्यते हि निवृत्तिशास्त्रं न च युज्यते तत् ॥ ४१० ॥**

### பதவுரை

**नञ्वत्सु**–நகாரத்தினையுடைய

**वाक्येषु**–(கொல்லற்க என்பது முதலிய) வாக்கியங்களில்

**निवृत्तिमात्रम्** –(கொல்லுதலாதியின்கண் இஷ்ட சாதனத் தன்மையின்) அபாவமாத்திரம்

**प्रमेयम् इति**–விஷயமாமென்று

**अभ्युपगम्यमाने**–அங்கீகரிக்கப்படுமாயின்

**प्रत्यक्षमानेन**–(இனிக் கூறப்படும் பிரகாரத்தால்) பிரத்தியக்ஷப் பிரமாணத்தோடு

**विरुध्यते हि**–விருத்தமாகும். (ஆதலால் நகாரத்திற்கு அந்தப் பிரமேயத்துவத்தை யங்கீகரித்தல் தகுதியன்று ஆதலின்)

**तत् निवृत्तिशास्त्रम्** –அஃது நிவிருத்தி சாஸ்திரமாமென்பது

**न च युज्यते**-பொருத்தமன்ரும் ஆதலின் சருவ சாஸ்திரமுமே பிரவர்த்தகமாமென்பது பொருள். **(410)**

## *அவதாரிகை*

மேலும் **'चोदनेति क्रियायाः प्रवर्तकं वचनम्'** (சோதனை யென்பது கிரியையின் பிரவர்த்தக வசனமாம்) என சாபர பாஷியக் காரரும் நிஷேத சோதனைக்கும் பிரவர்த்தகத் தன்மையைத் தெரிசிப்பிக் கின்ருர் விதி நிஷேதங்களின் வேற்றுமையோ பகுதிப்பொருள் அதன் விரோதிக்கிரியையாகிய இவைகளின் விதித்தன்மை வடிவ அவற்றின் அவாந்தர விசேஷ நிமித்தகமாமாதலின் அதுவும் அதாவது நிஷேத சோதனையும் பிரவிருத்தி நிஷ்டமேயாமென்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்ருர்:—

## *சுலோகம்*

**प्रवर्तकं वाक्यमुवाच चोदनां निवर्तकं नैवमुवाच भाष्यकृत् ।**
**ततश्च विद्मो न हि चोदनाऽस्ति सा प्रवर्तिका या न भवेदिति स्थितिः ॥**

## *பதவுரை*

**भाष्यकृत्** -ஜைமினி சூத்திரத்தின் பாஷியக்காரரான சபரசுவாமி
**चोदनाम्** -சோதனையென்பதனை
**प्रवर्तकं वाक्यम् उवाच**-பிரவர்த்தக வாக்கியமாமெனக் கூறினுர்
**एवम्** -இவ்வாறு
**निवर्तकम्** -நிஷேத வசனம் நிஷேதசோதனையாமென
**न उवाच**-கூறினுரில்லை [ அதனுற்சித்தித்தது யாதெனிற் கூறு கின்ருர் ]
**ततश्च**-அதனுல்
**या प्रवर्तिका**-யாதொரு வாக்கியம் பிரவர்த்தகம்
**न भवेत्** -ஆவதின்ருே
**सा चोदना**-அஃது சோதனையாக
**न हि अस्ति**-ஆகின்றதில்லை
**इति स्थितिः**-என்பது மரியாதையாம்
**विद्मः**-என அறிகின்ருேம்.

## *விசேஷவுரை*

நிவர்த்தியைப் போதிப்பதாக வாக்கியமிருக்குமாயின் நிஷேத வசனம் நிஷேத சோதனையாமென அவர் கூறுவர். அங்ஙனம் கூருமை

யின் கொல்லற்க என்பதாதி நிஷேத சோதனையும் சங்கல்பக்கிரியையின் கண் பிரவர்த்தகமேயாமென்பது கருத்து. (411)

## அவதாரிகை

இப்போது முதல் (பட்ட.) மதத்தில் கூறிய பிரகாரத்தாலும் கொல்லற்க என்பதாதி நிஷேத வாக்கியத்திற்கு சித்த மாத்திரவடிவ அபாவத்தில் பரியவசானம் சித்திக்கின்றது. அப்படியாயினும் காணற்க என்பதாதி வாக்கியத்தின் நகாரத்தால காண்டலின் விருத்தார்த்தப் பிரதீதியின் அநுசாரத்தால் அதற்கு (ஈக்ஷண விருத்தார்த்தத்திற்கு) முக்கியார்த்தத்துவத்தைக் கூறின் அப்போது அதனால் (நகாரத்தால்) அதன் (ஈக்ஷண விருத்தார்த்தத்தின்) பிரதீதியில் சக்தி விருத்தியின்றி வேறு கதி சொல்லப்பட்டதேயாம். உபபத்தியினால் (அதற்கு முக்கியார்த்தத்துவத்தைக் கூறின்) அப்போது அது (சத்தி) ஆண்டு இன்றேயாம். மாறுக விபக்ஷத்திலேயே அஃதுளது என்னுமபிப்ராயத்தால் நாமாதிகளின் யோக வியவஸ்தையால் சமானமாக நகாரத்திற்கு மூன்று பொருளாமென கூறப்பட்டதனைத் தூஷிக்கின்றார். (அபிப்ராயத்தால் தூஷிக்கின்றார் என ஒட்டுக) :—

## சுலோகம்

**न नामयोगो न च धातुयोगो लिङादियोगोऽपि न कारणं नः ।**
**नञः स्वसम्बन्धि निवृत्तिमात्रं स्वतोऽभिधेयं परतोऽन्यदस्य ॥**

## பதவுரை

**नः**—எமது மதத்தில்

**नामयोगः**—நகாரத்திற்கு பெயர்ச்சொல்லோடுள்ள சம்பந்தம்

**न कारणम्**—(வியவஸ்தையினால் அன்னியத்துவாதியர்த்தத்தைப் பிரதிபாதிப்பதன்கண்) காரணமன்றும்.

**धातुयोगः च**—பகுதியோடுள்ள சம்பந்தமும்

**न**—காரணமன்றும்

**लिङादियोगोऽपि**—லிங் முதலிய விகுதியோடுள்ள சம்பந்தமும்

**न**—காரணமன்றும் [ எதனாலெனினதற்குக் கூறுகின்றார் ]

**नञः**—நகாரத்திற்கு

**स्वसम्बन्धि निवृत्तिमात्रम्**—தனது சம்பந்தியினது அபாவ மாத்திரமே

**स्वतः**—முக்கியவிருத்தியால்

**अभिधेयम्**- பொருளாம். [அப்படியானால் அப்பிராமணாதிப் பிரயோகங்களில அனமை முதலிய அர்த்தத்தின் பிரதீதி யெவ்வாறுமென்னுமிடத்துக் கூறுகின்றார்]

**अस्य**–இந்த நகாரத்திற்கு

**अन्यत्**–இன்மையினும வேறான அன்மை முதலியவை

**परतः**–லக்ஷணையால பிரதீதியாகின்றது.

## விசேஷவுரை

அன்னியத்தால் அடையப்படுவதாலும் அநேகசத்தியைக் கற்பித்தலில் கௌரவதோஷம் வருதலாலும் அன்மையும் மறுதலையும் நகாரத்தின் முக்கியார்த்தங்களன்றுமென்பது கருத்து. (412)

## அவதாரிகை

அற்றேல் நாமம் முதலியவற்றோடு கூடிய நகாரத்தால் நியமமாகப் பிரதீதியாகினற அன்மை மறுதலைப்பொருள்கட்கு லாக்ஷணிகத்தன்மை (லக்ஷியத்தன்மை) எவ்வாறுமென்னுஞ்சங்கைக்கு நியமமாக அதனால் அதன் பிரதீதி அசித்தமா மென்னுமபிப்பிராயத்தால் அதன் (பிரதீதியின் அகாரணத்துவத்தையே விஸ்தரிக்கின்றார்:—

## சுலோகம்

**तथाहि नाग्रे करिणीति नाम्ना गजोऽत्र नास्तीति च धातुयोगे।**
**लिङादियोगेऽपि निवृत्तिरर्थो विषं न खादेदिति नञ्पदस्य॥ ४१३॥**

## பதவுரை

**तथाहि**–அஃதெப்படியெனின

**अग्रे करिणी न**–எதிரில் யானையில்லை

**इति**–என்னும் வாக்கியத்தில்

**(नञ्पदस्य)**–நகாரத்திற்கு

**(नाम्ना योगेऽपि)**–நாமத்தோடு சம்பந்தமிருப்பினும்

**गजः अत्र नास्ति**–யானையீண்டில்லை

**इति**–என்னும் வாக்கியத்தில்

**धातुयोगे च**–பகுதியோடு சம்பந்தமிருப்பினும்

**विषं न खादेत्**–விஷத்தையுண்ணற்க

**इति**–என்னும வாக்கியத்தில்

**लिङादियोगेऽपि**-லிங் முதலிய விகுதியோடு சம்பந்தமிருப்பினும்

**निवृत्तिः अर्थः**-இன்மையே பொருளாம் (அன்மையும் மறுதலையும் அன்றும்)

### *விசேஷவுரை*

உலகின்கண் எதிரில் யானையில்லை யென்பது முதலிய வாக்கியத்தின்கண் பிரயோகிக்கப்பட்ட நகாரத்திற்கு நாமம் முதலியவற்றோடு சம்பந்தவிசேஷமிருப்பினும் லிங் முதலியவற்றோடு கூடிய நகாரத்தால் அதனர்த்தத்தின் அபாவம் போன்று யானை முதலியவற்றின் அபாவமே பிரதீதியாகின்றது அதனினும் அன்னியார்த்தம் பிரதீதியாகின்றதில்லையாதலின் உன்னுற் கூறப்பட்ட நியமம் எங்கேயுளது அஃதில்லையாகவே நாமம் முதலியவற்றோடுள்ளநகாரத்தின் சம்பந்தத்திற்கு உன்னுற் கூறப்பட்ட வியவஸ்தித நகாரார்த்தத்தின் பிரதீதி யேதுத்தன்மை அத்தியந்தமின்று மென்பது கருத்து. வியவஸ்தித=வியவஸ்தை செய்யப்பட்ட.

### *அவதாரிகை*

அற்றேல் உலகின்கண் எவ்வாறுவதிருக்குக சுருதியின்கண்ணே கூறியவியவஸ்தை உளதேயாம் என்னுஞ்சங்கைக்கு அதன்கண்ணும் உலக சாமியத்தினையே கூறுகின்றார்:—

### *சுலோகம்*

**तथा श्रुतौ नेति वचःसु नामनि नानेह नास्तीति च धातुयोगे ।**
**तथा विधाने न कलञ्जमद्यान्नञोऽविशेषेण निवृत्तिरर्थः ॥ ४१४ ॥**

### *பதவுரை*

**तथा**-(உலகின்கண் எவ்வாறோ) அவ்வாறே

**श्रुतौ**-சுருதியின் கண்ணும்

**नेति वचःसु**-இதுவன்று இதுவன்று என்பது முதலிய வாக்கியங்களில்

**नामनि** - நகாரத்திற்கு இதுவென்னும்நாமத்தோடு சம்பந்தமிருப்பினும்

**तथा**-அப்படியே

**नाना इह नास्ति इति च**-ஈண்டு நாநாவானவை சிறிதுமில்லை என்னும் வாக்கியத்தின்கண்

**धातुयोगे**-பகுதியோடு சம்பந்தமிருப்பினும்

**कलञ्जं न भक्षयेत्**-மாமிசத்தைப்புசியற்க என்னும் வாக்கியத்தில்

**विधाने**-விதிக்கின்ற லிங்முதலிய விகுதியோடு சம்பந்தமிருப்பினும்
**नञः**-நகாரத்திற்கு
**अविशेषेण**-விசேஷமின்றி சமானமாகவே
**निवृत्तिः**-அபாவமே
**अर्थः**-பொருளாம்

### *விசேஷவுரை*

**(इति)** இதியென்னும் சத்தத்திற்கு நாமத்தன்மையுண்மையின் சுருதியில் நேதி யென்னும் வசனங்களில் நகாரத்திற்கு நாமசம்பந்தமாம் அப்படியே நேஹ நாநாஸ்தியென்னும் வாக்கியத்தில் அஸ்தியென்னும் தாதுவோடு ஸம்பந்தமாம் அப்படியே மாமிசத்தை புசியற்க என்னும் வாக்கியத்தில் விதாயகவிகுதியோடு சம்பந்தமாம் இவ்வாறிருப்பினும் நீ கூறிய அர்த்த விசேஷமின்றியே இதி (இது என்னும்) சத்தத்தால் பராமரிசிக்கப்படுகின்ற பிரபஞ்சம் முதலியவற்றின் நிவர்த்தியே (அபாவமே) பொருளாகின்றது. அவ்வாறே நகாரத்தின் பொருள் பாதராயணர் முதலியோரால் "**प्रकृतैतावत्त्वं हि प्रतिषेधति**" பிரகிருத (பிரசங்கத்தில் வந்துள்ள) இத்துணையினையே நிஷேதிக்கின்றது என்பதாதி நியாயத்தால் நிரூபிக்கப்பட்டிருத்தலின். ஆதலால் வேதத்தின் கண்ணும் நாமாதியின் சம்பந்தத்தால் நகாரத்திற்கு வியவஸ்திதார்த்தத்தன்மையின்றும் ஆகவே அபாவமே சுபாவமாக வியபிசாரமின்மையின் நகாரத்தின் பொருளாம் பரியுதாஸமோ லாக்ஷணிகமேயாகும் என்பது கருத்து. (414)

### *அவதாரிகை*

இவ்வாறு நாமாதியின் சம்பந்தத்தால் நகாரத்திற்கு சுபாவத்தால் அர்த்த விசேஷத்தின்கண் திதியினை நிராகரித்து முக்கிய விருத்தியால் பிரஸஜ்யப்பிரதிஷேதார்த்தத்துவம் கூறப்பட்டது அதனை முடிக்கின்றார்.

### *சுலோகம்*

औदासीन्यं पुरुषगतमेवाविशेषान्नञोऽर्थः
भ्रान्तिप्राप्तेऽसति तु विषये यत्र यत्रैष दृष्टः ।
नौदासीन्यं पृथगिह भवेदात्मचिन्मात्ररूपात्
सिद्धे वस्तुन्यवसितमतो वेदवाक्यं निषेधे ॥ ४१५ ॥

## பதவுரை

**विषये**-நாமாதியின் பொருள்

**भ्रान्तिप्राप्ते**-பிராந்தியால பிராப்தமாகும் போது

**असति तु**-வாஸ்தவமாக இலதாயமெழி

**यत्र यत्र**-எவ்வெவ்வாக்கியத்தின் கண

**एषः एषः**-நகாரம் காணப்பட்டதோ (அவ்வெல்லா விடங்களிலும்)

**अविशेषात्**-நாமாதி சம்பந்தத்தாற் செய்யப்பட்ட விசேஷமின்மை யின்

**पुरुषगतम्**-புருஷனிடத்கிலுள்ள

**औदासीन्यम् एव**-பிரஸஜ்யப்பிரதிஷேதவடிவ அபாவமே

**नञर्थः**-நகாரத்தின் பொருளாம்

**इह**-பிரமத்தின்கண்

**औदासीन्यम्**-உதாசீனத்தன்மை வடிவ அபாவமானது

**आत्मचिन्मात्ररूपात्**-பிரம்மத்தின் சின்மாத்திர வடிவத்தினின்றும்

**पृथक् न भवेत्**-பின்னமன்ரும்

**अतः**-ஆதலால்

**निषेधे**-நிஷேதஸ்தலத்தில்

**वेदवाक्यम्**-வேதவாக்கியமானது

**सिद्धे वस्तुनि**-சித்தவஸ்துவின்கண்

**अवसितम्**-பிரமாணமாமென நிச்சயிக்கப்பட்டது

## விசேஷவுரை

பாவப்பிரபஞ்சம் போன்று அபாவமும் ஆன்மாவின்கண்ணேயே பாத்தியமாமெனத்தெரிவிப்பித்தற்கு புருஷனிடத்திலுள்ள என விசேஷணங்கொடுக்கப்பட்டது. அற்றேல் நேதி நேதி என்னும் வாக்கியத்திற்கு ஆன்மபரத்தன்மையுண்மையின் நிஷேதபரத்தன்மை யெங்ஙனம் பொருந்தும்? நிஷேதபரத்தன்மையை யங்கீகரிக்கின் அதற்கு (அவ்வாக்கியத்திற்கு) அநான்ம நிஷ்டத்தன்மைப்பிராப்தியாம் ஆன்மாவின் அத்துவயத்தன்மைக்கு வியாகாதமும் வரும் என்னுஞ் சங்கைக்கு அவ்வபாவமும் பிரபஞ்சத்தினதிஷ்டான ஆன்மாவேயாம் ஆதலின் கூறியதோஷமின்றும் என்னுமபிப்பிராயத்தால் உதாசீனத் தன்மை வடிவ அபாவம் பிரம்மத்தினும் பின்னமன்று என்று கூறப்பட்டது. (415)

## அவதாரிகை

இப்போது புஜிப்யன் கொல்லேன் என்பதாதியால் நிஷேத வாக்கியத்திற்குப் பிராபாகரரால் சொல்லப்பட்ட பிரவிருத்தி நிஷ்டத் தன்மையினை யுக்திபூர்வகமாக ஆசங்கித்து நிராகரிக்கின்றவராய் முதலில் சாபரபாஷியத்தால் இருவிதமான விதியும் பிரவிருத்தி நிஷ்டமே யாம் என அவர் கூறியதைத் தூஷிக்கின்றார்:—

## சுலோகம்

**प्रवर्तकं वाक्यमुवाच चोदनां निधाय बुद्धौ वचनं निवर्तकम् ।**
**द्वितीयसूत्रे भगवान्बहुश्रुतो न चोदनाद्वित्वनिवारणाय तत् ॥ ४१६ ॥**

## பதவுரை

**द्वितीयसूत्रे - चोदनालक्षणोऽर्थो धर्मः** ("விதாயகவசனத்தால் போதிக்கப்பட்ட பொருள் தர்மமாம்" என்னும் இரண்டாவது சூத்திரத்தின்கண்

**बहुश्रुतः**–அநேக சாஸ்திரங்களைச்சிரவணஞ்செய்தவரும்

**भगवान्**–அதனுலேயே சர்வக்ஞரும் ஆன சபரஸ்வாமி

**प्रवर्तकं वाक्यम्**–பிரவிருத்தியைச்செய்யும் வாக்கியத்தினை

**चोदनाम् उवाच**–சோதனை என்று சொன்னது

**निवर्तकम् वचनम्**–நிவர்த்தியைசசெய்யும் வாக்கியத்தினையும்

**बुद्धौ निधाय**–மனதில் வைத்துக்கொண்டேதான் சொன்னதாம்

**चोदनाद्वित्वनिवारणाय**–சோதனைகளின் பிரவர்த்தகத்துவ நிவர்த்தகத்துவ வடிவ இருவிதத்தன்மையினை நிவர்த்தித்தற் பொருட்டு

**तत् न**–சாபரபாஷியமன்றும்

## விசேஷவுரை

சர்வக்ஞத்தன்மையுடைமையானேயே சபரஸ்வாமி ஆயிரம் சாகைகளை அர்த்த சகிதமாக அறிகின்றனர் என உலகப்பிரசித்தமாம். பாஷியக்காரரான சபரஸ்வாமி நிவர்த்தி நிஷ்டமான சோதனையினையும் மனதில் வைத்துக்கொண்டே வேதத்தின்கண் நிஷேதகபரமான வாக்கியமும் உளது என அறிகின்றவராகியே தொடங்கிய தர்மத்தை நிரூபித்தற் பொருட்டுப் பிரவிருத்தித்தவராகி அதன்கண் பிரமாணமாக பிரவர்த்தகவாக்கியத்தினைச் சோதனை யெனச் சொன்னார். நிவிருத்தி

மாத்திர நிஷ்டமான் சோதனையை நிவர்த்தித்தற் பொருட்டன்றும். அன்றேல் கூறிய பிரகாரத்தால், நிஷேத வாக்கியத்திற்குப் பிரவிருத்தி நிஷ்டத்தன்மை சித்தியாமையின் அவருக்கு அதன் அஞ்ஞானம் பிராப்தியாதலின் [1]சர்வக்ஞத்தன்மை சம்பவியாதென்பது கருத்து. (416)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் பாஷியவாக்கியத்தின் பலத்தால் நிஷேதவாக்கியத்திற்கு சங்கிக்கப்பட்டநிவிருத்தி கார்யார்த்தத்துவம் நிராகரிக்கப்பட்டது. இப்போது பிராபாகரர் பிரதிக்ஞை வாயிலாக நிஷேதநிஷ்டத்தன்மையினைத்தூஷிக்கின்றார்:—

## சுலோகம்

**ननु निवृत्तिपरत्वमुदीरितं विघटयामि निषेधगिरामहम् ।**
**न हि कलञ्जमिति प्रतिपाद्यते यदि तदा नयनेन विरुध्यते ॥ ४१७ ॥**

## பதவுரை

**ननु**-அற்றேல்
**निषेधगिराम्**-நிஷேதவாக்கியங்களுக்கு
**उदीरितम्**-உன்னால் கூறப்பட்ட
**निवृत्तिपरत्वम्**-அபாவபரத்துவத்தை
**अहम् विघटयामि**-நான் மறுக்கின்றேன்

[நிஷேத வாக்கியத்தின்கண் கலஞ்சாதியின் அபாவம் நகாரத்தின் பொருளா? அல்லது பக்ஷணதியின் அபாவம் நகாரத்தின் பொருளா? அல்லது விகுதிப்பொருளின் அபாவம் நகாரத்தின் பொருளா? என விகற்பித்து முதற்பக்ஷத்தைப் பிரத்தியக்ஷ விரோதத்தால் தூஷிக்கின்றார்.]

**नहि कलञ्जम् इति**-இது கலஞ்சம் அன்று என
**यदि प्रतिपाद्यते**-நிஷேத வாக்கியத்தின்கண் நகாரத்தின் பொருள் பிரதிபாதிக்கப்படுமாயின்
**तदा**-அப்போது
**नयनेन**-நேத்திரப்பிரத்தியக்ஷத்தோடு
**विरुध्यते**-விருத்தமாம் (அஃது ஆண்டு பிரத்தியக்ஷத்தால் அநுபவிக்கப்படுதலின் என்பது பொருள்) (417)

1. ஈண்டு சர்வக்ஞத்தன்மை அநேக பதார்த்தங்களை அறியுந்தன்மை.

### அவதாரிகை

இரண்டாவது பக்ஷத்தைத்தூஷிக்கின்றார்:—

### சுலோகம்

**अथ कलञ्जपदार्थगभक्षणं नहि तदप्यमुनैव विरुध्यते ।**
**अथ तदीयफलस्पृहयान्वयो न हि तदप्यनुभूतिपराहतम् ॥ ४१८ ॥**

### பதவுரை

**अथ**—அல்லது

**कलञ्जपदार्थगभक्षणम्**-கலஞ்சத்தின் பக்ஷணம்

**न हि**—இன்று (எனப்பிரதிபாதிக்கப்படுமாயின்)

**तदपि**—அதுவும்

**अमुना एव**—முன்போலப் பிரத்தியக்ஷத்தாலேயே

**विरुध्यते**—பாதிக்கட்படுகின்றது. (அதன் (கலஞ்சத்தின்) உன்முகத்தன்மையினால் பக்ஷணத்திற்குத்தனது சாமக்கிரி வாயிலாகப் பிராப்தியுண்மையினென்பது கருத்து)

[மூன்றாவது பக்ஷத்திலும் விகுதிப்பொருள் பலத்தின் இச்சையா ?-அல்லது பக்ஷணுதியின் நியோகமா ? என விகற்பித்து முதற்பக்ஷத்தை அநுவதித்துக்கண்டிக்கின்றார்.]

**अथ**—அல்லது

**तदीय फलस्पृहया**-கலஞ்சபக்ஷணுதி சம்பந்தியாகிய யாதொரு பயனுண்டோ அதன் இச்சையோடு

**अन्वयः**-நகாரத்திற்கு அன்வயம் செய்யின்

**तदपि न हि**—அதுவும் சரியன்று

**अनुभूतिपराहतम्**—அதன் ராகிபுருஷனது அனுபவத்தால் பாதிதமாதலின் (418)

### அவதாரிகை

விகுதிப்பொருள் நியோகமாம். அது நிஷேத்தியமாம் என்னும் பக்ஷத்தினை அநுவதிக்கின்றார்:—

### சுலோகம்

**अथ तदीयनियोगनिवर्तनं भवतु भक्षणमस्तुतदिच्छया ।**
**न हि नियोगनिवृत्तिनिवेदने सति कलञ्जमभक्ष्यमितीङ्ग्यते ॥ ४१९ ॥**

### பதவுரை

**अथ**–அல்லது

**तदीय नियोगनिवर्तनम्** – கலஞ்சபக்ஷணத்தில் விதியின்றும் (என்பது நிஷேதவாக்கியத்தின் பொருளாம் எனின்)

(இத்துணையால் உனது இஷ்டசித்தியின்றும் எனத்தூஷிக்கின்றார்)

**भवतु**–இஃது நிஷேதவாக்கியத்தின் பொருளாகுக

[அதன் விதி இன்றுகுக இத்துணையால் அதன் பக்ஷணநிவர்த்தி சித்தியாது. போஜனுதியைப்போன்று அந்நியத்தாலும் அது சம்பவித்தலால். நிஷேதம் வியர்த்தமாதலின என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்.]

**तदिच्छया**–அதன் இச்சையினுல்

**भक्षणम् अस्तु**–கலஞ்ச பக்ஷணம் உளதாகுக

[கூறியதனையே வியதிரேக முகத்தானுங் கூறுகின்றார்.]

**नियोगनिवृत्ति निवेदने सति**–நிஷேத வாக்கியத்தால் விதியின் அபாவத்தை அறியும்போது

**कलञ्जम् अभक्ष्यम् इति**–கலஞ்சம புஜிக்கத்தக்கதன்று (அனர்த்த ஏதுவாம்) என

**न इक्ष्यते**–அறியப்படுகிறதில்லை (419)

### அவதாரிகை

அப்படியானல் எதன் அபாவம் ஆண்டு எந்தப்பிரமாணத்தாலும் பாதிக்கப்படுகின்றதில்லையோ அதன் அபாவமே நகாரத்தின் பொருளாகுக என்று ஆசங்கித்து சப்தத்தால் அறியப்பட்டதற்கே 1 சாப்தமாகிய நகாரார்த்தத்தோடு அன்னுவயம் கூறவேண்டும். நாமம் தாது விகுதியாகிய இவைகளின்வேருகிய சப்தம் ஈண்டு இன்மையின் கலஞ்சாதியின் வேருனதும் நகாரார்த்த அந்நுவயமுள்ளதுமாக யாதொரு சாப்தமும் சம்பவியாமையின் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

### சுலோகம்

**इह कलञ्जपदेन नञन्वयो भवति वाऽस्य नञोऽदिसमागमः ।**
**अदिगतेन लिङादिपदेन वा सह समेति नञत्र गतिस्त्रयी ॥ ४२० ॥**

---

1. சாப்தம்–சப்தத்தால உபஸ்திதமான பொருள்.

*பதவுரை*

**इह**–பிரகிருதவாக்கியத்தின்கண்

**कलञ्जपदेन**–கலஞ்சம் என்னும் பதத்தோடு

**नञन्वयः**-நகாரத்தின் அன்வயம்

**भवति**–உண்டாகின்றது

**वा**–அல்லது

**अस्य नञः**–இந்த நகாரத்திற்கு

**अदिसमागमः**–பக்ஷணவாசக **अद्** என்னுந்தாதுவோடு சம்பந்தமாம்

**वा**–அல்லது

**अदिगतेन**–' அத் ' என்னுந்தாது சம்பந்தியான

**लिङादिपदेन सह**-லிங் முதலிய விகுதியோடு

**नञ् समेति**–நகாரம் அன்வயமாகின்றது.

**अत्र**–கலஞ்சத்தைப்புஜியற்க என்பதாதி நிஷேதவாக்கியத்தின்கண்

**गतिः**-ஞான உபாயமான அன்வயமானது

**त्रयी**–இங்ஙனம் மூன்று விதமாம் (420)

*அவதாரிகை*

இந்தப்பிரகாரம் கூறிய பக்ஷங்களுள் ஒன்றன்கண் நிஷேத வாக்கியத்திற்கு நிஷேத நிஷ்டத்தன்மையை உபபாதனம் செய்ய முடியாமையின் நிஷேத வாக்கியமும் நிவிருத்திநியோக பரமாகவே அங்கீகரிக்கத்தக்கதாம். எனப் பிராபாகரர் தனது மதத்தினை ஸ்தாபனம் பண்ணுகின்றார் :—

*சுலோகம்*

**उदितपक्षपरिग्रहकारिणां न च निषेधगिरामुपपादने ।**
**भवति शक्तिरतश्च निषेधगीरपि नियोगपराऽभ्युपगम्यताम् ॥ ४२१ ॥**

*பதவுரை*

**उदितपक्षपरिग्रहकारिणाम्**-கூறிய பக்ஷத்திரயங்களுள் யாதேனும் ஒன்றைக்கிரஹிக்கும் வாதிகளுக்கு

**निषेधगिराम्**-நிஷேதவாக்கியங்களுக்கு

**उपपादने**-பிராமாண்யத்தைப் பிரதிபாதித்தலில்

**शक्तिः न च भवति**–சாமர்த்தியமின்றும்

**अतः च**–கூறிய ரீதியினால் நிஷேத வாக்கியத்திற்குப் பிராமாண்யம் சம்பவியாமையாலும்

## பதவுரை

**अथ**–அல்லது

**तदीय नियोगनिवर्तनम्** – கலஞ்சபக்ஷணத்தில் விதியின்ரும் (என்பது நிஷேதவாக்கியத்தின் பொருளாம் எனின்)

(இத்துணையால் உனது இஷ்டசித்தியின்ரும் எனத்தூஷிக்கின்ருர்)

**भवतु**–இது நிஷேதவாக்கியத்தின் பொருளாகுக

[அதன் விதி இன்ருகுக இத்துணையால் அதன் பக்ஷணநிவர்த்தி சித்தியாது. போஜனுதியைப்போன்று அந்நியத்தாலும் அது சம்பவித்தலால். நிஷேதம் வியர்த்தமாதலின என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்ருர்.]

**तदिच्छया**–அதன் இச்சையினுல்

**भक्षणम् अस्तु**–கலஞ்ச பக்ஷணம் உளதாகுக

[கூறியதனையே வியதிரேக முகத்தானுங் கூறுகின்ருர்.]

**नियोगनिवृत्ति निवेदने सति**–நிஷேத வாக்கியத்தால் விதியின் அபாவத்தை அறியும்போது

**कलञ्जम् अभक्ष्यम् इति**–கலஞ்சம புஜிக்கத்தக்கதன்று (அனர்த்த ஏதுவாம்) என

**न दृश्यते**–அறியப்படுகிறதில்லை (419)

## அவதாரிகை

அப்படியானுல் எதன் அபாவம் ஆண்டு எந்தப்பிரமாணத்தாலும் பாதிக்கப்படுகின்றதில்லையோ அதன் அபாவமே நகாரத்தின் பொருளாகுக என்று ஆசங்கித்து சப்தத்தால் அறியப்பட்டதற்கே [1] சாப்தமாகிய நகாரார்த்தத்தோடு அன்னுவயம் கூறவேண்டும். நாமம் தாது விகுதியாகிய இவைகளின்வேருகிய சப்தம் ஈண்டு இன்மையின் கலஞ்சாதியின் வேருனதும் நகாரார்த்த அந்நுவயமுள்ளதுமாக யாதொரு சாப்தமும் சம்பவியாமையின் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்ருர்.

## சுலோகம்

इह कलञ्जपदेन नञन्वयो भवति वाऽस्य नञोऽदिसमागमः ।
अदिगतेन लिङादिपदेन वा सह समेति नञत्र गतिस्त्रयी ॥ ४२० ॥

1. சாப்தம்–சப்தத்தால உபஸ்திதமான பொருள்.

### பதவுரை

**इह**—பிரகிருதவாக்கியத்தின்கண்
**कलञ्जपदेन**—கலஞ்சம் என்னும் பதத்தோடு
**नञन्वयः**—நகாரத்தின் அன்வயம்
**भवति**—உண்டாகின்றது
**वा**—அல்லது
**अस्य नञः**—இந்த நகாரத்திற்கு
**अदिसमागमः**—பக்ஷணவாசக **अद्** என்னுந்தாதுவோடு சம்பந்தமாம்
**वा**—அல்லது
**अदिगतेन**—'அத்' என்னுந்தாது சம்பந்தியான
**लिङादिपदेन सह**—லிங் முதலிய விகுதியோடு
**नञ् समेति**—நகாரம் அன்வயமாகின்றது.
**अत्र**—கலஞ்சத்தைப்புஜியற்க என்பதாதி நிஷேதவாக்கியத்தின்கண்
**गतिः**—ஞான உபாயமான அன்வயமானது
**त्रयी**—இங்ஙனம் மூன்று விதமாம் (420).

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் கூறிய பக்ஷங்களுள் ஒன்றன்கண் நிஷேத வாக்கியத்திற்கு நிஷேத நிஷ்டத்தன்மையை உபபாதனம் செய்ய முடியாமையின் நிஷேத வாக்கியமும் நிவிருத்திநியோக பரமாகவே அங்கீகரிக்கத்தக்கதாம். எனப் பிராபாகரர் தனது மதத்தினை ஸ்தாபனம் பண்ணுகின்றார் :—

### சுலோகம்

**उदितपक्षपरिग्रहकारिणां न च निषेधगिरामुपपादने ।**
**भवति शक्तिरतश्च निषेधगीरपि नियोगपराऽभ्युपगम्यताम् ॥ ४२१ ॥**

### பதவுரை

**उदितपक्षपरिग्रहकारिणाम्**—கூறிய பக்ஷத்திரயங்களுள் யாதேனும் ஒன்றைக்கிரஹிக்கும் வாதிகளுக்கு
**निषेधगिराम्**—நிஷேதவாக்கியங்களுக்கு
**उपपादने**—பிராமாண்யத்தைப் பிரதிபாதித்தலில்
**शक्तिः न च भवति**—சாமர்த்தியமின்றும்
**अतः च**—கூறிய ரீதியினால் நிஷேத வாக்கியத்திற்குப் பிராமாண்யம் சம்பவியாமையாலும்

**निषेधगी: अपि**—நிஷேத வாக்கியமும்
**नियोगपरा**—நிவிருத்தி நியோகபரமாக
**अभ्युपगम्यताम्**—அங்கீகரிக்கத்தக்கது

*விசேஷவுரை*

நிஷேத வாக்கியமும் என்ற உம்மை விதிவாக்கியத்தைத்தழுவி நின்றது. சம்பவியாமையாலும் என்ற உம்மையால் சப்தார்த்தத்திற்குக் காரியான்வய நியமத்தைச் சூசிப்பிக்கின்றார். (421)

*அவதாரிகை*

அற்றேல் வேதத்தின்கண் நிவிருத்தி நியோகம் ஒன்றுயின் பக்ஷஞுதியின் நிவிருத்தி நியோகம் சித்திக்கினும் பாஞுதியின் நிவிருத்தி நியோகம் சித்தியாது ஆதலின் பாஞுதியின்கண் தனதிச்சைப்படிப்பிரவிருத்திப்பன். அதன் நிவிருத்தி நியோக பேதமோ அவர்மதத்தில் அசங்கதமேயாம். அனுபந்த பேதத்தின் அதீனமாக சாஸ்திரபேதம் உளதாயவழியே நியோக பேதத்தினை அவரங்கீகரித்த மையின். ஈண்டு யாகதாஞுதிபோன்று அனுபந்தம் பின்னமாகின்ற தில்லையல்லவா? என்னுஞ் சங்கைக்கு ஈண்டும் பானபக்ஷஞுதியின் பேதத்தால் அதனைப்பிரதியோகியாகவுடைய நிவிருத்திக்கிரியை வடிவ அனுபந்தபேதம் சம்பவித்தலின் நிவிருத்தி நியோகமும் யாகதாஞுதி நியோகம் போன்று பின்னமாகின்றது என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

*சுலோகம்*

**यथा च यागाद्यनुबन्धभेदाद्भिन्नेषु शास्त्रेषु नियोगभेदः ।**
**निवर्त्यभेदादपि तद्वदस्य निवृत्तयोऽपि ह्यनुबन्धभूताः ॥ ४२२ ॥**

*பதவுரை*

**यथा च**—எப்படி
**यागाद्यनुबन्धभेदात्**—யாகாதி வடிவ அனுபந்தத்தின் பேதத்தால்
**शास्त्रेषु भिन्नेषु**—சாஸ்திரங்கள் வெவ்வேறுய வழி
**नियोगभेदः**—யாகாதி விஷயக நியோகபேதம் அங்கீகரிக்கப் பட்டதோ
**तद्वत्**—அதுபோன்று
**निवृत्तिभेदात् अपि**—பக்ஷஞுதி நிவிருத்திக்கிரியையின் பேதத்தாலும் நிவிருத்தி சாஸ்திரம் பின்னமாம் அதனுல்

**अस्य**–நியோகத்தின் பேதமாம்

[ அற்றேல், யாகாதிகளுக்கு அனுஷ்டேயத்தன்மையுண்மையின் கிருதி சாத்திய நியோகத்தின் அனுபந்தத்தன்மை பொருந்தும். நிவர்த்திகளுக்குப்பொருந்தாது என்று ஆசங்கித்து அவைகளுக்கும் பிரவிருத்தி விரோதி மனோவியாபார வடிவத்தன்மையுண்மையினால் அனுஷ்டேயத்தன்மையுண்மையின் அதன் அனுபந்தத்தன்மை பொருந்தும் என்னும் அபிப்பிராயத்தினால் கூறுகின்றார்.]

**निवृत्तयः अपि**–பான பக்ஷணாதிகளின் நிவர்த்திகளும்

**अनुबन्धभूता**–யாகாதியின் சமானமாயிருத்தலால் அனுபந்த பூதங்களேயாம் (நியோகசாதன கிருதியை வரைந்து கொள்ளுந்தன்மையால் கிருதிவாயிலாக நிருபகங்களாமென்பது பொருள்.)

## விசேஷவுரை

ஆதி பதத்தால் தான ஹோமத்தைக்கவருக. வியாவர்த்தகத் தன்மையினால் பின்னர் கட்டப்படுவது எதுவோ அது அனுபந்தம் என்னும் சொற்குப்பொருள். அத்தகையது யாகாதி பகுதிப்பொருளாம். அஃது நியோகத்தின் விஷயமாம் அதன்பேதத்தால் சாஸ்திரம் பின்னமாம். சாஸ்திரமாவது அசன்னிகிருஷ்டார்த்தப் பிரதிபாதக வாக்கியமாம். சந்நிகிருஷ்டம்=சமீபத்திலுள்ளது. வாக்கியபேதத்தால் யாகாதிவிஷயகநியோக பேதமாம். நிவர்த்திகளும் என்ற உம்மையால் அவைகளுக்கு யாகாதியின் சமத்தன்மையினைத்தியோதனம் செய்கின்றார். (422)

## அவதாரிகை

இவ்வாறாயினும் அதன்கண் நியோஜ்யன் யாவன்? அவனின்றி நரனது வியாபாரவடிவ கிருதியினை வினாதியால் பிரதிபாதித்தல் பரிய வசானமாவதின்றாம் என்னும் சங்கைக்கு நிவர்த்தி நியோகத்தின்கண் நிவர்த்தன வியாபாரத்தின் சாமர்த்தியத்தால் [1]பிராப்தமான நிவர்த்திய பிரவிருத்தியின் உன்முக புருடனுக்கே நியோஜ்யத்தன்மையுண்மையின் அதன் (பக்ஷணாதியின்) நிவர்த்தி மாத்திரத்தாலேயே நியோகம் சித்தித்தலின். இங்ஙனம் கூறியதனாலேயே விஸ்வஜித்யாக நியாயத்தினால் ஸ்வர்க்ககாமன் ஈண்டு நியோஜ்யன ஆகுக என்பது

1. *பிராப்தமான* புருடனுக்கே என அந்நுவயஞ்செய்க.

கண்டிக்கப்பட்டது. சாமர்த்தியத்தால் பிராப்தமான நியோஜ்யன் சம்பவிக்கும்போது அந்த நியாயத்திற்கு ஈண்டு அவகாசமின்மையின் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

*சுலோகம்*

**निवृत्तिसिद्धयापि नियोगसिद्धिः प्रवर्तमानस्य न गर्तपातः ।
निषिद्धचेष्टा निरयस्य हेतुर्नियोगतो नाध्यवसीयते हि ॥ ४२३ ॥**

*பதவுரை*

**निवृत्तिसिद्धया अपि**-நிஷித்த அனுஷ்டானத்தின்கண் அநர்த்த ஹேதுத்தன்மையின்றியும் பக்ஷணாதி நிவிருத்தி மாத்திர சித்தியினாலும்

**नियोगसिद्धिः**-நியோகம் சித்திக்கின்றது. நித்தியகருமத்தின் நியோகம் போன்று இதற்கும் பல நிரபேக்ஷத் தன்மையினால் விஷய நிவர்த்தி மாத்திரத்தினால் நியோகம் சித்தித்தலின் என்பது பொருள்

அற்றேல், கலஞ்ச பக்ஷணாதியின் நிவர்த்தியினால் நரகாதிப்பிராப்தி உண்டாகின்றதில்லை ஆதலின் அதன்பரிகார காமனே நியோஜ்யனாகுக எனின் அற்றன்று நியோகத்திற்கு அதன் (நியோஜ்யத்தின்) ஆகாங்க்ஷை அந்நியத்தாலேயே (நிவர்த்தன வியாபாரத்தின் சாமர்த்தியம் என்பதாதியாக முற்கூறப்பட்ட ரீதியினால்) சாந்தியாயினமையின் அதனைக் கற்பித்தல் பொருந்தாமையின் மேலும் அதன் பக்ஷணாதியினால் நரகப் பிராப்தியுண்டாகுமாயின் அப்போது பக்ஷணத்தியாகத்தினால் நரகமும் தியாகம் பண்ணப்பட்டதாகும். இங்ஙனமின்றும் பிரமாணமின்மையின் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

**प्रवर्तमानस्य**- நிஷித்தக்கிரியையின்கண் பிரவர்த்திக்கும் புருடனுக்கு

**गर्तपातः**—நரகப்பிராப்தி

**न**—சாஸ்திரத்தால் அறியப்படுகின்றதில்லை நிஷேதவசனமும் நியோகநிஷ்டமாதலின்

[ அற்றேல் (यो ब्राह्मणाय अवगुरेत् तं शतेन यातयात्) "எவன் பிராமணனை அடிக்க முயல்வானோ அவனை நூறுமடங்கு ஹிம்சை செய்க) என்பதாதி வாக்கியத்தால் நிஷித்தப்பிரவிருத்திக்கு நிரயஹேதுத்தன்மை பிரதீதியாகின்றது எனின் அதற்குக்கூறுகின்றார்.]

**निषिद्धचेष्टा**-பானம் முதலிய நிஷித்த வியாபாரமானது
**निरयस्य हेतु:**-நரகத்திற்குக்காரணமாம் என
**नियोगत:**-விதியினல்
**न अध्यवसीयते**-அறியப்படுகின்றதில்லை

அர்த்தவாதமானது நியோகத்தால் அபேக்ஷிக்கப்பட்ட அர்த்தத்தினையே பிரதிபாதிக்கின்றது. நியோகமும் தனது நியோஜ்ய சித்தியின் பொருட்டு அர்த்தவாதத்தின் சாமர்த்தியத்தால் அடையப்படுவதான பலத்தையும் அபேக்ஷிக்கின்றது. ஆதலின் அன்னியத்தாலடையப்பட்ட நியோஜ்யனிடத்தில் நியோகத்திற்கு அதன் அபேக்ஷை உபரமமாதலின் நியோகத்தின் சாமர்த்தியத்தினல் அதனுல் அதனை நிச்சயித்தற்கு முடியாது ஆதலின் நியோஜ்யன் கூறப்பட்டவனேயாவன் என்பது கருத்து. ' ஹி ' சப்தத்தால் விருத்தப்பிராபாகரர் மதத்தில் இஃது பிரசித்தமாம் எனத்தியோதனம் செய்கின்ருர். (423)

*அவதாரிகை*

அற்றேல் நரகவீழ்ச்சியின் பரிகார இச்சையின்றி சேதனபுருடன் நியோகத்தால் எப்படி நியமிக்கப்படுவன் பிரயோஜனத்தைக்கருதாமல் மந்தனும் பிரவிருததிக்கின்றதில்லை என்னும் நியாயத்தால் என்று ஆசங்கித்து பிராபாகரரது சித்தாந்த ரஹசியத்தினைக் கூறுகின்ருர்.

*சுலோகம்*

**नियोग एवैष पुमान्नियुज्यते नियोगसिद्ध्यै तु पुनर्नियुज्यते ।**
**परत्र कर्मस्वथ वा निवृत्तिषु स्थितिः प्रसिद्धेति नियोगवादिनाम् ॥**

*பதவுரை*

**नियोगे एव**-நியோகத்தின்கண்ணேயே
**एष: पुमान्**-நியோஜ்யனுகிய புருஷன்
**नियुज्यते**-(நியோகத்தால்) நியமிக்கப்படுகின்ருன்

[அற்றேல் வியாபாரத்தின் அபாவரூபமான நியோகத்தின்கண் புருஷனுக்கு எப்படிப்பிரவிருத்தியுண்டாம்? என்னும் சங்கைக்கு அதனனந்தரம் அந்நியோகத்தினுலேயே அதன் விஷயமான யாகாதி பகுதிப்பொருளின்கண் அதன் சித்தியின் பொருட்டு அவன் நியமிக்கப்படுகின்ருன். ஆதலின் பகுதிப்பொருள் வாயிலாக அவன் நியோகத்தைச்சாதிப்பன் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்ருர்]

**नियोगसिद्ध्यै तु**-நியோக சித்தியின் பொருட்டே
**पुनः**-பின்பு
**तत्र**-நியோகத்தின் விஷயங்களான
**कर्मसु**-பிரவிருத்திரூபமான கருமங்களில்
**अथवा**-அல்லது
**निवृत्तिषु**-நிவிருத்தி ரூபமான கருமங்களில்
**नियुज्यते**-நியமிக்கப்படுகிறான்
**इति**-இந்தப்பிரகாரம்
**नियोगवादिनाम्**-நியோகவாதியாகிய பிராபாகரரது
**स्थितिः**-சித்தாந்தம்
**प्रसिद्धा**-பிரசித்தமாம்

## விசேஷுரை

நியோஜ்யனானவன் உலகின்கண் காரியத்தில் லிங்ாதியின் வியுத்பத்தி பலத்தினால் நியோகத்தினையே லிங்ாதியால் தனது கிருதி சாத்தியமாக அறிகின்றவனாய் அதன் அபிமுகமாகின்றான். இவ்வபிமுகமே நியோஜ்யனை நியோகத்தின்கண் நியோகத்தால் நியமனம் பண்ணுதலாம். சுவர்க்காதியினையும் நியோகமானது தனது சித்தியின் அனுகூலமான நியோஜ்யசித்தியின் பொருட்டுக் கொடுக்கின்றது ஆதலின் நியோகமே முக்யசாத்தியமாம். அஃது பிராபாகரரால்

"स्वात्मसिद्ध्यनुकूलस्य नियोज्यस्य प्रसिद्धये ।
कुर्वंस्स्वर्गादिकमपि प्रधानं कार्यमेव नः ॥"

தனதுசித்தியினனுகூலமான நியோஜ்யனது சித்தியின் பொருட்டு சுவர்க்காதியினையும் செய்கின்றதான நியோகவடிவகாரியமே எமது மதத்தில் பிரதானமாம்) என்று கூறப்பட்டுள்ளது. நியோகத்தை உத்தேசித்தே புருஷன் முதலிற் பிரவிருத்திக்கின்றான் பின்பு நியோகசித்தியின் பொருட்டு அதன் விஷயமான யாகாதியில் பிரவிருத்திக்கின்றான் என்பது பொருள். (424)

## அவதாரிகை

அற்றேல் நிவிருத்தியின் சித்தியினால் அதன் நியோகம் சித்திக்குமாயின் அப்போது நிஷித்த கர்மத்தின்கண் அங்கியத்தாலும் பிரவர்த்தக ராகாதியின் அபாவம் உளதாயவழி நிவிருத்தி சித்தித்தலின் நியோகத்

தால் புருஷனை நியமித்தல் எற்றிற்கு ? என்னும் சங்கைக்குக்கூறுகின்றார்:—

### சுலோகம்

**प्रवृद्धरागस्य निवृत्तयोऽस्थिरास्ततः स्थिरत्वाय नियुज्यते पुमान् ।**
**निवृत्तिदेशेषु नियोगबुद्धितो निवृत्तिमूर्ध्वं परिपालयिष्यति ॥ ४२५ ॥**

### பதவுரை

**प्रवृद्धरागस्य**– (நிஷேதிக்கப்படுகிற வினைப்பயன்களில்) இச்சை அதிகரித்த புருடனுக்கு (கூறிய பிரகாரத்தால் ஓர் தடவை நிவர்த்தியுளதாயினும் நியோகத்தால் அதன்கண் நியோகம் செய்யாவிடின் முன்போன்று புருடனுக்கு மீண்டும் அதன்கண் ராகம் உத்பத்தியாம். ஆதலின்)

**निवृत्तयः**–(நிஷேத்திய பக்ஷணாதிகளினின்றும்) நிவிருத்திகள்

**अस्थिराः**–நிலையற்றனவாகும்

**ततः**–அவ்வேதுவால்

**स्थिरत्वाय**–நிவிருத்தி நிலைத்தற் பொருட்டு

**निवृत्तिदेशेषु**–நிவிருத்தி வடிவ தேசங்களில்

**पुमान्**–புருடன்

**नियुज्यते**–நியோகத்தால் நியமிக்கப்படுகிறான்

[இவ்வாறுகும போது பிரவிருத்தியின் உன்முகனான புருடன் நிவிருத்தி நியோகத்தினையே கர்த்தவ்யமாக அறிவன். ஆதலின் நிவிருத்திகள் நிலையுடையனவாகும் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்]

**नियोगबुद्धितः**–நியோக புத்தியினாலோ

**ऊर्ध्वम्**–பின்னரும்

**निवृत्तिम्**–நிவர்த்தியினை.

**परिपालयिष्यति**–ரக்ஷிப்பான் (அவிச்சின்னப்பிரவாகமாக அதனை நிவிருத்தியினைச் செய்வன் என்பது பொருள்)

### அவதாரிகை

அற்றேல், இந்த நிவர்த்தி என்பதுயாது ? பிரவிருத்திவிரோதியான மானசக்கிரியையே நிவர்த்தியாமெனக்கூறினோமே யெனின் அதன்

கண்ணும் இவ்வாறுயின் நகாரத்திற்குச் சுவார்த்தத்தியாகப் பிராப்தி யாம் எனக்கூறப்பட்டது. வாஸ்தவந்தான் நிவிருத்தியின் ஸ்திரத் தன்மையின் பொருட்டு அஃதும் (சுவார்த்தத்தியாகமும்) உசிதமேயாம் அற்றேல் பிராபாகரரது மதத்தில் அபாவமின்மையின் அதனேடு (அபா வத்தின்கண்) லக்ஷணை யெங்ஙனமாம ? முக்கியார்த்த சம்பந்தம் சம்பவியாமையின் என்னும் சங்கைக்குப் பிராபாகரரது மதத்தில் பாவ வடிவ லக்ஷணுதியின் அபாவத்தினை நகாரத்தின் முக்கியார்த்தமாக நிவிருத்தியின்கண் லக்ஷணை சித்தித்தற் பொருட்டுக்கூறுகின்ருர்:—

## சுலோகம்

**अनाद्यजग्धेश्च निवृत्तिरिष्टा विशिष्टदन्तोष्ठनिविष्टसंवित् ।**
**अनन्यसंसर्गिपदार्थसंविन्निवृत्तिरित्येष हि राजमार्गः ॥ ४२६ ॥**

## பதவுரை

**अनाद्यजग्धेः**--பக்ஷண அயோக்கிய கலஞ்சாதியின் பக்ஷணத்தில் நின்றும்

**निवृत्तिः**-நிவர்த்தியானது (அதாவது பக்ஷணத்தின் அபாவம்)

**विशिष्टदन्तोष्ठनिविष्टसंवित् च** - கேவலதந்த ஓஷ்டங்களை விஷயஞ்செய்யும் ஞானமேயாம்

**इष्टा** –என அங்கீகரிக்கப்பட்டுள்ளது

[அதன்கண் ஹேதுவாக அவரது சித்தாந்தத்தினைத் தெரிசிப்பிக் கின்ருர்.]

**अनन्यसंसर्गिपदार्थसंवित्**–அந்நிய நிஷேத்திய சம்பந்தி யாகாதயாதொரு நிஷேத்திய அனதிகரணபதார்த்தமுண்டோ அதன் ஞானம் (அதாவது கேவல அதிகரண ஞானம்)

**निवृत्तिः इति**–அபாவமாம் என்னும்

**एष हि राजमार्गः**-இஃது ராஜமார்க்கமாம் (நிர்த்தோஷமாம்)

## விசேஷவுரை

பக்ஷணகாலத்திலுள்ள தந்த ஓஷ்டாதிகளின் வியாவிருத்தியின் பொருட்டுக்கேவலம் எனப்பட்டது. அவிசிஷ்டம் எனப்பதச்சேதம் செய் யினும் அமையும். பொருள்ஒன்றேயாம் பிராபாகரரது பக்ஷத்தில் யாண்டு அபாவவிவகாரம் உண்டாகின்றதோ பிரதியோகியின் சம்பந்தமின்றிய

அவ்வதிகரணத்தின் ஞானமே அபாவமாம என்பது பிரசித்தம். இவ்வாருகவே பக்ஷணுதியின் நிவர்த்தியும் கேவல தந்தோஷ்டாதி வடிவமேயாம். அதுவே ஆண்டு நகாரத்தால் சொல்லப்படுகின்றது. ஆதலால் நிவிருத்தியானது லக்ஷிக்கப்படுகின்றது அன்று என்பது பொருள். இப்படிப்பட்ட அபாவமே நிவர்த்திவடிவமாகப் பிரகிருதத்தின் கண் விதிக்கத்தக்கதாகுக. அதாவது லக்ஷணையின்ரும் என்பது கருத்து. (426)

## அவதாரிகை

இந்தப் பிரகாரம் தனது மதத்தினைச் சாதித்து இப்போது சித்தாந்தியின் அபிமதமான நிஷேத வாக்கியத்தின்கண் நகாரத்தின் அர்த்தத்தினைத் தூஷித்தற்கு அனுவதிக்கின்ருர்:—

## சுலோகம்

**ननु समीहितसाधनता लिङो लशुनगृञ्जनभक्षणसंश्रया ।**
**भवति वाच्यतयाऽभिमताऽस्य नो नञपि तद्विनिवृत्तिनिवेदकः ॥**

## பதவுரை

**ननु** – சங்கை

**लशुनगृञ्जन भक्षणसंश्रया**–பூண்டு வெங்காய பக்ஷணங்களின் கண்

**समीहितसाधनता** – இஷ்டசாதனத்தன்மை

**लिङः** – வியங்கோள் விகுதியின்

**वाच्यतया** – பொருளாக

**नः** – எமது மதத்தில்

**अभिमताभवति** – அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது

**नञ् अपि** – நிஷேத வாக்கியத்திலுள்ள நகாரமும்

**अस्य** லசுனுதி பக்ஷணத்தின்

**तद्विनिवृत्तिनिवेदकः** – இஷ்ட சாதனத்தன்மையின் அபாவ போதகமாம

## விசேஷவுரை

விகுதியோடு சம்பந்தமுற்ற நகாரமானது லசுனுதி பக்ஷணத்தி லுள்ள இஷ்டசாதனத்தன்மை வடிவ விகுதிப்பொருளின் அபாவத்தினைப் போதிக்கின்றது என்பது பொருள். (427)

## அவதாரிகை

மேற்கூறிய சித்தாந்தியின் அபிமதத்தைப் பூர்வவாதி தூஷிக்கின்ருர்:—

### சுலோகம்

तदसदिष्टफलोद्भवदर्शनाल्लशुनगृञ्जनपर्युषिताशनात् ।
नहि निषिद्धपदार्थनिमित्तकः सुखलवः पुरुषस्य न विद्यते ॥ ४२८ ॥

### பதவுரை

**तत् असत्** - (நீர் கூறிய) அஃது சரியன்று [ஏதனுலெனின்]

**लशुनगृञ्जनपर्युषिताशनात्** - பூண்டு வெங்காயம் பழைய அன்னம் ஆகிய இவைகளைப் புஜித்தலினுல்

**इष्टफलोद्भवदर्शनात्** - சுகமுண்டாதல் காணப்படுதலின். [கூறிய பொருளினையே வியதிரேகத்தை நிஷேதித்தலால் திடஞ்செய்கின்றார் ]

**निषिद्धपदार्थनिमित्तकः** - சாஸ்திரத்தால் நிஷேதிக்கப்பட்ட லசுனபக்ஷணுதி நிமித்தத்தால்

**सुखलवः** - சொற்ப சுகமானது

**पुरुषस्य** - புருடனுக்கு

**न विद्यते (इति) नहि** - இல்லையென்பது இல்லை. ( ஆதலால் எல்லா வேதமும் காரியபரமாமென்பது கருத்து ) (428)

### அவதாரிகை

சித்தாந்தி சமாதானங் கூறுகின்றார் :- நிஷேத வாக்கியத்திலுள்ள லிங முதலியவற்றால் காரியம் (அபூர்வம்) போதிக்கப்படுமாயின் அப்போது அதற்கு (அக்காரியத்திற்கு) எப்படியாவது கூறிய ரீதியால் நகாரத்தின் விஷயத்தன்மையினைக் கற்பிக்கலாம். லிங் முதலியவற்றால் காரியமோ போதிக்கப்படுவதின்றாம். உலகின்கண் பகுதிப்பொருளினும் வேறாகக் காரியமின்மையாலும் பகுதிப்பொருள் பகுதியாற் சித்தித்த லாலும் லிங் முதலிய விகுதிக்கு அதனைப் பொருளாயுடையதாந் தன்மை யின்மையின் பகுதிப்பொருளே காரியத் தன்மையினுல் லிங் முதலிய விகுதியின் பொருளாம் என்று சொல்லற்க. கிருதி சாத்தியத்தன்மை காரியத்தன்மையாம் எனின் அதிவியாப்தியுண்டாம். ஆதலின் அதற்கு லிங் முதலிய விகுதியார்த்தத்தன்மை பொருந்தாமையின். முயற்சியால் பெற விரும்பப்படுந்தன்மை காரியத்தன்மையாம் என்பதும் சரியன்று.

அநேக கிலேசத்தால் சாதிக்கத்தக்கதாயிருத்தலின் பகுதிப்பொருளின்கண் சுபாவமாக விரும்பப்படுந்தன்மை பொருந்தாமையின். இஷ்ட சாதனத்தன்மையால் அதற்கு முயற்சியாற் பெற விரும்பப்படுந் தன்மையை அங்கீகரிக்கின் அவசியம் முதலில் அறியப்பட்ட இஷ்ட சாதனத்தன்மைக்கே பிரவர்த்தகத்தன்மையும் வியங்கோள் விகுதி அர்த்தத்தன்மையும் ஆம். ஆதலின் உலகின்கண் காரியம் விகுதியின் பொருளன்றும். ஆகவே நிஷேத வாக்கியத்திலுள்ளதும் காரியத்தின்கண் அறியப்படாத சக்தியையுடையதுமான லிங் முதலிய விகுதியால் காரியம் எப்படி போதிக்கப்படும். ஆதலால் இஷ்ட சாதனத்தன்மையே உலகின் வியுத்பத்தி பலத்தால் மீண்டும் விகுதிப் பொருளாகக் கற்பிக்கப்படுகின்றது. ஆதலின் அதன் அபாவமே நகாரத்தின் பொருளாம் இவ்வாறாயின் கலஞ்சபக்ஷணாதியில் சுக சாதனத்தன்மையின் அனுபவம் விரோதமாம் என்று சொல்லற்க. எப்படியும் பிரவிருத்தியின்கண் கிருதி சாத்தியத்துவ விசிஷ்ட இஷ்ட சாதனத்தன்மையின் ஞானம் காரணமாம் அப்படியாயினும் அவ்விஷ்டத்தின்கண் பிரபல அனர்த்த சம்பந்தித் தன்மை ஞானம் உளதாய வழி பிரவிருத்தி யுண்டாகின்றதில்லை. ஆதலின் அதன் அஞ்ஞானத்தினை பிரதிபந்தகாபாவத்தன்மையால் அவசியம் காரணமாகக் கூறவேண்டும். இவ்வாறாகவே நிஷித்த பக்ஷணத்தியின்கண் பிரவிருத்திக்கும் புருடனுக்கும் பக்ஷணதி ஜன்னிய சுகத்தின்கண் வலுவுள்ள அனர்த்த சாதனத்தன்மையின் அஞ்ஞானம் கூறுதல்வேண்டும். இந்தப்பிரகாரம் சாமக்கிரியின் சமூகத்தால் இது வலுவுள்ள அனிஷ்டத்தோடு கூடாத இஷ்ட சாதனமாம் எனப் பிராந்தி உண்டாகின்றது. ஆதலின் பிராந்தியாற் பிராப்தமான அவ்விசிஷ்ட இஷ்ட சாதனத்தன்மயே நிஷேத வாக்கியத்தால் நகாரத்தின் பொருளோடு அன்னுவயமாதற் பொருட்டு லக்ஷணையினால் அனுவாதஞ் செய்து நிஷேதிக்கப்படுகின்றது. போஜனாதி வியாபாரத்தின்கண் அதற்கு லிங்வாச்சிய சம்பந்தித்தன்மை அறியப்படுதலின். ஆதலின் அனுபவ விரோதம் அன்றும். என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார் :—

**சுலோகம்**

**अदृष्टदोषं परिहृत्य शंसतः कलञ्जमास्वाद्यसुखित्वमात्मनः ।**
**पुमानवोधोपहतः समीहते तदीहिताभावपरा निषेधगीः ॥ ४२९ ॥**

## பதவுரை

**पुमान्** - புருடனானவன்

**अवोधोपहतः** - (யாதொரு காரணத்தினால் கலஞ்ச பக்ஷணாதியின் வலுவுள்ள அனிஷ்டானுபந்தித் தன்மையின்) அஞ்ஞானத்தாற் கெடுக்கப்பட்டவனாகி (அதாவது அஞ்ஞானத்தோடு கூடினவனாகி)

**समीहते** - பிரவிருத்திக்கின்றானோ (அக்காரணத்தால்)

**अदृष्टदोषम्**-(அலௌகிகமும் சாஸ்திரம் ஒன்றற்கே விஷயமுமான துக்கப்பயனை

**परिहृत्य** - அனாதரஞ்செய்து

**कलञ्जम्** - விஷம் பூசிய பாணத்தாற் கொல்லப்பட்ட மான் மாமிசத்தினை

**आस्वाद्य** - புஜித்து

**आत्मनः** - தனக்கு

**सुखित्वम्** - சுகித்தன்மையினை

**शंसतः** - விரும்பும் புருடனுக்கு

**तदीहितःभावपरा**- அவனால் விரும்பப்பட்ட வலுவுள்ள அனிஷ்டத்தோடு கூடாத யாதொரு இஷ்ட சாதனத் தன்மையுண்டோ அதன் அபாவபரமாம்

**निषेधगीः** - நிஷேத வாக்கியம்

## விசேஷவுரை

நிஷேத வாக்கியம் அபாவபரமாம் என ஒட்டுக. எனக்கு இந்தக் கலஞ்ச பக்ஷணத்தினால் வலுவுள்ள அனிஷ்டத்தோடு கூடாத இஷ்டம் உண்டாகுக என்று விரும்பும் புருடனது வாஞ்சித்த சுகசாதனத் தன்மையினை லிங் முதலிய விகுதியினால் அனுவாதஞ்செய்து நிஷேத வாக்கியம் நிஷேதிக்கின்றது. எதனாலெனின் புருடன் அஞ்ஞானத் தாலேயே அதன் இச்சை வாயிலாகச் செய்கின்றானாகலின் என்பது பொருள். அஞ்ஞானத்தால் கெடுக்கப்பட்ட என்றதனால் பிராந்திப் பிராப்தமாம் எனமுற்கூறப்பட்ட பிரசஜ்ஜியப் பிரதிஷேத விஷயம் (அபாவம்) தெரிசிப்பிக்கப்பட்டது. **(429)**

## அவதாரிகை

**(अदृष्टदोषम्)** துக்கப்பயனை யென்பதாதியால் கூறப்பட்டதனையே விஸ்தரிக்கின்றார்:—

## சுலோகம்

नरकपातविवर्जनवर्त्मना भवतु विप्रवधात्परमार्थतः ।
मम सुखित्वमितीच्छति यत्पुमान्न तदितीह निषेधगिरोच्यते ॥

### பதவுரை

पुमान् } (பிராம்மணவதை முதலியவற்றில் பிரவிருத்திக்கும்)
विप्रवधात् } புருடன் (என்னால் செய்யப்படுகிற) பிராம்மண வதையினால்

**परमार्थतः** – வாஸ்தவமாக

**नरकपातविवर्जनवर्त्मना** – நரகவீழ்ச்சியற்ற மார்க்கத்தினால் அதாவது அநிஷ்டத்தோடு கூடாத பிரகாரத்தால்

**मम** – எனக்கு

**सुखित्वं भवतु इति** – சுகம் உண்டாகுக என்று

**यत् इच्छति** – யாதொன்றை இச்சிக்கின்றானோ

**तत्** – அத்தகைய சுகஹேதுத்துவம்

**इह** – விப்பிரவதாதியின்கண்

**न इति** – இன்றும் என

**निषेधगिरा** – பிராம்மணன் கொல்லத்தக்கவன் அன்று என்னும் நிஷேத வசனத்தால்

**उच्यते** – சொல்லப்படுகின்றது

### விசேஷவுரை

நரக வீழ்ச்சியின் அபாவ அபிமானத்தை மாத்திரம் நிவர்த்திதற் பொருட்டு வாஸ்தவம் எனப்பட்டது. அத்தியந்த அவிவேக புருஷனுக்கு தீவிர ரோஷவசத்தால் அத்தகைய அபிமானம் உண்டாகிறதாதலின்.

### அவதாரிகை

அற்றேல் எல்லோருக்கும்[1] கலஞ்சபக்ஷணத்தியின்கண் அத்தகைய சுகசாதனத்தன்மை அனுபவசித்தமாம். அஃது நகாரத்தினால் எவ்வாறு நிஷேதிக்கக்கூடும் என்னும் சங்கைக்கு அஃது பிராந்தியினாலேயே சித்தித்ததாம். பிரமாண சித்தமன்று. அதன்கண் சுருதிப்பிரமாண

---

1. கலஞ்சமென்பது விஷம் பூசப்பட்ட பாணத்தினால் கொல்லப்பட்ட மான் மாமிசம்.

மின்மையானும் பிரத்தியக்ஷாதி பிரமாணங்களுக்கும் பரலோக சம்பந்தி அநர்த்தத்தின் அபாவத்தை அறிவிப்பதில் சாமர்த்தியமின்மையானும் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

சுலோகம்

**प्रमाणतो नास्ति निषिद्धकर्मणः फलस्पृहाऽदृष्टभयं विना तव ।**
**भ्रमादबोधप्रभवात्प्रवर्तसे न तात मानेन फलस्पृहाऽत्र ते ॥ ४३१ ॥**

பதவுரை

**तव** – உனக்கு

**अदृष्टभयम् विना** – பரலோக சம்பந்தியான வலுவுள்ள துக்கபயமின்றி

**निषिद्धकर्मणः** – விப்பிரவதாதி நிஷித்த கருமத்தின்கண்

**फलस्पृहा**– சுகசாதனத்தன்மை

**प्रमाणतः** – சுருதியாதிப் பிரமாணத்தால்

**नास्ति** – இன்றும்

[அப்படியானுவ் அதன்கண் பிரவிருத்தி எப்படிக் கூடும்? எனின் அதற்குக் கூறுகின்றார்]

**अबोधप्रभवात्** -பலமுள்ள அநிஷ்டத்திற்கு ஏதுவாந்தன்மையின் அஞ்ஞானத்தாற் ஜன்னியமான

**भ्रमात्** –இஃது பலமுடைய அநிஷ்டத்திற்குக் காரணமன்று என்னும் பிராந்தியினுல்

**प्रवर्तते**–அதன்கண் பிரவிருத்திக்கின்றனன்

[முடிக்கின்றார்]

**तात**–குழந்தாய்

**ते**–உனக்கு

**अत्र**–விப்ரவதாதியின்கண்

**फलस्पृहा**- சுகசாதனத்தன்மை

**मानेन**–பிரத்தியக்ஷாதிப்பிரமாணத்தால்

**न**–உண்டாகின்றதின்றும்.

விசேஷவுரை

எப்படிப் பாலகனை மாதாவானவள் அநிஷ்டத்தினின்றும் நிவர்த்தி செய்கின்றனளோ அப்படிச் சுருதியும் உனது அபிமதமான பல

சாதனத்தன்மை இதன்கண் இல்லையென நிவர்த்தி செய்கின்றதென்பது குழந்தாய் என்பதனால் சூசிப்பிக்கப்பட்டது. (431)

*அவதாரிகை*

நிஷித்த வியாபாரங்களில வர்ணிக்கப்பட்ட பல சாதனத்தன்மையின்கண் பிராந்தி சித்தத்தன்மையின் உபபாதனம் செய்தலின் பயனைக் கூறுகின்றார்.

*சுலோகம்*

**इति श्रुतिः शास्ति निषिद्धकर्मणि प्रवृत्तिमन्तं पुरुषं नञन्विता ।**
**न चायमर्थोऽपहृतः प्रमान्तरैर्नहि प्रमाणैरपरैर्विरुध्यते ॥ ४३२ ॥**

*பதவுரை*

**निषिद्धकर्मणि**—இம்சை முதலிய நிஷித்த கர்மத்தின்கண்
**प्रवृत्तिमन्तम्** —பிரவிருத்தி உன்முகனை
**पुरुषम्** —புருஷனை
**नञन्विता श्रुतिः**—நிஷேத வாக்கியம்
**इति**—கூறிய பிரகாரமாக
**शास्ति**-பிரதிபாதனஞ் செய்கின்றது. போதிக்கின்றதென்பது பொருள்.

[இவ்வாறாகும்போது பிரமாணாந்தரத்தோடு விரோதமுமின்றாமெனக் கூறுகின்றார்].

**अयम् अर्थः**—பலமுடைய அநிஷ்டத்திற்கு ஏதுவாகாத இஷ்ட சாதனத்தன்மையின் அபாவம்
**प्रमान्तरैः**—வேறு பிரமாணங்களால்
**न च अपहृतः**—பாதிதமன்றாம்
[அதன் அவிரோதத்தில் ஏதுவினைக் கூறுகின்றார்]
**अपरैः प्रमाणैः**—இதரப் பிரமாணங்களோடு
**नहि विरुध्यते**-நிஷேத சுருதிக்கு விரோதமின்றாதலின்

*விசேஷவுரை*

இஷ்ட சாதனத்தன்மை வடிவ விசேஷ்யாம்சம் விப்பிரவதாதியின்கண் இருப்பினும் பலமுடைய அநிஷ்டத்தோடு கூடாத என்னும் விசேஷணாம்சம் இன்மையின் அதன் விசிட்டத்திற்கு அப்பிராமாணிகத்தன்மையுண்மையின் விசேஷ்ய மாத்திரத்தைக் கிரஹிக்கும் பிரமாணங்களோடு விரோதமின்றாம். இஷ்டசாதனத் தன்மையினையே லிங்

விகுதியின் பொருளாமென்று கூறுவர். அப்படியாயினும் நகாரார்த்தத்தின் அன்வயத்தின் பொருட்டு ஈண்டு வர்ணிககப்பட்ட பிராந்தியாற் பிராப்தமான விசிஷ்ட இஷ்டசாதனத்தன்மையே லிங் முதலிய விகுதியால் லக்ஷிக்கப்பட்டதாகி நகாரத்தால் நிஷேதிக்சப்படுகிறது. இவ்வாறு நகாரத்திற்கே நிவிருத்தியின்கண் லக்ஷணையுளதாகுகவென்று சொல்லற்க. பிரதிபாதிக்க இச்சிக்கப்பட்ட பொருளுடைமையின் நகாரம் பிரதானமாம். அதனையநுசரித்து அதன் அர்த்தத்தின் பிரதியோகி (விரோதி)யாதலால் குணபூதமான இஷ்டசாதனத் தன்மையின் வாசகமான லிங் முதலிய விகுதியின் கண்ணேயே அநுவாதத்தினுல் (அநுவாதமிருத்தலின்) லக்ஷணையைக் கொள்ளுதல் நியாயமாதலின். லக்ஷிக்கப்பட்ட அதுவும் ஆண்டு அப்பிரமாணிகமேயாதலின் பிரமாணாந்தரவிரோதமின்றுமென்பது கருத்து.

இனி இச்சுலோகத்தின் பிற்பாதிக்கு மற்றோர் அவதாரிகையும் மற்றோர் பொருளும் வருமாறு. பிரகிருத சுருதி அதாவது கொல்லற்க என்பது முதலிய நிஷேதவாக்கியம சுவார்த்தபரம் அன்றுமெனவும் சங்கிக்கத்தக்கதன்றெனக் கூறுகின்றார். இஷ்டசாதனத் தன்மையினபாவமென. அவ்வியயங்களுக்கு அநேகார்த்தமுண்மையின் மூலத்திலுள்ள அப என்னும் அவ்வியயம் உப என்னும் சத்தத்தின் அருத்தத்தில் வந்தது. அதாவது ந உபஹிருத:=பிரமாணாந்தரத்தால் அடைவிக்கப்பட்டதன்றும் என்பது பொருள். இங்ஙனங் கூறியதனுல் அநுவாதகத்தன்மை நிராகரிக்கப்பட்டது. [குணவாத சங்கையுமின்றுமெனக்கூறுகின்றார்] இதரப்பிரமாணங்களோடுஎன. விரோதியாகியப் பிரமாணாந்தரம் நிரூபிக்கப்படாமையின் என்பது பொருள். (432)

## அவதாரிகை

431-வது சுலோகத்தில் குழந்தாய் பிரமாணத்தால் என்பதாதியால் சூசிப்பிககப்பட்ட திருஷ்டாந்தத்தின் அநுவாத பூருவகம் தார்ஷ்டாந்தத்தினை விஸ்தரிக்கின்றார்.

## சுலோகம்

**भुजङ्गभोगं सुकुमारशीतलं निदाघसन्तापनिवृत्तये शिशुम् ।**
**भ्रमादुपादित्सुमुदीक्ष्य कातरा निवर्तयेत्तज्जननी यथा तथा ॥ ४३३ ॥**

## பதவுரை

**सुकुमारशीतलम्**—மிருதுவாயுங் குளிர்ச்சியாயுமுள்ள

**भुजङ्गभोगम्**–சர்ப்பத்தின் சரீரத்தினை

**निदाघसन्तापनिवृत्तये**–கோடை காலத்தின் கொடிய வெயிலினால் உண்டான சரீர சந்தாபத்தின் நிவிருத்தியின் பொருட்டு

**भ्रमात्**–(வலுவுள்ள அநிஷ்டத்திற்கு ஏதுவாகாததாய் சந்தாப நிவிருத்தி சாதனமாம் எனனும்) பிராந்தி ஞானத்தால்

**उपादित्सुम्**–கிரகித்தற்கு இச்சிக்கின்ற

**शिशुम्**–குழந்தையை

**उद्वीक्ष्य**–பார்த்து

**तज्जननी**–குழந்தையின் தாயானவள்

**कातरा**–துக்கபரவசமுடையவளாய்

**यथा**–எப்படி

**निवर्तयेत्**–(கிரகிக்காதேயென்று கையினால்) நிவர்த்தி செய்வாளோ

**तथा**–அப்படி (அப்படியென்பது பின் சுலோகத்தில் சேர்க்கத் தக்கது). (433)

*சுலோகம்*

**भ्रमादनर्थस्य निदानमादरात्कृतार्थतायै लशुनादिभक्षणम्।**
**नञन्विता वैदिकचोदनाऽप्यसौ विधित्सुमालक्ष्य निवर्तयिष्यति ॥**

*பதவுரை*

**अनर्थस्य निदानम्**–வஸ்து கதியினால் அநர்த்தத்திற்குக் காரணமான

**लशुनादिभक्षणम्**–பூண்டு முதலியவற்றின் புசிப்பை

**भ्रमात्**–வலுவுள்ள அநிஷ்டத்திற்கு ஏதுவாகாத சுகசாதனமென்னும் பிராந்தி ஞானத்தால்

**आदरात्**–ஆதர பூர்வகமாக

**कृतार्थतायै**–கிருதார்த்தத் தன்மையின் பொருட்டு

**विधित्सुम्**–செய்தற்கு இச்சிக்கின்ற அக்ஞ புருஷனை

**आलक्ष्य**–குறித்து

**नञन्विता**–நகாரத்தோடுகூடிய

**असौ वैदिकचोदना अपि**–வேதத்திலுள்ள இந்த நிஷேத வாக்கியமும்

**निवर्तयिष्यति**–நிவர்த்திக்கின்றது. (434)

## அவதாரிகை

இந்தப் பிரகாரம் தனது மதத்தின்கண் நிஷேத வாக்கியத்திலுள்ள நகாரத்திற்கு [1]பிரஸஜ்ஜியப் பிரதிஷேதார்த்தத்தன்மையினை உபபாதனஞ்செய்து பரமதத்தைத் தூஷித்தற்கு ஆரம்பிக்கின்றார். ஆண்டு நகாரத்தால் லக்ஷிக்கப்பட்ட நிவர்த்திக்கிரியாவிசேஷம் விதிக்கப்படுகின்றதா? அல்லது அதன் முக்கியார்த்தம் விதிக்கப் படுகின்றதா? முதற்பக்ஷம் சரியன்று லக்ஷணையைக் கொள்ளுதல் அந்நியாயமாம் எனக் கூறினந்தோமாதலின். இரண்டாவது பக்ஷத்தின் கண்ணும் விகுதிப்பொருளாய நியோகததின் அபாவத்தினை விதித்தற்கு இயலாது. நியோக அபாவத்திற்கு நியோககோசரத்தன்மை வடிவ விதேயத்தன்மை சம்பவியாமையின். ஆதலால் பகுதிப் பொருளின் அபாவமே விதேயமாம் என நீ கூறுதல் வேண்டும். ஆண்டும் அவ்வபாவமானது அதன் துவம்ச வடிவமன்றாம். பிரசக்தக் கிரியையின் சம்பாதனமின்றி அஃது (துவம்சம்) பொருந்தாமையின். (துவம்சத்தைக் குறித்துப் பிரதியோகி காரணமாதலால் என்பதுபொருள்) கிரியையின் சம்பாதனம் உளதாய வழி நிஷேதத்திற்கு வியர்த்தத்தன்மை பிராப்தியாம். ஆதலின் அதன் பிராகபாவமே விதேயமாகும். அதுவும் சொரூபத்தால் விதேயமன்று. அபாவவடிவமாதலானும் அநாதிசித்த மாதலானும். அதிகரண ஞானத்திற்கும் இனிக் கூறப்படும் ஞான விதியின் நிராகரணத்தானேயே விதேயத்தன்மை சம்பவியாமையின். ஆதலால் தயிர் முதலியவற்றிற்குப்போன்று கிரியையின் உபரக்தத் தன்மை வடிவத்தால் அதற்கு விதேயத்தன்மை சொல்லவேண்டும். அதுவும் (கிரியையின் உபரக்தத்தன்மையும்) அதற்கு (பிராக பாவத்திற்கு) இன்றெனக் கூறுகின்றார்.:—

## சுலோகம்

**क्रियानुप्रवेशं विना प्रागभावः प्रसक्तक्रियाया न निर्वोढुमीशः ।**
**गुणद्रव्यवन्नित्यनिष्पन्नभावात्पदत्वं नियोगस्य भावार्थवद्वः ॥**

## பதவுரை

**प्रसक्तक्रियायाः**—இராகாதியாலடைவுற்ற நிஷித்தக்கிரியையின்
**प्रागभावः**—முன்னின்மை

1. பிரஸஜ்ஜிபப் பிரதிஷேதமென்பது அபாவமாம்.

**क्रियानुप्रवेशम् विना**- நிஷித்தக்கிரியையின் சம்பந்தமின்றி
**गुणद्रव्यवत्**–குணத்திற்கும் திரவியத்திற்கும் போன்று
**नियोगस्य**- நியோகத்தின்
**पदत्वम्**–( நியோகத்தினைச் சம்பாதிக்கும் தன்மையால் அதனது ) விஷயத்தன்மையினை
**निर्वोढुम्**–வகித்தற்கு
**न ईशः**–சாமர்த்தியமுடையதன்ரும்
**नित्यनिष्पन्नभावात्**- பிராகபாவம் நித்திய சித்தமாயிருத்தலால்
**भावार्थवत्**–பகுதிப் பொருளிற்குப் போன்றும்
**वः (न ईशः)**–உனது பக்ஷத்தில் ( சாமர்த்திய முடையதன்ருர் )

### *விசேஷவுரை*

குணம்—ஆருண்யம் ( சிவப்பு ) முதலியவை, திரவியம்—தயிர் முதலியவை, பிரசக்தக்கிரியையின் அபாவம் பகுதிப் பொருள்போன்று வியாபார வடிவமன்ரும் அன்றியும் தயிர் முதலியவைபோன்று கிரியையின் சாதனத்தன்மையினுல் ஓரிடத்தும் நிச்சயிக்கப்பட்டதன்ருர். எதனுல் விதேயமாகும் ? ஆகாது என்பது கருத்து. (435)

### *அவதாரிகை*

அற்றேல் பிராகபாவத்திற்கும் பரிபாலனக் கிரியையின் சம்பந்தத்தால் விதேயத்தன்மை சம்பவிக்கும் என்னும் சங்கைக்குக் கூறுகின்ருர்.

### *சுலோகம்*

**न पाल्यत्वयोगादलं भूष्णुभावो यतः पालनं श्रूयते नात्र वाक्ये ।**
**न खल्वश्रुतं गृह्यते न्यायहानाद्यथा न श्रुतं त्यज्यते तद्भयेन ॥**

### *பதவுரை*

**पाल्यत्वयोगात्**–( பிராகபாவத்திற்கு ) பாலனக்கிரியையின் அநுப்பிரவேசத்தால்
**अलम्**–அத்தியந்தம்
**भूष्णुभावः**–பவனகர்த்திருத்தன்மை அதாவது சாத்தியத்தன்மை
**न**–இன்ரும்
[எதனுல் இன்றெனிற் கூறுகின்ருர்]
**अत्र वाक्ये**–ஈண்டு நிஷேத வாக்கியத்தின் கண்
**पालनम्**–ரக்ஷணக்கிரியை
**न श्रूयते यतः**–கேட்கப்படுகின்றதில்லையாதலின்

அற்றைல் கேட்கப்படாதாயினும் அஃது நகாரத்நால்[1] லக்ஷிக்கப் படட்டும். எனின் அது சரியன்று. கேட்கப்பட்டது சம்பவிக்கும்போது லக்ஷணையைக்கொள்ளுதல் பொருத்தமின்மையின் என்று கூறுகின்றார்.

**अश्रुतम्**-கேட்கப்படாதது

**न खलु गृह्यते**-கிரகிக்கப்படுகின்றதில்லை

**न्यायहानात्**-(அசுருத கல்பனையின் அயோகவ்யவச்சேதமாகிய) நியாயத்திற்கு ஹானி வருதலின்

[அதில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்]

**यथा**- எப்படி

**तद्भयेन**- சுருத பரித்யாகத்தின் அயோக வ்யவச்சேத நியாயத்தின் பயத்தால்

**श्रुतम्**- கேட்கப்பட்டது

**न त्यज्यते**- தியாகம் செய்யப்படுகின்றதில்லையோ (அதுபோன்று)

## விசேஷவுரை

ஆகலால் அவ்விரண்டு நியாயங்களின் ஹானியை நிவர்த்தித்தற் பொருட்டு பரிபால்யத்தன்மையாலும் பிராகபாவம் விதிக்கத்தக்க தன்றும். மேலும் அதன் பிரவிருத்தியைச் செய்யும் ராகமுளதாயவழி நியோக சதத்தாலும் பிராகபாவத்தின் பரிபாலனம் சம்பவிக்கின்றதே இல்லை. ராக நிவர்த்தியும் தோஷ தரிசனமின்றிச் சம்பவிக்கின்றதில்லை. ஆதலின் நியோகத்தால் பயனின்றென்பது கருத்து. (436)

## அவதாரிகை

நிஷேத வாக்கியத்தின்கண் சுருதத்தைக் காண்பிக்கின்றவராய் பரபக்ஷத்தின்கண் சுருதத்தியாகத்தின் பிராப்தியினையும் அசுருத கற்பனையின் பிராப்தியினையும் விஸ்தரிக்கின்றார்.:—

## சுலோகம்

**उदासीनता च श्रुता नञ्पदार्थो नियोगे सति त्याज्यतां याति सद्यः ।**
**अतद्योग्यभावादयोग्यः पदार्थो न वाक्यार्थभागिष्यते जैमिनीयैः ॥**

## பதவுரை

**नञ्पदार्थः** - நிஷேத ஸ்தலத்தில் நகாரத்தின் அர்த்தம்

---

1. லக்ஷிக்கப்படட்டும் என்பது லக்ஷணாவிருத்தியால் கிரகிக்கப்படட்டும் என்பதாம்.

**उदासीनता च** – உதாசீனத் தன்மையாகவே

**श्रुता** – கேடகப்பட்டுள்ளது

**नियोगे सति** – (அஃது) நியோகத்தினை அங்கீகரிக்கின்

**सद्यः** – உடனே

**त्याज्यताम्** – தியாஜ்யத்தன்மையினை

**याति** – அடைகின்றது.

அப்படியானால் கேட்கப்பட்ட உதாசீனத்தன்மைக்கே விதியுளதாகுக. அதனால் சுருதஹானி அசுருதகற்பனை வடிவ இருதோஷத்தின் பிராப்தியின்றும். என்று ஆசங்கித்து அஃது அபாவ வடிவமாதலால் விதிக்கத்தக்கதன்றும் என முற்கூறியதனை மனதில் வைத்துக்கொண்டு கூறுகின்றார்.

**अतद्योग्यभावात्** – (அபாவவடிவ உதாசீனத் தன்மைக்குப் பகுதிப் பொருட்டன்மையின்மையால்) நியோக விஷயதா யோக்கியத் தன்மையின்மையின்.

[ அதனுற் சித்தித்தது என்னை ? யெனிற் கூறுகின்றார் ]

**अयोग्यः पदार्थः** – அயோக்கிய பதார்த்தமானது

**वाक्यार्थभाक्** – வாக்கியார்த்த அன்வயமுடையதாக

**जैमिनीयैः** – பாட்டராலும்

**न इष्यते** – அங்கீகரிக்கப்படுகின்றதில்லை.

### விசேஷவுரை

சகாரத்தால் நியோகத்தின்கண் அசுருதத்தன்மையினைச் சூசிப்பிக்கின்றார். லிங் முதலிய விகுதிக்கு அஃது பொருளன்மையின். நியோகத்தினை அங்கீகரிக்கின் என்பதனுல் அசுருத கற்பனையைச் சூசிப்பிக்கின்றார். தியாஜ்யத்தன்மை என்பதனுல் சுருதஹானி சொல்லப்பட்டது (437)

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் நிஷேத வாக்கியத்திற்குக் குருமதத்தை அனுசரித்தவரால கற்பிக்கப்பட்ட நியோகார்த்தத் தன்மையினைத் தூஷித்து நிஷித்தானுஷ்டானத்திற்கு பிரத்தியவாய ஜனகத்தன்மை இன்றுமென அவர் கூறியதனையும் பெரியோரது கூற்றின் விரோதத்தினுல் தூஷிக்கின்றார்.:—

### சுலோகம்

**निषिद्धक्रिया प्रत्यवायाय नेति स्वकर्णौ जनः प्रोर्णुते पापभीरुः ।
समाकर्ण्य दुर्भाषितं पार्श्ववर्ती न पापाक्षरं किंचिदेतादृगन्यत् ॥**

### பதவுரை

**निषिद्धक्रिया** – கொலை முதலிய நிஷித்த வியாபாரம்
**प्रत्यवायाय** – பாவத்தின் பொருட்டு
**न इति** – அன்றும் என்னும்
**दुर्भाषितम्** – பிராபாகரரது கெட்ட வசனத்தை
**समाकर्ण्य** – கேட்டு
**पापभीरुः** – பாபத்திற்குப் பயந்த
**पार्श्ववर्ती जनः** – சமீபத்தில் இருக்கின்ற மனிதன்
**स्वकर्णौ** – தனது காதுகளை
**प्रोर्णुते** – கெட்டியாக மூடிக்கொள்ளுகின்றான்.
[அம்மனிதனுடைய அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்]
**एतादृक्** – இப்படிப்பட்ட
**अन्यत् पापाक्षरम्** – வேறு துஷ்ட வசனம்
**किञ्चित् न** – அற்பமுமின்றும் (என்னுமபிப்பிராயத்தால் மூடிக் கொள்ளுகின்றான்)

### விசேஷவுரை

ஆதலால் சர்வ மத்தியஸ்த மஹா ஜனங்களின் வியவகாரத்திற்கு விரோதமாயிருத்தலின் இந்த மதம் அத்தியந்தம் துச்சமாமென்பது கருத்து. (438)

### அவதாரிகை

மேலும் விலக்கப்பட்ட வினைக்குப் பாப ஜனகத்தன்மையை அங்கீகரியாவிடின் அனுபவிக்கப்படுகின்ற துக்கமானது ஆகஸ்மிக மாகும். அஃது அதனையே காரணமாக உடைமையின் எனத் திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார்:—

### சுலோகம்

**निषिद्धक्रिया प्रत्यवायाय नो चेत्तदा दुःखमाकस्मिकं सर्वपुंसाम् ।
सुखं पुण्यमूलं यथा सर्वपुंसां तथा दुःखमप्यस्तु वः पापमूलम् ॥**

### பதவுரை

**निषिद्धक्रिया** – விலக்கப்பட்ட கொலை முதலிய வியாபாரமானது
**प्रत्यवायाय** – பாபத்தின் பொருட்டாக
**नो चेत्** – அன்றாயின்
**तदा** - அப்போது
**सर्वपुंसाम्** – சகல புருடருக்கும்
**दुःखम्** – அனுபவிக்கப்படுகின்ற துக்கமானது
**आकस्मिकम्** – காரணமின்றியதாகும்
**सर्वपुंसाम्** – சர்வ புருடருக்கும்
**सुखम्** – அநுபவிக்கப்படுகின்ற சுகமானது
**पुण्यमूलम्** – நல்வினையை மூலமாகவுடையது என
**यथा** – எப்படி
**वः** – உங்களுக்கும் சம்மதமோ
**तथा** – அப்படி
**दुःखम् अपि** – துக்கமும்
**पापमूलम् अस्तु** – தீவினையை மூலமாகவுடையதாகுக (உம்மாலும் இது அவசியம் அங்கீகரிக்கத் தகுந்ததென்பது பொருள்) (439)

### அவதாரிகை

அற்றேல் விலக்கிய வினைக்குப் பாபகாரணத் தன்மையின்றாயினும், விதிக்கப்பட்ட வினையைச் செய்யாமையாலுளதாகும் பாவத்தால் துக்கம் உண்டாகுமென்னுமிடத்துக் கூறுகின்றார்.:—

### சுலோகம்

**निषिद्धक्रियां चोदितस्याक्रियां वा विना नास्ति पापस्य निष्पत्तिहेतुः ।**
**ततस्तद्द्वयं पापनिष्पादकत्वाद्भवेत्प्रत्यवायस्य नित्यं निदानम् ॥**

### பதவுரை

**निषिद्धक्रियाम्**-யாதொருகாரணத்தினால் நிஷேதிக்கப்பட்ட தன் அநுஷ்டானத்தையாவது
**चोदितस्य अक्रियाम् वा**–விதிக்கப்பட்டதன் அனனுஷ்டானத்தையாவது

**विना**-அன்றி

**पापस्य**-பாபத்தின்

**निष्पत्तिहेतुः**-உத்பத்திகாரணம்

**नास्ति**-வேறென்றுமின்றே

**ततः**-அக்காரணத்தினுல்

**तत् द्वयम्**-நிஷித்தக்கிரியையும் விஹித அனனுஷ்டானமுமாகிய இரண்டும்

**पापनिष्पादकत्वात्**-பாபத்தையுண்டுபண்ணுந் தன்மையால்

**प्रत्यवायस्य**-துக்கத்திற்கு

**नित्यम्**-எப்போதும் அநாவது நியமமாக

**निदानम् भवेत्**-காரணமாகும்.

## *விசேஷவுரை*

உமது மதத்தில் விதித்ததின் அனனுஷ்டானம் பாபஜனகமாகுமாயின் அப்போது நிஷித்தானுஷ்டானமும் பாபஜனகமாக ஏனுகாது? நரகவர்ஜ்ஜன பலத்தின் ஆகாங்க்ஷையானது நிஷித்தவிபாபாரத்தில் நின்று நிவர்த்தியாகும் புருடனிடத்தும் சமமாயிருத்தலின் நியோகவடிவ புருஷார்த்தத்தன்மையும் நிஷித்த நியோகத்தின்கண்ணும் சம்பவித்தலால். விஹித அகரணமும் நிஷித்த அநுஷ்டானமும் ஆகிய இரண்டும் சமானமேயாமென்பது கருத்து. (410)

## *அவதாரிகை*

விதித்ததைச் செய்யாமைக்குப் பாப காரணத்தன்மை ஆபாத (அவிசார) திருஷ்டியால் அங்கீகரிக்கப்பட்டது. வாஸ்தவமாகவோ நிஷித்தக்கிரியையே பாவத்தின் காரணமாம். அதன்கண் அநர்த்த ஹேதுத் தன்மையில் பிரமாணம் பின்னறக் கூறப்படுதலின். விதித்ததைச் செய்யாமையானது பாவஹேதுவின் லக்ஷணமாத்திரமாம். சுவயம் பாப ஜனகமன்றும். அஃது பட்டபாதராலும்

"अकुर्वन्विहितं यस्तु करोत्यन्यदचेतनः ।
प्रत्यवायोस्य तेनैव नाभावेन स जन्यते" ॥

(விதித்ததைச் செய்யாதவனுகிய அவிவேகி புருடன் அந்நியத்தைச் செய்கின்றுன். அதனுலேயே இவனுக்குப் பிரத்தியவாயம் உண்டாகின்றது. அபாவத்தால் அன்று) என்று கூறப்பட்டுள்ளது.

சுலோகத்தில் விஹிதம் அகுர்வன் என்பதிலுள்ள சதிருப்பிரத்தியயம் லக்ஷண (ஞாபகார்த்தத்தில) வந்தது. அதன் லக்ஷியத்தினையே கூறுகின்றனர். விஹிதததை அனுஷ்டியாத காலததில அவிவேகி புருஷன் யாதொரு நிஷித்ததததையாவது அநிஷித்தத்தையாவது செய்கின்றானே அச்செய்கையினலேயே இவனுக்குப் பாபமுண்டாம். சொருபமாக அநிஷித்த போஜனாதியும் தத்காலீனத் தன்மையால் நிஷேதிக்கப்பட்டமையின். அபாவத்தால் பாபத்தின் உத்பத்தியின்றும் என்பது சுலோகத்தின் பொருள். ஆதலால் இஃது பிராமாணிகமாம் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றனர்:—

*சுலோகம்*

**निषिद्धक्रिया दुःखनिष्पत्तिहेतुर्भवेल्लक्षणं चोदितस्याक्रियाऽस्य ।**
**अभावान्न भावस्य निष्पत्तिरिष्टा भवेल्लक्षणं ज्ञायमानस्त्वभावः ॥**

*பதவுரை*

**निषिद्धक्रिया**-விலக்கப்பட்ட கொலை முதலிய வினையே
**दुःखनिष्पत्तिहेतुः**-துக்கத்தின் உத்பத்தியில் காரணம்
**भवेत्**-ஆகும் (விகித அகரணமன்றும்)
**चोदितस्य अक्रिया**-விதித்ததைச் செய்யாமையோ
**अस्य**-துக்கஹேதுவான பாபத்தின்
**लक्षणम्**-ஞாபகமாம்
[இப்படி யாதினால் ? எனின் அதற்குக் கூறுகின்றனர்
**अभावात्**-செய்யாமை வடிவ அபாவத்தினின்றும்
**भावस्य निष्पत्तिः**-துக்காதிவடிவ பாவபதார்த்தத்தின் உற்பத்தி
**न इष्टा**-பெரியோரால் அங்கீகரிக்கப்படவில்லை
[அப்படியானால் விதித்ததைச் செய்யாமையானது ஞாபகந்தான் எப்படியாகும் ? என்னுமிடத்துக் கூறுகின்றனர்.]
**ज्ञायमानः अभावः तु**-அறியப்படுகின்ற அபாவமோ
**लक्षणम् भवेत्** -ஞாபகம் ஆகும்.

*விசேஷவுரை*

செய்யாமை வடிவ அபாவத்திற்குப் பாவகாரணத் தன்மையை அங்கீகரியாவிடின் பிராகபாவத்திற்குக் காரணததன்மை சித்தியாது. என்று சொல்லற்க பிராகபாவத்தினையே உடன்படாமையின் பிரதிபந்தகா

பாவத்தன்மையால் அஃது இருப்பினும் அதற்குச் சொரூபமின்மை யானும் வியாபாரமின்மையானும் அங்கீகரிக்கத் தக்கதன்றும். அதனினும் வேறான தண்டாதிகளினாலேயே காரியம் உதபத்தியாதலின். அபாவ ஞானமும் பிரதியோகியின் அனுபலப்பத்தினால் சாக்ஷியி னாலேயே எமது மதத்தில் உண்டாகின்றது. ஆதலின் அபாவத்திற்கு ஓரிடத்தும் பாவ காரணத்தன்மையின்றும் என்பது கருத்து.

இல்லாத புகை முதலியவற்றிற்கும் நெருப்பு முதலியவற்றைக் குறித்து ஞாபகத்தன்மை யிருப்பதுபோன்று விதித்ததைச் செய்யா மைக்கும் அறியப்படுகின்ற தன்மையால் லக்ஷக (ஞாபக) த்தன்மை யிருத்தமின்றும். என்பது 'அறியப்படுகின்ற அபாவமோ ஞாபக மாகும்' என்பதன் கருத்து. (441)

### அவதாரிகை

அற்றேல் உமது மதத்திலும் இஷ்ட சாதனத் தன்மையின் அபாவமே நகாரத்தின் பொருளாதலின் நிஷித்தக் கிரியையின்கண் நாக வீழ்ச்சியின் ஏதுத்தன்மை ஏதனாலறியப்படுகின்றது என்னுஞ் சங்கைககு வலுவுள்ள அநிட்டத்துககு ஏதுவாகாத இஷ்டசாதனத் தன்மையின் அபாவ வடிவ நகாரார்த்தத்தின் அநுபபத்தியினால் அஃது சித்திக்கின்றது. நிஷித்தக்கிரியையின்கண் திருஷ்டசுக ஜனகத் தன்மையுண்மையால் விசேஷியமிருப்பினும் விசேஷணத்தின் அபாவத் தாலேயே விசிஷ்டத்தின் அபாவத்தினை ஆண்டுக் கூறவேண்டி யிருத்தலின், விசேஷணமோ வலுவுள்ள அனிஷ்டத்திற்கு ஏதுவாகாத் தன்மையாம். ஆதலின அதன அபாவம் வலுவுள்ள அனிஷ்ட சாதனத்தன்மை வடிவமாகச் சித்திக்கினறது, என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

### சுலோகம்

निवृत्तिनिष्ठे तु निषेधवाक्ये निषिद्धकर्माचरणादनर्थः ।
प्रतीयतेऽर्थादिति तन्न युक्तम् दुःखं नृणां दुश्चरितैकमूलम् ॥

### பதவுரை

**निषेधवाक्ये**—கொல்லற்க என்பது முதலிய நிஷேத வாக்யமானது
**निवृत्तिनिष्ठे** — இஷ்ட சாதனத்தன்மையின் அபாவபரமாயினும்

**अथ च** – (அவதாரிகையிற்கூறிய) [1]அர்த்தாபத்திப்பிரமாணத்தினல்

**निषिद्धकर्माचरणात्** – நிஷித்தக்கிரியையை அநுஷ்டித்தலால்

**अनर्थः इति प्रतीयते** – துக்கம் உண்டாம் என்று பிரதீதியாகின்றது

நிஷித்தக்கிரியைக்குப் பாப ஜனகத்தன்மையின்கண் தனது மதத்தில் பிரமாண உபந்யாஸத்தின் பயனைக் கூறுகின்றார்:—

**तत्र** – இவ்வாறுரும்போது

**नृणाम् दुःखम्** – மனிதர்களின் துக்கமானது

**दुश्चरितैकमूलम्** – நிஷித்த வியாபாரம் ஒன்றனையே ஏதுவாக வுடையது என்பது.

**युक्तम्** – பொருத்தமாம்

## விசேஷவுரை

'து' சப்தத்தால் பரமதத்தினின்றும் விசேஷத்தைத் தெரிசிப்பிக்கின்றார். அந்த விசேஷத்தினையே நிஷித்த என்பதாதியால் தெரிசிப்பிக்கின்றார். ஒன்றனையே என்னும் சப்தத்தால் விதித்ததைச் செய்யாமைக்குத் துக்க காரணத்தன்மையினை நிஷேதிக்கின்றார். (442)

## அவதாரிகை

இந்தப் பிரகாரம் தனது மதத்தின்கண் நிஷேத வாக்கியத்திற்கு அபாவமாத்திரத்தில் நிஷ்டத்தன்மையும் அர்த்தாபத்தி பிரமாணத்தால் நிஷேத்தியப் பிரவிருத்தியின்கண் வலுவுள்ள அநிஷ்டஹேதுத்தன்மையின் சித்தியும் உபபாதனம் செய்யப்பட்டது. இப்போது நிஷேத வாக்கியத்திற்கு வலுவுள்ள அநிஷ்டசாதனத்தன்மை வடிவ அர்த்தத்தினை பர்யுதாச லக்ஷணையால் எவர்கள் அங்கீகரிக்கின்றார்களோ அவர் மதத்தை யனுவாதஞ் செய்து நிஷேதிக்கின்றார் :—

---

1. அதிருஷ்டபயமின்றிய நிஷித்தபயனின் பிரார்த்தனையை நிஷேதித்தல் நகாரத்தோடு கூடிய வாக்கியத்தால் செய்யப்படுகின்ற தாகி நிஷேதிக்கப்படுகின்ற பலப்பிரார்த்தனையின் ஹேதுவாயுள்ள கிரியையின்கண் அநிஷ்ட பல ஹேதுத்தன்மையின்றிப் பொருந்துகின்றதில்லை. ஆதலின் அநர்த்தத்திற்குக் காரணமான கிரியையை நிவர்த்திக்குந் தன்மையால் நிஷேத வாக்கியப் பிரமாண்யம் பொருத்தமாமெனக் கூறப்பட்டதாகின்றது.

### சுலோகம்

**समीहितोपायतया लिङन्वयात्प्रतीयमानस्य तु भक्षणादिनः ।
न पर्युदासाश्रयणेन नञ्पदादनिष्टहेतुत्वमतिर्भविष्यति ॥ ४४३ ॥**

### பதவுரை

**समीहितोपायतया** – இஷ்ட சாதனத்தன்மையால்

**प्रतीयमानस्य** – அறியப்படுகின்ற

**भक्षणादिनः** – கலஞ்ச பக்ஷணம், சுராபானம் முதலியவற்றின்கண்

**लिङन्वयात्** – ('ந பக்ஷயேத்' என்னும் நிஷேத வாக்கியத்திலுள்ள யேத (க) முதலிய) லிங் விகுதியோடு கூடிய

**नञ्पदात्** – நகாரத்தினுல்

**पर्युदासाश्रयणेन** – பர்யுதாச விருத்தியையாசிரயித்தலால்

**अनिष्टहेतुत्वमतिः** – அநிஷ்ட சாதனத்தன்மையின் ஞானம்

**भविष्यति** – உண்டாகும் (என்று நீ சொல்வது)

**न** – சரியன்று

### விசேஷவுரை

ஈண்டு இஃது அபிப்பிராயமாம். யாண்டு நிஷேத்தியம் பிராந்தியினுல் பிராப்தமாகின்றதோ ஆண்டு நகாரத்திற்குப் பிரசஜ்ஜியப் பிரதிஷேதம் (அபாவம்) பொருளாம். யாண்டு அஃது (நிஷேத்தியம்) வாஸ்தவமாக வுளதோ ஆண்டு அதனது நிஷேதம் பொருந்தாமையால் பர்யுதாச லக்ஷணை அங்கீகரிக்கத் தக்கதாம் பிரகிருதத்தின்கண்ணும் இஷ்ட சாதனத் தன்மையிருத்தலின் அதனது அநிஷ்டசாதனத் தன்மையே நகாரத்தின் பொருளாகக் கூறத்தக்கது. இவ்வாருகவே பிரவிருத்தியின்கண் அபிமுகமான புருடனுக்கு அதினின்றும் நிவர்த்தியும் பொருந்துகின்றது என்க. இந்த மதமும் சரியன்று. (443)

### அவதாரிகை

எதனுல் சரியன்று என்னுமிடத்துக் கூறுகின்றுர் :—

### சுலோகம்

**तथा हि संबन्ध्युपमर्दबुद्धये समर्थमुत्सर्गमपेक्ष्य नञ्पदम् ।
न पर्युदासाय विनाऽपवादकं ततो निवृत्त्यर्थपरं तदिष्यते ॥ ४४४ ॥**

## பதவுரை

**यथा हि**–அஃதெப்படியெனில்
**नञ पदम्**–நகாரமானது
**उत्सर्गम्**–முக்கிய விருத்தியினை
**अपेक्ष्य**–அபேக்ஷித்தே அதாவது ஔத்ஸர்க்கிக சுவபாவத்தால்
**सम्बन्ध्युपमर्दबुद्धये**–நகாரசம்பந்தியாகிய பதார்த்தத்தின் யாதொரு அபாவமுண்டோ அதனைப் போதித்தற்பொருட்டு
**समर्थम्**–சாமர்த்தியமுடையதாம்
ஔத்ஸர்க்கிக ஸ்வபாவ =சக்தி விருத்தி.

[அப்படியானுல் நகாரத்திற்குப் பர்யுதாசமானது பொருளாகின்றதில்லையா? என்னுஞ் சங்கைக்கு யாண்டு உத்சர்க்கத்தால் பிராப்தமான முக்கியார்த்த வடிவ அபாவத்திற்கு அபவாத வடிவபாதகம் ஏதேனுமுளதோ அவ்விடத்துப் பர்யுதாசம அங்கீகரிக்கப்படுகின்றது. பிரகிருதத்தின்கண் பாதகமின்றுர். என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றுர்.]

**अपवादकम् विना**–முக்கியார்த்தத்தின் பாதகமின்றி
**पर्युदासाय**–(நகாரம் லக்ஷணையால்) பர்யுதாசத்தைப் போதித்தற் பொருட்டு
**न**–சமர்த்தமாவதின்றும்
[திரண்ட பொருளைக் கூறுகின்றுர்.]
**ततः**–அக்காரணத்தால்
**तत्**–நிஷேத வாக்கியமானது
**निवृत्त्यर्थपरम्**–(முற்கூறிய மார்க்கத்தால் பிரார்த்தனையின்) நிவிருத்தி பரமாம் என
**इष्यते**–அங்கீகரிக்கப்படுகின்றது. (444)

## அவதாரிகை

அற்றேல் இஷ்ட சாதன வடிவ பக்ஷஞ்ஞதியின் நிஷேதம் ஆண்டு எப்படிப் பொருந்தும்? அன்றியும் அதன் அநிஷ்ட சாதனத் தன்மையின் ஞானமின்றி பிரவிருத்தியில் அபிமுகனை புருடனுக்கு அதினின்றும் நிவர்த்திதான் எப்படிப் பொருந்தும்? என்னும் அவரது அபிப்பிராயத்தினைத் தூஷிக்கின்றவராய் முடிக்கின்றுர் :—

### சுலோகம்

**अतः प्रसज्यप्रतिषेधसंभवान्न पर्युदासाश्रयणं प्रशस्यते ।**
**न पर्युदासाश्रयणं विना भवेदनिष्टहेतुत्वनञर्थकल्पना ॥ ४४५ ॥**

### பதவுரை

**अतः**-(யாதொரு காரணத்தினால் முக்கியார்த்தத்தின் பாதமுளதாய வழியே பர்யுதாச லக்ஷணையாமோ) அக்காரணத்தினால்

**प्रसज्यप्रतिषेध- सम्भवात्**- (முக்கிய விருத்தியினால் இஷ்டசாதன பக்ஷணுதியின்) நிஷேதம் சம்பவித்தலால்

**पर्युदासाश्रयणम्**-லக்ஷணையால் பர்யுதாசத்தையங்கீகரித்தல்

**न प्रशस्यते**-சிறப்புடையதன்றும்

[ அப்படியானால் பர்யுதாசமில்லாதொழிக என்னுஞ் சங்கைக்கு அப்போது உமதிஷ்டம் சித்திக்கின்றதில்லை எனக்கூறுகின்றார் ]

**पर्युदासाश्रयणम् विना**-பர்யுதாசத்தையங்கீகரித்தாலன்றி

**अनिष्टहेतुत्व- नञर्थकल्पना** நகாரத்திற்கு அநிஷ்ட சாதனத்தன்மை வடிவ அர்த்தத்தைக் கற்பித்தல்

**न भवेत्**-சம்பவியாது.

### விசேஷவுரை

பக்ஷணுதியின் நிஷேதம் புருடனது நிவர்த்திக்கும் உபலக்ஷணமாம். வலுவுள்ள அநிஷ்டத்திற்கு ஏதுவாகாத இஷ்ட சாதனத் தன்மை வடிவ நிஷேத்தியத்திற்கு ஆண்டு பிராந்தியினாற் பிராப்தியிருத்தலால் நிஷேதம் சம்பவிக்கின்றதாகலின் *விசிஷ்ட நிஷேதத்தின் சாமர்த்தியத்தால் வலுவுள்ள அநிஷ்ட சாதனத் தன்மையும் சித்தித்தலின் அதினின்று நிவர்த்தியும் பொருந்துதலால் பர்யுதாசம் அங்கீகரிக்கத் தக்கதன்றும் என்பது பொருள். **(445)**

### அவதாரிகை

முற்சுலோகத்தின் பிற்பாதியின் பொருளினையே விஸ்தரிக்கின்றார்.

---

*விசிஷ்டம்=வலுவுள்ள அநிஷ்டத்திற்கு ஏதுவாகாத இஷ்ட சாதனத் தன்மை.

## சுலோகம்

**अभीष्टहेतुत्वलिङर्थपृष्ठतो ह्यनर्थहेतुत्वनञर्थकल्पना ।**
**न पर्युदासं परिहृत्य कल्प्यते न पर्युदासः प्रतिषेधसंभवात् ॥ ४४६ ॥**

## பதவுரை

**अभीष्टहेतुत्व लिङर्थपृष्ठतः** — இஷ்டசாதனத் தன்மை வடிவ லிங் விகுதியர்த்தத்தின் பின்னர்

**अनर्थहेतुत्व नञर्थकल्पना** — அனர்த்த ஹேதுத் தன்மை வடிவ நகாரார்த்தத்தின் கற்பனையுண்டாம்.

அதாவது (இஷ்ட சாதனத்தன்மை லிங் விகுதியின் பொருளாதலின் அதனையுடையதன்கண் அதன் நிஷேதம் பொருந்தாமையால் பின்னர் பிரகிருதத்தில் நகாரத்திற்கு அனர்த்த ஹேதுத் தன்மையின் கற்பனை சொல்லவேண்டும் என்பதாம்)

( அதுவும் )

**पर्युदासं परिहृत्य**—பர்யுதாச லக்ஷணையை விட்டு
**न कल्प्यते**—சம்பவிக்கிறதில்லை
**पर्युदासः**— அந்தப்பர்யுதாச லக்ஷணையும்
**न**—சம்பவிக்கின்றதில்லை
**प्रतिषेधसम्भवात्** —முக்கியார்த்த வடிவ நிஷேதம் சம்பவித்தலின்

## விசேஷவுரை

பிரத்தியக்ஷ விரோதமிருத்தலினாலேயே இஷ்டசாதனத்தன்மையின் நிஷேதம் சம்பவியாமையால் பர்யுதாசம் அங்கீகரிக்கத்தக்கதாமெனின் அற்றன்று. இஷ்டத்தைக் குறித்துச் சாதனத்தன்மையம்சத்தின் நிஷேதம் சம்பவியாவிடினும் இச்சாம்சத்தின்கண் பிரமாண மூலத்தன்மை நிஷேதத்தின் சம்பவம் கூறப்பட்டமையின். ஆதலால் நிஷேத வாக்கியம் நிவர்த்தி பரமேயாமெனச் சித்தித்தது. (446)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் நிஷேதவாக்கியத்திற்கு நிவர்த்திமாத்ரபரத்தன்மை சித்தித்தபோது வேதவாக்கியத்திற்குக் காரிய கோசரத்தன்மை நியமமின்மையின் அதுபோன்றே வேதாந்த வாக்கியமும் கூறிய நியாயத்தால் ஸ்வதஃசித்த பிரம்மபரமாகவே அங்கீகரிக்கத்தக்கதாம், என்று முடிக்கின்றார்:—

### சுலோகம்

प्रमाणमिच्छन्प्रतिषेधचोदनां समस्तवेदस्य न कार्यगोचरम् ।
प्रमाणभावं प्रतिपत्तुमीश्वरो निषेधवाक्ये तदसंभवाद्यतः ॥ ४४७ ॥

### பதவுரை

**प्रतिषेधचोदनाम्**—நிஷேத வாக்கியத்தினை
**प्रमाणम् इच्छन्**—பிரமாணம் என இச்சிக்கின்ற வாதியானவன்
**समस्तवेदस्य**—மறைமொழியனைத்திற்கும்
**कार्यगोचरम्**—கார்யத்தினை விஷயஞ் செய்தல் வடிவ
**प्रमाणभावम्**—பிராமாண்யத்தினை
**प्रतिपत्तुम्**—அறிதற்கு
**न ईश्वरः**—ஆற்றலுடையவனன்று
[ஏதனாலாற்றலுடையவனன்று ? என்னுமிடத்துக் கூறுகின்றார்.]
**निषेधवाक्ये**—நிஷேத வாக்கியத்தின்கண்
**तत् असम्भवात्**—கார்யகோசரத்தன்மை சம்பவியாமையின
**यतः**—யாதொரு காரணத்தினால் வேதத்திற்குக் காரியார்த்தத் தன்மையின் நியமமின்றோ அக்காரணத்தினாலெனப் பின் சுலோகத்தோடெ ாட்டுக. (447)

### சுலோகம்

अतो न वेदान्तवचःसु विद्यते विधिर्नियोगो न च शब्दभावना ।
न कर्मकाण्डेऽपि नियोगतोऽस्त्यसौ यतो निषेधेषु न विद्यते विधिः ॥

### பதவுரை

**अतः**—அக்காரணத்தினால்
**वेदान्तवचःसु**—வேதாந்த வாக்கியங்களில்
**विधिः**—கர்த்தாவின் கிருதி சாத்தியவடிவ இஷ்டஸாதனம்
**न विद्यते**—பிரதிபாத்தியமாக இன்றும்
**नियोगः**—அபூர்வமெனப் பெயரிய காரியமுங்
**शब्दभावना च**—பிரேரணை வடிவ சாப்தீ பாவனையும்
**न**—பிரதிபாத்தியமாக இன்றும்
( இவ்வர்த்தத்தினையே கைமுதிக நியாயத்தாலுங் கூறுகின்றார் )
**कर्मकाण्डे अपि**—கர்மகாண்டத்தின்கண்ணும்

**असौ**–விதியானது

**नियोगतः**–நியமமாக

**न अस्ति**–இன்றும்

**निषेधेषु**–நிஷேத வாக்கியங்களில்

**विधिः**–கிருதிசாத்திய வடிவ விதேயமானது

**न विद्यते यतः**–இன்றுமாதலின் (448)

## ஞானத்தில் விதியின் அஸம்பவ நிரூபணம்

### அவதாரிகை

இப்போது நிஷேத வாக்கியத்திற்கு நிவிர்த்தி விதிபரத் தன்மையினை அங்கீகரித்தும் வேதாந்தத்தின்கண் விதியின் அசம்பவத்தினைக் கூறுகின்றார் :—

### சுலோகம்

**उपेत्यवादं परिगृह्य चोच्यते नियोगनिष्ठास्तु निषेधगीरपि ।**
**तथाऽपि वेदान्तवचःसु विद्यते विधेर्न गन्धोऽपि विरोधकारणात् ॥**

### பதவுரை

**उपेत्यवादम्**–அப்யுபகம வாதத்தினை

**परिगृह्य च**–உடன்பட்டும்

**उच्यते**–சொல்லப்படுகின்றது

[அதனையே (அப்யுபகம வாதத்தினையே) பிரகடனஞ்செய்கின்றார்]

**निषेधगीः अपि**–கொல்லற்க என்பது முதலிய நிஷேத வாக்கியமும்

**नियोगनिष्ठा अस्तु**–அபூர்வமெனப் பெயரிய காரியபரம் ஆகுக அதனால் எங்களுக்கு யாதொரு குறைவுமின்றுமென்பது பொருள்.

**तथा अपि**–அப்படியாயினும்

**वेदान्तवचःसु**–தத்துவமசி முதலிய வேதாந்த வாக்கியங்களில்

**विधेः गन्धः अपि**–சாத்திய வடிவ விதியின் லேசமும்

**न विद्यते**–இன்றும் உத்பத்தியாதிவடிவ யாதோர் விதியும் சம்பவிக்கின்றதில்லை என்பது பொருள்.

**विरोधकारणात्**–வேதாந்தங்களுக்கு அத்வைதப் பிரம்மத்தின் கண்ணே தாத்பரியத்தைப் போதிக்கும் பிரமாணங்களுக்கு விரோதம் வருதலின்

அப்யுபகமவாத:=பிரௌடி வாதம் (449)

## அவதாரிகை

வேறு பிரகாரத்தாலும் விதியின் அசம்பவத்தைக் கூறுகின்றார் :—

## சுலோகம்

**ज्ञानं विधातुं न हि शक्यमेतन्न शक्यते कर्तुमकर्तुमेतत् ।**
**अतोऽन्यथा कर्तुमशक्यमेतत्प्रमाणमेयैकनिबन्धनत्वात् ॥ ४५० ॥**

## பதவுரை

**एतत् ज्ञानम्** –இந்த அத்வைதான்ம ஞானம்

**विधातुम्** –விதித்தற்கு

**न हि शक्यम्** –யோக்கியமன்றும்

[யாதினால விதித்தற்கு யோக்கியமன்று என்னுமிடத்துக் கூறுகின்றார்.]

**एतत्** –இவ்வான்ம ஞானம்

**कर्तुम्** –செய்தற்கும்

**अकर्तुम्** –செய்யாமல் விடுதற்கும்

**न शक्यते**–யோக்கியமன்றும்

**एतत्** –இஃது

**अतः अन्यथा कर्तुम्** –இதினின்றும் வேறுவிதமாகச் செய்தற்கும்

**अशक्यम्** –யோக்கியமன்றும்

**प्रमाणमेयैकनिबन्धनत्वात्** -பிரமாணப்பிரமேயங்களின் பரதந்திரமாயிருத்தலால், (புருஷாதீனமன்மையினென்பது பொருள்.

## விசேஷவுரை

வேதாந்தங்களுக்குக் கர்மவிதிபரத்தன்மை சம்பவியாது. அவற்றால் பிரதிபாத்தியமான ஆன்மாவுக்குக் கர்மசேஷத்தன்மை (அங்கத்தன்மை) சம்பவியாமையாலும் * விநியோஜகப் பிரகரணம் முதலிய பிரமாணமின்மையினாலும் அவைகட்கு (வேதாந்தங்களுக்கு)

*விநியோஜகம் அங்காங்கித் தன்மையைப் போதிப்பது.

அஃது (கர்மவிதிபரத்தன்மை)பொருந்தாமையின். வேதாந்தங்களால் அறியப்பட்ட உபாசனைவிதியின் சேஷத்தன்மையுமின்றுர். முமுக்ஷுவிற்கு உபாசனையினுல் பிரயோஜனமின்மையின் அவனையுத்தேசித்துப் பிரவிருத்தித்த வேதாந்தங்கட்கு அஃது (உபாசனை விதியின் சேஷத்தன்மை) பொருந்தாமையின். அப்படியானுல் " **आत्मन्येवात्मानं पश्येत्** " " ஆன்மாவின் கண்ணேயே ஆன்மாவைப் பார்க்குக " என்று கேட்கப்பட்ட ஞானவிதி பரத்தன்மை ஆகுக. ஞானத்தின்கண் முமுக்ஷுவுக்கே அதிகாரமிருத்தலின், எனின் அற்றன்று. அலௌகிகமுமத்யெமுமான ஆன்ம விஷயக ஞானம் விதித்தற்கு யோக்கியமன்மையின். அதிராத்ரமென்னும் யாகத்தின் கண்ணே ஷோடசிபாத்திரத்தினைக் கிரஹித்தல்போன்று. யாதொன்று புருஷப்பிரயத்தனத்தால் செய்தற்கும் செய்யாமல் விடுதற்கும் யோக்கியமாமோ, அஃதின்றேலின்றுபோ உதித ஹோமத்தினும் விலக்ஷணமான அநுதிதஹோமம்போன்று யாதொன்று வேறு பிரகாரத்தாலுஞ் செய்தற்கு யோக்கியமாமோ அவையே விதித்தற்கு யோக்கியமாம். ஞானமோ இவ்வாறின்றும். அதற்குப் பிரமாணப்பிரமேய மாத்திரத்தின் அதீனத்தன்மையுண்மையால் புருஷனது இச்சையினதீனத்தன்மையின்மையின், என்பது கருத்து. விதிவாக்கிய ஜன்ய இஷ்டசாதனத்தன்மை ஞானத்தின் அதீனமாக யாண்டு சிகீர்ஷை (செய்தற்கிச்சை) யுண்டாகின்றதோ அவ்விச்சையாலுண்டான முயற்சியால் யாது சாதிக்கப்படுகின்றதோ அஃது விதிவாக்கியத்தால் அக்கினி ஹோத்திராதிபோன்று விதிக்கத்தக்கதாம். ஞானமோ இவ்வாறின்றும். ஞானம் இச்சையினுல் சம்பாதிக்கப்படுகிறதில்லை. இச்சையின்றியவனுக்கும் அது காணப்படுதலின். முயற்சியாலும் அது சம்பாதிக்கப்படுகிறதில்லை. முயற்சியின்றியவனுக்கும் அது காணப்படுதலின். இந்தப்பிரகாரம் ஞானத்திற்கு விதேயத்தன்மை சித்தியாமையின் வேதாந்தங்கள் அதன் விதிபரம் அன்றும் என்பது கருத்து. (450)

## *அவதாரிகை*

மேலும் ' **आत्मानं पश्येत्** ' 'ஆன்மாவைக் காண்க ' என்னும் வாக்கியார்த்த ஞானத்திற்கு முன்பு விதேய ஆன்ம ஞானம் அக்ஞாதமா ? அல்லது ஞாதமா ? என விகற்பித்து முதற்பக்ஷம் பொருந்தாதெனக் கூறுகின்றுர் :—

### சுலோகம்

**ब्रह्मज्ञानं जानता ब्रह्मबुद्धेः कर्तव्यत्वं शक्यते ज्ञातुमेतत् ।**
**न ह्यज्ञात्वा ब्रह्मबुद्धिं तदीयं कर्तव्यत्वं कश्चिदीष्टे ग्रहीतुम् ।। ४५१ ।।**

### பதவுரை

**ब्रह्मज्ञानम्**-பிரம்மஞானத்தினை
**जानता**-அறியும் புருஷனால்
**ब्रह्मबुद्धेः**-பிரம்மஞானத்தின் கண்
**एतत् कर्तव्यत्वम्**-இந்தக் கர்த்தவ்யத் தன்மையினை
**ज्ञातुम् शक्यते**-அறியமுடியும்
**ब्रह्मबुद्धिम्**-பிரம்மஞானத்தினை
**अज्ञात्वा**-அறியாமல்
**तदीयम् कर्तव्यत्वम्**-அதன் கர்த்தவ்வியத்தன்மையினை
**ग्रहीतुम्**-அறிதற்கு
**कश्चित् न हि ईष्टे**-ஒருவனும் சமர்த்தனன்றும்

### விசேஷவுரை

ஞானமானது விதியின் சம்சர்க்கவடிவ வாக்கியார்த்த நிச்சயத்திற் கேதுவாதலால் அஃதின்றேல் அஃதின்றுமென்பது பொருள். (451)

### அவதாரிகை

இரண்டாவது பக்ஷத்திலும் ஞானத்தின் விஷயமான பிரம்மம் அறியப்பட்டதெனச் சொல்லுதல் வேண்டும். பிரம்மம் அறியப் படாதாயின் பிரம்ம வடிவ விஷயத்தால் நிரூப்யமான ஞானத்தினையும் அறியக்கூடாதாகலின் இவ்வாறாகவே பிரம்மத்தினது யாதொரு தத்வ ஞானம் மோக்ஷத்தின் பொருட்டு விதிக்கப்படுகின்றதோ அதுவும் ஞானம் போன்று அறியப்பட்டதேயாம். ஆதலின் இவ்வதிகாரிக்கு ஞானத்தால் மோக்ஷம் அடையப்பட்டதேயாம். ஆகவே விதிவாக்கியங் களுக்குப் பிரயோஜனமின்றுமெனக் கூறுகின்றார் :—

### சுலோகம்

**ब्रह्मज्ञानं ब्रह्मणि ज्ञायमाने ज्ञातुं शक्यं नान्यथा तच्च तद्वत् ।**
**विज्ञातं चेद्ब्रह्मणस्तत्त्वमस्य प्राप्ता मुक्तिर्नास्ति कृत्यं विधीनाम् ।।**

### பதவுரை

**ब्रह्मणि ज्ञायमाने**–பிரம்மம் அறியப்பட்டதாயின்
**तच्च ब्रह्मज्ञानम्**–அந்தப் பிரம்மஞானத்தினை
**ज्ञातुम् शक्यम्**–அறியக்கூடும்
**अन्यथा**–பிரம்மம் அறியப்படாதாயின்
**न**–அதன் ஞானமும் அறியத்தகாது
**तद्वत्**–ஞானம் போன்று
**ब्रह्मणः तत्त्वम्**–பிரம்மத்தின் வாஸ்தவ சொரூபமானது
**विज्ञातम् चेत्**–அறியப்பட்டதாயின்
**अस्य**–இவ்வதிகாரிக்கு
**मुक्तिः प्राप्ता**–மோக்ஷம் அடையப்பட்டதேயாம் ( ஆதலின் )
**विधीनाम्**–விதி வாக்கியங்களுக்கும்
**कृत्यम् नास्ति**–பிரயோஜனமின்றாம் (452)

### அவதாரிகை

பிரம்மம் அறியப்பட்டபோது ஞானம் விதிக்கப்படுகின்றது, என்னும் இரண்டாவது பக்ஷத்தில் கேவலம் பிரயோஜனுபாவத்தால் ஞானவிதியின் அசம்பவமின்றுமே. மற்றோ அதில் நிமித்தமான பிரமை, கர்த்தா, காரணம் முதலியவற்றின் பேதம் சம்பவியாமையானும் விதி சம்பவிக்கின்றதில்லை, எனக்கூறுகின்றார் :—

### சுலோகம்

**दृशो विराट्सूत्रशरीरगोचरं परस्पराध्यासमबोधसम्भवम् ।**
**अनर्थमाहुः श्रुतिमस्तके स्थितास्ततोऽस्य विद्यासमयैव मुक्तता ॥**

### பதவுரை

**दृशः**–பிரம்மவடிவ பிரத்தியக் சைதன்னியத்திற்கு
**विराट्सूत्रशरीरगोचरम्**–ஸ்தூல பூதமும் அதன் காரியவடிவ ஸ்தூலப் பிரபஞ்சமும், சூட்சும பூதமும் அதன் காரியவடிவ லிங்க சரீரமும், நம் மனோரது வியஷ்டி சரீரமுமாகிய இவைகளை விஷயஞ் செய்கின்ற

**परस्पराध्यासम्**-நான் எனது என்று அவபாசிய அவபாசகவடிவ அந்நியோன்னியாத்தியாசமான

**अनर्थम्**-அநர்த்தத்தினை

**अबोधसम्भवम्**-அஞ்ஞானத்தால் உத்பத்தியுடையதுஎன

**श्रुतिमस्तके स्थिताः**-வேதாந்தத்தின்கண் நிஷ்டையினையுடைய பெரியோர்

**आहुः**-கூறுகின்றனர்

[கூறிய அத்தியாசத்திற்கு அஞ்ஞான ஜன்னியத்தன்மை சித்தித்த வழி பலிதத்தைக் கூறுகின்றார்]

**ततः**-இச்சம்சாரம் ஆன்மாவின்கண் அஞ்ஞானத்தாலத்தியஸ்தமாயிருத்தலின்

**अस्य**-இவ்வதிகாரியாகிய வித்வானுக்கு

**विद्यासमया एव**-ஞானத்தின் உத்பத்தி சமகாலத்திலேயே

**मुक्तता**-அவித்தையும் அதன் காரியமுமாகிய சம்சாரரஹிதத்தன்மை சித்திக்கின்றது.

ஆதலால் பேதமின்மையின் விதிவாக்கியார்த்த ஞானமாவது அதன் அநுஷ்டானமாவது அதிகாரிக்கு எப்படி சம்பவிக்கும்? என்பது கருத்து. (453)

### அவதாரிகை

அற்றேல், வித்தையின் சமகாலத்திலேயே மோக்ஷமாமென்பது எப்படிப்பொருந்தும்? அப்போது ஞானத்தின் சககாரிகள் நியமமாகச் சம்பவியாமையின். சககாரியின்றியே ஓர் சாதனம் ஓர் காரியத்தை யுண்டுபண்ணுவதாகக் காணப்படவில்லையாதலின். என்னும் சங்கைக்கு பிறசாதனம் அவ்வாறுதான். ஞானமோ அவித்தையின் நிவர்த்தியின் கண் தனது உற்பத்திமாத்திரத்தினாலேயே சாமர்த்தியமுடையதாம். என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார் :—

### சுலோகம்

*** अनाद्यविद्यापटनेत्रबन्धनं प्रमह्य वेदान्तनिबन्धना मतिः ।**
**स्वजन्ममात्रेण दृढाऽऽत्मगोचरा समूलदाहं दहतीति हि श्रुतिः ॥**

---

* அவித்தை சொரூபப் பிரகாச காரியத்தின் பிரதிபந்தகமாவதால் படம் போன்று நேத்திர பந்தனம் எனப்பட்டது. ஞானோத்பத்தியின் அனந்தரம் அதன் விரோதமாதலால் அநாதியாயினும்

## பதவுரை

**वेदान्तनिबन्धना**- வேதாந்தப் பிரமாணத்தாலுண்டான
**मतिः**- ஞானமானது
**आत्मगोचरा**—அத்வைதப் பிரம்மத்தை, விஷயஞ் செய்வதாய்
**दृढा**—திடமாய் ( அசம்பாவனாதி தோஷங்களால் கலக்கப்படாததாய் இருந்துகொண்டு
**स्वजन्ममात्रेण**—தனது உற்பத்தி மாத்திரத்தினல் அதாவது சககாரியை அபேக்ஷியாமல்
**अनाद्यविद्यापट- नेत्रबन्धनम्** —வஸ்திரம் போன்று நேத்திரபந்தனமாயுள்ள அநாதி அவித்தையினை
**प्रसह्य**—பலாத்காரத்தால்
**समूलदाहम्**-சம்சாரத்திற்கு மூலமான நாநாவித வாசனைகளின் தாகத்தோடு கூட எவ்வாறுகுமோ அவ்வாறு
**दहति इति**-நாசம் செய்கின்றது என
**श्रुतिः**—சுருதி கூறுகின்றது.

## விசேஷவுரை

"**भिद्यते हृदयग्रन्थि**" "**तरति शोकमात्मवित्**" {"ஆன்ம தரிசன காலத்தில் சம்சாரப் பிராந்தி நசிக்கின்றது." "ஆன்மாவை யறிந்தவன் சோகத்தைக் கடக்கின்ருன்" என்பது முதலிய சுருதி தெரிசிப்பிக்கின்றதென்பது பொருள். (454)

## அவதாரிகை

அற்றேல் பிரம்மத்தின்கண் வாக்கியத்தினல் பரோக்ஷநிச்சயம் உளதாயவழி அதன் ஞானத்தின்கண் விதியிருக்குக எனின் அற்றன்று. [1]அதே ஞானம் விதிக்கத் தக்கதன்று. சித்தித்ததன்கண் சாத்தியத் தன்மை பொருந்தாமையின் அதன் ஜாதியினையுடைய வேறு ஞானமும் விதிக்கத் தக்கதன்ரும். அஃது பூர்வ ஞானம் போன்று விதியின்றியே

---

*அவித்தையாவது அதன் காரியமாவது இருத்தற்கு ஆற்றலுடைய தன்ரும். என்பது பலாத்காரத்தால் என்னும் பதத்தால் சூசிப்பிக்கப்பட்டது. ஆபாத ஞானத்தை நீக்குதற்பொருட்டு திடமெனப்பட்டது.*

*1 அதே—வாக்கிய ஜன்னிய பரோக்ஷ நிச்சயமே*

சப்தத்தினுல் சம்பவித்தலின். அவ்விதிக்குப் பயனும் காணப்படுகின்ற தில்லை. மோக்ஷத்திற்கு விதியின் பலத்துவத்தினை யங்கீகரிக்கின் அநித்தியத் தன்மை பிராப்தியாமாதலின். சாக்ஷாத் காரமும் அதன் பயனன்ரும். அஃது பிரமாண மாத்திரத்தின் பயனுதலின் விதியின் பலத்தன்மை பொருந்தாமையின் இதனுனேயே சாக்ஷாத்காரமும் விதிக்கத்தக்கதன்ரும். என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்ருர் :—

*சுலோகம்*

**विज्ञाते ब्रह्मणि स्याद्विधिरयमफलः प्रत्यये तस्य तद्व-**
**न्नाज्ञात ब्रह्मकर्मा विधिविषय इति प्रत्ययो बुद्धियोग्यः ।**
**ब्रह्मात्मप्रत्ययेऽतो विधिरनवसरः सर्वथा चिन्त्यमान-**
**स्तस्माद्ब्रह्मात्मवस्तुन्यवसितमखिलं विद्धि वेदान्तवाक्यम् ॥**

*பதவுரை*

**ब्रह्मणि विज्ञाते**—சப்தத்தால் பிரம்மம் அறியப்பட்டபோதும்

**तस्य प्रत्यये**—பிரம்மத்தின் ஞானத்தின்கண்

**अयम् विधिः**—(ஆன்பாவைக் காண்க) என்னும் இந்த விதியானது

**अफलः स्यात्**—நிஷ்பிரயோஜனமாகும்.

[ எப்போது பரோக்ஷமாகவாவது அபரோக்ஷமாகவாவது பிரம்மம் அறியப்பட்டபோது அதன் ஞானம் வாக்கியத்தாலறியப்பட்டதாயினும் விதிக்கத்தக்கதன்ருே அப்போது அத்தியந்தம் அஞ்ஞாதப் பிரம்மத்தை விஷயமாகவுடைய ஞானம் நிருபிக்கத் தகாமையால் அத்தியந்தம் விதிக்கத்தக்கதன்ரும். எனக்கூறப்பட்ட அர்த்தத் தினையே நினைப்பூட்டுகின்ருர்.]

**तद्वत्**—அதுபோன்று

**अज्ञात ब्रह्मकर्मा**—அறியப்படாத பிரம்மத்தினை விஷயமாகவுடைய

**प्रत्ययः**—ஞானமானது

**विधिविषयः इति**—விதிக்கு விஷயமாம் அதாவது விதேயமாம் என்றும்

**बुद्धियोग्यः न**—ஞானத்திற்கு விஷயமன்ரும்

[கூறிய ரீதியினுல் ஞானவிதிவிஷயத்தை நிருபிக்க முடியாமையின் பயனைக் கூறுகின்ருர்]

**अतः**—பிரம்ம ஞானத்தின்கண் விதேயத்தன்மையினை நிரூபிக்க முடியாமையால்

**ब्रह्मात्म प्रत्यये**—பிரம்மவடிவ ஆன்ம ஞானத்தின்கண்

**विधि**:—விதியானது

**सर्वथा चिन्त्यमानः**—சர்வப்பிரகாரத்தாலும் விசாரிக்கப்படுகின்றதாகி அதாவது சொரூபத்தாலும் விஷயத்தாலும் ஞாதத்தன்மை அக்ஞாதத்தன்மைகளாலும் பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மைகளாலும் விசார யோக்கிய விஷயம் சம்பவியாமையால

**अनवसरः**—அயுக்தமாம்

[விதியின் அசம்பவப் பலனைக் கூறுகின்றார்.]

**तस्मात्**—ஞானத்தின்கண் விதி சம்பவியாமையால்

**ब्रह्मात्मवस्तुनि**—பிரம்மவடிவப் பிரத்தியகாத்மாவின்கண்

**अखिलम् वेदान्तवाक्यम्**—சம்பூர்ணமான வேதாந்த வாக்கியமும்

**अवसितम्**—பர்யவசானமுடையது என

**विद्धि**—அறிவாய்

### *விசேஷவுரை*

சம்பூர்ணமான கர்மகாண்டத்திற்கு நியோகார்த்தத்தன்மையிருப்பினும் கூறிய நியாயத்தால் வேதாந்தங்களில அஃது சம்பவியாமையின் அவைகட்கு, சுவதஃஸித்த பிரம்மத்தின் கண்ணேயே பர்யவசானமாம் என்பது கருத்து: நியோகம்-விதி. (455)

### *அவதாரிகை*

வேறு பிரகாரத்தாலும் திருஷ்டாந்த சஹிதமாக ஞானவிதியின் அசம்பவத்தைக் கூறுகின்றார் :—

### *சுலோகம்*

**विरुद्धत्रिकस्य द्वयापत्तिदोषान्न शक्यं विधानं धियः संग्रहीतुम् ।**
**यथा वाजपेये गुणस्येह तद्वत्ततो नास्ति वेदान्तवाक्ये विधानम् ॥**

### *பதவுரை*

**विरुद्धत्रिकस्य**—விருத்தமான மூன்றன் சமுதாய வடிவ விருத்தத்திரிகத்தின்

**द्वयापत्तिदोषात्**–(இனிக்கூறப்படும் பிரகாரத்தால்) யாதொரு இருமையுண்டோ அதன் பிராப்தி வடிவ தோஷத்தால்

**धियः विधानम्**–ஞானத்தின் விதியினை

**संग्रहीतुम्**-அறிதற்கு

**न शक्यम्** -முடியாது

**यथा**–எப்படி

**वाजपेये**–வாஜபேயமெனப் பெயரிய கர்மத்தின் கண்

**गुणस्य**–வாஜபேயமெனப்பெரிய குணத்தினது விதிபோன்று

[தார்ஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்.]

**इह**–ஈண்டும்

**तद्वत्**–வாஜபேய குணம் போன்று

**ततः**–விருத்தத்திரிகத்வயம் பிராப்தியாதலின்

**वेदान्तवाक्ये**–வேதாந்த வாக்கியத்தின் கண்

**विधानम् नास्ति**–ஞானத்தின் விதானமின்றும்.

### *விசேஷவுரை*

எப்படி வாஜபேய யாகத்தின்கண்ணே இனிக் கூறப்படும் பிரகாரத்தால் விருத்தத்திரிகத்துவயம் பிராப்தியாதலால் குணத்தின் விதானத்தை யங்கீகரித்தற்கு முடியாதோ அதுபோன்று அத்தோஷத் தாலேயே ஈண்டு வேதாந்த வாக்கியத்தின்கண் ஞானத்தின் விதி யின்றும் என்பது பொருள். (456)

(டிப்பணி) '**वाजपेयेन स्वाराज्यकामो यजेत**' வாஜபேயத்தால் ஸ்வாராஜ்ய காமன் யஜிக்குக என்று கேட்கப்படுகின்றது. அதன்கண் இஃது குணவிதியா? அல்லது கர்ம நாமதேயமா? எனச் சம்சய முண்டாகின்றது. குணவிதியென பூர்வ பக்ஷத்தில் பிராப்தமாம். வாஜம்=அன்னம். அஃது–பேயம்=சாப்பிடத் தக்கதாக இருக்கின்றது இதன்கண் என்னும் வியுத்பத்தியினுல் வாஜபேய குண விசிஷ்டமாக பிரகிருதஜோதிஷ்டோம யாகத்தினதே விதி சம்பவித்தலால் சுவாராஜ்ய பலதகிற்குக் குணவிதி காரணத் தன்மை பொருந்துதலின். 'தயிரினுல் இந்திரிய காமன் ஹவனம் செய்க' என்பதாதி போன்று. இனி உத்தர பக்ஷம் சொல்லப்படுகின்றது. ஈண்டு வாஜபேய குணவிதி பொருந்துவதின்று. விருத்தத் திரிகத்துவயம் பிராப்தியாதலின்.

அஃதெப்படியெனின்—எப்போது யாகத்தை யுத்தேசித்து வாஜபேய குணம் அதன்கண் விதிக்கப்படுகின்றதோ அப்போது யாகத்திற்கு உத்தேசியத்தன்மை அநுவாத்தியத்தன்மை பிரதானத்தன்மை என்னும் ஓர் திரிகம் பிராப்தமாகின்றது. எப்போது சுவாராஜ்ய பலத்தை அனுவாதஞ்செய்து அதன் பொருட்டு யாகம் விதிக்கப்படுகின்றதோ அப்போது பலத்தை யபேக்ஷித்து அதே யாகத்திற்கு உபாதேயத் தன்மையும் விதேயத்தன்மையும் சேஷத்தன்மையும் என மற்றோர் திரிகம் பிராப்தியாகின்றது. ஆகவே, உத்தேசியத்தன்மை உபாதேயத் தன்மைகளுக்கும், அநுவாத்தியத் தன்மை விதேயத்தன்மைகளுக்கும், பிரதானத்தன்மை குணத்தன்மைகளுக்கும் ஏகாதிகாரணத்தில் ஏக காலத்தில் விரோதமிருத்தலால் ஓர் வாக்கியத்தினால் உபய வடிவமாகப் போதம் பொருந்தாமையின் இந்த வாக்கியம் குண விதிபர மன்றும். மற்றோ கர்ம நாமதேயமாம். எனப்பிரமாண லக்ஷணத்தில் நிச்சயிக்கப் பட்டுளது. தயிரைவிதிக்கும் வாக்கியத்தின் கண்ணே உத்பத்தி வாக்கியத்தால் சித்தித்தஹோமத்தை அநுவாதஞ்செய்து தயிரை விதித்த லாலும் சமயோக பிருதக்தன்மையாலும் (அதாவது வாக்கியபேத மிருத்த லாலும்) ஆண்டு விருத்தத்திரிகத்துவயத்தின் பிராப்தியின்றும் என உணர்க. எப்படி வாஜபேய விதியில் பூர்பக்ஷத்தின் கண் குண விதியால் விருத்தத்திரிகத்துவயத்தின் பிராப்தியாமோ அப்படி ஈண்டும் வித்தையின் விதியின் கண்ணும் அஃது பிராப்தியாம். ஆதலால் வேதாந்த வாக்கியத்தின் கண் விதியின்றும் என்பது பொருள்.

## அவதாரிகை

அவ்விருத்தத்திரிகத்துவயம் யாது? என்னுஞ் ஜிக்ஞாசையுண்டாக கூறுகின்றார்:—

## சுலோகம்

उद्दिश्यमानत्वमनूद्यमानभावः प्रधानत्वमितीदमेकम् ।
तथाप्युपादेयविधेयशेषभावप्रभेदं त्रिकमन्यदत्र ॥ ४५७ ॥

## பதவுரை

**उद्दिश्यमानत्वम्**—உத்தேசிக்கப்படுந்தன்மையும்
**अनूद्यमानभावः**—அநுவாதிக்கப்படுந்தன்மையும்
**प्रधानत्वम्**—சேஷித்தன்மையும்
**इति**—என இந்தப்பிரகாரம்

**इदम् एकम्**—இது ஓர் திரிகமாம்

**तथा अत्र**- அப்படியே ஈண்டு

**उपादेयविधेय-शेषभावप्रभेदम्** உபாதேயத் தன்மையும், விதேயத் தன்மையும் சேஷத்தன்மையுமாகிய இவற்றின் விசேஷத்தினையுடையது.

**अन्यत् अपि त्रिकम्**—மற்றோர் திரிகமாம்.

## விசேஷவுரை

உத்தேசிக்கப்படுந் தன்மையாவது ஒன்றை விதித்தற்குச் சித்தித்ததைப் போன்று நிர்த்தேசிக்கப்படுந் தன்மையாம். அநுபாதேயத் தன்மையென்பது பொருள். முன்னறியப்பட்டதனை, பின்னர் சொல்வது அநுவாதமாம். அதன் விஷயம் அநுவதிக்கப்படுந் தன்மையாம். சேஷித் தன்மையாவது அங்கித் தன்மையாம். உபாதேயத்தன்மையாவது அநுஷ்டிக்க யோக்கியமாந் தன்மையால் நிர்த்தேசிக்கப்படுந்தன்மை. விதேயத் தன்மையாவது அக்ஞாதமாயிருந்து அறிவிக்கப்படுந் தன்மையாம். சேஷத் தன்மையாவது குணபூதமாயிருக்குந் தன்மை. அங்கத் தன்மையென்பது பொருள். சுலோகத்திலுள்ள பாவ(தன்மை) சப்தத்திற்கு உபாதேயம் முதலிய ஒவ்வொன்றோடும் சம்பந்தமாம். ஈண்டு என்பது திரிகத்துவய சமுதாயமாம். இதனை மற்றோர் திரிகம் என்பதனோடொட்டுக. ஞான விதியின் கண்ணும் வாஜபேய குணவிதியின் கண்ணும் உத்தேசிக்கப்படுந்தன்மையும், அநுவதிக்கப்படுந்தன்மையும், பிரதானத்தன்மையும், என்றிவ்வாறு ஓர் திரிகம் உளது. அப்படியே அதனின் விருத்தமான உபாதேயத்தன்மையும் விதேயத்தன்மையும் சேஷத்தன்மையும் என மற்றோர் திரிகமுளது, எனபது பொருள். (457)

## அவதாரிகை

அற்றேல், வாஜபேயாதிகரணத்தின் பூர்வபக்ஷத்தைப்போன்று, 'आत्मा वाऽरे द्रष्टव्यः' 'மைத்ரேயி! ஆன்மா தரிசிக்கத்தக்கது' என்பதன்கண் குணவிதி கேட்கப்படாமையால் விருத்தத்திரிகத்துவயத்தின் பிராப்தி எவ்வாறும்? அஃது (பிராப்தி) வாஜபேயத்தைப்போன்று பகுதிப்பொருளிலா? அல்லது வேறிடத்திலா? என்பதும் அறியப்படவில்லை. என்னும் சங்கைக்கு வாஸ்தவந்தான். பிரகிருதத்தில் குண

விதியின் அதீனமாக விலக்ஷணத்தன்மை (விருத்தத்திரிகத்துவயப் பிராப்தி)யின்றும். மற்றொரு வேறு பிரகாரத்தாலாம். அஃதெப்படி யெனின், ஞானவிதியை யங்கீகரிக்கும் புருடனுக்கு வாக்கியத்தினு லுண்டாய அவ்விதேய ஞானத்தினாலேயே பிரம்மத்தின் சித்தி யங்கீகாரமா அல்லது வேறு ஞானத்தினலா? வேறு ஞானத்தாலோ சம்பவிக்கிறதில்லை. பிரம்மத்திற்குப் பிரத்தியக்ஷாதிப் பிரமாண யோக்கியத்தன்மையின்மையின். வாக்கியாந்தர ஜன்னிய ஞானத் தாலுஞ் சம்பவிக்கின்றதில்லை. அதற்கும் லிங் முதலிய விகுதி உளதாயின் பிரகிருத வாக்கியத்தோடு சமத்தன்மையாம் ஆதலின். வாக்கியாந்தரத்தின்கண் லிங முதலிய விகுதியிலதாயின் அப்போது வேதாந்தங்களுக்குப்பிரயமாணிஷ்டத்தன்மை சித்தித்ததேயாகும். அதனால் பிரயோஜனத்தின் அடைவு உண்டாம். ஆதலின் ஞானவிதியினாற் பயனின்றாம், ஆதலால் வாக்கிய ஜன்னிய யாதொரு ஞானம் விதிக்கத் தக்கதாமோ அதனாலேயே பிரம்மத்தின் சித்தி சொலத்தக்கது. அவ்வாறு கூறுமிடத்துக் கூறிய "வைரூப்பியத்தின்[1] பிராப்தியாம் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார் :—

### சுலோகம்

**एकेन वाक्येन धियो विधानं प्रत्यक्प्रमित्सा च यदि प्रतीचि ।**
**त्रिकद्वयं तत्र विरुद्धमेतत् प्रसज्यते कष्टमतः किमन्यत् ॥ ४५८ ॥**

### பதவுரை

**एकेन वाक्येन**-ஆன்மா தெரிசிக்கத்தக்கது என்னும் ஒரே வாக்கியத்தினாலேயே

**धियः विधानम्** -ஆன்ம ஞானத்தின் விதியும்

**प्रत्यक्प्रमित्सा च**-பிரத்தியகான்மாவின் சொரூபத்தையறியும் வேட்கையும் அதாவது அறிய விரும்பிய பிரத்தியகான்மாவின் சித்தியும்

**यदि (भवेत्)**-ஆகுமாயின்

**तत्र**-அப்போது

**प्रतीचि**-பிரத்தியகான்மாவின் கண்ணே

**एतत् विरुद्धम् त्रिकद्वयम्** -பரஸ்பர விருத்தமான திரிகத்துவயம்

1. வைரூப்பியம்-விருத்தத்திரிகத்துவயம்.

**प्रसज्यते**–பிராப்தியாகின்றது
**अतः**–இதைப்பார்க்கிலும்
**अन्यत् कष्टम्** –வேறு கஷ்டம் அதாவது அநிஷ்டம்
**किम्** –என்னவிருக்கின்றது (458)

## அவதாரிகை

அற்றேல், விதேய ஞானம் பிரம்மத்தின் சாதகமாமென்னும் பக்ஷத்தில் பிரத்தியகான்மாவின்கண் எந்தத்திரிகம் எவ்வாறு பிராப்தியாகின்றது? என்னும் அபேக்ஷையுண்டாகும்போது பிரித்து அவ்விரண்டு திரிகத்தின் பிராப்தியினைத் தெரிசிப்பிக்கின்றார் :—

## சுலோகம்

**उद्दिश्यमानं तदनूद्यमानभूतं प्रधानं च धियो विधाने ।**
**प्रमीयमाणं पुनरात्मवस्तु तदास्पदं स्यादितरत्रिकस्य ।। ४५९ ।।**

## பதவுரை

**धियः विधाने**–ஆன்ம ஞானத்தின் விதியையங்கீகரிக்கின்
**तत्** –ஆன்மவஸ்து
**उद्दिश्यमानम्** –உத்தேசிக்கப்படுகின்றதாயும்
**अनूद्यमानभूतम्** –அநுவதிக்கப்படுகின்றதாயும்
**प्रधानम् च**–பிரதானமாயுமாகின்றது. (இந்தப்பிரகாரம் பிரத்தியகான்மாவின்கண் ஓர் திரிகம் பிராப்தியாமென்பது பொருள்).
[மற்றோர் திரிகத்தின் பிராப்தியினைக் கூறுகின்றார்].
**तत् आत्मवस्तु**–அவ்வான்ம வஸ்துவே
**पुनः प्रमीयमाणम्** –விதேய ஞானத்தால் சாதிக்கப்படுகின்றது எனின அப்போது
**इतरत्रिकस्य**–(உபாதேயத்தன்மை, விதேயத்தன்மை, சேஷத்தன்மைவடிவ) மற்றோர் திரிகத்திற்கு
**आस्पदम् स्यात्** –ஆசிரயமாகும்

## விசேஷவுரை

இது கூறப்பட்டதாகின்றது :— முமுக்ஷுவால் விரும்பப்பட்ட பிரத்தியக் பிரம்மவடிவ மோக்ஷத்தினையுத்தேசித்து '**मुमुक्षुः आत्मानं**

**जानीयात्**' 'முமுக்ஷு ஆன்மாவை யறிக'என ஞானவிதியை யங்கீகரிக்கின் மோக்ஷவடிவ பிரம்மத்திற்கு சித்தித்ததுபோன்ற நிர்த்தேசியத் தன்மை வடிவ உத்தேசியத்தன்மை சித்தித்ததாகின்றது. அதுவும் முன்பு அறியப்படாததன்கண் சம்பவிக்கின்றதில்லை. ஆதலின் அதன் அநுவாத பூர்வகமாகவே கூறத்தக்கது. ஆதலின் அதற்கு அநுவதிக்கப் படுந்தன்மையாகும். இந்தப்பிரகாரம் உத்தேசிக்கப்படுகின்றதற்குப் பிரயோஜனத்தன்மையுண்மையால் பிரதானத்தன்மையுமாம். இவ்வாறு ஓர் திரிகமுளது. அப்படியே பிரம்மத்திற்கு விதேய ஞானத்தின் பிரமேயத்தன்மையினையங்கீகரிக்கின் உத்தேசியத்தன்மையின் விருத்த மான உபாதேயத்தன்மையும் அதாவது பிரமிதி ஜன்னிய பயனையுடைய தாந்தன்மையால் அநுஷ்டேயத்தன்மையும் அப்படியே முன்னர் அறியப் படாததற்கே பிரமேயத்தன்மையுண்மையால் அதற்கு அநுவாதத் தன்மையினும் விருத்தமான அஞ்ஞாததத்தன்மையும் இந்தப்பிரகாரம் அதற்குப் பிரதானத்தன்மையினும் விருத்தமான விதேய ஞானக் கிரியையின் விசேஷணத்தன்மையால் அப்பிரதானத்தன்மையும் ஆம். இவ்வாறு முமுக்ஷுவால் விரும்பப்பட்ட மோக்ஷத்தையுத்தேசித்து ஞான விதியினையங்கீகரிக்கின் பிரமத்தின்கண் வைரூப்பியம் அதாவது விருத்தத்திரிகத்துவயம் பிராப்தியாகின்றது என்பது பொருள். (459)

## அவதாரிகை

இப்போது திருஷ்டாந்தத்தின் கண்ணும் பரஸ்பரம் விருத்தமான திரிகத்துவயத்தினைப் பிரித்துத் தெரிவிக்கின்றார் :—

## சுலோகம்

**प्रथमत्रिकं यजिनिगद्यगतं गुणसंगतेरवगमे भवति ।**
**चरमत्रिकं यजिनिगद्यगतं फलसंगतेरवगमे तु पुनः ॥ ४६० ॥**

## பதவுரை

**गुणसंगतेः अवगमे**—வாஜபேயத்தால் ஸ்வாராஜ்யகாமன் யஜிக்குக என்னுமிடத்து பூர்வபக்ஷத்தில் யஜி என்னும் பகுதியின் பொருளான யாகத்தினை யுத்தேசித்து வாஜபேயமாகிய குணத்தின் சம்பந்தவிதியினையங்கீகரிக்கின்

**प्रथमत्रिकम्** –உத்தேசியத்தன்மை, அநுவாத்தியத்தன்மை பிரதானத்தன்மை வடிவ முதல் மூன்று திரிகமும்
**यजिनिगद्यगतम्** –யாகத்தின்கண்
**भवति**–பிராப்தமாகின்றது
**फलसंगतेः अवगमे तु**–ஸ்வாராஜ்யவடிவ பயனையுத்தேசித்து யாக விதியினையங்கீகரிக்கின்ற
**पुनः चरमत्रिकम्** –உபாதேயத்தன்மை, விதேயத்தன்மை, சேஷத் தன்மைவடிவ பின் மூன்று திரிகமும்
**यजिनिगद्यगतम्** –யாகத்தின் கண்ணே
**(भवति)**–(பிராப்தமாகின்றது)
**यजिनिगद्यः-यागः, गतम् – तत्सम्बन्धि** (460)

## அவதாரிகை

அற்றேல், பலத்தைக் குறித்து யாகத்திற்குச் சாதனத்தன்மையும் குணத்தைக் குறித்துச் சாத்தியத்தன்மையுமாம். வெவ்வேறால் நிரூபிக் கப்பட்ட அவைகட்கு ஒன்றன்கண் விரோதமின்றாம். தண்டசாத்திய கடத்தால் ஜலத்தைக் கொண்டுவாவென்று வியவகரிக்கப்படுகின்றதில்லை யென்பதில்லை. இக்காரணத்தாலேயே பலத்தைக் குறித்து உபாதேயத் தன்மையும் பலசாதனத்தன்மையால் (அஞ்)ஞாதத்தன்மை வடிவ விதேயத்தன்மையும் குணத்தைக் குறித்து உத்தேசியத்தன்மை அநுவாத்தியத் தன்மைகளோடு விரோதமாகின்றதில்லை, என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார் :—

## சுலோகம்

**सकृदुच्चरन्यजतिरेष गुणं न फलं च संगमयितुं क्षमते ।**
**कथितत्रिकद्वयविरोधवशाद्यजिवस्तुनीति ननु नीतिविदः ॥ ४६१ ॥**

## பதவுரை

**सकृत् उच्चरन्** –ஓர் தடவை உச்சரிக்கப்படுகின்ற அதாவது கேட்கப்படுகின்ற
**एषः यजतिः**–யஜிக்குக என்னும் சப்தமானது
**यजिवस्तुनि**–யாகத்தின் சொரூபத்தின் கண்
**गुणम् फलम् च**–குணத்தையும் பலத்தையும் அதாவது சாதனத் தன்மையினையும் சாத்தியத்தன்மையினையும்

**संगमयितुम्** -சம்பந்தமுடையதாக அறிவித்தற்கு

**न क्षमते**–ஆற்றலுடையதன்றும், (எதனாலெனின்)

**कथितत्रिकद्वयविरोधवशात्** -முற்கூறப்பட்ட பரஸ்பரம் விருத்தமான திரிகத்துவயம் பிராப்தியாதலின்

**इति ननु नीतिविदः**-என்று நீதியினையுணர்ந்த பெரியோர் கூறுகின்றனர்

## *விசேஷவுரை*

ஓர் தடவை கேட்கப்பட்ட யஜதி சப்தமானது ஒரே தடவை யாகத்தைப் பிரகாசிப்பிக்கும். "யாகத்தால் ஸ்வாராஜ்யத்தைச் சம்பாதிக்குக" என கரணத்துவ விசிஷ்டத்தன்மையால் யாகத்தைப் போதிக்குமாயின் அப்போது கரணவடிவ அவ்யாகத்தோடு குணத்திற்குக் கரணத்தன்மையால் அந்நுவயம் சம்பவியாமையின் அதன் பொருட்டு அதாவது குணத்திற்குக் கரணத்தன்மையால் அந்நுவயம் சம்பவிக்கும் பொருட்டு அப்போதே அதனை அதாவது யாகத்தை சாத்தியத்தன்மையாலும் போதிக்கின்றது எனக் கூறுதல் வேண்டும். அன்றேல் ஆகாங்க்ஷை யோக்கியதைகள் சம்பவியாமற்போமாதலின். கரணத்தன்மையோ அப்போது சித்தித்த சத்தையினையுடைய வஸ்துவினதே தர்மம். சாத்தியத்தன்மையோ அப்போது சித்திக்காத சத்தையினையுடைய வஸ்துவினதே தர்மம். இவ்வாறு சாதனத்தன்மையும் சாத்தியத்தன்மையும் அந்நியத்தால் நிரூபிக்கப்பட்டவைகளாயினும் ஒரே காலத்திற் சம்பவியாமையின் அவைகட்குச் சொரூபத்தாலும் பிரதீதியாலும் விரோதமேயாம். முன், பின் என்னும் சப்தமின்மையின் குணபலனகளின் சமீபத்திலுச்சரிக்கப்பட்ட யாகசப்தத்தால் அதன் சாத்தியத்துவ சாதனத்துவ விசிஷ்டங்களுக்கு அபேதம் பிரதீதியாதலின் அவைகட்கும (பிரதீதிகட்கும்) ஏககாலத்தன்மை கூறவேண்டியிருத்தலின். தண்ட சாத்திய என்று கூறப்பட்ட திருஷ்டாந்தத்தின் கண்ணும விசிஷ்டங்களுக்கு விரோதமேயாம். இந்தப்பிரகாரம் சித்தவஸ்துவினதும் அசித்தவஸ்துவினதும் தர்மங்களான உபாதேயத்தன்மை உத்தேசியத்தன்மைகளுக்கும் ஓர் காலத்தில் விரோதமேயாம். அப்படியே விதேயத்தன்மை அநுவாதத்தியத்தன்மைகளுக்கும் ஓர் காலத்தில் விரோதமாம். ஆதலின யாகசப்தத்தால் ஓர் தடவை பிரகாசிப்பிக்கப்பட்ட யாகத்தின்கண்ணே வர்ணிக்கப்பட்ட திரிகத்துவயமானது அந்நுவயமாதற்கு யோக்கியமன்றும்,

அற்றேல் கரணத்துவாதி மூன்றனது விசிஷ்டவிஷயகப் பிரதீதி அந்நியமாம். சாத்தியத்துவாதி மூன்றன் விசிஷ்டவிஷயகப் பிரதீதி அந்நியமாம எனின அற்றன்று ஓர் தடவை கேட்கப்பட்ட யாகசப்தத் தால் விலக்ஷணப் பிரதீதி பொருந்தாமையின். விலக்ஷணத் தன்மையின் கண் சாஸ்திரத்திற்குப் பிரவேசமின்மையின் ஆதலால் "ஸ்வாராஜ்ய காமன் யஜிக்குக" "வாஜபேயத்தால் யஜிக்குக" என்று யாகத்தின் ஆவிருத்தியினுல் பிரதீதித்துவயங்களையங்கீகரிக்கின் வாக்கிய பேதவடிவ தோஷமுண்டாம். அஃது ஏகவாக்கியத்தன்மை சம்பவிக்கும்போது பொருத்தமன்றும். ஆதலால் வாஜபேயத்தால் என்பது குணவிதி யன்ரும. மற்ருே கர்ம வாசகமாம். எனப்பூர்வ காண்டத்தின்கண் நிச்சயிக்கப்பட்டுள்ளது. அவ்விது நீதியினையுணர்ந்தவர் கூறுகின்றனர் என்பதனுல் தெரிசிப்பிக்கப்பட்டது. (461)

## அவதாரிகை

எப்படி வாஜபேயத்தின்கணணே வைருப்பியப் பிராப்தியினுல் குணவிதி சம்பவிககினறதில்லையோ அப்படி ஆன்ம ஞானத்தின் கண்ணும் வைருப்பியப் பிராப்திவடிவ தோஷத்தாலேயே விதி சம்பவிக் கின்றதில்லை என்று கூறப்பட்டதனை முடிக்கின்ருர் :—

## சுலோகம்

**इति वाजपेयगतनीतिवशादपि नाऽऽत्मवस्तुविषयात्रगतौ ।**
**विधिरस्ति तेन विधिशून्यतया परमात्मवस्तुविषयोपनिषत् ॥ ४६२ ॥**

## பதவுரை

**इति**–இந்தப்பிரகாரம்

**वाजपेयगतनीति वशादपि**–வாஜபேய வாக்கியப்பிரவிருத்தியின் பர்யாலோசனையினுலும்

**आत्मवस्तुविषयात्रगतौ**–ஆன்ம ஞானத்தின்கண

**विधिः न अस्ति**–விதியின்ரும்

[விதியின் அசம்பவபலனைக் கூறுகின்ருர்.]

**तेन**–விதிசம்பவியாமையால்

**उपनिषत्**–வேதாந்த வாக்கியமானது

**विधिशून्यतया**–விதியில்லாமலே

**परमात्मवस्तुविषया**-ஸ்வதஃ சித்தபரமாத்ம வஸ்துவை விஷயஞ் செய்வதாகும் (462)

## சகுணவாக்கியங்களுக்கு பிரம்மத்தில் சமன்வயம்.

### அவதாரிகை

இந்தப் பிரகாரம் நிர்க்குண வாக்கியங்களுக்கு விதிசூன்யமும் ஸ்வப்பிரதானமுமான பிரம்மத்தின்கண் சமன்வயம் நிருபிக்கப்பட்டது. இப்போது "सर्वं खल्विदं ब्रह्म" "ஈதனைத்தும் பிரம்மமே" என்பது முதலிய சகுண வாக்கியங்களுக்கும் நிர்க்குணப் பிரம்மத்தின்கண் சமன்வயத்தில் தாத்பரியம் உளதேயாம். வாஸ்தவமாக நிர்க்குணப் பிரம்மமே மாயையால் குணமுடைமையாந்தன்மையால் பிரதீதியாதலின் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

### சுலோகம்

**सगुणवाक्यमपीह समन्वितं भवति निर्गुणवस्तुनि सर्वशः ।**
**न खलु निर्गुणवस्तुसमन्वयं न सहते सगुणस्य समन्वयः ॥ ४६३ ॥**

### பதவுரை

**इह**–வேதாந்த சாஸ்திரத்தின்கண்

**सर्वशः सगुणवाक्यम् अपि**–சகுணப் பிரம்ம விஷயக எல்லா வாக்கியமுமே

**निर्गुणवस्तुनि**-நிர்க்குணப்பிரம்மத்தின்கண்

**समन्वितम् भवति**–சமன்வயமுடையதாகின்றது அதாவது தாற்பரிய முடையதாகின்றது

[ அற்றேல் சகுணவிஷயக வாக்கியத்திற்கு நிர்க்குணப் பிரம்மத்தின்கண் தாற்பரியம் விருத்தமாம் என்னும் சங்கைக்கு இனிக்கூறப்படும் பிரகாரத்தால் விரோதமின்றாம் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார். ]

**सगुणस्य समन्वयः**–சகுணத்தைப்பிரதிபாதிக்கும் வாக்கியம்

**निर्गुणवस्तुसमन्वयम्**–நிர்க்குணப் பிரம்ம விஷயக தாற்பரியத்தினை

**न सहते इति न खलु**–சகிக்கின்றது இல்லையென்பது இல்லை மற்றோ சகிக்கின்றதேயாம் (463)

### அவதாரிகை

அற்றேல், சகுணவஸ்து வாஸ்தவமாக நிர்க்குணவஸ்து எப்படியாம்? எதனால் சகுணவாக்கியத்திற்கு சகுணத்தின்கண் தாற்பரியமுள

தாயவழி நிர்க்குணத்தின் கண்ணும் தாற்பரியமுளதாகும். என்னும் சங்கைக்கு நிர்க்குணத்தின்கண் குணத்தின் சம்சர்க்கம் அத்தியஸ்தமா யிருத்தலால் அதனதிஷ்டானத்திற்கு அப்போதும் அதாவது குண மிருக்கும் காலத்திலும் நிர்க்குணத்தன்மை நீங்காமையின் என்னுமபிப் பிராயத்தால் கூறுகின்றார்:—

சுலோகம்

सत्यासत्यवपुस्तथा हि सगुणं ब्रह्मास्य विद्या तथा
तद्वत्तद्विषयस्य वेदवचसस्तात्पर्यमेवंविधम् ।
तेनात्रान्तरमस्य वेदवचसस्तात्पर्यमन्यादृशं
चान्यन्निर्गुणवस्तुतत्त्वविषयं संकीर्त्यते भागशः ॥ ४६४ ॥

பதவுரை

**तथा हि**-அஃதெப்படியெனின். அதாவது சகுணமாக்கம் நிர்குண தாற்பரியத்தைச் சகிக்கின்றதில்லை யென்பதில்லை என்று கூறியது எப்படி யெனின்

**सगुणं ब्रह्म**-யாதொரு சகுணப் பிருமமுண்டோ அது

**सत्यासत्यवपुः**-சொரூபத்தால் சத்திய வடிவமும் காரணகாரிய உபாதி வசத்தால் அசத்திய வடிவமுமாகின்றது

**अस्य विद्या**-அதனை விஷயஞ் செய்யும் ஞானமும்

**तथा**-அப்படியே சத்தியமுமசத்தியமுமான சொரூபமுடையதாம் சத்தியத்தினையுமசத்தியத்தினையும் விஷயஞ் செய்வது என்பது பொருள்

**तद्वत्**-ஞானம் போன்று

**तद्विषयस्य**-சகுணபிரம்ம விஷயக

**वेदवचसः**-வேதவாக்கியத்தின்

**तात्पर्यम्**-தாற்பரியமும்

**एवंविधम्**-சகுண நிர்க்குண விஷயகமாம்

சகுண ஞானத்திற்கு இரண்டையும் விஷயஞ் செய்யுந்தன்மை யுண்மையின் அதனையுண்டுபண்ணும் சாமர்த்திய வடிவ அவ்வாக்கியத்தின் தாற்பரியமும் அவ்வாறேயாமென்பது பொருள்.

[அற்றேல், ஒரே வாக்கியத்திற்கு இவ்வாறு தாற்பரிய பேதத்தை யங்கீகரித்தல் பொருத்தமன்றும், வாக்கியபேதம் பிராப்தியாதலால்

என்று ஆசங்கித்து சகுண விஷயக தாற்பரியம் ஒன்றே விஷய உபாதியால் பேதமுடையதாகின்றது. அவற்றுள்ளும் குணப்சத்தில் கற்பிதத் தன்மையுண்மையாலும் பரமபுருஷார்த்தத்தன்மை இன்மையாலும் அவாந்தர தாற்பரியமாம். பிரம்மாம்சத்திலோ பரமபுருஷார்த்த சாதனைத் தன்மையாலும் சத்தியவிஷயகத்தன்மையாலும் பரமதாத்பரியமாம். ஆதலின் தாற்பரியத்திற்குச் சொரூபமாகப்பேதமின்றும். அஃது இரண்டிடத்தும் சமமமன்றும் ஆதலால் வாக்கிய பேதமின்றும். என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார் ]

**तेन**–அதனால் அதாவது சத்தியாசத்திய விஷயகத்தன்மையால்
**अस्य वेदवचसः**–சகுணப்பிரம்ம விஷயக இந்த வேதவாக்கியத்திற்கு
**अवान्तरम् तात्पर्यम्**–குணப்சத்தில் அவாந்தரமெனப் பெயரிய தாற்பரியமானது
**अन्यादृशम्**– நிர்க்குணவாக்கியதாற்பரியத்தினும் விலக்ஷணமாம்
**निर्गुणवस्तुतत्त्वविषयम् च** – நிர்க்குணப்பிரம்ம விஷயக தாற்பரியமோ
**अन्यत्**–விலக்ஷணமாம் அதாவது பரமார்த்த ஏகரச வஸ்து விஷயகமாம்
**भागशः**–இவ்வாறு பின்ன விஷயப்பிரயுக்த பேதத்தால்
**संकीर्त्यते**–சுருதியாதிகளில் பிரதிபாதிக்கப்படுகின்றது (464)

## அவதாரிகை

சகுணவாக்கியந்தாலுண்டாகிய ஞானம் பிரம்மத்தின்கண் குண சம்பந்தத்தினையும் நிர்க்குணப்பிரம்மத்தினையும் விஷயஞ்செய்கின்றது என்னும் இதனை லௌகிக பிராந்திதிருஷ்டாந்தத்தினால் கூறுகின்றார்:—

## சுலோகம்

रूप्यज्ञानं रजतमिदमित्येवमुत्पद्यमानं
सत्यासत्यं विषयमपृथग्दर्शयत्येकमेव ।
तद्वन्मानं सगुणविषयं सत्यमिथ्यावभासं
संसृष्टार्थद्वयमिति दृढं दर्शयत्येकमेतत् ॥ ४६५ ॥

## பதவுரை

**इदम् रजतम् इति**–இஃது வெள்ளியாம் என

**एवम् उत्पद्यमानम्**–இவ்வாறுண்டாகாநின்ற
**रूप्यज्ञानम् एकम् एव**–வெள்ளிஞானம் ஒன்றே
**अपृथक्**-கற்பித அபேதமுடையதும
**सत्यासत्यम्**–உண்மையின்மை வடிவினதும் ஆன
**विषयम्**–விஷயத்தினை
**दर्शयति**- தரிசிப்பிக்கின்றது

தார்ஷ்டாந்தத்தினைக்கூறுகின்றார்.

**तद्वत्**–வெள்ளி ஞானம் போன்று
**सगुणविषयम्**–சகுணப்பிரம்ம விஷயகமான
**एतत् एकम् मानम्**–பிரமாணவடிவ இவ்வாக்கியமொன்றே
**सत्यमिथ्यावभासम्**–சத்தியவஸ்துவினையும் மித்தியாவஸ்துவினையும் விளக்குவதாகி
**संसृष्टार्थद्वयम्**-பரஸ்பரம் சம்பந்தமுற்ற இரு பொருளினை
**दृढम्**–சம்சயமில்லாமல்
**दर्शयति इति**–தரிசிப்பிக்கின்றது என்க

### *விசேஷவுரை*

பரஸ்பரம் சம்பந்தமுற்ற என்பதனால் தனித்தனி அவைகளின் விளக்கமாமோ என்னும் சம்சயம் நிவர்த்திக்கப்பட்டது. 'என்க' என்பது தார்ஷ்டாந்தத்தின் உபசம்மாரத்தின் பொருட்டாம் (465)

## *வேத தாத்பர்ய ஸ்வரூபநிருபணம்*

### *அவதாரிகை*

இந்தப் பிரகாரம் சகுண நிர்க்குணப்பிரம்ம விஷயகமான வேதாந்த வாக்கியங்களுக்கு நிர்க்குணப் பிரம்மத்தின்கண் தாற்பரியமாமென்று உபபாதனம் செய்யப்பட்டது.

அற்றேல் உமது மதத்தில் வேதத்திற்குத் தாற்பரியமே சித்திக்கின்றதில்லை. சப்தத்தின்கண் தாத்பரியமாவது அதன் பிரதீதி இச்சையினால் உச்சரிக்கப்பட்டதன்மையாம். அஃது அபௌருஷேய வேதத்தின்கண் சம்பவிக்கின்றதில்லை. என்னும் சங்கைக்கு அதன்கண் தாற்பரிய சொரூபத்தினைக்கூறுகின்றார்;—

## சுலோகம்

तद्बुद्धिमात्रफलतैव च तत्परत्वं वेदान्ततत्रादिसमये न तु शेषभावः ।
शेषत्वमक्षरकलापगतापिमात्रं प्रत्येत्र नाध्ययनमर्थधियो विशेषः ॥

## பதவுரை

तद्बुद्धिमात्रफलता एव – (சப்தத்திற்கு எப்பொருளின்கண் தாற்பரியம் சம்மதமோ) அப்பொருளின் ஞானமாத்திரானுகூல சக்தியே

तत्परत्वम्–ஆண்டு தாற்பரியமாம்

இதுவே சப்தத்தின் தாற்பரியமாம் வக்தாவின் இச்சையோவன்றும். வேதத்தின்கண் அஃதின்மையின் லௌகிக வாக்கியத்தின் கண்ணும் அதன்கண்ணுள்ள சக்தி விசேஷத்திற்கே அதன் தாற்பரியத்தன்மை சம்பவிக்கும்போது பின்ன அதிகரணத்திலுள்ள அதாவது புருஷனிடத்துள்ள இச்சைக்கு அதனைத் (தாற்பரியத்தன்மையை) கற்பித்தல் பொருந்தாமையின் இச்சையால் உச்சரிக்கப்பட்ட தன்மைக்கும் சாபேக்ஷதன்மையுண்மையால் நிரபேக்ஷசக்தி விசேஷத்திற்கே அஃது (தாற்பரியத்தன்மை) உசிதமாதலின். லௌகிக வாக்கியத்தின்கண் வக்தாவின் இச்சை தாற்பரியக்கிராககத்தன்மையால் அபேக்ஷிக்கப்பட்டது என உன்மத்தாதி வாக்கியத்தின்கண்ணும் அதன் பிராப்தியின்றும். ஆதலின் உலகின்கண்ணும் வேதத்தின்கண்ணும் அதன் ஞானமாத்திர அனுகூல சக்தியே தாற்பரியமென்பது பொருள். அர்த்தவாதம் முதலிய வாக்கியங்களுக்கு அதன் அர்த்தப்பிரதீதி வடிவ பயனிருப்பினும் விதி வாக்கியத்தின் கணனேயே தாற்பரியத்தினை யங்கீகரித்தலால் அதன்கண் அதிவியாப்தியினை நீக்கும் பொருட்டு மாத்திரம் எனப்பட்டது. இவ்வாறாகவே அவைகளுக்கு அதன் ஞானமாத்திரம் பயனன்றும். மற்றோ விதிவாக்கியார்த்த ஞானமும் பயனும ஆதலின் ஸ்வார்த்தத்தில் தாற்பரியப் பிராப்தியின்றுமென்பது கருத்து. அல்லது மஹாதாற்பரிய அபிப்பிராயத்தால் மாத்திரபதம் கூறப்பட்டது. ஞானுந்தர[1] அசேஷமாய் பயனுடைய ஞானத்தைப் பயக்குந்தன்மை மஹா தாற்பரியமாம்

1. அசேஷம்- அங்கமாகாமை

தனித்தனி அங்கப்பிரதான வாக்கியத்தின் கண்ணுள்ள அவாந்தர தாற்பரியத்தில் அதிவியாப்தியை நீக்கும் பொருட்டு ஞானந்தர அசேஷம் எனப்பட்டது. அங்கப்பிரதான வாக்கியங்களின் ஏகவாக்கிய வடிவ மகாவாக்கியத்திற்கே மஹாதாற்பரியம் உளது. அஃது கூறிய வடிவமே யாமாதலின் அசம்பவமின்றும்.

[அற்றேல் அத்தியயன விதிக்கு அர்த்தஞானம் பயனுதலின் வேதத்திற்கு அர்த்த ஞானத்தின் சேஷத்தன்மையே அர்த்தத்தில் தாற்பரியமாம். என்று ஜைமினிமதத்தை யநுசரித்தவரால் அங்கீகரிக்கப் பட்டுள்ளது. இந்தப்பிரகாரம் உம்மாலும் அதுவே ஏனங்கீகரிக்கப் படுவதில்லை என்னும் சங்கைக்குக் கூறுகின்றூர்.]

**वेदान्तवादिसमये**-வேதாந்தங்களுக்குப் பிராமாண்யத்தைக்கூறும் சுபாவமுடையவரது சித்தாந்தத்தின்கண

**न तु शेषभावः**-அர்த்த ஞானத்தின் அங்கத்தன்மை தாற்பரிய மன்றும்

[ஏதனுலின்றெனின் கூறுகின்றூர்]

**शेषत्वम्**-அத்தியயனத்திலுள்ள அங்கத்தன்மை

**अक्षरकलापगतासिमात्रम् प्रति एव**-அக்ஷரசமுதாயகத பிராப்தி மாத்திரத்தினைக்குறித்தேயாம்

அத்தியயன விதிக்கு சுவாத்தியாயத்தின் பிராப்திமாத்திரம் பயனு தலால் அதனைக் குறிததே அதற்கு அங்கத்தன்மையாம் என்க. அதன் பலததால் வேதத்திற்கு அர்த்தஞானத்தின் அங்கத்தன்மையின்று மென்பது பொருள்.

[குறிததே என்னும் தேற்ற ஏகாரத்தின் வியாவர்த்தியத்தினைக் கூறுகின்றூர்.]

**अध्ययनम्**-வேதத்தின் அத்தியயனம்

**अर्थधियः अपि**-அர்த்தஞானத்திற்கும்

**न शेषा**-அங்கமன்றும் (466)

## அவதாரிகை

அற்றேல் அக்ஷரப் பிராப்திக்குப் புருஷார்த்தத்தன்மையின்மையின் அத்தியயனவிதிக்கு அதன் அங்கத்தன்மை எவ்வாறு? அத்தியயனத் தாலடைவுற்ற அக்ஷரங்களினுல் அர்த்தஞானம் உண்டாகின்றது என்று

சொல்லற்க. அப்படியாயின் அர்த்தஞானத்தின் அங்கத்தன்மையே உசிதமாம் எனின் அற்றன்று பசு அன்னம் முதலியவற்றிற்குப்போன்று பரம்பரையாகப் புருஷார்த்தத்திற்கும் பாவியத்தன்மை சம்பவித்தலால் அத்தியயனத்திற்கு அதன் அங்கத்தன்மையுண்மையின் வாஸ்தவமாக அத்தியயனத்திற்கு அர்த்தஞானம் பயனாயினும் அதற்கு அதனங்கத் தன்மையின்றும் பிரமாணமின்மையின் அர்த்தஞானமே பயனென்று கூறும் வாதியாலும் அத்தியயனத்திற்கு அவ்வாறறியப்பட்ட சுவாத்தியாய சேஷத்தன்மையினைப் பரித்தியாகம் செய்யாமலே அதன் பல சேஷத்தன்மையைக்கூறத் தக்கதாதலினாலும் அதன் பலத்தன்மை அதன் அங்கத்தன்மையால் அவ்வியாப்தமாதலினாலும் என்னுமபிப் பிராயத்தாற் கூறுகின்றார்:—

## சுலோகம்

तच्छेषभावमनपेक्ष्य च तत्फलं स्या-
दाधानवन्न हि तदङ्गमिह क्रतूनाम् ।
अग्न्यङ्गमेव हि तदिष्टमथापि तस्य
सर्वक्रतुष्वधिकृतिः फलमभ्युपेतम् ॥ ४६७ ॥

## பதவுரை

**तच्छेषभावम्** - அத்தியயனமானது அர்த்தஞானத்தின் அங்கத் தன்மையினை

**अनपेक्ष्य**—அபேக்ஷியாமலே அதாவது அடையாமலே

**तत्फलम् स्यात्**--அர்த்த ஞானமாகிற பயனையுடையதாகும்

[அப்பயனையுடையதற்கும் அதன் அனங்கத்தன்மையில் உதாரணத்தைக் கூறுகின்றார்.]

**आधानवत्**—அக்னியினுதானம் போன்று

[திருஷ்டாந்தத்தினை நிஷேதமுகத்தால் விஸ்தரிக்கின்றார்]

**तत्**—ஆதானமானது

**इह क्रतूनाम्**-ஈண்டு தர்சபூர்ணமாசம் முதலிய யாகங்களுக்கு

**अङ्गम् नहि**—அங்கமாகின்றதில்லையாதலின்

யாதொரு காரணத்தால் ஆதானம் தர்சபூர்ணமாசாதி கிரதுப் பிரகரணத்தின்கண் விதிக்கப்படவில்லையோ ஒன்றைக்குறித்துப்படிக்கப்

படார்மையின் [1]பர்ணத்தன்மைபோன்று மன்றும். சுயம் வியாபாரரூப மாதலினலும் அக்னியின் சேஷமாயிருத்தலினலும். அங்காரணத்தால் தர்சாதிக்கு அங்கமன்றும் மற்றோ

**अग्न्यङ्गमेव हि**-(" அக்னீன் " என்னும் சுருதியினலே அக்னிகளுக்கு அங்கித்தன்மையறியப்படுவதால்) அக்னியினங்கமாகவே

**तत् इष्टम्**-ஆதானம் அங்கீகரிக்கப்பட்டுள்ளது

**अथ अपि**-அப்படியாயினும்

**तस्य**-ஆதானத்திற்கு

**सर्वक्रतुषु**-சர்வயாகங்களிலும்

**अधिकृतिः**-அதிகாரமானது

**फलम् अभ्युपेतम्**-பயனுக அங்கீகரிக்கப்பட்டுள்ளது

## *விசேஷவுரை*

ஆதானத்தின் அதீனமான அக்னியை யாசிரயித்தே உத்தரகிரதுக்களின் சித்தியாம். அக்கினி சகித புருஷரையுத்தேசித்தே தர்சாதியாகம் விதிக்கப்படுதலின் மூன்று வர்ணத்தாருக்கும் அவ்யாகங்களில் அதிகாரமும் அதன் பயனுக மீமாம்சகரால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. ஆதலின் அதன் பயன் அதன் அங்கத்தன்மையால் வியாப்பியமன்றும். எதனல் அத்தியயனத்திற்கும் அர்த்த ஞானததின் அங்கத்தன்மை சம்பவிக்கும், சம்பவியாது என்பது கருத்து. (467)

## *அவதாரிகை*

அப்பொருளின் ஞானமாத்திரானுகூல சக்தியே என 466 வது சுலோகத்தின்கண் தாற்பரிய லக்ஷணத்தில் மாத்திரபதத்தால் வியாவர்த்தியம் அர்த்தவாதாதி வாக்கியமென்று யாதொன்றைக் கூறினேமோ அதன் பொருட்டு அர்த்தவாதாதி வாக்கியத்திற்கு சுவார்த்தத்தில் தாற்பரியாபாவத்தைத் தெரிசிப்பிக்கின்றார்:—

## *சுலோகம்*

**मन्त्रार्थवादगतमध्ययनं तदर्थ-**
**मात्रप्रतीतिफलमित्यपि नाभ्युपेतम् ।**

---

1. பர்ணதா – ஓர் வகை மரததால் செய்யப்பட்ட ஜுஹூ அதாவது அகப்பை விசேஷம்.

ஆதானம்-கட்டைகளைக்கடைந்து அக்கினியெடுத்தல்.

विध्यर्थबुद्धिमनुसृत्य फलावसानां
सा तद्वतीति तदतत्परतोपपत्तिः ॥ ४६८ ॥

## பதவுரை

**मन्त्रार्थवादगतम्** – 'இஷே த்வா' என்பது முதலிய மந்திர விஷயகமும் 'வாயுர்வை க்ஷேபிஷ்டா தேவதா' என்பது முதலிய அர்த்தவாத விஷயகமுமான

**अध्ययनम्**–சுவாத்தியாயமானது

**तदर्थमात्रप्रतीतिफलम् इति अपि**– அம்மந்திராதிகளினது சப்த சக்தியால் பிரதீதியாகின்ற யாதொரு அர்த்த முண்டோ அவ்வர்த்தமாத்திரத்தில் மந்திராதியாலுண்டான யாதொரு பிரதீதி யுண்டோ அதனையே பயனாகவுடையது எனவும்

**न अभ्युपेतम्**–மீமாம்சகர் முதலியோரால் அங்கீகரிக்கப்படவில்லை [எதனாலங்கீகரிக்கப்படவில்லை என்னுமிடத்துக் கூறுகின்றார்]

**फलावसानां**–நேரே பயனிடத்தில் பர்யவசானமுள்ள

**विध्यर्थबुद्धिम्**–கிளையை வெட்டுதல், வாயுதேவதையையுடைய வெள்ளைப்பசுவைக்கொல்லுதல் முதலிய விதி வாக்கியார்த்தத்தின் ஞானத்தினை

**अनुसृत्य**–அநுசரித்து அதாவது அதன்வாயிலாக

**सा**–மந்திராதிகளின் அர்த்தப்பிரதீதி

**तद्वती इति**–பயனுடையதாம் ஆதலால்

**तदतत्परतोपपत्तिः**–அர்த்தவாதாதிக்கு சுவார்த்த பரத்தன்மையின் அபாவம் பொருத்தமாம்

## விசேஷவுரை

மந்திர அர்த்தவாதங்களால் சுவார்த்த விஷயக யாதொரு ஞானம் ஜன்னியமாகின்றதோ அதுவே அதன் பயனும் என ஒருவராலும் அங்கீகரிக்கப்படவில்லை. எதனால் அவைகட்குச் சுவார்த்த பரத்தன்மை சம்பவிக்கும். மற்றோ மந்திரத்திற்கு அநுஷ்டிக்கத்தக்க அர்த்தத்தின் ஸ்மிருதிவாயிலாகவும் அர்த்தவாதத்திற்கு விதேயத்தின் பிராசஸ்திய

ஞான வாயிலாகவும் பலத்தின் பர்யவசானத்தன்மையுளது. ஆதலின் ஆண்டேயவைகட்குத் தாற்பரியமாம் ஆதலின் சுவார்த்தபரத்தன்மை யினபாவப் பொருத்தமுடையதேயாமென்பது கருத்து. (468)

## அவதாரிகை

அற்றேல் அர்த்தவாதம் முதலிய வாக்கியங்களுக்கு சுவார்த்த விஷயகப் பிரதீதியை உண்டுபண்ணுங்காலத்தில் அந்தப்பிரதீதியானது அவற்றின் பயனாக ஏனாகாது. [அதனாலுண்டாயதே அதன் பயனாதலின் ஆதலால் அவைகட்குச் சுவார்த்தத்தின்கண்ணும் தாற்பரியம் சம்பவிக்கும் என்னும் சங்கைக்குக் கூறுகின்றார்:—

## சுலோகம்

**सप्रयोजनकबुद्धिकारणं वाक्यमाहुरिह तत्परं बुधाः ।**
**सप्रयोजनकबुद्धिशेषधीहेतुमन्यपरमाश्रयन्ति च ॥ ४६९ ॥**

## பதவுரை

**इह**—உலகின் கண்ணும் வேதத்தின் கண்ணும்

**सप्रयोजनक बुद्धिकारणम्**—பயனுடைய அர்த்தஞானத்தையுண்டு பண்ணும்

**वाक्यम्**-வாக்கியத்தினை

**तत्परम्**—அதன்கண் (சுவார்த்தத்தில்) தாற்பரியமுடையது என

**बुधाः आहुः**—அறிஞர் கூறுகின்றனர்

சபத ஜன்யப் பிரதீதியானது எதனை விஷயஞ் செய்வதாகிப் பலத்தின்கண் பர்யவசானமாகின்றதோ அந்த சப்தம் அதன்பரமாம். என்பது பொருள். [இந்தப்பிரகாரம் அந்நியபரமான வாக்கியங்களினது சொரூபத்தையும் பண்டிதரது சம்மதப்படி கூறுகின்றார்]

**सप्रयोजनकबुद्धिशेषधीहेतुम्** — பயனுடைய ஞானத்தின் அங்க ஞானத்தினையுண்டு பண்ணும் வாக்கியத்தினை

**अन्यपरम्**- அந்நியத்தின்கண் தாற்பரியமுடையதாம் என

**आश्रयन्ति च**—அறிஞர் அங்கீகரிக்கின்றனர்

## விசேஷவுரை

அர்த்தவாதத்தின் அர்த்த ஞானமானது பிரசஸ்த விதேய ஞான வாயிலாகப் பயனுடையதாகின்றது, இவ்வாறு மந்திரத்தின் அர்த்த

ஞானம் அநுஷ்டிக்கத்தக்க அர்த்தத்தின் ஸ்மிருதி வாயிலாகப் பயனுடையதாகின்றது. இவ்வாறாகவே பயனுடைய ஞானத்தினை குறித்து அங்காரயுள்ள யாதொரு அர்த்தவாதாதி ஜன்னிய ஞான முண்டோ அதனை யுண்டுபண்ணும் வாக்கியமானது அந்நியபரமாம். அதாவது விதேயபரமேயாம். சுவார்த்த பரம் அன்றாம். என்பது பொருள. சகாரம் நிச்சயார்த்தத்தில். எப்பொருளின் கண்ணே வாக்கிய ஜன்னியமாயினும் ஞானமானது புருஷார்த்த ஹேதுவாகின்ற தில்லையோ அவ்வாக்கியம் அதன் பரமாகின்றதில்லை. மற்றோ யாதொரு அந்நியத்தினையாசிரயித்துப் பலத்தின் கண் பர்யவசானமுடையதாமோ அதன் பரமேயா மென்பது பொருள். (469)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் மீமாம்சகரது மதத்தின் கண் அர்த்தவாதாதி மாத்திரத்திற்குச் சுவார்த்தத்தின் கண் தாற்பரிய மின்மையைக்கூறி தனது மதத்தின் கண் பிரமாணாந்தரத்தோடு விரோதமின்றியதும் பிரமாணாந்தரத்தால் சித்திககாததுமான பொருளைப் பிரபாதிக்கும் அர்த்த வாதாதிகட்கு சுவார்த்தத்தின் கண்ணும் அவாந்தர தாற்பரியம் உளது எனக் கூறுகின்றார்.:—

## சுலோகம்

मन्त्रार्थवादवचसामपि गोचरेषु
सौवेष्ववान्तरमुशन्ति च तत्परत्वम् ।
केचित्त्रयीशिरसि खिन्नधियो मुनीन्द्रा-
स्तद्बुद्धियो विधिषु शेषतया निवेशात् ॥ ४७० ॥

## பதவுரை

**त्रयीशिरसि**—வேதாந்தத்தின் கண்
**खिन्नधियः**—பரிசிரம முற்ற மதியுடையரும்
**मुनीन्द्राः**—முனிசிரேஷ்டர்களுமான
**केचित्**-வியாசரது மதத்தை யனுசரித்த சிலர்
**मन्त्रार्थवादवचसाम् अपि**—தேவதையின் விக்ரஹம் முதலிய வற்றினையும் சுவர்க்கம் முதலிய வற்றினையும் பிரதிபாதிக்கின்ற மந்திர அர்த்தவாத வாக்கியங்களுக்கும்

**स्वेषु गोचरेषु**–தமது விஷயங்களில்

**अवान्तरम् तात्पर्यम्**–பயனுடை ஞானத்தின் அங்கஞானமாகிய பயனையுடையதாந்தன்மைவடிவ அவாந்தர தாத்பரியத்தினை

**उशन्ति**–அங்கீகரிக்கின்றனர். (அதுவும் பயனுடை ஞானத்தைப் பயனாகவுடையதாந்தன்மையாமென்பது விவேகமாம்)

[அப்படியானால் மந்திராதிகளுக்கு விதிவாக்கியார்த்தத்தின் கண் தாற்பரியம் ஏன் கற்பிக்கப்படுகின்றது. தாற்பரியத்தைக் கற்பிக்காவிடின் "**विधिना तु एकवाक्यत्वात्**" விதிவாக்கியத்தோடு அர்த்தவாத வாக்கியங்களுக்கு ஏக வாக்கியத்தன்மை யுண்மையால் என்னும் சூத்திரத்தோடு விரோதமும் ஏன் சொல்லப்படுகிறது. என்னுமிடத்துக் கூறுகின்றார்.]

**तद्वत्**–சுவார்த்தத்தில் தாற்பரிய மிருப்பது போன்று

**विधिषु**–விதிவாக்கியங்களிலும் (மந்திர அர்த்தவாத வாக்கியங்களுக்குத்தாற்பரியம் உளது என வருவித்துக் கூட்டுக.)

[எதனாலெனின்]

**धियः**–மந்திராதி ஜன்னிய அதன் அர்த்த ஞானத்திற்கு

**शेषतया**–தியானம் அக்கினிஹோத்திராதி விதேயத்தின் அனுஷ்டானம் ஆகிய இவற்றின் அங்கத்தன்மையால்

**निवेशात्**-பிரவேசமிருத்தலின். இதனானேயே மந்திராதியின் அர்த்த ஞானம் பயனுடையதாம்.

அல்லது.

[மந்திராதிக்குச் சுவார்த்தத்தில் அவாந்தர தாற்பரியமுளது என்பதில் ஏதுவினைக் கூறுகின்றார்.]

**तद्वत् धियः**–மந்திராதி அர்த்த விசிஷ்ட ஞானத்திற்கு என்பது பொருள். அதாவது,

மந்திரார்த்த ஞானத்திற்கும் விதிவாயிலாகப்பயனையுடையதாந் தன்மையுண்மையின் கூறப்பட்ட தாற்பரிய லக்ஷணம் அதன்கண் உளதேயாம். அந்நியவாயிலாக அஃது உளது ஆதலின் விதிதாற்பரியத்தினையபேக்ஷித்து அஃது அவாந்தரமா மென்பது பொருள். தத்தத்திய: என்னும் பாடத்தின்கண் தேவதா விக்கிரஹம் சொர்க்கம் முதலியவற்றின் ஞானத்திற்கு என்று பொருள்.

தேவதாதிகரணத்தின்கண் தேவதைகளுக்கும் பிரம்ம வித்தையி லதிகாரம் கேட்கப்படுவதால் அவர்களுக்கும் மந்திர அர்த்தவாதங்களா லறியப்பட்ட விக்கிரஹாதியை யுடையதாந்தன்மை பாதராயணர் முதலியோரால் அங்கீகரிககப்பட்டுள்ளது. ஆதலின் மந்திராதிக்குச் சுவார்த்தத்தின்கண் அவாந்தரதாற்பரியம் அவருக்குச் சம்மதமாம். பரமதாத்பரியமோ மந்திராதி ஜன்னிய அதன் அர்த்த ஞானத்திற்கு வித்யர்த்தத்தில் அங்கத்தன்மையால் பிரவேசமிருத்தலின் அதன் கண்ணேயாமென்பது கருத்து. (470)

## வேதத்தின் சித்தார்த்த நிஷ்டத்தன்மையில் ஜைமினீய விரோதபரிகாரம்

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் வேதாந்தங்களுக்குச் ஸ்வத:சித்த பிரம்மத்தின் கண் தாற்பரியங்கூறப்பட்டது. சப்தத்தின்கண் தனதபிமதமான தாற்பரியமும் நிரூபிக்கப்பட்டது. இப்போது வேதத்திற்குச் சித்தார்த்த நிஷ்டத்தன்மையின்கண் யாதொரு ஜைமினீய வசன விரோதமுண்டோ அதனைப்பரிகரித்தற்கு முற்கூறிய பொருளை அநுவாதஞ்செய்கின்றார்:—

### சுலோகம்

श्रेयःसाधनता लिङर्थ इति च प्रागुक्तमत्यादरा-
च्छ्रेयःसाधनयागदानहवनाद्यर्थैकनिष्ठं ततः ।
सर्वं कर्मवचो नियोगपरता तस्यापि नाऽलोचने
वक्तव्या किमुतास्य वेदशिरसः सा नेति भूयोऽपि नः ॥

### பதவுரை

**नः**—எமது மதத்தில்
**श्रेयःसाधनता**—இஷ்டசாதனத்தன்மையே
**लिङर्थः इति च**—லிங்விகுதியின் பொருளாமென
**प्राक्**—முன்பு
**अत्यादरात्**—யுக்திபூர்வகம்
**उक्तम्**—உபபாதனஞ் செய்யப்பட்டது
[அதனாற் சித்தித்தது என்னை யெனிற் கூறுகின்றார்.]
**ततः**—இஷ்டசாதனத்தன்மையே லிங்விகுதியின் பொருளாமென்று வியுத்பாதனம் செய்தமையால்

**सर्वम् कर्मवच:**-கர்மவாக்கிய மனைத்துமே

**श्रेय: साधनयागदान हवनाद्यर्थैकनिष्ठम्** } இஷ்டசாதனமான யாகம் தானம் ஹோமம் முதலிய பொருள் மாத்திரத்தின்கண் தாற்பரியமுடையது (என அவசியம் அங்கீகரிக்கத்தக்கது) மாத்திரபதம் நியோகநிஷ்டத்தன்மையின் நிராகரணத்தைச் சூசிப்பிக்கின்றது.

(**नः**)-ஆதலால் எம்மைக்குறித்து

**भूयः अपि**-மறுபடியும்

**तस्य अपि**-கர்மவாக்கியத்திற்கும்

**आलोचने**-அர்த்தத்தை விசாரிக்குங்காலத்தில்

**नियोगपरता**-அபூர்வவடிவ நியோகத்தின்கண் தாற்பரியம்

**न वक्तव्या**-சங்கித்தற்கு யோக்கியமன்றும்

**अस्य वेदशिरसः**-இந்த வேதாந்த வாக்கியத்திற்கு

**सा**-நியோகபரத்தன்மை

**न वक्तव्या इति**-சங்கித்தற்கு யோக்கியமன்றும் என

**किम् उत**-சொலல்வேண்டியதென்னை (471)

## *அவதாரிகை*

அற்றேல் "**आम्नायस्य क्रियार्थत्वादानर्थक्यमतदर्थानाम्**" வேதமானது கிரியையின் பொருட்டாயிருத்தலால் கிரியையின் பரமல்லாத வாக்கியங்களுக்கு வியர்த்தத்தன்மையேயாம் என்பது முதலிய சூத்திரங்களால் சித்தார்த்தத்தைப்போதிக்கும் வேதத்திற்கும் ஜைமினிபகவான் நியோகநிஷ்டத்தன்மையினைக் கூறியுளர். ஆதலின் வேதத்திற்கு நியோகார்த்தத் தன்மையினைசங்கை ஏன் செய்யத்தக்கதின்றாகும் அதாவது செய்யத்தக்கதேயாகும். அன்றியும் வேதாந்தங்களுக்குச் சித்தார்த்தத்தன்மைதான் எப்படி சித்திக்கும். என்னுஞ்சங்கைக்கு ஜைமினியினலுச்சரிக்கப்பட்ட ஆம்நாய (வேத) சப்தம் கர்மபாக மாத்திர பரமாம். அதன் பொருளினையே "அதாதோ தர்மஜிஞ்ஞாசா" என விசாரிக்கத்தக்கதாக அவர் ஆரம்பித்திருத்தலின். ஆண்டும் யாகாதிக் கிரியையே இஷ்டசாதனமாமென்பது அவரது கருத்தாம். அதனினும் அந்நியம் சம்பவியாமையின் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

## *சுலோகம்*

**श्रेयःसाधनयागदानहवनाद्यर्थेषु कार्यात्मसु**
**सर्वं कर्मवचः प्रमाणमिति तु ग्राह्यं वचो जैमिनेः ।**

भाष्यं पश्यत शाबरं स्फुटतरं यो यागमित्यादिकं
श्रेयःसाधनयागमात्रवचनं धर्माभिधानं वदत् ॥ ४७२ ॥

*பதவுரை*

**सर्वम् कर्मवचः**–கர்மவாக்கியமனைத்தும்

**कार्यात्मसु**–கிருதிசாத்தியவடிவ

**श्रेयःसाधनयागदानहवनाद्यर्थेषु** – இஷ்டசாதனயாகாதியர்த்தங்களில்

**प्रमाणम् इति तु**–பிரமாணமாமென்னும் இத்துணையர்த்தத்தின் கண்ணேயே

**जैमिनेः वचः**–ஜைமினிமஹரிஷியின் வாக்கியம்

**ग्राह्यम्**–கொள்ளத்தக்கதாம் சர்வவேதமும் நியோகதத்தின்கண் பிரமாணமாமென அவரது சூத்திரத்திற்குப்பொருள் கொள்ளத்தக்கதன்று என்பது பொருள்.

[அற்றேல் எவ்வலிமையினால் இவ்வாறு அச்சூத்திரத்திற்கு வியாக்கியானஞ் செய்யப்படுகின்றது. என்னுஞ்சங்கைக்கு ஜைமினியாற் கூறப்பட்ட சோதனா சூத்திரத்தின் பிரமேயவடிவ தர்மத்தினை அதன் பாஷ்யகாரரான சபரஸ்வாமியால யாகாதிவடிவமாகக் கூறியிருத்தலாகிய வலிமைகொண்டு இவ்வாறு வியாக்கியானம் செய்யப்படுகின்றது என்னுமபிப்பிராயத்தால கூறுகின்றார்.]

**धर्माभिधानम्**–தர்மசப்தமானது

**श्रेयःसाधनयागमात्रवचनम्**–இஷ்டசாதனயாகமாத்திரத்தின் வாசகமாம் என்று

**वदत्**–பிரதிபாதிக்கின்ற

**यो यागम् इत्यादिकम्**–"यः यागमनुतिष्ठति तं धार्मिकमित्याचक्षते (எவன் யாகத்தை யனுஷ்டிக்கின்றானோ அவனைத்தார்மிகனென்று கூறுகின்றனர்.) என்னும் வடிவினதாகிய

**स्फुटतरम्**–ஸ்பஷ்டார்த்தக

**शाबरम् भाष्यम्**–சாபரபாஷியத்தினை

**पश्यत**–பாருங்கள்

*விசேஷவுரை*

ஜைமினி மஹரிஷியின் வாக்கியமாவது சூத்திரத்தின் கண்ணுள்ள ஆம்னாய சப்தமாம். அற்றேல் ஈண்டு தார்மிகன் என்பதனால் யாக

கர்த்தாவிற்கு நியோக நிஷ்டத்தன்மையே சொல்லப்படுகின்றது தர்ம சப்தம் நியோகவடிவ அபூர்வமாதலால் என்னுஞ்சங்கை தர்மசப்தம் இஷ்டசாதனயாக மாத்திரவாசகமாம் என்பதனால் நிவர்த்திக்கப்பட்டது. யாகத்தையநுஷ்டிப்பவனைத் தார்மிகனென்று கூறுதலால் யாகத்தினையே பாஷ்யகாரர் தர்மமெனக்கூறுகின்றார். என்பது கருத்து. (472)

## அவதாரிகை

அற்றேல் 'चोदनालक्षणोऽर्थो धर्मः' விதிவாக்கியத்தால் போதிக்கப்பட்ட பொருள் தர்மமாம்' என ஜைமினிமஹரிஷியினால் தர்மசப்தம் புல்லிங்கமுடையதாகப் பிரயோகிக்கப்பட்டது புல்லிங்கமுடைய தர்மசப்தமானது அபூர்வவாசகமேயாம். புல்லிங்க தர்ம சப்தத்தினை तदेतत्क्षत्रस्य क्षत्रं यद्धर्मः' யாதொரு தர்மமுண்டோ அவ்விது க்ஷத்திரியனுடைய க்ஷத்திரமாம். என்பது முதலிய வேதத்தின்கண் அபூர்வத்தின் கண்ணேயே பிரயோகித்திருத்தலால் ஆதலால் சாபரபாஷியம் சுருதியினனுசாரமாகவே கொண்டு செலுத்தத்தக்கது. கிரதுவின்கண்ணும் தர்மசப்தம் பிரயோகிக்கப்பட்டுள்ளதாயினும் அஃது நபும்சகலிங்கமேயாம். तानि धर्माणि—அவை தர்மங்கள் என நபும்ஸக லிங்கமே ஆண்டு சுருதியிற் காணப்படுதலின் என்னும் சங்கைக்குக் கூறுகின்றார்:—

## சுலோகம்

पुंल्लिङ्गताऽपि घटते क्रतुगामिनोऽस्य
सूक्ष्मात्मना भवति हि क्रतुरप्यपूर्वम् ।
तेन क्रतोरुपचरन्नभिदां पुमान्स्यात्
क्लीबस्तु धर्ममिति हि क्रतुवाचकत्वे ॥ ४७३ ॥

## பதவுரை

अस्य—இந்த தர்மசப்தத்திற்கு
क्रतुगामिनः अपि—யாகவிஷயகத்தன்மையிருப்பினும்
पुंल्लिङ्गता घटते—புல்லிங்கத்தன்மை பொருந்துகின்றது
हि—ஏதனாலெனின்
क्रतुः अपि—யாகமே
सूक्ष्मात्मना—சூக்ஷ்மவடிவத்தால்
अपूर्वम् भवति—அபூர்வமாகின்றது

तेन—அக்காரணத்தால்
क्रतोः अभिदां—யாகத்திற்கு அபூர்வத்தோடு அபேதத்தினை
उपचरन्—உபசாரஞ்செய்து அதாவது ஆரோபித்து
पुमान् स्यात्—தர்மசப்தம் புல்லிங்கமாம்
क्रतुवाचकत्वे तु—கேவலம் யாகவாசகமாக அங்கீகரிக்கின்
धर्मम् इति—தர்மம் என்று
क्लीबः स्यात्—நபும்சகலிங்கமாம்

## *விசேஷவுரை*

பாஷ்யகாரரது வசனத்தினாலேயே சூத்திரார்த்தம் அறியத்தக்கதாயிருத்தலின் பாஷ்யத்தின் வலிமையால் புல்லிங்கத்தையுடையதாகிய தர்மசப்தமானது அபூர்வ வாசகமாம் அதன் (அபூர்வத்தின்) தாதான்மியத்தால் யாகத்தின்கண் ஜைமினிமஹரிஷியினால் உபசரிக்கப்பட்டது. ஆதலின் அபூர்வம் கிரதுவின் சூக்ஷ்மரூபமாயிருக்கும் காரணத்தால் கிரதுவுக்கு அபூர்வத்தோடு அபேதத்தை உபசரித்து தர்மசப்தம் புல்லிங்கமுடையதாம். கிரதுவாசகமாக விவக்ஷிக்கினோ தர்மம் என நபும்சகலிங்கமாம். ஔபசாரிகப் பிரயோகத்தின் கண்ணே நபும்சக லிங்கம் ஆவதின்றும். ஆதலால் சூத்திரக்காரரது புல்லிங்கமுடைய தர்மசப்தத்தின் பிரயோகமும். அதற்கு (தர்மசப்தத்திற்கு) நியோகத் தின்கண் தாற்பரியத்தினைச் சூசிப்பிக்கின்றதில்லை யென்பது கருத்து (473)

கிரது—யாகம்

## *அவதாரிகை*

அற்றேல், ஆறுவது அத்தியாயத்தின்கண் ஆதியில் சுவர்க்ககாம பதத்திற்கு நியோஜ்யபரத்துவத்தினைக் கூறுகின்ற சூத்திரக்காரராலேயே விகுதியின் பொருள் நியோகமாமெனா அங்கீகரிக்கப்பட்டுள்ளது. நியோகம் தனது கர்த்தவ்வியமாம் என்றறியும் புருடனுக்கே நியோஜ்யத் தன்மையுண்மையால் அஃது (நியோகம்) இன்றி வியுத்பத்தி செய்தல் சம்பவியாமையின் என்றாசங்கித்து வாஸ்தவந்தான் பிராபாகரரால் இவ்வாறு அவ்வதிகரணத்தின் பொருள் கூறப்பட்டுள்ளது. அதற்குப் பொருளவ்வாறன்றும். சுவர்க்ககாமபதத்திற்குப் பலபரத்தன்மையின் வியுத்பாதனத்தால் அதிகாரித்துவ வியுத்பாதனமே ஆண்டு விவக்ஷிக்கப் பட்டமையின்.

அற்றேல் சுவர்க்ககாமனது அதிகாரித்தன்மையே நியோஜ்யத்துவ பூர்வகமாம் எனின் வாஸ்தவம் நியோகவாதத்தின்கண் அவ்வாறுதான் இஷ்டசாதனம் வாக்கியார்த்தமாம் என்னும் வாதத்தின்கண் அதற்கு (இஷ்டசாதனத்திற்கு) கர்த்தாவின்கண் அன்வயபூர்வகமாகவே அதன் (அதிகாரித்தன்மையின்) அன்வயமாம் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

## சுலோகம்

इष्टाभ्युपायवचनो लिङिति स्थितौ च
स्याद्भावनावचनताऽस्य यदा तदा च ।
कर्तुर्भवेदधिकृतिस्तु नियोगवादे
स्वाम्ये स्थिते सति भवेदथ कर्तृभावः ॥ ४७४ ॥

## பதவுரை

**लिङ्** லிங்விகுதியானது

**इष्टाभ्युपायवचनः**—இஷ்டசாதனவாசகமாம்

**इति स्थितौ च**—என்னும் மதத்தின்கண்

**कर्तुः**—கர்த்தாவிற்கே

**अधिकृतिः भवेत्**—அதிகாரமாம்

அதாவது பிரதானபதார்த்தத்தின் ஆகாங்க்ஷையை யநுசரித்து இதர பதங்களுக்கு அர்த்தத்தைப் போதிக்குந்தன்மை கூறவேண்டும். லிங்காதிவிகுதியின் பொருளாகிய இஷ்டசாதனம் பிரதானமாம். அஃதும் பகுதிப்பொருளாகிய கர்த்தாவின் வியாபாரான்மக கிரியாவடிவமாம். கிரியையும் கர்த்தாவை முதலிலபேக்ஷிக்கின்றதாதலின் கிரியையினால் ஆக்ஷேபிக்கப்பட்ட கர்த்தாவை சொர்க்ககாம பதமானது விசேஷிக்கின்றது. ஆதலின் முதலில் சொர்க்ககாமனது கர்த்திருத்தன்மை யோடு அன்னுவயத்தினையடைந்து பின்பு இஷ்டவஸ்துவிற்குப்போக்தா வின்பேக்ஷையுண்டாகுங்கால் அச்சொர்க்ககாமனே தனது இஷ்டமான சொர்க்கசாதனவடிவ பகுதிப்பொருளின்கண் என் பொருட்டு இக்கருமம் என அறிகின்றவனும் அதிகாரித்தன்மையினையும் அறிகின்றான் என்பது பொருள்,

[மேலும் ஜைமினிமதத்தை அனுசரித்த பட்டபாதராலும் இந்தப் பிரகாரம் அங்கீகரிக்கப்பட்டமையின் அவருக்கும் அதுவே சம்மதமாம் எனக்கூறுகின்றார்.]

**अस्य**–லிங் முதலிய விகுதிக்கு

**भावनावचनता**–பாவனையின் வாசகத்தன்மை

**यदा स्यात्**–எப்போது ஆகுமோ

**तदा च**–அப்போதும் கர்த்தாவிற்கே அதிகாரமாம் என வரவழைத்து கூட்டுக

அதாவது பாவனையுங்கிரியாவடிவமாதலால் மேற்கூறியபிரகாரத்தாலேயே சுவர்க்ககாமன் அதன்கண் அன்வயமாகின்றான் என்பது கருத்து.

[அப்படியானல் நியோகவாதத்தின்கண் அதன் அன்வயத்தின் விலக்ஷணத்தன்மை எவ்விதமாம் என்னுஞ்சங்கைக்குக்கூறுகின்றார்]

**नियोगवादे तु**–நியோகவாதத்தின் கண்ணோ

**स्वाम्ये**–சுவர்க்ககாமனுக்கு நியோகத்தினைக்குறித்துச் சுவாமித்தன்மை

**स्थिते सति**–சித்தித்தவழி

**अथ**–பின்பு

**कर्तृभावः भवेत्**–கர்த்திருத்தன்மையுண்டாம்

### *விசேஷவுரை*

அதாவது ஆண்டு நியோகத்திற்காங்க்ஷையினாலேயே சுவர்க்ககாமனுக்கு அந்நுயமாம் ஆதலின் என்னுடையது இந்த நியோகம் என்று சுவாமித்தன்மையினையறிந்தே அதன் விஷயயாகாதியின் கண்ணும் நியோகபலத்தால் அதிகார அந்நுவயத்தினையும் அதன் பூருவகமான கர்த்திருத்தன்மையினையும் அடைகின்றான். ஆதலின் ஆண்டு விலக்ஷணயாமென்பது கருத்து. (474)

### *அவதாரிகை*

அற்றேல் நியோகத்தை யங்கீகரியாவிடின் சுவர்க்ககாமனுக்கு யாகத்தின்கண் பிரவிருத்தி யெப்படியுண்டாம் அவன் அதனால் பிரேரிக்கப்பட்டவனாகியே பிரவிருத்திக்கின்றானாதலின் என்னுஞ் சங்கைக்குப் புருஷார்த்தத்தின் இச்சையின் அதீனமாகவே அவனது பிர

விருத்தியாம் புருஷார்த்தமோ இஷ்டசாதன யாகாதியாம். அதனுல் அதன் அதீன இச்சையினுலேயே அவன் பிரவிருத்திக்கின்ருன் அபுருஷார்த்த வடிவ நியோகத்தினுல் பிரவிருத்திக்கின்றதில்லை. என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்ருர்:—

**சுலோகம்**

**इष्टाभ्युपायो विधिरात्मनीच्छामुत्पादयन्प्रेरकतामुपैति ।**
**इष्टाभ्युपायेऽवगते लिङादेरिच्छा फलादेनमुपैति सद्यः ॥ ४७५ ॥**

**பதவுரை**

**विधिः**—விதிக்கப்படுகின்ற
**इष्टाभ्युपायः**—இஷ்டசாதனயாகாதி
**आत्मनि**—தன்னிடத்தில்
**इच्छाम् उत्पादयन्**—இச்சையையுண்டுபண்ணுகின்றதாய்
**प्रेरकताम्**—பிரேரகத்தன்மையினை
**उपैति**—அடைகின்றது

அதாவது லிங் முதலியவற்ருல் யாகாதிகள் இஷ்டசாதனமாக அறியப்படுவதால் அதன்கண் இச்சையுண்டாகின்றது. அதனுல் பிரவிருத்திக்கின்றனன் என்பது பொருள்.

அற்றேல் யாகாதிகள் கிலேச வடிவமாயிருத்தலின் நியோகமின்றிச் சுவதந்திரமான புருடனுக்கு அவ்யாகத்தின்கண் இச்சை எப்படிச் சம்பவிக்கும்? என்னுஞ்சங்கைக்கு சொர்க்காதிகள் சொரூபமாகவே விரும்பப்படுகின்றமையின் அவை சாதன அநுஷ்டானமின்றிச் சித்தியாமையின் அவற்றின் சாதனமாக லிஙாதியாலறியப்பட்ட யாகாதியின் கண் அதன் பல இச்சையினுலே அதன் இச்சையுண்டாகின்றது ஆதலின் கூறிய தோஷமின்ரும் என்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்ருர்.

**लिङादेः**-லிங் முதலியவற்ருல்
**इष्टाभ्युपाये**—இஷ்டசாதனமாக
**अवगते**—யாகாதிகளறியப்பட்டபோது
**फलात्**—சொர்க்காதிவடிவ பலேச்சையினனந்தரம்
**एनम्**—பலசாதன வடிவ பகுதிப்பொருளை
**इच्छा**—இச்சையானது
**सद्यः**—அதேக்ஷணத்தில் நியோகநிமித்தத்தையபேக்ஷியாமலே

**उपैति**–அடைகின்றது அதாவது அதன்கண் இச்சையுண்டாகின்றதென்பது பொருள்.

### விசேஷவுரை

பல இச்சையினனந்தரமே அதன் சாதனமாக அறியப்பட்டதன்கண் இச்சையுண்டாகின்றது. ஆதலின் பலேச்சையினனந்தரம் எனப்பட்டது. பலத்தின்கண்ணுள்ள இச்சை சாதன இச்சைக்கு ஏதுவாம். சாதன இச்சை பிரவிருத்திக்கு ஏதுவாம். அதுவும் அதாவது சாதன இச்சையும் சாதன ஞானத்தின்தீனமாம் ஆதலின் நியோகம் பிரவிருத்தியின்கண் உபயோகமாகின்றதில்லை யென்பது கருத்து. (475)

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் தனது பக்ஷத்தில் யாகாதியின்கண் ஸ்வதந்திர சேதனுன்மாவின் பிரவிருத்தியினையுபபாதனஞ்செய்து நியோகவாதத்தின்கண் அதன் அசம்பவத்தினையுபபாதனஞ்செய்கின்றார்:—

### சுலோகம்

**नियोगकोटयाऽपि नरो न कश्चिदिच्छां विना दुःखनिदानभूतम् ।**
**करोति कर्मेह पुमर्थरागात्प्रवृत्तिरेवेति हि राजमार्गः ॥ ४७६ ॥**

### பதவுரை

**इह**–இவ்வுலகின்கண்

**नियोगकोट्या अपि**–அநேக நியோகங்களாலும் பிரேரிக்கப்படுகின்றவனுயினும்

**कश्चित् नरः**– சொர்க்கத்தில் விருப்பமுள்ள சுவதந்திர எம்மனிதனும்

**इच्छाम् विना**–இச்சையின்றி

**दुःखनिदानभूतम्**–துக்கத்திற்குக்காரணமாயுள்ள

**कर्म**–யாகாதி கர்மத்தினை

**न करोति**–செய்கின்றதில்லை

நியோகவாதியின் மதத்தில் சொரூபமாகக் கிலேசவடிவமானதும் தனது வாஞ்சித சொர்க்க அசாதனமுமான யாகாதியின்கண் இச்சை சம்பவியாமையால் சுவதந்திரபுருடன் அதனை அனுஷ்டியானென்பது பொருள்.

[தனது மதத்தில் முற்கூறிய ரீதியினுல் யாகாதியின்கண் பிரவிருத்தித்தலில் உலகாசாரத்தினைக்கூறுகின்றார்.]

**पुमर्थरागात्**-புருஷார்த்தத்தின் இச்சையினால்
**प्रवृत्तिः एष इति**-சாதனத்தின்கண் பிரவிருத்தியுண்டாகின்ற தென்பதே
**राजमार्गः**-சர்வதோஷமுமின்றிய நேர்பாதையாம்

*விசேஷவுரை*

துக்க சாதனமாயினும் போஜனாதி வியாபாரத்தின்கண் புருஷார்த்த சாதனத்தன்மையாலறியப்பட்டபோது இச்சையினால் உலகரின் பிரவிருத்தி யுளதேயாம். ஆதலின் இதுவே ராஜமார்க்கமாம். (476)

*அவதாரிகை*

அற்றேல், இஷ்டசானத்தன்மையின் ஞானம் சந்திராதியின் கண்ணிருப்பினும் ஒருவனுமதன்கண் பிரவிருத்திக்கின்றதில்லையாதலின் அஃது எவ்வாறு பிரவர்த்தகமாம் என்னுஞ் சங்கைக்கு கிருதி சாத்திய இஷ்டசாதனத்தன்மையின் ஞானம் பிரவர்த்தகமாம். அஃது சந்திராதியின்கண் இன்றும். ஆதலின் அதன்கண் அதற்கு வியபிசாரமின்றும் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

*சுலோகம்*

**इष्टाभ्युपायस्य च कार्यभावः प्रयत्ननिष्पाद्यतयोपपन्नः ।**
**स चावसेयो वचनाल्लिङादेः प्रत्यक्षतो रागनिबन्धनस्तु ॥ ४७७ ॥**

*பதவுரை*

**इष्टाभ्युपायस्य च**-சொர்க்காதியின் சாதனயாகாதியின் கண்ணே
**प्रयत्ननिष्पाद्यतया**-முயற்சியால் சம்பாத்தியத்தன்மை வடிவ
**कार्यभावः**-கார்யத்துவம்
**उपपन्नः**-பொருத்தமேயாம்

[ அற்றேல் கார்யத்தன்மை லிங்முதலியவற்றால் அறியப்படுகின்ற தெனின் அதுவே அதன் பொருளாகுக இஷ்டசாதனத்தன்மையினை அதன் பொருளாகக் கற்பித்தல் எற்றிற்கு என்னுஞ்சங்கைக்கு பிரயத்தின நிஷ்பாத்தியத்தன்மை வடிவ காரியத்தன்மையின் ஞானத்திற்கு விஷபக்ஷணாதியின்கண் அதிவியாப்தி வருதலால் பிரவர்த்தகத் தன்மையின்றும். ஆதலின் பிரவர்த்தகமே விதுதியின் பொருளாதலின் அதனால் விசேஷிக்கப்பட்ட இஷ்டசாதனதுவமே லிஙர்த்தமாம். என்னுமபிப்பிராயத்தாற் கூறுகின்றார்.]

**स च**-கிருதிசாத்திய இஷ்ட சாதனமே
**लिङादेः वचनात्**-லிங் முதலிய பதத்தால்
**अवसेयः**-அறியத்தக்கது

[ அற்றேல் யாகாதியின்கண் இஷ்டசாதனத்தன்மையினுல் கிருதியின் ஜனக இச்சாவிஷயத்தனமை வடிவ கிருதியின் உத்தேசியத்தன்மையும் இருக்கின்றதாதலின் அவ்வடிவ காரியதத்துவமே அதாவது கிருதியின் ஜனக இச்சையின் விஷயத்தன்மை வடிவ காரியதத்துவமே லிங்விததியின பொருள் ஏன் ஆகாது. என்னுஞ்சங்கைக்கு அஃது பிரத்தியக்ஷசித்தமாதலால் சப்தத்தின் பொருளன்றெனக்கூறுகின்றூர் ]

**रागनिबन्धनस्तु**-பலேச்சையை முன்னிட்டதான காரியத்துவமோ
**प्रत्यक्षतः**-பிரத்தியக்ஷத்தால் சித்தமாம் பலஇச்சையினுலேயே சாதன இச்சையுண்டாகின்றதென்பது பொருள்.

## *விசேஷவுரை*

முயற்சியால் சம்பாத்தியத்தன்மை வடிவ மென்னும் விசேஷணைத்தால் கிருதியின் உத்தேசியத்திற்கே காரியத்துவமாம. அஃதும் சொரூபத்தால புருஷார்த்தத்திற்கேயாம் ஆதலின் பகுதிப்பொருளாய யாகாதியின்கண் காரியத்தன்மையின்றும் என்னுஞ்சங்கை நிவர்த்திக்கப்பட்டது. சுலோகத்திலுள்ள மூன்றும் வேற்றுமை பிரகாரார்த்ததிலாம்.

## *அவதாரிகை*

மேற்கூறிய காரியத்தன்மையின இருவிதத்தினை வெளிப்படுத்துகின்றூர்:—

## *சுலோகம்*

**कार्यत्वमिच्छावशवर्ति किंचिदिष्टाभ्युपाये निजमस्य किंचित् ।**
**निजं लिङादेरवसेयमस्य साक्षिप्रसादादितरप्रतीतिः ॥ ४७८ ॥**

## *பதவுரை*

**इष्टाभ्युपाये**-இஷ்டசாதனயாகாதியின்கண்
**किञ्चित्**-கிருதியின் உத்தேசியத்தன்மை வடிவ
**कार्यत्वम्**-கார்யத்தன்மையானது
**इच्छावशवर्त्ति**-பலவாஞ்சையை நிமித்தமாகவுடையது
**अस्य**-யாகாதியின்கண்
**किञ्चित्**-கிருதிசாத்தியத்தன்மை வடிவ மற்றோர் கார்யத்துவம்

**निजम्**—ஸ்வாபாவிகமாம் அஃது பகுதிப்பொருள் வடிவகிரியையின் அதீனமாயிருத்தலின்

காரியத்தன்மையினை வேறு பிரித்து அதன்கண் லிங் விகுதியின் பொருளைக்கூறுகின்றார்.

**अस्य**—இஷ்டசாதன யாகாதியின்

**निजम्**—ஸ்வாபாவிக கிருதிசாத்தியத்துவம் அதாவது கிருதி சாத்திய இஷ்டசாதனத்தன்மை

**लिङाद्यैः**—லிங்முதலிய விகுதியினால்

**अवसेयम्**—அறியத்தக்கதாம்

[பலேச்சையை முன்னிட்டதான காரியத்துவமோ பிரத்தியக்ஷத்தால் சித்தமாம் என்று மேற்கூறியதனையே ஸ்பஷ்டப்படுத்துகின்றார்.]

**साक्षिप्रसादात्**—சாக்ஷியின் அநுக்கிரகத்தால் அதாவது பிரத்தியக்ஷத்தால்

**इतरप्रतीतिः**—கிருதியின் உத்தேசியத்தன்மை வடிவ காரியத்தன்மையின் ஞானமாம்

## விசேஷவுரை

சிகீர்ஷையின் விஷயத்தன்மையே கிருதியின் உத்தேசியத்தன்மையாம். சிகீர்ஷையோ ராக வடிவமாம். அஃது ஜனிக்கும்போதே நியத விஷயமுடையதாகி சாக்ஷியினால் விளக்கப்படுவதாகியே யுண்டாகின்றது அல்லது மனதினால் நிச்சயிக்கத்தக்கதாகவே யுண்டாகின்றது ஆதலின் கிருதியின் உத்தேசியத்தன்மை வடிவ காரியத்தன்மையின் பிரதீதி பிரத்தியக்ஷத்தால் என்று கூறப்பட்டது. (478)

## அவதாரிகை

அற்றேல் கிருதிசாத்திய இஷ்டசாதனத்தன்மை லிஙாதியின் பொருளாக எவ்வாறாகும். "ஆன்மாவைத் தெரிசிக்குக" என்பது முதலிய இடங்களில் லிங்விகுதிக்கு கிருதிசாத்திய இஷ்டசாதனத்தன்மை வடிவ பொருள் பொருந்தாமையின் ஞானங்கிருதி சாத்தியமன்மையின் என்னுஞ்சங்கைக்கு நீ கூறியது வாஸ்தவந்தான் இக்காரணத்தானேயே ஞானத்தின்கண் விதியின்றாம் மற்றோ அதன்கண் லிங்பதம் கௌணமேயாம். எனக்கூறுகின்றார் :—

### சுலோகம்

**ज्ञानात्यर्थे लिङ्पदं गौणमाहुर्ज्ञानात्यर्थः कर्तृतन्त्रो न हीष्टः ।**
**यागाद्यर्थे कर्तृतन्त्रे हि मुख्यो लिङ्लोडादिः श्रेयसो हेतुभूते ॥**

### பதவுரை

**ज्ञानात्यर्थे**—ஞானத்தின்கண்
**लिङ्पदम्**—லிங்விகுதியானது
**गौणम्**-கௌணீ விருத்தியிலேயுடையது என
**आहुः**—பெரியோர்கள் கூறுகின்றனர்
[அதில் ஏதுவினைக்கூறுகின்றார்]
**ज्ञानात्यर्थः**—ஞானமானது
**कर्तृतन्त्रः**—கர்த்தாவின் இச்சையினதீனமாக
**इष्टः नहि**-அங்கீகரிக்கப்படவில்லையாதலின்

[அப்படியானால் யாகாதியின் கண்ணும் லிங்பதம் கௌணமே யாகுக என்னுஞ்சங்கைக்கு முக்கியார்த்தம் சம்பவிக்கும் போது அதற்குக் கௌணார்த்தத்தைக்கொள்ளுதல் நியாயமன்றும் எனக்கூறுகின்றார்.]

**कर्तृतन्त्रे**—கர்த்தாவின் இச்சையினதீனமாகவுள்ளதும்
**श्रेयसो हेतुभूते**—இஷ்டத்திற்குச் சாதனமுமான
**यागाद्यर्थे**—வேள்வி முதலிய வினைகளில்
**लिङ्लोडादिः**-லிங் லோட் முதலிய விகுதிகள்
**मुख्यः**—முக்கியப்பிரவிருத்தியிலேயுடையதேயாம் (479)

### அவதாரிகை

அப்படியானால் முக்கியார்த்தத்தின் கண்ணுள்ள எக்குணத்தினால் ஞானத்தின்கண் லிங்பதம் பிரவிருத்திக்கின்றது. என்னும் ஜிஞ்ஞாசை யுண்டாகக்கூறுகின்றார்:—

### சுலோகம்

**ज्ञानात्यर्थे श्रेयसो हेतुभावभागोऽबुद्धो बोध्यते लिङ्पदेन ।**
**यागाद्यर्थे श्रेयसो हेतुभावो मुख्यो बोध्यः कर्तृतन्त्रो न गौणः ॥**

### பதவுரை

**ज्ञानात्यर्थे** ஞாதாதுவின் பொருளாய பிரம்மஞானத்தின்கண்
**श्रेयसः**—மோக்ஷவடிவ இஷ்டத்தின்

**हेतुभावभागः**—சாதனத்தன்மை பாகம்

**अबुद्धः**—அந்நியத்தால் அறியப்படாததாயுளது அஃது

**लिङ्प्रत्ययेन**—லிங் விகுதியினுல்

**बोध्यते**—அறிவிக்கப்படுகின்றது

லிங் விகுதியின் பொருளின்கண் கிருதிசாத்தியத்தன்மையும் இஷ்டசாதனத்தன்மையுமென்று இரண்டு பாகமுளது. அவற்றுள் ஆன்மஞானத்தின்கண் சர்வ அனார்த்தத்திற்குங்காரணமான அவித்தையின் நிவர்த்திவடிவ இஷ்டசாதனத்தன்மை பாகமானது அன்னியத்தால் அறியப்படாததாய் லிங்பதத்தால் அறிவிக்கப்படுகின்றது, கிருதி சாத்தியத்தன்மை பாகம் இன்மையினுலேயே லிங்பதம் ஆன்மஞானத்தின்கண் கௌணமாமென்பது பொருள்.

[யாகாதியின் கண்ணே இஷ்டசாதனத்தன்மை கிருதிசாத்தியத்தன்மையென்னுமிரண்டுமிருத்தலின் ஆண்டு அஃது முக்கியமேயாம் என முற்கூறியதனை விஸ்தரிக்கின்றுர் ]

**यागाद्यर्थे**—வேள்வி முதலியவற்றில்

**श्रेयसः हेतुभावः**—இஷ்டசாதனத்தன்மையும்

**कर्तृतन्त्रः**-கர்த்தாவின் இச்சையினதீனமும். அதாவது கிருதி சாத்தியத்தன்மையும்

**बोध्यः**—லிங்பதத்தால் போதிக்கப்படுகின்றது

**मुख्यः**—ஆதலால் அது அதன்கண் முக்கியமேயாம்

**न गौणः**—கௌணமன்றும் (480)

## அவதாரிகை

அப்படியாஞல் வேதாந்தத்தின்கண் ஞானத்திற்போன்று ஓரிடத்தும் விதியின்று என்னும் சங்கைக்கு ஞானத்தின் உபாயமும் புருஷனது இச்சையினதீனமுமான சிரவணுதியின்கண் அஃது உளது எனத்திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றுர்:—

## சுலோகம்

**यागाद्यर्थे मुख्यता यद्वदस्य ब्रह्मज्ञानस्यान्तरङ्गेषु तद्वत् ।**
**तर्कादीनां कर्तृतन्त्रत्वहेतोर्ज्ञानादर्वाग्गौणता हेत्वभावात् ॥ ४८१ ॥**

## பதவுரை

**अस्य**-லிங்முதலிய பதத்திற்கு
**यागादयै**-யாகாதியின்கண்
**यद्वत्**—எப்படி
**मुख्यता**-முக்கியார்த்தத்தன்மையுளதோ
**तद्वत्**-அப்படி
**ब्रह्मज्ञानस्य**-ஆன்மசாக்ஷாத்காரத்தின்
**अन्तरङ्गेषु**-அந்தரங்க சாதனங்களான சிரவணாதிகளில் முக்கியார்த்தத்தன்மையுளது

[அதில் ஏதுவினைக்கூறுகின்றார்.]

**तर्कादीनाम्**-தர்க்கம் முதலியவற்றிற்கு
**कर्तृतन्त्रत्वहेतोः**-கர்த்தாவினிச்சையினதீனத்தன்மை யிருத்தலால்

சிரவணமாவது அத்துவிதீயப்பிரம்மத்தின்கண் வேதாந்தங்களுக்குத் தாற்பரிய நிச்சயத்தின் ஏதுவான உபக்கிரம உபசம்மாரங்களின் ஏகத்தன்மை முதலிய யுக்தியின் அநுசந்தானமாம். இந்தப்பிரகாரம் ஆகாசாதியின்கண் சேதனகர்த்தாவின்றிக் காரியத்தன்மை முதலியது பொருந்தாதென்னும் ஞானம் மனனமாம். அஃதும் பிரம்மத்தின்கண் தர்க்கமேயாம். இவ்வாறு அத்வைதப்பிரம்மத்தின் நிரந்தர அநுசந்தான வடிவ நிதித்தியாசனமும் கர்த்தாவின் அதீனமேயாம். இவ்வாறாகவே பிரம்மஞானத்தின் சாதனமான சிரவணாதியின்கண் தர்க்க வடிவத்தால் கிருதிசாத்தியத்தன்மை வடிவமாகமிருத்தலால் யாகாதியிற் போன்று லிங்முதலியவற்றிற்கு முக்கியார்த்தத்தன்மையேயுளது என்பது கருத்து.

அற்றேல் அத்வைதப் பிரம்மத்தின் சாக்ஷாத்கார காலத்தில் கிரியை காரகம் முதலிய யாதொன்றுமின்மையின் லிஙாதிக்கு முக்கியார்த்தத்தன்மை யெப்படிச்சம்பவிக்கும் என்னுமிடத்துக் கூறுகின்றார்.

**ज्ञानादर्वाक्**—அஞ்ஞானகாலத்தில்
**गौणताहेत्वभावात्** - கௌணார்த்தத்தன்மையில் நிமித்தமின்மையின் விதி நிமித்தமாக அனைத்துமுளதேயாம்

## விசேஷவுரை

இவ்வாறாயின் ஆன்மாவிற்குச் சிரவணாதி விதியின் அங்கத்தன்மை பிராப்தியா மென்று சொல்லற்க. சிரவணாதிகட்கே ஆன்மாவினங்கத்

தன்மையுண்மையால் ஆன்மாவிற்கு அனன்ய சேஷத்துவம் இருத்தலால் என்பது கருத்து. (481)

## அவதாரிகை

அற்றேல் "சித்தவஸ்து சாத்தியத்தின் பொருட்டு உபதேசிக்கப் படுகின்றது" என்னும் சபரஸ்வாமியின் வசனத்தால் சித்தித்தவஸ்து வனைத்தும் சாத்தியத்தின் பொருட்டாமெனப்பிரதீதியாதலின் ஆன்மா விற்கு அனன்ய சேஷத்தன்மை எவ்வாறு பொருந்தும் என்னுஞ் சங்கைக்கு முற்கூறிய பொருளை வியவதானத்தினல் அதன் விஸ் மரணம் சம்பவித்தலின் நினைப்பூட்டுகின்றார்:—

## சுலோகம்

भूतस्य भव्याय यथोपदेशः क्रियापरे वस्तुपरे तु काण्डे ।
न हीष्टमेवं विपरीतमस्मिन्भव्यस्य भूताय सदोपदेशः ॥ ४८२ ॥

## பதவுரை

क्रियापरे—யாகாதிக்கிரியையின்கண் தாற்பரியமுடைய
काण्डे-கர்மகாண்டத்தின் கண்
भव्याय—யாகாதிசாத்தியத்தின் பொருட்டு
भूतस्य-வ்ரீஹி கபாலம் முதலிய சித்தவஸ்துவின்
यथा उपदेशः—பிரதிபாதனம் எப்படி உளதோ
एवम्—அப்படி
वस्तुपरे—பிரம்மத்தின்கண் தாற்பரியமுடைய
काण्डे तु—ஞானகாண்டத்தின்கண்ணோ
इष्टम् नहि—சம்மதமின்றாம்
अस्मिन्—ஞானகாண்டத்தின்கண்
विपरीतम्—பூதபவ்வியபரத்தன்மையினும் விபரீதமாம்
भूताय—அதாவது சித்தஸ்வரூப மோக்ஷத்தின் பொருட்டு
भव्यस्य—சாத்தியவடிவ யக்ஞாதியினதும் சிரவணாதியினதும்
सदा उपदेशः-எப்போதும் பிரதிபாதனமாம் (482)

## அவதாரிகை

மேற்கூறிய வேற்றுமையினையே யுக்தியினல் உபபாதனஞ் செய்கின்றவராய் அவ்வாக்கியங்களுக்கும் அப்படியே அங்காங்கித் தன்மையுளது என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

## சுலோகம்

भव्यप्रतीतावुपयोगभाजो भवन्ति कार्त्स्न्येन च सिद्धवादाः ।
क्रियाप्रधाने न तथाऽत्र किं तु भूतप्रतीतौ खलु भव्यवादाः ॥

## பதவுரை

**क्रियाप्रधाने** – கிரியையைப் பிரதானமாகவுடைய கர்மகாண்டத்தின் கண்

**सिद्धवादाः** – திரவிய குணாதிகளைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்கள்

**भव्यप्रतीतौ** – சாத்தியயாகாதிப் பிரதீதியின்கண்

**कार्त्स्न्येन** – முழுவடிவத்தாலும்

**उपयोगभाजः** – உபயோகமுடையனவாக

**भवन्ति** – ஆகின்றன

[வ்ரீஹிகபாலம் முதலியவற்றிற்குச் சாக்ஷாத்தாகவாவது பரம்பரையாகவாவது யாகாதிக்கிரியைச் சம்பாதித்தல் வாயிலாக காரியார்த்தத் தன்மையுளதாதலின் கர்மகாண்டத்தின்கண் பூதவஸ்து பவ்வியத்தின் பொருட்டாமெனப்பட்டது. இந்த நியாயத்தினை மூலமாகவுடைய அச்சாபரபாஷியம் அதனை விஷயஞ்செய்யும் தன்மையால் பொருத்தமாம். ஈண்டு அந்த நியாயத்திற்கு அவகாசமின்மையின் அந்த பாஷியம் பிரவர்த்திக்கின்றதில்லை. என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்.]

**अत्र**–பிரம்மகாண்டத்தின்கண்

**तथा न**–அவ்வாறின்றும். அதாவது சித்த வஸ்து சாத்தியத்தின் பொருட்டன்றும். அத்வைதப் பிரம்மத்திற்கு ஓரிடத்தும் ஒருவாற்றுலும் காரியத்தின்கண் உபயோகமின்மையின்

**किं तु**–மற்றோ

**भूतप्रतीतौ खलु**–பிரம்மசாக்ஷாத்காரத்தின் கண்ணேயே

**भव्यवादाः**–சாத்தியமாகிய சிரவணாதி வாக்கியங்கள் உபயோகமாகின்றன. (பரியவசானமாகின்றன) ஆதலின் அந்த நியாயத்தின் விபரீதத் தன்மையே பொருத்தமாமென்பது கருத்து. (483)

## அவதாரிகை

அற்றேல் ஆன்மஞானம் சாத்தியமாதலால் சாத்திய வடிவ ஞானத்தின்பொருட்டான சிரவணாதிக்கு பூத வஸ்துவின் சேஷத்தன்மை

எங்ஙனமாம் மற்றே சாத்திய சேஷத்தன்மையே உசிதமாமென்னுஞ் சங்கைக்கு அதன் பிரதீதிக்கும் அதனது அபிவியஞ்சகத் தன்மையால் அதன் அங்கத்தன்மையுண்மையின அதன் ஏதுவான சிரவணுதிகட்கும் அதன் அங்கத் தன்மையேயாம் என்னும் அபிப்பிராயத்தால் "பிரம்மசாக்ஷாத்காரத்தின் கண்ணேயே சாத்தியமாகிய சிரவணுதி வாக்கியங்கள் பரியவசானமாகின்றன" என்று முற்கூறியதனையே விஸ்தரிக்கின்றார் :—

### சுலோகம்

**भव्यप्रतीतौ न हि कश्चिदर्थो भूतप्रतीतौ पुनरस्ति मुक्तिः ।**
**श्रोतव्य इत्यादि ततो विधानं भूतोपदेशानुगुणं समस्तम् ॥ ४८४ ॥**

### பதவுரை

**भव्यप्रतीतौ** – சாத்திய ஞானத்தின்கண்
**अर्थः** – முக்கியப்பிரயோஜனம்
**कश्चित् नहि** – யாதொன்றுமின்றும்
**भूतप्रतीतौ पुनः** – பிரம்மசாக்ஷாத்காரமுண்டாகுங்கால்
**मुक्तिः अस्ति** – மோக்ஷமுளதாகின்றது

[திரண்ட பொருளைக்கூறுகின்றார்]

**ततः**–சிரவணுதிக்குச் சொருபமாக முக்கிய பிரயோஜனமிருத்தலின்
**श्रोतव्यः इत्यादि**–ஆன்மா சிரவணஞ் செய்யத்தக்கது என்பது முதலிய
**समस्तं विधानम्**–சர்வவிதி வாக்கியமும்
**भूतोपदेशानुगुणम्**–சித்த அத்வைதப் பிரம்மோபதேசத்திற்கு அநுகூலமாம். ஆதலின் அஃது அதனங்கமாமென்பது பொருள். (484)

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் பவ்விய வஸ்துக்களுக்கும் பூத வஸ்துக்களுக்கும் கிரண்டத்துவயத்தின்கண்ணும் பரஸ்பரம் விபரீதமாக அங்காங்கித் தன்மையினை உபபாதனஞ் செய்து அவற்றின் வாக்கியங்களுக்கு வாயுவின் சீக்கிரகாமித் தன்மை முதலியவற்றிற்கு பவ்வியார்த்தத் தன்மையின்மையால் அதன் அதாவது அங்காங்கித் தன்மையின்

அபாவத்தினையாசங்கித்து அதனை உபபாதனஞ் செய்கின்றார். [வாக்கியங்களுக்கு அங்காங்கித் தன்மையின் அபாவத்தினையென்று ஒட்டுக ]:—

**சுலோகம்**

**आदाय मुख्यगुणलाक्षणिकप्रवृत्तीर्भव्यप्रतीतिजनकैः सह भूतवादाः ।**
**संबन्धिनो विधिवचःसु तथाऽत्र सर्वे भव्यार्पणाः परिबृढप्रतिपादकेन ॥**

**பதவுரை**

**विधिवचःसु**—விதிப்ரகரணங்களில் அதாவது கர்ம காண்டத்தில்

**भूतवादाः**—பூதார்த்தத்தைப் பிரதிபாதிப்பனவான எவ்வர்த்தவாத வாக்கியங்களுண்டோ அவைகள்

**मुख्यगुणलाक्षणिक प्रवृत्तीः**—முக்கியவிருத்தி கௌணீவிருத்தி லக்ஷணா விருத்தி யென்னும் இவைகளில் யாதேனும் ஒன்றை

**आदाय**—கிரஹித்துக்கொண்டு ( அதாவது முக்கிய விருத்தியால் சொர்க்காதிகளையும் கௌணீ விருத்தியால் ஆதித்யாதி சாதிருசியத்தினையும் லக்ஷணாவிருத்தியால் பிராசஸ்தியம் முதலியவற்றையும் போதிக்கின்றனவையாய்)

**भव्यप्रतीतिजनकैस्सह** - அநுஷ்டிக்கத் தக்க அர்த்தத்தை விதிக்கின்ற விதிவாக்கியங்களோடு

**सम्बन्धिनः**—சம்பந்தமுடையனவாய் எப்படியாகின்றனவோ

**तथा**—அப்படி

**अत्र**—ஞான காண்டத்தின்கண்

**सर्वे भव्यार्पणाः**—சிரவணாதி சாத்தியத்தைப் போதிக்கின்ற "கேட்கத் தகுந்தது" என்பது முதலிய வாக்கியங்கள் அனைத்தும்

**परिबृढप्रतिपादकेन**—பிரபுவாகிய பிரம்மத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியத்தோடு சம்பந்தமுடையனவாகின்றன.

**அவதாரிகை**

இந்தப்பிரகாரம் பிரம்மம் முதலான சப்தங்களுக்கு வேதாந்தத்தின் கண்ணுள்ள சிரவணாதி சாத்தியார்த்தத்தினைப் பிரதிபாதிக்கின்ற சுரோதவ்வியாதி வாக்கியங்களைப் பார்க்கிலும் பிரதானத் தன்மையை

யுபபாதனஞ் செய்து அதன் பயனை குணத்தின்கண்ணே அங்கியாயத்தைக் கற்பிக்கலாம் என்னும் நியாயத்தால் பிரம்மம் முதலான பதங்களின் அநுசாரமாகவே சாத்திய விஷயக அடைகின்றான் என்பது முதலிய பதம் கொண்டு செலுத்தத் தக்கது எனத் திருஷ்டாந்த சகிதம் கூறுகின்றார்:—

## சுலோகம்

सिद्धार्थवादिवचनेषु न गौणतादिर्दोषाय कर्मपरवाक्यगतेषु यद्वत् ।
कार्यार्थवादिवचनेषु न गौणतादिर्दोषस्तथोपनिषदीति समानमेतत् ॥

## பதவுரை

**कर्मपरवाक्यगतेषु**-கர்மகாண்டத்தின்கண் விதி வாக்கியத்தோடு ஏகவாக்கியத் தன்மையினை அடைந்துள்ள

**सिद्धार्थवादिवचनेषु**-சித்தார்த்தத்தைப் போதிப்பனவான எப்பதங்களுண்டோ அவைகளின்கண்

**गौणतादिः**-கௌணத் தன்மை முதலியவை

**यद्वत्**-எப்படி

**न दोषाय**-தோஷத்தின் பொருட்டாவதின்றே

**तथा**-அப்படி

**उपनिषदि**-வேதாந்தத்தின் கண்ணும்

**कार्यार्थवादिवचनेषु**-சாத்திய வடிவ அர்த்தத்தினைப் பிரதிபாதிக்கின்ற "பிரம்மத்தை அடைகின்றான்" "பிரம்மமேயாகின்றான்" என்பது முதலிய வசனங்களில்

**गौणतादिः**-கௌணீ முதலிய விருத்தியினை யங்கீகரித்தல்

**न दोषः इति**-குற்றமன்றும் ஆதலின்

**एतत् समानम्**-குணத்தின்கண்ணே அங்கியாய விருத்தியினைக் கற்பித்தல் இரண்டிடத்தும் சமானமேயாம்.

## விசேஷவுரை

"தோஷத்தின் பொருட்டாவதின்று" என்பதற்கு சித்தார்த்தத்தைப் போதிப்பனவான பதங்களுக்குக் குணபூதமான அர்த்தத்தன்மையுண்மையின் அவை குணவசனமாம். அத்தகைய குணவசனத்தின்கண் பிரதான வசனத்தையநுசரித்துக் கௌணத் தன்மை முதலியவை தோஷத்தின் பொருட்டன்றும் என்பது பொருள். (486)

### அவதாரிகை

மேலும் காண்டத்துவயத்தின்கண் மானத்தன்மையும் மேயத் தன்மையும் எப்படி விபரீதமோ அப்படி பூதபவ்விய வாக்கியங்களுக்கு குணப்பிரதானபாவ விபரீதத்தன்மையும் நியாயமேயாம் என்னுமபிப் பிராயத்தால் கூறுகின்றார்:—

### சுலோகம்

**मानेन मेयावगतिश्च युक्ता धर्मस्य जाड्याद्विधिनिष्ठकाण्डे ।**
**मेयेन मानावगतिश्च युक्ता वेदान्तवाक्येष्वजडं हि मेयम् ॥ ४८७ ॥**

### பதவுரை

**मानेन च** – சுருதி முதலிய பிரமாணத்தினலேயே

**मेयावगतिः** – தர்மத்தின் ஞானம்

**युक्ता** – பொருத்தமாம்

[அதில் ஏதுவினைக் கூறுதல்.]

**विधिनिष्ठकाण्डे** – கர்மகாண்டத்தின்கண்

**धर्मस्य जाड्यात्** – தர்மத்திற்குச் ஜடத்தன்மையுண்மையின்

**मेयेन तु** – ஞானகாண்டத்தின்கண்ணே வேதாந்தப்பிரதிபாத்திய மான சொப்பிரகாச சைதன்னியத்தினலேயே

**मानावगतिः**– வேதாந்தமும் அதனலுண்டாகிய விருத்தி முதலியவையுமாகிய பிரமாணத்தின் ஞானம்

**युक्ता** – பொருத்தமாம். சைதன்னியத்தினலேயே ஜடபதார்த்தத் தின் விளக்கம் கடாதியின்கண் காணப்பட்டதென்பது பொருள்.

[பிரமேயத்தால் பிரமாண ஞானமுளதாவதில் ஏதுவினை மனதில் வைத்துக்கொண்டு கூறுகின்றார்.]

**वेदान्तवाक्येषु** – உபநிஷத்துக்களில்

**मेयम्** – பிரம்மவடிவ பிரமேயமானது

**अजडम् हि** – சொப்பிரகாசமாமாதலின்

### விசேஷவுரை

பிரம்மமானது தனது அவித்தையின் நிவர்த்தியின்கண் வேதாந்தத் தினையும் அதனலுண்டாகிய விருத்தியினையும் அபேக்ஷிக்கின்றது. அப்படியாயினும் தனது சித்தியின்கண் அபேக்ஷிக்கின்றதில்லை. பிரதி பந்திக்கப்படாத சொப்பிரகாச சாக்ஷிக்கு அதனபேக்ஷையின்மையின்

ஜபபதார்த்தபனைத்தும் சாக்ஷிபாஸ்யமேயாதலின் வேதாந்தம் முதலியவையும் அதனாலேயே யறியத்தக்கதாமென்பது பொருள். (487)

## அவதாரிகை

அற்றேல் "अस्तिर्भवन्तीपरः प्रयोक्तव्यः" இருக்கின்றது என்னும் சத்தாவாசகபதம் ஆகின்றது என்னும் கிரியையின் பரமாகப் பிரயோகிக்கத்தக்கது எனனும் காத்தியாயன மஹரிஷியின் வசனத்தால் வினைச்சொல்லை நிமித்தமாகக்கொண்டே பதங்களுக்கு ஏகவாக்கியத் தன்மையுளது. வேதாந்தத்தின்கண்ணே வினைச்சொல் உம்மால் அங்கீகரிக்கப்படுகின்றதில்லை. ஆதலால் உபநிஷத் வாக்கியங்களில் பிரமேயம் சொப்பிரகாசமாம் என்றல் பொருந்தாது என்றுசங்கித்து முன்பு நிராகரிக்கப்பட்டதாயினும் மறதியுள்ள புருஷனைக் குறித்து மீண்டும் நிராகரணம் செய்கின்றார்:—

## சுலோகம்

**कर्मप्रधानेऽतिगते च काण्डे वाक्यत्वमाख्यातपदप्रयुक्तम् ।**
**ब्रह्मप्रधाने श्रुतिमस्तकेऽस्मिन्नामप्रधानं वचनं समस्तम् ॥ ४८८ ॥**

## பதவுரை

**कर्मप्रधाने** – கர்மத்தினைப் பிரதானமாகவுடைய
**अतिगते च काण्डे** – பூர்வகாண்டத்தின்கண்
**वाक्यत्वम्** – வாக்கியத்தன்மையானது
**आख्यातपदप्रयुक्तम्** – வினைச்சொல்லின் அதீனமாம்
**ब्रह्मप्रधाने** – பிரம்மத்தினைப் பிரதானமாகவுடைய
**अस्मिन् श्रुतिमस्तके** – இவ்வேதாந்தத்தின்கண்
**समस्तम् वचनम्** – எல்லா வாக்கியமும்
**नामप्रधानम्** –பிரம்மம் ஆன்மா என்பது முதலிய பெயர்ச்சொல்லைப்பிரதானமாகவுடையன

## விசேஷவுரை

காத்தியாயன மஹரிஷியின் வாக்கியமோ விருத்த புருஷரது வியவகாரத்தை மூலமாகவுடையது விருத்த புருஷரோ யாண்டு கிரியையினையாவது அதன் சம்பந்தத்தினையாவது பிரதிபாதிக்க இச்சிக்கின்றார்களோ ஆண்டே வினைச்சொல்லைப் பிரயோகிக்கின்றனர். யாண்டு இங்ஙனமன்றே அதாவது கிரியையினையாவது அதன்

சம்பந்தத்தையாவது பிரதிபாதிக்க இச்சிக்கின்றதில்லையோ மற்றோ சம்பந்தி விசேஷத்தையாவது பிரகார விசேஷத்தையாவது அறிவிக்க விரும்புகின்றனரோ ஆண்டு தேவதத்தனுடையது இந்தக்கிருகம், புஷ்பங்களையுடையது வனம் என்று அவ்வினைச்சொல்லின்றியே பிரயோகிக்கின்றனர். ஆகலின் கர்மகாண்டத்திற்குக் கிரியையின் பிரதானத்தன்மையுண்மையால் ஆண்டே வாக்கியத்தன்மை வினைச் சொல்லை நிமித்தமாகவுடையது என காத்தியாயன மகரிஷியின் அபிப்ராயமாம். பிரம்மகாண்டத்தின் கண்ணோ நாமார்த்தத்திற்குப் பிரதானத்தன்மையுண்மையின் நாமபதமே ஏகவாக்கியத்தன்மையின்கண் நிமித்தமாம் என்பது கருத்து. (நாமம் =பெயர்ச்சொல்) (488)

## அவதாரிகை

அற்றேல், வேதாந்தத்தின்கண்ணும் இருக்கின்றது என்பது முதலிய கிரியை கேட்கப்படுதலால் எல்லாவிடத்தும் வினைச்சொல்லை நிமித்தமாகக் கொண்டே வாக்கியத்தன்மை யுளதாகுக என்னுஞ் சங்கைக்கு கர்மகாண்டத்தின்கண்ணே எப்படிப் பெயர்ச்சொல்லும் சாத்தியார்த்தத்தினை யுடையதாகிப் பொருளால் வினைச்சொல்லின் வியவகார யோக்கியமாகவேயாகின்றதோ அப்படி ஈண்டு வினைச் சொல்லும் அர்த்தத்தால் பெயர்ச்சொல்லேயாமாதலின் சாத்தியார்த்தத் தினைப் போதிக்கும் வினைப்பதமின்மையின் வேதாந்த வாக்கியம் நாமத்தினைப் பிரதானமாகவுடையதேயாம் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

## சுலோகம்

कार्यप्रधानमखिलं च पदं सुबन्त-
माख्यातमेव फलतः खलु कर्मकाण्डे ।
तद्वत्तिङन्तमपि वेदशिरःसु सर्वं
नामैव विद्धि परिनिष्ठितवस्तुनिष्ठम् ॥ ४८९ ॥

## பதவுரை

**कर्मकाण्डे खलु** – கர்மகாண்டத்தின்கண்

**कार्यप्रधानम्** – அனுஷ்டேயார்த்தத்தைப் பிரதானமாகவுடைய

**सुबन्तम् अखिलम् च पदम्** } பெயர்ச்சொற்களனைத்தும்

**फलतः**–பொருளால் (அனுஷ்டிக்கத்தக்க அர்த்தம் பிரதீதியாதலின்)
**आख्यातम् एव**– வினைச்சொல்லின் வியவகார யோக்கியமாம்
**तद्वत्** – அதுபோன்று
**वेदशिरःसु** – வேதாந்தங்களில்
**तिङन्तम् अपि सर्वम्** – வினைச்சொற்களால் பிரதீதியாகின்ற அனைத்தும்
**नाम एव** – பெயர்ச்சொல்லேயாம்
**हि** – ஏதனுலெனின்
**तत्** – அவ்வினைச்சொற்கள்
**परिनिष्ठितवस्तुनिष्ठम्** – அர்த்தவசத்தால் சுவபாவசித்த பிரம்மத்தின் கண்ணேயே நிஷ்டையுடையதாம் ஆதலின் (489)

## *அவதாரிகை*

எப்பெயர்ச்சொல் சாத்தியார்த்தத்தினையுடையதாகி வினைச்சொல்லாக திருஷ்டாந்தத்தின்கண் விவக்ஷிக்கப்பட்டது? என்னும் ஜிஞ்ஞாசையுண்டாகக் கூறுகின்றார் :—

## *சுலோகம்*

**आग्नेयमाश्विनमथैन्द्रमितीदृशं हि सर्वं सुबन्तमपि भव्यपरं प्रसिद्धम् ।**
**साऽस्येति तद्धितसमन्वितसंनिधाने नामैव तद्भवति यद्भवतीति तद्वत् ॥**

## *பதவுரை*

**आग्नेयम्**–ஆக்நேய பதமும்
**आश्विनम्**- ஆஸ்வினமென்னும் பதமும்
**अथ ऐन्द्रम्**–ஐந்தரமென்னும் பதமும்
**इति ईदृशम्**–ஆகிய இப்படிப்பட்ட
**सर्वम् सुबन्तम् अपि**–பெயற்சொற்களனைத்தும்
**भव्यपरम्**–சாத்தியார்த்த பரம் என்பது
**प्रसिद्धम् हि**–பிரசித்தமேயாம். அதாவது அப்பதங்களால் திரவிய தேவதைகளின் சம்பந்த வாயிலாக அனுஷ்டிக்கத் தக்க யாகம் பிரதீதியாதலின் அஃது வினைச்சொல் போன்று சாதத்யபரமாம் என்று பொருள்.

[இப்போது வினைச்சொல்லிற்கும் பெயர்ச்சொல்லாந்தன்மையில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்.]

**सा अस्य इति-"सा अस्य देवता"** இதற்கு அது தேவதை என்னுஞ் சூத்திரத்தால் விதிக்கப்பட்ட

**तद्धितसमन्वितसन्निधाने**-யாதொரு தத்திதப் பிரத்தியயமுண்டோ அதனோடு கூடிய யாதொரு ஆக்னேயாதி பதமுண்டோ அதன் சமீபத்தில்

**भवति इति यत्-भवति** இருக்கின்றது என்னும் யாதொரு வினைப் பதமுண்டோ

**तत् नाम एव भवति**-அஃது எப்படிப் பெயர்ப்பதமே யாகின்றதோ அதன் அர்த்தத்திற்கு அன்னிய வியாபாரத் தன்மையால் அநுஷ்டிக்கத்தக்க தன்மை யின்மையின் என்க

**तद्वत्**-அதுபோன்று என்பது பொருள்.

ஆக்நேயம்=அக்னியைத் தேவதையாகவுடைய புரோடாசம்

ஆஸ்விநம்=அஸ்விநி குமாரர்களைத் தேவதையாகவுடைய தூம்ர மெனப்பெயரிய ஜந்து

ஐந்த்ரம்=இந்திரனைத் தேவதையாகவுடைய தயிர் (490)

## அவதாரிகை

அதுபோன்று எனச் சிறப்பிக்கப்பட்ட தார்ஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் ;—

## சுலோகம்

अस्त्यस्म्यसीति च तिङन्तपदानि सन्ति
वेदान्तवाक्यनिलयानि तथाऽपि तानि ।
नाऽऽख्यातशब्दनिजशक्तिधुरं वहेयु-
रस्तित्वमात्रविषया हि निषक्तिरेषाम् ॥ ४९१ ॥

## பதவுரை

**वेदान्तवाक्यनिलयानि**-உபநிஷத்துக்களில்

**अस्ति**-பிரம்மம் இருக்கின்றது

**अस्मि**-நான் பிரம்மாயிருக்கின்றேன்

**असि**-நீ அதுவாயிருக்கின்றாய்

**इति च**-என

**तिङन्तपदानि सन्ति**-வினைப்பதங்கள் உள்ளன

**तथा अपि**–அப்படியாயினும்

**तानि**–அப்பதங்கள்

**आख्यातशब्द निजशक्तिधुरम्** } வினைப்பதத்தின் யாதொரு ஸ்வாபாவிக சக்தியுண்டோ அதனது பவ்வியார்த்தப் பிரகாசவடிவ பாரத்தை

**न वहेयुः**–வகிக்கமாட்டா

[ எதனுல் வகிக்கமாட்டா என்னுமிடத்துக் கூறுகின்ருர் ]

**एषाम्**–இருக்கின்றது என்பது முதலிய பதங்களுக்கு

**अस्तित्वमात्रविषया हि**–பகுதிப்பொருள் வடிவ சொரூப சத்தை மாத்திரத்தின்கண்

**निषक्तिः**–சம்பந்தமாம். அதாவது பரியவசானமாமாதலின் (491)

## அவதாரிகை

அற்றேல் வினைச்சொற்களின் சுவாபாவிகமான சக்தியின்பாரத்தை வகிக்கமாட்டா என்பதனுல் இருக்கின்றது என்பது முதலிய சப்தத்தால் எவ்வர்த்தத்தின் பிரதீதி நிஷேதிக்கப்படுகின்றதோ வினைப்பதத்தின் அந்த முக்கியார்த்தமென்பது யாது ? என்னும் ஆகாங்க்ஷையுண்டாகக் கூறுகின்ருர் :—

## சுலோகம்

**पूर्वापरीभूतपदार्थनिष्ठमाख्यातमाख्यातविदो वदन्ति ।**
**कूटस्थसत्तावगतिप्रधानमाख्यातवत्साधु तिङन्तमाहुः ॥४९२॥**

## பதவுரை

**आख्यातम्** - செல்கின்ருன் சமைக்கின்ருன் என்பது முதலிய வினைப்பதத்தினை

**पूर्वापरीभूतपदार्थ निष्ठम्** - முன் பின்னுயுள்ள சாத்தியவடிவ யாதொரு கிரியையுண்டோ அதன் கண் பர்யவசானமுடையது என

**आख्यातविदः** - வையாகரணர்கள்

**वदन्ति** - கூறுகின்றனர்.

செல்கின்ருன் என்பது முதலியவற்ருல் செல்லுதலாதி பகுதிப் பொருள். முன்பின்னுயுள்ள அநேக க்ஷணங்களின் * நிசயவடிவமாய்ப்

* நிசயம் = சமுதாயம் அல்லது சேர்க்கை அல்லது சம்பந்தி

பிரதீதியாகின்றது. ஆதலின் அதுவே வினைப்பதத்தின் முக்கியார்த்த யாம் என்பது பொருள்.

[இவ்வாறாகவே ஆன்ம சொரூபசத்தையின்கண் பரியவசானமுள்ள இருக்கின்றது என்பது முதலிய பதமும் வினைப்பதம் போன்று சப்த தோஷமின்றியதாய் வினை விகுதி மாத்திரத்தினை அந்தத்திலுடையதா கின்றது. சமைக்கின்றான் என்பதாதி போன்று முக்கியார்த்தமின்றும் எனக்கூறுகின்றார்.]

**कूटस्थसत्तावगतिप्रशान्तम्** – நிர்விகார சச்சின்மாத்திரத்தின் கண் பரியவசானமுள்ள

**तिङन्तम्** – இருக்கின்றது என்பது முதலிய வினைப்பதத்தினை

**आख्यातवत्** – வினைப்பதத்திற்குச் சமானமாக

**साधु** – சப்ததோஷமின்றியதாக

**आहुः** – கூறுகின்றனர் (492)

*அவதாரிகை*

இருக்கின்றது என்பது முதலிய வினைப்பதங்களோடு சேர்த்து உச்சரிக்கப்பட்டதாயினும் வேதாந்த வாக்கியமானது நிர்விகாரசச்சின் மாத்திரத்தின்கண் பரியவசானமுடையது என்று கூறப்பட்டது. அதனையிப்போது ஆக்ஷேபிக்கின்றார்:—

*சுலோகம்*

**अस्तित्ववस्तुविषयोपनिषन्निषक्ति-**
**राश्रीयते यदि तदा प्रमितं प्रमेयम् ।**
**तस्यास्तत्राऽऽपतति मानमितत्वमेव**
**ह्यस्तित्वमात्मगतमभ्युपयन्ति धीराः ॥ ४९३ ॥**

*பதவுரை*

**उपनिषन्निषक्तिः**—வேதாந்தத்தின் பர்யவசானம்

**अस्तित्ववस्तुविषया**-சத்தைமாத்திர விஷயகமாம் என

**यदि आश्रीयते**—அங்கீகரிக்கப்படுமாயின்

**तदा**—அப்போது

**तस्याः**—அவ்வேதாந்தத்திற்கு

**प्रमेयम्**—விஷயமானது

**प्रमितम्**—பிரமாணத்தால் விஷயஞ் செய்யப்பட்டதாக

**तव**—உனக்கு

**आपतति**-பிராப்தியாம் அதாவது வேதாந்தங்களுக்குச் சத்தாமாத்திர நிஷ்டத்தன்மையினையங்கீகரிக்கின் பிரமாணாந்தரத்தால் சித்தித்ததின் அனுவாதகத்தன்மை உனக்குப்பிராப்தியாம் என்பது பொருள்.

[எதனாலென்னுமிடத்துக்கூறுகின்றார்.]

**मानमितत्वम् एव हि**—பிரமாண விஷயத்தன்மையே

**आत्मगतम्**- ஆன்மாவின்கண்ணுள்ள

**अस्तित्वम्**—சத்தையாம் என

**धीराः**—சமர்த்தரான பிராபாகரர்

**अभ्युपयन्ति**—அங்கீகரிக்கின்றனர்

ஆன்மாவின் கண்ணுள்ள என்னும் விசேஷணம் தொடர்பு பற்றி வந்தது. யாண்டும் பிரமாண விஷயத்துவமே சத்துவமாமென்பது பொருள். (493)

## அவதாரிகை

அற்றேல், பிரமாண விஷயத்துவத்தினையே சத்தையென அங்கீகரிக்கின் சுழுத்தி முதலானவற்றில் ஆன்மா முதலானவற்றிற்கு அசத்துவம் பிராப்தியாம் எனனும் அருசியினுல் கூறுகின்றார்;—

## சுலோகம்

**अथवा मितियोग्यताऽस्तिता निरवद्याऽस्तु समस्तवस्तुषु ।**
**परमात्मनि तत्प्रतीतये सकलं वेदशिरः प्रवर्तताम् ।। ४९४ ।।**

## பதவுரை

**अथवा**—அல்லது

**समस्तवस्तुषु**—ஆன்மா அநான்மாவென்னும் சர்வ வஸ்துக்களிலும்

**मितियोग्यता**—பிரமாண யோக்யத்தன்மையே

**निरवद्या**—நிர்த்துஷ்டமான

**अस्तिता**—சத்துவம்

**अस्तु**—ஆகுக, சுழுத்தி முதலியவற்றில் ஆன்மா முதலியவற்றிற்கு சத்துவம் பொருந்துதலின்

**परमात्मनि**—இவ்வாறு பரமான்மாவின்கண்

**तत्प्रतीतये**- மிதியோக்கியத்துவவடிவ சத்துவப்பிரதீதியின் பொருட்டு

**सकल वेद शिरः**—சர்வ உபநிஷத்துக்களும்

**प्रवर्तताम्**—பிரவிருத்திக்கும்

### *விசேஷவுரை*

வேதாந்தங்களுக்கு சத்தையாகிற அர்த்தத்தின்கண் தாற்பரியத்தினையங்கீகரிக்கின பரமான்மாவின்கண் அதனது அநுவாதத்தின் பொருட்டே சகல வேதாந்தமும் பிரவிருத்திக்கும். அஃது பொருந்தாது அப்பிரமாணத்தன்மை பிராப்தியாதலின் அல்லது அவைகட்கு சத்தை வடிவார்த்தத்தின்கண் தாற்பரியம் இல்லாதொழிக கிரியையின் கண்ணேயே தாத்பரியம் உளதாகுக என்பது கருத்து. மிதி, பிரமிதி, பிரமை என்பன ஒரு பொருட்சொற்கள் (494)

### *அவதாரிகை*

சித்தாந்தி அதனை தூஷிக்கின்றார்:—

### *சுலோகம்*

**तदसुन्दरमात्मसंविदोरपि सत्ता भवताऽभ्युपेयते ।**
**न तयोर्विषयत्वहीनयोर्मितियोग्यत्वमितित्वसंभवः ॥ ४९५ ॥**

### *பதவுரை*

**तत्**—மானவிஷயத்துவம் அல்லது மானயோக்கியத்துவம் சர்வ பதார்த்தங்களின் சத்துவமாம் என்பது

**असुन्दरम्**—சரியன்று

**भवता**—இவ்வாறு கூறுகின்ற பிரபாகரராகிய உம்மாலும்

**आत्मसंविदोः अपि**—ஆன்மாவிற்கும் அதன்கண் சமவாய சம்பந்தத்தாலுள்ள ஞானத்திற்கும்

**सत्ता**—சத்துவமானது

**अभ्युपेयते** — அங்கீகரிக்கப்படுகின்றதேயாம் (இவ்வாறுகும்போது)

**विषयत्वहीनयोः तयोः** — மானவிஷயத்துவமின்றிய ஆன்மாவின்கண்ணும் ஞானத்தின் கண்ணும்

(சத்துவம் சித்திக்காது அவைகட்கு மானவிஷயத்துவமின்மையின் என்பது பொருள் இதனாலேயே)

**मितियोग्यत्वमितत्वसंभवः न**—பிரமாணயோக்கியத்தன்மை வடிவ சத்துவமும் சம்பவியாது பிரமாண யோக்கியத்தன்மையின்மையின்

பிரபாகரராதிய உம்மால் ஞானத்திற்குச் சொப்பிரகாசத் தன்மை யாலும் ஆன்மாவிற்கு அதன் ஆசிரயத்தன்மையாலும் பானம் அங்கீ கரிக்கப்படுதலின் என்பது பொருள். பானம் = விளக்கம், பிரதீதி, (495)

## ஜகத்காரிய லிங்கத்தால் சேதந காரணாநுமானம்

### அவதாரிகை

ஆற்றேல் இச்சமன்வய நிரூபணமானது நிர்விஷயமாகச் செய்தற்த ஏன் கூடாது பிரம்மமே விஷயமாமென்று சொல்லற்க அஃது பிரசித்த மின்மையின் கோ முதலியவைப் போன்று அஃது பிரசித்தமின்றன்றோ ? சமன்வய நிரூபணத்திற்கு முன்பு சப்தத்தாலும் அஃது சித்தமன்றும். அஸம்பாவிதமான வஸ்து பிரமாணத்தாலும் நிச்சயிக்கத்தகாது. அஃது

" संभावितः प्रतिज्ञायां पक्षः साध्येत हेतुना ।
न तस्य हेतुभिस्त्राणमुत्पतन्नेव यो हतः ॥ "

பிரதிக்ஞையின்கண் சம்பாவனை செய்யப்பட்ட கோடியானது ஏதுவினால் சாதிக்கத்தகும். யாதொரு கோடியானது உண்டாகும் போதே நசித்துவிடுகின்றதோ அதனது சம்ரக்ஷணம் ஹேதுக்களாலும் முடியாது, என்று முதியோரால் கூறப்பட்டுள்ளது. ஜகத்தின் காரியத் தன்மை வடிவ லிங்க அனுமானத்தால் அதன் சித்தியாமென்று சொல்லற்க. சமன்வய நிரூபணத்திற்கு வியர்த்தத் தன்மை வருத லானும், மஹாபிருதிவி முதலியவற்றின்கண் காரியத்தன்மை சித்தியாமையானும் என்க.

அற்றன்று பிரபஞ்சவடிவ காரிய லிங்க தர்க்கத்தால் சம்பாவனை செய்யப்பட்ட சேதன வடிவ காரணமே அத்வய நித்திய சுத்த ஞான ஆனந்தாதி சொரூபத்தால் வேதாந்தங்களால் பிரதிபாதிக்கப்படுதலின் கூறிய தோஷமின்றுமென்னு மபிப்பிராயத்தால் " ஜன்மாத்யஸ்ய யத: " என்னும் சூத்திர நியாயத்தினை வியுத்பாதனஞ் செய்தற்கு ஆரம்பிக் கின்றார். ஆண்டு சுரோதாவின் ஜிஞ்ஞாசையை யனுசரித்திருத்தலாலும் சாக்ஷாத் புருஷார்த்தத் தன்மையாலும் பிரத்தியகபின்ன பிரம்மவடிவ தத்துவமானது விசாரார்த்தமானது நியாயத்தால் நிரூபிக்கப்பட்டபோது

வாக்கியத்தினது அப்பொருளினையே தத்பதவாச்சிய லக்ஷிய சொரூபங்களின் நியாய ஜிஞ்ஞாசையினனுசாரமாக மாறு க்ரமத்தினை ஆசிரயித்து இரண்டாவது சூத்திர நியாயத்தினை ஆரம்பிக்கின்றவராய் முதலில் ஜகத்காரணமாகிய சேதனத்தினை அநுமானித்தற்குக் காரியத்தன்மைவடிவ லிங்கத்திற்கு ஆகாசாதி பக்ஷதருமத்தன்மை சித்தித்தற்பொருட்டு ஆகாசாதியின்கண் காரியத்தன்மையை சாதிக்கின்றார்:—

### சுலோகம்

क्षितिजलदहनानिलाम्बराणां जनिमनुमाय विभक्ततावलेन ।
जगति हि जनिमद्विभज्यमानं घटघटिकादि समीक्ष्यते समस्तम् ॥

### பதவுரை

**हि**—யாதொரு காரணத்தினால்
**जगति**—இவ்வுலகின்கண்
**विभज्यमानम्**—வெவ்வேறுயுள்ள
**घटघटिकादि**—குடம் கலயம் முதலிய
**समस्तम्**—அனைத்தும்
**जनिमत्**—உற்பத்தியுடையதாக
**समीक्ष्यते**—காணப்படுகின்றதோ அதனால்
**विभक्ततावलेन**—பின்னத்தன்மை பலத்தால்
**क्षितिजलदहनानिलाम्बराणाम्**—மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாசமாகிய ஐந்து பூதங்களின்
**जनिम् अनुमाय**—உற்பத்தியினை அநுமானித்து அதிகாரிகள் சேதன காரணத்தினைத் தர்க்கிக்கின்றனர் என இனி வருஞ்சுலோகத்தோடு அன்வயஞ் செய்க.

### விசேஷவுரை

பலத்தால்—உத்பத்தியின் வியாப்தியும் பக்ஷதருமத்தன்மையுமாகிய இவைகளின் ஞானத்தால்.

ஆண்டு அதற்குப் பக்ஷதர்மத்தன்மை சித்தித்திருத்தலின் வியாப்தியினைத் தெரிசிப்பிக்கின்றார் உலகின்கண் என.

அநுமானமிதுவாம்:—மண் முதலிய மஹாபூதங்கள் உற்பத்தியுடையன் பேதமுடைமையின் கடாதிபோன்று. அற்றேல் பிரம்மத்தின்கண் வியபிசாரமாம் அதன்கண்ணும் பிரபஞ்சத்தின் பேதமிருத்தலின்

பாரமார்த்திக பேதமுடைமையே யேதுவாம் அஃது அதன்கண் இன்றாம் என்று சொல்லற்க. உனது சித்தாந்தத்தின்கண் பக்ஷதிருஷ்டாந்தங்களிலும் அஃதின்மையின் எனின் அற்றன்று தனது சமானசத்தை யுடைய பின்னத்தன்மை ஏதுவாதலின், பிரபஞ்சத்தின்கண் அஃது இருத்தலானும் பிரம்மத்தின்கண் அஃதின்மையானும் கூறிய தோஷ மின்றாம். இவ்வாறாயினும் அவித்தை முதலியவற்றின்கண் வியபிசார மாம் என்று சொல்லற்க சாத்தியமும் ஆண்டு இருத்தலின் அத்திய ஸ்தத்தன்மை வடிவ உற்பத்தியே ஆகாசாதியின்கண் சாத்தியமாம். முன் அசத்தாயுள்ளதற்குச் சத்தாஜாதியின் சம்பந்தித்தன்மை வடிவ உற்பத்தி சாத்தியமன்றாம் அஃது ஓரிடத்துமின்மையின்.

கடாதியின்கண் அத்தியஸ்தத் தன்மை வடிவ உற்பத்தியும் வாதிக்குச் சம்மதமின்றாம் என்று சொல்லற்க. இவ்வாறாயினும் சுவார்த்தானுமானத்தின்கண் விரோதமின்மையினாலும், உலகப்பிரசித்த மான இப்பி வெள்ளியானது வாதியைக் குறித்துத் திருஷ்டாந்தமாகச் சம்பவித்தலானும். சங்கை-இவ்வாறு ஆகாசாதிக்கும் அஞ்ஞானத்திற்குப் போன்று அத்தியஸ்தத் தன்மை சம்பவித்தலால் அதனால் இனிக் கூறப் படும் சேதன காரணத்தின் அனுமானம் சித்திக்காது என்று சொல்லற்க. சேதன அதிஷ்டானத் தன்மையே இனிக் கூறப்படும் பிரதிக்ஞைப்பால் கருதப்பட்டமையின் இவ்வேதுவிற்கு அநுகூல தர்க்கமின்றாமென்று கூறற்க. சுருதியினால் நிச்சயிக்கப்பட்ட அத்துவிதீயத் தன்மைக்கு விபக்ஷத்தில் பாதம் பிராப்தியாதலின்.

அல்லது ஆகாசம் முதலிய மகாபூதங்கள் பூதத்துவமாய் அநாதியாய் இருப்பவையன்று. பின்னத்தன்மையால் கடாதிபோன்று இந்த சாத்திய மானது பிரம்மத்தின்கண்ணும் அஞ்ஞானத்தின்கண்ணும் விசேஷணா பாவப்பிரயுக்தமாய் இருக்கின்றது. வாதிக்கு நிஷேத்தியம் பிரசித்தமாம். ஆதலின் யாதொரு தோஷமுமின்றாம். விபக்ஷமுளதாயவழி அதனைப் பாதிக்கும் தர்க்கம் முன்பு கூறப்பட்டுள்ளது. அதுவே ஈண்டும் அநுசந்திக்கத்தக்கது என்பது கருத்து. (496)

### *அவதாரிகை*

மேலும் மஹாபிருதிவி ஜன்மமுடையது பிருதிவித்தன்மையால் முன்பு தோண்டப்பட்டதும் பின்பு தூர்க்கப்பட்டதுமான பிருதிவியின்

ஏகதேசம் போன்று. இவ்வாறு மஹத்ஜலம் ஜன்மமுடையது ஜலத் தன்மையால் சந்திரகாந்தகலலினின்றும் வெளிப்பட்ட ஜலம்போன்று இவ்வாறு கடைதலினால் வெளிப்பட்ட அக்னி முதலியவற்றின் திருஷ்டாந்தத்தால் மஹத்தான அக்னி முதலியவற்றினுற்பத்தியுமனு மிக்கத்தக்கது எனக்கூறுகின்றார்:—

### சுலோகம்

**क्षितिजलदहनेषु तत्प्रदेशाञ्जनिसहितानुपलभ्य तद्बलेन ।**
**क्षितिजलदहनत्वलिङ्गमार्गादपि जनिमेष्वनुमाय तर्कयन्ति ॥ ४९७ ॥**

### பதவுரை

**क्षितिजलदहनेषु**-பிருதிவி ஜலம் அக்கினியாகிய இவைகளில்

**तत्प्रदेशान्**-அவற்றின பிரிவாயுள்ள வேதிகை சந்திரகாந்தஜலம் நிர்மந்தன அக்னியாகிய இவைகள்

**जनिसहितान्**-உற்பத்தியோடு கூடியிருப்பதை

**उपलभ्य**-அறிந்து

**तद्बलेन**-அத்திருஷ்டாந்த பலத்தால்

**क्षितिजलदहनत्व लिङ्गमार्गात् अपि** பிருதிவித்தன்மை ஜலத்தன்மை அக்னித் தன்மை வடிவ லிங்கவாயிலாலும்

**एषु**-பிருதிவி அப்பு தேயுக்களில்

**जनिम् अनुमाय**-உற்பத்தியினை அனுமானஞ்செய்து

**तर्कयन्ति**-அவற்றின் உற்பத்திக்குக்காரணமாக சேதன காரணத்தை ஊகிக்கின்றனர். (497)

நிர்மந்தன அக்னி-கட்டையைக்கடைதலால் உண்டாகிய நெருப்பு

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் காரியத்தன்மை ஏதுவிற்குப் பக்ஷதருமத்தன்மை சித்தித்த வழி அதனை ஏதுவாகஉடையதும் தர்க்கிக்கின்றனர் என்பதனால் சூசிப்பிக்கப்பட்டதுமான சேதனகாரணத்தின் அனுமானத்தை தெரிசிப்பிக்கின்றார்:—

### சுலோகம்

**जनिमदभवदेतच्चेतनादेव हेतो-**
**र्घटवदिति पुनस्तत्कारणे चेतनत्वम् ।**

अनुमिमत उदर्के कार्यतालिङ्गतोऽमी
जगति हि परिदृष्टं चेतनादेव कार्यम् ॥ ४९८ ॥

## பதவுரை

**एतत्**—மஹாபிருத்வி முதலியவை
**चेतनात् एव हेतोः**—சேதனவடிவ காரணத்தாலேயே
**जनिमत् अभवत्**—உற்பத்தியுடையதாகவாயிற்று
**घटवत् इति**-கடம் போன்று என
**पुनः**-மீண்டும்
**तत्कारणे**—ஜகத்காரணத்தின்கண்
**चेतनत्वम्**—சேதனத்தன்மையினை
**उदर्के**—பக்ஷத்தின்கண் ஹேதுசித்தியினனந்தரம்
**कार्यतालिङ्गतः**—கார்யத்தன்மைவடிவ ஹேதுவால்
**अमी**—முமுக்ஷுக்கள்
**अनुमिमते**—அனுமானஞ்செய்கின்றனர்
**जगति**—உலகின்கண்
**चेतनात् एव**-குலாலன் முதலிய சேதன புருடராலேயே
**कार्यम्**-கடம் முதலிய காரியமானது
**परिदृष्टम्**—காணப்பட்டுளது
**हि**-இது பிரசித்தமாம்

## விசேஷவுரை

மஹாபிருதிவி யென்பது பக்ஷவாசகமாம் உற்பத்தியுடையது என்பது பூர்வ சுலோகத்தில் சிந்தித்தது அதன்கண் சேதன வடிவ காரணத்தால் என்பது ஹேதுநிர்த்தேசமாம். மீண்டும் என்னும் சப்தம் சித்தாந்தத்தில் விசேஷத்தியோதகமாம். அவ்விசேஷத்தினையே கூறுகின்றார் சேதன வடிவ என்பதனால். விமதம் அதாவது பிருதிவி முதலியவை (உபாதான அபின்ன) சேதனத்தால் தோன்றியது-காரியமாதலால், கடம் போன்று, கடாதிக்கும் சித்தாந்தத்தின்கண் அப்படிப்பட்ட தன்மையுண்மையின் சாத்தியவைகல்யமின்றும். அல்லது வாதியைக் குறித்து சுகம் முதலியவை திருஷ்டாந்தமாகுக என்று பிருதிவியாதிக்குச் சேதன காரணத்தையுடையதாந் தன்மையினை அனுமிக்கின்றனர். குலாலாதி ஜன்னிய கடாதியின்கண்ணும் கூறிய சாத்திய

வியாப்தியுளது என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார் உலகின்கண் என. காரியலிங்கமாகிய அனுமானமும் சேதன காரணத்தின் சொரூபத்தை நிச்சயஞ் செய்வதில் அந்நியத்தை யபேக்ஷியாமல் சமர்த்த மாவதின்றும். மற்றோ அதன் சொரூபத்தைச் சாதிக்கின்ற சுருதியினை யபேக்ஷித்தே கூறிய பிரகாரத்தால் சேதன காரணத்தைப் போதிக்கின்றதாகி அதன் பொருளைச் சம்பாவனை செய்கின்றது. ஆதலின் அதன்கண் தர்க்கமேயாம எனத் தர்க்கிக்கின்றனர் என்பதனால் சூசிப்பிக்கப்பட்டது. (498)

## அவதாரிகை

அற்றேல் அனுமானத்தால் சேதனகாரணம் சித்தித்தவழி வைசேஷிகாதி மதத்தைப்போன்று அதுவே சர்வஞ்ஞசாதகமாய் அதன்கண் பிரமாணமாகுக. அதற்குத் தர்க்கத்தன்மையினை அங்கீகரித்தல் எற்றிற்கு அதனால் அநாவது அனுமானத்திற்கே பிரமாணத்தன்மையை அங்கீகரித்தல் உசிதமாதலால் வேதாந்தத்திற்கு வியர்த்தத்தனையாமென்னுஞ் சங்கைக்குக் கூறிய பிரகாரத்தால் அவ்வனுமானத்தால் சாமான்யமாக யாதோ ஒரு சேதனம் ஜகத்தின் காரணமாகச் சித்திக்கின்றது. அப்படியாயினும் அதன்கண் ஏகத்தன்மை நாநாத்தன்மைச் சம்சயங்கள் நீங்காமையின் அஃது சர்வஞ்ஞத்தன்மையினையும் சர்வசத்தியினையும் உடையதா அல்லது அதனினும் விபரீதமா என்பது முதலிய சம்சயம் நிவர்த்தியாகாது. அதற்குக் காரணமான அதன் ஏகத்தன்மை அநேகத்தன்மை விஷயக அஞ்ஞானம் நிவர்த்திக்கப்படாமையின். இவ்வாறு ஜகதுபாதானத்திற்கு நிர்விசேஷத்தன்மை முதலிய சித்தியும் அவ்வனுமானத்தால் உண்டாகாது. ஆதலின் அஃது தர்க்கமாத்திரமேயாம் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்: —

## சுலோகம்

जगदुदयनिमित्तं चेतनं किं नु नाना
किमु भवतु तदेकं सर्ववित्सर्वशक्ति ।
इति भवति तु पश्चात्कारणे चेतनेऽस्मि-
न्ननवगतिनिमित्तः संशयो दुर्निवारः ॥ ४९९ ॥

## பதவுரை

**कारणे चेतने अस्मिन्**—ஜகத்காரணமான இச்சேதனமானது அனுமானத்தாற்சித்தித்ததாயினும் அதன்கண்

**पश्चात्**—பின்பு

**अनवगतिनिमित्तः**—அதன் சொரூபவிஷயக அஞ்ஞானத்தை நிமித்தமாகக்கொண்டு

**संशयः दुर्निवारः**—இந்தப்பிரகாரம் சம்சயமானது நிவர்த்திக்கத் தகாததாயுண்டாகின்றது.

[ அச் சம்சயத்தின் பிரகாரத்தையே அபிநயத்தால் கூறுகின்றார். ]

**जगदुदयनिमित्तम्**—ஜகத்தின் உத்பத்திகாரணமான

**चेतनम्**—சேதனமானது

**किं नु नाना**—அநேகமா ?

**किमु तत् एकं भवतु**—அல்லது ஏகமா ?

[ ஏகமாயின் அப்போது சித்தாந்தத்தின் அடைவு சித்தித்தது எனக்கூறுகின்றார். ]

**सर्ववित्**—சேதனமேகமென்னும் பக்ஷத்தில் சர்வத்தையுமறிவதாய்

**सर्वशक्ति**—சர்வசாமர்த்தியத்தினையுமுடையதாய்

**इति तु भवति**—இவ்வாறு சித்திக்கின்றது.

## விசேஷவுரை

அற்றேல் லாகவதர்க்கத்தால் உபகரிக்கப்பட்ட கூறிய அனுமானத்தாலேயே காரணத்தின் ஏகத்தன்மை சித்தித்தலால் அஃது சர்வஞ்ஞமும் சர்வசத்தியுமாமெனச் சித்திக்கின்றது. ஆதலின் அநுமானத்தினனந்தரம் அதன் ஏகத்தன்மை முதலியவற்றின் சம்சயம் எவ்வாறு கூடும் எனின் நீ கூறியது வாஸ்தவந்தான் அனுமானத்தால் அதன் ஏகத்தன்மை நிச்சயிக்கப்படுமாயின் அப்போது சம்சயம் சம்பவியாது. உலகின் கண்ணும் விசித்திரமான அரண்மனை முதலியவற்றிற்கு அநேககர்த்தாக்களை யுடையதாந்தன்மை காணப்படுதலால் அதனை அனுசரித்த லிங்கத்தால் அதனினும் விபரீதமான நிச்சயம் சம்பவியாமையின் சம்பவிக்கின்ற லகுவிஷயத்தின் கண்ணேதான் லாகவதர்க்கமும் பிரவிருத்திக்கும். சங்கை—உலகின்கண் கர்த்தாக்களுக்கு சர்வஞ்ஞத்துவமும் சர்வசக்தித்துவமும் இன்மையால் விசித்திர கார்யத்தை செய்யும்

தன்மை ஓர் கர்த்தாவிற்கு சம்பவியாவிடினும் சர்வஞ்ஞ ஈஸ்வரனுக்கு அஃது சம்பவித்தலால் லாகவதர்க்கத்திற்கு அவகாசமுளது எனின் இவ்வாறுயின் [1] அந்நியோன்னியாசிரயதோஷம் வருதலால் எவ்வாற்றானும் லாகவப்பிரவிருத்திக்கு முன்பு கர்த்தாவினிடத்தில் சர்வஞ்ஞத்துவாதி சம்பாவனையின் லேசமுமின்மையின் மேலும் கர்த்தாவின் கண்ணுள்ள ஏகத்தன்மை ஏகத்துவசங்கியையாகிய வடிவாக அங்கீகரிக்கின் அப்போது அதன் நாநாத்தன்மையின் கண்ணும் அஃது சித்திக்கின்றது. ஆதலின் அதனால் சர்வக்ஞத்துவாதியின் சித்தி எங்ஙனமாம். அல்லது கர்த்தாவின் ஏகத்துவம் கர்த்தாவின் அபேதமாம் என அங்கீகரிக்கின் அப்போது இவ்வனுமானத்திற்கு முன்பு க்ஷிதி ஜலம் முதலியவற்றிற்குக் கர்த்தா சித்தியாமையின் அதனை அதாவது அக்கர்த்தாவைப் பிரதியோகியாக வுடைய பேதம் அறியப்படாமையின் அதனது அதாவது அப்பேதத்தினது அபாவம் அனுமிதிக்கு விஷயமாகாது. பிரதியோகிஞானமின்றி பேதயாவது அதனது அபாவமாவது சித்திக்கின்றதில்லையன்றோ ஆதலால் அனுமானத்தால கர்த்தாவின் ஏகத்துவ நிச்சயம் உண்டாகாமையின் சம்சயமே உண்டாமாதலின சர்வஞ்ஞத்துவாதியின் சித்தி எவ்வாற்றாலும் அவ்வனுமானத்தால் உண்டாகாதெனபது கருத்து. (499)

# ஜகத்திற்கு அபின்னநிமித்த உபாதானத்தைச் சாதித்தல்

## அவதாரிகை

அப்படியானல் உமது மதத்தின்கண்ணும் காரணத்தின் ஏகத்தன்மை எப்படிச் சித்திக்கும் என்னுஞ்சங்கைக்கு "யதோ வா இமானி பூதானி ஜாயந்தே யேன ஜாதானி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபிஸம்விஶந்தி" எதினின்றும் இப்பூதங்கள் உண்டாகின்றனவோ உண்டான அவைகள் எதனல் ஜீவிக்கின்றனவோ இறக்கின்றவைகளாகி எதன்கண் லீனத்தையடைகின்றனவோ என ஜகத்காரணத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியத்தின் கண்ணுள்ளதும் அனுமானத்தாற் சித்தித்த காரணத்தை

1. கர்த்தாவிற்கு ஏகத்தன்மை சித்திக்கின் சர்வக்ஞத்தன்மை சித்தியாம் சர்வஞ்ஞத்தன்மை சித்திக்கின் கர்த்தாவின் ஏகத்தன்மை சித்தியாம் ஆதலின் அந்நியோன்னியாசிரயமாம்.

அனுமாநஞ் செய்கின்றதுமான எதினின்றும் என்னும் சப்தத்தின் ஏக வசனத்தால் அஃது சித்திக்கின்றது எனக்கருதிக் கூறுகின்றார்:—

*சுலோகம்*

**श्रुतिवचनविशेषाच्चेतने कारणेऽस्मिन्**
**यत इति निरवद्यादेकताधीरथागात् ।**
**प्रकृतिरिति च तस्मिन्कारणे पञ्चमीयं**
**जनयति दृढबुद्धिं तद्विधानादिहैव ॥ ५०० ॥**

*பதவுரை*

**अथ**–கூறிய அனுமானத்தினனந்தரம்

**निरवद्यात्**-அனுமானத்திற் கூறப்பட்ட சங்கைவடிவ கலங்கசூன்ய

**यतः इति श्रुति वचनविशेषात्**-எதினின்றும் என்னும் ஏகவசன வடிவ சுருதியினல்

**चेतने कारणे अस्मिन्**-ஜகத்காரண இச்சேதனத்தின் கண்

**एकताधीः**-ஏகத்தன்மையின் ஞானம்

**अगात्**–உண்டாகும் **यतः इति** எதினின்றும் என்னும் சப்தமானது பன்மைக்கும பொதுவாம் அங்ஙனமாயினும் எதனல் உண்டானவை யெனப்பின்புள்ள ஏகவசனத்தினல் அதற்கும் ஏகவசனத்தன்மை நிர்ணயம் செய்யப்பட்டதென்பது கருத்து.

[ அற்றேல் அனுமானத்தாற் சித்திந்த சேதன காரணத்தினை யனுவாதஞ் செய்கின்ற எதினின்றும் என்னும் சப்தத்தின் ஏக வசனத்தால் ஜகத்கர்த்தாவிற்கு ஏகத்தன்மை சித்திக்கும் அங்ஙன மாயினும் அதற்கு உமது அபிமதமான உபாதானத்தின் அபேதம் சித்தியாது என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்றார். ]

**तस्मिन् कारणे**-ஜகத்காரண அச் சேதனத்தின்கண்

**इयं पञ्चमी**–எதில் நின்று என்னும் இந்த ஐந்தாம் வேற்றுமை யானது

**प्रकृतिः इति**–உபாதான காரணமாமென்னும்

**दृढबुद्धिम् च**–திடஞானத்தினையும்

**जनयति**–உண்டுபண்ணுகின்றது

[ அதில் ஏதுவினைக் கூறுகின்றார் ]

**इह तद्विधानात् एव-जनिकर्तुः प्रकृतिः** என்னும் சூத்திரத்தால் பிரகிருதித்தன்மையின்கண் ஐந்தாம் வேற்றுமையை விதித்திருத்தலி னாலேயே அபின்ன நிமித்தோபாதானம் சித்திக்கின்றதென்பது பொருள்.

## விசேஷவுரை

புத்திரனின்றும் பிரமோதம் உண்டாகின்றது. என்பது முதலிய பிரயோகத்தையனுசரித்து ஈண்டு பிரகிருதி சப்தமானது நிமித்தம் உபாதானம் இரண்டிற்கும் பொதுவாம் அங்ஙனமாயினும் பிரகிரு தத்தின்கண் அபேக்ஷிக்கப்பட்ட ஜகதுபானத்தன்மையின் பிரதீதி அவ்வைந்தாம் வேற்றுமையாற் சம்பவித்தலின் யாதொரு தோஷமு மின்றும். மாறாக அபேக்ஷிக்கப்பட்ட நிமித்தத்தன்மையும். அதனாற் சித்திக்கின்றதாதலின் நன்றேயாம். வேறு சுருதியின்கண்ணும் **तदैक्षत बहु स्याम् प्रजायेय** அநேக வடிவங்களாவேனென அது ஈக்ஷணஞ் செய்தது. என ஒரே சேதனத்திற்கு இருவித காரணத் தன்மை ஸ்பஷ்டமாகக் கேட்கப்படுகின்றது.

அற்றேல் உபாதானகாரணத்திற்கு நாநாத் தன்மை நியம மாத லாலும் உபாதானத்திற்கும் கர்த்தாவிற்கும் பேதம் நியமமாதலாலும் இஃது பாதிதமாமெனின் அற்றன்று. எதனாலெனின் உபாதானத் தன்மை நாநாத் தன்மையின வியாப்பியமன்றும் ஒருவ உபாதான கடாதியின்கண் வியபிசாரம் வருதலால் திரவியத்தின் உபாதானத்தின் கண் இந்நியமமாமென்பதும் சரியன்று ஒரே ரஜ்ஜுவிற்கே சர்ப் பாதியின் அதிஷ்டானத் தன்மையுண்மையின், . ரஜ்ஜு சர்ப்பாதிக்குப் போன்று ஆகாசாதிக்கும் அஞ்ஞாதபிரம்மத்தின் விவர்த்தத்தன்மையால் விசேஷமின்மையின் இந்தப்பிரகாரம் ஒரே ஆன்மவடிவ உபாதானத்தின் நின்றும் நாநாப்பிரகாரமான சொப்பனப்பிரபஞ்சம் உற்பத்தியாவதாலும் சித்தாந்தத்தின்கண் இந்நியமம் இன்றும் அதாவது உபாதானகாரணத் திற்கு நாநாத்துவம் நியதமின்றும். இதனாலேயே உபாதானத்திற்கும் கர்த்தாவிற்கும் பேதமும் நியதமன்றும்.

மேலும் யாண்டும் காரியத்தின்கண் சைதன்யம் ஒன்றற்கே குலாலாதி சரீராவச் சின்னமாக நிமித்தத்தன்மையும் மிருதாதி அவச் சின்னமாக உபாதானத்தன்மையுமாம் ஆதலின் உபாதானத்திற்கும் கர்த்தாவிற்கும் பேதத்தின்கண் திருஷ்டாந்தமேயின்றும். வாதிமதத்தின்

கண்ணும் தேவதத்தன் அறிகின்ருன் இச்சிக்கின்ருன் என்பது முதலிய பிரதீதியை அநுசரித்து ஞாநுதியின் உபாதானத்திற்கே கர்த்திருத் தன்மையாம் இந்தப்பிரகாரம் ஈஸ்வரான்மாவுக்கும் கடத்திற்குமுள்ள சம்யோகத்தின்கண் ஈஸ்வரன் ஒருவனுக்கே நிமித்தத்தன்மையும் உபாதானத்தன்மையுமாம். ஆதலின் வாதிக்கு அப்பிரசித்தமான விஷயம் நம்மாற் சொல்லப்படவில்லை இவ்வாறு ஜகத்தின் உபாதான காரணமும் நிமித்தகாரணமும் ஏகமே எனச்சித்தித்தது. (500)

### அவதாரிகை

உபாதான காரணமும நிமித்தகாரணமும் ஏகமே என்னும் இப் பக்ஷத்தினை ஆக்ஷேபிக்கின்ருர்:—

### சுலோகம்

एकत्वमेकवचनादवगम्यमानं
यच्छब्दवाच्यनिलयं यत इत्यमुष्मिन् ।
वाक्ये जगत्प्रकृतिगामितया न विद्म
संख्यां विभक्त्यभिहिते वचनं हि नाऽऽह ॥ ५०१ ॥

### பதவுரை

यतः इति अमुष्मिन् वाक्ये-எதில் நின்றும் என்னுமிவ்வாக்கியத்தின் கண்ணுள்ள
एकवचनात्-ஒருமை விபத்தியினுல்
अवगम्यमानम्-அறியப்படுகின்ற
एकत्वम्-ஏகத்தன்மையானது
यच्छब्दवाच्यनिलयम्-எதினின்று என்னும் சப்தத்தின் பிரகிருதி அர்த்தமாத்திரத்தினையாசிரயித்திருப்பது
जगत्प्रकृतिगामितया-விகுதியின் பொருளான ஜகத்தின் பிரகிருதித் துவ விசிஷ்ட ஆசிரயமாக
न विद्मः-அதனை நாங்கள் அறியோம் (எதனுலெனின்)
वचनम्-ஒருமை முதலிய விபக்தியானது
विभक्त्यभिहिते-விகுதியாற் கூறப்பட்ட அர்த்தத்தின்கண்
संख्याम्-தனது வாச்சியமான எண்ணிக்கையை
न आह हि-கூறுகின்றதில்லை ஆதலின்

### விசேஷவுரை

எதினின்றும் என்னும் ஏகவசனத்திற்கு ஐந்தாம் வேற்றுமையால் பிரதிபாத்தியமான பிரக்ருதித்துவ விசிஷ்டத்தின்கண் தனது வாச்சியமான சங்கியைப்பிரதிபாதிதத்தற்கு ஆற்றலின்மையின் பிரகிருதி ஒன்றேயென்னும் ஞானம் எப்படியுண்டாம் உண்டாகாதென்பது கருத்து.

### அவதாரிகை

வசனத்திற்கு விகுதிப்பொருளோடு கூடிய தனது அர்த்தத்தைப் பிரதிபாதிக்குந்தன்மை ஓரிடத்துங்காணப்படவில்லையாதலின் உபாதானம் ஒன்றேயென்னும் புத்தி சம்பவியாது எனக்கூறுகின்றார்:—

### சுலோகம்

न हि विभक्त्यभिधेयपदार्थगं
वचनमाह निजं विषयं क्वचित् ।
वचनवाच्यगतं न वदन्ति च
स्वमभिधेयमशेषविभक्तयः ॥ ५०२ ॥

### பதவுரை

**वचनम्**-எதினின்றும் என்பதன்கண்ணுள்ள ஏகவசனமானது

**निजम् विषयम्**-தனது வாச்சியமான ஏகத்துவாதியர்த்தத்தினை

**विभक्त्यभिधेयपदार्थगम्**-விகுதியின் வாச்சியார்த்தமாகிய காரகத்தின் கண்ணுள்ளதாக

**नहि आह**-கூறுகின்றதில்லையன்றே

[அப்படியானால் விகுதிக்கு வசனத்தின் வாச்சியார்த்த ஏகத்துவாதி விசிஷ்ட தனது அர்த்தமாகிய ஜகத்காரணத்துவத்தைப்பிரதிபாதிக்குந் தன்மையுளதாகுக இவ்வாறாகவே உபாதானம் ஒன்றேயென்னும் ஞானம் பொருத்தமேயாம் என்னுஞ்சங்கைக்குக்கூறுகின்றார்.]

**अशेषविभक्तयः च**-சர்வவிகுதிகளும்

**वचनवाच्यगतम्**-ஏகவசனத்தின் வாச்சியார்த்தமாகிய ஏகத்வாதி விசிஷ்டமாக

**स्वं अभिधेयम्**-தனது வாச்சியார்த்தமாகிய காரகத்தினை

**न वदन्ति**-பிரதிபாதிக்கின்றதில்லை

### விசேஷவுரை

இந்தப்பிரகாரம் ஏகவசனத்தின் யாதொரு வாச்சிய ஏகத்தன்மையுண்டோ அதன் விசிஷ்டத்தின்கண் விகுதிப்பொருளாய உபாதானத்தன்மை பிரகிருதத்தில் சித்திக்காது என்பது பொருள். (502)

### அவதாரிகை

அற்றேல் விகுதியாலும் வசனத்தாலும் அந்நியோன்னிய அர்த்தத்தோடு கூடிய தனது பொருளைப் பிரதிபாதித்தலை ஏன் செய்யலாகாது? என்னும் ஆகாங்க்ஷையுண்டாகக்கூறுகின்றார்:—

### சுலோகம்

प्रातिपदिकार्थगतमेव वचनानि
स्वं स्वमभिधेयमभिधातुमलमर्थम् ।
प्रातिपदिकार्थगतमेव निजमर्थं
वक्ति च विभक्तिरपि नेह वचनार्थे ॥ ५०३ ॥

### பதவுரை

**वचनानि**–ஒருமை முதலிய வசனங்கள்
**प्रातिपदिकार्थगतमेव**–பகுதிப்பொருளின் சம்பந்தியாகவே
**स्वं स्वमभिधेयम् अर्थम्**–தத்தம் வாச்சியார்த்தத்தினை
**अभिधातुम्**–பிரதிபாதித்தற்கு
**अलम्**–சமர்த்தங்களாம்
**विभक्तिः अपि**–விகுதியும்
**प्रातिपदिकार्थगतमेव**–பகுதிப்பொருளின் சம்பந்தியாகவே
**निजम् अर्थम्**–தனது பொருளினை
**वक्ति च**–பிரதிபாதிக்கின்றது
**इह**–ஈண்டு
**वचनार्थे**–வசனார்த்தான் விதமான ஸ்வார்த்தத்தினை
**न**–பிரதிபாதிக்கின்றதில்லை

### விசேஷவுரை

விகுதிக்குப் பகுதிப்பொருளோடு கூடியதனதர்த்தத்தை போதிக்குந்தன்மை நியமம் விற்பத்தியாற் சித்தித்திருத்தலின் வசனத்திற்கும்

விகுதிக்கும் பகுதிப்பொருளோடு கூடிய தமதர்த்தத்தைப் பிரதிபாதிப்பதின் கண்ணேயே சாமர்த்தியமாம் செனத்திற்கு விகுதிப்பொருளோடு கூடிய அர்த்தத்தைப் பிரதிபாதிப்பதின் கண்ணும் சாமர்த்தியமின்றாம். இந்தப்பிரகாரம் வேற்றுமைக்கும் வசனார்த்தத்தோடு கூடிய அர்த்தத்தை பிரதிபாதிப்பதின் கண்ணும் சாமர்த்தியமின்றாம். அவைகளுக்குப் பிரத்தியயத்தன்மை சமானமாதலின் என்பது கருத்து. (503)

## *அவதாரிகை*

அற்றேல் "पशुना यजेत" பசுவால் எஜிக்குக என்னும் வாக்கியத்தால் பசு ஏகமாகவும் கரணமாகவும் பிரதீதியாகின்றது. அது போன்று உலகத்திற்கு உபாதானகாரணம் ஒன்றே என்னும் சாப்த ஞானம் ஏனுண்டாகாது என்னும் சங்கைக்கு திருஷ்டாந்தமே எனக்குச் சம்மதமின்று என உத்தரங்கூறுகின்றார் :—

## *சுலோகம்*

**पशुनेति पदे तृतीयया करणत्वं हि पशोर्निवेद्यते ।**
**वचनेन पशोरिहैकता न पुनः सा करणस्य कथ्यते ॥ ५०४ ॥**

## *பதவுரை*

**पशुना इति पदे**–பசுவால் என்னும் பதத்தின்கண் உள்ள
**तृतीयया**–யாதொரு மூன்றாம் வேற்றுமையுண்டோ அதனால்
**पशोः**–பசுவின்கண்
**करणत्वम् हि**–கரணத்தன்மையே
**निवेद्यते**–போதிக்கப்படுகின்றது
**इह**–பசுவால் என்னும் பதத்தின்கண்ணுள்ள
**वचनेन**-ஏகவசனத்தால்
**पशोः**-பசுவின்கண்
**एकता**–ஏகத்தன்மையானது போதிக்கப்படுகின்றது
**सा**–அவ்வேகத்தன்மையானது
**करणस्य पुनः**–கரணத்வ விசிட்ட பசுவின்கண்ணோ
**न कथ्यते**-பிரதிபாதிக்கப்படுகின்றதில்லை

## *விசேஷவுரை*

இதுவும் முற்கூறிய விகுதியினை யாசிரயித்த நியாயத்தின் பலத்தாலேயே என உணர்க. (504)

### அவதாரிகை

அப்படியானல் பசு ஒன்று எனவும் கரணமெனவும் ஞானமெப்படியுண்டாம் என்னும் சங்கைக்குக் கூறுகின்ருர் :—

### சுலோகம்

**अनुपपत्तिबलेन विधेस्तयोः करणतैकतयोरवगम्यते ।**
**करणतैकपशोरिति संगतिर्न घटते हि विधिर्विरहय्य ताम् ॥**

### பதவுரை

**विधेः**—பசு விசிட்ட யாக விதியின்

**अनुपपत्तिबलेन**—வேறு பிரகாரத்தால் பொருந்தாமை வடிவ அர்த்தாபத்திப் பிரமாணத்தால்

**तयोः करणता एकतयोः**-கரணத்தன்மை ஏகத்தன்மை என்னுமவைகளுக்கு

**एकपशोः**—ஓர் பசுவிற்கு

**करणता इति**—கரணத்தன்மையாம் என்னுமிவ்வடிவத்தால்

**संगतिः**—சம்பந்தமானது

**अवगम्यते**—அறியப்படுகின்றது

**हि**—யாதொரு காரணத்தினுல்

**तां विरहय्य**—கரணத்தன்மை ஏகத்தன்மைகளுக்குக் கூறிய சம்பந்தமின்றி

**विधिः न घटते**-விதி பொருந்துகின்றதில்லையோ அக்காரணத்தால் யாகவிதியின் பொருந்தாமை வடிவ அர்த்தாபத்திப் பிரமாணத்தால் என மேல் அன்வயம் செய்க (505)

### அவதாரிகை

அற்றேல் விதிவாக்கியத்திற்கு அச்சம்பந்தமின்றி யாது பொருந்தாமை என்னும் ஆகாங்க்ஷை யுண்டாக விதியின் அநுபபத்தியை நிமித்தமாகக்கொண்ட அவ்விரண்டன் சம்பந்தத்தை உபபாதனஞ் செய்கின்ருர்:—

### சுலோகம்

**उपादानतः संख्यया संगतिः स्यादवच्छेदकत्वेन संख्यानिवेशात् ।**
**पशोरेतयोस्तेन मार्गेण कार्ये निवेशोपपत्तेरुपादानमानात् ॥ ५०६ ॥**

## பதவுரை

**उपादानतः**—விதியின் அனுபபத்திவடிவ அர்த்தாபத்திப் பிரமாணத்தால்

**पशोः**—பசுவிற்கு

**संख्यया**—ஒருமை எண்ணோடு

**संगतिः स्यात्**—சம்பந்தம் உண்டாம்

அச்சம்பந்த விசேஷத்தினையே தெரிசிப்பிக்கின்றவராய் சாமர்த்திய வடிவ லிங்கத்தால் சித்தித்த சங்கியையின் சுபாவத்தினை அதன் கண் ஏதுவாகக்கூறுகின்றார்:—

**अवच्छेदकत्वेन** – தனது ஆசிரயதிரவியத்தின் அவச்சேதகத் தன்மையால்

**संख्यानिवेशात्** – யாண்டும் திரவியத்தின் கண் சங்கியை பிரவேசிக்கின்றதாதலின் ஈண்டும் பசுவின் அவச்சேதகத்தன்மையால் சங்கியை அன்வய மாகின்றதென்பது பொருள்.

அதனுற்சித்தித்தது என்னை என்னுமிடத்துக்கூறுகின்றார்:—

**एतयोः**—கரணத்தன்மை ஏகத்தன்மைகளுக்கு

**तेन मार्गेण**—பசுவின் அன்வய துவாரத்தால்

**उपादानमानात्**—அர்த்தாபத்திப் பிரமாணத்தால்

**कार्ये**—பசு யாக வடிவ கார்யத்தின் கண்

**निवेशोपपत्तेः**—பிரவேசம் பொருந்துதலின் பசு ஒன்று கரணம் என்னும் ஞானம் பொருந்துகின்றது. என்பது எஞ்சி நின்றது.

## விசேஷவுரை

ஈண்டு இஃது கூறப்பட்டதாகின்றது-பசுவால் யஜிக்குக என்னு மிடத்து பசு என்னும் பிராதிபதிக சப்தத்தால் பசுவும் விபத்தியாலும் வசனத்தாலும் கரணத்தன்மையும் ஏகத்தன்மையும் அறியப்படுகின்றது. அவைகளுக்கு விதியோடேயே சம்பந்தமாம் அதன் பிரகரணத்தின் கண் அறியப்பட்ட எல்லாவற்றிக்குமே அதனோடேயே அன்வயம் உளதாதலின். *சங்கியையும் உபாதேயத்தின் விசேஷணத்தன்மையால்* விவக்ஷிதமாம்.

ஆண்டு நேரே அவைகட்கு விதியோடு அன்வயம் பொருந்தாமை யானும், விதிக்கும் தனது விஷயமான பகுதிப்பொருளின் காரணமின்றி காரியத்வஞானம் முடிவு பெறுமையின், பசுவை பகுதிப்பொருளின் காரணத்தன்மையால சேர்ப்பிக்கின்றது காரணமாயுள்ள பசுவிற்கும் அவச்சேதக சங்கியா விசேஷமின்றி விதிக்கு மீண்டுமன்வயானுபபத்தி முன்போலவேயாம். ஆதலின் அந்ந சாமர்த்தியத்தின் அனுசாரத்தால் காரணமாகுவின் அவச்சேதகத்தன்மையால் சங்க்யை கிரகிக்கின்றது, ஆதலின் வசனார்த்தத்திற்கும் விபக்தியர்த்தத்திற்கும் அர்த்தாபத்திப் பிரமாணத்தால் பசுவோடும் பரஸ்பரமும் சம்பந்தம் சித்தித்தது. பசுத் தன்மை காரணத்தன்மைகளுக்கும் காரியத்தோடு சம்பந்தமும் சித்தித்தது. (506)

## அவதாரிகை

இவ்வாறாயின் எதில் நின்றும் இப்பூதங்களுண்டாகின்றனவோ என்னும் வாக்கியத்தின் கண்ணும் வசனார்த்தத்திற்கும் விபக்தியர்த்தத் திற்கும் இவ்வாறே அன்வயம் உளதாதக என்னும் சங்கைக்கு இவ்வாறு பொருத்தமன்று. ஈண்டு விதியின்மையின் எனக்கூறுகின்றார்:-

## சுலோகம்

न चैवं विधिः कश्चिदत्रेति न स्यादुपादानतः संगतिर्यत्पदार्थे ।
विभक्त्यर्थसंख्यार्थयोर्नेह कश्चिद्यतो वा इमानीति वाक्ये विधिर्नः ॥

## பதவுரை

**एवम्**-பசுவால் யஜிக்குக என்னும் வாக்கியத்தின் கண் எப்படி விதியுளதோ அப்படி

**अत्र**-எதில் நின்றும் இப்பூதங்கள் உண்டாகின்றனவோ என்பதாதி வாக்கியத்தின் கண்

**कश्चित् विधिः**-உத்பத்தி வினியோக முதலியவற்றை விஷயமாக வுடைய யாதோர் விதியும்

**न च इति**-இன்றாம் பகுதிப்பொருளை விஷயமாகவுடைய அவ்விதி யானது ஸ்வயம் சித்த சுத்த பதார்த்தத்தின் கண் சம்பவியாமையின் என்பது பொருள்.

[விதி சம்பவியாதபோது திரண்ட பொருளைக் கூறுகின்றார்]

उपादानतः-அர்த்தாபத்திப் பிரமாணத்தால்
यत्पदार्थे எதில் நின்றும் என்னும் பதார்த்தத்தின் கண்
विभक्त्यर्थ संख्यार्थयोः - விபக்தியர்த்தத்திற்கும் வசனார்த்தத்திற்கும்
संगतिः-சம்பந்தமானது
न स्यात्-சித்திக்காது

அற்றல்-ஈண்டும் "तद्विजिज्ञासस्व" பிரம்மத்தினை யறிய விரும்புக என்னும் விதிகேட்கப்படுகின்றது என்னும் சங்கைக்கு பிரம்ம ஸ்வரூபத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியத்தில் நின்றும் அவாந்தர வாக்கியமான அதற்கு பேதமுளதாதலின் அவ்விதியின் ஆகாங்கை யினால் சொரூபத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியத்தின் கண்ணுள்ள பதார்த்தங்களினன்வயம் பொருத்தமன்றும் என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

नः-எமது சித்தாந்தத்தின் கண்
इह-ஈண்டு
यतो वा इमा } எதில் நின்றும் இப்பூதங்கள் உண்டாகின்றனவோ
नीतिवाक्ये- } என்பதாதி வாக்கியத்தின் கண்
कश्चिद्विधिः न-யாதொரு விதியும் இன்றும் ஆதலால் இவ் வாக்கியத்தினால் உபாதானம் ஒன்றே என்னும் ஞானம் சம்பவியாது என்பது கருத்து. (507)

## அவதாரிகை

இப்போது சித்தாந்தியானவர் பசுவின் ஏகத்தன்மை காரணத் தன்மைகளுக்குப்போன்று பிரகிருதத்தின் கண்ணும் எது என்னும் பதார்த்தத்தின் கண் வசன விபக்தியர்த்தங்களின் அன்வயம் பொருந்துகின்றது என அவர் கூறிய விதியின் அபாவத்தை யங்கீகரிக் கின்றவராய் கூறுகின்றார் :—

## சுலோகம்

अवितथमिदमेवमेतदस्मिन्न खलु विधेर्वचनं पठन्ति वाक्ये ।
यत इति घटते तथापि योगो वचनविभक्तिनिगद्ययोरिहापि ॥

## பதவுரை

इदम्-பசுவின் ஏகத்தன்மை காரணத்தன்மைகளுக்கு விதியின் சாமர்த்தியத்தினாலேயே பரஸ்பரம் சம்பந்தமாம் என்னும் இது

**अवितथम्**-உண்மையே

**एवम्**-இந்தப்பிரகாரம்

**एतत्**-எதில் நின்றும் என்னும் வாக்கியத்தின் கண் விதியின் அபாவமாம் என்னும் இதுவும் உண்மையே

அங்கீகரிக்கப்பட்ட விதியின் அபாவத்தினையே கூறுகின்றார்:—

**यत इति अस्मिन् वाक्ये**-எதில் நின்றும் என்னுமிவ்வாக்கியத்தின் கண்

**विधेः वचनम्**-விதி சப்தத்தினை

**न खलु पठन्ति**-படிக்கின்றார்களில்லை

அப்படியானல் அவைகட்கு அன்வயமெப்படியுண்டாம் என்னும் சங்கைக்குக் கூறுகின்றார்:—

**तथापि**-ஈண்டு விதாயக சப்தத்தினைப் படியாராயினும்

**वचनविभक्ति निगद्ययोः**- வசனத்தினதும் விபக்தியினதும் வாச்சியார்த்தங்களான ஏகத்தன்மை பிரகிருதித்தன்மைகளுக்கு

**इहापि**-எதில் நின்றும் என்னும் வாக்கியத்தின் கண்ணும்

**योगः घटते**-பரஸ்பரம் ஸம்பந்தம் பொருந்துகின்றது. (508)

## அவதாரிகை

அற்றேல் பிரதிக்ஞை மாத்திரத்தால் வஸ்துவின் சித்தியின்றும் ஈண்டு அவைகட்கு சம்பந்தத்தைப்போதிக்கும் யாதோரேதுவையும் கண்டிலேன் என்னும் சங்கைக்குக் கூறுகின்றார்:—

## சுலோகம்

**एकत्वमेकवचनेन समर्पितं यद्यच्छब्दवाच्यनिलयं यत इत्यमुष्मिन् ।**
**पञ्चम्युपात्तमपि यत्प्रकृतित्वमस्मिन्संगच्छते तदुभयं परवस्तुनीव ॥**

## பதவுரை

**यत इति अमुष्मिन्**-எதில் நின்றும் என்னுமிவ்வாக்கியத்தின் கண்

**एकवचनेन** ஏகவசனத்தால்

**यच्छब्दवाच्यनिलयम्**-எது என்னும் சப்தார்த்தமான ஜகத் காரணத்தை யாசிரயித்ததாக

**यत् एकत्वम्**-யாதொரு ஏகத்தன்மை

**समर्पितम्**–சமர்ப்பணம் பண்ணப்பட்டதோ

**पञ्चम्युपात्तमपि**-இவ்வாறு எதில் நின்றும் என்னும் ஐந்தாம் வேற்றுமையால் கிரகிக்கப்பட்டதாய் ஜகத்காரண சம்பந்தியாய்

**यत् प्रकृतित्वम्**–யாதொரு பிரகிருதித்தன்மையுண்டோ

**तदुभयम्**–அவ்விரண்டும்

**अस्मिन्**–ஜகத்காரண வஸ்துவின் கண்

**पशुवस्तुनीव**–பசுவின் கண்ணே ஏகத்தன்மையும் கரணத் தன்மையும் சம்பந்தமாவது போன்று

**संगच्छते**–பரஸ்பரம் சம்பந்திக்கின்றது

## விசேஷவுரை

எதில் நின்றும் என்னுமிவ்வாக்கியமானது '**तद्ब्रह्म विजिज्ञासस्व**' என்னும் வாக்கிய சேஷத்தாலறியப்பட்ட பிரம்மத்தின் லக்ஷணத்தைப் போதிக்கின்றது. அதுவும் அதாவது பிரம்மத்தின் லக்ஷணமும் ஜகத்தின் பிரகிருதித்தன்மை மாத்திரத்தால் சித்திக்கின்றதில்லை. ஜகத்தின் பிரகிருதிகளுக்கு அநேகத்தன்மையுளதாயின் ஏகபிரம்மத் திற்கு அதன் வடிவத்தன்மை பொருந்தாமையின் ஜகத்தின் பிரகிருதித்வ விசிட்டத்திற்கு வசனார்தத ஏகத்தன்மையோடு சம்பந்தம் லக்ஷிய பிரம்மத்தாலபேக்ஷிக்கப்பட்டது ஆதலின் பிரகிருதி ஒன்றேயாமெனச் சித்திக்கின்றது என்பது கருத்து. (509)

## அவதாரிகை

அற்றேல் பிரம்மத்தின் லக்ஷியத்தன்மை சாமர்த்தியத்தால் விபக்தியர்த்தத்திற்கும் வசனார்த்தத்திற்கும் சம்பந்தமாமென்று யாதொன்று சொல்லப்பட்டதோ அஃது பொருத்தமன்று சித்தாந்தத் தின் கண் ஜகத்காரணத் தன்மை இனி கூறப்படும் ரீதியால் கிருகத்திற்குக் காகம் போன்று தடஸ்த லக்ஷணமாம் அத்தடத்த லக்ஷணத்தன்மையும் காகம் போன்று அறியப்பட்டதற்கென்றே சொல்லவேண்டும் ஜகத்தின் ஏகப்பிரகிருதித்தன்மையானது அன்னியத் தால் அறியப்படவில்லை. இவ்வாக்கியத்தினாலேயே அதன் ஞானமாம் என்று சொல்லற்க, ஓர் வாக்கியததிற்த காரணத்தின் ஏகத்தன்மையை யும் அதனபின்ன பிரம்ம சொரூபத்தையும் பிரதிபாதித்தல் பொருந்தா

மையின் இக்காரணத்தினலேயே அதற்கு லக்ஷணத்தன்மை பொருந்தாமையின் அதனனுபபத்தியினல் அதன் சித்தி யெவ்வாரும் என்னும் சங்கைக்கு அவாந்தர தாத்பர்ய பேதத்தால் எதில் நின்றும் என்பதாதி வாக்கியம் ஜகத்தின் உபாதானத்தின் கண் ஏகத்தன்மையினை சாதித்து அதன் அனுவாதத்தால் அஃது பிரம்மம் என்று கூறும் வாக்கியத்தினல் ஏகத்தன்மையை யடைகின்ற பிரம்ம சொரூபத்தின் பரமாம் ஆதலின் கூறிய தோஷமன்ரும் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்ருர்:—

### சுலோகம்

**एका या प्रकृतिः समस्तजननी तद्ब्रह्म जिज्ञास्यता-**
**मित्यत्रापि हि वस्तुनिष्ठवचने शक्यैव तत्संगतिः।**
**विज्ञातुं विधिमन्तरेण च तथाऽऽनर्थक्यभीत्या न हि**
**स्वाध्यायाध्ययनैकगोचरविधेरायातमर्थं विना ॥**

### பதவுரை

**समस्तजननी**—எல்லாவற்றையும் உண்டுபண்ணுவதான
**या एका प्रकृतिः**—யாதொரு ஏகப்பிரகிருதியுண்டோ
**तद्ब्रह्म**—அஃது பிரம்மமாம் என
**जिज्ञास्यताम्**—விசாரிக்கத்தக்கது
**इति अत्रापि हि**- என்னும் ஸ்தலத்தின் கண்
**वस्तुनिष्ठवचने**—வஸ்துவின் கண் தாற்பர்யமுள்ள வாக்கியத்தின் கண்
**तत्संगतिः**—வசனர்த்தத்திற்கும் விபக்தியர்த்தத்திற்கும் சம்பந்தமானது
**तथा** – விதிஸ்தலத்தில் எப்படி விதியினலறியப்படுகின்றதோ அப்படி
**विधिमन्तरेण च**—விதியின்றியும்
**आनर्थक्यभीत्या**—பிரயோஜனுபாவ பிரசங்கபயத்தால்
**विज्ञातुं शक्या एव**—அறிதற்கு யோக்கியமேயாம்

அற்றேல் பிரமாணமானது பிரயோஜனத்தையனுசரித்து தனது பொருளைச்சாதிக்கின்றதில்லை எதனல் பிரயோஜனுபாவ பிரசங்கபயத்தால் அலௌகிகார்த்தம் அதற்கு கற்பிக்கத்தகும் என்னும் சங்கைக்கு கூறுகின்ருர்:—

**अथ** **त्विना**—யதில் நின்றும் என்பதாதி வாக்கியமானது தனக்கு சுரோதாவின் இஷ்டார்த்தத்தின்கண் பர்யவசானமின்றி

**स्वाध्यायाध्ययनैक गोचरविधेः** } வேதத்தினதத்தியயன மாத்திரத்தை விஷயம் செய்யும் ஸ்வாத்தியாயோ அத்யே தவ்ய: என்னும் விதிவடிவ பிராபகத்தினுல்

**आयातम्**—பிராப்தமாக

**नहि**—ஆகாது

## *விசேஷவுரை*

விசாரிக்கத்தக்கது என்பதனுல் '**विजिज्ञासस्व**' என்னும் பதத்தின் பொருள் தெரிசிப்பிக்கப்பட்டது.

விசாரவிதிக்கும் பிரம்மத்தின் கண்ணேயே மகாதாத்பர்யமுளதாதலின் வஸ்துவின்கண் தாற்பர்யமுள்ளவாக்கியத்தின்கண் எனப்பட்டது

நான்காவது பாதத்தின் தாற்பர்யம் வருமாறு:—

அத்தியயன விதியானது அத்தியயனஞ் செய்பவனுக்கு பயனுடைய அர்த்தக்ஞானத்தினைப்பிரயோஜனமாகவுடைய வாக்கியத்தினையே அத்தியயனம் பண்ணும்படிச்செய்கின்றது. ஆதலின் அஃதின்றிய வாக்கியம் அத்தியயன விதியினுல் பிராப்தியாகாது எதில் நின்றும் என்பதாதி வாக்கியமும் அத்துவைத பிரம்மத்தின் லக்ஷணஞானத்தின் பொருட்டே அத்தியயன விதியினுல் படிக்கப்பட்டுள்ளது. ஆதலின் அஃதின்றேல் அதாவது பிரம்மத்தின் லக்ஷணஞானமின்றேல் அதனத்தியயனமும் பயனுடையதாகாது. ஆதலால் அத்தோஷத்தைப்பரிகரித்தற் பொருட்டு அவ்வாக்கியத்திற்கு விவக்ஷிக்கப்பட்ட லக்ஷணத்தின் கண்ணே தாற்பர்யசித்தியின் பொருட்டு அவ்விரண்டன் சம்சர்க்கம் காணத்தக்கது என்பது பொருள். அல்லது நான்காவது பாதத்திற்கு மற்றுமோர் பொருள்:—

ஸ்வாத்தியாயாத்தியயன விதியினுல் பிராப்தமான யாதொரு பொருளுண்டோ அஃதின்றேல் பிரயோஜனுபாவ பிரசங்கபீதியினுல் வசனுர்த்த விபக்தியர்த்தங்கட்கு சம்பந்தம் அறிதற்கியலாதா மற்ருே இயலும் என்பதனை காகுவால் தெரிசிப்பிக்கின்றது. காகு என்பது விலக்ஷணதொனி விசேஷம். (510)

## அவதாரிகை

அப்படி என்னும் சொல்லால் சூட்சிக்கப்பட்ட திருஷ்டாந்தத்தினை யும் தார்ஷ்டாந்தத்தினையும் விஸ்தரிக்கின்றவராய் கூறியமார்க்கத்தால் அவ்விரண்டன் சம்பந்தசித்தியினைக்கூறுகின்றார்:—

## சுலோகம்

**वचनार्थविभक्तिवाच्ययोरुपपन्नाऽन्वयबुद्धिरर्थतः ।**
**पशुनेति पदे यथा तथा यत इत्यादिपदेऽपि लक्षणे ॥**

## பதவுரை

**पशुना इति पदे**–பசுவால் என்னும்பதத்தின்கண்

**यथा**–எப்படி

**वचनार्थविभक्ति वाच्ययोः**– ஏகவசனார்த்தத்திற்கும் வேற்றுமை யினார்த்தத்திற்கும்

**अर्थतः**–அர்த்தாபத்திப்பிரமாணத்தால்

**अन्वयबुद्धिः**-சம்சர்க்கஞானம்

**उपपन्ना**–பொருத்தமோ

**तथा**–அப்படி

**यत इत्यादिपदे**–எதில் நின்றும் என்பதாதிவடிவ

**लक्षणे अपि**–அத்துவைத பிரமத்தின் லக்ஷணவாக்கியத்தின் கண்ணும். வசனார்த்தத்திற்கும் வேற்றுமையினார்த்தத் திற்கும் சம்பந்தமுளது. (511)

## அவதாரிகை

சித்தார்த்தத்தைப்போதிக்கும் வேதாந்த வாக்கியத்திற்கு விதி வாக்கியத்தோடு சமத்தன்மை எவ்வாறும் விதிவாக்கியமோ தனது சாமர்த்தியத்தினால் அலௌகிகார்த்தக்கூட்டத்தினைப் பிரதிபாதிக்கும் அஃது சபரஸ்வாமியாலும் விதிவாக்கியமானது சென்றதும் இருக்கின்ற தும் வருவதும் என்பதாதியாகக்கூறப்பட்டுள்ளது என்னும் சங்கைக்கு சித்தார்த்தபோதகவாக்யமும் தாத்பர்யத்தால் எப்பொருளைப் பிரதி பாதிக்குமோ அதனாலபேக்ஷிக்கப்பட்ட வேறுபொருளையும் ஏன் பிரதி பாதிக்காது மற்றோ பிரதிபாதிக்கும். அன்றேல் அதன் தாத்பர்யத்தின்

நிர்வாகம் சம்பவியாமற்போம். விதிவாக்கியத்திற்கும் அதன் சாமர்த்தியத்தாலேயே அப்படிச்சாமர்த்தியமாம். அன்றேல் '**वसन्ते ज्योतिषा यजेत**' வசந்த காலத்தில் ஜோதிஷால் யஜிக்குக என்னுமிடத்து வேறுகர்மமும் '**ग्रहं संमार्ष्टि**' பாத்திரத்தினைச் சுத்தி செய்க என்னுமிடத்து ஏகத்தன்மையும் விசேஷணமாக ஏன் கற்பிக்கலாகாது என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

## சுலோகம்

**विधिनिष्ठवाक्यमपि बोधयति स्वमपेक्षितं विषयमर्थवशात् ।**
**परमात्मनिष्ठमपि तुल्यमिदं वचसोर्द्वयोरपि तु रूपमतः ॥ ५१२ ॥**

## பதவுரை

**विधिनिष्ठवाक्यमपि**–கிரியையைபோதிக்கும் வாக்கியமும்

**अपेक्षितम्**–அபேக்ஷிக்கப்பட்ட

**स्वं विषयम्**–தனது விஷயத்தினை

**अर्थवशात्**–அர்த்தத்தின் சாமர்த்தியத்தால்

**बोधयति**–போதிக்கின்றது

**परमात्मनिष्ठमपि**–பரமான்மாவின்கண் தாத்பர்யமுள்ள வாக்கியமும். அபேக்ஷிக்கப்பட்ட தனது விஷயத்தினை அர்த்தத்தின் சாமர்த்தியத்தால் போதிக்கின்றது என அன்வயம் செய்க

திரண்டபொருளைக்கூறுகின்றார்:—

**अतः**–யாதொரு காரணத்தினால் இங்ஙனமாமோ அக்காரணத்தினால்

**वचसोः द्वयोः अपि**–சித்தார்த்த விதிநிஷ்ட வாக்கியங்கள் இரண்டற்கும்

**इदं रूपम्**–அர்த்தாந்தரத்தைப் பிரதிபாதிக்கும் தன்மை வடிவம்

**तुल्यम् तु**–சமானமேயாம் (512)

## அவதாரிகை

வாஸ்தவமாக ஜகத்காரணத்தின்கண்ணே உபாதானத்தன்மையினை விபக்தி பிரதிபாதிக்கின்றதில்லை. அஃது அநுமானத்தினாலேயே சித்தித்தமையானும் பிராப்தத்தின் அனுவாதத்தால் அநேகார்த்தத்தை விதித்தல் சம்பவியாமையானும் என்க, மற்றோ வசனார்த்தமாகிய ஏகத்

தன்மையினையே அவ்வாக்கியம் பிரதிபாதிக்கின்றது. ஆண்டு சேதன மாத்திரத்தினையுத்தேசித்து ஏகத்தன்மையின் விதி சம்பவியாமையால் ஜகத்காரணத்தன்மையினுல் அதனதிஷ்டானத்தினையே உத்தேசித்து வசனூர்த்தம் பிரதிபாதிக்கப்படுகின்றது. ஆதலின் ஈண்டு யாதொரு தோஷலேசமும் இன்ரும் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்ருர்:—

*சுலோகம்*

**एकं चेतनमस्य यत्प्रकृतितामापन्नमुत्प्रेक्षते**
**तद्ब्रह्मेति निशामयेति निपुणं ब्रूते परब्रह्मणः ।**
**सिद्धं लक्षणमादरेण महता व्यावर्तयद्ब्रह्मण-**
**स्तत्त्वं तत्त्वमसीति वाक्यनिलयं तच्छब्दलक्ष्यं वचः ।**

*பதவுரை*

**अस्य**—அகாசாதி பிரபஞ்சத்திற்கு

**यत् चेतनम्**-யாதொரு சேதனத்தினை

**प्रकृतितामापन्नम्**—உபாதானகாரணமாக

**उत्प्रेक्षते**—அனுமிக்கின்ருனே

**तत् एकम्**-அஃது ஒன்றேயாம் இது முதலாவது அன்வயம்

பின்பு அதனையும் அனுவாத்திய கோடியில் சேர்த்துக்கூறுகின்ருர்:—

**तत्त्वमसीति वाक्यनिलयम्**— தத்துவமசிமகாவாக்கியத்தோடு ஏக வாக்கியத்தினையடைந்துள்ள

**तत् ब्रह्म इति**-அஃது அதாவது ஜகதுபாதானமாய் ஏகமாய்யாதொரு சேதனமுண்டோ அஃது பிரம்மமாம் என

**निशामय**—கேள் அதாவது விசாரிப்பாய்

**इति वचः**—என்பது முதலிய வசனம்

**निपुणम्**—ஈண்டுமுற்கூறிய சங்கையின்மையின் திடத்தன்மை எவ்வாருமோ அவ்வாறு

**परब्रह्मणः**-பரப்பிரம்மத்தின்

**सिद्धम्**—அனுமானத்தாற்சித்தித்த

**लक्षणम्**—ஜகத்காரணத்தன்மை வடிவ லக்ஷணத்தினை

**महता आदरेण**—அதிக ஆதரத்தால்
**ब्रूते**—கூறுகின்றது

லக்ஷணம் என்பது அஃது பிரம்மம் என்பதாதிக்கும் உபலக்ஷணமாம் இக்காரணத்தினாலேயே அதிக ஆதரத்தால் எனப்பட்டது.

யாதொரு ஏகஜகத்காரணமுண்டோ அஃது பிரம்மம் எனவும் அதனை விசாரிப்பாய் எனவும் இவனை டிதத்தன் என்று அறிவாய் என்பது போன்று அதற்கு அதாவது ஜகத்காரணவஸ்துவிற்கு இவ்வசனம் பிரம்மம் என்னும் ஸஞ்ஞாபரமாம் லக்ஷணபரம் அன்றாம். என்னும் சங்கைக்கு அஃது இனிமேல் கண்டிக்கப்படும் ஆதலின் சாங்கியர் முதலியோரால ஜகத்காரணமாக கற்பிக்கப்பட்ட பிரதானாதி வியாவிருத்தியின் பொருட்டு பிரம்மத்தின் லக்ஷணமே ஈண்டு சுருதியின் சம்மதமாம் என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார்;—

**तत् शब्दलक्ष्यम्**—தத்பதத்தின் லக்ஷ்ய
**ब्रह्मणः तत्त्वम्**-பிரம்மத்தின் அத்துவய ஆனந்த வடிவத்தினை
**व्यावर्तयत्**— பிரதானாதியில் நின்றும் வியாவிருத்தியினைச்செய்கின்றதாய் என்பது முதலிய வசனம் கூறுகின்றது என மேல் அந்வயம் செய்க

### *விசேஷவுரை*

தடஸ்த ஈஸ்வரனுக்கே இஃது லக்ஷணமாம் என்னும் பிராந்தியை நிவிருத்தித்தற் பொருட்டு தத்துவமஸிமகாவாக்கியத்தோடு ஏக வாக்கியத்தினையடைந்துள்ள என வசனத்திற்கு விசேஷணம் கூறப்பட்டது. (813)

## *சாமான்யமாக லக்ஷணத்தின் சொரூபத்தைக் கூறுதல்*

### *அவதாரிகை*

அற்றேல் ஓர் வஸ்துவிற்கு ஓர் லக்ஷணத்தாலேயே இந்தப் பிரயோஜனம் சித்திக்கின்றது. ஈண்டும் சுருதிப்பிரசித்தமான சத்திய ஞானதிலக்ஷணமுளது ஆதலின் இந்த லக்ஷணத்தால் என்னைபயன் என்னும் சங்கைக்கு ஒரு வஸ்துவிற்கே உலகின்கண் மூன்றுவித

லக்ஷணம் பிரசித்தியாயிருத்தலின் ஈண்டும் அநேக லக்ஷணம் தோஷத்தின் பொருட்டன்றும், மாருய் இஃது இன்றி சத்தியாதிவடிவ லக்ஷணத்தினையே அறியமுடியாது என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

### சுலோகம்

लक्ष्यस्य लक्षणमिह त्रिविधं प्रसिद्धम्
लोके स्वलक्षणममुष्य विशेषणं वा ।
यद्वोपलक्षणमिमानि च लक्षणेन
व्याचर्णयामि पृथगेव तु तत्प्रतीहि ॥ ५१४ ॥

### பதவுரை

**इह लोके**—இவ்வுலகின் கண்
**लक्ष्यस्य**—ஓர் லக்ஷியவஸ்துவிற்கு
**स्वलक्षणम्**—சிலது ஸ்வரூபலக்ஷணமெனவும்
**अमुष्य**—அதற்கு
**विशेषणम् वा**—சிலது விசேஷணலக்ஷணமெனவும்
**उपलक्षणम्**—சிலது உபலக்ஷணமெனவும்
**त्रिविधं लक्षणम्**—மூவிதலக்ஷணமானது
**प्रसिद्धम्**—பிரசித்தமாம்

அற்றேல் இவைகட்கு பரஸ்பரம் பேதத்தினைச்செய்வது யாது என்னும் ஆகாங்க்ஷையுண்டாகக்கூறுகின்றார்;—

**इमानि च**—இந்த சொரூபலக்ஷணமுதலியவற்றை
**पृथगेव तु**—தனித்தனியே
**लक्षणेन**—லக்ஷணத்தால்
**व्याचर्णयामि**—விசேஷமாக வர்ணிக்கின்றேன்
**तत् प्रतीहि**—அதனை நீ அறிவாய்

### விசேஷவுரை

வா என்பது சகாரார்த்தத்தில். யத்வா என்பதிலுள்ள வாகாரமும் சகாரார்த்தத்திலாம். (514)

### அவதாரிகை

முதலில் இவைகட்குச் சாதாரண லக்ஷணத்தினைக்கூறுகின்றார்:—

## ஸ்லோகம்

लक्ष्यार्थनिष्ठमुपलब्धमतोऽन्यतोऽर्था-
न्निःशेषतो यदतिरिच्य तदर्थवस्तु ।
लक्ष्यं निवेदयति लक्षणमेतदाहुः
सामान्यलक्षणमिदं त्रिषु लक्षणेषु ॥ ५१५ ॥

## பதவுரை

**लक्ष्यार्थनिष्ठम्**-லக்ஷியவஸ்துவின்கண் இருப்பதாய்

**उपलब्धम्**-அறியப்பட்டதாய்

**अतः**-இதில் நின்றும்

**अन्यतः निःशेषतः अर्थात्**-அந்நியமான ஸஜாதியாதி ஸம்பூர்ணார்த்தங்களில் நின்றும்

**अतिरिच्य**-வேறுபிரித்து

**लक्ष्यम् अर्थवस्तु**-லக்ஷியமாகிய தனதாசிரயவஸ்துவினை

**यत् निवेदयति**-யாதொன்று அறிவிக்கின்றதோ

**तत् एतत्**-அவ்விதனை

**लक्षणमाहुः**-லக்ஷணமெனக்கூறுகின்றனர்

**इदम्**-இந்த லக்ஷணமானது

**त्रिषु लक्षणेषु**-மூன்று லக்ஷணங்களிலும்

**सामान्यलक्षणम्**-லக்ஷணத்வ ஸாமான்யலக்ஷணமாம்

## விசேஷவுரை

அஸம்பவதோஷத்தாலும் அவ்யாப்தி தோஷத்தாலும் தூஷிக்கப்பட்ட லக்ஷணத்தின்கண் அதிவியாப்தியைப்பரிகரித்தற்பொருட்டு லக்ஷியவஸ்துவின்கண் இருப்பதாய் அறியப்பட்டதாய் என கூறப்பட்டது. லக்ஷியமனைத்திலும் அறியப்பட்டதென்பது பொருள். ஸம்பூர்ணார்த்தங்களில் நின்றும் வேறு பிரித்து என்னும் விசேஷணத்தால் அதிவ்யாப்திக்குற்றமுடைய லக்ஷணத்தின் கண்ணும் அதிவ்யாப்தியின்றும், என்றுணர்க. அற்றேல் இது ஸ்வரூபலக்ஷணத்தின் கண்ணின்றாம். அதற்கு தனது விருத்தித்தன்மை ஸம்பவியாமையின் எனின் நீ கூறியதுண்மைதான். யாதொன்று அறியப்பட்டதாகி எதனது அதன் ஸஜாதீயாதி ஸர்வார்த்தங்களில் நின்றும் வியாவர்த்தகமாமோ அது அதன் லக்ஷணமாம் என விவக்ஷிக்கப்பட்டமையின் யாதொரு தோஷமுமின்றாம் என்பது கருத்து (515)

## விசேஷமாக லக்ஷணத்தின் சொரூபத்தைக் கூறுதல்

### அவதாரிகை

இப்போது சொரூபலக்ஷணத்தின் சொரூபத்தினைக்கூறுகின்றார்;—

### சுலோகம்

लक्ष्यस्वरूपमपि सद्यदमुष्य साक्षा-
दर्थान्तराद्भवति भेदकमेतदाहुः ।
अस्य स्वलक्षणतयैव तु लक्षणं खं
छिद्रं द्रवं जलमितीदृशमत्र लोके ॥ ५१६ ॥

### பதவுரை

**यत्**—யாதொரு லக்ஷணமானது
**साक्षात्**-சுபாவமாக
**लक्ष्यस्वरूपम् अपि सत्**—லக்ஷியசொரூபமாயிருந்துகொண்டே
**अमुष्य**-லக்ஷியத்தினை
**अर्थान्तरात्**—பிறபொருளினின்றும்
**भेदकम् भवति**—வேறுபிரிக்கின்றதாயாகின்றதோ
**एतत् तु लक्षणम्**-இந்தலக்ஷணத்தினையே
**अस्य**-லக்ஷியத்தின்
**स्वलक्षणतया एव**—சொரூபபூதலக்ஷணமாகவே
**आहुः**—அறிஞர் கூறுகின்றனர்
[ அதன்கண் உதாரணத்தினைக்கூறுகின்றார் ]
**अत्र लोके**—இவ்வுலகின்கண்
**खं छिद्रम्**—ஆகாசம் அவகாசவடிவம்
**जलं द्रवम्**-நீர் நெகிழ்ச்சி வடிவம்
**इति ईदृशम्**—என்னும் லக்ஷணம் போன்று

உலகரின் பிரதீதியையனுசரித்து இது உதாகரிக்கப்பட்டது என உணர்க. (516)

### அவதாரிகை

இப்போது விசேஷணலக்ஷணத்தின் சொரூபத்தினைக்கீர்த்திக்கின்றார்;—

### சுலோகம்

**स्वानुरक्तमतिजन्मकारणं यत्पुनर्भवति लक्ष्यवस्तुनि ।**
**तद्विशेषणतयाऽस्य लक्षणं केसरादिकमिवाश्ववस्तुनः ॥ ५१७ ॥**

### பதவுரை

**यत्पुनः लक्षणम्**–யாதொரு லக்ஷணமானது
**लक्ष्यवस्तुनि**-லக்ஷியவஸ்துவினகண்
**स्वानुरक्तमतिजन्मकारणम्** – சுவவிசிஷ்டபுத்தியினுற்பத்தியில்ஏது
**भवति**–ஆகின்றதோ
**तत्**-அதனை
**अस्य**–லக்ஷியத்தின்
**विशेषणतया**–விசேஷணத்தன்மையால்
**लक्षणम् आहुः**–லக்ஷணமெனக்கூறுகின்றனர்
திருஷ்டாந்தந்தனைக்கூறுகின்றார்
**अश्ववस्तुनः**–குதிரைக்கு
**केसरादिकम् इव**– பிடரிமயிர் முதலியவைபோன்று

### விசேஷவுரை

சொரூபலக்ஷணத்தையும் தடஸ்தலக்ஷணத்தையும் நீக்குவதற்குத் தனது விசிஷ்ட எனப்பட்டது. லக்ஷியத்தின் விசேஷணத்தன்மையால் பிரதீதியாகின்றதென்பது விசிஷ்டசப்தத்திற்குப்பொருள். லக்ஷண மல்லாத தண்டாதியை நீக்குதற்கு லக்ஷணம் எனப்பட்டது. (517)

### அவதாரிகை

இப்போது உபலக்ஷணத்தின் சொரூபத்தினைக்கூறுகின்றார்:—

### சுலோகம்

**स्वानुरक्तमतिजन्महेतुतां लक्ष्यवस्तुनि निरस्य लक्षणम् ।**
**अस्वरूपमपि तस्य यद्भवेत्काकवत्तदुपलक्षणं विदुः ॥ ५१८ ॥**

### பதவுரை

**यत् लक्षणम्**-யாதொரு லக்ஷணமானது
**लक्ष्यवस्तुनि**–லக்ஷியவஸ்துவின்கண்
**स्वानुरक्तमतिजन्महेतुताम्**- ஸ்வவிசிஷ்டபுத்தியின் உற்பத்தி காரணத்துவத்தை

**निरस्य**—நிராகரித்து அதாவது அதனினும் வேறாய்
**तस्य**—லக்ஷியத்தின்
**अस्वरूपं अपि**-சொரூபமல்லாததாய்
**भवेत्**-ஆகுமோ
**तत्**-அந்த லக்ஷணத்தினை
**काकवत्**—கிருகத்திற்குக்காகம் போன்று
**उपलक्षणम्**—உபலக்ஷணமாம் என
**विदुः**—உணர்வுடையோர் உணர்கின்றனர்

### விசேஷவுரை

விசேஷணலக்ஷணத்தின்கண் அதிவியாப்தியைநீக்குதற் பொருட்டு நிராகரித்து என்பதுவரை கூறப்பட்டது. சொரூபலக்ஷணத்தின்கண் அதிவியாப்தியை நீக்குதற்பொருட்டு சொரூபமல்லாததாய் எனப்பட்டது. லக்ஷியத்தின் அவிசேஷணமாயும் சொரூபமல்லாததாயும் யாதொரு லக்ஷணமுண்டோ அது உபலக்ஷணமென்பது பொருள் அந்ததேசத்திலுள்ளதும் தத்காலத்திலுள்ளதுமான கிரகத்தின் கண்ணுள்ள காக சம்பந்தத்திற்கு அதிவியாப்தியில்லாமையால் லக்ஷணத்தன்மை உண்மையின் காகம் போன்று என உதாகரணம் கூறப்பட்டது. **(518)**

## பிரம்மத்திற்கு ஜகத்தின் ஜன்மாதி காரணத்துவ விசாரம்

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் மூவித லக்ஷணம் கூறப்பட்டபோது ஜன்மாதியின் காரணத்தன்மை பிரம்மத்திற்கு யாது லக்ஷணம் என்னும் ஆகாங்க்ஷை யுண்டாகக்கூறுகின்றார்:—

### சுலோகம்

विश्वोद्भवस्थितिलयप्रकृतित्वमस्य
चिद्वस्तुनो यदसहायपरिग्रहस्य ।
तद्वर्णनीयमुपलक्षणमेव कस्मा-
द्ब्रह्मेति लक्ष्यपदशक्त्यविरोधहेतोः ॥ ५१९ ॥

### பதவுரை

**असहायपरिग्रहस्य** - தன்னினும் பின்னமாகச் சகாயத்தின் அபேக்ஷையின்றிய (ஏகன் என்பது கருத்து)

**अस्य चिद्वस्तुनः**-இந்தச்சித்வஸ்துவிற்கு
**विश्वोद्भवस्थितिलयप्रकृतित्वम्**-பிரபஞ்சத்தின் சிருஷ்டி திதி லயங்களின் உபாதானத்தன்மை வடிவ லக்ஷணம்

**यत्**-யாதொன்றுண்டோ

**तत्**-அஃது

**उपलक्षणम् एव**-உபலக்ஷணமாகவே

**वर्णनीयम्**-வர்ணிக்கத்தக்கது

[அற்றேல், சொரூபத்தினும் வேருன உபாதானத்தன்மைக்கு விசேஷணத்தன்மை சம்பவித்தலால் உபலக்ஷணத்தன்மை ஏன் சொல்லப்படுகின்றது என்று சங்கிக்கின்ருன்.]

**कस्मात्**-ஜகத்தின் உற்பத்தியாதியின் உபாதானத்தன்மைக்கு உபலக்ஷணத்தன்மை எதனுல்

[லக்ஷிய சொரூபம் உள்ளவரை அதன் தர்மமாகவிருந்து எது லக்ஷிப்பிக்கின்றதோ அதுவே விசேஷணலக்ஷணமாம். ஜகத்காரணத் தன்மையும் லக்ஷியம் உள்ளவரை இருக்கின்றது எனின் பிரம்மம் பரிச்சின்னமாகும் ஆதலின் இனிக்கூறப்படும் பிரம்மபதத்தின் சக்தி பாதிக்கப்படும். அதனைப்பரிகரித்தற்பொருட்டு இதற்கு அதாவது ஜகத்காரணத்தன்மைக்கு உபலக்ஷணத்தன்மையே பொருத்தமாம். இவ்வாருகவே அதனது லக்ஷியம் அகண்டமாகச்சித்திக்கின்றது என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்ருர்]

**ब्रह्म इति लक्ष्यपदशक्त्यविरोधहेतोः**-பிரம்மம் என்னும் லக்ஷிய பதத்தின் யாதொரு சக்தியுண்டோ அதனது அவிரோதசித்தியின் பொருட்டு உபலக்ஷணத்தன்மை அங்கீகரிக்கப்படுகின்றது.

### *விசேஷவுரை*

உபாதானத்தன்மை கர்த்திருத்தன்மைக்கும் உபலக்ஷணமாம். இக்காரணத்தாலேயே தன்னினும் பின்னமான சகாயத்தின் அபேக்ஷையின்றியது என்று கூறப்பட்டது (519)

### *அவதாரிகை*

அற்றேல், எதில்நின்றும் என்பதாதி அநேகபதங்களின் முக்கியார்த்தத்தை அனுசரித்து பிரம்மபதமாத்திரத்தின் சக்தி விரோதமாயினும்

தோஷமின்றும். ஆகலின் அநந்த விசேஷணத்தன்மையே நியாயமாம். அன்றேல் சாகத்திலும் அநந்தபதத்திலும் போன்று அநேகபதங்களில் லக்ஷணையே ப்ராப்தியாம் என்னும் சங்கைக்கு லக்ஷியபதத்தின் அனுசாரத்தால் உபலக்ஷணத்தன்மையே உசிதமாம் எனக்கூறுகின்றார்

## சுலோகம்

विश्वोद्भवस्थितिलयप्रकृतित्वरूप-
मेकाकिनो यदिह लक्षणमुच्यमानम् ।
तद्ब्रह्मणो यदि विशेषणरूपमिष्टं
ब्रह्मेति लक्ष्यविषयस्य पदस्य भङ्गः ॥ ५२० ॥

## பதவுரை

इह—ஈண்டு சுருதியின் கண்

एकाकिनः—அகண்ட அத்வய வஸ்துவிற்கு

विश्वोद्भवस्थितिलयप्रकृतित्वरूपम्- பிரபஞ்சத்தின் சிருஷ்டிதிதி லயங்களின் உபாதானத்தன்மை வடிவ

यत् लक्षणम्-யாதொரு லக்ஷணமானது

उच्यमानम्—சொல்லப்படுகின்றதோ

तत्-அஃது

ब्रह्मणः-பிரம்மத்திற்கு

विशेषणरूपम्—விசேஷணவடிவமாக

यदि इष्टम्—அங்கீகரிக்கப்படுமாயின்

लक्ष्यविषयस्य-லக்ஷியத்தினை விஷயமாகவுடைய

ब्रह्म इति पदस्य—பிரம்மமென்னும் பதத்திற்கு

भङ्गः—கேடுண்டாம் (520)

## அவதாரிகை

எவ்விஷயகப்பிரமிதியின் பொருட்டு லக்ஷணம் தேடப்படுகின்றதோ அதுவே பிரதானமாம். பிரதானத்தையனுசரித்து அப்பிரதான பதங்களில் லக்ஷணையைக்கொள்ளுதல் நியாயமாம். "குணத்தின் கண்ணே அந்நியாயத்தின் கற்பனையாம்" என்னும் நியாயத்தால். அப்பிரதானமான அநேக பதார்த்தத்தையனுசரித்தும் பிரதானத்தின் பங்கம் உசிதமன்றும். என்னும் அபிப்பிராயத்தால் சாமான்ய நியாய பூர்வகமாகக்கூறப்பட்டதனையே உபபாதனம் செய்கின்றார்:—

## சுலோகம்

लक्ष्यार्थवाचि पदमत्र हि लक्षणार्थे
वाक्ये प्रधानमितरद्गुणभूतमाहुः ।
ब्रह्मेति लक्ष्यविषयं च पदं समर्थं
भूमानमेव वदितुं न तु मर्त्यमल्पम् ॥ ५२१ ॥

## பதவுரை

**अत्र हि**-ஈண்டு

**लक्षणार्थे**-லக்ஷணத்தை வாச்சியமாகவுடைய

**वाक्ये**-வாக்கியத்தின்கண் அதாவது சிருஷ்டி திதி லயகாரணம் பிரம்மம் எனனும் லக்ஷணவாக்கியத்தின்கண்

**लक्ष्यार्थवाचि पदम्**-லக்ஷியார்த்தத்தைப்போதிக்கும் பதமானது

**प्रधानम्**-முக்கியமாம்

**इतरत्**-லக்ஷணபோதகபதம்

**गुणभूतम्**-அமுக்கியமாம் என

**आहुः**-கூறுகின்றனர்

[சாமான்ய நியாயத்தினைப்பிரகிருதத்தின்கண் பொருத்துகின்றார்.]

**ब्रह्म इति पदम्**-பிரம்மம் என்னும் பதமானது

**लक्ष्यविषयम् च**-லக்ஷியார்த்த விஷயகமாம்

[அதனுற் சித்தித்தது என்னையென்னுஞ்சங்கைக்கு பிரம்மபதம் முக்கியார்த்தத்தினைக் கூறுகின்றது எனக்கூறுகின்றார்.]

**भूमानम् एव**-வியாபகபிரம்மத்தினையே

**वदितुम्**-கூறுதற்கு

**समर्थम्**-பிரம்மபதம் சாமர்த்தியமுடையதாம்

**अल्पम्**-பரிச்சின்னவடிவ

**मर्त्य**-மர்த்திய ஸ்வரூபத்தினை

**न तु (वदितुम् समर्थम्)**-கூறுதற்கு ஆற்றலுடையதன்றாம்

## விசேஷவுரை

வியாபகமென்பது மூவித பரிச்சேதமற்றதற்காம் அதன் பகுதிப் பொருளான பிருஹத்தன்மையென்னும் வியாபகத்தன்மைக்கு அதன் கண்ணேயே பரியவசானமாதலின் மர்த்தியம் என்பது காலத்தால் பரிச்

சின்னத்திற்காம் மர்த்தியத்தினைக்கூறுதற்கு சாமர்த்தியமுடையது அன்றும் என்பதன்கண் ஏதுவாக மர்த்தியத்தின் சொரூபம் அற்பம் எனக்கூறப்பட்டது. சுருதியானது "**यत्र नान्यत्पश्यति नान्यच्छृणोति नान्यद्विजानाति स भूमा**" எதன்கண்ணே அந்நியத்தைக்காண்கின்றதில்லையோ அந்நியத்தைக் கேட்கின்றதில்லையோ, அன்னியத்தையறிகின்றதில்லையோ அது பூமாவாம். '' என பூமாவை நிருபணஞ்செய்து அதன் திருடத்தன்மையின் பொருட்டு அதனினும் அந்நியத்தினை அற்பமெனவும் அநித்தியமெனவும் நிந்திக்கின்றது. **अथ यत्रान्यत्पश्यत्यन्यच्छृणोत्यन्यद्विजानाति तदल्पम्** "எதன்கண்ணே அந்நியத்தைக்காண்கின்றானே அந்நியத்தைக்கேட்கின்றானே அன்னியத்தையறிகின்றானே அது அற்பம் " எது அற்பமோ அதுமர்த்தியமாம் என

இவ்வாறாகவே பிரம்மத்தின்கண் அதனினும் வேறானதின் சம்சர்க்கத்தை யங்கீகரிக்கின் பூமவாசகபிரம்மபதத்தின் சக்தி பாதிக்கப்படும். அன்றியும் பிரம்மபதமானது அப்பத்தினைக்கூறுதற்கு எங்ஙனம் சமர்த்தமாம். ஆதலால் இது விசேஷண லக்ஷணமாகின்றதில்லை ஆதலின் உபலக்ஷணமேயாமென்பது பொருள். மர்த்தியம்—வினாசயம்

## அவதாரிகை

கூறியபொருளினை நியாயபூர்வகமாக முடிக்கின்றார்:—

## சுலோகம்

**तस्मात्प्रधानपदभङ्गभयाद्गुणानां युक्तं ग्रहीतुमुपलक्षणगोचरत्वम् ।**
**ब्रह्मेति चैतदुपलक्ष्यसमर्पणार्थमेवं समञ्जसमिदं पदजातमस्मिन् ॥**

## பதவுரை

**तस्मात्**—கூறிய நியாயத்தால்

**प्रधानपदभङ्गभयात्**—பிரதானமாயுள்ள பிரம்மபதத்தின் சக்திக்குக் கேடுண்டாம் என்னும் பயத்தால்

**गुणानाम्**—அப்பிரதானமாயுள்ள லக்ஷணபதங்களுக்கு

**उपलक्षणगोचरत्वम्**—உபலக்ஷணத்தை விஷயம்பண்ணுந்தன்மையினையே

**ग्रहीतुं युक्तम्**—கிரகித்தல் பொருத்தமாம்

**ब्रह्म इति पदम् च**—இந்தப்பிரகாரம் பிரம்மமென்னும் இந்தப்பதமும்

**उपलक्ष्यसमर्पणार्थम्** – உபலக்ஷியபிரம்மவஸ்துவின் சமர்ப்பணைத் தையே பிரயோஜனமாகவுடையது எனக் கிரஹித்தல் பொருத்தமாம் எனக்கூட்டுக

இவ்வாருதும்போது முக்கியபதத்திற்குப் பங்கப்பிராப்தியின்றும் எனக்கூறுகின்றார்.

**एवम्**–இந்தப்பிரகாரம்

**अस्मिन्**–எதினின்று என்பதாதி லக்ஷணவாக்கியத்தின்கண்

**इदं पदजातम्**-இந்தப்பத சமூகமானது

**समञ्जसम्** – விபாகத்தால் அந்விதார்த்தகுணமுடையதாயிருந்து கொண்டு அபேக்ஷிக்கப்பட்ட அர்த்தத்தின் சமர்ப் பகத்தன்மையால் பொருத்தமுடையதாம்

சமர்ப்பகம் =போதகம் (522)

## *அவதாரிகை*

இந்தப்பிரகாரம் ஜன்மாதிகாரணத்தன்மைக்குத்தடஸ்த லக்ஷணத் தன்மையை உபபாதனஞ்செய்து அதற்குவாதிக்குச்சம்மதமான வியா விருத்திப்பிரயோஜனமும் 513வது சுலோகத்தில் பிரம்மத்தின் அத்வயா னந்த சொரூபத்தை வியாவிருத்தி செய்கின்றதாகியென்னுமிடத்து அங்கீகரிக்கப்பட்டுள்ளது. அதனை உபபாதனஞ்செய்தற்கு ஆரம்பிக் கின்றார். அற்றேல் பிரம்மத்தின் அத்வயானந்தத்தினை வியாவிருத்தி செய்கின்றதாகி என்று கூறியது பொருந்தாது. உலகின்கண் லக்ஷணவாக்கியங்களுக்கு லக்ஷியசொருபஞானத்தின் பொருட்டாவது அல்லது கோமுதலியபதத்தால் வியவகாரசித்தியின் பொருட்டாவது பிரயோகங்காணப்படுதலின் என்னுஞ்சங்கைக்கு ஏது அசித்தமாமெனக் கூறுகின்றார்:—

## *சுலோகம்*

**लक्ष्यस्वरूपकथनाय न लक्षणानि**
**नाप्यस्य वाचकमिदं पदमित्यमुष्मै ।**
**व्यावृत्तमेतदखिलादितरार्थजाता-**
**दित्येतदेव वदितुं ननु लक्षणानि ॥ ५२३ ॥**

## *பதவுரை*

**लक्षणानि**–லக்ஷணவாக்கியங்கள்

**लक्ष्यस्वरूपकथनाय**–லக்ஷியத்தின் சொரூபத்தினைப்பிரதிபாதித்தற் பொருட்டு

**न**–அன்றும்

**अस्य**–இந்த லக்ஷியத்திற்கு

**इदं पदम्**–கோமுதலிய இப்பதமானது

**वाचकम्**–வாசகபதமாம்

**इति अमुष्मै अपि**–என அறிவித்தற்பொருட்டும்

**न**–அன்றும் (மற்றோ)

**अखिलात्**–சர்வ

**इतरार्थजातात्**–இதரபொருட்கூட்டத்தினின்றும்

**एतत् व्यावृत्तम्**–இஃது பின்னமாம்

**इति एतदेव**–என்னுமிப்பொருளினையே

**वदितुम्**–பிரதிபாதித்தற்கு

**लक्षणानि**–லக்ஷணவாக்கியங்களாம்

**ननु**–இது நிச்சயமாம்

### *விசேஷவுரை*

அலேதாடிக்கோடுடையது பசு கந்தமுடையது பிருதிவி என்பது முதலிய லக்ஷணத்தால் பசு முதலியவற்றின் சொரூபம் பிரதிபாதிக்கப் படுகின்றதில்லை. பசு முதலியவை பிரத்தியக்ஷத்தால் சித்தமாதலின் அதன் வாக்கியத்திற்கு வியர்த்தத்தன்மை பிராப்தியாதலின் அலேதாடிக் கோடுடைய வியக்தி பசு முதலிய பதத்தின் வாச்சியமாம் என்பதும் பிரதிபாதிக்கத்தக்கதன்று. அலேதாடி முதலியவை அதன் பொருளாகா மையின் அன்றியும் அப்போது அலேதாடியாதியினையுடையது பசு எனவும் பிரதீதியாவதின்றும். ஆதலால் இவ்விரண்டும் இலக்ஷண வாக்கியத்தின் பிரயோஜனமன்றும் ஆதலின் இதரபேதஞானமே அதன் பிரயோஜனமாகக்கூறத்தக்கது என்பது கருத்து. (523)

### *அவதாரிகை*

மேலும் அலேதாடியாதியின் விசிஷ்டத்தன்மையினைப்போதிக் கின்ற நேத்திரத்திற்கு அந்த ஞானையிலாக வியாவிருத்திஞானம் பிரயோஜனமாகக்காணப்பட்டுள்ளது. இந்தப்பிரகாரம் லக்ஷண வாக்கி யத்திற்கும் அந்தப்பிரயோஜனமே பொருத்தமாம் என்னுமபிப்பிராயத் தால் முதலில் திருஷ்டாந்தத்தினைக்கூறுகின்றார்:—

### சுலோகம்

लक्ष्यस्वरूपमुपलभ्य तदेकनिष्ठं
दृष्ट्वा च लक्षणमनेन तदेव लक्ष्यम् ।
व्यावर्त्य बोधयितुमुत्सहते जनोऽयं
तत्त्वान्तरादिति यतः प्रतिपन्नमेतत् ॥ ५२४ ॥

### பதவுரை

**लक्ष्यस्वरूपम्** - லக்ஷியத்தின் சொரூபத்தினை
**उपलभ्य**–நேத்திரத்தால் அறிந்து
**तदेकनिष्ठम्**–லக்ஷியத்தின் அசாதாரண தர்ம ரூபமான
**लक्षणम् च**–லக்ஷணத்தினையும்
**दृष्ट्वा**–அறிந்து
**अनेन**–இவ்விலக்ஷணத்தால்
**तदेव लक्ष्यम्**–அந்த லக்ஷியத்தினையே
**तत्त्वान्तरात्**–அலக்ஷியரூபமான அர்த்தாந்தரத்தினின்றும்
**व्यावर्त्य**–வேறு பிரித்து
**बोधयितुम्**–அறிவித்தற்கு
**अयं जनः**–வியவகரிக்கும் இப்புருஷன்
**उत्सहते**–யத்தனிக்கின்றான்
**इति एतत्**–என்னு மிஃது
**यतः**–யாதொரு காரணத்தினால்
**प्रतिपन्नम्** - சர்வஜனப் பிரஸித்தமோ (அக்காரணத்தால்) அஞ்ஞாத ஞாபனம் லக்ஷணைப் பிரயோஜனமென்றும் என்பது கருத்து. (524)

### அவதாரிகை

523வது சுலோகத்தில் கூறப்பட்ட நிஷேதத்தின் அனுவாத பூர்வகம் தார்ஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் :—

### சுலோகம்

संज्ञासंज्ञिसमन्वयावगतये नेष्टं क्वचिल्लक्षणं
व्यावृत्तिप्रतिपत्तिमात्रजनकं लक्ष्ये भवेदन्यतः ।

लक्ष्यं लक्षणवर्त्मना हि जगति व्यावर्तयन्तोऽन्यत-
स्तत्तल्लक्षणमादरेण महता संगृह्णते वादिनः ॥ ५२५ ॥

பதவுரை

**संज्ञासंज्ञिसमन्वयावगतये**-பசு முதலிய பதத்திற்கும் பசு முதலிய லக்ஷியத்திற்கும் வாச்சிய வாசக வடிவ யாதொரு சம்பந்தமுண்டோ அதனை யறிதற்பொருட்டு.

**लक्षणम्**-லக்ஷண வாக்கியமானது

**क्वचित्**-ஓரிடத்தும்

**न दृष्टम्**-அங்கீகரிக்கப்பட வில்லை

இஃது முற்கூறிய லக்ஷியத்தின் சொரூபத்தினைப் பிரதிபாதித்தற் பொருட்டன்றும் என்பதற்கும் உபலக்ஷணமாம் மேலும் வாசக வாச்சியத்தின் சம்பந்தத்தினையறிதற் பொருட்டு லக்ஷண வாக்கியத்தினை கூறுகின்றவனும் வியாவிருத்தியின் ஞானமாகிற பிரயோஜனத்தினை லக்ஷண வாக்கியத்திற்த அங்கீகரிக்கவே வேண்டும். இன்றேல் அனதிப்பிரசக்த வடிவத்தால் வாச்சியத்தினை அறியாவிடின் அதன் கண்ணேயே வாசகத்தின் சம்பந்தத்தினை அறியமுடியாதாகலின் ஆதலால் அதுவே பிரயோஜனம் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

**लक्ष्ये**-லக்ஷியத்தின்கண் ( லக்ஷணமானது )

**अन्यतः**-பிறவற்றினின்றும்

**व्यावृत्तिप्रतिपत्तिमात्रजनकम्**-பேதஞான மாத்திரத்தினை யுண்டு பண்ணுவதாய்

**भवेत्**-ஆகும்

[ஆதலால் உலகின்கண் கோ முதலிய லக்ஷண வாக்கியங்களுக்கு இதுவே பிரயோஜனமாக விருத்த புருஷாது சம்மதமாம். என முடிக்கின்றார்.]

**लक्ष्यम्** – லக்ஷிய வஸ்துவினை

**लक्षणवर्त्मना हि** – லக்ஷணமார்க்கத்தினால்

**अन्यतः** – பிறவற்றினின்றும்

**व्यावर्तयन्तः** – வேறு பிரிக்கின்றவர்களாய்

**तत्तत् लक्षणम्**-அவ்வப் பசுகடம் முதலியவற்றின் லக்ஷணத்தினை

**महता आदरेण** – அதிகப் பிரீதியினால்
**जगति** – உலகின்கண்
**वादिनः** – வாதிகள்
**संगृह्यते** – கிரகிக்கின்றார்கள்

### *விசேஷவுரை*

லக்ஷணமார்க்கத்தால் என்பதனால் லக்ஷண வாக்கியத்திற்கு லக்ஷணையினால் இதர பேத ஞானமாகிய பிரயோஜனத்தையுடையதாந் தன்மை சூசிப்பிக்கப்பட்டது. (525)

### *அவதாரிகை*

இந்தப் பிரகாரம் உலகின்கண் சொரூப லக்ஷணத்தினும் பின்னமான லக்ஷணங்களுக்கு வியாவிருத்தி மாத்திரப் பிரயோஜனம் சொல்லப் பட்டது. இந்தப்பிரகாரம் பிரம்மத்திற்கு சிருஷ்டி வாக்யத்தின் அர்த்தமான ஜகத்காரணத்துவமும் அதனின் இதர வியாவிருத்தியின் பொருட்டே சுருதியினால் அனுவதிக்கப்படுகின்றது. மேலும் அசுருத வியவகாராதியின் கற்பனை பிராப்தியாவதால் வாச்சிய வாசக பாவ சம்பந்தத்தின் ஞானம் அதன் பிரயோஜனமன்றும். பிரம்மஸ்வரூபத்தின் ஞானமும் அதன் பிரயோஜனமன்றும். அகண்டைகரச பிரம்மத்திற்கு ஜகத்காரணத்துவ சம்பந்த விஷயக வாக்கியத்தால் பிரதிபாத்தியத் தன்மை பொருந்தாமையின் என்னுமபிப்பிராயத்தால் முடிக்கின்றார்:—

### *சுலோகம்*

तस्माद्ब्रह्मणि वाच्यवाचकयुजासिद्ध्यै श्रुतिर्नान्यथा-
ज्जन्माद्यस्य समीक्षितस्य जगतो यद्ब्रह्मणो लक्षणम् ।
नापीदं स्वकरूपबोधनपरं संकीर्तितं ब्रह्मणः
किं त्वब्रह्मपदार्थतोऽस्य सकलाद्व्यावृत्ततासिद्धये ॥

### *பதவுரை*

**तस्मात्**–அக்காரணத்தினால்
**अस्य**–இந்த
**समीक्षितस्य**–பார்க்கப்படுகின்ற
**जगत:**–பிரபஞ்சத்தின்
**जन्मादि**–உற்பத்தி ஸ்திதி லயகாரணத்துவமாகிய

**ब्रह्मण :**–பிரம்மத்தின்
**यत् लक्षणम्**–யாதொரு லக்ஷணமுண்டோ அதனை
**ब्रह्मणि**–பிரம்மத்தின்கண்
**वाच्यावाचकयुजा सिद्ध्यै**–சம்ஞாசம்ஞிகளின் சம்பந்த சித்தியின் பொருட்டு
**श्रुतिः**–எதில் நின்றும் என்பதாதி சுருதியானது
**न अन्यथात्**–கூறவில்லை
**इदम्**–லக்ஷண வாக்கியம்
**ब्रह्मण :**–பிரம்மத்தின்
**स्वरूपबोधनपरम् अपि**–சொரூபத்தைப் போதித்தற்பொருட்டும்
**न संकीर्तितम्**–கூறப்படவில்லை
**किं तु**–மற்றோ
**अस्य**–பிரம்மத்திற்கு
**अब्रह्मपदार्थतः**–பிரம்மத்தினும் வேறான
**सकलात्**–சர்வபதார்த்தங்களினின்றும்
**व्यावृत्तासिद्धये**–பேதஞானத்தின் பொருட்டாம்

## *விசேஷவுரை*

இதுவும் கிரந்தகாரரால் "வியாவிருத்தியாவது வியவகாரமாவது லக்ஷணத்திற்குப் பிரயோஜனமாம்" எனப் பிறரால் சொல்லப்பட்டஓர் பக்ஷத்தினை யாசிரயித்துக் கூறப்பட்டது. தனது மதமோ அன்றும். மிக்கப் பிரகாசமுடையது என்பதாதி லக்ஷண வாக்கியத்திற்கு சந்திரனது சொரூபமாத்திரத்தைப் போதிக்குந் தன்மை முன்பு கூறப்பட்டமையானும், லக்ஷண வாக்கியம் அனைத்திற்கும் சித்தாந்திகளால் அகண்டார்த்தத் தன்மை அங்கீகரிக்கப்பட்டிருத்தலானும் என்க. மேலும் லக்ஷண வாக்கியம் முக்கிய விருத்தியால் வியாவிருத்தியினைப் பிரதிபாதித்தற்கு ஆற்றலுடையதன்றும். லக்ஷண விருத்தியாலும் ஆற்றலுடையதன்றும். லக்ஷணைக்குப் பீஜமான அனுபபத்தியின்மையின் லக்ஷணவிருத்தியாலும் லக்ஷியத்தின் சொரூபத்தினைப் பிரதிபாதிக்காமல் எதன்கண் இதர பேதத்தினைப் பிரதிபாதிக்கும். தர்மிவிசேஷ விசிஷ்டமாகவே வியாவிருத்தியினை அறியக்கூடுமாதலின் சங்கை—லக்ஷண வாக்கியமும் கோ முதலியவற்றினை அறிவிக்கின்றதாகியே அதன்கண் இதர வியாவிருத்தியினை அறிவிக்கின்றது என்று

சொல்லற்க. ஆவசியகத் தன்மையாலும் சப்தத்திற்கு இடைவிட்டு வியாபாரமின்மையாலும் சப்தத்திற்கு சொரூப போதத்தின்கண்ணேயே வியாபாரமாம் வியாவிருத்தியின் கண்ணின்றும். சங்கை—லக்ஷண வாக்கியத்தால் லக்ஷணத்தின் சம்பந்தம் பிரதிபாதிக்கப்பட்டபோது லிங்கத்தால் இதர வியாவிருத்தி சித்தியாம் என்னற்க. விசிஷ்ட சொரூபத்தைப் பிரதிபாதித்தல் மாத்திரமே சப்தத்தின் வியாபார மாதலால் வியாவிருத்திக்குப் பிரமாணாந்தர சாத்தியத் தன்மையின் பிராப்தியால் சர்வ பொருட் கூட்டத்தினின்றும் பின்னமாம் என்ப ராதியால் ஆரம்பிக்கப்பட்டதற்கு விரோதம் வருதலின் அர்த்தாபத்தியால் சித்திக்கின்ற இதர வியாவிருத்திக்கு சப்த வியாபாரத்தின் விஷயத் தன்மை பொருந்தாமையாலும் வாச்சிய வாசகங்களின் சம்பந்தார்த்தத் தன்மையை நிராகரித்தலோ பொருத்தமேயாம். இதனைத்தும் முன்பு உபபாதனம் செய்யப்பட்டதாயினும் ஆசாரியர்களுக்கு இது சம்மதமா மென்னும் பிராந்தியை நிவர்த்தித்தற்பொருட்டு நம்மால் கூறப்பட்டது.

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் பிரம்மத்தின் தடஸ்த லக்ஷண வாக்கியமானது சாங்கியாதியரால் கற்பிக்கப்பட்ட பரிச்சின்ன பிரதானாதியின்கண் சம்பவியாத லக்ஷணத்தைச் சொல்லுதல் வாயிலாக அதனால் லக்ஷிக்கப் பட்ட பிரம்மத்தின் சத்தியாதிவாக்கியத்தால் சித்தித்த அகண்ட சொரூபத்தின்கண் பரியவசானமாகின்றது. பிரபஞ்சத்தின் உபாதானத்தோடு அபின்னமான சேதனகாரணமானது புத்தியின்கண் சந்நிஹிதமாகாதபோது சத்தியாதி விதிநிஷேத வாக்கியங்களுக்கும் தத்துவமசியாதி வாக்கியங்களுக்கும் சமன்வயநிரூபணம் சம்பவிக்கின்ற தில்லையன்றோ நிர்விஷயகமாக அதனை அதாவது சமன்வயத்தை நிரூபித்தல் பொருந்தாமையின் ஆண்டு அர்த்தத்தால் வாதியின் பிராந்தி விஷயமான பரிச்சின்ன பிரதானாதியினின்றும் வியாவிருத்தியும் சித்திக் கின்றது. அந்த வியாவிருத்தியானது லக்ஷண வாக்கியத்தின் சாக்ஷாத் பிரயோசனமன்று. என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

### சுலோகம்

परिच्छिन्नवस्तुव्यवच्छेदसिद्ध्यै जगाद श्रुतिर्लक्षणं ब्रह्मणस्तत् ।
परिच्छिन्नता प्रापिता पूर्वपक्षे परब्रह्मणस्तन्निषेधार्थमेतत् ॥ ५२७ ॥

## பதவுரை

परिच्छिन्नवस्तु व्यवच्छेदसिद्ध्यै – வஸ்துவினால் பரிச்சின்னமும் சாங்கியாதியருக்குச்சம்மதமுமான யாதொரு ஜகத்காரண பிரதானாதியுண்டோ அதனது வியாவிருத்தி சித்தியின் பொருட்டு

श्रुतिः – "எதினின்றும்" என்பது முதலிய சுருதியானது

ब्रह्मणः – பிரம்மத்திற்கு

तद् लक्षणम् – அபின்ன நிமித்தோபாதானத்தன்மை வடிவ லக்ஷணத்தினை

जगाद – கூறிற்று

இந்த லக்ஷணமானது சாங்கியாதியருக்குச் சம்மதமான ஜகதுபாதானத்தின் கண்ணாவது பாதஞ்சலாதியருக்குச் சம்மதமான ஈஸ்வரனிடத்தாவது சம்பவிக்கின்றதில்லை. பிரம்மத்தின் கண்ணே அஃது அதாவது லக்ஷணமானது அபாதிகமாமாதலின் அதன் லக்ஷிய வடிவ பிரமத்திற்குப் பிரதானாதியினின்றும் வியாவிருத்தியானது அர்த்தத்தால் சித்திக்கின்றது என்பது கருத்து. அற்றேல் அர்த்தத் தாலும் பரிச்சின்னத்தன்மையின் யாதொரு வியாவிருத்தியுண்டோ அஃது லக்ஷணவாக்கியத்தின் பிரயோஜனம் எங்ஙனமாம். அநாதி யாகவே சித்தித்த சுருதியானது ஆதியினையுடைய புருஷப்பிராந்தியினால் சித்தித்ததின் வியாவிருத்தியின் பொருட்டு தனது பொருளைப் பிரதி பாதிக்கின்றதென்பது பொருத்தமன்றோ? எனின் அற்றன்று. வாதி களின் அந்தப் பக்ஷங்களுக்கும் அசத்துவாத பக்ஷத்திற்குப்போன்று அனாதியாகவே பூர்வ பூர்வ பிராந்தி சித்தத்தன்மையால் அனாதித்தன்மை யுண்மையின் சுருதியினாலேயே நிராகரிக்கத்தக்கதாமாதலின் என்னுமபிப் பிராயத்தால் கூறுகின்றார்.

परब्रह्मणः – ஜகத்காரண பரமான்மாவிற்கு

परिच्छिन्नता – பரிச்சின்னத்தன்மையானது

पूर्वपक्षे – பிரதானாதிகளைக் காரணமாகக்கொள்ளும் பூர்வபக்ஷத்தின்கண்

प्रापिता – அடைவிக்கப்பட்டது

तन्निषेधार्थम् – அதனை நிஷேதித்தற்பொருட்டு

एतद् – அபின்ன நிமித்தோபாதானத்துவ வடிவ லக்ஷணமாம்

## அவதாரிகை

ஜகத்காரணத்தின்கண் பரிச்சின்னத் தன்மையினையடைவிக்கின்ற பூர்வபக்ஷத்தினை விஸ்தரிக்கின்றவராய் சுருதியாதிகட்கு அதன் நிவர்த்திப் பிரயோஜனத்தினைக் கூறுகின்றார்:—

## சுலோகம்

कालस्वभावपरमाण्वसुभृत्प्रधान-
स्कन्धप्रतीत्यखिलशून्यकथाप्रसङ्गे ।
जन्मादिसूत्रमवतीर्णमियं श्रुतिश्च
तस्मादिदंपरमिदं द्वितयं प्रवृत्तम् ॥ ५२८ ॥

## பதவுரை

**कालस्वभावपरमाण्वसुभृत्प्रधानस्कन्धप्रतीत्यखिलशून्यकथाप्रसङ्गे** – காலமும் சுபாவமும் பரமாணுக்களும் ஜீவனும் பிரதானமும் கந்தமும் க்ஷணிக விஞ்ஞானமும் சர்வசூன்யமும் ஆகிய இவைகட்கு ஜகத் காரணத்துவம் வாதிகளாலூகிக்கப்பட்டபோது அதனை நிவர்த்தித்தற்பொருட்டு

**जन्मादिसूत्रम् अवतीर्णम्** – ஜன்மாதி சூத்திரம் ஆரம்பிக்கப்பட்டது

**इयं श्रुतिः च** – "எதினின்றும்" என்பதாதி சுருதியும்

**(अवतीर्णा)** – (பிரவர்த்தித்தது)

**तस्मात्** – அக்காரணத்தினால்

**इदं द्वितयम्** – சுருதியும் சூத்திரமுமாகிய இரண்டும்

**इदं परम्** – அர்த்தத்தால் இந்தப் பிரயோஜனமுடையதாக அதாவது காலாதியின் வியாவிருத்திப் பிரயோஜனத்தினையுடையதாக

**प्रवृत्तम्** – பிரவிருத்தித்தது

## விசேஷவுரை

வசந்தாதிகாலத்தின்கண்ணேயே நியமமாக காரிய விசேஷங் காணப்படுதலின் காலமே காரணமாம் எனச் சோதிடர் கூறுகின்றனர். காரணமின்றியே காரியமுண்டாகின்றது என்று [1] சுபாவவாதிகள் கூறுகின்றனர்.

---

1. சுபாவவாதிகள் = சார்வாகர் முதலிய நாஸ்திகர்கள்

சூக்ஷ்மமான தந்து முதலியவற்றினின்றும் தூலமான படாதியி னுற்பத்தி காணப்படுதலின் சூட்சமம் தூலத்திற்குக் காரணமாம். இந்தப் பிரகாரம் தந்து முதலியவற்றிற்கும் அவற்றின் அவயவங்களான சூட்சுமங்கள் காரணமாம். எதினின்றும் அன்னியமாகச் சூட்சுமம் சம்பவிக்கின்றதில்லையோ அவை நிரவயவங்களான பரமாணுக்களாம். அவையே ஜகத்திற்கு மூலகாரணமாம் என வைசேஷிகர் முதலியோர் கூறுகின்றனர்.

ஜீவன் தனது கர்மவாயிலாகக் காரணமாம் என மீமாம்சகர் கூறு கின்றனர்.

முக்குணவடிவ ஜகத்தாகிய காரியத்திற்குச் சமானமான முக்குண வடிவ பிரதானமே காரணமாமெனச் சாங்கியர் கூறுகின்றனர்.

ஸ்கந்தவாதி, பாகியப் பொருளையுண்டென்று கூறுகின்ற சௌத்ராந்திகன் முதலிய பௌத்தர், அவர்கள் பரமாணுக்களின் சங்காத வடிவமே பிருதிவியாதியெனவும், உருவ, விஞ்ஞான, வேதனை, சம்ஞா, சம்ஸ்காரமென்னும் பஞ்சஸ்கந்தான்மகமே ஆத்தியாத்மிக ஜகத்தா மென்றும் கூறுகின்றனர்.

க்ஷணிக விஞ்ஞானத்தின்கண்ணே ஜகத் கற்பிதமாமாதலின் விஞ்ஞானமாத்திரமே பரமதத்துவமாமென்று பௌத்தர் கூறுகின்றனர்.

அகில சூன்யவாதியாகிய மாத்யமிக பௌத்தன் சகலத்தையும் சூன்யமெனக்கூறுகின்றான். அவனே சூன்யமே முன் முன் அலீக வாசனவசத்தால் விசித்திர பிரபஞ்சாகாரமாகத் தோன்றுகின்றதெனக் கூறுகின்றான்.

இந்தக்காலம் முதலியவற்றின் யாதொரு விசாரமுண்டோ அதன் பிரசங்கத்தில் ஜகத்காரணப் பிரம்மத்திற்குப் பரிச்சின்னத்தன்மை பிராப்தியாகும்போது அதன் நிவர்த்தியின்பொருட்டு ஜன்மாதி சூத்திரமும் இந்த சுருதியுமாம். ஆதலால் இந்த சுருதியும் சூத்திரமுமாகிய இரண்டும் பொருளால் இதர வியாவிருத்தியினைப் பிரயோஜனமாக வுடையதாகப் பிரவிருத்தித்தது. ஈண்டு இது கூறப்பட்டதாக ஆகின்றது. காலம் முதலிய அனைத்தும் பிரபஞ்சத்திற்கு நிரபேக்ஷமாய் உபாதான காரணமாகின்றதில்லை. சேதனத்தால் ஆசிரயிக்கப்படாத அசேதனத்திற்குக் காரணத்தன்மை காணப்படாமையின்.

அப்படியானால் ஈஸ்வரனை அதிஷ்டாதாவாகவும் அவனையாசிரயித்த பரமாணுக்களை உபாதானமாகவும் இருக்குக எனின அற்றன்று. காரியத்திற்குத் தனது அபேக்ஷையினால் அல்பபரிமாண ஜன்னியத்தன்மை நியமமின்மையினால் பரமாணு சித்தியாமையின். நீண்ட நூல்களினின்றும் இரண்டங்குலமுள்ள வஸ்திரம் உண்டாகின்றதில்லையென்பதில்லை. அதிக விஸ்தாரமுள்ளதும் நீளமுள்ளதுமான ஆடை இரண்டினால் ஓர் கயிறு செய்யப்படுகின்றதில்லை யென்பதில்லை. நிரவயவபதார்த்ததிற்குச் சம்யோகம் சம்பவியாமையால் துவியணுகாதி காரியம் சம்பவிப்பதின்றும் ஆதலின் தனது அபாவதேசத்திலுள்ள சம்யோகமானது நிரவயவ பரமாணுவில் சம்பவிக்கின்றதில்லையன்றோ பரமாணுவிற்கு ஈஸ்வர சம்பந்தமின்மையின் ஈஸ்வரனை அதிஷ்டானமாக உடைமையும் பொருந்தாது. லாகவத்தால் உபாதானத்திற்கும் அதிஷ்டாதாவிற்கும் ஏகத்தன்மை சம்பவிக்கும் போது அவற்றின் பேதம் பொருந்தாமையானும். உலகின்கண்ணும் அவைகட்குப்பேதம் சம்மதமின்றும் எனக்கூறப்பட்டுள்ளது, உலகின்கண் புத்திமான்களிடத்தில் நியமமாகக் காரிய விசேஷத்தினை உத்தேசித்து விசிஷ்டகாரணத்தின் கிரகணம் காணப்படுதலின் சுபாவவாதம் பிராமாணிகமன்றும்.

சிருஷ்டியின் ஆதிகாலத்தில் சரீரமின்றிய ஜீவனுக்கு ஞானம் சம்பவியாமையால் பிரபஞ்சத்தை உண்டுபண்ணுந்தன்மை பொருந்தாமையின் அதிகமாகச்சொல்வதனால் பயனென்னை. எது எது பரிச்சின்னமோ அது அது காரியமேயாதலின் யாதொன்றும் காரணமன்றும். ஆதலால் சர்வஞ்ஞமும் சர்வசக்தியினையுடையதும் ஆன பிரம்மமே சர்வஜகத்தின் உபாதானமும் கர்த்தாவுமாமென ஜன்மாதிசூத்திரநியாயத்தால், எதில் நின்றும் என்பதாதி சுருதியின் பொருள் சித்தித்தது. (528)

## அவதாரிகை

அற்றேல் சுருதியாலும் சூத்திரத்தினாலும் இப்படிப்பட்ட காரணம் சித்தித்ததாயினும் அதற்கு ஜடப்பிரபஞ்சத்தின் பரிச்சேதமே நிவர்த்திக்கப்பட்டதாக ஆகும். ஆன்மாவின் நாநாத்துவமோ நிவர்த்திக்கப்பட்டதாகாது. அப்படிப்பட்ட காரணத்திற்கும் வாதிகளால் சொல்லப்படுகின்ற ஜீவனினின்றும் பேதம் சம்பவிக்கின்றது என்று சங்கிக்கின்றான்.

சங். 105

### சுலோகம்

अधिष्ठानाधिष्ठेयभावेन योनिर्निमित्तं च यत्कारणं जन्मभाजाम् ।
परिच्छिन्नताऽस्यापि संभावितैव प्रतीचोऽस्य भेदे परैरुच्यमाने ॥

### பதவுரை

**जन्मभाजाम्**-காரியங்களுக்கு

**अधिष्ठानाधिष्ठेयभावेन** - அதிஷ்டான அத்தியஸ்தத்தன்மையால் விவர்த்த அதிஷ்டானத்தன்மையா லென்பது பொருள்

**यत्कारणम्**-யாதொரு காரணமானது

**योनिः**-உபாதானமும்

**निमित्तम् च**-கர்த்தாவும் ஆமோ

**अस्यापि**-பிரசித்தமான அந்தக்காரணப்பிரம்மத்திற்கும்

**अस्य प्रतीचः**-அபரோக்ஷ பிரத்தியகான்மாவிற்கும்

**परैः**-வாதிகளால்

**भेदे उच्यमाने**-பேதம் சொல்லப்படும்போது

**परिच्छिन्नता**-பரிச்சின்னத்தன்மை

**संभाविता एव**-மீண்டும் சம்பாவிக்கப்பட்டதேயாம் அல்லது

**अधिष्ठानाधिष्ठेयभावेन** - "तदात्मानं स्वयमकुरुत" "அது தன்னைச்சுயம் சிருஷ்டித்தது" என தனக்கே தன்னை விஷயம் பண்ணுகின்ற யத்தனத்தையுடையதாந்தன்மையும் தன்னையாசிரயித்த யத்தனத்தின் விஷயத்தன்மையும் யாதொன்று கேட்கப்பட்டுள்ளதோ அது அதிஷ்டாத்திரு அதிஷ்டேயத்தன்மையாம். அதனுல் மூன்றும் வேற்றுமை பிரகாரார்த்தத்தில் வந்தது. அதிஷ்டாத்திருத்தன்மையால் நிமித்தமும் அதிஷ்டேயத்தன்மையால் உபாதானமுமாமென்பது பொருள். மற்றது முன்போல (529)

### அவதாரிகை

அதனைத்தூஷிக்கின்றார்:—

### சுலோகம்

ततस्तन्निषेधार्थमेवद्वभाषे श्रुतिर्ब्रह्म तद्भिन्नता तस्य कस्मात् ।
प्रतीचोऽपि हि ब्रह्मता नित्यसिद्धा दृशो भेदसिद्धिर्निरालम्बनैव ॥

## பதவுரை

**यत:**—யாதொரு காரணத்தினால் இங்ஙனம் காரணத்திற்கு வாதியாற் சொல்லப்பட்ட ஜீவனினின்று பரிச்சேதம் சம்பா விதமோ அக்காரணத்தினால்

**तन्निषेधार्थम्**—சம்பாவித பரிச்சேதத்தை நிஷேதித்தற்பொருட்டு

**श्रुतिः**—எதினின்றும் என்பதாதி சுருதியானது

**एतत् ब्रह्म**—பிரபஞ்சத்தின் அபின்ன நிமித்தோபாதான வடிவமாக பிரம்மத்தினை

**बभाषे**—கூறிற்று

[பலிதத்தினைக்கூறுகின்றார்.]

**तत्**—அக்காரணத்தினால்

**तस्य**—பிரம்மத்திற்கு

**कस्मात्**—எதினின்றும்

**भिन्नता**—பரிச்சேதமாம் ஒன்றினின்றும் ஆகாது

[இதனையே உபபாதனஞ் செய்கின்றார்]

**प्रतीचः अपि**—பிரத்தியகான்மாவிற்கும்

**ब्रह्मता**—பிரம்ம சொரூபத்துவம்

**नित्यसिद्धा**- சுபாவசித்தமாம் ஆதலின்

**दृशः**—ஞானவடிவ சுயம்பிரகாசவஸ்துவின்

**भेदसिद्धिः**—பேதப்பிரதீதியானது

**निरालम्बना एव**-நிர்விஷயகமேயாம்

## விசேஷவுரை

பிரபஞ்சத்தின் உபாதான காரணத்திற்கு ஏகவசனத்தாலும் ஈக்ஷண சுருதியாலும் அதன்கர்த்தாவான சேதனத்தோடு அபேதம் சித்தித்தவழி அதன் உபாதான பிரம்ம சேதனத்திற்கு ஜீவவடிவ சேதனத்தினின்றும் பேதம் கண்டிக்கப்பட்டதேயாம். ஞானத்தின்கண் ஞானாந்தரப்பிரதியோகிக பேத ஞானமானது மித்தியாஞானத்தை விஷயஞ்செய்வதால் ஞானமானது ஞானாந்தரத்தினை விஷயஞ்செய்யாமல் அதினின்றும் தனது பேதத்தினை விஷயஞ்செய்தற்கு ஆற்றலுடைய தன்றும். ஞானமும் ஞானாந்தரத்தினை விஷயஞ்செய்தற்கு ஆற்ற லுடையதன்றும். விஷயத்திற்கு ஜடத்தன்மை பிராப்தியாதலினாலும்

விஷய விஷயிகளுக்கு வாஸ்தவமாகச் சம்பந்தம் சம்பவியாமையானும் என்க. விஷயியின்கண் அதற்கு (விஷயத்திற்கு) கற்பிதத்தன்மையையங்கீகரிக்கினும் விஷயியே ஞானமாதலின் ஞானத்தின் பேதசித்தியின்றாம். ஆதலால சித்ரூபமான பிரத்தியகான்மாவிற்கு சித்ரூபபிரம்மத்தன்மை நித்திய சித்தமாமென்பது கருத்து. சம்பாவிதம்=சம்பாவனை செய்யப்பட்டது. (570)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் லக்ஷணவாக்கியம் விசிஷ்டலக்ஷணத்தைக் கூறுதல் வாயிலாகச்சமன்வய நிரூபணத்தின் ஆலம்பனத்தினை அர்ப்பணஞ் செய்தலால் சத்தியாதி வாக்கியார்த்தத்தின்கண் பர்யவசானமாகின்றது. அர்த்தத்தால் ஜகத்காரணத்திற்குப் பரிச்சேதத்தின் வியாவிருத்தியாம் என்று கூறப்பட்டது. அற்றேல் இங்ஙனம் இதரவியாவிருத்திக்கு ஆர்த்திகத்தன்மை உளதாகுக. அப்படியாயினும் ஜகத்காரணத்தன்மை எதனது தர்மமோ அதன் சித்தியின் பொருட்டே இந்த லக்ஷணம உளதாகுக சத்தியாதி வாக்கியத்தின் ஏகத்தன்மையால் அவ்வாக்கியார்த்த அகண்டவஸ்துவின் சித்தியின் பொருட்டு அன்றாகுக என்னும் சங்கைக்குக்கூறுகின்றார்:—

## சுலோகம்

जगत्कारणत्वं पुनर्यत्र दृष्टं न तल्लक्षणम् तत्स्वरूपप्रसिद्ध्यै ।
स्वरूपे यतो लक्षणे दृश्यमाने प्रसिद्धं ततो लक्ष्यवस्तुस्वरूपम् ॥

## பதவுரை

यत्र-எந்தச்சேதன சாமான்யத்தின்கண்

जगत्कारणत्वम्-ஜகத்தின் காரணத்தன்மை வடிவ

लक्षणम्-லக்ஷணமானது

दृष्टम्-கூறிய அனுமானத்தாலும் சுருதியினாலும் அறியப்பட்டதோ

तत्स्वरूपप्रसिद्ध्यै-அந்தச்சேதன சாமான்யத்தின் காரணத்துவ விசிஷ்ட சொரூப நிச்சயத்தின் பொருட்டு

तत् न-அந்த லக்ஷணம் அன்றாம் மற்றோ இதர வியாவிருத்தி சித்தியின் பொருட்டாமென்பது பொருள்

[ஏதனாலன்றாம் எனின் அதற்குக்கூறுகின்றார்]

**यतः**-யாதொரு காரணத்தினால்

**स्वरूपे**-லக்ஷிய சொரூபத்தின்கண்

**लक्षणे**-லக்ஷணமானது

**दृश्यमाने**-இருப்பதாகப் பார்க்கப்படும் போதே

**ततः**-அந்த லக்ஷணத்தினால்

**लक्ष्यवस्तुस्वरूपम्**-லக்ஷிய வஸ்துவின் சொரூபமானது

**प्रसिद्धम्**-பிரசித்தமாமோ அதனால்

## *விசேஷவுரை*

தர்மி அறியப்பட்டால்தான் அஃது இந்தப்பிரகாரம் லக்ஷணம் என்று அறியக்கூடும். இவ்வாறாகவே லக்ஷியஸ்வரூபம் அறியப்படும் போது லக்ஷணம் அதன் சம்பந்தியாகப்பிரசித்தமாகின்றது. லக்ஷணத்தினால் லக்ஷியவஸ்துவின் சொரூப சித்தியினையங்கீகரிக்கின் அன்னியோன்னியாசிரய தோஷமுண்டாம. அனுமானப்பிரமாணத்தாலேயே அஃது சித்தமாமென்று சொல்லற்க. அதன் சித்தியின் பொருட்டு லக்ஷணத்திற்கு உபயோகமின்மை பிராப்தியாதலின் சுருதியும் ஈண்டு கேவல அனுவாதினியாகவாகும். **(531)**

## *அவதாரிகை*

இந்தப்பிரகாரம் பிரபஞ்சத்தின் அபின்ன நிமித்தோபாதானத் தன்மை பிரம்மத்தின் லக்ஷணமாமென்று கூறப்பட்டது. அற்றேல் லக்ஷணம் அந்நியத்தால் பிரசித்தமேயாம். அதுவே சுருதியினால் அநுவதிக்கப்படுகின்றது என்று சொல்லவேண்டும். அன்றேல் அதற்கும் அதாவது லக்ஷணத்திற்கும் சுருதிப்பிரதிபாத்தியத்தன்மை பிராப்தியாதலால் அகண்டார்த்தத்தன்மைக்குக்கேடுண்டாம். ஒன்றற்கு உபயவடிவ காரணத்தன்மையும் உலகின்கண் பிரசித்தமன்றும் என்று சங்கிக்கின்றான் :—

## *சுலோகம்*

**निमित्तं च योनिश्च यत्कारणं त-**
**त्परं ब्रह्म सर्वस्य जन्मादिभाजः ।**
**इति स्पष्टमाचष्ट एषा श्रुतिर्नः**
**कथं सिद्धवल्लक्षणं सिद्धिबाह्यम् ॥ ५३२ ॥**

### பதவுரை

**नः**-நம்மை (வாதியை)க்குறித்து

**एषा श्रुतिः**-எதினின்றும் என்பதாதி சுருதியானது

**सर्वस्य जन्मादिभाजः**-சர்வகார்யத்திற்கும்

**यत् कारणम्**-யாதொருகாரணமானது

**निमित्तं च योनिः च**-நிமித்தமும் உபாதானமுமாகின்றதோ

**तत् परं ब्रह्म इति**-அஃது பரப்பிரம்மமாமென்று

**सिद्धिबाह्यम्**-உலக அப்பிரசித்தமான

**लक्षणम्**-லக்ஷணத்தினை

**सिद्धवत्**-பிரமாணத்தாற் சித்தித்தது போன்று

**स्पष्टम्**-சமுசயமின்றி

**कथं आचष्टे**-எப்படிக்கூறுகின்றது கூருதென்பது பொருள்

### அவதாரிகை

உலக அப்பிரசித்தமான என்னுமிதனையே விஸ்தரிக்கின்றனராய்க் கூறுகின்றார்:—

### சுலோகம்

न खल्वीदृशं कारणं लोकसिद्धम्
यतोऽनूद्य तल्लक्षणं तेन लक्ष्यम् ।
व्यवस्थापयन्ती प्रवृत्तैवमेषा
विधत्तेऽनुवक्तीति चैतद्विरुद्धम् ॥ ५३३ ॥

### பதவுரை

**ईदृशं कारणम्**-ஒன்றே நிமித்தமுமுபாதானமுமா மென்னுமிப்படிப் பட்ட காரணமானது

**न खलु लोकसिद्धम्**-உலகப்பிரசித்தமன்றும்

**यतः**-எதனுல் அதாவது எந்தப்பிரமாணத்தின் பிரசித்தியினுல்

**तल्लक्षणम्**-ஜகத்ஜன்மாதியின் காரணத்துவ வடிவ லக்ஷணத்தை

**अनूद्य**-அனுவாதஞ்செய்து

**तेन**-அவ்விலக்ஷணத்தால்

**लक्ष्यम्**– அத்வயப்பிரம்மத்தினை

**व्यवस्थापयन्ती** – ஸ்தாபனஞ்செய்கின்றதாய், போதிக்கின்றதா யென்பது பொருள்

**एषा**–எதினின்றும் என்பதாதி சுருதியானது

**एवं प्रवृत्ता**-இந்தப்பிரகாரம் பிரவிருத்தமாம் எனச்சம்மதமோ அப்படிப்பட்ட காரணம் உலகப்பிரசித்தமன்று மென மேலன்வயஞ்செய்க

அல்லது இரண்டாவது மூன்ருவது பாதத்திற்த அவதாரிகையோடு கூடி வேறுமொருபொருள் அமையும் அது வருமாறு.

அற்றேல் இந்த சுருதியே அவாந்தரதாற்பரியத்தால் இரண்டு விதமான காரணத்துவத்தையும் பிரம்மத்திற்குக் கூறலாமேயெனின் அதற்குக்கூறுகின்ருர்.

**यतः**-எது என்னும் சப்தத்தோடு கூடிய

**एषा**-இந்த சுருதியானது

**तल्लक्षणम्**-அப்படிப்பட்ட காரணத்துவத்தை

**अनूद्य**–அனுவாதஞ்செய்து

**तेन**–அதனுல்

**लक्ष्यम्**-அத்வயப்பிரம்மத்தினை

**व्यवस्थापयन्ती**–போதிக்கின்றதாய்

**एवं प्रवृत्ता**-இவ்வாறு பிரவிருத்தித்தது என் அதன் முன்பே அதன் சித்தி சொலலத்தக்கதாமென்பது பொருள்

அப்படியாஞல் இந்த சுருதியானது தனது சாமர்த்தியத்தால் சித்தித்த அர்த்தத்தினையே அனுவாதஞ்செய்யலாமே என்னும் சங்கைக் குக் கூறுகின்ருர்.

**विधत्ते**–அஞ்ஞாதார்த்தத்தினைப்பிரதிபாதிக்கின்றது

**अनुवक्ति**–ஞாத அர்த்தத்தினைப்போதிக்கின்றது

**इति च एतत्**–என்னுமிவ்விரண்டும்

**विरुद्धम्**- ஒன்றன்கண் விரோதமாம் அந்நியோன்னியாசிரய தூஷணம் வருதலினென்பது பொருள் (533)

## அவதாரிகை

சித்தாந்தியானவர் எதினின்றும் என்னும் வாக்கியத்திற்கு எது என்னும் சப்தம் சேர்ந்திருத்தலால் அனுவாதத்தன்மை சித்தித்தபோது அதன் சாமர்த்தியத்தாலேயே அப்படிப்பட்ட காரணத்துவத்தினையும் அது விதிக்கும். அன்றேல் அநுவாதத்தன்மை பொருந்தாமற்போம். இவ்வாருகவே அந்நியோன்னியாசிரய தூஷணமுமின்றும். அநாதி அநுவாதத்தின் சாமர்த்தியத்தால் அடையப்பெற்ற விதானத்திற்கும் அனுதித்தன்மையுண்மையின் என்னுமபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

## சுலோகம்

**अनुवदिदमेव वाक्यमर्थादुपनयतीदृशकारणं प्रसिद्धम् ।**
**अनुवदनमशक्यमन्यथा स्यादवगतगोचरमेव हीदमिष्टम् ॥ ५३४ ॥**

## பதவுரை

**इदमेव वाक्यम्**–எதினின்றுமென்னுமிதே வாக்கியம்
**प्रसिद्धम्**–தனது சாமர்த்தியத்தால் சித்தித்த
**ईदृशं कारणम्**–சேதனமொன்றே ஜகத்திற்கு நிமித்தமுமுபாதானமுமா மென்னுங்காரணத்தை
**अनुवदत्**–அனுவாதஞ்செய்கின்றதாய்
**अर्थात्**–அர்த்தத்தால்
**उपनयति**–விதானஞ்செய்கின்றது
(அதன் சாமர்த்தியத்தினையே வெளிப்படுத்துகின்றார்]
**अन्यथा**–அதன் விதியின்றேல்
**अनुवदनम्**–அநுவாதஞ் செய்தல்
**अशक्यम् स्यात्**–கூடாததேயாகும்
[எதனாலெனின்]
**इदम्**–அநுவாதஞ்செய்தல்
**अवगतगोचरम् एव**–அறியப்பட்டதன் விஷயகமாகவே
**इष्टम् हि**–அங்கீகரிக்கப்பட்டுளதாதலின்
அன்றேல் அதாவது அநுவாதம் அறியப்பட்டதன் விஷயகமாக அங்கீகரிக்காவிடின் எல்லாவாக்கியத்திற்கும் அனுவாதத்தன்மை

பிராப்தியாமாதலின். இந்தப்பிரகாரம் கூறிய ரீதியினலும் இத்தோஷம் சமானமேயாமென்று சொல்லற்க. நிர்ணயிக்கப்பட்ட அநுவாதத்துவ ஸ்தலத்திலேயே வாக்கியத்திற்கு இப்படிப்பட்ட தன்மையுண்மையின் என்பது கருத்து. **(534)**

### அவதாரிகை

சுருதியானது தனது அபிதான சாமர்த்தியத்தாற் சித்தித்த அர்த்தத்தினையே ஆசிரயித்துப்பிரவர்த்தித்தது என்னும் இஃது மீமாம் சகருக்கும் சம்மதமாமெனத் திருஷ்டாந்தத்தால் கூறுகின்ருர்:—

### சுலோகம்

**यथा विशिष्टस्य विधानतोऽर्थाद्विशेषणानां घटते विधानम् ।**
**स्थितेऽनुवादेऽपि तथेह योज्यमनूद्यमानेऽपि जगन्निदाने॥ ५३५ ॥**

### பதவுரை

**यथा**—எப்படி
**विशिष्टस्य**-சோமவிசிஷ்டயாகத்தினது
**विधानतः**—விதியினல்
**अर्थात्**—அர்த்தத்தால்
**विशेषणानाम्**—சோமம் முதலிய விசேஷணங்களின்
**विधानम्**—விதி
**घटते**—பொருந்துகின்றதோ
**तथा**—அப்படி
**इह अपि**—இவ்வாக்கியத்தின் கண்ணும்
**अनुवादे स्थिते**—அனுவாதத்தன்மை சித்தித்தபோது
**अनूद्यमाने**-அனுவாதிக்கப்படுகின்ற
**जगन्निदाने**-ஜகத்காரணத்தின்கண்
**योज्यम्**—அர்த்தத்தால் விதி பொருந்தத்தக்கதாம்

### விசேஷவுரை

எப்படி "**सोमेन यजेत**" "சோமத்தால் யஜிக்குக" என்பதாதி சோமாதி விசிஷ்டயாக விதானத்தின் சாமர்த்தியத்தால் விசேஷணங்களான சோமம் முதலியவற்றினது விதியும் பொருந்து

கின்றதோ கேட்கப்படுகின்ற சப்தத்திற்கே அதன் கண்ணும் தாற்பரியத் திணையங்கீகரிக்கின் வாக்கிய ஸ்பதம பிராப்தியாதலின விசிஷ்டமானது விசேஷணத்தின் அதீனமாகச் சித்திந்தலின் விசேஷணத்தின் விதியின்றி விசிஷ்டத்தின் விதிசம்பவியாமையின் இவ்வாறு எதினின்றும் என்பதாதி வாக்கியத்தின் கண்ணும் அநுவாதத்தன்மை சித்தித்தபோது அநுவதிக்கப் படுகின்ற ஜகத்தின் அபின்ன நிமித்தோபாதானத்தின்கண் அர்த்தத்தால் விதானம் பொருந்துகின்றது. (535)

## அவதாரிகை

இப்போது தார்ஷ்டாந்தத்தின்கண் முற்கூறிய அநுமானத்தாற் சித்தித்த அர்த்தத்தினையே சுருதி அநுவதிக்கின்றது என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார்:—

## சுலோகம்

**अथ वाऽनुवादमुपलभ्य ततोऽनुपपद्यमानवपुषः प्रमितेः ।**
**अपरं निमित्तमिह कल्प्यमिति प्रवदन्ति केचिदभियुक्ततराः ॥**

## பதவுரை

**अथवा**—அல்லது

**अनुवादं उपलभ्य**—அநுவாதத்தினையறிந்து

**अनुपपद्यमानवपुषः**—பூர்வசித்தியின்றி அநுபபத்தியமான வடிவ

**ततः**—அவ்வனுவாதத்தால்

**प्रमितेः**—பூர்வபிரமிதிக்கு

**अपरं निमित्तम्**—அநுமானவடிவ வேறுநிமித்தம்

**इह कल्प्यम् इति**—ஈண்டு கற்பிக்கத்தக்கதாமென

**अभियुक्ततराः**—கூறிய அநுமானத்தின்கண் அத்தியந்தம் நிபுணரான

**केचित्**- சிலர்

**प्रवदन्ति**—கூறுகின்றனர் (536)

## அவதாரிகை

திருஷ்டாந்தத்தின் கண்ணும் விசேஷணமானது இலிங்கத்தால் வினியோகம் போன்று முக்கிய அனுமேய சுருதியினாலேயே சித்திக் கின்றது. விசிஷ்ட விதியின் சாமர்த்தியத்தாலோ அன்றும். அந்நியத்

தாற் சித்தித்த அர்த்தத்தின்கண் விதியின் வியாபாராந்தரத்தைக் கற்பித்தல் மஹாவ கௌரவம் பொருந்தாமையின் எனக்கூறுகின்றார்:—

*சுலோகம்*

**अपि विशिष्टविधौ वचनान्तरादनुपपत्तिबलानुमितादिह ।**
**विधिरशेषविशेषणगोचरो न तु पुनस्तत एव विधानतः ॥ ५३७ ॥**

*பதவுரை*

**इह**–ஈண்டு விசிஷ்டவாக்கியத்தின்கண்

**विशिष्टविधौ अपि**–யாண்டும் விசிஷ்டவிதியின்கண்

**अनुपपत्तिबलानुमितात्**- விசேஷணத்தின் சித்தியின்றி விசிஷ்ட்ட விதானத்தின் அனுபபத்தியாற் கற்பிககப் பட்ட

**वचनान्तरात्**–வேறு வாக்கியத்தினால்

**अशेषविशेषणगोचरः**–சம்பூர்ண விசேஷணத்தையும் விஷயஞ் செய்கின்ற

**विधिः**–விசேஷணத்தின் விதியானது சித்திக்கின்றது

**ततः एव विधानतः**–விசிஷ்டவிதாயக அவ்வாக்கியத்தினாலேயே

**न तु पुनः**-விசேஷணத்தின் விதி சித்திக்கின்றதில்லை (537)

*அவதாரிகை*

இந்தப்பிரகாரம் காரியலிங்கத்தாற் சம்பாவனை செய்யப்பட்ட அபின்ன நிமித்த சேதன காரணத்தின் அநுவாதத்தால் வாதிக்குப் பிரசித்தமான காரணத்தின் விலக்ஷணமான பிரம்மத்தின்கண் எதினின்றும் என்பதாதி சுருதியானது பரியவசானமாகின்றது எனக் கூறப்பட்டது. இப்போது கூறிய பொருளை அனுவாதஞ்செய்கின்ற வராய் காரியத்தினை லிங்கமாகவுடைய அனுமானமே ஈஸ்வரனிடத்துப் பிரமாணமாம் என்னும் மதத்தினை அநுவாதஞ்செய்து தூஷிக்கின்றார்:—

*சுலோகம்*

**जन्मादिलक्षणमिदं जगतो यदुक्तं सद्ब्रह्मणस्तदिह चिह्नतयोपदिष्टम् ।**
**नास्मिन्प्रमाणमपरं पुनरेतदेव ब्रह्मप्रमाणमनुमानमुदीरयन्ति ॥**

## பதவுரை

**जगतः**-பிரபஞ்சத்தின

**यद् इदं**-யாதொரு இந்த

**जन्मादि**-சிருஷ்டி ஸ்திதிலயகாரணத்துவ வடிவ

**सत् लक्षणम्**-நிர்த்துஷ்டலக்ஷணமானது

**ब्रह्मणः**-பிரம்மத்திற்கு

**उक्तम्**-சொல்லப்பட்டதோ

**तद्**-அந்த லக்ஷணம்

**इह**-பிரம்மத்தின்கண்

**सिद्धतया**-பிறரால் சித்திசெய்யப்பட்ட காரணத்தினும் விலக்ஷணமான பிரம்மத்தின் உபஸ்திதியின் பொருட்டு உபலக்ஷணத்தன்மையால்

**उपदिष्टम्**-உபதேசிக்கப்பட்டது

**अस्मिन्**-பிரம்மத்தின்கண்

**न प्रमाणम्**-அஃது பிரமாணமன்றும் அதனுல் சர்வஞ்ஞத்துவாதி சித்தியாமையின் என்று கூறப்பட்டது

**अपरे**-வைசேஷிகர் முதலியோர்

**पुनः एतद् एव**-வர்ணிக்கப்பட்டதன் சம்பாவனை மாத்திரத்தில் ஏதுவான காரியவடிவ லிங்கத்தினையே

**ब्रह्मप्रमाणम्**-பிரம்மத்தினைப்போதிக்கும்

**अनुमानम्**-அநுமானப்பிரமாணமாக

**उदीरयन्ति**-கூறுகின்றனர்

## விசேஷவுரை

க்ஷிதி முதலியது கர்த்தாவால் தோன்றியது, காரியமாதலால் கடம் போல எனக்காரிய லிங்கக அனுமானப்பிரமாணத்தினை ஈஸ்வரனிடத்தில் கூறுகின்றனர் என்பது பொருள். (538)

## அவதாரிகை

அற்றேல் உதாகரிக்கப்பட்ட சுருதி முதலிய வாக்கியங்கள் இருக்கும்போது அதன் அர்த்தத்தினைச் சம்பாவனை செய்யுந்தன்மையால்

அதற்கு உபகரணமான அனுமானத்தினையே அதன்கண் பிரமாணமா மென எப்படிக்கூறுகின்றனர் என்னுஞ்சங்கைக்குக்கூறுகின்றார்:—

## சுலோகம்

कार्यानुमानपरतन्त्रमिदं हि शास्त्रं
शास्त्रस्य नोपकरणं तदितीक्षमाणाः ।
तद्दुर्घटं न खलु कारणमद्वितीयं
चैतन्ययुक्तमिति कार्यवशात्प्रतीमः ॥ ५३९ ॥

## பதவுரை

**इदं शास्त्रम्**—எதினின்றும் என்பது முதலிய சுருதி

**कार्यानुमानपरतन्त्रम्**—காரியத்தை லிங்கமாகவுடைய அநுமானத்தால் நிச்சயிக்கப்பட்ட தாற்பரியத்தையுடையதாந்தன்மையால் அதனதீனமாம் (என்பது அவரது கருத்து)

**तत्**—அநுமானம்

**शास्त्रस्य**—சுருதிக்கு

**न उपकरणम्** - சஹகாரியன்றும் வியாப்திபக்ஷதர்மத்தன்மைகளோடு கூடியதாந்தன்மையால் வன்னியாதியின்கண் தூமாதி லிங்கம் போன்று காரியத்துவமும் ஈசுவரனிடத்தில் சுதந்திரமாகவே பிரமாணமாம் என்று கூறுகின்றனர் என மேலன்வயஞ்செய்க

அதனை தூஷிக்கின்றார்

**तत् दुर्घटम्**—அஃது பொருத்தமன்றும்

அதில் ஏதுவினைக்கூறுகின்றார்

**कारणम्**—சகத்காரணவஸ்துவினை

**कार्यवशात्**—காரிய ரூபமான ஏதுவால்

**अद्वितीयम्**—அத்துவிதீயமாகவும்

**चैतन्ययुक्तम्**—சேதனத்தன்மையினையுடையதாகவும்

**इति न खलु प्रतीमः**—அறிகின்றிலோம் ஆதலின்

### விசேஷவுரை

சுருதியானது அத்துவிதீயமும் சருவஞ்ஞமுமான சகத்காரணத்தைப் பிரதிபாதிக்கின்றது அதனை எவ்வாற்றானும் காரியலிங்காநுமானத்தால் யாங்கள் அறிகின்றிலோம் அதற்கு அதன்கண் சாமர்த்தியமின்மையின் என்பது கருத்து. (539)

### அவதாரிகை

அற்றேல் காரியவடிவ லிங்கத்தாலும் இலாகவத்தால் பிரபஞ்சத்தின் கருத்தா ஏகமாக சித்திக்கும்போது அதன் சருவஞ்ஞத்துவமும் அதிகரண சித்தாந்தத்தால் சித்திக்கின்றது அத்துவிதீயத்தன்மையோ தனது (உபஜீவ்ய) ஆசிரயாநுமானத்திற்கு விரோதமாதலின் சுருதியாலும் பரிசிக்கப்படுகின்றதில்லை ஆதலின் காரியவசத்தால் ஈசுவரனை ஏன் அறிகின்றிலோமென்று கூறப்பட்டது அதற்குக் கூறுகின்றார்:—

### சுலோகம்

वेदान्तवाक्यमिह येन पथा प्रवृत्तं
लोकप्रसिद्धपदशक्तिमुपाददानम् ।
विश्वोद्भवस्थितिलयप्रकृतौ निमित्ते
सच्चित्सुखात्मनि परात्मनि नैवमन्यत् ॥ ५४० ॥

### பதவுரை

**वेदान्तवाक्यम्**—சுருதிப்பிரமாணம்

**लोकप्रसिद्धपदशक्तिम्**—உலகப்பிரசித்தமான பதத்தின் ஆற்றலை

**उपाददानम्**—கிரகிக்கின்றதாய்

**इह**—ஈண்டு

**विश्वोद्भवस्थितिलयप्रकृतौ** — பிரபஞ்சத்தினுற்பத்திஸ்திதிலயங்களின் உபாதான காரணமும்

**निमित्ते**—நிமித்தகாரணமுமான

**सच्चित्सुखात्मनि**—சச்சிதானந்தவடிவ

**परमात्मनि**—பிரம்மத்தின்கண்

**येन पथा**—எந்த வழியால்

**प्रवृत्तम्**—பிரவிருத்தித்ததோ

**एवम्**–அந்த வழியாய்

**अन्यत् न**–இதரப்பிரமாணம் பிரவிருத்திக்கவில்லை

### விசேஷவுரை

காரியலிங்கமாகிய அனுமானம் வேதாந்தங்களால் சத்திநிர்ணயத்தின் பொருட்டு அபேக்ஷிக்கப்படுகின்றதில்லையன்றோ முற்கூறிய நியாயத்தால் உலகின்கண்ணேயே அஃது சித்தித்தலின் தாற்பரிய நிச்சயத்தின் பொருட்டும் அநுமானத்தின் அபேக்ஷையின்றும் அதுவும் உபக்கிரமம் உபஸம்மாரம் முதலியவற்றின் விசாரத்தாலேயே சித்தித்தலின். ஆதலால் எவ்வாற்றாலும் அஃது வேதாந்தத்திற்கு உபஜீவ்யமன்றும் காரியலிங்கத்தாலும சகத்தின் கருத்தாவின்கண் ஏகத்தன்மையின் அசித்தி கூறப்பட்டமையால் அதன் சருவஞ்ஞத்துவமும் சித்திக்கின்றதில்லை. அதனால் அதாவது காரியலிங்கத்தால் கருத்தாவின் ஏகத்தன்மை சித்திக்கினும் ஈசுவரனது நித்திய கிருதி பக்ஷத்தில் அதற்கு (லிங்கத்திற்கு) உபயோகமின்மையின் ஞானமே சித்திக்காது ஆகவே சருவஞ்ஞத்துவம் எங்ஙனம் சித்திக்கும். கிருதிக்கு ஞான சமானுசிரயத்தன்மை நியமமாதலால் அஃது (ஞானம்) சித்திக்கின் அது போன்று நித்தியதுக்காதியும் பிராப்தமாம். ஆதலால் அநுமானப் பிரமாணத்தால் ஈசுவரசித்தியின் ஆசை செய்யத்தக்கதன்று.

மேலும் வேதாந்த வாக்கியம் சிருஷ்டியாதியின் காரணாநுவாதத்தால் உலகப்பிரசித்தபதசத்தியின் அநுசாரிலக்ஷணமார்க்கத்தால் அஃது அதாவது சகத்காரணவஸ்து சச்சிதானந்தமும் அத்துவயமும் பிரத்தியகபின்னமுமாமெனப்பிரதிபாதிக்கின்றது. இவ்வாறு அநுமானப்பிரமாணம் எதனையும் சாதித்தற்குச் சமர்த்தமன்றும் ஆதலின் சுருதியே அதன்கண் பிரமாணமாம் அநுமானுதியன்றுட் அதாவது "**नैषा तर्केण मतिरापनेया**" இந்த ஆன்ம விஷயக புத்தியானது அநுமானவடிவதருக்கத்தால் அடையத்தக்கதன்றும் என சுருதி கூறுகின்றது என்னுமபிப்பிராயத்தால் எந்த வழியால் என்பதாதி கூறப்பட்டது. **(540)**

### அவதாரிகை

"**कार्यानुमानपरतन्त्रमिदं हि शास्त्रम्**" என்பதனுல் சுருதிக்கு அநுமானத்தினையபேக்ஷித்து சுவார்த்தத்தைப் பிரதிபாதித்தலுளது ஆதலின் அநுமானத்தின் விரோதமாக உபக்கிரமாதி சத்நியாயத்தால்

அறியப்பட்ட அத்துவயாதிவடிவத்தினை சுருதி தொடுகின்றதில்லை என யாதொன்று சொல்லப்பட்டதோ அதுவும் இவ்வாறும் போது கண்டிக்கப்பட்டதேயாம் விபக்ஷத்தில் வேதத்திற்கு அப்பிராமாண்யப பிரசங்கமுமாம் என்னும் அபிப்பிராயததால் கூறுகின்றார்:—

**சுலோகம்**

**भङ्क्त्वा कथंचिदनुमानवशेन सिद्धे**
**सर्वेश्वरे कणभुगादिभिरुच्यमाने ।**
**वेदान्तवाक्यमपि योज्यमतोऽनुमाने**
**सापेक्षतोपनिषदां यदि साहसं तत् ॥ ५४१ ॥**

**பதவுரை**

**वेदान्तवाक्यम् अपि**-(உபக்கிரமம் முதலியவற்றால் அத்துவிதீயப் பிரம்மத்தின்கண் நிச்சயிக்கப்பட்டதாற் பரிய முடையதாயினும்) வேதாந்த வாக்கியம்

**कथंचित्**--எப்படியாவது அதாவது [1]உலகத்திற்போன்றுபிரதானத் தன்மை மாத்திரபரத்துவத்தைக்கற்பித்தலால்

**भङ्क्त्वा**-சுவார்த்தத்தினின்றும் நீக்கி

**अनुमानवशेन**-அநுமானபலத்தால்

**सिद्धे**-சித்தித்ததும்

**कणभुगादिभिः**-கணாதர் முதலியோரால்

**उच्यमाने**-சொல்லப்படுகின்றதுமான

**सर्वेश्वरे**-ஸத்துவிதீயசருவேசுவரனாகிய விஷயத்தின்கண்

**योज्यम्**-பொருத்தத்தக்கது

**अतः**-ஆதலால்

**उपनिषदाम्** வேதாந்த வாக்கியங்களுக்கு

**अनुमाने**-அநுமானத்தின்

**सापेक्षता यदि**- சாபேக்ஷத்தன்மையுள்ளதெனக் கூறுவாராயின்

1. ஐஸ்வரியமதிகரித்தபோது இப்புரோகிதன் அரசனுனென்பது போன்று.

**तत् साहसम्**-அது ஹடமாத்திரமாம் அவ்வாறுயின் வேதாந்தங்களுக்கு அப்பிராமாண்யம் பிராப்தியாதலின் என்பது பொருள். (541)

### அவதாரிகை

ஹடமாத்திரமென்பதனையே பிரகடனஞ் செய்கின்றார்:—

### சுலோகம்

निष्कारणं श्रुतिशिरोवचनस्य भङ्गं
ये वर्णयन्ति सहसा स्वमनोरथेन ।
दीप्तस्य दावदहनस्य न ते किमर्थं
ज्वालां पिबन्ति कथनीयमिदं बहुज्ञैः ॥ ५४२ ॥

### பதவுரை

**ये**-எவர்கள்

**स्वमनोरथेन**—தமதிச்சையினுல்

**सहसा**—கடத்தால்

**श्रुतिशिरोवचनस्य**—வேதாந்த வாக்கியத்தின்

**भङ्गम्**—கேட்டினை

**निष्कारणम्**—காரணமின்றியே

**वर्णयन्ति**-வருணிக்கின்றனரோ

**ते**- அவர்கள்

**दीप्तस्य**—ஜொலித்துக்கொண்டிருக்கின்ற

**दावदहनस्य**-காட்டக்கினியின்

**ज्वालाम्**—சுவாலையை

**किमर्थम्**—ஏன்

**न पिबन्ति**-குடிக்கின்றார்களில்லை

**बहुज्ञैः**—அதிகத்தினையறிந்த வைசேஷிகரால்

**इदं कथनीयम्**—அதன்கண் காரணம் சொல்லத்தக்கது.

### விசேஷவுரை

காரணமின்றி என்பதற்கு சுருதிசித்த அத்துவயத்தின்கண் பாதகமின்றியும் அதன் தியாகம் நிஷ்காரணமேயாமென்பது பொருள். சுருதி

யினுல் சித்தித்த அர்த்தம் அபாதிதமாயினும் தம்மாலங்கீகரிக்கப்பட்ட சித்தாந்தத்தின் அநுசாரமாக அதனைவிட்டு அதற்கு வேறு பொருளைக் கூறுவாராயின் அப்போது அவர்களுக்கு அசக்கிய ஸாஹசம் அதாவது செய்யக்கூடாத காரியம் யாதொன்றுமின்ரும் ஆதலின் எரிகின்ற தீயின் கொழுந்தை அவர்கள் ஏன் பருகுகின்றிலர் இதன் கண் வைசேஷிகர் ஏதேனும் காரணத்தைக் கூறுதல் வேண்டும். (542)

## அவதாரிகை

அற்றேல் சுருதியும் பிரபஞ்சத்தின் உபாதானகாரணமாக சச்சிதானந்த வடிவப்பிரமத்தினை எப்படிப் பிரதிபாதிக்கும் அதற்கு (பிரம்மத்திற்கு) அது சம்பவியாமையின் என்று சங்கிக்கின்ருன் :—

## சுலோகம்

**ननु सच्चिदादिवपुषो जगतः प्रकृतित्वबोधनमकारणकम् ।**
**परमात्मनो न हि पदार्थयुजा रहितेह सम्भवति योग्यतया ॥**

## பதவுரை

**ननु**—சங்கை
**सच्चिदानन्दवपुषः**—சச்சிதானந்த வடிவ
**परमात्मनः**—பிரம்மத்திற்கு
**जगतः**—பிரபஞ்சத்தின்
**प्रकृतित्वबोधनम्**—உபாதானத்தன்மையைப் போதித்தல்
**अकारणकम्**—பிரமாண வடிவகாரண சூனியமாம்

சத்தப் பிரமாணமே அதன் (உபாதானத் தன்மை ஞானத்தின்) ஜனகமாமென்பதும் சரியன்றெனக் கூறுகின்ருர்.

**इह**—சத்தியாதி வடிவப்பிரம்மத்தின்கண்
**योग्यतया रहिता**—யோக்கியத்தன்மையின்றிய
**पदार्थयुजा**—சிருஷ்டிவாக்கியத்திலுள்ள பதார்த்தங்களின் சம்பந்தம்
**न हि सम्भवति**—சமபவிக்கின்றதில்லையென்பது கருத்து. (543)

## அவதாரிகை

பிரம்மத்திற்கு உபாதானத்தன்மையின் அயோக்கியத்தன்மையினையே விஸ்தரிக்கின்ருர்:—

### சுலோகம்

**उपादानता सच्चिदानन्दमूर्तेर्विरुद्धा जडेष्वेव सा दृश्यते हि ।
विरुद्धैः पदार्थैर्न वाक्यार्थसिद्धिर्न खल्वग्निनोक्षेदितीहान्वयोऽस्ति ॥**

### பதவுரை

**सच्चिदानन्दमूर्तेः**—சச்சிதானந்தவடிவப் பிரம்மத்திற்கு

**उपादानता**—சகத்தினுபாதானகாரணத்துவம்

**विरुद्धा**—விருத்தமாம்

விரோதத்தினையே கூறுகின்றார்.

**जडेषु एव**—உலகில் மண் முதலிய சடபதார்த்தங்களிலேயே

**सा**—உபாதானத்தன்மை

**दृश्यते हि**—காணப்படுகின்றது ஆதலின் சேதனத்திற்கு உபாதானத்தன்மை விருத்தமாமென்பது பொருள்

உபாதானத்தன்மையின் விரோதப் பிரதிபாதனத்தின் பயனைக் கூறுகின்றார்.

**विरुद्धैः पदार्थैः**—பரஸ்பரம் விருத்தபதார்த்தங்களினால்

**वाक्यार्थसिद्धिः**—வாக்கியார்த்தத்தின் சித்தி

**न**—உண்டாவதின்றாம்

அதன்கண் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்

**अग्निना**—தீயால்

**उक्षेत्**—நனைக்குக

**इति इह**—என்னும் இவ்வாக்கியத்தின்கண்

**अन्वयः न खलु अस्ति**—பதார்த்தங்கட்கு பரஸ்பரம் சம்பந்தமின்றாம்.

### அவதாரிகை

சேதனத்திற்கு திரவியத்தின் உபாதானத் தன்மை விருத்தமா அல்லது உபாதானத் தன்மை மாத்திரம் விருத்தமா இரண்டும் சரியன்று சித்தாந்தத்தின் கண்ணே விவர்த்தாதிஷ்டானத் தன்மையே உபாதானத் தன்மையாம். அதுவும் மண் முதலியவற்றால் வரைபட்ட சேதனத்திற்கு கடாதியினைக் குறித்து உளதேயாம் இவ்வாறு புருஷாதி

யின்கண் தானுவாதியினுரோபத்தின்கண்ணும் சேதனத்திற்கு திரவியத்தினுபாதானத் தன்மையுளதேயாம் அப்படியே சொப்னத் தின்கண் ஆன்மாவிற்கு விசித்திரப் பிரபஞ்சத்தினுபாதானத் தன்மை யும் பிரத்தியின் யநுஸரித்து சொல்லத்தக்கது என்னு மபிப்பிராயத்தால் முடிக்கின்றார் :—

சுலோகம்

उपादानता चेतनस्यापि दृष्टा यथा स्वप्नसर्गे विचित्रे प्रतीचः ।
यथा चोर्णनाभस्य सूत्रेषु पुंसां यथा केशलोमादिसृष्टौ च दृष्टा ॥

பதவுரை

**चेतनस्य**–சேதன வடிவ

**प्रतीचः अपि**–பிரத்தியகான்மாவிற்கும்

**विचित्रे**–விசித்திரமான

**स्वप्नसर्गे**–சொப்பன சிருஷ்டியினைக் குறித்து

**उपादानता**–உபாதான காரணத்துவம்

**यथा दृष्टा**–எப்படிக் காணப்பட்டதோ

**ऊर्णनाभस्य**–சிலந்திப்பூச்சிக்கு

**सूत्रेषु**–தந்துவினைக் குறித்து

**यथा च**–எப்படி உபாதானத் தன்மை காணப்பட்டதோ

**पुंसाम्**–சீவர்களுக்கு

**केशलोमादिसृष्टौ च**–கேசலோமாதியின் சிருஷ்டியினைக் குறித்து

**यथा च दृष्टा**–எப்படி உபாதானத் தன்மை காணப்பட்டதோ அப்படிச் சாக்கிராவஸ்தையில் சேதனத்திற்கு உபாதானத்துவம் பொருத்தமாம்.

விசேஷவுரை

சித்தாந்தத்தின்கண் சமுச்சயம் சம்பவியாண்மையால் பிரத்திய கான்மாவிற்கும் என்ற உம்மை நிச்சயார்த்தத்தில் வந்தது அல்லது மண் முதலியவற்றிற்கும் கடாதி பரிணாமத்தின் யாசிரயித்து அதன் சமுச்சயத்தின் பொருட்டாம்,

இந்தப் பிரகாரம் பரிணாம வாதத்தின் கண்ணும் இந்நியமமின்று மென்று கருதி வேறு திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் சிலந்திப் பூச்சியென.

அற்றேல் அத்தந்துவானது அப்பூச்சியின் லாலையின் பரிணாமமே யாம் அதுவோ சேதனமன்றாம் என்னும் சங்கைக்கு அதன்கண் வேறு திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் சீவர்களுக்கு என. அற்றேல் சீவனது சரீரத்திற்கே கேசலோமாதியின் கூறியது உபாதானத்தன்மை யாம் சீவனுக்கன்றாம் எனின் அற்றன்று மிருத சரீரத்தில் கேசாதியின் விருத்திகாணப்படாமையின் பரஸ்பரம் தாதான்மியமாக அந்நியஸ்த மான அவற்றிற்கும் விவிக்தமின்மையால் சீவனிடத்து உபாதானத் தன்மையுண்மையின். இக்காரணத்தாலேயே

यथोर्णनाभिः सृजते गृह्णते च यथा पृथिव्यामोषधयः सम्भवन्ति ।
यथा सतः पुरुषात्केशलोमानि तथाऽक्षरात्सम्भवतीह विश्वम् ॥

(எப்படி சிலந்திப்பூச்சி தானே நூலினை நூற்று தன்னிடத்திலேயே ஒடுக்கிககொள்ளுகிறதோ, எப்படிப்பிருதிவியின்கண் ஓஷதிகள் உண்டா கின்றனவோ எப்படி சத்வடிவ புருஷனினின்றும் கேசலோமங்கள் உண்டாகின்றனவோ அப்படி அக்ஷரவடிவ பரமான்மாவினின்றும் இப்பிரபஞ்ச முண்டாகின்றது) என்னும் சுருதியும் திருஷ்டாந்தத்தால் பிரம்மத்திற்கு பிரபஞ்சத்தின் உபாதானத்தன்மையினைக்கூறுகின்றது.

## அவதாரிகை

வைசேஷிகர் முதலியோர்களுக்கும் எது உபாதானமோ அது சடமே யாம் என்னும் நியமமின்றாம் புத்தியாதியின் உபாதானமான சேதனத் தின் கண் வியபிசாரமாதலால்.

திரவியத்தின் உபாதானத்திற்கே அப்படிப்பட்ட நியமமாமென்று சொல்லற்க குணத்தின் உபாதானங்களாயினும் பிருதிவியாதி எட்டன் கண் சேதனத்தன்மை காணப்படாமையின் ஆன்மாவிற்கு குணத்தினு பாதானத்தன்மையும் சித்திக்காது. அநுபவமுளதாதலின் சேதனத் திற்கும் குணத்தினுபாதானத்தன்மையாமென்று சொல்லற்க. கடாதி யின் கண்ணும் இருப்புவிளக்கத்தின் அநுபவமுளதாதலின் சத்திய சேதனத்திற்கு அஃது அங்கீகரிக்கத்தக்கதாம். அதன் கண்ணுள்ள

இருப்பு விளக்கங்கட்கு அதன் உபாதானத்தினும் அன்னியத்தன்மை சம்பவிக்கிறதில்லை. கடமிருக்கின்றது என்னும் சத்தின் தாதான்மியா நுபவம் வைசேஷிகரால் கற்பிக்கப்பட்ட சத்தாஜாதியை விஷயஞ்செய்வ தின்று அச்சாதியின் கண் பிரமாணமின்மையின், சத்தினநுகத ஞானமே அதன்கண் பிரமாணமாமென்னற்க அது அதன் சம்பந்த மாத்திரத்தை விஷயஞ்செய்வதால் மட்குடம் என்பது போன்று தருமி விஷயகத்தன்மையாலும் பொருந்துதலின் அந்தஞானத்திற்குசத்தா ஜாதி வடிவதருமத்தை சாதிக்குந்தன்மையின்மையின் கடத்தின்கண்ணிருப்ப தாகப்பிரதீதியாதலின் அஃது தருமமாமென்னற்க பாதாயோக்கியத்துவ வடிவ அச்சாதிகடத்தின்கண் இல்லாமையின் கடத்தின் அபாத்தியத் தன்மையில் பிரமாணமின்றன்றோ. ஆதலால் காலத்திரயாபாத்திய சிதான்மாவே யாண்டும் உபாதானத்தன்மையால் அநுசூதமாய் இருக்கின்றது என்னும் ஞானத்திற்கு விஷயமாம். ஜாட்டிய புத்தியோ அவித்தையால் பண்ணப்பட்டதாமென அறிக. இந்தப்பிரகாரம் சுருதியின் பலத்தாலும் சேதனத்திற்கு உனது மதத்தின்கண் புத்தியாதி யின் உபாதானத்தன்மை போன்று வியதாதியின் உபாதானத்தன்மையும் அவிருத்தமாமென்னுங்கருத்தால் கூறுகின்றார்:—

### சுலோகம்

बुद्ध्यादिकार्येष्वपि चेतनोऽयं भवेदुपादानमितीष्यते च ।
आत्मा गुणी ते च गुणाः प्रसिद्धाः गुणी गुणानां प्रकृतिश्च सिद्धा ॥

### பதவுரை

बुद्ध्यादिकार्येषु अपि-ஞானம் முதலிய காரியங்களைக்குறித்தும்

अयं चेतनः-சேதன வடிவ இவ்வான்மாவானது

उपादानं भवेत्-உபாதானகாரணமாகும்

इति इष्यते च-என்று வாதிகளால் அங்கீகரிக்கப்படுகின்றது

அவர்களது அங்கீகாரத்தினையே யுத்தி பூருவகம் கூறுகின்றார்

आत्मा-ஆன்மா

गुणी-குணியாம்

ते-புத்தி முதலியவை

गुणाः-குணங்களாம்

**प्रसिद्धाः**-இவை பிரசித்தங்களாம்

அதனுற் சித்தித்ததென்னை யென்னுமிடத்துக்கூறுகின்றார்.

**गुणी**-குணமுடைய திரவியம்

**गुणानाम्**-புத்திமுதலிய குணங்கட்கு

**प्रकृतिः च**-உபாதான காரணமாமென

**सिद्धा**-சித்தித்தது

குணமுடைய திரவியம் என்பதற்கு அநித்திய குணத்திற்கு ஆசிரயமாமென்பது பொருள் அன்றேல் புத்தியாதிக்கும் ஆன்மாவிற்கும் குணகுணிபாவம் சித்தியாது என்பது கருத்து. முதலிய சத்தத்தால் இச்சை முதலியவற்றைக்கொள்க. **(546)**

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் ஆன்மாவிற்கும் திரவியத்தின் உபாதானத் தன்மையைத்திருஷ்டாந்தத்தால் உபபாதனஞ்செய்து அதன்கண் பூருவ வாதியால் சேதனம் திரவியத்தினுபாதானமாமென்னும் வாக்கியம் யோக்கியதையின்மையால் போதகமன்றும் என்று யாதொன்று கூறப் பட்டதோ அது இவ்வாருகும்போது பொருத்தமன்றுமெனக் கூறுகின்றார்

### சுலோகம்

**आकांक्षादिर्विद्यते योग्यतान्ता यस्मादस्मिन्नागमाज्जायमाने ।**
**सामग्री या वैदिकैरस्य दृष्टा तस्माद्युक्ता योनिता चेतनस्य ॥ ५४७ ॥**

### பதவுரை

**आगमात्**-வேறிடத்தில் வாக்கியத்தினுல்

**जायमाने**-உண்டாகிற ஞானத்தின்கண்

**आकांक्षादिः**-அவாய்நிலையை முதலிலுடைய

**योग्यतान्ता**-தகுதிபரியந்தமான

**या सामग्री**-யாதொரு சாமக்கிரியானது

**वैदिकैः**-வைதிகமீமாம்ஸகராலும்

**दृष्टा**-அறியப்பட்டதோ (அது)

**अस्मिन्**-பிரம்மம் பிரபஞ்சத்தினுபாதானமாமென்னும் ஞானத்தை யுண்டுபண்ணுவதன் கண்ணும் எதினின்றும் என்பதாதி பதங்கட்கும்

**यस्मात्**-யாதொரு காரணத்தினுல்

**विद्यते**-இருக்கின்றதோ

**तस्मात्**-அக்காரணத்தால்

**अस्य चेतनस्य**-பிரத்தியக்வடிவ பிரம்மத்திற்கு

**योनिता**-உபாதானத்தன்மை

**युक्ता**-பொருத்தமாம்

*விசேஷவுரை*

கூறிய பிரகாரத்தால் சேதனத்திற்கு திரவியத்தினுபாதானத் தன்மையின்கண் பாதகமின்மையின் அதனைப்பிரதிபாதிக்கின்ற வாக்கியத்திற்கு சஹகாரிகளான ஆகாங்க்ஷை சந்நிதி யோக்கியதை களிருக்கின்றன ஆதலின் பிரம்மத்திற்கு அது சித்திக்கின்றது என்பது கருத்து. (547)

*அவதாரிகை*

இந்தப்பிரகாரம் சிருஷ்டி வாக்கியங்களினுல் பிரம்மத்திற்கு அபின்ன நிமித்தோபாதானத்தன்மை யாதொன்று சொல்லப்பட்டதோ அது அதற்கு லக்ஷணமேயாம் அதன்கண் பிரமாணமன்றும் அதன்கண் பிரமாணமோ சுவதப்பிரமாண வேதாந்த வாக்கியமேயாம் காரியவடிவ ஏதுவும் அதன் பொருளையுபபாதனஞ்செய்யுந்தன்மையால் அதற்கு சஹாயத்தினைச்செய்கின்றதாய் அதன்கண் தருக்கபாவத்தினையடைகின்றதென தனது சித்தாந்தத்தை முடிக்கிருர்:—

*சுலோகம்*

**तस्मादेतल्लक्षणं चिह्नमाहुर्नैतत्तस्मिन् ब्रह्मणि स्यात्प्रमाणम् ।**
**आम्नायस्य स्वप्रधानत्वहेतोर्लिङ्गस्यास्मिञ्छेषभावाच्च नित्यम् ॥**

*பதவுரை*

**तस्मात्**-ஆதலால்

**एतत् चिह्नम्**-சகத்தின் ஜன்மாதி ஏதுத்துவத்தினை

**लक्षणम्**-பிரம்மத்தின் லக்ஷணமாக

**आहुः**—கூறுகின்றனர்

**एतत्**—சகத்தின் ஜன்மாதி ஏதுத்துவம்

**तस्मिन् ब्रह्मणि**—அந்தப்பிரம்மத்தின் கண்

**प्रमाणम् न स्यात्**—பிரமாணமன்றும்

**आम्नायस्य**—வேதத்திற்கு

**स्वप्रधानत्वहेतोः**—சுவப்பிரதானத்தன்மை வடிவ ஏதுவாலும்

**लिङ्गस्य**—காரியவடிவ ஏதுவிற்கு

**अस्मिन्**—வேதத்தினைக்குறித்து

**नित्यम्**—எப்போதும்

**शेषभावात् च**—அங்கத்தன்மையுண்மையானும் என்க

சுவப்பிரதானத்துவமாவது அபௌருஷேயத்தன்மையால் பிரமாணாந்தரத்தின் அநபேக்ஷத்தன்மை (548)

## சமன்வயத்தின் உபசம்மாரம்

### அவதாரிகை

இந்தப்பிரகாரம் சிருஷ்டிவாக்கியத்தினும் தத்துவமசிவாக்கியத்தின் கண்ணுள்ள தத்பதார்த்தப்பிரம்மம் நிரூபிக்கப்பட்டபோது பரமப் பிரகிருதமான சமன்வயத்தை முடிக்கின்றார்:—

### சுலோகம்

**इत्थं जगत्कारणवादिवाक्यं समन्वितं ब्रह्मणि तत्पदार्थे ।**
**तल्लक्षणं तस्य तटस्थभूतमानन्त्यसिद्ध्यै कथयद् यथोक्तम् ॥**

### பதவுரை

**इत्थम्**—இந்தப்பிரகாரம்

**जगत्कारणवादिवाक्यम्**—சகத்காரணப் பிரம்மத்தினைப் பிரதிபாதிக்கின்ற எதினின்றும் என்பதாதி சுருதியானது

**तस्य**—பிரம்மத்திற்கு

**आनन्त्यसिद्ध्यै**—சஜாதீயாதி பரிச்சேதரகிதத்துவ வடிவ அநந்தத் தன்மையின் சித்தியின் பொருட்டு

**तटस्थभूतम्**—கற்பிதத் தன்மையால் அதன் சொரூபத்தினின்றும் வேறான

**यथोक्तम्**–அபின்ன நிமித்தோபாதானத்துவ வடிவ

**तल्लक्षणम्**–அதன் லக்ஷணத்தை

**कथयत्**–பிரதிபாதிக்கின்றதாய்

**तत्पदार्थे**–தத்பதத்தின் பொருளான

**ब्रह्मणि**–பிரம்மத்தின்கண்

**समन्वितम्**–சமன்வயமுடையதாக ஆகின்றது

இந்தப் பிரகாரம் சுருதியானது தற்பதார்த்தப் பிரம்மத்தின்கண் சமன்வய முடையதாகின்றது எனக் கூட்டுக. (549)

## அவதாரிகை

அற்றேல் பிரம்மமொன்றே உபாதானமும் நிமித்தமுமாயின் இந்தப் பிரபஞ்சத்திற்குக் கிரமமாக சிருஷ்டி எவ்வாறு கூடும் விசித்திரத் தன்மைதான் ஏப்படிக்கூடும் அன்றியும் விஷமத்தன்மையும் குரூரத் தன்மையும் பரமான்மாவிற்கு ஏன் பிராப்தியாகாது என்னுஞ் சங்கைக்கு உபாதானத்திற்குங் கருத்தாவிற்குமே சுருதியின் பலத்தால் ஏகத் தன்மையினை யறிகின்றோம் சிருஷ்டிக்கப்படுகின்ற பிராணிகளது விசித்திர கருமத்தினையாவது அதன் வாசனையையாவது அவர்களது போகவாசனையையாவது இல்லையென்று கூறுகின்றிலேம் ஆதலின் கருமத்தின் அநியத்திக்கிரமத்தாலும் கருமத்தின் விசித்திரத்தன்மை யாலுமே கிரமமுடைய விசித்திர சிருஷ்டி பொருத்தமுடையதேயாம். இக்காரணத்தாலேயே ஈசுவரனுக்கு விஷமத்தன்மை முதலியவையு மின்றும். அவ்வாறே "तद्य इह रमणीयचरणाः रमणीयां योनिमापद्येरन् कपूयचरणाः कपूयां योनिम्" (எவர்கள் ஈண்டு நல்ல நடத்தையினை யுடையரோ அவர்கள் நல்ல ஜன்மத்தையடைவார்கள் கெட்ட நடத்தை யினை யுடையவர் கெட்ட ஜன்மத்தையடைவார்கள்) என்பது முதலிய சுருதியும் விசித்திரமான சமுசாரகதியினை யநுவதிக்கின்றது என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்:—

## சுலோகம்

**स्वात्मानमेव जगतः प्रकृतिं यदेकं**
**सर्गे विवर्तयति तत्र निमित्तभूतम् ।**

कर्माकलय्य रमणीयकपूयमिश्रं
पश्यन् नृणां परिवृढं तदितीर्यमाणम् ॥ ५५० ॥

### பதவுரை

**तद् इति ईर्यमाणम्**–தத்துவமசிவாக்கியத்திலுள்ள தத்பதத்தால் சொல்லப்படுகின்ற

**यद् परिवृढम्**–யாதொரு பிரம்மமுண்டோ

**तत्**–அது

**नृणाम्**–சீவர்களது

**रमणीयकपूयमिश्रम्**–புண்ணியம் பாபம் மிசிரம் என்னும் மூவித

**कर्म**–கருமத்தினை

**पश्यत्**–அறிகின்றதாகி

**सर्गे**–சிருஷ்டி செய்யத்தக்கதாகும்போது

**तत्र**–அக்கருமத்தின்கண்

**निमित्तभूतम्**–இது விசித்திர சிருஷ்டியின் நிமித்தமாமென்று

**आकलय्य**–நிச்சயித்து

**एकम्**–ஒன்றாயினும்

**जगतः प्रकृतिम्**–சகத்தினுபாதானமான

**स्वात्मानमेव**–தன்னையே

**विवर्तयति**–கற்பிதமாக வேற்றுவடிவத்தினை யடைவிக்கின்றது.

### விசேஷவுரை

இந்தப் பிரகாரம் சிருஷ்டிக்கப்படுகின்ற பிராணிகளது கருமத்தை யநுசரித்ததால் கூறப்பட்ட தோஷத்தின் லேசமுமின்று மென்பது கருத்து இந்தப் பிரகாரம் சிருஷ்டிவாக்கியங்கட்கு தடஸ்தப் பிரம்மத்தின் லக்ஷணத்தை யநுவதித்தல் வாயிலாக தற்பத லக்ஷியப் பிரம்மத்தின்கண் சமன்வயம் நிரூபிக்கப்பட்டது. அதனல் சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்மம் என்பது முதலிய வாக்கியத்தால் சித்தித்த சொரூப லக்ஷணமும் சேதனத்தை யநுவதிக்கின்ற எதினின்றும் என்பதிலுள்ள எது என்னும் பிரகிருதி யம்ஸத்தால் அகண்ட சின்மாத்திரமாமென அர்த்தத்தால் தெரிசிப்பிக்கப்பட்டது ஆதலின் இரண்டாவது சூத்திரத்தால் இரண்டு லக்ஷணமும் சித்தித்தது. (550)

## அவதாரிகை

அற்றேல் சமன்வய சூத்திரத்தாலேயே வேதாந்த வாக்கியங்கட்குப் பிரம்மத்தின்கண் சமன்வயம் விசாரிக்கப்பட்டது ஆதலின் இச்சூத்திரத்தாலும் அதனை நிருபித்தலாற் பயனென்னை என்று சங்கித்து சமன்வய சூத்ரத்தால் தத்துவமசி முதலிய எல்லா வாக்கியங்கட்கும் மஹா தாற்பரியம் நிருபிக்கப்பட்டது இரண்டாவது சூத்திரத்தின் கண்ணே தத்பதத்தின் தாற்பரியம் நிருபிக்கப்பட்டது ஆதலால் இது வியர்த்த மன்றும் தத்பதத்தின் தாற்பரிய நிச்சயமின்றி வாக்கியார்த்த நிச்சயம் சம்பவிக்கிறதில்லையன்றோ என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார்.

## சுலோகம்

**पदवृत्तिसमन्वयावुभौ प्रतिपाद्यौ प्रथमे हि लक्षणे ।**
**तदवान्तरवाक्यवर्त्मना पदवृत्तिः प्रथमं प्रकीर्तिता ।। ५५१ ।।**

## பதவுரை

**प्रथमे हि लक्षणे**-முதலாவது அத்தியாயத்தின் கண்ணே

**पदवृत्तिसमन्वयौ** – தத்துவம்பதங்கட்கு சுவார்த்தத்தின்கண் விருத்தியும் அப்பதங்களின் சமுதாயவடிவ வாக்கியத்திற்கு அகண்ட வஸ்துவில் பரியவசானமுமாகிய

**उभौ**-இரண்டும்

**प्रतिपाद्यौ**-பிரதிபாதிக்கத்தக்கனவாம்

**तद्**-அக்காரணத்தால்

**अवान्तरवाक्यवर्त्मना** – தத்துவமசிவாக்கியத்தின் தத்பதார்த்த நிஷ்ட அவாந்தரவாக்கியார்த்தத்தைச் சொல்லுதல் வாயிலாக

**प्रथमम्**-சமன்வய நிருபணத்திற்கு முன்பு

**पदवृत्तिः**-பதார்த்தமே

**प्रकीर्तिता** -சொல்லப்பட்டது. (551)

## அவதாரிகை

இவ்வாறுயின் துவம்பதத்தின் தாற்பரியமும் நிருபிக்கத்தக்கதாகும். அன்றேல் வாக்கியார்த்த நிச்சயம் உண்டாகாது. ஆதலின் என்று சங்கித்து முதற் சூத்திரத்தின்கண் அது நிருபிக்கப்பட்டதேயாமாதலின்

இரண்டாவது சூத்திரத்தின்கண் தத்பதத்தின் தாற்பரியமே நிரூபிக்கப் படுகின்றது என்னுங்கருத்தாற் கூறுகின்றார்:—

சுலோகம்

आद्ये सूत्रे त्वंपदस्योदितत्वाद्वृत्तेरस्मिंस्तत्पदस्योच्यमाना ।
वृत्तिर्ज्ञेया तत्पदार्थेऽद्वितीये प्रत्यग्ज्ञाते त्वंपदस्योदितैव ॥ ५५२ ॥

பதவுரை

**आद्ये सूत्रे** – "अथातो ब्रह्मजिज्ञासा" என்னும் முதற் சூத்திரத்தின்கண்

**त्वंपदस्य** – துவம்பதத்தின்

**वृत्तेः** – தாற்பரியம்

**उदितत्वात्** – கூறப்பட்டமையால்

**अस्मिन्** – இவ் இரண்டாவது சூத்திரத்தின்கண்

**तत्पदस्य** – தத்பதத்தின்

**वृत्तिः** – தாற்பரியம்

**उच्यमाना** – சொல்லப்படுகின்றதாக

**ज्ञेया** – அறியத்தக்கது

அற்றேல் இரண்டாவது சூத்திரத்தின்கண் தத்பதத்திற்கு எப்பொருளின்கண் தாற்பரியம் நிரூபிக்கப்படுகின்றது. முதற் சூத்திரத்தின்கண் துவம்பதத்திற்குத்தான் எப்பொருளின்கண் தாற்பரியம் நிரூபிக்கப்படுகின்றது என்னுமபேக்ஷையுண்டாகக்கூறுகின்றார்.

**अद्वितीये** – நித்திய சுத்தாதி வடிவ அத்துவித

**तत्पदार्थे** – தத்பதார்த்தப் பிரம்மத்தின்கண், இரண்டாவது சூத்திரத்தால் தத்பதத்தின் தாற்பரியம் நிரூபிக்கப் படுகின்றது

**प्रत्यग्ज्ञाते** – முதற் சூத்திரத்தாலே பிரமாதா முதலியவற்றினின்றும் விலக்ஷண அபரோக்ஷ சாக்ஷி சைதன்னிய மாத்திரத்தின் கண்

**त्वंपदस्य** – துவம்பதத்திற்கு

**उदिता एव** – தாற்பரியம் நிரூபிக்கப்பட்டதேயாம் (552)

## அவதாரிகை

அற்றேல் முதற் சூத்திரம் அதிகாரிக்கு பிரம்மஞானத்தின் பொருட்டு சிரவணத்தின் கருத்தவ்யத் தன்மையினைப் பிரதிபாதிக்கின்றது. ஏதேனும் ஓர் பொருளின்கண் துவம்பதத்தின் தாற்பரியம் பிரதிபாதிக்கப்படுகின்றதில்லை எனின் அற்றன்று தத்துவமசி வாக்கியத்தின்கண்ணே அதிகாரியின்கண் பிரயோகிக்கப்படுகின்ற துவம்பதம் அவ்வதிகாரிக்கு பிரம்மாபேத யோக்கியதையினை தெரிசிப்பிக்கின்றது முதற் சூத்திரமும் முத்தியதிகாரி விஷயகமாம் ஆதலின் அதனால் அது நிரூபிக்கப்பட்டதேயாம்.

அற்றேல் வைராக்கியம் சமம் தமம் முதலியவற்றோடு கூடிய முமுக்ஷுவிற்கே பிரம்மவிசாரத்தில் அதிகாரமாம் அவனுக்குப்பிரம்மாபேத யோக்கியதையெப்படிக் கூடும் எனின் நீ கூறியது வாஸ்தவந்தான் சாந்தியாதியையுடையவனுக்கே அதிகாரமாம் அவனும் தத்துவமசி வாக்கியத்தின் சாமர்த்தியத்தால் நித்திய முக்தப் பிரம்மமேயாம் ஆதலின் சொரூபமாக அதிகாரியன்றும் மற்றோ இப்படிப்பட்ட நித்திய முத்தாதிப் பிரம்ம வடிவ அவனிடத்தில் சேதனவடிவ ஆன்மாவிற்கும் அசேதனவடிவ அவித்தையகங்காராதிகட்கும் அன்னியோன்னியாத்தியாசத்தால் சம்சாரம் போன்று அதன் தருமமான விவேக வைராக்கிய சமதமாதியினையுடையதாந்தன்மை யங்கீகரிக்கப்படுகின்றது. அதனால் சிதேகரசமான கூடஸ்தனுக்கும் அதிகாரம் சம்பவிக்கின்றது. என, மகா வாக்கியத்தின்கண் துவம்பத சாமர்த்தியத்தால் சித்திக்கின்றது. ஆதலால் அதிகாரியை நிரூபிக்கின்ற முதற் சூத்திரத்தின்கண் துவம்பதத்திற்குச்சின்மாத்திரத்தின்கண் தாற்பரியம் நிரூபிக்கப்பட்டதேயாமென்னுங்கருத்தாற் கூறுகின்றார்;—

## சுலோகம்

अनधिकारिणि शुद्धचिदात्मके दृगदृशोरितरेतरविभ्रमात् ।
शमदमादिसमन्वितताेष्यते भवति तेन चितोऽप्यधिकारिता ।। ५५३ ।।

## பதவுரை

**अनधिकारिणि** – சுபாவமாக அதிகாரித்துவ தருமமின்றிய

**शुद्धचिदात्मके** – சுத்த சேதன சொரூபத்தின்கண்

**दृगदृशोः** – பிரத்தியகான்மாவிற்கும் அஹங்காராதிபராக் விஷயத்திற்கும்

**इतरेतरविभ्रमात्** – பரஸ்பராத்தியாசத்தால்

**शमदमादि समन्वितता** – சமம் தமம் முதலியவற்றையுடையதாந் தன்மை

**इष्यते** – அங்கீகரிக்கப்படுகிறது

**तेन** – அதனுல்

**चितोऽपि** – சின்மாத்திர ஆன்மாவிற்கும்

**अधिकारिता** – பிரம்மவித்தையில் அதிகாரம்

**भवति** – பொருந்துகின்றது (553)

### அவதாரிகை

அற்றேல் அதிகாரிக்கே மோக்ஷ ஸம்பந்தமுண்மையின் கேவல் அவ்வான்மாவிற்கே சமம் முதலியவையும் சிரவணாதியின் அதிகாரமும் ஆமாதலின் பிரத்தியகான்மாவிற்கும் பராக்விஷயத்திற்கும் என்பதாதி பொருத்தமின்றியதாமென்னுமிடத்துக் கூறுகின்றார்:—

### சுலோகம்

**अनधिकारितया दृगवस्थिता स्वरसतःपरमेश्वरविग्रहा ।**
**घनतमःपटलावरणान्वयादुपगता श्रवणाद्यधिकारिताम् ॥ ५५४ ॥**

### பதவுரை

**परमेश्वरविग्रहा** – முற்கூறிய நியாயத்தால் பரமேஸ்வர சொரூப மாதலால்

**दृक्** – அதிகாரியின் சொரூபமான சேதனம்

**स्वरसतः** – இயற்கையினுல்

**अनधिकारितया** – அநதிகாரியாக

**अवस्थिता** – இருக்கின்றது. ஆதலின் முற்கூறிய அத்தியாசத் தாலேயே அதற்கு அதிகாரமாமென்பது கருத்து.

அற்றேல் சொப்பிரகாச சேதனத்தின்கண் அத்தியாசமே பொருந்ாது என்னுஞ் சங்கைக்கு அதற்கும் அஞ்ஞானவரணத்தையுபபாதனஞ்

செய்தமையின் அஃது பொருத்தமேயாமென்னுங் கருத்தாற் கூறுகின்றார்.

**घनतमःपटला-वरणान्वयात्** } கூடஸ்த சேதனம் அஞ்ஞானமாகிற அந்தகாரத்தினால் நேத்திரம் படலத்தினற்போன்று மறைவுபட்டிருத்தலின்

**श्रवणाद्यधिकारिताम्** – சிரவணாதியின் அதிகாரத்தன்மையினை

**उपगता** - அடைந்துளது (554)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் அகங்காராதி விசிஷ்டசேதனத்திற்கு சிரவணாதியின் அதிகாரத்தையங்கீகரிக்கின் அதற்கே மோக்ஷமும் சொல்ல வேண்டுமாதலின் கேவலான்மாவின்கண் துவம்பதத்தின் தாற்பரிய மன்றும் என்னுஞ்சங்கைக்கு எப்படி தேகாதி வாயிலாக சுவர்க்க சாதன கருமத்தின்கண் ஆன்மாவிற்கு அதிகாரமோ அஃதின்றிப் பொருந்துகிற தில்லையோ அப்படி அகங்காராதி வாயிலாக முக்தான்மாவிற்கே அமுக்தத் தன்மையின் பிராந்தியினால் மோக்ஷ சாதனத்தின்கண் அதிகாரமாம் அஃதின்றிப் பொருந்துவதின்றும் அதற்கு மோக்ஷ சம்பந்தமுமின்று மென்னுங்கருத்தாற் கூறுகின்றார்:—

## சுலோகம்

अज्ञानतज्जघटना चिदधिक्रियायां
द्वारं परं भवति नाधिकृतत्वमस्याः ।
नाचेतनस्य घटतेऽधिकृतिः कदाचित्
कर्तृत्वशक्तिविरहादिति वक्ष्यते हि ॥ ५५५ ॥

## பதவுரை

**अज्ञानतज्जघटना** – அஞ்ஞான அதன் காரியங்களோடுள்ள சம்பந்தம்

**चिदधिक्रियायाम्** – சேதனத்தினதிகாரத்தின்கண்

**परं द्वारम्** – கேவலம் கடகம் அதாவது உபாதி

**भवति** - ஆகின்றது

**अस्याः** – அஞ்ஞான அதன் காரியங்களோடுள்ள சம்பந்தத்திற்கும்
**अधिकृतत्वम् न** – அதிகாரமின்றும்
அதிகாரமின்மையிலேதுவினைக் கூறுகின்றார்.
**अचेतनस्य** – அசேதன (மாதலின்) சம்பந்தத்திற்கு
**कदाचित्** – ஓர் போதும்
**अधिकृतिः** – அதிகாரம்
**न घटते** – பொருந்துவதின்றும்
அசேதனத்திற்கும் அது ஏன் பொருந்துவதின்று என்னுமிடத்துக் கூறுகின்றார்.
**कर्तृत्वशक्तिविरहात् इति** – அசேதனத்திற்கு கருத்திருத்துவசத்தியின்மையால் என
**वक्ष्यते हि** – சொல்லப்படுதலின்

## விசேஷவுரை

அசேதனத்திற்கு சேதனத்தின் தருமமான சிரவணாதியின் கருத்திருத்தன்மை பொருந்தாமையாலும் சேதனத்தையாசிரியாத அதற்கு சுதந்திரமாக வியாபாரம் சம்பவியாமையாலும் கருத்திருத்துவ சத்தியின்றும் என சாங்கியரைக் கண்டிக்குமவசரத்தில் சூத்திரக்காரரால் சொல்லப்படும் என்பது பொருள். இந்தப்பிரகாரம் நித்தியமுக்தான்மாவே தன்னிலத்தியஸ்தமான தேகத்துவபம் அதன் தருமமான வைராக்கியாதி சம்பன்னனாய் அதன் வாயிலாக பிரம்மவிசாரத்தில் அதிகாரியாதலின் அதனைப்போதிக்கும் துவம்பதத்திற்த முதற்சூத்திரத்தின்கண் அதன் கண் தாற்பரியம் நிருபிக்கப்பட்டதேயாமென்பது கருத்து. (555)

## அவதாரிகை

அற்றேல் சுத்தசிதான்மாவிற்கே கூறியபிரகாரத்தால் அதிகாரமாமென துவம்பதத்திற்த அதன்கண்ணேயே தாற்பரியம் அங்கீகரிக்கப்படுமாயின் **"तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत्"** (பிரம்ம சாக்ஷாத்காரத்தின் பொருட்டு அதிகாரியானவன் குருவினை சரணடைக) என்பது முதலிய சுருதியின் பொருளினையுடைய **"उपससाद चतुष्टयसाधनः"** 65வது சுலோகத்தில் நான்கு சாதனங்களையுடையவனாகி சரணடைந்தான் என்பது முதலிய வசனத்தால் அதிகாரியை நிருபிக்கும் பிரசங்கத்தில்

உம்மூல் இப்பொருள் ஏன் சொல்லப்படவில்லை என்னுஞ் சங்கைக்கு இஃது சூத்திரார்த்தமாதலின் ஆண்டு இப்பொருள் எனக்கு சம்மதந்தான் என்னுங்கருத்தால் கூறுகின்றார்:—

## சுலோகம்

**उपसत्तिवाक्यमधिकारिणि यत् कथितं समन्वितया प्रथमम् ।**
**इदमेव चेतसि निधाय तु तत् मुनिना प्रकीर्तितमुदारधिया ॥ ५५६ ॥**

## பதவுரை

**उपसत्तिवाक्यम्** – குருவைச்சரணடைக என்னுமுபசத்திவாக்கியம்
**अधिकारिणि** – விசிஷ்டாதிகாரியின்கண்
**समन्वितया** – தாற்பரியமுடையதாக
**प्रथमम्** – முதலில்
**यत् कथितम्** – யாதொன்று சொல்லப்பட்டதோ
**तत् इदम् एव** – அது இப்பொருளையே
**मनसि** – மனதில்
**निधाय** – வைத்துக்கொண்டு
**उदारधिया** – தாராளமான அறிவினையுடைய
**मुनिना** – பாதராயண மகரிஷியினால்
**प्रकीर्तितम् तु** – சொல்லப்பட்டதேயாம்

## விசேஷவுரை

சுத்த சிதான்மாவிற்கே கூறிய பிரகாரத்தால் அதிகாரமாமென்னும் அர்த்தத்தில் துவம்பதத்திற்குத் தாற்பரியமாமென்னும் பொருள் முதற் சூத்திரத்தின்கண் வியாசரால் சொல்லப்பட்டதேயாமென்பது பொருள். (556)

உபசத்தி = அடைவு

## அவதாரிகை

அற்றேல் உதாகரிக்கப்பட்ட வாக்கியத்தின்கண் (அதாவது முதற் சூத்திரத்தின்கண்) இப்பொருள் தோற்றுகின்றதில்லையாதலின் முனிவராலும் கூறப்பட்டதேயாமென்பது எப்படிப்பொருந்தும் என்னுஞ் சங்கைக்குக் கூறிய நியாயத்தாற் சித்தித்த அர்த்தத்தினை நினைப்பூட்டுகின்றார்:—

## சுலோகம்

शिष्योपसत्तिवचनानि समन्वितानि
शिष्ये चिदात्मनि परात्मनि नित्यमुक्ते ।
इत्येतदत्र कथितं मुनिना त्वमर्थे
त्वंशब्दवृत्तिकथनाय परे प्रतीचि ॥ ५५७ ॥

## பதவுரை

चिदात्मनि – ஞானவடிவனும்

परात्मनि – பரப்பிரம்ம வடிவனும்

नित्यमुक्ते – நித்திய முக்தனுமான

शिष्ये – சிஷ்யனிடத்தில்

शिष्योपसत्ति वचनानि – சிஷ்யனுக்குக் குருவினுடைவைக் கூறும வாக்கியங்களைத்தும்

समन्वितानि – தாற்பரியமுடையனவாம்

इत्येतत् – என்னும் இப்பொருள்

अत्र – ஈண்டு

परे – தேகாதி சங்காதத்தினின்றும் விலக்ஷணமான

त्वमर्थे – துவம் பதார்த்தமான

प्रतीचि – பிரத்தியகான்மாவின்கண்

त्वंशब्दवृत्ति कथनाय – துவம்பதத்தின் தாற்பரியத்தைச் சொல்லுதற் பொருட்டு

मुनिना – வியாச மகரிஷியால்

कथितम् – சொல்லப்பட்டது (557)

## அவதாரிகை

இந்தப்பிரகாரம் முதலாவது சூத்திரத்தாலும் இரண்டாவது சூத்திரத்தாலும் அத்துவயப்பிரம்மத்தின்கண்ணும் பிரத்தியகான்மாவின் கண்ணும் தத்பததுவம்பதங்களின் தாற்பரிய நிரூபண சமர்த்தனத்தை முடிக்கின்றார்:—

### சுலோகம்

उपसदनवचोविचारमार्गात् त्वमिति पदस्य परात्मनीह वृत्तिम् ।
कथयति भगवान् द्वितीयसूत्रे तदिति पदस्य परात्मनीति भेदः ॥

### பதவுரை

**उपसदनवचो विचारमार्गात्** — குருவின் அடைவினைக் கூறுகின்ற வாக்கியத்தின் விசார வாயிலாக

**इह** – முதற்சூத்திரத்தின்கண்

**त्वम् इति पदस्य** – துவம் என்னும் பதத்திற்கு

**परात्मनि** – தேகேந்திரியாகங்காராதி விலக்ஷண சாக்ஷியின்கண்

**वृत्तिम्** – தாற்பரியத்தினை

**भगवान्** – வியாசபகவான்

**कथयति** – கூறுகின்றார்

**द्वितीयसूत्रे** – இரண்டாவது சூத்திரத்தின்கண்

**तत् इति पदस्य** – தத் என்னும் பதத்திற்கு

**परात्मनि** – சகத்காரணமும் அதிஷ்டானமுமான அத்துவய வஸ்துவின்கண்

**(वृत्तिं कथयति)** – தாற்பரியத்தினைக்கூறுகின்றார்

**इति भेदः** – இஃது பதங்களுக்குள்ள பேதமாம் (558)

### அவதாரிகை

அற்றேல் இரண்டாவது சூத்திரம் எதினின்றும் என்பதாதி சிருஷ்டிவாக்கியத்தினை சூசிப்பிக்கின்றதாய் அதன் பொருளான அத்துவயவஸ்துவின்கண் தத்பதத்தின் பிரவிருத்தியினை நிரூபிப்பதில் தாற்பரியமுடையதாயின் அதன்பொருளான அத்துவயத்தின் சம்பாவனையைச்செய்கின்ற யுத்திகளை சூத்திரத்தாற்றெடுக்காமையின் அது எப்படி சித்திக்கும் என்னுஞ்சங்கைக்கு அதனைத்தொடுக்காமையசித்தமாமென்னுங்கருத்தாற் கூறுகின்றார்:—

### சுலோகம்

आवृत्त्या वा तन्त्रवृत्त्याऽथवेदं सूत्रं युक्तिं वेदवाक्योपयुक्ताम् ।
अप्याचष्टे बृंहणीमन्तरेण स्वार्थे युक्तिं वेदवाक्यं न पुष्टम् ॥ ५५९ ॥

*பதவுரை*

**इदं सूत्रम्**-ஜன்மாதியென்னும் இரண்டாவது சூத்திரம்

**आवृत्त्या**- ஆவிருத்தியினலாவது

**अथवा**-அல்லது

**तन्त्रवृत्त्या**-தந்திரவிருத்தியினலாவது

**वेदवाक्योपयुक्तम्**-வேதவாக்கியத்திற்கநுகூலமான

**युक्तिम् अपि**-யுக்தியினையும்

**आचष्टे**-கூறுகின்றது

கூறிய வாக்கியத்தினையே அதன் பொருளையுபபாதனஞ் செய்யுந் தன்மையால் மீண்டும் உச்சரித்தல் ஆவிருத்தியாம். ஒரே காலத்தில் அநேகார்த்த விவக்ஷையால் உச்சரித்தல் தந்திர விருத்தியாம். இரண்டாவது சூத்திரம் ஓர் ஆவிருத்தியினல் கூறப்பட்ட சுருதியினைச் சூசிப்பிக்கின்றது. மற்றோர் ஆவிருத்தியினல் இந்த ஜன்மம் முதலியவை எதினின்றுமுண்டாகின்றனவோ என அத்தியாஹாரத்தினல் வேதவாக்கியார்த்த நிர்ணயத்திற்கு உபயோகமான யுக்தியினையும் சூசிப்பிக்கின்றது.

அல்லது தந்திரவிருத்தியினல் அதனைக்கூறுகின்றது. சூத்திரமாதலாலேயே அநேகார்த்தத்தன்மையும் அன்னியாயமன்றும் என்பது கருத்து.

அற்றேல் அன்னியத்தையபேக்ஷியாத வேதவாக்கியத்திற்கு யுக்தியாகிய சஹாயம் எற்றிற்கு என்ருசங்கித்து அசேதனப் பிரபஞ்சத்திற்கு சேதனேபாதானத்தன்மை அப்பிரசித்தமாவது போன்று அதன் கருத்தாவின் அபேதம் அதன் சருவஞ்ஞத்தன்மை சருவசத்தித்தன்மை முதலியவை உலகில் அப்பிரசித்தமாதலின் அவற்றைப் பிரதிபாதிக்கும் சுருதிகட்கும் உபபாதனஞ்செய்கின்ற யுக்தியன்றி விபரீத நியாயத்தால் பாத்தியத்தன்மை சங்கையுண்டாவதால் சுருதி மாத்திரத்தால் அவை சித்தியாமையின் யுத்தியும் அபேக்ஷிக்கப்பட்டதேயாம் என்னுங்கருத்தாற் கூறுகின்ருர்.

**स्वार्थे** – தனது பொருளின்கண்

**बृंहणीम्** – சம்பாவனைக்கேதுவான மகத்தான

युक्तिम् अन्तरेण - யுத்தியன்றியில்லை

वेदवाक्यम्-சுருதியானது

पुरुम् न-தனது பொருளை நிச்சயம் செய்வதின்றும் (559)

## அவதாரிகை

அற்றேல் முதலாவது இரண்டாவது சூத்திரங்களால் தத்பதத்துவம் பதங்களின் தாற்பரியமும் சமன்வயசூத்திரத்தால் எல்லா வேதாந்த வாக்கியத்தின் தாற்பரியமும் நிரூபிக்கப்பட்டதாயின் அப்போது வாக்கியார்த்த விஷயகத்தன்மையால் பிரதானமாதலின் சூத்திரக்காரராலும் உம்மைப்போன்று அதுவே அநாவது சமன்வயசூத்திரமே முதலில் நிரூபிக்கத்தக்கதாம் என்னுஞ்சங்கைக்கு சாஸ்திராரம்பத்தின் பொருட்டு அதிகாரிசகிதமாக விசாரத்தின்விதி முதற்சூத்திரத்தால் நிரூபிக்கப்பட்டபோது விசாரிக்கப்படுகின்ற பிரம்மலக்ஷணத்தின் அசம்பவத்தால் அதனை யாக்ஷேபித்தபோது அதனை சமாதானஞ் செய்தற்பொருட்டு இரண்டாவது சூத்திரம் பிரவிருத்தித்தது அவ்விரண்டு சூத்திரங்களாலும் இரண்டுபதார்த்தங்கள் சித்தித்தபோது அவ்விரண்டன் அபேத வடிவவாக்கியார்த்தத்தின்கண் மூன்றாவது சூத்திரத்தால் சுருதிக்கு அபௌருஷேயத்தன்மையுண்மையால் சுவதப்பிரமாண்யமாக சித்தித்தபோது அதன் ஆக்ஷேபசமாதான பரமாக சமன்வயசூத்திரத்திற்த அவகாசமாம் ஆதலின் கிரமமாக முனியானவர் சூத்திரத்தைச் செய்தல் பொருத்தமேயாம் என்று கருதிக்கூறுகின்றார்:—

## சுலோகம்

त्वम्पदार्थविषयं समन्वयं तत्पदार्थविषयं ततः क्रमात् ।
तस्य शेषमपरं च वर्णयन्नुक्तवानथ महावचोगतम् ॥ ५६० ॥

## பதவுரை

त्वम्पदार्थविषयम्-முதற்சூத்திரத்தின்கண் சீவனதுசொரூபபரமான வாக்கியங்கட்கு துவம்பதார்த்த விஷயகமான

समन्वयम्-சமன்வயத்தினையும்

ततः -அதன்பிறகு இரண்டாவது சூத்திரத்தின்கண்

तत्पदार्थविषयम् - சத்தியாதி வாக்கியங்கட்கு தத்பதார்த்த விஷயகமான

**(समन्वयम्)**-சமன்வயத்தினையும்

**तस्य**-மூன்றாவது சூத்திரத்தால் அச்சமன்வயத்திற்கு

**शेषम् अपरं च**-அநுகூலமான அபௌருஷேயத்தன்மையினையும்

**वर्णयन्**-வருணிக்கின்றவராய்

**अथ**-அதன்பின்பு

**महावचोगतम्**-மகாவாக்கியத்தின்கண்ணுள்ள

**(समन्वयम्)**-சமன்வயத்தினையும்

**क्रमात्**-கிரமமாக

**उक्तवान्**-முனியானவர் கூறினார்

## *விசேஷவுரை*

சமன்வயம்=தாற்பரியம் பதார்த்த நிச்சயமின்றி வாக்கியார்த்த நிச்சயம் பொருந்தாமையின் அதிகாரி முதலியவற்றை நிரூபித்தல் வடிவ வியாஜத்தால் பதார்த்தத்வய நிரூபண பூருவகம் சூத்திரக்காரர் வாக்கியார்த்தத்தை நிரூபித்தார் ஆதலின் சித்தித்தக்கிரமமே நன்றுமென்பது கருத்து. (560)

## *அவதாரிகை*

இந்தப்பிரகாரம் நான்கு சூத்திரத்தாலும் அவ்வவ்வருணிக்கப்பட்ட அர்த்தத்தின்கண் இருபதங்கட்கும் வாக்கியத்திற்கும் தாற்பரிய நிரூபணத்தின் சமர்த்தனத்தை முடிக்கின்றார்:—

## *சுலோகம்*

**त्वम्पदस्य दृशिवृत्तिमद्वये तत्पदस्य च निवेदयन्मुनिः ।**
**प्रत्यगद्वयपरं समन्वयं शेषिणं पुनरथाब्रवीत्तयोः ॥ ५६१ ॥**

## *பதவுரை*

**दृशि**-பிரத்தியகான்மாவின்கண்

**त्वम्पदस्य**-துவம்பதத்தின்

**वृत्तिम् च**-தாற்பரியத்தினையும்

**अद्वये**-அத்துவயப்பிரம்மத்தின்கண்

**तत्पदस्य**-தத்பதத்தின்

वृत्तिम्—தாற்பரியத்திலேயும்

निवेदयन्—போதிக்கின்றவராய்

मुनिः—வியாசமகரிஷி

अथ—அனந்தரம்

तयोः—தத்துவம்பதவிருத்திகளின்

शेषिणम्—அங்கியான

समन्वयम्—சமன்வயத்தினை

प्रत्यगद्वयपरम् — பிரத்தியகபின்னப் பிரம்மத்தின்கண் ஐக்கிய ரூபத்தால்

अब्रवीत्—கூறினர் வாக்கியத்திற்கு என்பது எஞ்சிநின்றது (561)

## அவதாரிகை

இச்சமன்வயாத்தியாயத்தின்கண் பிரதிபாதிக்கப்பட்ட பொருளை முடிக்கின்றார்:—

## சுலோகம்

शक्नोति सिद्धमवबोधयितुं च वाक्यं
शक्नोति कार्यरहितं वदितुं च वाक्यम् ।
शक्नोत्यखण्डमवबोधयितुं च वाक्यम्
शक्नोति मुक्तिफलमर्पयितुं च वाक्यम् ॥ ५६२ ॥

## பதவுரை

वाक्यम् — வேதாந்த வாக்கியம்

सिद्धम् — பிரம்மான்மவஸ்துவை

अवबोधयितुं च—பிரமாணாந்தரத்தையபேக்ஷியாமலே போதித்தற்கு

शक्नोति—சமர்த்தமாமென்று சொல்லப்பட்டது. சித்தார்த்தத்தின்கண் வியுற்பத்தியை சமர்த்தனஞ்செய்தலால் என்பது பொருள் இந்தப்பிரகாரம் பின்னருமறிக.

वाक्यम् — வேதாந்த வாக்கியம்

कार्यरहितम्—காரிய சேஷத்துவரகிதத்தை அதாவது நியோகாதியை நிராகரித்ததினால் சுவப்ரதானத்தையே

वदितुं च - பிரதிபாதித்தற்கு
शक्नोति - சமர்த்தமாம்
वाक्यम् - வேதாந்த வாக்கியம்
अखण्डम् - அகண்டவஸ்துவினை
अवबोधयितुं च - அறிவித்தற்கு
शक्नोति - சமர்த்தமாம்
वाक्यम् - வேதாந்த வாக்கியம்
मुक्तिफलम्-ஞானவாயிலாக மோக்ஷமாகிய பயனை
अर्पयितुं च-கொடுத்தற்கு
शक्नोति-சமர்த்தமாம்.

### விசேஷவுரை

ஈண்டு முற்பாதியால் சமன்வய சூத்திரத்தின் இரண்டு வியாக்கியானத்தின் பொருள் கிரமமாகக் காண்பிக்கப்பட்டது. அதன் பயனாகிய அகண்டப்பிரம்மசாக்ஷாத்காரமும் அதன் பயனாகிய மோக்ஷமும் பிற்பாதியால் உணர்த்தப்பட்டது. (562)

### அவதாரிகை

ஸமன்வயத்தின்கண் கூறப்பட்டதின் வேறாகவும் ஏதேனும் நிருபிக்கத்தக்கதாகவுளதோ என்னுஞ் சங்கையை நிவர்த்திக்கின்றவராய் இத்துணையானேயே சமன்வய விஷயக சருவ சங்கையும் நிவிருத்தியானமையின் வேறாக நிருபிக்கத்தக்கதாக யாதொன்றும் இன்றும் என்னுங்கருத்தாற் கூறுகின்றார். :—

### சுலோகம்

एतत्समन्वयनिरूपणमेवमस्मिन् बुद्धिस्थतामुपगते सति वाक्यजन्यम् ।
विज्ञानमद्वयगतं न ततोऽन्यदन्यत् पुंसोऽपराधकृतमित्युदियात्प्रतीचि ॥

### பதவுரை

एतत्-இஃது
समन्वयनिरूपणम् -சமன்வய நிருபணமாம்

அற்றேல் நிச்சயிக்கப்பட்ட பதார்த்த ஞானமுடையவனுக்கு வாக்கியத்தால் அவ்வவ் அர்த்தத்தை யறிவதன் கண் உலகில் வேறு நியாயம் அபேக்ஷிக்கப்படுகின்றதில்லை யென்னுஞ் சங்கைக்கு தத்துவமசி

முதலிய வாக்கியார்த்தம் அத்தியந்தம் கடினமாயிருத்தலால் வாதிகளால் தமதிச்சையினால் வெவ்வேறாகப் பொருளைக் கற்பித்தலால் அதனது உண்மைப்பொருளையும் ஆபாசப் பொருளையும் பகுத்தற்பொருட்டு வருணிக்கப்பட்ட வடிவத்தால் சமன்வயமும் நிரூபிக்கத்தக்கதேயாம் என்னுங்கருத்தாற் கூறுகின்றார்.

एवम्–கூறிய பிரகாரத்தால்

अस्मिन्–சமன்வயம்

बुद्धिस्थताम्–புத்தியின் கண்

उपगते सति–இருக்கும்போது

वाक्यजन्यम्–சுருதியினாலுண்டான

विज्ञानम्–தத்துவ ஞானம்

अद्वयगतम्–அத்துவயப் பிரம்ம விஷயகமேயாம்

ततः–அத்துவித ஞானத்தினின்றும்

अन्यत्–இதர ஞானம்

च–சுருதி ஜன்னிய மன்றும் மற்றோ

अन्यत्–பேதஞானம்

पुंसः–புருஷனது

अपराधकृतम् इति–வேதாந்த தாற்பரியத்தின் அஞ்ஞானதிதோஷத்தால் உண்டானதேயாமென

प्रतीचि–தனதான்மாவின் கண்

उदियात्–தானே தோற்றும்

## விசேஷவுரை

ஆதலால் அவசியம் சமன்வய சூத்திரநியாயத்தால் அதிகாரியினால் அகண்டைகரசமும் சத்திய ஞானதி வடிவமுமான பிரம்மத்தின் கண் வேதாந்தங்கட்குத் தாற்பரியம் நிரூபிக்கத்தக்கதேயாம் அதுவும் சம்பூர்ணமாக நிரூபிக்கப்பட்டது. அதாவது வேதாந்தவாக்கியவடிவ பிரமாணத்தின் கண்ணுள்ள அசம்பாவனையை நீக்குதலால் சமன்வய நிருபணத்தின் பயனான வாக்கியார்த்த நிச்சயம் சித்திக்கின்றது என்பது கருத்து. (563)

சங்க்ஷேபசாரீரகம் முதலாவது சமன்வய அத்தியாயம்
முற்றுப்பெற்றது.

॥ श्रीः ॥

## प्रथमाध्याये अकारादिक्रमेण

## श्लोकानुक्रमणिका ॥

—x—

